# அரசிறைப் பொருளியல்

(முதல் புத்தகம்)

ஆசிரியர்

அர. சேஷாசலம்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—672

# அரசிறைப் பொருளியல்

## (முதல் புத்தகம்)

(பட்டப்படிப்பிற்குரியது)

ஆசிரியர்.

அர. சேஷாசலம், எம்.ஏ.,

பொருளாதாரப் பேராசிரியர்,

சரபோஜி மன்னர் அரசினர் கல்லூரி,

தஞ்சாவூர்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—January, 1976

T.N.T.B.S. (C.P.) No. 672



# FISCAL ECONOMICS (BOOK I)

R. SESHACHALAM

Price Rs. 10-15

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

Printed out of the Paper allotted by the Government of India.

Printed by
BOOM PRINTERS,
32-D, Tana Street,
Purasawalkam,
Madras-600 007.

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந் தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய் துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறை களில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப் பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும், சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'அரசிறைப் பொருளியல்' (முதல் புத்தகம்) என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 672ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 707 நூல்கள் வெளிவந் துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின் கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும், கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள் அவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும என்பதுதான். 'எதிலும் தமிழ், எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

பக்கம்

# 1. முன்னுரை

## (1) தோற்றுவாய்

'வளர்ச்சி பெற்ற ஒவ்வொரு சமுதாயத்திலும் ஏதாயினும் ஒரு வகை அரசு அமைப்பு உள்ளது. இது சமுதாயத்தின் உறுப்பினர்களுக்கு மொத்தத்தில் பிரதிநிதியாகவும் இருக்கலாம் அல்லது பிரதிநிதியாக இல்லாமலும் இருக்கலாம். அதாவது அரசு ஒரு குடியாட்சியாகவும் இருக்கலாம் அல்லது வேறுவகை ஆட்சியாகவும் (உ-ம். பிரபுக்கள் ஆட்சி அல்லது பிரபுநாயகம், பணக்காரர்களின் ஆட்சி அல்லது பணநாயகம், முடியாட்சி, சர்வாதிகாரம் போன்றவையாகவும்) இருக்கலாம். ஆயினும், இவ்வரசுக்குச் சமுதாயத்தின் உறுப்பினர்களைக் (அதாவது குடிமக்களை) கட்டாயப்படுத்தி அவர்களைப் பணிய வைக்கும் அதிகாரம் இருக்கிறது' என்று ஏ. ஸி. பிகு[1] கூறுகிறார். இவ்வரசை, மைய, மாகாண அல்லது மாநில, தல அரசுகள் என வகைப்படுத்தலாம். இவ்வரசுகள் அனைத்திற்கும் தங்களின் வெவ்வேறுபட்ட வழக்கமான பணிகளையும், பொருளாதார வளர்ச்சிப் பணிகளையும், ஏனைய பணிகளையும் ஆற்றுவதற்குப் பணம் வேண்டியிருக்கிறது. அரசின் தலையாய பிரச்சினையாவது 'எப்படிப் பணத்தைப் பெறுவது? எங்கிருந்து பணத்தைப் பெறுவது?' என்பதாகும். நாகரிகச் சமுதாயத்தின் ஓர் உறுப்பாக அரசு இருக்கின்றவரை இப் பிரச்சினை முக்கியமான ஒன்றாகவே இருந்து வரும். இப் பிரச்சினையை ஆயும் நூல் அரசு நிதியவியல் எனப்படும். அரசின் பல்வேறுபட்ட நடவடிக்கைகளுக்கும் எங்ஙனம் பணத்தைப் பெறுவது என்பதுபற்றியும் இப் பணத்தை வெவ்வேறான இனங்களின்மீது எவ்வாறு செலவழிப்பது என்பதுபற்றியும் ஆய்வதுதான் அரசு நிதியவியல். அரசு எப்படிச் செலவு செய்யவேண்டும், என்னென்ன செலவுகளைச் செய்யவேண்டும், இச் செலவுகளை ஏன் செய்யவேண்டும், எப்படி வருவாயைப் பெறவேண்டும், என்னென்ன வருவாய்களை

[1] A. C. Pigou, 'A Study in Public Finance.' p-1.

வசூலிக்கவேண்டும், இவற்றை ஏன் வசூலிக்கவேண்டும் என்பன வற்றில் நாட்டம் செலுத்துவதே அரசு நிதியவியல்[1] என்று சுருங்கக் கூறலாம்.

அரசு நிதியவியல் பொருளியலின் ஒரு முக்கியமான பிரிவாகும். பார்க்கப் போனால் அரசு நிதியவியல் பொருளியலைக் காட்டிலும் பழமையானது. அரசின் பொருளாதாரத்தைக் காட்டிலும் ஓர் அறிவியல் என்ற அளவில் பழமையானது. உண்மையில் அரசு நிதியவியல்தான் இவ்விரு அறிவியல்களின் முன்னோடி. இக்காலத்தில் அரசு நிதியவியல், அரசின் பொருளாதாரத்திற்கும் அரசியலுக்கும் அடிமைப்பட்டுக் கிடக் கிறது. ஏனெனில், வேறெந்தப் பகுதியைக் காட்டிலும், அரசின் பொருளாதாரத்தின் இந்தப் பகுதியைப்பற்றியே மிகவும் விரிவாகக் காமிரலிஸ்டுகளின்[2] நூல்கள் கூறுகின்றன. பிளன்[3] என்பார் அரசின் வருமானத்தையும் அரசர்களின் வருமானத்தையும் பிரித்த பின்புதான், ஒரு கலை என்ற அளவில், அரசு நிதியவியலின் முக்கியத்துவத்தை உணர்ந்தனர். அரசு அலுவல்களின் வளர்ச்சி அதிகரிக்கவே, அரசு நிதியவியலின் முக்கியத்துவமும் அதிகரித்தது.

பொருளியலின் ஒரு கிளை அரசு நிதியவியல். அரசு நிதியவியல் ஜெர்மனியில் தோன்றி நல்ல வளர்ச்சியடைந்தது. பிரிட்டனில் ஆடம் ஸ்மித் காலத்திலிருந்து ஜான் ஸ்டூவர்ட் மில் காலம் வரை எழுந்த அனைத்துப் பொருளியல் நூல்களிலும், அரசு நிதியவியல் இடம் பெற்றது. ஆடம் ஸ்மித் தம்முடைய 'நாடுகளின் செல்வம்' (Wealth of Nations) என்ற நூலில் ஐந்தாம் பிரிவில் மூன்று அதிகாரங்களில் அரசரின் அல்லது அரசின் செலவுகள், அரசு வருவாயின் மூலங்கள், அரசின் கடன்கள் ஆகிய இவைபற்றி விளக்குகின்றார். டேவிட் ரிக்கார்டோ தம்முடைய 'அரசு பொருளாதாரக் கோட்பாடுகள்' என்ற நூலில், ஏறக்குறைய பத்து அதிகாரங்களில் வரி விதிப்புப்பற்றிய பிரச்சினைகளை விளக்கு கின்றார். இந் நூலில் அரசின் கடன்களைப்பற்றிக் கூறவில்லை.

[1] 'Fisc' என்ற சொல்லுக்குப் 'பணப்பேழை' (money basket) அல்லது 'கருவூலம்' என்று பொருள். இலத்தீன் மொழியில் (Fiscus) என்ற சொல் லுக்குக் கயிற்றினால் ஆகிய கூடை என்று பொருள். இக் கூடையில்தான் பண்டைய நாளில் உரோமானியர்கள் அரசின் பணத்தை வைத்திருந்தார்கள். ஆகவே, 'Fiscal' என்ற சொல்லுக்குக் கருவூலம் சம்பந்தப்பட்ட அல்லது அரசிறை நிதியம் என்று பொருள்.

[2] காமிரலிஸ்டுகள் (Cameralists): இவர்கள் பதினெட்டாம் நூற்றாண்டில் அரசு நிதியவியலைப்பற்றி எழுதிய ஜெர்மானிய அறிஞர்கள், காமிரா (ஜெர் மானிய மொழியில் ('Kammer') என்ற சொல் பிரதேசக் கருவூலங்களைக் குறிக்கும். இவர்கள் எழுதிய நூல்கள் காமிரல் அறிவியல் அல்லது அரசைப்பற்றிய அறிவியலாகும்.

[3] Carl C. Plehn, 'Introduction to Public Finance.' p-5.

ஆயினும், நிரந்தரக் கடனுக்கும் முறைபற்றிய கட்டுரை (Essay on the Funding System) என்ற வேறொரு நூலில் கடன்களைப் பற்றி விளக்குகின்றார். மில் 'அரசு பொருளாதாரக் கோட்பாடுகள்' என்ற நூலில் ஏழு அதிகாரங்களில் வரி விதிப்புப் பற்றியும், அரசின் கடன்பற்றியும் ஆய்கின்றார், ஆடம் ஸ்மித் தம்முடைய நூலில் எடுத்த எடுப்பிலேயே அரசின் செலவுபற்றிக் கூறியிருக்கவும், ரிக்கார்டோவும் மில்லும், வரி விதிப்பு, அரசின் கடன் ஆகிய இவைபற்றியே அதிகம் ஆய்ந்தனர். இங்ஙனமாகத் தொல்பொருளியல் புலவர்கள் (Classical Economists) அரசு நிதிய வியலின் கூறுகளான வருவாய், செலவு, கடன் இவற்றை ஒப்புக்கொண்டனர் என்பது தெளிவு. ஃபிரான்ஸில் ஃபிஸியோகிராட்டுகள் அரசு நிதியவியலைப்பற்றித் தங்களின் கருத்துகளை வெளியிட்டனர். ஆயினும், அதை ஒரு தனிப் பாடமாக ஆடம் ஸ்மித்தும் ஃபிஸியோகிராட்டுகளும் வளர்த்தார்களில்லை.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த பெரும் பொருளியல் புலவர்களான ஆல்ஃபிரட் மார்ஷலும், ஃபிரான்ஸிஸ் சிட்ரோவும், எட்ஜ்வொர்த்தும்[1] அரசு நிதியவியலைப்பற்றி முறையாக ஏதும் ஆய்ந்தார்களில்லை.

அரசு பொருளாதாரம் என்ற பழம் பெயர் வழக்கிழந்து, பொருளியல் என்ற பெயர் வழக்குக்கு வந்தது. அரசு நிதியவியலைப் பொருளியலின் தலையாய கூறாக விளக்குவதும் மறைந்தொழிந்தது. இதிலிருந்து கிளைத்ததுதான் அரசு நிதியவியலைப்பற்றி எழுந்த தனி நூல்கள். பிரிட்டனில் வெளியான முதல் நூல் பாஸ்டபிள் எழுதிய அரசு நிதியவியல்.[2] இது 1892-ல் வெளிவந்தது. இந் நூலைத் தொடர்ந்து பல நூல்கள் வெளிவந்தன. 1895-ல் இ. ஆர். ஏ. ஸெலிக்மென் எழுதிய வரிவிதிப்புக் கட்டுரைகளும்,[3] 1922-ல் ஹ்யூக் டால்டன் எழுதிய அரசு நிதியவியலும்,[4] 1928-ல் பிகு எழுதிய அரசு நிதியவியலின் ஆய்வும்,[5] 1941-ல் ஆல்வின் ஹெச். ஹான்ஸன் எழுதிய நிதியக் கொள்கையும் வாணிபச் சகடங்களும்,[6] 1947-ல் உர்ஸலா கே. ஹிக்ஸ் எழுதிய அரசு நிதியவியலும்,[7] ஹான்ஸன் எழுதிய பொருளாதாரக் கொள்கையும்

[1] Alfred Marshall, Francis Ysidro, Edgeworth.
[2] C. F. Bastable, 'Public Finance'.
[3] E. R. A. Seligman, 'Essays in Taxation'.
[4] Hugh Dalton, 'Public Finance'.
[5] A. C. Pigou, 'A Study in Public Finance'.
[6] Alvin H. Hansen, 'Fiscal Policy and Business Cycles'.
[7] Ursula K. Hicks, 'Public Finance'.

நிறைவுடை வேலைவாய்ப்பும்,[1] 1948-ல் ஃபிலிப் இ. டெயிலர் எழுதிய அரசு நிதியவியலின் பொருளாதாரமும்,[2] 1949-ல் ஹான்ஸன் எழுதிய பணக் கருதுகோளும் நிதியக் கொள்கையும்,[3] 1955-ல் நிதியக் கொள்கை ஆய்வுகளும்,[4] 1959-ல் ஆர். ஏ. மஸ்கிரேவ் எழுதிய அரசு நிதியவியலின் கருதுகோளும்[5] வரி விதிப்புப் பற்றிய பொருளியல் ஆய்வுகளும்,[6] ஏ. ஆர். பிரஸ்டு எழுதிய அரசு நிதியவியலும் (கருதுகோளும் செயல்முறையும்),[7] 1962-ல் ஏ. ஆர். பிரஸ்டு எழுதிய வளர்ச்சி குன்றிய நாடுகளில் அரசு நிதியவியலும்,[8] 1963-ல் ஜான் எஃப். டியூ எழுதிய அரசு நிதியவியலும்[9] 1964-ல் ஓட்டோ எக்ஸ்டீன் எழுதிய அரசு நிதியவியலும்,[10] வெளிவந்தன.

ஜெர்மெனியில் காமிரலிஸ்டுகள்[11] என்று அழைக்கப்பட்ட அடால்ப் வாக்னர்,[12] லோரன்ஸ் வான்ஸ்டீன்,[13] நட் விக்ஸெல்,[14] எரிக் லிந்தால்,[15] எமில் ஸாக்ஸ்,[16] ஃபிரடரிக் வான் வீஸர்,[17] ருடால்ப் கோல்ட் ஷெட்,[18] ஹான்ஸ் ரிட்சில்[19] முதலானோர்களும், ஃபிரான்சில் லிராய் பாலோவும்,[20] இத்தாலியில் அன்ரிக்கோ பாரோனி,[21] ஜோவானி மான்டிமார்டின்,[22] யுகோ மஸோலா,[23]

[1] Alvin H. Hansen, 'Monetary Policy and Full Employment'.
[2] Philip E. Taylor, 'The Economics of Public Finance'.
[3] Alvin Hansen, 'Monetary Theory and Fiscal Policy.'
[4] The American Economics Association, 'Readings in Fiscal Policy'.
[5] R. A. Musgrave, 'Theory of Public Finance'.
[6] The American Economics Association, 'Readings in the Economics of Taxation'.
[7] A. R. Prest, 'Public Finance in Theory and Practice'.
[8] A. R. Prest, 'Public Finance in Under-developed Countries'.
[9] John F. Due, 'Public Finance'.
[10] Otto Eckstein, 'Public Finance'.
[11] Cameralists
[12] Adolph Wagner
[13] Lorenz Von Stein
[14] Knut Wicksell
[15] Erick Lindahl
[16] Emil Sax
[17] Frederich Von Weiser
[18] Rudolf Goldscheid
[19] Hans Ritschl
[20] Leroy Beaulieu
[21] Enrico Barone
[22] Geovanni Montemartin
[23] Ugo Mazzola

மாபியோ பான்டலோனி[1] முதலானோர்களும், ஹாலந்தில் ஆர்னுல்ட் ஜேக்கப் கோஹன் ஸ்டுவர்ட்டும்[2] அரசு நிதியவியலின் வரிகளைப்பற்றிய சில பிரச்சினைகளை ஆய்ந்தார்கள்.

*1935*-க்குப் பின் வெளி வந்த நூல்களில் நிறைவுடை வேலை வாய்ப்பு,[3] செவ்வையாக அலசப்பட்டிருக்கிறது.

வெவ்வேறு மொழிகளில் வெவ்வேறு பெயர்களால் அரசு நிதியவியல் வழங்கப்படும். ஜெர்மானிய மொழியில் 'ஃபினான்ஸ் விஸ்ஸன்ஷாப்டு' (Finanze Wissenschaft) என்று வழங்கும். இதன் பொருளாவது நிதிய அறிவியல். ஃபிரெஞ்சு மொழியில் 'ஸயன்ஸ் டி பினான்ஸஸ்' (Science de finanze) எனவும், இத்தாலிய மொழியில் 'ஸயன்ஸா டெல்லி ஃபினான்ஸே' (Scienza delle finanze) எனவும் வழங்கும். அரசின் செலவு, அரசின் வருவாய் இவற்றின் அமைப்பைக் குறிப்பதற்கு இச் சொற்களை வழங்கிய பெருமை ஃபிரான்ஸையே சாரும். ஃபிரான்ஸிலிருந்து இச் சொற்கள் பிற நாடுகளுக்குப் பரவின.

## (2) நூலின் பிரிவுகள்

அரசு நிதியவியலை நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவையாவன: (அ) அரசின் செலவு; அதாவது ஆட்சியை நடத்துவதற்கு அரசு மேற்கொள்ளும் செலவு. (ஆ) அரசின் வருவாய் அல்லது வருமானம்; அதாவது செலவைச் சமாளிப்பதற்கு அரசு பெறும் வருமானம். (இ) அரசின் கடன்கள்; வருமானத்தைக் காட்டிலும், அரசின் செலவு கூடுதலாக இருக்கும்பொழுது அரசு வாங்கும் கடன். (ஈ) நிதிய ஆட்சி; இத் தலைப்பின்கீழ் (*1*) வரவு செலவுத் திட்டங்களைத் தயாரித்தல். (*2*) வரவு செலவுத் திட்டங்களைத் தணிக்கை செய்தல் ஆகியனவும் சட்ட மன்றத்தின் நிதியப் பணியும் அடங்கும்.

## (3) அரசு நிதியவியலுக்கும் அரசு பொருளியலுக்கும் (Public Economics) உள்ள வேறுபாடுகள்

அரசுகளின் வருமானம், செலவு, கடன் ஆகியவைபற்றிய நிதிய நடவடிக்கைகளை அரசு நிதியவியலில் நாம் ஆய்கின்றோம். தன்னுடைய பல்வேறுபட்ட கடமைகளை நிறைவேற்றுவதற்குப் பல்வேறுபட்ட வருமான வளங்களை அரசு எங்ஙனம் திரட்டு

[1] Maffeo Panteleonie

[2] Arnold Jacob Cohen Stuart

[3] Full Employment

கிறது என்பதுபற்றியும், இவ் வருமானத்தைப் பின்னர் பல்வேறு பட்ட இனங்களின்மீது எங்ஙனம் செலவிடுகின்றது என்பது பற்றியும் நாம் அரசு பொருளியலில் ஆய்கிறேம். இவ்வாருக, அரசு பொருளியலில் அரசின் நிதிய நடவடிக்கைகளைமட்டும் ஆய்வதுடன் நிறுத்திக்கொள்ளாமல், அரசின் வேறு பல நட வடிக்கைகளையும், அவற்றை நிறைவேற்றுவதற்கு அரசு எங்ஙனம் நிதியத்தைத் திரட்டுகிறது என்பதைப்பற்றியும் நாம் ஆய்கிறேம். இங்ஙனமாக, அரசு நிதியவியலின் கண்ணேட்டத்தைக் காட்டி லும், அரசு பொருளியலின் கண்ணேட்டம் மிகவும் விரிவானது. ஏனெனில், அரசு நிதியவியலில் நாம் அரசின் பண வளங்கள் பற்றி மட்டும் ஆய்கிறேம். ஆனல், அரசு பொருளியலில் நாம் அரசின் பண வளங்கள் ஒழிந்த ஏனைய வளங்களைப்பற்றியும் ஆய் கிறேம். பணத்தை ஈட்டுவது, பணத்தைச் செலவழிப்பது ஆகிய அரசின் நடவடிக்கைகளைத் தவிர்த்து, நாம் வேறு பல பிரச்சினை களையும் ஆய்கிறேம். இப் பிரச்சினைகளில் சில வருமாறு: நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளில் அரசு தலையிட வேண்டுமா? பொருளாதார நடவடிக்கைகளை அரசு தானே முன்னின்று நேரிடையாக மேற்கொள்ள வேண்டுமா? நாட்டின் சமுதாய நலக் காப்புறுதிப் பணிகள் எங்ஙனம் அமைக்கப்பட வேண்டும்? அரசாங்க முனைவுகள் எத்தகைய கொள்கையை மேற்கொள்ளவேண்டும்? முற்றுரிமைகளை அரசு எந்த அளவுக்குக் கட்டுப்பாடு செய்து ஒழுங்குபடுத்த வேண்டும்? என்ற இத் தொடக்கத்தன. இவ் வினக்களுக்கெல்லாம் அரசு பொருளியல் விடையளிக்கவேண்டும். இவ்வாருக, அரசு பொருளியல் நாம் அரசின் நிதியவியலைப்பற்றி மட்டும் ஆயாமல் பொது மக்களின் நலனுக்காக அரசு மேற்கொள்ளும் ஏனைய நடவடிக்கைகள் பற்றியும் ஆய்கிறேம். அரசு பொருளியல் நிதியப் பொருளியல் (Fiscal Economics) எனவும் வழங்கப்படும்.

## (4) அரசின் கடமைகள்

ஆடம் ஸ்மித் அரசின் கடமைகளை மூன்றுக வகுத்தார். அவை யாவன: *1*. பாதுகாப்பு, *2*. நீதி வழங்குதல். இவ்விரண்டு கடமை களையும் அனைத்து அரசுகளும் செய்துதான் தீர வேண்டும். இரண் டாவது கடமைக்கு விளக்கம் அளிப்பதில் ஆசிரியர்கள் கருத்து வேறுபடுகிருர்கள். பழைய காலத்தில் அடிமைகள் இருந்ததை வரலாறு சுட்டுகிறது. இக் காலத்தில்கூட நிற வேறுபாட்டின் அடிப் படையில் தென்ஆப்பிரிக்கா, தென் ரொடீஷியா போன்ற நாடுகள் வெள்ளையினத்தவர் ஒழிந்த இனத்தவர்களுக்குக் குடிமக்கள் உரிமையைத் தர மறுக்கின்றன. இவற்றை நீதியாகக் கொள்ள முடியுமா? இக் காலப்படி நிலைகளுக்கு ஸ்மித் குறிப்பிடும் மூன்றுவது

கடமை மிகவும் முக்கியமானது. இக் கடமையை ஆற்ருமலேயே ஒரு சமுதாயம் இயங்கமுடியும். இக் கடமையை அடிப்படையானது என்று கொள்வதற்கில்லை, சமுதாயத்தின் வருமானம் அதிகரிக்கும்பொழுதுதான் இப் பணி முக்கியத்துவம் பெறுகிறது.
*3.* இக் கடமையாவது அரசு நிறுவனங்களை நிறுவுவதும், அவற்றையும் பொதுப்பணிகளையும் பராமரிப்பதும் பேணுவதும் ஆகும். இவை ஒரு பெரிய சமுதாயத்திற்கு மிக அதிகமான அளவு நன்மை பயந்தாலும், இவற்றுக்கு ஆகும் செலவை எந்த ஒரு தனியாளும் மீண்டும் பெற முடியாது. அதாவது இவற்றிலிருந்து இலாபம் கிடைக்க வழியில்லை. இப் பணிகளில் சமுதாயத்தின் வணிகத்தைப் பெருக்குவதற்கும் அறிவைப் பேணுவதற்கும் மேற்கொள்ளப்படும் பணிகள் முக்கியமானவை.

இக் காலத்தில் இக் கடமையைப் பொருளாதாரக் குறிக்கோள்களுக்காகவும் சமுதாயக் குறிக்கோள்களுக்காகவும் அரசு மேற்கொள்ளும் செலவு எனக் குறிப்பிடலாம். பதினெட்டாம் நூற்ருண்டிலேயே ஸ்மித் இவ்விரு செலவினங்களைப்பற்றிக் கூறியது போற்றுதற்கு உரியது. ஏனெனில், இச் செலவினங்கள்தாம், ஏனைய செலவினங்களைக் காட்டிலும், அளவிலும் முக்கியத்துவத்திலும் விஞ்சியது ஆகும். இப் பணிகளை அனைவரும் விரும்பினரேனும், இவை தனியாரின் சக்திக்கு அப்பாற்பட்டதாகையால், இவற்றை அரசே செய்ய வேண்டும் என்பதை ஸ்மித் நன்கு உணர்ந்திருந்தார். இக் காலத்தில் இம் மூன்ரும் கடமைக்கு என்ன விளக்கம் தருகிருர்கள் என்பதை நாம் இப்பொழுது காண்போம்.

## 1. பொருளாதாரக் குறிக்கோள்கள்

தனியார் முனைவுகளுக்கு (enterprises) அரசு நேரிடையாக ஆற்றும் பணிகளும், சமுதாயத்திற்கு அளிக்கும் ஆதாயங்களும் இவற்றில் அடங்கும். இவை ஒவ்வொன்றும் சரியானபடி நெறிப்படுத்தப்பட்டால் வாணிகம் பெருகும். இக்காலத்தில் இதையே பொருளாதாரத்தின் உற்பத்தித் திறன் அதிகரிக்கும் என வேறு வகையாகக் கூறுவர். தனியார் முனைவுகளுக்கு உதவியாகச் செய்யப்படும் செலவு இருவகைப்படும். அனைவருக்கும் அல்லது பல வேறுபட்ட தொழில்களுக்கும் பணிகள் ஆற்றுவது ஒரு வகை. உற்பத்தியின் சில குறிப்பிட்ட துறைகளுக்கு மட்டும் சலுகைகள் அளிப்பது இரண்டாவது வகையாகும். இதற்கு எடுத்துக்காட்டு, வேளாண்மைக்கு அரசு செய்யும் உதவி. முந்திய வகைக்கு அயல் நாட்டு வாணிகத்துறை, எடைகள், அளவைகள் துறை (இதற்காகத் தனியாக ஒரு துறை இல்லாவிட்டாலும், இஃது உள்நாட்டு வாணிபத் துறையின் ஒரு பகுதியாகும்), தொழில் அமைச்சுத்

துறையின்கீழ் இயங்கும் வேலை தேடித் தரும் நிறுவனங்கள் (Employment Exchanges), அரசு நிறுவனங்களின் ஆராய்ச்சிப் பணி ஆகியவை எடுத்துக்காட்டுகளாகும்.

பிரிட்டனில் தபால் சேவையைத் தவிர, பிற பணிகள் தலக் கட்டுப்பாட்டின்கீழ் வளர்ந்தன. *1926*-ல் மின்சார உற்பத்தியைத் தல நிருவாகங்களினின்று மைய மின்சார வாரியம் (Central Electricity Board) எடுத்துக்கொண்டது. சில தலங்களுக்குக் குதிரைப் பந்தய மைதானமும் (Race course) சிப்பித் துறைகளும் (Oyster beds) இருக்கின்றன.

நெடுங்காலமாகத் தபால் சேவையை மட்டுமே பிரிட்டிஷ் அரசு புரிந்துவந்தது. இருபதாம் நூற்றாண்டில்தான் தொலைபேசி நிருவாகம் முழுவதையும் எடுத்துக்கொண்டது. *1946*-ல் பிற தொலைச் செய்தி தொடர்புகளை (Telecommunications) எடுத்துக் கொண்டது. வானொலிவழிச் செய்திப் பரப்பு (Broadcasting) நெடு நாள்களாகவே ஒரு மைய வாரியத்தின்கீழ் இருந்து வந்திருக்கிறது. எழுது பொருள்கள் அலுவலகமும் பிரிட்டிஷ் அரசின் மேலாண்மையில் இருக்கிறது. *1946*-க்கும் *1949*-க்கும் இடையில் பல பெரிய தொழில்கள் நாட்டுடைமையாயின. *1946*-ல் இங்கிலாந்து பேங்க் (Bank of England) நாட்டுடைமையாக்கப்பட்டதுடன், வான்வெளிக்(Airways) கார்ப்பொரேஷனும் நிறுவப்பட்டது. *1947*-ல் தேசிய நிலக்கரி வாரியமும், *1948*-ல் பிரிட்டிஷ் போக்குவரத்துக் குழுமமும், பிரிட்டிஷ் மின்சார ஆணையமுகம் (British Electricity Authority), *1949*-ல் வாயு கவுன்ஸிலும் (Gas Council), பிரதேச வாரியங்களும் (Area Boards) நிறுவப்பட்டன.

நாடுகளிடையே பெருத்த வேறுபாடுகள் இருக்கின்றனவாயினும், பொதுவாகக் கூறுமிடத்து, ஒரே வகைத் தொழில்கள்தாம் நாட்டுடைமையாக்கப்பட்டிருக்கின்றன. இத்தொழில்களில் பெரும்பாலும் நெருக்கடியான காலங்களில் எந்தெந்தத் தொழில்களை அரசு கட்டுப்படுத்த வேண்டுமோ அவைதாம் அடங்கியிருக்கின்றன. இவற்றில் தபால், செய்திப் பரப்பு, சாலைகள், வாயு, மின்சாரம், போக்குவரத்து ஆகியவை அடங்கும். பிந்திய மூன்றும் ஏறக்குறைய முற்றுரிமையாகும் நிலையில் இருந்ததோடு, அவற்றின்மேல் செலவுகளும் (இயக்கும் செலவுகளுடன் ஒப்பிடும் பொழுது) மிகவும் அதிகமாக இருந்தன.

ஐரோப்பாவில் நெடுங்காலமாகவே இருப்புப் பாதைகள் அரசு உடைமையாக இருந்து வந்திருக்கின்றன. ஸ்வீடன் போன்ற நாடுகளில் இரும்புக் கனிகளும் காடுகளும் அரசுக்குச் சொந்தம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அதிபர் ரூஸ்வெல்ட் ஆட்சியில் அமர்வதற்கு முன்பு தபால் அலுவலகம் மட்டுமே கூட்டரசுக்குச் சொந்தமாக இருந்தது. புதிய அமைப்பு[1] (New deal) ஏற்பட்டதன் பின்பு டென்னஸி அணைக்கட்டுப் போன்ற அணைக்கட்டுகளும் கூட்டரசுக்குச் சொந்தமாயின. இப்பொழுதுகூட அமெரிக்காவில் தந்தியும் தொலைபேசியும் அரசுக்குச் சொந்தமல்ல. ஆனால், தனிப்பட்ட நகரங்கள், சில வேளைகளில் விரிவான வணிகப் பணிகளை ஆற்றுகின்றன. ஜாக்சன்வில் நகரம் தன்னுடைய வருவாயில் 30%-க்கும் அதிகமாக அரசு முனைவுகளிலிருந்தே பெறுகிறது.

இருப்புப் பாதைகள், தபால், தந்தி, தொலைபேசி, செய்திப் பரப்பு, நாணயங்களின் அச்சடிப்பு, காகித நோட்டுகளின் அச்சடிப்பு, நீர்ப்பாசனம், காடுகள், மின்சார உற்பத்தி, மின்சாரப் பகிர்வு, சாலைப் போக்குவரத்துகள் ஆகியவை இந்தியாவில் மைய, மாநில அரசுகளுக்குச் சொந்தமானவை. நீர்த்தேக்கங்கள், காடுகள், மின்சார உற்பத்தி, பேருந்துப் போக்குவரத்து ஆகியவை மாநில அரசுகளுக்குச் சொந்தம். மின்சாரப் பகிர்வையும் மாநில அரசுகள் படிப்படியாக மேற்கொண்டு வருகின்றன. இந்திய அரசுக்கு நான்கு (பிலாய், துர்க்காபூர், ரூர்கேலா, பொக்காரோ) உருக்காலைகளும், ஸிந்திரி உரத் தொழிற்சாலையும், நேபா செய்தித்தாள் காகித ஆலையும், திருச்சி கனரகக் கொதிகலன் ஆலையும், சித்தரஞ்சன் நீராவியந்திர ஆலையும், பெங்களூர் தொலைபேசி ஆலையும், நெய்வேலிப் பழுப்பு நிலக்கரிச் சுரங்கமும், சென்னை அறுவை மருத்துவக் கருவிகள் ஆலையும், ஆல்வாய் உர ஆலையும் சொந்தம். அண்மையில் 46 நெசவாலைகளின் நிருவாகத்தையும் இந்திய அரசு எடுத்துக்கொண்டது.[2] இது தவிர, வானவெளிப் போக்குவரத்தும் சொந்தம். இந்தியக் காங்கிரஸின் காரியக் கமிட்டி உணவு தானியங்களின் (முக்கியமாக, கோதுமை, அரிசி) மொத்த வாணிகத்தை உடனடியாக மாநில அரசுகள் மேற்கொள்ளவேண்டும் என்று வற்புறுத்துகிறது. 1-4-1973 அன்று மாநில அரசுகள் கோதுமை மொத்த வாணிகத்தை மேற்கொண்டன. ஆயுள் காப்புறுதியும், பிற வகைப் பொதுவான காப்புறுதியும், 14 ஷெடியூல்டு பேங்குகளும்

[1] 1933ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 4ஆம் நாள் ரூஸ்வெல்ட் அமெரிக்க அதிபரானார். இவர் பதவியேற்ற பிறகு அமெரிக்கக் காங்கிரஸ் ஏறக்குறைய இருபது சட்டங்களை இயற்றியது. இவை புதிய அமைப்புச் சட்டங்கள் எனப்படும். இவற்றின் நோக்கம் இரண்டு. அவை மீட்பும் (Recovery) சீர்திருத்தமும். ரூஸ்வெல்ட்டின் திட்டங்களினால் வேலையின்றி இருந்தோரில் மூன்றில் ஒரு பகுதியினருக்கு (38 லக்ஷம் பேர்) வேலை கிடைத்தது. இதற்கான செலவு 13,200 மில்லியன் டாலராகும்.

[2] இவற்றை இந்திய நெசவுக் கார்ப்பொரேஷன் (Textile Corporation of India) நிருவகித்து வருகிறது.

ஸ்டேட் பேங்கும், அரசு வாணிக நிறுவனமும் (இது இப்பொழுது முக்கியமாக இறக்குமதிகளையும், ஏற்றுமதிகளையும் கவனித்து வருகிறது), இந்திய உணவுக் கார்ப்பொரேஷனும் இந்திய அரசுக்குச் சொந்தமானவை. இது தவிர, அணுசக்தி உற்பத்தியையும் இந்திய அரசு மேற்கொண்டிருக்கிறது. டிராம்பே நிறுவனத்தைத் தவிர, ராஜஸ்தானில் ராணு பிரதாப் சாகரில் ஓர் அணு உற்பத்தி ஆலையும், தமிழ்நாட்டில் கல்பாக்கத்தில் ஓர் அணு உற்பத்தி ஆலையும் நிறுவப்பட்டு வருகிறது.

அரசுக்கு எந்தெந்தத் தொழில் முனைவுகள் சொந்தமாக இருக்கவேண்டும் என்பதை ஆய்வது இந் நூலின் கண்ணோட்டத்திற்கு அப்பாற்பட்டது. தொழிற்சாலைகளையும் சேவைகளையும் அரசு மேற்கொள்ளவேண்டும் என்பதனை அரசியல் காரணங்கள் தாம் அறுதியிடுகின்றனவே தவிர, பொருளியல் காரணங்கள் அன்று. இது விரும்பத் தக்கதன்று.

## 2. சமுதாயக் குறிக்கோள்கள்

முன்னேறிய நாடுகள் தங்கள் வருவாயில் பெரும் பகுதியைக் கல்வி, சுகாதாரம், முதியோருக்கு ஓய்வு ஊதியம், வேலையில்லாதோருக்கு ஈட்டுறுதி முதலான பணிகளுக்குச் செலவிடுகின்றன. இந்திய அரசு இப் பணிகளுக்குச் செலவிடும் தொகை ஒப்புமையில் மிகவும் குறைவு. கல்லூரிக் கல்விக்குச் செலவழிக்கப்படும் தொகைகளுக்கு 12%-க்கும் அதிகமாக வருவாய் கிடைக்கிறதெனவும், ஆக்கத் தொழில்களில் போடப்பட்ட மூலதனத்திற்கு 7%-க்கும் சிறிது அதிகமாக வருவாய் கிடைக்கிறதெனவும் கணக்கிடப்பட்டிருக்கிறது. பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஜப்பான், சோவியத் யூனியன் போன்ற நாடுகள், தங்கள் மொத்தத் தேசிய வருமானத்தில் 6%-லிருந்து 7% வரை கல்விக்குச் செலவிடுகின்றன. ஆனால், இந்தியா தன் தேசிய வருமானத்தில் 3% தான் கல்விக்குச் செலவிடுகிறது என இந்திய முன்னாள் கல்வி அமைச்சராக இருந்த திரு. எம். ஸி. சாக்ளா (M. C. Chagla) வருந்தினார். இந்திய மக்களில் ஒரு சதவீதத்தினருக்குத்தான் சமுதாய நலக் காப்புறுதி கிடைத்திருக்கிறது. அதுவும் ஒப்புமையில் மேலை நாடுகளில் கிடைப்பதைக் காட்டிலும் மிகவும் குறைவாகும். இந்தியாவில் இதுவரை வேலையில்லாதோருக்குக் காப்புறுதி அளிக்கப்படவில்லை. இது மிகவும் வருந்தற்குரியது.

## 3. பொருளாதாரக் கொள்கையின் குறிக்கோள்கள்

பொருளாதாரக் கொள்கையின் குறிக்கோள்கள் காலம் செல்லச்செல்ல மாறி வருகின்றன. இக் குறிக்கோள்கள் தனியாரின்

அல்லது சமுதாயத்தின் விருப்பங்களைப் பெரிதும் பொறுத்திருக்கிறது. ஆயினும், நம் மக்களில் பெரும்பாலோரின் கருத்துக்கிணங்கப் பொருளாதாரக் கொள்கையின் மிகவும் விரும்பத்தக்க குறிக்கோள்கள் இன்னின்னவை என்று சுட்டிக்காட்ட முடியும். அவை வருமாறு :

(அ) பொருளாதாரத் திறமை : ஆள் மாகாணம், மக்களின் தேர்ச்சி, நம் நாட்டிலேயே கிடைக்கும் இயற்கை வளங்கள் இவற்றை வீண் விரயம் செய்யாது, உற்பத்தி ஆற்றலைப் பெருக்கும் வகையில் பயன்படுத்தவேண்டும் என்பது அனைவருக்கும் ஒத்த முடிவே. குறிப்பிட்ட வளங்களைக் கொண்டு குறைவான உற்பத்தியைச் செய்வதைக் காட்டிலும் அதிகமான உற்பத்தி செய்வதை யாரே வேண்டாம் என்பார்? குறிப்பிட்ட வளங்களைக் கொண்டு பல்வேறுபட்ட பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் தொகுதியை உற்பத்தி செய்ய இயலுமாதலால் ஒவ்வொரு தொகுதியைப்பற்றியும் மதிப்பீடு செய்யவேண்டும். இந்த மதிப்பீட்டைச் செய்பவர்கள் நுகர்வோர்களே. இப்பண்டங்களுக்கும் பணிகளுக்கும் அவர்கள் ஒப்புமையில் எவ்வளவு விலைகளைத் தர இணங்குகிறார்கள் என்பதைப் பார்க்க வேண்டும். குறிப்பிட்ட பண்டங்களின் தொகுதியில் அதிகமான கைக்கடிகாரங்களும் குறைவான ரேடியோக்களும் இருப்பதாகவும், இன்னொரு தொகுதியில் குறைவான கைக்கடிகாரங்களும் அதிகமான ரேடியோக்களும் இருப்பதாகவும் கொள்வோம். (ஒரே வகை வளங்களிலிருந்து இரண்டு தொகுதிகளும் உற்பத்தி செய்யக்கூடியதாக இருக்கவேண்டும்). பிந்திய தொகுதியையே நுகர்வோர் விரும்புகிறார்களெனில், முந்திய தொகுதியை (அதிகமான கைக்கடிகாரங்களும், குறைவான ரேடியோக்களும்) உற்பத்தி செய்வது விரும்பத்தக்கதல்ல. கைக்கடிகாரங்களின் விலையுடன் ஒப்பிடுகையில், வானொலிப் பெட்டிகளின் விலை எவ்வளவு அதிகரிக்கிறது என்பதைப் பொறுத்தே அதிகமான வானொலிப் பெட்டிகளை உற்பத்தி செய்வது இருக்கிறது.

(ஆ) நிறைவுடை வேலைவாய்ப்பு : 1930ஆம் ஆண்டு வாக்கில் ஏற்பட்ட பெரிய வாணிக மந்தத்திற்குப் பின்பு, இக்குறிக்கோளின் முக்கியத்துவம் அதிகரித்துக்கொண்டு வருகிறது. வளங்களைத் திறமையாக ஒதுக்கீடு செய்வதன் ஒருறுப்பாகவே, வேலைவாய்ப்பைக் கொள்ளவேண்டும்.[1] வேலையின்றி இருப்

[1] இக் காலச் சமுதாயங்களில் அனைத்து வளங்களும் விலையை அடிப்படையாகக்கொண்டே ஒதுக்கீடு செய்யப்படவில்லை. எடுத்துக்காட்டாக, அரசினால் உற்பத்தியாகும் சில பண்டங்களுக்கும் பணிகளுக்கும் விலை குறிக்கப் பெறவில்லை. அதாவது இவை காசின்றியே கிடைக்கின்றன.

போர் ஓய்வாக இருக்கிறார்கள் என்றோ அல்லது எந்த வகையான பண வருமானமும் இன்றித் தங்கள் சொந்த அலுவல்களைக் கவனித்துக்கொண்டிருக்கிறார்கள் என்றோ கூறலாம். வேலை வாய்ப்பை ஒரு சார்பற்ற குறிக்கோளாகக் கொள்ள முடியாது. அதாவது ஏதாயினும் ஒரு வேலையை, அது பயனுடையதாயினும், அல்லவாயினும், எல்லோரும் செய்துதான் தீரவேண்டும் என்று கொள்வது நகைப்பிற்குரிய முடிவுகளை நல்கும். ஒரு கற்பனைத் தீவில் அனைவருக்கும் வேலைவாய்ப்பு இருந்ததாகவும், ஒவ்வொருவரும் பிறரின் துணிகளைச் சலவை செய்து கொண்டிருந்ததாகவும் பேராசிரியர் கார்வர் கூறுகிறார். ஆகவே, அதனால் ஏற்படும் பயன்களைக் கருதியே வேலைவாய்ப்பை ஒரு குறிக்கோளாகக் கொள்ள முடியும். ஆயினும், அனைவருக்கும் ஏதாயினும் ஒரு வேலை வாய்ப்பை நல்கவேண்டும் என்றே பல கொள்கைகளும் வகுக்கப்பட்டதாகத் தெரிகிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகள் 1946ஆம் ஆண்டில் இயற்றிய நிறைவுடை வேலைவாய்ப்புச் சட்டமும், இந்தியாவில் திட்டங்கள்தோறும் குடிசைத் தொழில்களுக்கும் கைவினைகளுக்கும் (Handicrafts) கணிசமான அளவு பணம் ஒதுக்குவதும் இதற்கு எடுத்துக்காட்டுகளாம்.[1]

பொருளாதாரக் கொள்கைக்கு ஒத்துவரக்கூடிய அடிப்படையாக இருக்கும்வண்ணம், நிறைவுடை வேலைவாய்ப்புக்கு ஒரு விளக்கம் அளிப்பதும் எளிதன்று. பணக் கூலிக்குச் சம்பந்தமின்றி நிறைவுடை வேலைவாய்ப்புக்கு விளக்கம் அளிக்க முடியாது. பொருளாதாரத்தில் பல நிறுவனக் காரணிகளினால் (Institutional Factors) கூலியைக் குறைப்பது இயலாததாகவும், சில வேளைகளில் கூலியை அதிகரிப்பது தவிர்க்க வொண்ணாததாகவும் உள்ளது. பணக்கூலி மட்டத்திற்குச் சம்பந்தமின்றி, நிறைவுடை வேலைவாய்ப்புக்கு விளக்கம் அளித்து அதற்கு உத்தரவாதமும் தர வேண்டும் என்றால், விலைகளைக் கட்டுப்பாடு செய்யவேண்டும். விலைகள் கட்டுப்பாடு இன்றேல், விலைகள் ஏறும். தொழிலாளர்களின் உற்பத்தித்திறனில் ஏற்படும் ஏற்றத்தைக் காட்டிலும், அவர்களின் ஊதியம் மிகவும் ஏறுமானால், விலைகளும் பொதுவாக ஏறியேயாக வேண்டும்; இல்லாவிட்டால் வேலையின்மை ஏற்படும். உச்ச அளவு இத்தனை பேர் வேலையின்றி இருக்கலாம் என்பதும், விலைகள் நிலைபெறுக இருக்க வேண்டுமென்பதும் பொருளாதாரக் கொள்கையின் குறிக்கோள்கள் என்றால், ஊதியம் இவ்வளவுதான் உயரலாம் என்று வரையறை விதிக்கவேண்டும்.

[1] முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் சிறுதொழில்களுக்கும், குடிசைத் தொழில்களுக்கும் ரூபா 27 கோடியும், இரண்டாவது திட்டத்தில் ரூபா 175 கோடியும், மூன்றாவது திட்டத்தில் ரூபா 264 கோடியும், நான்காவது திட்டத்தில் ரூபா 293 கோடியும் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

நிறைவுடை வேலைவாய்ப்புக்கு[1] ஒரு விளக்கம் தராமல் வேலையின்றி இருப்போரின் தொகை குறிப்பிட்ட எண்ணிக்கைக்குமேல் சென்றால், அரசு நடவடிக்கை எடுக்கவேண்டும் என்றால், நிதியக் கொள்கைகளினால் வேலைவாய்ப்பு மட்டத்தை அதிகரிக்கக்கூடும். அவ்வாறான சூழ்நிலைகளில் கூலியும் விலைகளும் ஒரே திசையில் ஒரே வீதாசாரத்தில் மாறாது. இப்படிப்பட்ட சூழ்நிலைகளில் நிதியக் கொள்கைகளினால் ஏற்படும் விளைவுகளை இந்நூலில் ஆய்வாம்.

(இ) வளங்களை ஒதுக்கீடு செய்வதற்குச் சுதந்திரம்: வளங்களைத் தன் விருப்பம்போல் பல்வேறுபட்ட பண்டங்கள், பணிகள் இவற்றின் உற்பத்திக்கு ஒதுக்கிடுவதற்கு, தனியாளுக்குச் சுதந்திரம் இருக்கவேண்டும். கட்டாய இராணுவ சேவை, போர்க்காலத்தில் கட்டாயப்படுத்தித் தொழிலாளர்களை வேலைக்குச் சேர்ப்பது, அடிமைத்தனம் ஆகியவற்றுக்கு எதிர்ப்பு இருப்பதிலிருந்து, இக் கொள்கையில் மக்களுக்குள்ள பற்றுத் தெரிகிறது.

(ஈ) பொருளாதார முன்னேற்றம்: குறிப்பிட்ட காலத்தில் வளங்களைத் திறமையாகப் பயன்படுத்தவேண்டும் என்பது மட்டும் நம் குறிக்கோளன்று. காலம் செல்லச்செல்ல மொத்தத் தலா உற்பத்தியும் அதிகரித்துக்கொண்டே இருக்கவேண்டும். இதைத்தான் பொருளாதார முன்னேற்றம் என்கிறோம். தொழில்நுட்ப முன்னேற்றத்தை எய்துவதற்கான வழிகளாம் பொருளாதார முன்னேற்றத்திற்குச் சாதகமான படிநிலைகளைப் பராமரிப்பதும் பொருளாதாரக் கொள்கையின் ஒரு குறிக் கோளாகும். இக் குறிக்கோளை யாவரும் ஏற்றுக்கொள்கிறார்கள்.

(உ) நியாயமான வருமானப் பகிர்வு: நீதி என்ற சொல்லுக்குத் திட்டவட்டமான விளக்கம் தர முடியாது. ஒவ்வொருவரும் நீதி என்ற கருத்துப் படிமத்திற்கு வெவ்வேறான பொருளைக் கொள்கின்றனர். இருந்தாலும் 1930ஆம் ஆண்டுவாக்கிலும், 1940ஆம் ஆண்டுவாக்கிலும் செய்யப்பட்ட சீர்திருத்தங்களை, தேர்தலுக்கு

[1] நிறைவுடை வேலைவாய்ப்பு என்றால் நூற்றுக்கு நூறு எல்லோருக்கும் வேலை கிடைக்கின்றது என்று பொருளன்று. சிலர் வேலை செய்ய விருப்பமின்றி மடிந்திருக்க விரும்பலாம். உற்பத்தி முறையில் ஏற்படும் மாறுதல்களால் சிலர் சில தொழில்களிலிருந்து நீக்கப் பெறலாம். அவர்கள் வேறு தொழில்களில் அமர்வதற்கு, அவர்களுக்குப் பயிற்சி தரவேண்டும். அதற்குச் சிறிது காலம் பிடிக்கும். ஆகவே, ஒரு காலகட்டத்தில் இவர்கள் வேலையின்றியிருப்பர். இவ்விரு பிரிவினர்களையும் தவிர்த்து ஏனையோர் எல்லோருக்கும் வேலை கிடைத்தால் அதை நிறைவுடை வேலைவாய்ப்பாகக் கொள்ளலாம். இங்ஙனம் வேலையின்றி யிருப்போரின் தொகையும் மிகவும் குறைவாக இருக்க வேண்டும். இவர்களின் எண்ணிக்கை யாதாக இருக்கலாம் என்பது பற்றி ஆசிரியர்கள் தம்முள் கருத்து வேறுபடுகின்றனர். பொதுவாக இந்த எண்ணிக்கை 5% ஆக இருக்கலாம் எனலாம். இவ்வெண்ணிக்கை 3% தான் இருக்கவேண்டும் என்பாரும் 20% வரை இருக்கலாம் என்பாரும் உளர்.

நிற்கும் எந்த வேட்பாளரும் அகற்றவிரும்பவில்லை என்பதிலிருந்து, பலருடைய வருமானத்திற்கு இடையேயுள்ள ஏற்றத் தாழ்வைக் குறைக்கவேண்டும் என்று மக்கள் விரும்புவதாகத் தெரிகிறது. வருமானத்தில் ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்க வேண்டுமென்றே ஐந்துபேர் கொண்ட குடும்பத்திற்கு 10–லிருந்து 18 ஏக்கருக்கு மேல் நிலம் இருக்கக்கூடாதென்று மத்திய நிலச் சீர்திருத்தக் குழு மாநிலங்களுக்குச் சிபாரிசு செய்திருக்கிறது. நகர்ப்புறச் சொத்துகளுக்கும் சில மாநிலங்கள் உச்ச வரம்புகள் விதித்து விட்டன.[1]

பிற மாநிலங்களும் இதற்கான சட்டம் தயாரித்துக்கொண்டிருக்கின்றன. இது தவிர ஒருவர் சாகுபடி செய்யும் நிலங்களின் அளவுக்கும் சில மாநிலங்கள் உச்ச வரம்பு விதித்திருக்கின்றன. எடுத்துக்காட்டாகத் தமிழ்நாட்டில் ஒரு குத்தகைதாரர் 5 ஏக்கருக்கு (15 மா) மேல் சாகுபடி செய்ய முடியாது. இந்த 5 ஏக்கரையும் அவர் உள் குத்தகைக்கு (Sub lease) விடக்கூடாது. ரொக்க வருமானத்திற்கும் ஓர் உச்ச வரம்பை விதிக்கவேண்டுமென்று சிலர் கோருகிறார்கள். இவ் வேற்றத் தாழ்வுகளை எவ்வளவு குறைக்கவேண்டும் என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது.[2] இந்திய வரிவிதிப்பு விசாரணைக் குழுமத்தின் (மத்தாய் குழுமம்) கருத்துப்படி மிகப் பெரிய செல்வந்தருக்கும், மிகவும் வறியவருக்கும் இடையே உள்ள வருமானத்தில் வேறுபாடு முப்பது மடங்குக்குமேல் செல்லக்கூடாது. ஜெயப்பிரகாச நாராயணனின் கருத்துப்படி இவ் வேறுபாடு பத்து மடங்குக்குமேல் இருக்கக்கூடாது. இது எங்ஙனமாயினும் நாம் இந்தக் குறிக்கோளை எட்ட நெடுங்காலம் பிடிக்கும். ஐந்தாண்டுத் திட்டங்களின் விளைவாகச் செல்வர்கள் மிகப் பெரிய செல்வர்களாகவும், ஏழைகள் மிகவும் ஏழைகளாகவும் மாறியிருக்கிறார்கள். நம் நாட்டு மக்களில் நாற்பது சதவீதத்தினர் ஏழ்மைக் கோட்டுக்குக் (Poverty line) கீழே இருக்கிறார்கள். திங்கள் ஒன்றுக்கு ரூபாய் 37–க்கும் குறைவாக நுகர்வுப் பண்டங்களின்மீது செலவு செய்பவர்கள் ஏழ்மைக் கோட்டுக்குக் கீழே இருப்பதாகக் கருதப்படுகிறார்கள். இவர்களின் எண்ணிக்கை 220 மில்லியனாகும். இவர்களில் 38.9 மில்லியன் பேர் உத்தரப் பிரதேசத்திலும், 27 மில்லியன் பேர் பீகாரிலும், 18 மில்லியன் பேர் மத்தியப் பிரதேசத்திலும், 17·7 மில்லியன் பேர் ஆந்திரப்பிரதேசத்திலும் வாழ்கிறார்கள்.

[1] இலங்கைச் சட்ட மன்றத்தில் ஒருவர் இரண்டு வீட்டிற்குமேல் வைத்திருக்கக் கூடாதெனவும், எதிர்காலத்தில் ஒருவர் அரசின் ஒப்புதல் பெறாது 2,400 சதுர அடிக்கும் அதிகமான பரப்பு உள்ள ஒரு வீட்டைக் கட்டக் கூடாதென்றும் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது.

[2] Report of the Taxation Enquiry Commission, 1953-1954, Volume I.

பொருளாதாரக் கொள்கையின் குறிக்கோள்களை நாம் அடைவுபடக் கூறியதாகக் கொள்ளக்கூடாது. எந்த வகைச் சட்டத்திற்குள் அரசின் நடவடிக்கைகளின் அளவும், இயல்பும் அறுதியிடப்பட்டிருக்கின்றன என்பதைக் கோடிட்டுக் காட்டுதல் போதுமானது.

**(ஊ) குறிக்கோள்களிடையே மோதலின்மை :** இக் குறிக்கோள்களைத் தனித்தனியே பின்பற்றுவோமெனில் அவை தம்முள் முரண்பாடு தென்படும். வருமானப் பகிர்வில் காணப்படும் ஏற்றத் தாழ்வுகளை மிகவும் குறைத்தால், உற்பத்தி குறையலாம். இஃது பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாகவும் இருக்கலாம். சில நிறுவனப் பின்னணிகளில், வேலைவாய்ப்பு மிக உயர்ந்த மட்டத்தில் இருந்தால், நுகர்வோர்களின் தெரிவுகளுக்கு மிகவும் ஏற்ப உற்பத்தி இல்லாமலிருக்கலாம். எடுத்துக்காட்டாக, ஒரு சோஷலிஸப் பொருளாதாரத்தில் நிறைவுடை வேலைவாய்ப்பு இருக்கலாம். ஆனாலும், நாட்டின் வளங்களின் பெரும் பகுதியும் கைக் கடிகாரங்களின் உற்பத்திக்குப் பயன்படுத்தப்படலாம். இப்பொழுது சோவியத் யூனியனில் காலணிகளுக்குத் தட்டுப்பாடு இருப்பதும் இதற்கு இன்னொரு உதாரணமாகும். பல்வேறுபட்ட குறிக்கோள்கள் இடையேயும் மோதல்கள் இருப்பதை ஒரு பழமையான முதுமொழி கூறுகிறது. 'உங்களால் ஒரே வேளையில் ரொட்டியை வைத்திருக்கவும், அதைத் தின்னவும் முடியாது.'[1] ரொட்டியில் எவ்வளவைத் தின்ன வேண்டும் என்பதையும், எவ்வளவை (தின்னாமல்) வைத்திருக்க வேண்டும் என்பதையும் ஒருவர் முடிவு செய்ய வேண்டும். இதன் விளைவாக, நடைமுறையில் இவ்வனைத்துக் குறிக்கோள்களையும் ஒருசேர உச்ச அளவில் எய்துவதற்குச் சமுதாயம் முயல்கிறது. இங்ஙனம் எய்துவதன் அளவும், தனித்தனியே இவ் வொவ்வொரு குறிக்கோளையும் எந்த அளவுக்கு எய்த முடியுமோ அந்த அளவுக்கு இராது.

எடுத்துக்காட்டாக, நியாயமான வருமானப் பகிர்வு என்பதற்கு, அனைவரின் தலா வருமானத்தையும் சமனாக்குவது என்று விளக்கம் தரலாம். இருந்தாலும் இவ் வமைப்பின்கீழ், பகிர்வு செய்வதற்குக் கிடைக்கும் உற்பத்தி, வேறெந்தப் பகிர்வு அமைப்பின்கீழ் இருப்பதைக் காட்டிலும் குறைவாகவே இருக்கும். பல்வேறுபட்ட உற்பத்திக் காரணிகளின் கிடைப்பும், முக்கியமாக முனைவின் கிடைப்பும் குறைவது திண்ணம். வளங்களைத் திரட்டுவதிலும் கடுமையான சங்கடங்களைச் சமாளிக்க வேண்டி

[1] 'கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை' என்ற தமிழ்ப் பழமொழியுடன் இதை ஒப்பிடலாம்.

வரும். இதன் விளைவாக, நியாயமான வருமானப் பகிர்வு என்ற கருத்துப்படிமம் எத்துணை பாதிக்கப்படுகிறதோ, அத்துணை, வருமானப் பகிர்வின் இயல்பையும், பகிர்வுக்குக் கிடைக்கும் மொத்த வருமானத்தையும் கருத்தில் கொண்டு வகுக்கப்பட வேண்டும்.

உற்பத்தி முற்றும் ஒரு மைய அரசின் ஏஜன்ஸிக்கு உட்பட்டிருந்தாலொழிய, நிறைவுடை வேலைவாய்ப்பை எய்த முடியாது. அக்கால நிறைவுடை வேலைவாய்ப்புக்கும் நுகர்வோர் தெரிவுக்கும் இடையே மோதல் ஏற்படும். இதேபோன்று உத்தம அளவு வள ஒதுக்கீட்டுக்கும், நுகர்வோர் தெரிவுக்கும் இடையே மோதல் ஏற்படும். நுகர்வோர் தெரிவு ஒழிந்தால், உத்தம அளவு வள ஒதுக்கீடும் ஒழியும். வேலையின்மையினாலும் இழப்பு ஏற்படும். ஆனால், இந்த இழப்பைக் காட்டிலும் பண்டங்களையும், பணிகளையும் தெரிந்தெடுக்கும் உரிமையை நுகர்வோர் இழப்பதும், வளங்களைத் தங்கள் விருப்பம்போல் பல்வேறுபட்ட தொழில்களுக்கு ஒதுக்கும் சுதந்திரத்தைத் தனியார் இழப்பதும் பெரிய இழப்பாகும். ஆகவே, இவ்விரண்டு சுதந்திரங்களையும் இழந்தால்தான், நிறைவுடை வேலை வாய்ப்பையும் பூரண உற்பத்தியையும் பெறமுடியும் என்றால், பலர் இக் குறிக்கோளை (நிறைவுடை வேலைவாய்ப்பு, பூரண உற்பத்தியை) விட்டுவிடத் தயாராக இருப்பர்.

ஒட்டு மொத்தத்தில் சமுதாயக் கொள்கையை அறுதியிடுவதில், இம் மோதல்களை, இவை கற்பனையானாலும் சரி, அல்லது உண்மையானாலும் சரி, தீர்க்க வேண்டும். இங்ஙனம் தீர்த்துவைப்பது அரசின் கடமையாகும். அரசு பொருளாதாரத்தின் விளைவுகளை நாம் பொருளியல் புலவர்கள் என்ற அளவில் ஆயும்பொழுது, இந்த விளைவுகளை அறுதியிடுபவைகளில் முக்கியமான ஒன்று அரசியல் பொருளாதாரத்தின் அளவும் வீச்சும் ஆகும் என்பதையும், சமுதாயக் கொள்கையைப் பெரிதும் பொறுத்தே அரசியல் பொருளாதாரத்தின் வீச்சு இருக்கின்றது என்பதையும் சுட்டிக்காட்ட வேண்டும்.

**(எ) நிதியக் கொள்கையின் அல்லது வரவுசெலவுத் திட்டக் கொள்கையின் நோக்கங்கள் :** இந் நோக்கங்கள் மூன்றாகும்: (i) வளங்களைச் சரியானபடி பல்வேறு பண்டங்கள், பணிகள் இவற்றின் உற்பத்திக்கு ஒதுக்கீடு செய்து, உச்ச அளவு உற்பத்தியை எய்துதல். இதனை ஒதுக்கீட்டுப் பிரிவு (Allocation Branch) எனலாம். (ii) வருமானத்திலும் செல்வத்திலும் (பலருக்கும் இடையே) உள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைத்தல்.

இதனைப் பகிர்வுப் பிரிவு எனலாம். (iii) பணத்தின் மதிப்பை நிலைபேறுக வைத்திருத்தல். அதாவது விலைகளில் அதிக ஏற்ற இறக்கங்கள் ஏற்படக்கூடாது. இதனை நிலைபேருக்கப் பிரிவு எனலாம்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. Ursula K. Hicks, 'Public Finance', Indian Edition, Reprint, 1956, Chapter II.
2. C. H. Brownlee and Edward D. Alben, 'Economics of Public Finance', Indian Edition, 1960, Chapter I.
3. R. C. Sadena and P. C. Mathur, 'Public Economics', 6th Edition, 1967, Chapter I.
4. K. K. Andley and K. P. M. Sundharam, 'Public Economics and Public Finance', 3rd Edition, 1969, Chapter I.
5. Otto Eckstein (Editor), 'Public Finance', 2nd Edition, 1967, Chapter I.
6. Richard A. Musgrave and Alan T. Peacock, 'Classics in the Theory of Public Finance', 1967.

# 2. அரசு நிதியவியலுக்கும் தனியார் நிதியவியலுக்குமுள்ள வேறுபாடு

பொதுவாகக் கூறுமிடத்து, அரசு நிதியவியலுக்கும், தனியார் நிதியவியலுக்கும் அடிப்படையில் வேறுபாடு இல்லை. இருவருமே, நெடுங்காலத்தில் தங்கள் செலவுகளுக்கு ஏற்ப தத்தம் வருமானத்தைச் சரிக்கட்ட வேண்டும். இருவரும் தங்கள் வளங்களைச் சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதிக்கு ஏற்பப் பயன் படுத்த வேண்டும். வருமானத்தைக் காட்டிலும் செலவு அதிக மாக இருக்கும் பொழுது, இருவருமே கடன் வாங்க வேண்டியது தான். ஆனால், வேறு சில வகைகளில் அரசு நிதியத்துக்கும், தனியார் நிதியத்துக்கும் வேறுபாடுகள் இருக்கின்றன. அவற்றை இப்பொழுது ஆராய்வாம்.

(*1*) 'துணிக்குத் தக்கவாறு சொக்காயைத் தைக்க வேண்டும்' (cut your coat according to your cloth) என்று நாம் தனியாருக்கு அறிவுரை கூறுகின்றோம். ஆனால், அரசு முதலில் தன் சொக்காயின் அளவைத் தீர்மானித்துப் பின்பே, அதற்கு வேண்டிய துணியை வாங்க முனைகின்றது. தனியார் தன் வருமானத்திற்கேற்பச் செலவைச் சரிக்கட்ட வேண்டும். பொது வாக, அரசு தன் செலவிற்கு ஏற்ப வருமானத்தைப் பெருக்கிக் கொள்கின்றது. 'நான் இவ்வளவு செலவழிப்பேன்' என்று தனியார் கூறுகின்றார்; நிதிய அமைச்சரோ 'நான் இவ்வளவு தொகையை வசூலிக்க வேண்டும்' என்று கூறுகின்றார் [1] என்பது பாஸ்டபிளின் கூற்று. ஆனால், இக்கூற்று முற்றும் உண்மையன்று. பொதுவாகத் தனியார் தன் வருமானத்திற்கு ஏற்பச் செலவைச் சுருக்கிக் கொண்டாலும், சில சமயம் செலவிற்கு ஏற்ப வருமானத் தைப் பெருக்கவும் வேண்டியிருக்கின்றது. ஒருவர் திருமணம் செய்து கொண்டு பல குழந்தைகளுக்குத் தந்தையுமானால், கடின

[1] C. F. Bastable, 'Public Finance,' 3rd Edition, 1922, Macmillan & Co., p. 46.

மாக உழைத்துக் கூடுதல் ஊதியத்தைப் பெற வேண்டியிருக் கின்றது சில சமயங்களில்தான் வழக்கமாகப் பணி புரியும் இடத்துடன், வேருெரு அலுவலகத்திலும், ஒரு பகுதிநேரம் பணி (part time work) புரிந்து பொருள் ஈட்ட வேண்டியிருக்கின்றது. இதே போல் குழந்தைகள் வளர்ந்து பொருளீட்டவும் தொடங்கி விட்டால் அவர் தன் பணி நேரத்தைக் குறைத்துக் கொள்ளலாம் அல்லது பகுதி நேரப் பணியை விட்டுவிடலாம். பெரும்பாலும், அரசு தன் செலவுக்கு ஏற்ப வருவாய்த் துறைகளைப் பெருக்கிக் கொண்டாலும், சில சமயம் வருமானத்திற்கு ஏற்பத் தன் செலவைச் சுருக்கிக் கொள்ளவும் வேண்டியிருக்கின்றது. இக் காலங்களில் அரசு வேலையிலிருந்து சிலரை நீக்கும். 1949-ல் உருபாவின் மதிப்பைக் குறைத்த பின்பு, இந்திய அரசு இரண்டாண்டுகளில் தன் செலவில் இருபது கோடி உருபா குறைக்க முயன்றது.

(2) அவர்கள் நோக்கங்களிலும் வேறுபாடு தென்படு கின்றது. தனியார் எப்பொழுதும் தன் சொந்த இலாபத்தையே கருதுகின்ருர். அரசு குடிமக்களின் நன்மையையே கருதிச் செயல் படுகின்றது. எதிர்காலத்தைப் பற்றி எண்ணும் ஒருவன், தான் ஈட்டிய பொருளைவிடக் குறைவாகவே செலவழித்து மிச்சம் பிடிப் பான். இப்படிச் சேமிப்பது தனியாளரைப் பொறுத்தவரை சிறந்த பண்பாகக் கருதப்படுகின்றது. ஆனல், அரசுக்கு இது பொருந் தாது. துண்டு வரவு செலவுத் திட்டங்கள் தீமையைப் பயப்பன. அவை அரசின் நிதிய நிலைமை நிலைபேறு உடையனவாக இல்லை என்பதைக் காட்டுகின்றன. ஆயினும், இதிலிருந்து உபரி வரவு செலவுத் திட்டம் நல்லதெனக் கூறமுடியாது. வரவு செலவுத் திட்டம் உபரியாக இருக்கவேண்டும் என்பதற்காக, வரிவிதிப்பு மிகவும் கடுமையானதாகவும், அரசின் செலவு மிகவும் குறை வானதாகவும் இருக்கலாம். நாட்டு நலனைப் பெருக்கும் சில துறைகளுக்குப் போதுமான தொகை ஒதுக்கப்படாமல் இருக்க லாம். வரவு செலவுத் திட்டம் எப்பொழுதும் உபரியாக இருக்க வேண்டும் என்று நினைப்பது நிதியவியலின் நல்ல அமிசம் எனக் கூறமுடியாது. ஆண்டுதோறும் வரவு செலவுத் திட்டங்கள் அதிக அளவு உபரியாக இருந்தால், வரியைக் குறைத்து வரி செலுத்து வோருக்கு நிவாரணம் அளிப்பதோ அல்லது சமுதாயச் செலவின் அளவை அதிகரிப்பதோ நல்லது. ஆகவே, பட்ஜெட்டில் துண்டு விழுந்தாலும் அரசு மக்களுக்கு உச்ச அளவு ஆதாயம் கிடைக்கும் படிப் பார்த்துக் கொள்ளவேண்டும்.

(3) அரசுக்கு இறைமை (Sovereignty) இருக்கின்றது. ஆகவே, எல்லோரையும் தன் ஆணைக்குக் கீழ்ப்படியும்படிக்

கட்டாயப்படுத்துவதற்கு அரசுக்கு அதிகாரம் இருக்கின்றது. உதாரணமாக, யார்மீது அரசு வரி விதித்தாலும் அவர்கள் வரியைக் கட்டித்தான் தீரவேண்டும். வரி செலுத்த மறுக்க முடியாது. ஆனால், தனியார் ஒருவர் இம்மாதிரி செய்யமுடியாது. அவர் யாரையும் தனக்குப் பணம் செலுத்தும்படிக் கட்டளை பிறப்பிக்க முடியாது. இவ்வேறுபாடு, சட்டக் கோணத்திலிருந்து பார்க்கும்பொழுது சரியேயாயினும், இதை நடைமுறையில் நிறை வேற்றுவதில் சில நிருவாகச் சங்கடங்கள் ஏற்படுகின்றன. அரசு வரிகளை மேன்மேலும் உயர்த்திக் கொண்டு சென்றால் உற்பத்தி பாதிக்கப்படலாம். இது போன்றே தனியார் உடைமைகளை அரசு தன் உபயோகத்திற்கு வலுக்கட்டாயமாக எடுத்துக் கொண் டால் சேமிப்பும் பாதிக்கப்படும். ஆகவே, இவ்வதிகாரத்தை அரசு தான்தோன்றித்தனமாகப் பிரயோகிக்க இயலாது. அரசின் ஆணை அதன் குடிமக்களின்மீதே செல்லும். இவ் வரம்புகளுக்கு உட்பட்டு அரசு நிதியம் வலுக்கட்டாயத் தன்மை வாய்ந்ததாக இருப்பதை ஒப்புக் கொள்ளலாம்.

(4) தனியார் ஒருவர் செலவழிக்கும் பொழுது, பல பண்டங்கள், பணிகள் இவற்றின்மீது செலவழிக்கும் தொகை களிலிருந்து கிடைக்கும் இறுதிநிலப் பயன்பாடு சமமாக இருக்கும் படிப். பார்த்துக் கொள்வார். இதனால், இச் செலவிலிருந்து கிடைக்கும் மொத்தப் பயன்பாடு உச்ச அளவினதாக இருக்கும். சட்டக் கோணத்திலிருந்து பார்க்கும்பொழுதுதான் அரசை ஓர் ஆளாகக் கருதலாமே தவிர, வேறு வழிகளில் கருத முடியாது. ஆகவே, ஆளாக (person) இல்லாததால், தனியார் ஒப்பிட்டுப் பார்ப்பதைப் போன்று, தான் செய்யும் பல்வேறுபட்ட செலவு க்ளிலிருந்து கிடைக்கும் இறுதிநிலைப் பயன்பாடுகளை அரசு ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. இதற்குப் பல காரணங்கள். முதலா வதாக, அரசு என்பது ஒரு ஆளல்ல; பல ஆட்களின் சேர்க்கை. அவர்களின் முடிவுகளை இணைப்பது சாத்தியமல்ல. அங்ஙனம் முடிவுகளை இணைத்தால்தான் சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதியைக் கடைப்பிடிக்க முடியும். இரண்டாவதாக, அரசின் செலவின் பெரும்பகுதி நிரந்தரமானதாகவும், எளிதில் மாற்ற முடியாததாகவும் இருக்கின்றது. மூன்றாவதாக, பல சமயங்களில் அரசின் செலவுப் பொருளியல் ஒழிந்த காரணிகளால் பாதிக்கப் படுகின்றது. இக்கருத்துக்கு எதிராகச் சிலர், ஒரு தனியாளைக் காட்டிலும் அரசு இக்கொள்கையை மிக எளிதாகக் கடைப்பிடிக்க முடியும் என்று நம்புகின்றார்கள். ஏனெனில், தன் செலவிலும், வருமானத்திலும் வேண்டுமென்றே அரசினால் மாறுதல்களைப் புகுத்த முடியும். ஆனால், தனியாரால் இங்ஙனம் செய்யமுடியாது.

மேலும், தனியார் நிகழ்காலத்தைப்போல் எதிர்காலத்தைப் பற்றி அத்துணைக் கவலைப்படுவதில்லை. நிகழ்காலச் செலவுகள், எதிர்காலச் செலவுகள் ஆகியவற்றினின்று கிடைக்கும் இறுதி நிலைச் சமன்பாடுகள் சமமாக இருக்கும்படிச் செய்ய அரசு முயலுகின்றது.

(5) தனியார் ஒருவருக்குத் தம் வருமானத்திலோ அல்லது செலவிலோ பெருத்த மாறுதல்கள் செய்வது எளிதன்று. எடுத்துக் காட்டாக, ஒவ்வொருவரும் தம் வருமானத்தை இரட்டிப்பாக்கவோ அல்லது மும்மடங்காக்கவோ விரும்பலாம். ஆயினும், எத்தனை பேரால் அவ்விதம் செய்ய இயலும்? அரசு வருமானம், அரசு செலவு சம்பந்தப்பட்ட மட்டில் பெருத்த மாற்றங்களைச் செய்வதற்கு அரசுக்குப் பல வாய்ப்புகள் இருக்கின்றன. ஒரு பொதுவுடைமைக் கட்சி அதிகாரத்திற்கு வருமானால், அது அரசின் வருமானத்திலும், செலவிலும், புரட்சிகரமான மாறுதல்களைச் செய்வது திண்ணம். நிதி விவகாரத்தில் இவ்வித நெகிழ்ச்சி தனியாரிடம் காணப்படுவதில்லை.

(6) தங்கள் வளங்களைப் பொறுத்த மட்டில் அரசுக்கும் தனியாருக்கும் இடையே ஒரு வேறுபாடு காணப்படுகின்றது. பணமுடை ஏற்படும்பொழுது, உள் நாட்டிலும், பல வெளி நாடுகளிலும், அரசு கடன் வாங்கலாம். ஆனால், தனியார் ஒருவர் பிறரிடம் கடன் வாங்க முடியுமே தவிர, பிற நாட்டு அரசுகளிடமிருந்து கடன் வாங்க முடியாது.

(7) தனியாருக்கு இல்லாத வேறொரு வருமானமும் அரசுக்கு இருக்கின்றது. அது தான் வேண்டும் பொழுது பணத்தை அச்சிட்டுக்கொள்வது. (போர்க் காலங்களில் தங்கள் போர்ச் செலவுகளைச் சரிக்கட்ட பல அரசுகளும் பெருமளவில் காகிதப் பணத்தை அச்சிட்டுக்கொண்டன.) நாட்டின் வரிதாங்கு வல்லமை அளவுக்குமீறிப் பாதிக்கப்பட்டாலும், பொதுமக்களுக்கு அரசினிடம் நம்பிக்கை இல்லாமல் போனாலும், இம் மந்திரக்கோலைப் பயன் படுத்தி அரசு பணத்தைப் படைக்கலாம். சிறைக்குச் செல்ல தயாராய் இருந்தாலொழிய தனியார் இங்ஙனம் காகிதப் பணத்தை அச்சிட முடியாது.

(8) எதிர்காலத்திற்கு வகை செய்யத் தாராள புத்தியுடனும், கூர்ந்த அறிவுடனும் அரசு இயங்க வேண்டும். அரசியல் தந்திரி இனி வரும் தலைமுறையினர்களுக்கும் நம்பன் (Trustee) பொறுப்பை ஏற்கவேண்டியவராய் இருக்கின்றார். ஆகவே, காடு வளர்ப்பு, பொது மராமத்து வேலைகள், சமுதாயநலப் பாதுகாப்புத்

திட்டங்கள் ஆகிய இவற்றிற்கு அரசு ஏராளமான தொகைகளைச் செலவிடுகின்றது. இவற்றிலிருந்து யாதொரு பண வருமானமும் உடனே கிடைக்காமல் இருக்கலாம்; பல தலைமுறைகளுக்குக்கூட கிடைக்காமல் இருக்கலாம். இதற்கு மாறாகத் தனியார் விரைவில் பண வரவை எதிர்பார்க்கிறார். மனித வாழ்வு அநித்திய மானதால் அவர்கள் இங்ஙனம் எண்ணுகின்றார்கள். இதனால் எதிர் காலத்தைப் பற்றிக் குறைவாக மதிப்பிடுகின்றார்கள். ஆனால், தனியாரைப் போன்று, ஒரு சமுதாயம் இறந்து படுவதில்லை. சமுதாயம் நிலையானது, ஆகவே, அரசு சமுதாயத்தின் எதிர் காலத்திற்கு, வகை செய்தே தீர வேண்டும்.

(9) தனியார் நிதியைப் பொறுத்தவரை எல்லாம் மூடு மந்திரமாகவே இருக்கின்றது. பணம் படைத்த ஒவ்வொருவரும் பிறருடைய கண்ணிலிருந்து தப்ப முயல்கின்றனர். ஒருவருடைய நாணயம், அவருக்கு இருக்கும் ஆஸ்தியைப் பொறுத்தன்றி, அவருக்கு இருப்பதாகக் கருதப்படும் ஆஸ்தியைப் பொறுத்தே இருக்கிறது. அவர் தம்முடைய வருமானத்தைப் பற்றியும், நிதிய நிலைமையைப் பற்றியும், பிறருக்கு உயர்வான எண்ணம் ஏற்பட வேண்டும் என்று கருதுகிறார். ஆனால், அரசு நிதியவியலைப் பொறுத்தவரை செய்திப் பரப்பே (Publicity) அதன் முக்கிய அமிச மாகும். வரவு செலவுத் திட்டங்கள் வெளியிடப்பட்டு மிகப் பெரும் அளவில் விளம்பரமும் தரப்படுகின்றது. இவற்றை மக்கள் வர வேற்கலாம்; கண்டிக்கலாம்; தங்கள் கருத்துகளைத் தெரிவிக்க லாம்; திறனாய்வு செய்யலாம். செய்திப் பரப்பால் மக்களிடையே அரசின் மதிப்பு அதிகரிக்குமே ஒழிய, குறையாது.

(10) வரவு செலவுத் திட்டம் தயாரிப்பதற்கு அரசுகள் பெரும்பாலும் ஓர் ஆண்டையே அலகாகக் கொள்கின்றன. நீண்ட காலத்திற்கு வரவு செலவுத் திட்டங்கள் தயாரிப்பது அருமையே யானாலும் ஒரோவழி தயாரிப்பதுண்டு. ஆனால், தனியாள் திங்கள் வாரியாகவே தன் வரவு செலவுத் திட்டத்தைத் தயாரிக்கின்றார். செவ்வையாகத் தயாரிக்கப்பட்ட வரவு செலவுத் திட்டங்களுக்கு இணங்கவே அரசுகள் செலவு செய்கின்றன. தனியார் தங்கள் வரவு செலவுத் திட்டங்களைத் தயாரிப்பதில் போதிய கவனம் செலுத்துவதில்லை. பலர் வரவு செலவுத் திட்டங்களைத் தயாரிப்பது மில்லை. மேற்கூறியவை அரசு நிதியவியலுக்கும், தனியார் நிதிய வியலுக்கும் உள்ள சில வேறுபாடுகளாகும்.

# 3. உச்ச சமுதாயப் பயன் கோட்பாடு
## (The Principle of Maximum Social Advantage)

அரசு நிதியவியலைப் பொறுத்தவரை நாம் கடந்த காலத்திய மேலெழுந்தவாரியான கருத்துகளாலும் மேற்போக்காகச் சொல்லிய கூற்றுகளாலும் இப்பொழுதும் தாக்கப் படுகின்றோம் என டாக்டர் டால்டன்[1] கூறுகிறார். எடுத்துக்காட்டாக நூற்று எழுபது ஆண்டுகட்கு முன்பு ஜே. பி. ஸே (J. B. Say)[2] என்பவர் கூறியதைக் காட்டலாம். அவர் 'நிதியத் திட்டங்கள் யாவற்றி லும் மிகச் சிறந்தது, மிகக் குறைவான வருவாயைத் தரக் கூடியதே' எனக் கூறினார். இற்றை நாளிலுங்கூடப் பலர் அவர் கருத்தை ஏற்றுக்கொள்வர். வரியைப்பற்றி இப்போது நடக்கும் விவாதம் பெரும்பாலும், 'ஒவ்வொரு வரியும் தீமை பயப் பதாகும்' என்ற அடிப்படையிலேயே நடக்கின்றது. இக் கருத்து அறிவுக்கு ஒத்ததன்று. அரசின் செலவு அனைத்தும் நன்மை தருவது என்ற கூற்றும் அறிவுக்கு ஒத்ததன்று. ஒவ்வொரு வரியும் தீமை பயக்கின்றது என்பது உண்மையன்று. எடுத்துக்காட்டாகச் சாராயத்தின்மீது வரி விதிப்பதால் அதன் விலை ஏறுகின்றது. இவ்விலையேற்றத்தினால் அதன் நுகர்வு குறையுமானால், அது நல்ல தாகும். இதேபோல, அனைத்து அரசுச் செலவும் நன்மை தருகின்றது என்பதும் உண்மையன்று. உதாரணமாக, அவசிய மற்ற போர்ச்செலவுகள் தீமை பயப்பனவாகும். அரசின் செலவின் ஆதாயத்தைப் பற்றிப் பேசாது, வரிப் பளுவைப் பற்றிப் பேசுவது மடமையாகும். எந்த நோக்கங்களுக்காகக் காசோலைகள் (Cheques) எழுதப்பட்டனவோ, அவற்றை எண்ணாது அறிவுடைய எவரும், காசோலைகளை எழுதுவதில் உள்ள கஷ்டத்தைப் பற்றிப் பேசுவ தில்லை.

[1] Hugh Dalton, 'Principles of Public Finance', 11th Impression, George Routledge & Sons, Ltd., 1941, p. 7.

[2] Quoted by Ricardo in his Works, p. 145.

அரசு நிதியவியலின் அடிப்படைக் கொள்கையைப் பற்றி டால்டன்[1] பின்வருமாறு கூறுகிறார்: 'அரசு நிதியவியலைப் பகட்டான கூற்றுகளின் கோவையாகக் கருதாது, பொருளியல் அல்லது அரசியல் நூலின் ஒரு பிரிவாகக் கருத வேண்டுமெனில், அதற்கு ஆணிவேராக ஓர் அடிப்படைக் கோட்பாடு இருக்க வேண்டும்.' இவ்வடிப்படைக் கோட்பாட்டை டால்டன் உச்ச சமுதாயப் பயன் கோட்பாடு எனக் குறிப்பிடுகின்றார். அரசின் நிதியவியலில் அடங்கிய வரி விதிப்பு செலவு ஆகிய நடவடிக்கைகளில், அரசினிடமிருந்து தனியாருக்கோ, அல்லது தனியாரிடமிருந்து அரசுக்கோ வாங்கும் ஆற்றல் மாற்றப்படுகின்றது. இவ் வாங்கும் ஆற்றல், பயன்பாடுகளை வாங்குவதற்கு உதவுகின்றது, இவ் வாங்கும் ஆற்றல் தனியாரிடமிருந்து அரசுக்கு வரி விதிப்பின் மூலமும், அரசினிடமிருந்து தனியாருக்குச் செலவு மூலமும் மாற்றப்படுகின்றன. இம்மாற்றங்களின் விளைவாகச், சமுதாயம் உற்பத்தி செய்த செல்வத்தின் இயல்பிலும், செல்வத்தின் தொகையிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன. இதே போலத் தனியார்கள், வருக்கங்கள் இவர்களிடையே உள்ள செல்வப் பங்கீட்டிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன. இந்தச் செயல்கள் மூலமாகச் சமுதாயம் முழுமைக்கும் உச்ச அளவு ஆதாயத்தைப் பெறும் முறையே சிறந்த அரசு நிதியவியல் முறையாகும்:

அரசு குடிமக்களிடமிருந்து வரியை வசூலிக்கின்றது. பின்னர் அதைக் குடிமக்களுக்கே செலவிடுகின்றது. வரியைச் செலுத்துபவர்கள் ஓரளவு தன்னலமறுப்புச் செய்ய வேண்டியிருக்கின்றது. வரி விதிப்பு வீதம் உயர உயர, இறுதிநிலை தியாக வீதமும் உயருகின்றது. மக்களின்மீது செலவான பணத்தால் அவர்களுக்குத் திருப்தி ஏற்படுகின்றது. அரசின் செலவு அதிகரிக்க அதிகரிக்க, அதிலிருந்து மக்கள் பெறும் திருப்தியும் குறைந்துகொண்டே வருகின்றது. இவ்வாறாக, அரசின் வருவாய்க்கு வளர்ந்து செல் இறுதி நிலைத் தியாக விதியும் (Law of increasing marginal sacrifice) அரசின் செலவுக்குக் குறைந்து செல் பயன்பாட்டு விதியும் (Law of Diminishing Utility) பொருந்தும். தியாகத்தையும், பயன்பாட்டையும் அரசு ஒப்பிட்டு அவை இரண்டும் சமமாக இருக்கும் பொழுது, மேலும் வரி விதிப்பதையும், செலவிடுவதையும் நிறுத்தி விட வேண்டும். இக் கட்டத்தில்தான் சமுதாயம் பெறும் ஆதாயம் உச்ச அளவில் இருக்கும். இக்கட்டத்தை எய்தும்வரை வரியை அதிகரித்துக் கொண்டே போகலாம். ஏனெனில், செய்யும் தியாகத்தைக் காட்டிலும், பெறும் பயன்பாடு அதிகமாக இருப்பதால். இக் கட்டத்தைத் தாண்டி விட்டால், பெறும் பயன்பாட்டை

[1] அதே நூல், பக்கம் 9, 10.

காட்டிலும் செய்யும் தியாகம் அதிகமாக இருக்கும். அதனால்தான் பிகு (Pigou) [1] "கடைசி ஷில்லிங்கிலிருந்து கிடைக்கின்ற திருப்தி, அரசின் பணிக்காக வசூலிக்கப்பட்ட கடைசி ஷில்லிங்கிலிருந்து இழந்த திருப்திக்குச் சமமாகும் வரையில் செலவை எல்லாத் திசைகளிலும் தள்ளிச் செல்ல வேண்டும்" எனக் கூறுகின்றார்.

டாக்டர் பார்க்கவா [2] பின்வருமாறு கூறுகின்றார்: 'ஒரு அலகு அரசின் செலவிலிருந்து பெறப்பட்ட ஆதாயம் அந்த அலகு வருவாயைத் தண்டுவதற்கு ஆகும் இழப்புக்குச் சரியாக இருக்கும் கட்டத்தை எய்துகின்றோம். இம்மட்டோடு அரசு நிறுத்திக்கொள்ள வேண்டும். மேலும், அது வரி விதித்தால், ஒரு அலகு கூடுதல் வருவாயை வசூலிப்பதனால் ஏற்படும் தியாகத்தின் அளவு, அதைச் செலவழிப்பதால் கிடைக்கும் ஆதாயத்தின் அளவைக் காட்டிலும் அதிகமாக இருக்கும். இதனால் நாட்டிற்கு ஒரு நிகர இழப்பு ஏற்படும்.'

## அரசின் செலவு ஒதுக்கீடு (Allocation of Public Expenditure)

பல்வேறுபட்ட இனங்களுக்கு எவ்வளவு செலவுத் தொகை ஒதுக்கவேண்டும் என்பதையும் இக் கோட்பாடு விளக்குகின்றது. ஒவ்வொரு இனத்தின் பேரிலும் செலவழித்த தொகையிலிருந்து ஒரே அளவு இறுதிநிலைப் பயன்பாடு கிடைக்கும்படி அரசு செலவழிக்க வேண்டும். வேறெந்த விதத்தில் செலவழித்தாலும் உச்சப் பயன்பாடு கிட்டாது.

## வரி விதிப்பு

இக் கோட்பாடு வரி விதிப்புக்கும் பொருந்தும். ஒவ்வொரு இனத்திலிருந்தும் ஏற்படுகின்ற இறுதிநிலைத் தியாகம் சமமாக இருக்கும்படி பல்வேறுபட்ட இனங்கள் பேரிலுமுள்ள வரிப் பளு இருக்கவேண்டும். அப்பொழுதுதான் சமுதாயத்திற்கு ஏற்படுகின்ற மொத்தத் தியாகமும் குறும அளவினதாக இருக்கும். ஒரு இனத்தின் பேரிலுள்ள இறுதிநிலைத் தியாகம் இன்னொரு இனத்தின் பேரிலுள்ள இறுதிநிலைத் தியாகத்தைக் காட்டிலும் அதிகமாக இருந்தால், முந்திய இனத்தின் பேரிலுள்ள வரியைக் குறைத்துப், பிந்திய இனத்தின் பேரிலுள்ள வரியைக் கூட்டுதல் சமுதாயத்திற்கு நன்மையை விளைவிக்கும்.

இவ்வாறாகக் கருதுகோள் அளவில், உச்ச சமுதாயப் பயனை எய்த, மூன்று கொள்கைகள் வழிகாட்டிகளாக இருக்கின்றன.

[1] A. C. Pigou, 'A Study in Public Finance', p. 31.

[2] R. N. Bhargava, 'The Theory and Working of Union Finance in India', 3rd Edition, 1971, Chaitanya Publishing House, Allahabad, p. 36.

முதலாவதாக, அரசின் செலவிலிருந்து கிடைக்கும் இறுதிநிலைப் பயன்பாடும், வரி விதிப்பினல் ஏற்படும் இறுதிநிலைத் தியாகமும் கிட்டத்தட்ட சமமாக இருக்கவேண்டும். இரண்டாவதாக, பல்வேறுபட்ட வரிகளினுல் ஏற்படும். இறுதிநிலைத் தியாகமும் தம்முள் சமமாக இருக்கவேண்டும். மூன்ருவதாக, பல்வேறுபட்ட இனங்கள்மீது செய்யும் அரசின் செலவிலிருந்து கிடைக்கும் இறுதிநிலைத் திருப்தியும் சமமாக இருக்கவேண்டும்.

**புறவயச் சோதனைகள்**

டாக்டர் டால்டன்[1] இக் கோட்பாட்டை நடைமுறையில் கடைப்பிடிக்கும் பொழுது பின்பற்ற வேண்டிய சில புறவயச் சோதனைகளைக் குறிப்பிடுகின்ருர். பிற நாட்டுத் தாக்குதல் களிலிருந்து நாட்டைப் பாதுகாப்பதும், உள்நாட்டில் அமைதி யையும் ஒழுங்கையும் நிலை நிறுத்துவதும் முதற் சோதனையாகும். இதற்கு உள்நாட்டில் சிறந்த கொள்கையைப் பின்பற்றுவதும், வெளிநாடுகளுடன் நட்புறவு கொண்டிருப்பதும், போதிய ஊர்க் காவலரையும் (Police), போர்த்தளவாடங்களையும், படைகளையும் வைத்திருப்பதும் இன்றியமையாதனவாகும்.

இரண்டாவது சோதனை பொருளாதாரச் சோதனையாகும். ஒரு சமுதாயத்தின் பொருளாதார நலன் அதிகரிப்பதற்கு இரண்டு படிநிலைகள் நிறைவேற்றப்படவேண்டும். முதலாவது, உற்பத்திப் பெருக்கம்; இரண்டாவது, உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களைப் பகிர்வதில் மேம்பாடு. சரியாகக் கண்காணிப்பு இன்மையாலும், வேலை இன்மையாலும் பொருளாதாரச் சாதனங்கள் வீணுக்கப் படுவதை மிகவும் குறைத்து உற்பத்தி அமைப்பைத் திருத்தியும், மக்கள் சேமிக்கும் மூலதனத்தின் அளவைப் பெருக்கியும், ஒரு சமுதாயத்தின் உற்பத்தி ஆற்றலைப் பெருக்க முடியும். பல்வேறு பட்ட மக்களிடையேயும், பல்வேறுபட்ட குடும்பங்களிடையேயும் நிலவும் வருமான ஏற்றத் தாழ்வுகளைக் குறைப்பதன் வாயிலாகப் பகிர்வை அபிவிருத்தி செய்யலாம். குறிப்பிட்ட தனியார்கள் அல்லது குடும்பங்கள் இவர்களின் வருமானங்களும், சிறப்பாகச் சமுதாயத்தின் எளிய வருக்கத்தினரின் வருமானங்களும், பல் வேறுபட்ட காலக்கூறுகளில் மிகவும் மாறுதல்களுக்கு உள்ளா கின்றன. இம் மாறுதல்களைக் குறைப்பதன் வாயிலாகவும் பகிர்வை அபிவிருத்தி செய்யலாம்.

அரசின் செலவின்மூலம் சமுதாயத்தின் வறிய வருக்கத் தினரின் வாங்கும் ஆற்றலை அதிகரிக்கலாம். இங்ஙனம் வறிய

[1] டாக்டர் டால்டன், பக்கம் 10, 11, 12.

வருக்கத்தினர்களின் வாங்கும் ஆற்றலை அதிகரிப்பதன் மூலம் வருமானத்தில் ஏற்றத்தாழ்வுகளை நேரிடையாகக் குறைக்கலாம். முதியோருக்கு ஓய்வு ஊதியம், வேலையில்லாதோருக்கு நிவாரணம், நோய்வாய்ப்பட்டிருப்போருக்கு ஈட்டுறுதி போன்றவைகளின் மூலம் வறியோரின் வாங்கும் ஆற்றல் அதிகரிக்கப்படுகின்றது. கடுமையான வரி விதிப்பினாலும் வருமானத்தில் ஏற்றத்தாழ்வுகள் குறைகின்றன. இவ்வாறு வரிவிதிப்பினால் சிலரின் செல்வம் குறைகின்றது; அரசின் செலவீட்டால் பலரின் செல்வம் கூடுகின்றது. இங்ஙனம் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் குறைக்கப்படுகின்றன.

இறுதியாக, அரசின் செலவினால் எதிர்காலத் தலைமுறைகளின் மீது ஏற்படும் விளைவுகளையும் பார்க்க வேண்டும். தனியார்கள் நிகழ்காலத்தைப் பற்றியே அதிகம் அக்கறை காட்டுகின்றனர். ஆனால், அரசு அப்படியல்ல. நிகழ்காலத்துடன் எதிர்காலத்தைப் பற்றியும் அரசு அக்கரை கொள்ள வேண்டும். டாக்டர் டால்டன் கூறுவது போல, 'அரச தந்திரி, நிகழ்காலத்திற்கு மட்டுமன்றி, எதிர் காலத்திற்கும் நம்பன் (Trustee) ஆவான். தனியார் இறக்கலாம். தனியார் சமுதாயத்தின் ஒரு கூறே. ஆனால், சமுதாயம் இறப்பதில்லை. ஆகவே, அரச தந்திரி, நிகழ்காலத்தில் ஒரு குறைந்த சமுதாயப் பயனைப் பெறுவதைக் காட்டிலும் எதிர் காலத்தில் ஒரு பெரிய சமுதாயப் பயனைப் பெறுவதை விரும்ப வேண்டும்.' (பக்கம் 12).

## திறனாய்வு

கருதுகோள் அளவில் உச்ச சமுதாயப் பயன் கோட்பாடு சிறந்ததாயினும், அதை நடைமுறையில் கொள்வதில் பல சங்கடங்கள் இருக்கின்றன. இதில் தலையாய சங்கடம் அரசின் செலவினால் விளையும் திருப்தியின் அளவையும், அரசின் வருவாயினால் குடிமக்களுக்கு ஏற்படும் தியாகத்தின் அளவையும் அளவிடுதலேயாகும்.

டாக்டர் டால்டனின் உச்ச சமுதாயப் பயன் கோட்பாட்டில், பேபியன் (Fabian) பொதுவுடைமைவாதிகளின் கருத்துச்சாயல் காணப்படுகின்றது. எல்லாப் பொருளியல் புலவர்களும், நிதியக் கொள்கையால் நேரிடையாகப் பொருளாதார நிலனில் சமநிலையைக் கொணர வேண்டும் என்ற கருத்தை ஒப்புக்கொள்ளவில்லை.

சில்வர்மென் [1] இக் கோட்பாட்டைப் பின்வருமாறு திறனாய்வு செய்கின்றார்: 'சாதாரணமாக இயல்வதைவிட அதிகமான அளவு தன் வளங்களைப் பயன்படுத்தும்படி போர் அல்லது பிற நெருக்கடியான காலங்களில் ஒரு நாடு கட்டாயப் படுத்தப்படக்கூடும். ஒரு அரசு சந்தர்ப்பவசத்தால் சில செலவு செய்யும் துறைகளுக்கு ஒதுக்கும் தொகையை அதிகரிக்கும்படி நேரிடலாம். அதேசமயம் வேறு சில துறைகளின் கோரிக்கைகளைப் புறக்கணிக்கும்படி நேரிடலாம். அக் கோரிக்கைகள் முக்கியமானவையாகவும் இருக்கலாம். ஆனால், அவற்றை உடனே செய்துமுடிக்கவேண்டும் என்ற நிர்ப்பந்தம் இல்லாதிருக்கலாம். ஆகவே, உச்ச சமுதாயப் பயன் என்ற கருத்துப்படிமம், ஒப்புமையில், அவ்வப்போது நிலவும் சூழ்நிலைகளைப் பொறுத்ததாகும். நமக்குத் தெரிந்தவரையில் இக் கருத்துப்படிமம் கருதுகோள் அளவில் அதிக முக்கியத்துவம் வாய்ந்ததே தவிர, நடைமுறையில் அத்துணை முக்கியத்துவம் வாய்ந்ததல்ல. ஆயினும், சில குறிப்பிட்ட பிரச்சினைகளை வாதிக்கும் பொழுது அவற்றை ஊடுருவி நிற்கும் இக் கொள்கையை உள்ளத்தில் இருத்தக்கூடாது என்பதற்கு அஃதொரு காரணமாகாது.'

## ஹிக்ஸ் அம்மையாரின் கருத்து

ஹிக்ஸ் அம்மையார் உச்ச சமுதாயப் பயன் கோட்பாட்டை, வேறு வடிவத்தில் தந்திருக்கிறார். அவரின் கருத்துப்படி அரசின் நிதிய நடவடிக்கைகளை இரண்டு அளவுகோல்கள் கொண்டு சீர்தூக்கிப் பார்க்கலாம். அளவையாவன: 'உத்தம அளவு உற்பத்தி' (production optimum), 'உத்தம அளவு பயன்பாடு' (utility optimum).

பொருளாதார நடவடிக்கைகளின் இறுதியான நோக்கம் ஆசைகளைத் நிறைவேற்றுவதாகும். இதற்குக் கருவியாக இருப்பது உற்பத்தி. ஆகவே, உற்பத்தியைப் பெருக்கினால் உச்ச அளவு ஆசைகளையும் திருப்தி செய்ய இயலும். இதுதான் உத்தம அளவு உற்பத்தியாகும். உற்பத்திச் சாதனங்களையோ அல்லது வளங்களையோ சரியானபடி ஒதுக்கீடு செய்தால் உத்தம அளவு உற்பத்தியை எய்தமுடியும். உத்தம அளவு உற்பத்தியை அல்லது உச்ச அளவு உற்பத்திப் பெருக்கத்தையும் வளங்களையும் சரியான முறையில் ஒதுக்கீடு செய்வதனால் எய்தமுடியும். குறிப்பிட்ட 'உற்பத்திக் காரணிகளை வைத்துக் கொண்டு, காரணிகளை மறு ஒதுக்கீடு (reallocation) செய்வதன் வாயிலாக, யாதொரு பண்டத்தின் உற்பத்தியையும் குறைக்காமல், ஒரு பண்டத்தின்

[1] H. A. Silverman, 'Taxation—Its Incidence and Effects', Macmillan & Co., 1931. p. 5.

உற்பத்தியை அதிகரிக்க முடியாமல் இருப்பதே, உற்பத்தியை உச்ச அளவு ஆக்குவதற்கான படிநிலையாகும் (ஹிக்ஸ்).[1] உத்தம அளவு உற்பத்தியை எய்துவதில் பல சங்கடங்கள் இருக்கின்றன தொழில்நுட்ப சங்கடங்களும், தொழிலாளர், மூலதனப் பெயர்ச்சி யின்மையும் அங்காடிகள் முற்றுரிமையாளர்களின் கையில் இருப்பதும் இந்நோக்கம் கைகூடுவதற்குத் தடங்கல்களாக இருக் கின்றன.

உத்தம அளவு உற்பத்தியை எய்திய பின்பு, அரசின் நிதியக் கொள்கையின் நோக்கம் 'உத்தம அளவு பயன்பாடாக' இருக்க வேண்டும். பல்வேறுபட்ட உற்பத்திக் கோலங்களின் மூலம் உத்தம அளவு உற்பத்தியை எய்த முடியும். இவற்றில் எது உத்தம அளவு பயன்பாட்டைத் தருமோ அதைத் தெரிந்தெடுக்க வேண்டும். இக் கருத்துப் படிமத்தை ஹிக்ஸ்[2] பின்வருமாறு விளக்குகின்றார்: 'இன்னொருவரின் பயன்பாட்டைக் குறைக்காமல் ஒரு தனியாளின் பயன்பாட்டைக் கூட்டுவது இயலாததாய் இருக்கும்பொழுது, பயன்பாடு உத்தம அளவினதாக இருக்கும்.' ஹிக்ஸின் உத்தம அளவு உற்பத்தி, உத்தம அளவு பயன்பாட்டுக் கோட்பாடுகளும், டால்டனின் உச்ச சமுதாயப் பயன் கோட் பாட்டைப் போன்றே கருதுகோள் அளவில் முக்கியத்துவம் வாய்ந்ததே தவிர, அதை நடைமுறையில் கடைப்பிடிப்பதில் சங்கடம் இருக்கின்றது. இருந்தபோதிலும், ஹிக்ஸ்[3] கூறுமாப் போல, அரசின் நிதிய நடவடிக்கைகளுக்குத் திட்டவட்டமான நோக்கம் இருக்கவேண்டும். ஏனெனில், திட்டவட்டமான குறிக்கோள் இன்றேல் கொள்கை என்ற கப்பலுக்குச் சுக்கான் இல்லாது, குறிப்பிட்ட நலன்கள் என்னும் அலைகளால் இங்கு மங்கும் அலைக்கழிக்கப்படும்.'

[1] Ursula K. Hicks, 'Public Finance', 2nd Edition, Reprinted, August, 1956, p. 106.
[2] Ursula K. Hicks, p. 107.
[3] அதே நூல், பக்கம் 105.

மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Philip E. Taylor, 'The Economics of Public Finance', 3rd Edition, Chapter 3.
2. Dalton, 'Public Finance,' Chapter-II.
3. Dr. K. K. Sharma, 'Public Finance', Chapter II.
4. Ursula K. Hicks, 'Public Finance,' Part II, Chapter VII. p. 104, 108, James Nisbet & Co., Ltd., 2nd Edition, Reprint, 1956.

# 4. அரசின் செலவின் முக்கியத்துவம்

பத்தொன்பதாம் நூற்றுண்டில் அரசின் அலுவல்கள் ஒரு வரையறைக்கு உட்பட்டனவாய் இருந்ததால் அரசின் செலவைப் பற்றிய ஒரு கருதுகோளுக்கு அவசியம் இல்லாமல் இருந்தது. எனவே, அரசின் செலவின் கோட்பாடுகளைப் பற்றி ஆங்கிலேயப் பொருளியல் வல்லுநர்கள் மிகச் சொற்பமாகவே கூறியிருக்கிறுர்கள். பேராசிரியர் ஆடம்ஸ்[1] கூறுவது போன்று, 'பழைய ஆங்கிலேய ஆசிரியர்களுக்குச் செலவுகளைப் பற்றிய ஒரு கருதுகோளுக்கு அவசியம் இல்லாமல் இருந்தது; ஏனெனில், அவர்களுடைய அரசு பற்றிய கருதுகோளில், அரசின் அலுவல்கள் ஒரு வரம்புக்கு உட் பட்டனவாய் இருந்தன.'

அரசின் செலவைப் பற்றிய சிந்தனை வரலாறுகளை இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒரு சாரார், பாதுகாப்பு, சட்டம், அமைதி, அரசின் கடன், நிருவாகத்தின் தேவைகள் போன்ற அடிப்படையான அலுவல்கள் மட்டும்தான் அரசின் அலுவல்கள் எனக் கருதுகின்றனர். வேருெரு சாரார், அரசின் அலுவல்களைப் பெருக்குவதில் நாட்டமுள்ளவர்களாகப் பொதுவாகக் காணப்படு கின்றனர். உண்மையில் அவர்கள், 'இக்காலத்தில் நாம் அனை வரும் பொதுவுடைமைவாதிகள்' (Nowadays we are all Socialists) என்று அடிக்கடி மேற்கோளாகக் கூறப்படும் கோட்பாட்டில் பற்றுள்ளவர்கள் எனலாம்.

முன்னைய பிரிவினரின் கோட்பாட்டுக்குச் சிறந்த விளக்கம் தந்தவர் ஸர். எச். பார்னல் அல்லது காங்லிட்டன்[2] என்பவர். அவர் இயற்றிய 'நிதியத்தைப் பற்றிய சீர்திருத்தம்' (On Financial Reform, 1830) என்ற நூலில் பின்வருமாறு கூறுகின்றுர்: 'சமுதாய அமைதியைப் பாதுகாப்பதற்கும், பிற நாட்டுப் படை யெடுப்பினின்றும் தற்காத்துக் கொள்வதற்கும் வேண்டியதற்கு

[1] Adams, 'Science of Finance', p. 53.
[2] Sir H. Parnell or Congleton, p. 100.

மேற்பட்ட ஒவ்வொரு துளிச்செலவும் பயனற்றது மட்டுமன்றி, மக்களின் மேல் அநியாயமாகவும், கொடுங்கோன்மையாகவும் சுமத்தப்பட்ட வரியுமாகும்.' ராபர்ட் பீல் 'அரசினிடம் இருக்கும் பணத்தைக் காட்டிலும் தனியாரின் கையில் இருக்கும் பணமே பயன்தரும்' எனக் கருதினுர். இக் காலத்தில் செல்வாக்குள்ள வட்டாரங்களில் தனியாரின் ஊதாரித்தனமான வாழ்க்கையைக் கண்டிக்காவிட்டாலும், அரசின் எந்தச் செலவினத்தையும் மிகவும் கண்டிக்கின்ருர்கள். அரசு சிக்கனத்தைக் கடைப்பிடிக்க வேண்டும், தனியார் ஊதாரித்தனமாக இருக்கலாம் என்ற கூற்று, பண்டைய உரோமாபுரிக்கு மட்டுமல்லாமல், இக் காலத்து நாடுகளுக்கும் பொருந்தும். இக் கூற்றை நம்புகிறவர்கள் அரசைக் காட்டிலும் தனியார், பணத்தை நன்முறையில் செலவழிக்கின்ருர்கள் என்று தவருகக் கருதுகின்ருர்கள். இது எக்காலத்தும் உண்மையன்று. இருபதாம் நூற்ருண்டின் நிதிய நடவடிக்கைகள், அரசு பணத்தைப் பயனுள்ள முறையில் செலவிடுகின்றது என்றும், தனியார் பணத்தை வீண் செலவு செய்கின்ருர்கள் (அதிலும் சிறப்பாக முதல் உலகப் போருக்குப் பின்) என்றும், நடைமுறையில் காட்டுகின்றன.

ஜெர்மானிய ஆசிரியர்கள், புதிய சமுதாய நற்பணிகளுக்கு அரசு செலவிடலாம் என்று கூறுகிருர்கள். தனியாருக்கு எதிராக அரசின் உரிமைகளை மிகைப்படுத்துகிருர்கள். இக் காலத்தில் எல்லாவற்றிலும் அரசு தலையிட வேண்டும் என்பதே மக்களின் கூக்குரலாய் இருக்கின்றது. அனைத்தையும் அரசு செய்ய வேண்டும். இருந்தாலும், பாதுகாப்பு, சட்டம், அமைதி இவற்றின்மீதும், கல்வி, சுகாதாரம், சமுதாயப் பாதுகாப்பு (Social security) முதலான பணிகள்மீதும் அரசு செலவிடலாம் என்பதே பெரும்பான்மையோரின் கருத்தாகும்.

அரசின் செலவின் முக்கியத்துவத்தைப் பல கோணங்களிலிருந்து பார்க்கலாம். முதலாவதாக, ஒரு நாட்டின் அரசின் செலவை ஆராய்ந்த பின்னர்தான் அந் நாட்டின் பொருளாதார நிலைமையைப் பற்றியும், வளர்ச்சியைப் பற்றியும் நாம் ஒரு முடிவுக்கு வரமுடியும். எந்த நாடும் நெடுங்காலத்திற்கு வரவுக்கு மேல் செலவு செய்யமுடியாது. ஆகையால், நெடுங்காலம் ஒரு நாட்டு அரசு பெரும் தொகைகளைச் செலவிட்டால், அதன் வருவாயும் பெருகியிருக்கிறது என்பதும், அந்த நாட்டு மக்களின் வருமானமும் உயர் மட்டத்தில் இருக்கிறது என்பதும் அவர்களின் பொருளாதார நிலையும் நன்னிலையில் இருக்கிறது என்பதும் போதரும். எடுத்துக்காட்டாக, அமெரிக்க ஐக்கிய நாடுகள்,

சோவியத் யூனியன், மேற்கு ஜெர்மனி, பிரிட்டன், கானடா முதலான நாடுகள் இந்தியாவைக் காட்டிலும் பன்மடங்கு அதிகம் செலவழிக்கின்றன. இவற்றிலிருந்து அந் நாட்டு மக்களின் வருமானமும், வாழ்க்கைத் தரமும் மிக உயர்ந்த மட்டத்தில் இருக்கின்றது என்பது தெளிவாகும்.

இரண்டாவதாக, அரசின் செலவின்மூலம் அரசின் ஆசைகள் பூர்த்தி செய்யப்படுகின்றது. மேலும், அரசின் செலவு, நாட்டின் உற்பத்தியையும், பகிர்வையும் பாதிக்கிறது. உற்பத்தியின் இயல்பையும், அளவையும் அரசின் செலவினுல் கூட்டவோ, குறைக்கவோ, மாற்றவோ முடியும். சமுதாய சேவைகளான கல்வி, சமுதாய நலப் பாதுகாப்பு முதலியவற்றின் மீது செலவழிப் பதன்மூலம் அரசு பகிர்வுக்கோலத்தையும். மாற்ற முடியும். வாணிப மந்தம், வேலையின்மை இவற்றின் தீவிரத்தைக் குறைப் பதுடன், இவற்றை அகற்றவும் அரசுச் செலவினுல் முடியும். இவ்வாருக, அரசின் செலவினுல் ஒரு நாட்டின் பொருளாதார வாழ்க்கையில் முக்கியமான மாறுதல்கள் நிகழ்கின்றன.

மூன்ருவதாக, அரசின் செலவு ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருப்பதுடன், நாட்டை வலுவுள்ளதாகவும் செய்கின்றது. நீர்ப்பாசனம், நீர் மின்சாரம் (hydro electricity) முதலான பல்வேறுபட்ட ஆக்கத் திட்டங்களுக்கு அரசு பணத்தைச் செலவழிக்கின்றது. இதனுல் நாட்டில் பொருளாதார வளர்ச்சி ஏற்படுகின்றது. நாட்டின் பாதுகாப்புக்குச் செலவழிப்ப தால் நாடு வலிமை மிக்கதாக ஆகின்றது.

நான்காவதாக, அரசின் நலப் பணிகள் (welfare functions) அதிகரித்து விட்டன. இதனுல் அரசின் செலவின் முக்கியத் துவமும் அதிகரித்திருக்கின்றது.

இறுதியாக, அரசு தான் பண்டங்கள், பணிகள் இவற்றை மிகப் பெரும் அளவுக்கு வாங்குகின்றது. இதனுல் அரசினுல் கூலிகள், விலைகள் இவற்றைப் பாதிக்க முடிகிறது. [1] பாஸ்டபிள் கூறுவது போன்று 'அரசு தன்னுடைய மைய, தல உறுப்புகள் வாயிலாக மிகப் பெரும் அளவுக்குப் பண்டங்களையும், பணிகளையும் வாங்குகிறது. இவ்விதமாக, அரசினுல் ஆற்றலுடன் விலைகளையும், கூலிகளையும் பாதிக்க முடியும். விலைகளும் கூலிகளும் பாதிக்கப் படுவதால் செல்வத்தின் பகிர்வும் பாதிக்கப்படுகிறது.' அரசின் செலவின் வரம்புபற்றிய சர்ச்சையைப் பின்வருமாறு முடிக்கலாம். அரசு செலவு செய்கின்றது என்பதாலேயே அது நல்லதாகாது.

[1] C. F. Bastable, p. 146,

மக்கள் வரி செலுத்துவதன்மூலம் செய்யும் தியாகத்தையும், அரசின் செலவின்மூலம் அவர்கள் பெறும் ஆதாயத்தையும் ஒப்பிட்டுப் பார்த்துதான், அரசின் செலவின் திறத்தைப் பற்றி முடிவு கட்டவேண்டும். நிதியத் திட்டங்களில் மிகச் சிறந்தது தாவது குறைவாகச் செலவழிப்பதே என்றும் ஜே. பி. ஸேயின் கூற்றை ஒப்புக் கொள்ளமுடியாது. அங்காடியில் ஒரு பண்டம் மிகக் குறைந்த விலைக்குக் கிடைக்கிறது என்பதனாலேயே, எப்படி அதைச் சிறந்தது என்று கூற முடியாதோ, அதைப் போன்றே மிகவும் குறைச்சலாகச் செலவழிக்கும் அரசையும் மிகச் சிறந்தது என்று பாராட்ட முடியாது. இதற்கு நேர் எதிரான கருத்தும் உண்மையன்று. 'பிரச்சினையின் எல்லாக் கூறுகளையும் எடுத்துக் கொண்டு பார்க்கும் பொழுது, எந்த அரசு அமைப்பு தன்னுடைய குடிமக்களுக்கு மிகப் பெரும் அளவு ஆதாயத்தைத் தருவதுடன், எதிர் காலத்தில் நாடு வளர்வதற்கும் மிகச் சிறந்த முறையில் வகை செய்கின்றதோ, அதுதான் மிகச் சிறந்ததும், உண்மையில் மிகக் குறைந்த செலவு பிடிப்பதும் ஆகும்' என்று பாஸ்டபிள் கூறுகின்றார்.

## மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Findlay Shirras, 'The Science of Public Finance', 2nd Edition, Chapter III, p. 27—39.

2. H. C. Adams, 'The Science of Finance', p. 85—92.

# 5. அரசுச் செலவின் ஏற்றம்

அரசின் செலவுகள் விரைவாக, அதிலும் சிறப்பாக, 1850ஆம் ஆண்டு முதல் ஏறிக் கொண்டு வருகின்றன. 1861-ல் இந்திய அரசு உரூபா 44 கோடி செலவழித்தது. 1950-51-ல் உரூபா 405.9 கோடியும், 1960—61-ல் உரூபா 980.35 கோடியும், 1971—72-ல் உரூபா 3,608 கோடியும் 1971—72-ல் (திருத்தப்பட்ட வரவு செலவுத் திட்டத்தின்படி) உரூபா 3,846 கோடியும், இந்திய அரசு செலவழித்தது. 1972—73ஆம் ஆண்டைய திருத்தப்பட்ட வரவு செலவுத் திட்ட மதிப்பீட்டின்படி டில்லி அரசின் செலவு உரூபா 4590.62 கோடியாகும். 1973—74 ஆம் ஆண்டைய வரவு செலவுத் திட்ட மதிப்பீட்டின்படி செலவு உரூபா 4752.12 கோடியாகும்.

## செலவு ஏற்றத்திற்கான காரணங்கள்

அரசுச் செலவின் அதிகரிப்புக்கு இரண்டு காரணங்களைக் கூற லாம். முதலாவதாக, அரசின் அலுவல்கள் மிகவும் பெருகி யுள்ளன. இரண்டாவதாக, ஏற்கனவே செய்த அலுவல்களுக்கு ஆகும் செலவு, முந்தியிருந்ததைக் காட்டிலும் இப்பொழுது பன் மடங்கு பெருகியுள்ளது. நாம் இப்பொழுது இக் காரணங்களை வரிசைக் கிரமமாகப் பார்ப்போம்.

**1. அரசின் அலுவல்கள் அதிகரிப்பு:** பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் ஜெர்மானிய அறிஞரான அடால்ப் வாக்னர் (Adolph Wagner) அரசு அலுவல்களின் வளர்ச்சியைப் பற்றிய விதியை (law of increasing state activities) விளக்கினர். அவர் விளக்கம் வருமாறு: 'பல்வேறுபட்ட நாடுகளையும், பல் வேறுபட்ட காலங்களையும் ஒப்பிடும்போது, முற்போக்கடைந்த மக்களிடையில் (நாம் அவர்களிடத்தில் மட்டுமே அக்கறை கொண்டுள்ளோம்), மைய, தல அரசுகளில் காலம் தோறும் ஒரு வளர்ச்சி தென்படுகிறது. இவ்வளர்ச்சி பரவலாகவும், தீவிர மாகவும் உள்ளது. மைய, தல அரசுகள் எப்பொழுதும் புதிய

அலுவல்களை மேற்கொள்கின்றன. அவை பழைய அலுவல்கள், புதிய அலுவல்கள் ஆகிய அனைத்தையும் மிகவும் திறமையாகவும், நிறைவாகவும் செய்கின்றன. இவ்வாறாக, மக்களின் பொருளியல் விருப்பங்கள் பேரளவிலும், மிகவும் திருப்தியான முறையிலும், மைய, தல அரசுகளினால் நிறைவேற்றி வைக்கப்படுகின்றன. வாக்னரின் விதி எல்லா நாடுகளுக்கும் பொருந்துவதாகும். உழைப்பின் பாகுபாட்டின் அதிகரிப்பு (increasing division of labour) என்ற அடிப்படையில் இவ் விதியை விளக்குவது தவறாகும். இதன்படி பல்வேறுபட்ட அரசுகளும் மேன்மேலும், புதிய அலுவல்களை மேற்கொள்கின்றன. பழைய அலுவல்களையும் முந்தியிருந்ததைக் காட்டிலும் திறம்படவும், பேரளவிலும் செய்கின்றன. இதனால் அரசின் செலவு அதிகரிக்கின்றது. சமுதாயக் காப்புறுதியை (Social Insurance) இருபதாம் நூற்றாண்டில்தான் அரசுகள் தங்கள் அலுவலாக ஏற்றுக் கொண்டிருக்கின்றன. அரசு அலுவல்களின் வளர்ச்சியைப் பற்றிய ஒரு விளக்கம் வருந்தத்தக்கது. அது வருமாறு :[1] 'எது பொது நன்மைக்கு உகந்தது என்பதைத் தவறாகப் புரிந்து கொண்டதாலோ, குடியாட்சிகளின் அறியாமையாலோ, அல்லது சருவாதிகாரிகளின் தன் முனைப்பாலோ அரசு அலுவல்களின் வளர்ச்சி ஏற்பட்டது.' போர்ச் செலவுகளுக்கு இவ் விளக்கம் முற்றிலும் பொருந்தும், ஆனால், இக் காலத்திய பிற அரசு அலுவல்களுக்கு இக் கூற்றுப் பொருந்தாது. தனிப்பட்ட சங்கங்களின் திறமையோடு ஒப்பிட்டுப் பார்த்தால், இவ் வளர்ச்சி களினால் அரசின் திறமை அதிகரித்திருக்கிறது என்பதே உண்மையாகும். டாக்டர் டால்டன்[2] கூறுவது போன்று, 'தனியார் ஏஜன்ஸிகளைக் (agencies) காட்டிலும், அரசு ஏஜன்ஸிகளைத் தெரிந்தெடுப்பது இக் காலத்தில் முற்றிலும் அறிவுக்குப் பொருந்துவதாகும்; அவை கடந்த காலத்தில் அறிவுக்குப் புறம்பானவையாக இருந்திருக்கலாம். இதே போன்று எதிர்காலத்தில் அரசு ஏஜன்ஸிகளைத் தெரிந்தெடுப்பது அறிவுடைமையாக இருக்கலாம்; ஆனால், இன்று அவை அறிவுக்கு ஒவ்வாதவையாக இருக்கலாம்.'

**2.** பாதுகாப்புச் செலவு அதிகரிப்பு : இக் காலத்தில் அரசின் செலவு பெருகியதற்கு முக்கிய காரணம் பாதுகாப்புச் செலவுப் பெருக்கமேயாகும். ஏறக்குறைய இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு மாண்டெஸ்கோ (Montesquiew)[3] பின் வருமாறு எழுதினார் :

[1] Dalton, 'Principles of Public Finance', p. 198.
[2] Dalton, 'Principles of Public Finance,' 1941,' Impression, p. 198, 199.
[3] Quoted by Shirras in 'Science of Public Finance', p. 55.

'ஐரோப்பா முழுவதும் ஒரு புதிய நோய் பரவியுள்ளது. இது நம் அரசர்களையும் பிடித்து, அவர்களை அளவுக்கு மீறிய துருப்புக்களை வைத்திருக்குமாறு செய்துள்ளது. நோய் முற்றித் தொற்று நோயாகிறது. ஏனெனில், ஒருநாடு தன் படை வலிமையைப் பெருக்கினால் உடனே பிற நாடுகளும் தம் படை வலிமையைப் பெருக்குகின்றன. ஆகையால், இவற்றால் பெற்ற பயன் பெரும் நாசமே அன்றி வேறன்று. மன்னர் ஒவ்வொருவரும் தம் குடிமக்கள் யாவரும் அழிந்துபடும் நிலையில் இருக்கிறார்கள் என்றெண்ணியே இவ்வளவு படைகளை வைத்திருக்கிறார்கள். இவ்வாறாக, எல்லோருக்கும் எதிராக எல்லோராலும் செய்யப்படும் போராட்டம் சமாதானம் என்று கூறப்படுகிறது.' உலகம் கீழ்க்காணும் வரிகளில் பொதிந்திருக்கும் உண்மையை உணர்ந்து செயலாற்றினால் ஒழிய இப் போர்க் கருவிகள் போட்டியும், பாதுகாப்புச் செலவின் வளர்ச்சியும் பல்லாண்டுகள் தொடர்ந்து நடைபெறும். 'நாம் அனைவரும் சகோதரர்கள்; ஒருவரும் தனி வழியே செல்வதில்லை; முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.' எடுத்துக்காட்டாக, இந்திய அரசு *1859—60*-ல் பத்தொன்பது கோடி உரூபா பாதுகாப்பிற்காகச் செலவழித்தது. இஃது *1960—61*-ல் *272* கோடி உரூபாவாக இருந்தது. *1970—71*-ல் இத்தொகை உரூபா *1017.84* கோடியாக உயர்ந்தது. இது இந்திய அரசின் ஓராண்டுச் செலவில் *30%* ஆகும். இரண்டாவது உலகப் போர் நிகழ்ந்து கொண்டிருந்த காலத்தில் பிரிட்டன் நாள் ஒன்றுக்கு *150* லக்ஷம் பவுன் (அதாவது சுமார் *28½* கோடி உரூபா) செலவழித்தது. *1973—1974*ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தின்படி இந்திய அரசின் பாதுகாப்புச் செலவு உரூபா *1600* கோடியாகும். இஃது இந்திய அரசின் மொத்தச் செலவில் ஏறக்குறைய *33%* ஆகும். பாதுகாப்புச் செலவு அதிகரித்ததற்கான காரணங்களை டெயிலர்[1] ('Philip E. Taylor') பின்வருமாறு கூறுகிறார்: போர்க் கலையிலும், போரைப் பற்றிய அறிவிலும் ஏற்பட்ட முன்னேற்றம் விரைவாக இருந்தமையால், போர்க் கருவிகளை வாங்குவதற்கு மிகவும் செலவு பிடிக்கிறது. போர்க் கருவிகள் வழக்கற்றுப் போகும் வீதமும் மிகவும் அதிகமாக இருக்கிறது.'

**3. மக்கள் தொகைப் பெருக்கம் :** மக்கள் தொகை பெருகுவதனால் அரசின் மொத்தச் செலவு இயல்பாகவே அதிகரிக்கிறது; ஏனெனில், தனிப்பட்டவர்களின் தேவைகளைப் பெருவாரியான அளவில் கவனிப்பதற்குப் பல வாய்ப்புக்கள் இல்லை. அரசின் அதிகாரிகளுக்கு அனுப்பப்படும் கடிதத்திற்கும், புகாருக்கும் ஒரு

[1] Philip E. Taylor, 'The Economics of Public Finance', 3rd Edition, Oxford & J B H Publishing Co., Indian Edition, 2nd Reprint, 1970, p. 54.

பதில் தேவைப்படுகிறது; அதுவும் இறுதியில் கிடைக்கிறது. நீதி மன்றங்களில் வரும் ஒவ்வொரு வழக்கும் அதை விசாரிக்கும் நீதிபதியின் தனிப்பட்ட கவனத்தைக் கோருகிறது. ஒவ்வொரு வீட்டாரும் தமது வீடு வரையில் தளமிடப்பட்ட தெரு அல்லது சாலை, தண்ணீர் வினியோகம், சாக்கடை, தெரு விளக்கு, தம் குழந்தைகள் படிப்பதற்காக அண்மையில் ஒரு பள்ளிக்கூடம் ஆகிய இவற்றை எதிர்பார்க்கின்றனர்.

மக்கள் தொகை பெருகும் தோறும், மக்களுக்குத் தனித்தனியாகவும், கூட்டாகவும் அதிகமான சேவைகள் செய்ய வேண்டி இருக்கின்றன. போக்குவரத்தைக் கண்டிப்பான முறையில் கண்காணிக்க வேண்டும். தீத்தடுப்பு முறைகளைக் கட்டாயமாகக் கடைப் பிடிக்க வேண்டும். பூங்கா, விளையாடுமிடம், பிற பொழுது போக்கு வசதிகள் இவற்றிற்காகப் பெருஞ் செலவு செய்ய வேண்டும். ஊர்தி விரைவாகச் செல்வதற்குச் சாலைகளும், பாலங்களும், குடைபாதைகளும் (tunnels) கீழ்ப்பாதைகளும் (sub ways) அமைக்க வேண்டும். ஆயிரம் மக்களைக் கொண்ட ஒரு சிற்றூருக்குக் குடி தண்ணீருக்கு ஒரு கிணறு இருந்தால் போதும். ஆனால், பல இலட்சம் மக்களைக் கொண்ட ஒரு நகரத்திற்கு ஒரு நீர்த்தேக்கமே தேவைப்படுகிறது. சராசரி ஆள் ஒருவருக்கு ஆகும் அரசின் செலவு அதிகரிக்குமானால் அஃது அரசின் செலவு அதிகரிக்கின்றது என்பதைக் காட்டுகிறது. 1872-ல் இருபது கோடியாக இருந்த மக்கள் தொகை 1971ஆம் ஆண்டு ஏப்ரலில் 55 கோடியாக உயர்ந்தது.

**4. அரசுக்கடன் வளர்ச்சி:** அரசின் செலவு ஏறுவதற்குப் பிறிதொரு காரணம், அரசின் கடன் ஏறியதும், அதனால் ஆண்டு தோறும் அரசின் வருமானத்திலிருந்து வட்டிக்கும், முதலுக்குமாகக் கொடுக்கப்பட வேண்டிய தொகைகளும் அதிகரித்ததும் ஆகும். இந்தியாவைப் பொறுத்தவரை ஆங்கிலேயர் ஆட்சி இந்நாட்டில் ஏற்படுமுன் அரசுக்குக் கடன் இல்லை. 1851ஆம் ஆண்டுக்கு முன்பு இந்திய அரசு போர்ச் செலவுக்காக மட்டுமே கடன் வாங்கியது. 1892ஆம் ஆண்டில் இந்திய அரசின் கடன் 167 கோடி உருபாவாகும், 1973—1974ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தின்படி இத் தொகை உருபா 18,002.02 கோடியாக உயர்ந்தது.

**5. விலைகளின் ஏற்றம்:** இரண்டாம் உலகப் போர் தொடங்கியதிலிருந்து எல்லா நாடுகளிலும் விலைகள் படிப்படியாக ஏறி வந்திருக்கிறது. விலைகள் ஏற ஏற, அரசின் செலவும் ஏறி வந்திருக்கிறது. காரணம், தனியார்களைப் போன்று அரசும்

பண்டங்களையும் பணிகளையும் வாங்க வேண்டும். விலைகள் ஏறும் பொழுது முன்பு வாங்கிய அளவே பண்டங்களையும் பணிகளையும் வாங்கினாலும் அதிக விலை கொடுக்க வேண்டியிருக்கிறது. எடுத்துக்காட்டாக, அண்மையில் நடந்த தேர்தலுக்கு முன்பு, பல மாநில அரசுகளும் தங்கள் ஊழியர்களுக்குச் சம்பளத்தை உயர்த்தின. மைய அரசும் தன் ஊழியர்களுக்கு இடைக்கால நிவாரணம் அளித்தது. இவற்றினால் ஆண்டொன்றுக்கு மைய, மாநில அரசுகள் உரூபா 150 கோடி அதிகம் செலவழிக்க வேண்டியிருக்கும். இவை யாவும் திட்டமொழிந்த (non-plan) செலவுகளாகும். அரசின் செலவைக் குறைப்பதைக் காட்டிலும் அவற்றை அதிகரிப்பது மிக எளிது. இஃது 'ஓர் அட்டையை வாந்தி எடுப்பதை விட விழுங்குவது சுலபம்' ('it is easier swallow a leech than to disgorge it') என்று கூறுவதற்கு ஒப்பாகும். புதிதாக ஓர் அரசு அலுவல், உத்தியோகம் அல்லது சேவையை ஒரே நாளில் படைத்து விடலாம். அதில் ஊன்றிய நலமிகளும் (vested, interests) வளர்கின்றனர். இவ்வுத்தியோகம் அல்லது சேவையைப் படைப்பதற்கு முன்பு களிப்புடனிருந்த பல பிரிவினர்களும், பின்னர் ஆள் குறைப்பு அல்லது வேலைக் குறைப்பு என்று கூறும்பொழுது ஆர்ப்பாட்டத்தில் இறங்க ஆயத்தமாக இருக்கிறார்கள். விலைகளின் ஏற்றத்தை விட அரசின் செலவு கூடுதலாகவே அதிகரிக்கிறது என்பது தெளிவு.

6. பரப்பின் விரிவு (Territorial Expansion): ஆட்சிக்குட்பட்ட நிலப்பரப்பு அதிகரிக்கும் தோறும், நிருவாக எந்திரத்தை ஒவ்வொரு பிராந்தியத்துக்கும் விஸ்தரிக்கும் பொறுப்பும், அவசியமும் அரசுக்கு ஏற்படுகின்றது. நிலங்களை அளக்கும் நிருவாக அதிகாரிகளும், குடியேறியவர்களுக்குப் பட்டா வழங்கும் அதிகாரிகளும், வரி வசூலிக்கும் அதிகாரிகளும், ஆளும் கணத்தைப் பெருக்குகின்றனர். புதிய பிராந்தியங்களில் அஞ்சல், தந்தி ஆகிய நிலையங்களை நிறுவ வேண்டும்; சாலைகள், இருப்புப் பாதைகள் இவற்றைப் போட வேண்டும்; இன்னோரன்ன பிற செலவுகளையும் செய்ய வேண்டும். இவற்றுக்கெல்லாம் அதிகச் செலவு பிடிக்கும்.

7. தொழில்களை நாட்டுடைமை (தேசிய மயம்) யாக்குதல் ஒவ்வொரு அரசும் மேலும் மேலும் தொழில்களை அரசுடைமையாக்கிக் கொண்டு வருகின்றது. அண்மையில் பிரிட்டன் மோட்டார் தொழிற்சாலையை அரசுடைமையாக்கியது, நம் நாட்டில் பல மாநில அரசுகளும் பேருந்துப் போக்குவரத்தை (Bus Transport) அரசுடைமையாக்கிக் கொண்டு வருகின்றன. 1969ஆம் ஆண்டு ஜூலை திங்களில் இந்திய அரசு 14 பெரிய பேங்குகளை அரசுடை

மையாக்கியது. இங்ஙனம் அரசுடைமையாக்கிய தொழில்களுக்கெல்லாம் பெருந்தொகைகளை இழப்பீடாகத் தர வேண்டியிருக்கிறது. இதனால் அரசின் செலவு அதிகரிக்கிறது.

8. பொருளியல் நிலைபேருக்கம் (Maintenance of Economic Stability): முதலாளித்துவ நாடுகளில் பொருளியல் நிலைபேறின்மை நிலவுவதால், வாணிக மந்தங்களும், வாணிக மிதப்புக்களும், மாறி மாறி வருகின்றன. அரசின் தலையாய கடமை இந் நிலைபேறின்மையை அகற்றுவதாகும். ஏனெனில், வாணிகச் சங்கடங்களினால் நாட்டின் பொருளாதார வாழ்வில் அதிர்வு ஏற்படுகிறது. வேலையின்மையை ஒழிப்பதற்காக, அரசு பல திட்டங்களை மேற்கொள்ளுகிறது. இதற்குப் பெருஞ் செலவு பிடிக்கிறது.

9. பொருளியல் திட்டங்கள் : பல நாடுகளும் இப்பொழுது திட்டமிட்ட பொருளாதாரத்தை ஏற்றுக் கொண்டுள்ளன. இன்ன இன்ன துறைகளில் முன்னேற வேண்டும் என்றும், ஆண்டு ஒன்றுக்கு இத்தனை சதவீதம் பொருளாதார வளர்ச்சி இருக்க வேண்டும் என்றும், அடுத்த ஐந்து ஆண்டுகளில் இவ்வளவு முதலீடு செய்யவேண்டும் என்றும் முன் கூட்டியே திட்டமிட்டு நாடுகள் செலவு செய்கின்றன. இதனாலும் அரசின் செலவு அதிகரிக்கிறது. வளர்ச்சி குன்றிய நாடுகளின் செலவு அதிகரித்ததற்கு அவை ஐந்தாண்டுத் திட்டங்களை மேற் கொண்டதும் ஒரு காரணமாகும்.

10. குடியாட்சி : வயது வந்த அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டதால் சட்டசபைகளின் தரம் குறைந்து விட்டதென்றும், பொதுவுடைமை எண்ணங்களால் உந்தப்பட்டு அரசின் செலவுகள் அதிகரிக்கப்படுகின்றன என்றும் வாதிடப்படுகின்றது. பல துறைகளுக்கும் அரசு வரவு செலவுத் திட்டத்தில் ஒதுக்கிய தொகை போதாதென்றும் தொகையை உயர்த்த வேண்டும் என்றும் பாராளுமன்ற உறுப்பினர்களும், சட்டசபை உறுப்பினர்களும் முழங்குகிறார்களே தவிர, அரசின் செலவைக் குறைக்க வேண்டும் என்று ஒருவரும் குரல் எழுப்புவதில்லை. தேர்தல்களை நடத்துவதற்கும் அதிகச் செலவு ஆகிறது. 1971ஆம் ஆண்டு பிப்ரவரியில் நடந்த இடைத் தேர்தலுக்கு ஆன செலவு உருபா $14\frac{1}{2}$ கோடியாகும். பத்தாண்டுகளுக்கு முன்னால் இந்திய பாராளு மன்றக் கூட்டம் நடந்து கொண்டிருந்த பொழுது, அதற்கு ஒரு நிமிஷத்திற்கு உருபா 80 செலவாயிற்று. இப்பொழுது இச் செலவு மும்மடங்குக்கு மேல் அதிகரித்திருக்கிறது. ஒரு வினாவுக்கு, விடை தருவதற்கு வேண்டிய தகவல்களைச் சேகரிப்பதற்கு உருபா

3,000-ல் இருந்து உரூபா 4,000 வரை செலவாகிறது என்றும், விளப்பட்டியலைத் தயாரிப்பதற்கு உரூபா 10,000-ல் இருந்து உரூபா 15,000 வரை செலவாகிறதென்றும் டில்லி மக்கள் சபைத் தலைவர் திரு ஜி. எஸ். தில்லான் (G.S.Dhillon) அவர்கள் கூறியுள்ளார்கள்.[1]

**11. அரசு உதவி** (State Aid): பல தொழில்களுக்கு அரசு கடனுதவி அளிப்பதோடு, உதவித் தொகைகளும் வழங்குகிறது. இவற்றால் எல்லாம் அரசின் செலவு அதிகரிக்கின்றது. எல்லா நாடுகளிலும் பொதுவாக அரசின் செலவு அதிகரித்து வருகிறது; எதிர்காலத்தில் இது இன்னும் அதிகரிக்கும்.

[1] *ஆதாரம்*: 'Indian Express', 5-5-1972, p. 5.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Findlay Shirras, 'Finance in Peace and War', Chapter I.
2. Dalton, 'Public Finance', Chapter XVI.

# 6. செலவு விதிகள்
## (The Canons of Expenditure)

அரசின் செலவு மளமளவென்று ஏறி வருவதைக் கண்டு பலர் அச்சமும், கவலையும் கொண்டுள்ளனர். இவ் வச்சத்திற்கும், கவலைக்கும் ஆன காரணங்களை டெயிலர்[1] தொகுத்துக் கூறுகிருர். அவை வருமாறு: *1*. இயல்பாகவே அரசின் செலவு விருதாவாக இருக்கிறது என்று பரவலான எண்ணம். 2. அதிகாரத்தில் உள்ள கட்சி, அரசின் பணத்தை வாரி வழங்கித் தன் ஆட்சியை நிரந்தரமாக்கிக் கொள்ளும் என்று சிறுபான்மைக் கட்சியின் கவலை. அரசின் நடவடிக்கைகள் அதிகரிக்க, அதிகரிக்கத் தனியாரின் சுதந்திரமும், தனியாரின் முனைவுக்கான (Private Enterprise) துறைகளும் பறி போகும், சுருங்கும் என்ற கவலை. 3. ஆகவே, சிக்கனமாகச் செலவழிப்பது அரசின் தலையாய கடமையாகும்.

ஆடம் ஸ்மித் (Adam Smith) இயற்றிய வரிவிதிப்பு விதிகளைப் பின்பற்றிப் பிற்காலத்தில், அரசின் செலவுகள் பற்றியும் பலர் விதிகளை வகுத்தனர். அவை வருமாறு: *1*. ஆதாய விதி, *2*. சிக்கன விதி, *3*. அனுமதி விதி, *4*. நெகிழ்ச்சி விதி, *5*. உபரி விதி.

### 1. ஆதாய விதி (The Canon of Benefit)

அரசு செலவின் உரைகல்லாவது, சமுதாயத்திற்கு அதனுல் விளையும் ஆதாயமே ஆகும். இதில் சிறந்த முறையாவது, பொது மக்களுக்குப் பெருமளவில் நன்மையைப் பயப்பதாகும். இஃது பெக்காரியா (Beccaria) என்பவர் தாம் எழுதிய சிறு நூலான 'குற்றங்களும் தண்டனைகளும்' (Crimes and Punishments, 1764) என்பதன் முன்னுரையில் வழங்கிய ஒரு சொற்றொடர் ஆன 'மிகப் பெரும்பான்மையோருக்கு மிகுதியும் மகிழ்ச்சியைக்

[1] Taylor, 'The Economics of Public Finance', 3rd Edition, Indian Edition, 2nd Reprint, 1970.

கொடுப்பது' (The Greatest Happiness of the Greatest Member) என்பதை நினைவுபடுத்துகிறது. அரசு நிதியைப் பற்றி எழுதிய ஒவ்வொருவர் மனத்திலும் இச் சொற்றொடர் ஆழமாகப் பதிந்துள்ளது. நிதியமைச்சரின் குறிக்கோள் அரசின் செலவினால் உச்சச் சமுதாயப் பயனைப் (Maximum Social Advantage) பெறுவதேயாகும். 'உலகாயதக் கோட்பாட்டின் (Utilitarian Principle) அடிப்படையில், அரசு செலவின் குறிக்கோள் ஒவ்வொரு துறையிலும் செலவினால் பொதுமக்களுக்கு ஏற்படும் நன்மையைச் சமமாக்குவதே,' என்று நிக்கல்சன்[1] கூறுகிறார். 'இந்தக் குறிக்கோளை அடைவது கடினமே; ஆயினும், இது சிந்தனைக்கு அப்பாற்பட்டதன்று. இதனைக் கடைப்பிடிக்க முயலுவதால் நடைமுறையில் முக்கியமான பயன்கள் விளையக்கூடும்.' பல்வேறு பணிகளின் முக்கியத்துவத்திற்கும் அவசரத்திற்கும் ஏற்ப அரசின் செலவு பகிர்வு செய்யப்பட வேண்டும். அரசின் செலவினால் உள் நாட்டில் அமைதியை நிலைநாட்டவும், வெளி நாட்டாரின் படையெடுப்பிலிருந்து நாட்டைப் பாதுகாத்துக் கொள்ளவும் இயலுதல் வேண்டும். மக்களின் மிதப்பும் சமுதாயத்தின் உற்பத்தி ஆற்றலும் அதிகரிக்க வேண்டும்; மேலும் மக்களிடையே நிலவும் ஏற்றத் தாழ்வுகளையும் குறைக்கவேண்டும். கீழ்க்காணும் படிநிலைகளை நிறைவேற்றினாலன்றித் தனியாரின் நன்மைக்காகவோ அல்லது சமுதாயத்தின் ஒரு பகுதியினரின் நன்மைக்காகவோ செய்யப்படும் அரசின் செலவைச் சரியென்று சொல்ல முடியாது. இவ்விதமான செலவு (அ) சிறு தொகையினதாயும், (ஆ) அறிவுக்கு ஒத்ததாயும், (இ) வழக்கமானதாயும் இருத்தல் வேண்டும். பிற்பட்ட சமுகத்தினருக்காகச் சில வேளை அரசு செலவு செய்யும்படி நேரிடலாம். (உ-ம்.) பிற்பட்ட வகுப்பினர்களுக்கும், தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கும் தரப்படும் மானியங்களும் உதவிகளும்.

**2. சிக்கன விதி** (The Canon of Economy).

வீண் செலவைத் தவிர்ப்பது மட்டும் சிக்கனமாகாது. அறிவுக்கு ஒத்த செலவே சிக்கனமாகும். அதன் பொருள் உரியவிடத்தில் ஆட்குறைப்புச் (Judicious retrenchment) செய்து வரி கொடுப்போரின் நலன்களைப் பேணுவதும், வருமானத்தைப் பெருக்குவதும் ஆகும். வேலையில்லாதார், பிணியாளர், வறிஞர் இவர்களுக்கு நிவாரணம் மறுப்பது சிக்கன மாகாது. பிலிப் ஸ்நோடன் (Philip Snowden) கூற்று வருமாறு: 'சிக்கனம் என்பது ஒவ்வொரு பவுன் செலவிற்கும் இருபது ஷில்லிங்குக்கு ஈடான

[1] Nicholson, 'Principles of Political Economy', Volume III, p. 379.

மதிப்பைப் பெறுவது.' அரசின் செலவைச் சரியான முறையில் கண்காணிக்க வேண்டுமென்பதும், கட்டுப்பாடு செய்ய வேண்டும் என்பதும் அதன் பொருளாகும். ஒரு சிறந்த தணிக்கை முறை மூலமும், பாராளுமன்ற ஒதுக்குமுறை (Parliamentary Procedure of Appropriatious) மூலமும் அரசின் நிருவாகம் கண் காணிக்கப்படுகிறது. 'சுதந்திரத்தைப் போல, சிக்கனத்தின் விலையும் நிரந்தர விழிப்பாகும்' (The price of liberty is eternal vigilance) என்ற பர்க்கின் கூற்று இதனுடன் ஒப்பு நோக்கற் பாலது.

### 3. அனுமதி விதி (The Canon of Sanction)

சரியான அதிகாரியின் அனுமதி பெற்றே செலவு செய்ய வேண்டும். எவ்வெவ்வினங்களுக்காகப் பணம் ஒதுக்கப்பட்டதோ, அவ்வவ்வினங்களுக்கே பணம் செலவழித்தல் வேண்டும். இவ்விரு விஷயங்களும் ஒவ்வொரு சட்ட சபையும் நியமிக்கும் அரசு கணக்குக் குழு (Public Accounts Committee) மூலம் நிறை வேற்றப்படுகின்றன. பாராளுமன்ற முறைகளில் எல்லாம், பணத்தை ஒதுக்கவும், அவ் வகையாக ஒதுக்கப்பட்ட இனத்திற்கு நடை முறையில் பணம் செலவழிக்கப்பட்டதா என்பதைப் பரிசீலனை செய்யவும் தனிப்பட்ட விதி இருக்கிறது. பொதுவாகக் கூறுமிடத்து, இவ் வனுமதிக்கொள்கை எல்லாம் குடியாட்சி அரசு களாலும் நடைமுறையில் பின்பற்றப்படுகிறது எனக் கூறலாம்.

### 4. நெகிழ்ச்சி விதி (The Canon of Elasticity)

வருமானத்தில் ஏற்படும் மாற்றங்களுக்கு ஏற்ப, செல வினங்களை, எளிதில் கூட்டவோ அல்லது குறைக்கவோ வழி இருக்க வேண்டும். ஆனால், இச் சீரிய விதியைக் கடைப்பிடிப்பது அருமையே; நடைமுறையில் கடைப்பிடிப்பது அதனிலும் அருமை. சில செலவினங்களைக் குறைக்கலாம். ஆனால், இக் காலத்தில் செலவில் பெரும்பகுதியான தற்காப்பு (படைச் செலவு), அரசின் கடன் மீது செலுத்தப்படும் வட்டி முதலான வற்றைக் குறைக்க இயலாது.

### 5. உபரி விதி (The Canon of Surplus)

நிதி நிருவாகத்தில் இதுதான் மிக இன்றியமையாத கோட் பாடு. ஒரு சிறந்த நிதி முறைக்கு இன்றியமையாத முன்னோடி. வரவையும் செலவையும் சரிக்கட்டும் வரவு செலவுத் திட்டமே. பொதுவாகக் கூறுமிடத்து ஒவ்வொரு வரவு செலவுத் திட்டமும் தன்னளவில் சரிக்கட்டக் கூடியதாய் (Every budget must be balanced) இருத்தல் வேண்டும்; அதாவது ஓர் ஆண்டின்

வருவாய் அவ் வாண்டின் செலவிற்குச் சமமாகவோ அல்லது சிறிது மிகையாகவோ இருத்தல் வேண்டும். அப்பொழுது தான் அரசினிடத்தில் மக்களுக்கு இருக்கும் நம்பிக்கையும், நாட்டின் நிதிய நிலைமையில் மக்களுக்கு இருக்கும் நம்பிக்கையும் அசைக்க முடியாதனவாயிருக்கும். *1920-ல்* பிரசல்ஸ் நகரில் நடந்தேறிய பன்னாட்டு நிதிய மாநாடு (The International Financial Conference) பின்வருமாறு கூறுகிறது: ' துண்டு வரவு செலவு திட்டங்களைத் தன்னுடைய கொள்கையாக ஏற்கும் எந்த ஒரு நாடும், பொது அழிவில் செலுத்தும் சறுக்குப் பாதையில் போய்க்கொண்டிருக் கிறது; அப்பாதையிலிருந்து மீள்வதற்கு எவ்விதமான தியாகமும் பெரிதானதன்று.[1] ' ஊதாரித்தனத்தினால் மட்டுமன்றி, வரு வாய்க்கும் செலவுக்கு முள்ள இட்டோட்டத்தைப் புறக்கணித்த தாலும் பல நாடுகளில் நிதியக் குழப்பம் ஏற்பட்டு, அதன் விளை வாகப் புரட்சியும் அழிவும் ஏற்பட்டிருக்கின்றன ...................... ஆகவே, ஒரு நல்ல நிதிய முறைக்கு உறைகல்லும் உண்மையான பாதுகாப்பும், அடிப்படையும் இதுவேயாகும்,' என்று கிளாட் ஸ்டன்[2] கூறுகிறார்.

[1] Quoted by Findlay Shirras, 'The Science of Public Finance', p. 45.
[2] *அதே நூல், பக்கம் 45—46.*

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. G. Findlay Shirras, ' The Science of Public Finance'' 2nd Edtiion, August, 1925, Macmillon & Co., Limited, St. Martin's, Street London, Chapter IV, p. 40, 46.
2. R. N. Bhargava, ' The Theory and Working of Union. Finance in India, ' 1971, pp. 12-17.

# 7. அரசின் செலவுகளை வகைப்படுத்துதல்
## (Classification of Public Expenditure)

பொருளியல் புலவர்கள் அரசின் செலவுகளைப் பலவாறாக வகுத்திருக்கிறார்கள். ஆனால், இம்முறைகள் அனைத்தும் தம்முள் பெரிதும் வேறுபட்டிருக்கின்றன. இதுவரையில் முழுமையான மனநிறைவை நல்கக் கூடிய எந்த ஒரு முறையும் வகுக்கப் படவில்லை. இவ்வாறாக, மில், ராஷர், பிளென், ஆடம்ஸ், நிக்கல்ஸன், பாஸ்டபிள் போன்றோர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக அரசின் செலவுகளை வகுத்திருக்கிறார்கள்.

ஜான் ஸ்டூவர்ட் மில் (John Stuart Mill) அரசின் செலவுகளை இன்றியமையாதவை, விருப்பமானவை என இருவகையாகப் பிரித்தார். இன்றியமையாத செலவுகளைச் செய்தே தீர வேண்டும். இவற்றைக் கூட்டவோ அல்லது குறைக்கவோ முடியாது. விருப்பச் செலவுகளைக் கூட்டவோ, குறைக்கவோ அல்லது ஒத்திப் போடவோ செய்யலாம். மில்லின் வகைப்படுத்தலை ஒத்துக் கொள்ள முடியாது. ஏனெனில், இக் காலத்தில் அனைத்துச் செலவுகளுமே இன்றியமையாதவை என்று கருதப்படுகின்றது. மேலும், கல்வி, சுகாதாரம் இவற்றின் மீதான செலவுகளை மில் விருப்பச் செலவுகள் என்று கருதுகிறார். நாம் அங்ஙனம் கருத முடியாது.

தனியார் செலவுகளை ஒத்து, அரசின் செலவுகளையும் ராஷர் (Roscher)[1] மூன்று பிரிவுகளாகப் பிரிக்கிறார். அவையாவன : (1) இன்றியமையாதவை (2) பயனுள்ளவை. (3) வேண்டாதவை அல்லது அணி செய்பவை. இன்றியமையாத செலவுகளை அரசு மேற்கொண்டே ஆக வேண்டும். அவற்றை ஒத்திப் போட முடியாது. (உ-ம்.) நிருவாகச் செலவு, பயனுள்ள செலவுகள். ஆதாயம் அளிப்பவையானாலும், அவற்றைச் சில காலத்திற்கு ஒத்திப் போடலாம். வேண்டாத செலவுகளினால் யாதொரு பயனு

[1] Quoted by Shirras, p. 50.

மில்லை. ஆகவே, இச் செலவுகளை மேற்கொள்ளக்கூடாது. தனியார் நுகரும் பண்டங்களை, இன்றியமையாத பண்டங்கள், துப்புரவுப் பண்டங்கள் (decencies or comforts), போகப் பண்டங்கள் என்று பிரிப்பதைப் போன்று அரசின் செலவுகளையும் இவர் மூவகை யாகப் பகுத்திருக்கிறார். மேலும், இவர் சில வகைச் செலவுகளை நல்லவை என்றும், வேறு வகைச் செலவுகளை அல்லவை என்றும் எண்ணுகிறார் என்று தெரிகிறது. இவ்வகைப் பாகுபாட்டால் பிரச்சினை தீர்க்கப்படவில்லை. இக் காலத்தில் எந்த விதமான அரசுச் செலவையும் தண்டச் செலவு என்று கூற இயலாது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த பொருளியல் ஆசிரி யர்கள், அரசின் செலவினால் விளைந்த ஆதாயத்தை அடிப்படை யாக வைத்து அரசின் செலவுகளைப் பாகுபாடு செய்தனர். இவ்வித மான ஒரு பாகுபாட்டைக் கோனும் (Cohn), பிளன்னும் (Plehn)[1] செய்தனர். இவர்கள் அரசின் செலவுகளை நான்கு பாகுபாடு களாகப் பிரிக்கின்றனர். முதலாவதாக, அனைத்துக் குடி மக்க ளுக்கும் அல்லது வரி செலுத்துவோர்களுக்கும் பொதுவான ஆதா யத்தைப் பயக்கும் செலவு, (உ-ம்.) பாதுகாப்பு, தொடக்கக் கல்வி. இரண்டாவதாக, சிலருக்கு மட்டும் ஆதாயத்தை பயக்கும் செலவு, (உம்) ஏழை நிவாரணம். ஆயினும் இதைப் பொது ஆதாய மாகவே கொள்ள வேண்டும். இவ்வாறே எல்லா நாடுகளும் கொள்கின்றன. ஏனெனில் இவர்களால் தங்கள் சொந்த முயற்சி யாலேயே இச் செலவுகளைச் செய்ய இயலாது. மூன்றாவதாக, சில வகை அரசுச் செலவுகள் சிலருக்குப் பிரத்தியேகமான ஆதா யத்தை அளித்தாலும், பிறருக்கும் பொதுவான ஆதாயத்தை அளிக்கிறது, (உ-ம்.) நீதி பரிபாலனம். நான்காவதாக, சிலவகைச் செலவுகள் குறிப்பிட்ட சிலருக்கு மட்டும் பிரத்தியேக ஆதா யத்தை அளிக்கிறது. (உ-ம்.) அரசு நடத்தும் தொழில்கள். இப்பாகுபாடு எளிதான ஒன்று. ஆனால், இந்நால்வகைப் பாகுபாடு களும் தம்முள் ஒன்றோடொன்று ஓரளவு இணைந்தே காணப்படு கின்றன. எடுத்துக் காட்டாக, முதல் பாகுபாட்டிலிருந்து பிரத்தியேக ஆதாயத்தை அகற்ற முடியாது. ஏனெனில், பாது காப்புச் செலவு சிலருக்குப் பிரத்தியேக ஆதாயத்தையும் அளிக்கிறது. உதாரணமாகக் காக்கி சீருடைகளைப் (Khaki uniforms) படையினருக்குச் சப்ளை செய்வதாக ஒப்புக் கொண்ட ஒப்பந்தக்காரர்களை எடுத்துக் கொண்டால், அவர்கள் பிரத்தி யேகமான ஆதாயத்தைப் பெறுகிறார்கள். இதே போல் பேட்டா (Bata) கம்பெனியார் 1½ கோடி பூட்ஸ்கள் சப்ளை செய்து இரண் டாம் உலகப் போர்க் காலத்தில் ஆதாயம் பெற்றார்கள். ஏழைகள்

[1] Quoted by Shirras, p. 48.

நிவாரணம் இரண்டாவது வரிசையில் இருந்தாலும், முதல் வரிசையிலேயே இதை வைக்கலாம். ஏனெனில், ஏழைகள் நிவாரணத்தினுல் குற்றவாளிகளின் தொகை குறைகிறது. நான்காவது வகையினதான செலவுக்கு இக் காலத்தில் முக்கியத் துவம் இல்லை. ஏனெனில், ஒரு தனிப்பட்ட வருக்கத்தினருக்குச் சலுகை காட்டும் எந்த இனமும் அரசின் செலவில் இடம் பெறக் கூடாது. ஆகவே, அனைத்து அரசுச் செலவும் அனைவரின் பொதுவான நன்மைக்காகவே செய்யப்படவேண்டும்.

அரசின் செலவிலிருந்து அரசுக்குக் கிடைக்கும் வருவாயை அடித்தளமாகக் கொண்டு, நிக்கல்ஸன்[1] அரசின் செலவுகளைப் பாகுபாடு செய்கின்ருர். முதல் பிரிவில் அரசுக்கு யாதொரு வரு வாயும் கிடைக்காத செலவினங்களையும், இரண்டாவது பிரிவில் அரசுக்கு நேரிடையாக யாதொரு வருவாயும் கிடைக்காமல் போனுலும், மறைமுகமாகவேனும் ஆதாயம் கிடைக்கக் கூடிய செலவினங்களையும், மூன்ருவது பிரிவில் ஓரளவேனும் அரசுக்கு வருமானத்தை அளிக்க வல்ல செலவினங்களையும், நான்காவது பிரிவில் அரசு முதலீடு செய்த மூலதனத்திற்கு மேலும் வருமானம் கிடைத்து இலாபம் தர வல்ல செலவினங்களையும் வைத்தார். முதலாம் பிரிவில் ஏழைகள் நிவாரணத்திற்கான செலவையும் போரில் ஏற்பட்ட இழப்புகளையும் வைத்தார். இரண்டாம் பிரிவில் கல்விக்காகும் செலவுகளை வைத்தார். கற்ருேர் சிறந்த வரி செலுத்துவோர்கள் என்பதும், அவர்களினுல் அரசுக்கு அத்துணைச் செலவில்லை என்பதும், கல்வியினுல் உற்பத்தித் திறன் கூடுகிறது என்பதும், இதனுல் மக்களின் வரி தாங்கு வல்லமை அதிகரிக்கிறது என்பதும் அவரின் துணிபாகும். மூன்ரும் பிரிவில் கட்டணம் வாங்கிக் கொண்டு கல்வி அளிப்ப தையும், இருப்புப் பாதைகள், தொழில்கள் இவற்றிற்கு உதவித் தொகைகள் அளிப்பதையும் அடக்குகிருர். நான்காம் பிரிவில் இலாபத்தை நல்கும் தொழில்களை வைத்தார். பிளன்னின் பாகுபாட்டைக் காட்டிலும் இப் பாகுபாடு சிறந்ததாயினும், இதிலும் சில குறைபாடுகள் உள்ளன.

(1) அரசின் ஒவ்வொரு செலவும் நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ, அரசுக்கு வருவாயை நல்குகிறது. உதாரண மாக, ஏழைகள் நிவாரணத்துக்காக அரசு செய்யும் செலவினுல் நிவாரணம் பெறுபவர்கள் பண்டங்களை வாங்குகிருர்கள். அப் பொழுது பண்டங்களின் மீது விதிக்கப்பட்டிருக்கும் மறைமுக வரிகளையும் செலுத்துகிருர்கள்.

[1] Nicholson quoted by Shirras, p. 49.

(2) அரசுச் செலவுகளின் பாகுபாடு அவற்றின் தன்மைகளைக் காட்ட வேண்டும்.

(3) இந் நான்கு பிரிவுகளுக்கும் உள்ள தொடர்பும் தெளிவாகக் காட்டப் பெறவில்லை.

(4) பல்வேறுபட்ட செலவுகளுக்கு இடையில் உள்ள முக்கியமான வேறுபாடுகளையும் இப் பாகுபாடு காட்டவில்லை.

ஹெச்.ஸி. ஆடம்ஸ் (H. C. Adams) என்பவர் வேருெரு விதமாக அரசின் செலவுகளைப் பாகுபாடு செய்கின்ருர். அரசு மேற்கொள்ளும் அலுவல்களின் அடிப்படையில், அவர் அரசின் செலவுகளை மூவகையாகப் பிரிக்கின்ருர். அவை வருமாறு:

(1) பாதுகாப்பு அலுவல்கள்—இதில் பாதுகாப்பு (படைச் செலவு), போலீஸ், நீதிமன்றங்கள், சிறைச்சாலைகள், குற்றவாளிகளைத் திருத்தும் பள்ளிக்கூடங்கள், பயித்தியங்களுக்கான மருத்துவ மனைகள் முதலானவை அடங்கும்.

(2) வாணிப அலுவல்கள்-இதில் ஒரு கட்டணத்தை வாங்கிக் கொண்டு அதற்குப் பிரதியாகப் பணிகளை விற்கும் அஞ்சலகங்கள், இருப்புப் பாதைகள், ஈட்டுறுதி (Insurance) முதலானவையும், கட்டணத்தை வசூலிப்பதால் ஓரளவே செலவைச் சரிக்கட்டும் தண்ணீர்த் தீர்வை முதலானவையும் அடங்கும்,

(3) வளர்ச்சி அலுவல்கள்—இதில் கல்வியும், மக்களின் பொழுது போக்குக்கு வகை செய்யும் இனங்களும், அணைக்கட்டு, மின்சார உற்பத்தி போன்ற பொதுப் பணிகளும் அடங்கும்.

இப் பாகுபாட்டிலும் குறைபாடுகள் இல்லாமல் இல்லை. சட்டத்தையும், அமைதியையும் நிலைநாட்டும் நிறுவனங்களுக்கு இடையில் தெளிவான வேறுபாடு இல்லை. பாதுகாப்புக்காகும் செலவு ஓரளவு வளர்ச்சியையும் பேணுகிறது என்பது தெளிவு. சமுதாயம் வளர வளர, பாதுகாப்புக்கு ஆகும் செலவு குறைகின்றதென்றும் ஆடம்ஸ் கூறுகின்ருர். இக்கூற்று நடப்பில் மெய்ப்பிக்கப்படவில்லை.

ஷிர்ராஸ் (Shirras) அரசின் செலவை முதல்தர (Primary) செலவுகள் எனவும், இரண்டாம்தர (Secondary) செலவுகள் எனவும் பிரிக்கிருர். அரசு எனப் பெயர் பூண்டிருந்தால் சில செலவுகளை மேற்கொள்வது கடமையாகும். இவை பாதுகாப்பு, சட்டம், அமைதியை நிலைநாட்டுதல், அரசின் கடன்களை அடைத்தல் போல்வனவாகும். இரண்டாந்தரச் செலவில் சமுதாய

ஈட்டுறுதிக்கு ஆகும் செலவு, கல்வி, சுகாதாரம் இவற்றிற்கு ஆகும் செலவும், அரசு மேற்கொண்டிருக்கும் தொழில்களுக்கு ஆகும் செலவும், பிற செலவுகளும் அடங்கும். இப்பாகுபாட்டிலும் குறைகள் உள்ளன. முதலாவதாக, எந்த ஒரு அலுவலும் அரசின் முதல்தர அல்லது இரண்டாம் தரச்செலவாக நிரந்தரமாக இருக்க முடியாது. ஆகவே, இந்த அடிப்படையில் செலவுகளைப் பிரிக்க முடியாது. முன்பு கல்விக்காகும் செலவு இரண்டாம் தரச் செலவாகக் கொள்ளப்பட்டது. ஆனால், இற்றை நாளில் இது முதல்தரச் செலவாகக் கொள்ளப்படுகின்றது. இரண்டாவதாக, செலவுகளை முதல் தரம் அல்லது இரண்டாம் தரச் செலவுகள் எனப் பிரிப்பது இவற்றின் விளக்கங்களையும், அரசின் அலுவல்களையும் பொறுத்துள்ளன. நாம் இதுகாறும் கூறியவற்றிலிருந்து,......................
...........அறிவியல் கண்ணோட்டத்தின்படி அரசின் செலவுகளைப் பாகுபாடு செய்வது கடினம் என்பது விளங்கும். ஆகவே, டால்டன்[1] போன்ற அறிஞர்கள், தருக்கரீதியாகப் பாகுபாடு செய்யாமல், நடைமுறைக்கு அல்லது அனுபவத்துக்கு ஒத்த ஒரு பாகுபாட்டைச் செய்திருக்கின்றனர். சமுதாயத்தின் கட்டுக்கோப்பை உள்நாட்டுக் கொந்தளிப்போ அல்லது வெளிநாட்டுப் படையெடுப்புக்களோ குலைக்காமல் பார்த்துக் கொள்வதும், சமுதாயத்தின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதும், ஆக அரசின் செலவுகள் இருவகையாகும். பொருளியல் கண்ணோட்டத்திலிருந்தோ அல்லது பொருளியல் ஒழிந்த கண்ணோட்டத்திலிருந்தோ பார்க்கும் பொழுது, சமுதாய வாழ்க்கையை ஒழுங்கானதாகவும், பாதுகாப்பாகவும் வைத்திருப்பதோ அல்லது இவ்விதமான ஒழுங்கான, பாதுகாப்பான வாழ்க்கையை இன்னும் சிறந்ததாக வாழும்படிச் செய்வதோ நோக்கமாக இருக்கலாம்.

இக் கால அரசுகளை எடுத்துக் கொண்டால், பின் வருவன அவற்றின் செலவுப் பட்டியலாகும்.[2]

(1) சமாதான காலத்திலும், போர்க்காலத்திலும் படையினரையும், போலீஸாரையும் பராமரிப்பதும், அவர்களுக்கு வேண்டிய கருவிகளை அளிப்பதும்;

(2) நீதி பரிபாலனம் செய்வது;

[1] Dalton, 'Public Finance', p. 201.
[2] Dalton, 'Public Finance', p. 201, 202,

(3) அரசின் தலைவராக இருக்கும் அரசர், அதிபர் (ஜனாதிபதி) அல்லது ஆளுநரையும், (கவர்னர்) வெளிநாடுகளில் தூதர்களையும் பராமரிப்பது;

(4) அமைச்சர்கள், சட்டமன்ற அல்லது பாராளுமன்ற உறுப்பினர்கள், ஸிவில் அதிகாரிகள் அடங்கிய அரசு இயந்திரத்தைப் பராமரிப்பது;

(5) வட்டியைத் தருதல், முதலைத் திருப்பித் தருதல், கடன் நிருவாகம் ஆகிய இவையடங்கிய அரசுக் கடன் செலவுகள்;

(6) தொழில்களையும், வாணிபத்தையும் வளர்ப்பதற்காக நேரிடையாக மேற்கொள்ளப்படும் செலவுகள்; இவற்றில் வெளி நாடுகளில் வாணிபப் பிரதிநிதிகளை (trade consuls) வைத்திருப்பதும், செலாவணியைக் கிடைக்கும்படிச் செய்வதும், அஞ்சல், தந்தி, போக்குவரத்து போன்ற பணிகளும் அடங்கும்.

(7) சுகாதாரம், கல்வி, முதியோர் ஓய்வு ஊதியம், ஏழைகள் நிவாரணம், வேலையில்லாதோருக்கு வகை செய்தல் ஆகிய சமுதாயச் செலவு. இது அனுபவத்தை ஒட்டிய பட்டியலே தவிர அறிவியல் முறைப்படியான பாகுபாடு அல்ல. உதாரணமாக, கல்வி அமைச்சர், அவருடைய ஊழியர்கள் ஆகியவர்களின் சம்பளங்களை 4-வது பிரிவில் அடக்கியிருக்கிறேன். அவற்றை 7-வது பிரிவில் அடக்குவது இன்னும் அதிகப் பொருத்தமாக இருக்கும்.

பல்வேறுபட்டவையும், ஒன்றுக்கொன்று மாறுபட்டவையுமான கோட்பாடுகளை அடித்தளமாகக் கொண்டு அரசின் செலவுகளைப் பாகுபாகு செய்யலாம். இவ்வாறாக, நாம் விரும்பினால் ஒரு 'அலுவல் பாகுபாட்டு' (functional classification) முறையையோ அல்லது 'துறைப் பாகுபாட்டையோ' (departmental classification) வகுக்கலாம். முந்தியது அரசுகள் நடைமுறையில் ஆற்றும் பல்வேறுபட்ட பணிகளை அடித்தளமாகவும், பிந்தியது ஒவ்வொரு நிருவாகத் துறையும் நடைமுறையில் செய்யும் செலவுகளை அடித்தளமாகவும் கொண்டிருக்கும். அலுவல்களின் பட்டியல் ஒன்றாக இருந்தாலும், இவ்விரு முறைகளைப் பின்பற்றினால் வெவ்வேறுபட்ட முடிவுகளைப் பெறுவோம். ஏனெனில், துறைகளுக்கு இடையே பணிகளைப் பகிர்வது என்பது என்றும் நிலையானதாக இருப்பதும் இல்லை; தருக்க ரீதியில் அறுதியிடப்படுவதும்ப இல்லை.

நாம் வேறு சில பாகுபாடுகளையும் காண்போம். அரசின் செலவு களை விருப்பச் செலவுகள் (obligatory expendeture) என்றும் கடமையின் நிமித்தம் செய்ய வேண்டிய செலவுகள் என்றும் பிரிக்கலாம். முந்தியதைக் கூட்டவோ, குறைக்கவோ அல்லது ஒத்திப் போடவோ செய்யலாம். பிந்தியதை ஏற்கனவே செய்து கொண்ட ஒப்பந்தங்களின் காரணமாகவோ அல்லது சட்டத் தளைகளின் காரணமாகவோ கூட்டவோ அல்லது குறைக்கவோ முடியாதிருக்கலாம். ஆயினும், இவ்வேறுபாடு ஒரு வரம்புக்கு உட்பட்டே சரியானதாகும். இது அளவைப் பற்றியதன்றி வகை யைப் பற்றியதல்ல. ஏனெனில், ஒப்பந்தங்களிலும் சட்ட ஏற்பாடு களிலும் மாறுதல்கள் செய்து இருத்தலாம்; வரவு செலவைச் சரிக் கட்ட முடியாத அரசுகள் பொதுவாக இம் முறையைப் பின்பற்று வது வழக்கமாகும். சட்டக் கோணத்திலிருந்து பார்க்கும் பொழுது விருப்பச் செலவாகத் தென்படுவது அரசியல் உசிதக் கோணத் திலிருந்து பார்க்கும் பொழுது கட்டாயச் செலவாகத் தோன்றலாம்.

பிகு (Pigou) மாற்றுச் செலவுகள் (transfer expenditures), மாற்றல்லாத செலவுகள் (nontransfer expenditures) என்று அரசின் செலவுகளை இரு வகையாகப் பாகுபாடு செய்கிறார். பிந்தியதை மெய்யான அல்லது காலியாக்கும் (real or exhaustive) செலவு என்றும் கூறலாம். மாற்றுச் செலவுகள் என்பது ஒரு வரிடமிருந்து அல்லது ஒரு சாராரிடமிருந்து இன்னொருவருக்கு அல்லது இன்னொரு சாராருக்கு வாங்கும் ஆற்றலை மாற்றுவதாகும். அரசு தான் வாங்கிய கடனுக்கு வட்டியைத் தருவதும், ஓய்வு பெற்றவர்களுக்கு ஓய்வு ஊதியம் தருவதும், வேலையில்லாதோருக்கு உதவித்தொகை அளிப்பதும் மாற்றுச் செலவுகளுக்கு உதாரணங் களாகும். மெய்யான செலவு என்பது பண்டங்களை அல்லது பணிகளைத் தீர்த்துக் கட்டுவது (ஒழிப்பது) ஆகும். இங்ஙனம் ஒழிக்கப்படுவதால் இவை பிறரின் உபயோகத்திற்குக் கிடைப் பதில்லை. போர்க்கருவிகள், கல்வி இவற்றிற்கான செலவுகள் மெய்யான செலவுகள் ஆகும். உற்பத்தி அளவையும், தன்மை யையும் அறுதியிடுவது மெய்யான செலவே. மாற்றுச் செலவு உற்பத்தியின் தன்மையையோ, அளவையோ நேரிடையாகப் பாதிப்பதில்லை. ஆனால், மாற்றுச் செலவினால் பகிர்வின் மீது நேரிடையான விளைவுகளும், உற்பத்தியின் மீது மறைமுகமான விளைவுகளும் ஏற்படுகின்றன.

**மானியங்களும் கொள்விலைகளும் (Grants and Purchase Prices)**

டாக்டர் டால்டன்[1] அரசின் செலவுகளை மானியங்களும், கொள்விலைகளும் என்று இருவகையாகப் பாகுபாடு செய்கிறார்.

[1] Dalton, 'Public Finance', p. 205, 210.

அரசின் வருவாயை வரிகளும், விற்கும் விலைகளும் என இருவகை யாகப் பிரிப்பது போல, அரசின் செலவுகளையும் மானியங்கள், கொள்விலைகள் என இருவகையாகப் பிரிக்கலாம். அரசினிட மிருந்து பணத்தையோ, பணத்திற்கு ஈடான ஒரு பண்டத் தையோ பெறும் எவரும், அதற்கு மாற்றுக, நேரிடையாக அரசுக்கு கைம்மாறு (Quid Pro quo) செய்யலாம்; செய்யாமலும் இருக்க லாம். முந்தியதில் அவரிடமிருந்து அரசு ஒரு பண்டத்தையோ, பணியையோ விலைக்கு வாங்குகிறது. பிந்தியதில் அவருக்கு அரசு ஒரு மானியத்தை அளிக்கிறது. இம் மானியம் பணமாகவோ அல்லது படையினர் அல்லது ஊர்க்காவலர் இவர்களிடமிருந்து பெறுவதாகக் கருதப்படும் பாதுகாப்பு, கல்வி அல்லது நோய் பராமரிப்பு இவை போன்ற பணிகளாகவோ இருக்கலாம். இவ்வாறு அரசினால் அதன் ஊழியர்களுக்கு அளிக்கப்படும் சம்பளம், கூலி முதலானவைகள் கொள்விலைகளாகும். முதி யோருக்கு அளிக்கப்படும் ஒய்வு ஊதியம், ஏழ்மை நிவாரணம், சுகாதாரம், வேலையின்மை ஈட்டுறுதி (Unemployment insurance) இவற்றுக்கு அரசு செய்யும் செலவுகள் மானியங்களாகும். தருக்க ரீதியாகப் பார்க்கும் பொழுது இப் பாகுபாடு சிறந்ததே. கருதுகோள் அளவிலேனும் இப் பாகுபாடு கொள்விலைகளை மானியங்களிலிருந்து தெளிவாக வேறுபடுத்திக் காட்டுகிறது. ஆயினும், நடைமுறையில் அரசின் செலவில் எவ்வளவு வீதம் கொள்விலைகளுக்கும், எவ்வளவு வீதம் மானியங்களுக்கும் ஒதுக்க வேண்டும் என்று அறுதியிடுவது சாத்தியமல்ல.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. Shirras 'The Science of Public Finance' Chapter V.
2. Mehta and Agarwal, 'Public Finance', Theory and Practice.
3. Lutz, 'Public Finance', Chapter IV, p. 36, 45.
4. Dr. K. K. Sharma, 'Public Finance'.
5. H. C. Adams, 'The Science of Finance', p. 55, 82.

# 8. அரசின் செலவு உற்பத்தியின் மீதும் பகிர்வின் மீதும் ஏற்படும் விளைவுகள்

மற்றவை மாறுதிருப்பின், எவ்வாறு வரி விதிப்பினுல் மிகக் குறைவான அளவே உற்பத்தி பாதிக்கப்படலாமோ, அவ்வாறே அரசின் செலவினுல் மிகக் கூடுதலான அளவு உற்பத்தி அதிகரிக்க வேண்டும்.

ஆடம் ஸ்மித், ரிக்கார்டோ, மில் இன்னும் மற்றைய தொல் பொருளியல் புலவர்களும் அரசின் செலவைப் பயனில் செலவு என்றே கொண்டார்கள். இக் காலத்தில் அரசின் செலவின் பெரும் பகுதியும் நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ நாட்டின் உற்பத்தி ஆற்றலைப் பெருக்குவதற்குத் துணை செய்கிறது என்று கூற முடியாது. போரில் ஈடுபடும் நாடுகள், உற்பத்திக்குப் பொருளாதார வளங்களைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக, அவற்றை அழிப்பதற்குப் பயன்படுத்துகின்றன. சமாதான காலத்தில் பாதுகாப்பு, போர்த் தளவாடங்கள் இவற்றின் மீது ஒரு நாடு தன் செல்வத்தைச் செலவிடுவதன் மூலம், தன்னிடம் இப்போதுள்ள செல்வத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியுமே தவிர, இப்போதிருக்கும் செல்வத்தைப் பெருக்கவோ, அல்லது புதிதாகச் செல்வத்தைப் படைக்கவோ முடியாது. ஒரு உலக அரசும், படைக் குறைப்பும் ஏற்பட்டால்தான் உச்ச அளவு பாதுகாப்பையும் (Maximum Security), உச்ச அளவு பொருளா தார நலனையும் (Maximum Economic Welfare) உலகம் பெற முடியும்.

போர்ச் செலவு மட்டும் தான் பயனில் செலவு என்று கூற முடியாது. நீதி பரிபாலனம், பதவியிலிருந்து ஓய்வு பெற்றவர் களுக்கு ஓய்வு ஊதியம் ஆகியவற்றிற்கு ஆகும் செலவும், மீள் உற்பத்திக்குத் (Reproduction) துணை செய்கிறது என்று கூற முடியாது. போர்ச் செலவை வலியுறுத்துவதன் நோக்கம், அது பிற பயனில் செலவுகளினின்றும் வேறுபட்டது என்பதற்காக

அல்ல. போர்ச் செலவும், போர் ஆயத்தங்களுக்கு ஆகும் செலவும், கடந்த போர்களின்போது வாங்கிய கடன்களுக்கு வட்டித்தொகை செலுத்தும் செலவும், இக் காலத்திய பல நாடு களிலும் பெருஞ் செலவினங்களாகக் காணப்படுவதே, போர்ச் செலவை வலியுறுத்துவதற்கான காரணமாகும்.

வரிகளின் வாயிலாகவும் கடன்களின் வாயிலாகவும் கிடைத்த வருமானத்திலிருந்து, அரசு செலவு செய்கிறது. மக்கள் உயர்ந்த வாழ்க்கைத்தரத்தையும், ஆரோக்கியமான வாழ்வுக்கான வசதி களையும் பெறுவதற்கும், அரசின் செலவு துணை செய்கிறது. மனித ஆற்றல் வீண் விரயமாவதைத் தடுத்தும், கூடுதலான உற்பத்தியையும், சேமிப்பையும் செய்யும்படி மக்களைத் தூண்டியும், ஒரு நாட்டின் செல்வ உற்பத்தித் திறனை ஓரளவு அரசின் செலவினுல் அதிகரிக்க முடியும். அரசின் செலவினுல் உற்பத்தி மீது ஏற்படும் விளைவுகளைச் சிறப்பாக, மூன்று வகை களாகப் பிரிக்கலாம். அவையாவன : 1. உழைக்கும் ஆற்றல் மீதும், சேமிக்கும் ஆற்றல் மீதும் ஏற்படும் விளைவுகள், 2. உழைக்கும் விருப்பத்தின் மீதும், சேமிக்கும் விருப்பத்தின் மீதும் ஏற்படும் விளைவுகள், 3. பொருளாதார வளங்களைத் திருப்பு வதால் பல்வேறுபட்ட தொழில்கள் இடையேயும், தலங்கள் இடையேயும் ஏற்படும் விளைவுகள். (Effects on the diversion of economic resources between different employments and localities.)

அரசின் செலவினுல் ஒருவனுடைய ஆற்றல் அதிகரிக்கு மானுல், அவனுடைய உழைக்கும் ஆற்றலும் அதிகரிக்கும். இக் காரணத்தால் சமுதாயத்திற்கு நன்மை தரும் பல செலவினங்களை அரசுகள் மேற்கொள்கின்றன. பொது மக்களின் சுகாதாரம், வேலையின்மை நிவாரணம், ஈட்டுறுதி ஆதாயம் (Insurance Benefit), வேலையிலிருந்து ஓய்வு பெற்றவர்களின் ஓய்வு ஊதியம் ஆகிய சமுதாயச் சேவைகளுக்காகச் செலவிடுவதால் தனியாட் களின் ஆற்றல் மிகும் என்று நம்பப்படுகிறது. அரசின் செலவினுல் நன்மை பெறுவோரிடம் மட்டுமே இவ்வாற்றல் அதிகரிக்கும் என்பதில்லை. அரசின் செலவினுல் நன்மை பெறுவோரின் வழித் தோன்றல்களிடமும் இவ்வாற்றல் அதிகரித்துக் காணப்படலாம். விதவைகள் உபகாரச் சம்பளம் (Widows Pensions), குடும்பப் படிகள் (Family Allowances) முதலான செலவுகளை அரசு மேற் கொள்வதற்கு இதுதான் தலையாய காரணமாகும். மேலும், கல்வி, மருத்துவ வசதிகள் வீட்டு வசதி முதலான ரொக்கம் ஒழிந்த மானியங்களாலும் உழைக்கும் ஆற்றல் மிகவும் கூடுகிறது. இவற்றை ரொக்க மானியங்களாகக் கொடுத்தால், இவை நல்ல வழிகளில் செலவழிக்கப்படாமல் போகலாம்.

அரசின் செலவினுல் ஒருவனுக்கு அதிக வருமானம் கிடைத்தால், அவனுடைய சேமிக்கும் ஆற்றலும் அதிகரிக்கிறது. 100 உரூபாவை அரசு வரியாக வசூலித்து 'ஆ'வுக்குச் சம்பளமாகவோ, போர்க்கடன் வட்டியாகவோ, அல்லது வேறு எந்தக் காரணத்திற்காகவோ கொடுத்தால், 'ஆ'வின் சேமிக்கும் ஆற்றல் அதிகரிக்கிறது என்பது தெளிவு. மேலும், மக்களின் ஆற்றலை அதிகரிக்கும் எதுவும் அவர்களின் வருமானத்தையும் அதிகரிக்கிறது. இதன் விளைவாகச் சேமிக்கும் ஆற்றலும் அதிகரிக்கிறது.

அரசின் செலவினுல் மக்களின் உழைக்கும் ஆற்றலும் சேமிக்கும் ஆற்றலும் பாதிக்கப்படுவதுடன், அவர்களின் உழைக்கும் விருப்பமும், சேமிக்கும் விருப்பமும் பாதிக்கப்படுகிறது. மக்களுக்கு உழைக்க விருப்பமில்லையானுல், அவர்களின் உழைப்பாற்றல் பெருகியதனுல் யாதொரு பயனும் இல்லை. நாம் அரசின் செலவினுல் மக்களின் உழைக்கும் விருப்பமும் சேமிக்கும் விருப்பமும் எங்ஙனம் பாதிக்கப்படுகிறது என்பதை இப்பொழுது காண்போம்.

நிகழ்காலத்தில் அரசின் செலவினுல் ஆதாயங்கள் பெறுவதைக் காட்டிலும், எதிர்காலத்தில் அரசினிடமிருந்து ஆதாயங்கள் பெறுவோம் என எதிர்பார்ப்பதனுல் சேமிக்கும் ஆற்றல் அதிகரிக்கிறது. போரில் பணி புரிந்ததற்கான ஓய்வு ஊதியங்களும் (war pensions), போர்க்கடன்கள் மீது தரப்படும் வட்டியும், எதிர்காலத்தில் ஆதாயத்தை எதிர்பார்ப்பதற்கு உதாரணங்களாகும். ஆனுல், இவ்வோய்வு ஊதியமும், வட்டியும் நிபந்தனை இன்றியும், நிலையாகவும் தரப்படுவதனுல் இவற்ருல் உழைக்கும் விருப்பமும், சேமிக்கும் விருப்பமும் அதிகரிக்க மாட்டாது. ஆனுல், எல்லா மானியங்களும் இங்ஙனம் நிபந்தனையின்றியும், நிலையானவையாகவும் இருப்பதில்லை. ஒரு நிபந்தனையின் பேரில் கொடுக்கப்படும் மானியங்கள் உழைக்கும் விருப்பத்தை நிகழ்காலத்தில் குறைக்கமாட்டா. (உ-ம்.) வேலையின்மை நிவாரணமும், நோயுற்றபோது கொடுக்கும் ஆதாயமும் சில சமயம் இம் மானியங்களினுல் உழைக்கும் விருப்பத்தை அதிகரிக்கலாம். மேலும், எதிர்காலத்தில் ஒரு ஆதாயத்தைப் பெறுவோனின் உழைப்புக்கு ஏற்ப மானியத் தொகையையும் அதிகரித்தால், உழைக்கும் விருப்பமும் சேமிக்கும் விருப்பமும் அதிகரிக்கும். (உ-ம்.) ஒருவருடைய வருமானத்திற்கு அல்லது சேமிப்புக்கு ஏற்ப அரசு உதவிக் கொடை அளித்தல். ஆனுல் நடைமுறையில் இவ்விதக் கொடைகள் சாத்தியமானவை அல்ல. எதிர்காலத்தில் செய்யப்படும் உழைப்புக்கு ஏற்ப, ஒருவன் பெறும் அரசின் கொடை குறைக்கப்படுமானுல், அவனுடைய

உழைக்கும் விருப்பமும், சேமிக்கும் விருப்பமும் பாதிக்கப்படும். இதே போல், ஒருவனுடைய கடந்த கால உழைப்புகளுக்கு ஏற்ப அவன் பெறும் அரசின் கொடை குறையுமானால், அவனுடைய உழைக்கும் விருப்பமும், சேமிக்கும் விருப்பமும் பாதிக்கப்படும். (உ-ம்.) இப்போது வேலையின்றியும், சிறிதளவு சேமித்து வைத்தும் இருக்கும் ஒருவனுக்குக் குறைந்த மானியமும், ஒன்றும் சேமித்து வைக்காமலும், வேலையின்றியும் இருக்கும் ஒருவனுக்கு அதிக மான்யமும் கொடுத்தால், மக்களின் சேமிக்கும் விருப்பம் பாதிக்கப் பெறும். உழைக்கும் விருப்பமும் சேமிக்கும் விருப்பமும் ஒருவனுடைய உளவியல் காரணியைப் (psychological factor) பொறுத்ததாகும். அரசு பின்பற்றும் கொள்கையில் நம்பிக்கையும், அதனால் தங்களுக்குப் பாதுகாப்பு ஏற்படுகிறது என்ற உணர்ச்சியும் மக்களுக்கு ஏற்பட்டால், உழைக்கும் விருப்பமும், சேமிக்கும் விருப்பமும் அதிகரிக்கும்.

### வளங்களைத் திருப்புவதால் ஏற்படும் விளைவுகள்

**நேரடித் திருப்பம் :** அரசின் செலவு, உற்பத்தி வளங்களைப் பயன் படுத்துவதையும் பாதிக்கிறது. இதனால் உற்பத்தியின் இயல்பு பாதிக்கப் படுகிறது. அரசின் செலவுகள் அனைத்தும் வளங்களை நேரடியாகத் திருப்புகின்றன எனலாம். இவ்வளங்களை வரி வாயிலாக அரசு வசூலிக்காவிட்டால், இவ்வளங்கள் மக்கள் கையிலேயே இருக்கும். அவர்கள் வேறு வழிகளில் இவற்றைச் செலவிடலாம். ஆகவே, பாதுகாப்பு, ஸிவில் நிருவாகம், சமுதாயப் பணிகள், தொழில்களுக்கு அரசின் உதவி போன்றவை வளங் களின் நேரடியான திருப்புகைக்கு உதாரணங்களாகும்.

**மறைமுகத் திருப்பம் :** சாலைகள் அமைப்பு, இருப்புப் பாதைகள் அமைப்பு இவற்றுக்கு அரசு செய்யும் செலவுகள், குறிப்பிட்ட பகுதிகளில் தொழில்களை நிறுவும்படி மக்களை ஊக்குவிக்கின்றன. இதனால், உற்பத்தியைப் பெருக்குவதும் சாத்தியமாகிறது; பண்டங்களை எளிதில் விற்பதும் சாத்தியமாகிறது. இதே போன்று மின்சார உற்பத்தியைப் பெருக்குவதாலும் மின்சாரத்தைப் பல இடங்களுக்கும் கம்பிகள் மூலம் கொண்டு செல்வதாலும், தொழில் நுட்ப அறிவைப் பரப்புவதாலும், உற்பத்தி வளங்கள் பெருவாரி யான தொழில்களுக்குத் திருப்பப்படுகின்றன.

### எதிர்காலப் பயன்களுக்குத் திருப்புதல்

அரசின் செலவினால் வளங்கள் நிகழ்கால உபயோகத்தி லிருந்து எதிர்கால உபயோகத்திற்கும் திருப்பப்படுகின்றன. இருப்புப் பாதைகள், நீர்ப்பாசன வசதிகள், மின்சார உற்பத்தி

முதலானவற்றின் வளர்ச்சிக்கு அரசு திட்டமிடும் பொழுது, நாட்டின் உள்ளார்ந்த (potential) உற்பத்தி ஆற்றலும் அதிகரிக்கிறது. உண்மையில் அரசின் அனைத்து மூலதனச் செலவுகளும் வளங்களை நிகழ்காலப் பயன்களிலிருந்து எதிர்காலப் பயன்களுக்குத் திருப்புபவையே. இத் திருப்பம் மிக இன்றியமையாதது. ஏனெனில் மக்கள் எதிர்காலத்திற்கு அதிகம் வகை செய்வதில்லை. டால்டன்[1] கூறுமாறு 'எதிர்காலத்தில் ஒரு மிகவும் பயனுள்ள பொருளாதார வழி வகைகளைச் செய்வதற்கு, மிகவும் பரந்துபட்ட திருப்பங்களைச் சரியென நிலைநாட்டலாம். அரசு அண்ணுவியார்களின் தலையீடின்றி, எதிர்காலத்திற்கு மிகவும் குறைவாகவே வகை செய்வது, முதலாளித்துவப் பொருளாதார நிலையங்களின் இயல்பாகும். ஏதாவது எதிர் காலத்திற்கு வகை செய்தாலும் அவற்றின் உள்ளீடு மோசமாக இருக்கிறது.' ஒரு முதலாளித்துவப் பொருளாதாரத்தில் வளங்களின் பெரும் பகுதியும் பருப்பொருள் மூலதனத்தில் முதலீடு செய்யப்படுகிறதே ஒழிய, மனித மூலதனத்தில் (human capital) மிகச் சிறு பகுதியே முதலீடு செய்யப்படுகிறது. ஆனால், இது நல்லதல்ல. ஒரு நாடு வளர வேண்டுமானால் பருப்பொருள் மூலதனத்துடன், மனித ஆற்றலும் வளர வேண்டும். பொது மக்களின் சுகாதாரம், சமுதாய நலப் பாதுகாப்பு, வீட்டு வசதிகள், இலவசக் கல்வி, இலவசப் பால், மதிய உணவு இவற்றுக்காக அரசு செலவழிக்கும் அளவுக்கு எதிர்காலத்தில் மனித ஆற்றலின் வளர்ச்சிக்கு அது வகை செய்கிறது.

### ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்திற்குத் திருப்புகை

ஒரு பிராந்தியம் சரியான முறையில் வளரவில்லையானால், அரசு அப் பிராந்திய வளர்ச்சியை விரைவு படுத்துவதற்கு உதவிக் கொடைகளையோ கடன்களையோ அளிக்க முன் வரலாம். அரசே நேரிடையாகத் தொழில்களையும் தொடங்கலாம்.

தொல் பொருளியல் புலவர்கள் அரசுச் செலவின் மூலம் வளங்களைத் திருப்புதல் கேடு பயப்பது எனக் கருதினார்கள். போட்டியின் விளைவாக, உற்பத்தி வளங்கள் மிகச் சிறந்த முறையில் பகிர்வு செய்யப்பட்டிருப்பதாக அவர்கள் கருதினார்கள். இதற்கான காரணங்கள் விலைவாசிகளின் இயக்கமும், தனியாளின் இலாப அல்லது தன்னல நோக்குமாகும். ஆகவே, இப் பகிர்வை அரசு மாற்றினால், உற்பத்திக்குக் குந்தகம் ஏற்படும். ஆகவே, அவர்கள் அரசின் தலையீட்டைக் கண்டித்தார்கள். ஆனால், சூழ்நிலைகள் மாறியதனால் அரசுகள் உற்பத்தியில் தலையிடுகின்றன. வளங்

[1] Dalton, 'Public Finance,' p. 219.

களைத் திருப்புவதால் சமுதாயத்திற்கு உச்ச சமுதாய ஆதாயமும், உச்சப் பொருளாதார ஆதாயமும் கிட்டுகிறது.

### அரசின் செலவினால் பகிர்வின் மீது ஏற்படும் விளைவுகள்

அரசின் செலவினால் ஒரு நாட்டில் செல்வப் பகிர்வும், வருமானப் பகிர்வும் பாதிக்கப்படுகிறது. ஒரு வருக்கத்தினரின் மீது வரி விதித்து அதனால் கிடைத்த தொகையை வேறொரு வருக்கத்தினருக்குப் பிரித்துக் கொடுப்பது ஒரு முறையாகும். ஆனால், இங்ஙனம் அரசு நேரிடையாக ஒரு வருக்கத்தினரிடமிருந்து இன்னொரு வருக்கத்தினருக்குச் செல்வத்தை மாற்றுவது அருமையே. பண்டங்களையும், பணிகளையும் இலவசமாக வழங்குவதன் மூலம் செல்வத்தைப் பணக்காரர்களிடமிருந்து ஏழைகளுக்கு மாற்றுவதே சாதாரணமாகக் காணப்படும் முறையாகும். 1906ஆம் ஆண்டுமுதல் பிரிட்டனில் சமுதாய சேவைகளுக்காக (social services) அரசு செய்யும் செலவு அதிகரித்துக் கொண்டே வருகிறது. இச் சேவைகளால் நன்மை பெறுவோர் இல்லாதவர்களே. இந்தியாவிலும் முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்திலிருந்து படிப்படியாகச் சமுதாயச் சேவைகளுக்காகச் செய்யப்படும் செலவுகள் அதிகரித்துக் கொண்டே வருகின்றன. எடுத்துக்காட்டாக, மைய அரசும், மாநில அரசுகளும் சமுதாயச் சேவைகளுக்குச் செய்த செலவுகள் வருமாறு:

| | 1921—22 | 1936—37 | 1938—39 (திருத்தப்பட்ட மதிப்பீடு) | 1950—51 | 1953—54 |
|---|---|---|---|---|---|
| | | | கோடி உரூபாக்களில் | | |
| மைய அரசு | 2.31 | 1.74 | 1.62 | 14.62 | 21.21 |
| மாநில அரசுகள் | 12.00 | 16.40 | 17.27 | 97.83 | 120.82 |

| | திட்ட வளர்ச்சிக்கான செலவு | % | திட்ட வளர்ச்சி ஒழிந்த செலவு | % |
|---|---|---|---|---|
| | கோடி உரூபாவில் | | | |
| முதல் திட்டம் | 2872 | 51.2 | 2734 | 48.8 |
| இரண்டாம் திட்டம் | 6594 | 63.3 | 3818 | 36.7 |
| மூன்றாம் திட்டம் | 13040 | 62.7 | 7760 | 37.3 |
| நான்காம் திட்டம் | 20693.1 | 47% | 23258.8 | 53% |

சமுதாய சேவைகளுக்கு இந்திய அரசும், மாநில அரசுகளும் மூன்றும், நான்காம் திட்ட காலங்களில் முறையே 622 கோடி உருபாவையும், 1335 கோடி உருபாவையும் செலவு செய்தன. செல்வத்தில் ஏற்றத் தாழ்வுகளைக் குறைப்பது இன்றியமையாதது. ஒருவனுடைய செல்வம் அதிகரிக்கும் தோறும், அவன் அதி லிருந்து பெறும் பயன்பாடு குறைந்து கொண்டே வருகிறது. ஆகவே, செல்வப்பகிர்வை ஓரளவு சமனுக்கும் எந்த முயற்சி யினாலும், அதேயளவு செல்வத்தினின்று கிடைக்கும் பயன்பாடு அதிகரிக்கும். 'வருவாய்களின் இடையேயுள்ள ஏற்றத் தாழ்வு களைக் குறைக்கும் போக்கையுடைய அரசின் செலவுதான் மிகவும் விரும்பத்தக்கது'[1] என டாக்டர் டால்டன் வற்புறுத்திக் கூறுகிறார். திருமதி எம். இ. ராபின்ஸன் அம்மையார் (Mrs. M. E. Robinson) கூறுவது போன்று அரசின் செலவினால் சமுதாயத்தில் பொருளா தார மிதப்பு அதிகரிக்கும்.[2] ஏனெனில், அதனால், செல்வத்தின் மொத்தம் அதிகரிக்காவிடினும், பகிர்வு மேம்பாட்டினால் கிடைக்கும் மனநிறைவு அதிகரிக்கிறது. இவ்வாறு செல்வத்தைப் பகிர்வு செய்வதனால் செல்வ உற்பத்தி தடைப்படலாம். வரி விதிப்பின் வாயிலாக அரசு செல்வத்தை ஒரு வருக்கத்திடனிடமிருந்து எடுத்துக் கொள்வதால், அவ்வருக்கத்தினரின் சேமிப்புக் குறையும். சேமிப்புக் குறைந்தால், உற்பத்திக்கு இன்றியமையாது வேண்டப் படும் மூலதனம் குறையும். மூலதனம் குறைந்தால் உற்பத்தி குறையும். அனைத்தையும் அரசே செய்ய முற்பட்டால் மக்களின் பொறுப்புணர்ச்சி குறைவதோடு, பாடுபட்டுப் பொருளீட்டும் அவர் களின் விருப்பமும் குறையும். இக் காரணத்தினால்தான் அரசின் செலவினங்கள் பலவும் பண்டங்களாகவும் பணிகளாகவும் செய்யப் படுகின்றன. எடுத்துக்காட்டாக, இலவசக் கல்வியினால் நாட்டின் உற்பத்தித்திறன் அதிகரிப்பதோடு, அதனால் நெடுங்காலத்தில் மறு உற்பத்தியும் அதிகம் ஏற்படலாம். இலவசக் கல்வியினால் பலருக்குச் சம வாய்ப்புக்கள் கிடைக்கும். இச் சமவாய்ப்பினால் பகிர்வில் ஓரளவு சமத்துவ நிலை ஏற்படலாம்.

[1] Dalton, 'Public Finance', p. 229.

[2] M. E. Robinson, 'Public Finance', Nisbet & co., 1st Edition, 1922, p. 13.

## மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. M. E. Robinson, 'Public Finance', Nisbet & co., Ltd., Cambridge University Press, 1st Edition, 1922, Chapter I.

2. Ursula K. Hicks, 'Public Finance', James Nisbet & Co., Ltd., Cambridge University Press, 2nd Edition, 1955, Chapter II, p. 18, 29 and Chapter XVIII, p. 294, 299.

3. Dalton, 'Public Finance', Chapter XVIII and XIX.

4. Philip E. Taylor, 'The Economics of Public Finance', 3rd Edition, Oxford & IBH Publishing Co., p.168, 172.

5. R. N. Bhargava, 'The Theory and Working of Union Finance in India', 3rd Edition, 1971, Chaitanya Publishing House, Allahabad, p. 31, 34.

# 9. அரசின் வருமான மூலங்கள் அல்லது ஆகாறுகள்

(Sources of Public Income)

அரசின் வரவினம் என்ற சொற்றொடருக்கு இரு பொருள்கள் கூறலாம். அரசின் வரவினத்தில் எல்லாவகை வரத்துக்களும் அடங்கும் என்பது முதற் பொருளாகும். சாதாரணமாக வருமானம் என்று எண்ணப்படுவதை மட்டும் அரசின் வரவினம் என்று கொள்வது இரண்டாவது பொருளாகும். எப்பொருளில் இச் சொற்றொடர் பயன்படுத்தப் படுகிறது என்பதை நாம் இடம் நோக்கி அறிய வேண்டும். இன்றியமையாதவிடத்து, 'அரசு வரத்துக்கள்' (Public receipts) என்ற சொற்றொடரை விரிவான பொருளிலும், 'அரசு வருமானம்' (Public income) என்ற சொற்றொடரைக் குறுகிய பொருளிலும் உபயோகிப்பதன் மூலம் குழப்பத்தைத் தவிர்க்கலாம். கடன்கள் மூலமும், போர்த்தளவாடங்கள் போன்ற அரசின் ஆஸ்திகளை விற்பதன் மூலமும் கிடைக்கும் வருவாயும் புதிதாக அச்சகத்திலிருந்து வெளிப்போந்த காகிதப் பணமும் அரசின் வரத்துக்களில் அடங்கும். இவை யாவும் அரசின் வருமானத்தில் இடம் பெரு.

### வரி விதிப்பின் வளர்ச்சி

வரி விதிப்பின் வளர்ச்சியைப் பற்றிய கருதுகோளில் ஏழு நிலைகள் இருந்ததாகப் பேராசிரியர் ஸெலிக்மென்[2] குறிப்பிடுகிருர். அவர் கூறுவதாவது: வரியை ஒரு கொடையாகக் கருதியது முதல் நிலையாகும். தனியார் ஒருவர் அரசுக்கு அளித்த அன்பளிப்பே வரியாகும். தனக்கு ஆதரவு அளிக்கும்படி மக்களை அரசு இறைஞ்சியது அல்லது வேண்டிக் கொண்டது இரண்டாவது நிலையாகும். மூன்றுவது நிலையில் தனியார், தாம் அரசுக்கு உதவி அளிப்பதாகக் கருதினர். அரசின் நலனுக்காகத் தனியார் தியாகம் செய்தது நான்காவது நிலையாகும். அவர் பொதுநலனுக்காகத்

[1] E. R. A. Seligman, Essays, 1st Edition, 1859, p. 5, 6.

தம் செல்வத்தில் ஒரு பகுதியைத் தியாகம் செய்கிருர். வரி செலுத்துவோர் தாம் அரசுக்குக் கடமைப் பட்டிருப்பதை உணர்வது ஐந்தாவது நிலையாகும். இது பற்றியேதான் வரிக்குக் கடமை எனப் பெயர் ஏற்பட்டது. ஆருவது நிலையிலேதான் மக்கள் அரசுக்கு வரி செலுத்த வேண்டியதன் கட்டாயம் வலியுறுத்தப் படுகிறது. இறுதியாக, ஏழாவது நிலையில் வரி செலுத்துவோரின் விருப்பத்தைக் கருத்தில் கொள்ளாது, அரசினுல் குறிப்பிடப்படும் ஒரு தொகையைச் செலுத்த வேண்டியிருக்கிறது. இதை வரி அல்லது இறை எனலாம். வரி என்ருல் வரித்தல் என்பது பொருள். இடைக்காலங்களில், வரி என்பது நேர் முகவரியையே சுட்டியது.

பேராசிரியர் பிளன்[1] சுட்டிக் காட்டுவது போன்று, இக் காலத்திய வரி முறைகள், நில மானியம் (feudal) நிலவிய காலத்தில் தோன்றியது. ரோமாபுரி வீழ்ச்சியடையும் வரை அரசர்கள் தங்கள் நிலங்களிலிருந்து கிடைத்த வருவாயைக் கொண்டும், தங்கள் குடிகளிடமிருந்து பெற்ற கட்டாயக் கடன் களைக் கொண்டும் அரசின் செலவைச் சமாளித்தார்கள். படிப்படி யாக, அரசின் அலுவல்கள் பெருகின. அதை அடுத்து அவற்றுக்கு அதிக வருமானமும் தேவைப்பட்டது. 1500ஆம் ஆண்டு வரை வரிகள் முக்கியத்துவம் பெறவில்லை. ஜெர்மனி யிலும், இன்னும் சில நாடுகளிலும் வருமான வரிகளும், உடைமை வரிகளும், ஆள் வரிகளும் (Poll taxes) வசூலிக்கப்பட்டன. 1500ஆம் ஆண்டுக்குப் பிறகு இக் காலத்திய அரசுகள் தோன்றின. இவற்றின் தோற்றத்துடன் வரி விதிப்பும் முக்கியத் துவம் பெற்றது. அரசின் செலவு அதிகரித்தது. இதைச் சரிக் கட்டத் தங்கள் நிலங்களிலிருந்து கிடைத்த வருவாய் அரசர் களுக்குப் போதவில்லை. ஆகவே, புதிய வருவாய் இனங்களைக் கண்டுபிடிக்க வேண்டியதாயிற்று. இப் புதிய வருவாய் இனங்கள் தான் உடைமை வரிகள், நுகர்வு வரிகள் முதலியனவாகும். கடந்த இரண்டு உலகப் போர்களின்போது போரில் ஈடுபட்ட பல்வேறு நாடுகளும், போரில் ஈடுபடாத நாடுகளும் மிகவும் பெருந்தொகைகளைச் செலவழிக்க வேண்டியிருந்தது. இதனுல், பழைய வரிகள் விரிவாக்கப்பட்டதுடன், புதிய வருவாய் இனங் களும் கண்டுபிடிக்கப்பட்டன. இக் காலத்தில் வரி விதிப்பினுல் அரசுக்குக் கணிசமான அளவு வருவாய் கிடைப்பதுடன், பொருளாதார நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்துவதற்கும் இது ஒரு கருவியாகப் பயன்படுகிறது.

[1] Plehn, 'Introduction to Public Finance', p. 55.

**வரியைப் பற்றிய விளக்கம்**

அரசுக்குக் கட்டாயமாகச் செலுத்தப்படும் தொகையே வரியாகும். 'தனக்குக் கிடைத்த பிரத்தியேக ஆதாயத்தைக் கருதாது, அனைவரின் பொது நலனுக்கும் ஆகும் செலவுகளைச் சமாளிப்பதற்கு, அரசினுக்கு ஒரு ஆள் செலுத்தும் கட்டாயக் கொடையே வரியாகும்' என ஸெலிக்மெனும், 'அரசுக்கோ அல்லது பிற பொதுநோக்கங்களுக்கோ ஆதரவு தருவதற்காகத் தரப்படும் ஒரு கட்டாயக் கொடை அல்லது செலுத்துகையே வரியாகும்' என ப்யூலரும்[1], 'பொது நலனுக்காகவும், தனக்குக் கிடைக்கும் பிரத்தியேக ஆதாயங்களைக் கருத்தில் கொள்ளாமலும், செலவுகளைச் சமாளிப்பதற்கு அரசுக்கு ஒரு தனியாளால் செலுத்தப்படும் கட்டாயக் கொடையே வரியாகும்' என பிளன்னும்[2], 'குடிமக்களின் வருமானத்தின் ஒரு பங்கே வரி எனவும், மக்களுக்குப் பொது நலன்களைச் செய்வதற்கான வழி வகைகளைப் பெறுவதற்கு, இதை அரசு தனக்கே ஒதுக்கீடு செய்து கொள்கிறது' எனப் பேராசிரியர் அன்டோனியோ டி விட்டி டிமார்க்கோவும் (Antonio de Vitti de Marco)[3] கூறுகின்றனர். 'அரசின் சேவைக்காகத் தனியார் ஒருவராலோ அல்லது ஒரு குழுவினராலோ, தம் செல்வத்திலிருந்து கட்டாயமாகச் செலுத்தப்படும் காணிக்கைதான் வரி' எனப் பாஸ்டபிள்[4] விளக்குகிறார். பேராசிரியர் டாஸிக்கு (Prof Taussig)[5] கூறுவது போல, 'அரசினரால் வசூலிக்கப்படும் பிற கட்டணங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் வரியின் சாரமாவது, வரி செலுத்துவோருக்கும் அரசினருக்கும் இடையே நேரிடையான பிரதிப்பயன் இன்மையே (Absence of direct quid pro quo).' இவ் விளக்கங்களிலிருந்து (அ) ஒரு வரி கட்டாயக் காணிக்கை என்பதும், (ஆ) ஒருவரின் செல்வத்திலிருந்து அது கட்டாயமாக வசூலிக்கப்படுவதால் அவர் ஓரளவு தியாகம் செய்ய வேண்டியிருக்கிறது என்பதும், (இ) அரசினரின் பொதுவான சேவைக்காக வரி தண்டப்படுகிறது என்பதும், (ஈ) ஒரு பிரத்தியேகச் சேவைக்காக வரி செலுத்தப்படவில்லை என்பதும், (உ) ஒரு வரியைப் பணமாகவோ, பண்டமாகவோ, சேவையாகவோ தண்டலாம் என்பதும் அறியக் கிடக்கின்றன. (ஏனெனில், செல்வம் என்ற சொல் பணத்தை மட்டுமன்றிப் பரிவர்த்தனை மதிப்புள்ள எல்லாப் பண்டங்களையும்

[1] Alfred G. Buehler, 'Public Finance', p. 325, 326.
[2] L. L. Plehn, 'Introduction to Public Finance', p. 59.
[3] Antonio de Vitti de Marco, 'First Principles of Public Finance', p. 113.
[4] C. L. Bastable, 'Public Finance', 3rd Edition, 1922, p. 263.
[5] F. W. Taussig, 'Principles of Economics', p. 485.

சுட்டுகின்றது). சிறப்பாக நாம் மனத்தில் இருத்த வேண்டியது, ஒரு வரியில் நேரிடையான கைம்மாறு இல்லை என்பது. அதாவது தனியார் ஒருவர் செலுத்திய வரியும், அவர் அரசினிடமிருந்து பெற்ற ஆதாயமும், அல்லது அரசு அவருக்கு ஆற்றிய சேவையும் சமமானவையல்ல. வரியின் சிறப்பான கூறுவது: அரசின் சேவை அல்லது பொது மக்களுக்குக் கிடைக்கும் பயன் ஆகும். இவற்றின் பெறுமானத்தை அறுதியிட்டவும் இயலாது; இவை ஒவ்வொரு குடிமகனுக்கும் ஒரே அளவினதாக இருக்கும் என்று கூறவும் முடியாது.

### வரி ஒழிந்த வருவாய் மூலங்கள் (Non-Tax Sources of Revenue)

கடந்த இரண்டு உலகப் போர்களுக்கு முன்பு, வருவாயின் மூலங்களான வரிகளுக்கு ஒவ்வொரு நாட்டின் நிதிய அமைப்பிலும் ஒரு முக்கிய இடம் இருந்தது. இதற்கு இரண்டு காரணங்கள்: (அ) அரசு ஆற்ற வேண்டிய அலுவல்கள் ஒரு வரம்புக்கு உட்பட்டிருந்தமையால், அரசு வரி ஒழிந்த வருவாய் மூலங்களைப் பற்றிக் கவலை கொள்ளவில்லை. (ஆ) மக்களின் பொருளாதார வாழ்க்கையில் அரசின் தலையீடு அதிகம் இல்லை. அரசு ஒரோ வழிதான் வாணிகத்தையோ, வேறு தொழில்களையோ ஏற்று நடத்தியது. இரண்டு உலகப் போர்களுக்குப் பின்பு நிலைமையில் ஒரு பெரிய மாறுதல் நேர்ந்தது. அனைத்து அரசுகளின் அலுவல்களும் அதிகரித்தன. இவ்வலுவல்களைச் செவ்வனே ஆற்ற அவற்றுக்கு அதிக வருவாய்கள் தேவைப்பட்டன. வரி விதிப்பின் வாயிலாக ஓரளவு தான் வருவாய் பெற முடிந்தது; அல்லாமலும் வரிகளைத் தாறுமாறாக அதிகரித்தால் சேமிப்புக்கும், உற்பத்திக்கும் குந்தகம் ஏற்படும். பொருளாதார வாழ்க்கையில் தலையிடுவது பற்றிய அரசின் கருத்துகளும் மாறின. ஒவ்வொரு அரசும் பல தொழில்களின் நிருவாகத்தையும் தன் கை வசப்படுத்தியது. கம்யூனிச நாடுகளில் அனைத்துத் தொழில்களும் அரசின் உடைமையாயின், முதலாளித்துவ நாடான பிரிட்டனில் கூட தொழில்களில் ஏறக்குறைய 10% அரசுக்குச் சொந்தம். இந்தியாவிலும் அரசுத்துறை (பொதுத்துறை)யின் எல்லைகள் பரவலாக்கப்படுகின்றன. இவை யாவற்றுலும் முதலாளித்துவ நாடுகளிலும் கம்யூனிஸ்டு நாடுகளிலும் வரி ஒழிந்த வரி மூலங்களின் முக்கியத்துவம் அதிகரித்துள்ளது. எல்லா நாடுகளும் வரி ஒழிந்த வரி மூலங்களிலிருந்து கணிசமான அளவு வருமானத்தைப் பெறுகின்றன. சோவியத் யூனியன் இவ்வினங்களிலிருந்து 90% வருமானத்தைப் பெறுகிறது. வரி விதிப்பிலிருந்து 10% வருமானத்தையே சோவியத் யூனியன் பெறுகிறது. ஜப்பான், அமெரிக்க ஐக்கிய நாடுகள், தென்ஆப்பிரிக்கா, மத்தியக் கிழக்கு நாடுகள்

இவை யாவும் தங்கள் வருமானத்தில் 33%-யும், கானடாவும், ஃபிரான்சும் தங்கள் வருமானத்தில் ஏறக்குறைய 25%யும் வரி ஒழிந்த பிற வருவாய் இனங்களிலிருந்து பெறுகின்றன. இந்தியா தன் வருமானத்தில் 37.6%-ஐ வரி ஒழிந்த மூலங்களிலிருந்து பெறுகிறது.[1]

வரி ஒழிந்த வருவாய் மூலங்களின் முக்கியத்துவம் அதிகரித்ததற்கான காரணங்கள் (causes of increasing importance of Non-tax Sources of Revenue.)

1. இவ்வினங்கள் நெகிழ்ச்சி உள்ளனவாக இருக்கின்றன. இவ்வினங்களிலிருந்து அரசு தனக்கு வேண்டிய வருவாயைப் பெற்றுக் கொள்ளலாம். ஆனால், வரி மூலங்களிலிருந்து கிடைக்கும் வருவாய் ஒரு வரம்புக்கு உட்பட்டது. 2. உற்பத்தியையும், சேமிப்பையும் வரி ஒழிந்த மூலங்கள் பாதிப்பதில்லை. ஒரு வரம்புக்கு மேல் வரி விதித்தால் உற்பத்திக்கும், சேமிப்புக்கும் குந்தகம் ஏற்படுகிறது. 3. வரி ஒழிந்த வருவாய் மூலங்களின் துணை கொண்டு, அரசு பொருளாதாரத்தைச் சிறந்த முறையில் ஒழுங்குபடுத்தலாம், கட்டுப்படுத்தலாம்.

வரி ஒழிந்த வருவாய் மூலங்களை மூவகையாகப் பிரிக்கலாம். அவை வருமாறு: 1. வாணிப வருவாய் (Commercial revenue), 2. நிருவாக வருவாய், 3. மானியங்கள், கொடைகள்.

வாணிப வருவாய்

அரசு பண்டங்கள் அல்லது பணிகளை விற்கும் பொழுது அவற்றிற்கு ஒரு கட்டணம் வசூலிக்கின்றது. இவ் வருமானம் தான் வாணிப வருவாய் எனப்படுகிறது. டெயிலரின்[2] கூற்றுப்படி 'அரசு உற்பத்தி செய்த பண்டங்களுக்கும், பணிகளுக்கும் செலுத்தப்படும் விலைகளைத்தான் நாம் வாணிப வருவாய் என்கின்றோம். தபால் கட்டணம், சுங்க வரிகள், அரசு கிரடிட் கார்ப்பரேஷன்களிலிருந்து வாங்கிய கடன்களுக்குச் செலுத்தும் வட்டி, அரசுக் கல்வி நிலையங்களுக்கு மாணக்கர்கள் செலுத்தும் சம்பளம், அரசின் கடைகளில் விற்கப்படும் மதுவுக்குத் தரப்படும் விலை, உபரியான போர்த்தளவாடங்களுக்குத் தரப்படும் விலைகள், அரசு உற்பத்தி செய்து வழங்கும் மின்சாரத்திற்குச் செலுத்தும் கட்டணம், இவை போன்றவை வாணிப வருவாய் ஆகும்.

[1] Report of the Taxation Enquiry Commission, 1953-54, Vol. I. p. 171
[2] Taylor, 'The Economics of Public Finance', p. 251.

வாணிப வருவாய்க்கும், வரிகளுக்கும் உள்ள வேறுபாடு களாவன : 1. இக் கட்டணத்தை யாவரும் செலுத்த வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. யாராவது ஒருவர் இப் பண்டத்தை அல்லது பணியை வாங்கினுல்தான், இக் கட்டணத்தைச் செலுத்த வேண்டும். 2. ஒருவர் செலுத்தும் கட்டணத்திற்கும், அதற்குக் கைம்மாருக அவர் பெறும் ஆதாயத்திற்கும் இடையே தோராய மான ஒரு உறவு இருக்கிறது. உதாரணமாக, ஒருவர் உப யோகிக்கும் தண்ணீரின் அளவைப்பொறுத்தே, அவர் நகராட்சிக் கழகத்திற்குச் செலுத்த வேண்டிய கட்டணம் அமைந்திருக்கிறது.

### நிருவாக வருவாய்

'தன்னுடைய பொதுவான பணிகளை ஆற்றும் பொழுது அரசு குறிப்பிட்ட தனியார்களுடன் தொடர்புகொள்கிறது.' அப்பொழுது வசூலிக்கப்படுபவையே நிருவாக வருவாய் ஆகும். நிருவாக வருவாய்களில் கட்டணங்கள் (fees), உரிமங்கள் (licences), பறிமுதல்கள் (forfeitures), உயில் எழுதப் பெருத வாரிசு இல்லாதவர் உடைமை அரசினைச் சேர்தல் (escheats), பிரத்தியேகத் தீர்வைகள் (special assessments) இவை யாவும் அடங்கும்.[1] இவற்றைச் சிறிது விரிவாகக் காண்போம்.

### கட்டணம் (Fees)

ஹெச். ஸி. ஆடம்ஸின்[2] கருத்துப்படி 'ஒரு பிரத்தியேகச் சேவையைச் செய்யும் தருணத்தில் கட்டணம் வசூலிக்கப்படு கிறது. சில அரசு அலுவல்களுடன் தற்செயலாகத் தொடர்பு பூண்டதால், இச் சேவை முகிழ்த்திருக்கலாம்.' கட்டணமும் வரியைப் போன்று கட்டாயமாகச் செலுத்த வேண்டியதே. ஆயினும், ஒரு பணியை ஒருவர் நுகரும் பொழுதுதான் கட்டணத் தைச் செலுத்த வேண்டியிருக்கும். ஆனுல், வரியும் கட்டணமும் பொது நோக்கங்களுக்காகவே செலுத்தப்படுகின்றன. ஒருவர் நீதி மன்றத்திற்குக் கட்டணம் (court fees) செலுத்தினுல் அதற்குப் பிரதியாக அவருக்கு நீதி கிடைக்கிறது. தபால், தந்தி, கட்டணங்களும், பதிவுக் கட்டணங்களும் பிற உதாரணங்களாகும்.

### உரிமக் கட்டணங்கள் (Licence Fees)

'மிகுதியும் புலன்களால் அறியப்படத் தக்கதாகவும் திட்ட வட்டமாகவும் செய்யப்படும் பணிக்காக அல்லாமல், ஒரு பணியைச்

[1] Taylor, 'The Economics of Public Finance,' p. 250.

[2] H. C. Adams, 'The Science of Finance,' Newyork. Holt, 1906, p. 226

வாரிசு இல்லாது இறந்தவரின் உடைமை அரசைச் சேரும். இது escheat எனப்படும்.

செய்வதற்கான அனுமதி அல்லது சலுகையைக் கோரி, அரசுக்குச் செலுத்தப்படுவதே உரிமக் கட்டணமாகும் என்று லட்ஸ் (Lutz) [1] கூறுகின்றார். ஆகவே, உரிமக் கட்டணத்தைச் செலுத்தியதனுல், அதைச் செலுத்தியவருக்கு யாதொரு பணியையும் அரசு செய்ய வில்லை என்பது தெளிவு. இக்கூறு கட்டணத்தில் (fee) இல்லை. (உ-ம்.) இறக்குமதி உரிமக் கட்டணங்கள். சினிமா கொட்டகை நடத்துவதற்கும், மோட்டார்கார், பேருந்து, சரக்கு உந்து இவற்றை வைத்திருக்கவும், பீடி, சுருட்டு, சிகரெட் இன்னும் பிற புகையிலைப் பண்டங்களை விற்கவும், துப்பாக்கி வைத்திருக்கவும் உரிமக் கட்டணங்கள் வசூலிக்கப்படுகின்றன. உரிமக் கட்டணத்தை வசூலிப்பதன் நோக்கமாவது, பல பொருளியல் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்துவதும், கட்டுப்படுத்துவதும் ஆகும். இந் நோக்கம் கட்டணத்தில் காணப்படவில்லை. உதாரணமாகக் காரோட்டு வதற்கு உரிமம் வாங்க வேண்டும் என்று கட்டாயப்படுத்து வதற்குக் காரணம், காரோட்டத் தெரியாதவர்கள் காரோட்டக் கூடாது என்பதே.

### பிரத்தியேகத் தீர்வை (Special Assessment)

டாக்டர் டால்டன் [2] கூறியாங்கு பிரத்தியேகத் தீர்வை என்பது அமெரிக்கரின் கண்டு பிடிப்பு. 'பொதுமக்களின் நலனுக்காக அரசு மேற்கொள்ளும் செலவுகளினுல் தனியார்களின் உடைமைக்குச் சிறப்பு அபிவிருத்தி ஏற்படுகிறது என்றும், இச் செலவைச் சரிக் கட்ட அரசு தனியார்கள் பெறும் ஆதாயங்களின் வீதாசாரத்திற்கு ஏற்றவாறு வரி விதிக்கிறது என்றும், இதைத்தான் பிரத்தியேகத் தீர்வை என்று குறிப்பிடுகிறோம்' என்றும், பேராசிரியர் ஸெலிக் மென் [3] கூறுகிறார். உதாரணமாக, ஒரு அணைக்கட்டைக் கட்டு வதன் மூலம் புதிதாகச் சில நிலங்களுக்குப் பாசன வசதி கிடைக் கிறது. இதனுல் நிலக்கிழார்களும் ஏற்கனவே கிடைத்த விளைச்சலை விடக் கூடுதலான விளைச்சலைப் பெறுகிறார்கள். ஆகவே, அரசு அவர்களின் மீது ஒரு வரியைப் பிரத்தியேகமாக விதித்து, அணையைக் கட்டுவதற்கு ஆன செலவின் பெரும் பகுதியை வசூலிப்பது முறையேயாகும். இவ் வரியையே நாம் பிரத்தியேகத் தீர்வை என்கிறோம். இடைக்காலத்தில் இம்மாதிரியான பிரத்தி யேகத் தீர்வைகளை, ரோம், இங்கிலாந்து, ஃபிரான்ஸ் ஆகிய நாடுகள் வசூலித்தன.

[1] Lutz, 'Public Finance' p. 293.

[2] Dalton 'Principles of Public Finance', p. 27.

[3] Seligman, 'Essays in Taxation', p. 432

**அபராதங்கள்** (Fines)

அபராதங்கள் அரசுக்கு ஒரு முக்கியமான வருவாய் மூலமல்ல. சட்டத்தை மீறுகிறவர்கள் பேரில் நீதிமன்றங்கள் அபராதங்கள் விதிக்கின்றன. அபராதங்கள் விதிப்பதன் முக்கிய நோக்கம் குற்றம் புரிவோர்களின் தொகையைக் குறைப்பதே ஒழிய, அரசுக்கு வருவாயைப் பெறுவதல்ல. வரியும், அபராதமும் கட்டாயமாக வசூலிக்கப் படுகின்றனவாயினும், அவை தம் நோக்கங்களில் வேறுபடுகின்றன. எந்த அரசும் அபராதத்தை விதித்துப் பெருந்தொகையைத் திரட்ட எண்ணுவதில்லை.

**வாரிசு இல்லாமல் இறந்தவரின் சொத்து அரசினைச் சேரும்** (Escheats)

இறந்தவர்கள் எழுதி வைத்து விட்டுச் சென்ற உயிலின்படி உடைமையை வாரிசுதாரர்களிடம் பகிர்வு செய்வதே அரசின் கடமையாகும். ஒருவர் உயில் எழுதி வைக்காமல் இறந்திருந் தாலும், கிரமப்படி அவருடைய அடுத்த வாரிசுதாரர் யாரோ, அவருக்கு அச் சொத்தைக் கொடுப்பதே அரசின் கடமையாகும். சில சமயம் ஒருவர் உயில் எழுதி வைக்காமல் இறந்து போகலாம்; அவருடைய வாரிசுதாரர் என்ற முறை கொண்டாடக் கூடிய ஒருவரும் இல்லாமல் இருக்கலாம். அக்காலை அரசே அச் சொத் துக்கு உரிமையாளர் ஆகிறது. ஆனால், இதுவும் அரசுக்குப் பெரும் வருவாயைத் தரக்கூடிய ஒரு இனமன்று.

**மானியங்களும், கொடைகளும்** (Grants and Gifts)

ஒரு நாட்டின் மைய அரசு, மாநில அல்லது மாகாண அரசு களுக்கு மானியங்கள் வழங்கலாம். இதேபோல் மாநில அரசுகளும் தல அரசுகளுக்கு மானியங்கள் வழங்குகின்றன. சில வேளைகளில் ஒரு நாடு இன்னொரு நாட்டிற்கு மானியங்கள் அளிப்பதும் உண்டு. பெரும்பாலும் வளர்ச்சி பெற்ற நாடுகள் வளர்ச்சி குன்றிய நாடு களுக்கு மானியங்கள் அளிக்கின்றன. இம் மானியங்கள் இராணுவ உதவியாகவோ, தொழில் நுட்ப உதவியாகவோ, வளர்ச்சிக்கான உதவியாகவோ இருக்கலாம்.

வள்ளல்களும், நாட்டுப்பற்று மிக்குடையோர்களும் அரசுக்கு நன்கொடைகள் அளிக்கிறார்கள். இந் நன்கொடைகள் பெரும் பாலும் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், மருத்துவக் கூடங்கள், மருந்தகங்கள் இவற்றைக் கட்டுவதற்காகவும், வெள்ளம், தீ இவற்றால் அவதிப்படுகிறவர்களின் உதவிக்காகவும் அளிக்கப் படுகின்றன. பொதுவாக, யாரும் பொது நோக்கங்களுக்காக நன் கொடைகள் அளிப்பதில்லை. இந்தியாவில் ஆண்டுதோறும் உருபா

120 கோடி பெறுமானமுள்ள நன்கொடைகள் தனியார்களாலும், தனியார் நிறுவனங்களினாலும் அளிக்கப்படுகிறது. இந் நன் கொடைகள் பணமாகவும் இருக்கலாம்; பண்டங்கள் அல்லது கட்ட டங்களாகவும் இருக்கலாம். போர்க்காலங்களில் நன்கொடைகளின் எண்ணிக்கை பன்மடங்கு அதிகரிக்கிறது. நாட்டுப் பற்றினால் மிகுதியும் உந்தப்பட்டு அக்காலங்களில் மக்கள் அரசுக்குப் பெரு மளவில் நன்கொடைகள் தருகிறார்கள். 1942-இல் இருந்து 1945 முடிவதற்குள் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசு நன்கொடை யாக ஆறு மில்லியன் டாலர்களுக்கும் அதிகமான தொகையை பெற்றது. ரொக்க நன்கொடையுடன், போர் வீரர்களின் பொழுது போக்குக்காகச் சிற்றுண்டி வகைகளையும், செய்தித்தாள்களையும் அரசு பெற்றது. இந்தியா—பாகிஸ்தான் போரின்போது பல நடிகர் நடிகைகள் இலவசமாகப் போர் வீரர்கள் முன்னிலையில் நாடகங் களும், நடனங்களும் நடத்தியதும் நமக்கு நினைவிருக்கும்.

பொதுவாக, நன்கொடைகளையும், பரிசுகளையும் மக்கள் தாமாகவே மனமுவந்து அளிக்கிறார்கள். அதனால், அவர்கள் பெறும் ஆதாயம் ஒன்றும் இல்லை. ஆயினும், சில வேளைகளில் அரசு கட்டாயப்படுத்தியும் நன்கொடைகளை வாங்குவது உண்டு. நன்கொடைகளுக்குப் பிரதியாக, பல்வேறு ஆதாயங்களைச் செய் வதாக அரசு உறுதிமொழி தருவதும் உண்டு. பெரும்பாலும் போர்க்காலங்களில்தான் இங்ஙனம் நிகழும். ஆனால், இங்ஙனம் ஒரோவழிதான் நிகழும்.

### அரசு வருமானத்தின் வகைகள்

(அ) வரிகள் (ஆ) போரில் தோற்ற நாடுகளிலிருந்து வசூலிக் கப்படும் கப்பங்கள், நஷ்ட ஈடுகள், (இ) கட்டாயக் கடன்கள் (இடைக் காலத்தில் யூதர்களிடமிருந்து ஐரோப்பிய அரசர்கள் கட்டாயமாக வசூலித்தவை போன்றவை.), (ஈ) அபராதங்கள், ஒறுப்புக்கள் (penalties). அகாரணமாய் ரயிலை நிறுத்துகிறவர்கள் செலுத்தவேண்டியது உருபா 250 என்பது ஒறுப்புக்கு உதாரண மாகும். நீதி மன்றங்கள் விதித்தால் அபராதம் எனவும், பிற நிறுவனங்கள் விதித்தால் ஒறுப்பு எனவும் கூறப்படுகிறது. (உ) அரசு உடைமையான புறம்போக்கு நிலங்கள், காடுகள், அரசின் பங்குத் தொகைகள் இவற்றினின்று கிடைக்கும் வருவாய், (ஊ) முற்றுரிமை அல்லாத பொதுத் துறை நிறுவனங் களிலிருந்து கிடைக்கும் வருவாய், (உ-ம்.) சிந்திரி உரத் தொழிற் சாலையிலிருந்து டெல்லி அரசுக்குக் கிடைக்கும் வருவாய், (எ) பதிவு முதலான பணிகளுக்கு வாங்கப்படும் கட்டணங்கள், (ஏ) கடன்கள் வாயிலாக அரசுக்குக் கிடைக்கும் வருவாய், (ஐ) முற்றுரிமையாக

அரசினால் நடத்தப்படும் இருப்புப் பாதைகள், வான ஊர்திப் பணிகள், பேருந்துப் போக்குவரத்து முதலான பொதுத் துறைப் பிரிவுகளிலிருந்து கிடைக்கும் வருவாய், (ஒ) பிரத்தியேகத் தீர்வைகளிலிருந்து கிடைக்கும் வருவாய், (ஓ) மக்களின் நன்கொடை, (ஔ) உலோகமாக மாற்ற முடியாத காகிதப் பணத்தை அச்சிடுவதால் கிடைக்கும் வருவாய். அரசின் வரவினங்கள் பலவற்றுக்கும் இடையேயுள்ள வேறுபாடு சில சமயம் தெளிவாகப் புலனுவதில்லை. சில சமயம் வரிகளுக்கும் விலைகளுக்கும் இடையேயும், சில சமயம் வரிகளுக்கும் கட்டணங்களுக்கும் இடையேயும் வேறுபாடு காண்பது மிகவும் கடினம். இதே போன்று வரிகளுக்கும், அரசின் ஏகபோகத் தொழில்களிலிருந்து கிடைக்கும் வருவாய்க்கும் கட்டணங்களுக்கும் இடையேயும் தெளிவான வேறுபாடு காண்பது அரிது.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Philip E. Taylor, 'The Economics of Public Finance', Indian Edition, 2nd Reprint, 1970, p. 248, 263.
2. H. L. Lutz, 'Public Finance', 1947, Chapter X, p. 131, 140.
3. M. H. Hunter, 'The Problems of Classification, Public Expenditures and Revenues', American Economic Revenue, March, 1930.
4. A. L. Pigou, 'A Study in Public Finance', 1951, Chapter IV.
5. Dalton, 'Principles of Public Finance', p. 25, 31.
6. Seligman, 'Essays in Taxation', Chapter 14, p. 400, 432.
7. G. Findlay Shirras, 'The Science of Public Finance', p. 113, 120.

# 10. வரி விதிப்பு விதிகள்
## (The Canons of Taxation)

ஆடம் ஸ்மித் இயற்றிய விதிகள் வரி விதிப்புக்கு வழிகாட்டி யாக உள்ளன. அவை பொதுவாக விதிகள் என்று அழைக்கப் பட்டாலும், ஸ்மித் அவற்றைக் கூற்றுக்கள் (maxims) என்றுதான் பெயரிட்டார். அவைகள்தாம் பிட் (Pitt), பீல் (Peel), கிளாட் ஸ்டன் (Gladstone) என்பவர்கள் பிரிட்டனில் கொணர்ந்த வரிச் சீர்திருத்தங்களுக்கு அடிப்படையாகும். ஒரு சிறந்த வரித் திட்டத்தை வகுப்பதற்கு இப்பொழுதுகூட அவற்றை முன்மாதிரி யாகக் கொள்ளலாம். இவ் விதிகள் நான்கு கோட்பாடுகளை வலி யுறுத்துகின்றன.. அவை யாவன : சமத்துவம், உறுதிப்பாடு, வசதி, சிக்கனம்.

### 1. சமத்துவ விதி (The Canon of Equality) [1]

'அரசின் ஆதரவிற்காக ஒரு நாட்டின் குடிமக்கள் யாவரும், கூடுமானவரையில் தங்கள் ஆற்றலுக்கு ஏற்றவாறு வரி செலுத்த வேண்டும்', அதாவது அரசின் பாதுகாப்பின்கீழ் எவ்வளவு வரு வாயைத் துய்க்கின்றார்களோ அதற்கேற்ற வீதாசாரத்தில் வரி செலுத்த வேண்டும்.

### 2. உறுதிப்பாட்டு விதி (The Canon of Certainty)

'ஒவ்வொருவரும் செலுத்த வேண்டிய வரித்தொகை தெளி வாகவும், எதேச்சாதிகாரம் இன்றியும் இருக்க வேண்டும். வரித் தொகையைக் கட்ட வேண்டிய காலம், செலுத்த வேண்டிய முறை, கட்ட வேண்டிய தொகை இவை அனைத்தும் வரி செலுத்து வோருக்கும், பிறருக்கும் தெளிவாகவும், ஐயத்திற்கு இடமின்றியும் இருக்க வேண்டும்.

[1] Adam Smith. 'The Wealth of Nations'. Vol. II. p. 350.

3. **வசதி விதி** (The Canon of Convenience)[1]

'ஒவ்வொரு வரியும் செலுத்தப்பட வேண்டிய காலம் அல்லது செலுத்தப்பட வேண்டிய விதம் வரி செலுத்துவோருக்கு வசதியாக இருக்கும்படி விதிக்கப்பட வேண்டும்.'

4. **சிக்கன விதி** (The Canon of Economy)[2]

'ஒவ்வொரு வரியும் அரசின் கருவூலத்திற்கு எவ்வளவு தொகையைக் கொணர்கின்றதோ, அதைவிடக் குறைவாகவே அதன் வசூலுக்குச் செலவிட வேண்டும். வரி வசூலிப்பதற்கு அதிகம் செலவு பிடிக்கக் கூடாது. வரியால் தொழிலுக்கோ அல்லது சேமிப்புக்கோ ஊறு நேரக் கூடாது; வரி செலுத்துவோருக்கு வரியால் தண்டனையோ, தொல்லையோ, எரிச்சலோ ஏற்படாதவாறும் இருக்கவேண்டும்.

இவ் விதிகளில் தலையாயது முதலாவது விதி; அதாவது சமத்துவ விதி. இவ்விதிதான் அடிப்படையானது; வரியமைப்பு முழுதுக்கும் இவ்விதி பொருந்தும். 'செலுத்தவேண்டும்' என்ற சொற்றொடரால் வரி விதிப்பதற்கான அரசியல் காரணமும், 'அரசின் பாதுகாப்பு' என்ற சொற்றொடரால், அரசு மக்களுக்கு ஆற்றும் சேவைகளும் புலனாகின்றன. மேலும், ஆற்றலுக்கு ஏற்றவாறு செலுத்துதல் என்பதால், வரிப்பளு எவ்வகையில் நேர்மையாகப் பகிர்வு செய்யப்பட வேண்டும் என்பதும் தெளிவாகிறது. ஏனைய மூன்றும் போதிய வருமானத்தைப் பெறுவதற்காக ஒவ்வொரு வரியை விதிக்கும் போதும் அரசு கடைப்பிடிக்க வேண்டிய பொருளியல் விதிகள். அவற்றை நிருவாகக் கட்டளைகள் எனலாம்.

**கோட்பாடுகளிடையே மோதல்** (Conflict of Principles)

நடப்பில் சில வேளைகளில் இந் நான்கு கோட்பாடுகளையும் தமக்குள் முரணில்லாதவாறு ஒன்றுபடுத்துவது கடினமாக இருக்கின்றது. எடுத்துக்காட்டாக, இறக்குமதி வரி வசதியான வரி தான். இருந்தாலும், அது நேர்மையானது என்றோ அல்லது சிக்கனமானது என்றோ கூற இயலாது. வருமான வரி சமத்துவ விதிக்கு ஒத்திருக்கிறது. ஆனால், வசதி விதிக்கு முரணாக இருக்கிறது. இக் கோட்பாடுகளிடையே முரண்பாடு காணப்பட்டால், சிறந்தன அல்லாதவற்றை ஒதுக்கி, மிகச் சிறந்த விதியை ஏற்றுக் கொள்ளுவது வழக்கமாகும். 'வரி விதிக்க வேண்டிய எல்லாப்

[1] அதே நூல், பக்கம் 351.

[2] Adam Smith, 'The Wealth of Nations', Vol. II. p. 351.

பண்டங்களின் மீதும் வரி விதித்துத் தீர்ந்து போனாலும், நெருக்கடி காரணமாகப் புதிய வரிகளை விதிக்க வேண்டிய முடை அரசுக்கு ஏற்பட்டால், பொருத்தமில்லாத பண்டங்களின்மீது வரி விதித்துத் தான் ஆக வேண்டும். சிக்கனமாகச் செலவு செய்தும், தன்னுடைய சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்காகப் போரில் இறங்க வேண்டியும், போரை நடத்துவதற்காகப் பெரும் கடன் வாங்கவும் நேரிட்டால், அப்பொழுது அரசு வாழ்க்கைக்கு இன்றியமையாத பண்டங்களின் மீதும் வரி விதித்தாலும், அக் குடியரசின் விவேகத்தைக் குறை கூறக் கூடாது. தங்கள் நாடுகளுக்குள் கடல் புகாது இருக்கவும், தாங்கள் தொடர்ந்து வாழ்வதற்கும் அதிகமாகச் செலவு செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்தில் ஹாலந்து (Holland), ஸீலந்து (Zealand) போன்ற நாடுகள் உள்ளன. இச் செலவுகளே அவற்றின் வரிப்பளுவை அதிகரிக்கக் காரணங்களாகும் (ஆடம் ஸ்மித்).'[1] அதிகரித்துக் கொண்டு போகும் செலவைச் சமாளிப்பதற்குப் புதிய வரித்துறைகளைக் கண்டு பிடிக்க வேண்டிய அவசியம் ஒரு நிதியமைச்சருக்கு உண்டு. அரசியலில் செல்வாக்குப் படைத்த வரி செலுத்துவோர்களிடமிருந்து எதிர்ப்பு இன்றி ஒரு வரியின்மூலம் அதிக வருவாயைப் பெற முடியும் என்றால், அவ்வரிக்கு ஒரு சிறந்த வரிக்கு இருக்க வேண்டிய எல்லாப் பண்புகளும் உள்ளன எனலாம். மறைமுக வரிகள் யாவும் இதையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. மறைமுக வரிக்கு எதிர்ப்புச் சிறிதுதான் இருக்கும். மனு என்பவர் தம்முடைய மனுதருமம் என்னும் நூலில் 'அட்டை, கன்றுக் குட்டி, தேனீ முதலியவை தங்கள் உணவைச் சிறிது சிறிதாகச் சேமிப்பது போல, அரசனும் வரியைச் சிறிது சிறிதாக வசூலிக்க வேண்டும்' என்று கூறுகின்றார். 'தன்னுடைய குடிமக்களைத் தன் சக்திக்கு ஏற்றவாறு சிறந்த முறையில் பாதுகாத்தால் நெருக்கடியான காலங்களில், குடிமக்களின் வருமானத்தில் அல்லது சொத்தில் நாலில் ஒரு பங்கை வரியாகப் பெறலாம். இருந்தாலும், மிகுந்த பேராசையினால் தனக்கு அடித்தளமாக உள்ளதையோ அல்லது குடிமக்களுக்கு அடித்தளமாக உள்ளதையோ அவன் அறுக்கக் கூடாது' என்றும் கூறியிருக்கிறார். அதாவது அளவுக்கு மீறிய வரிகளை விதித்து அரசன் குடிமக்களின் அதிருப்திக்கு ஆளாகக் கூடாது.

### திறனாய்வு

இக் கூற்றுக்களைச் சிலர் அளவுக்கு மீறிப் புகழ்கிறார்கள். சிலர் கடுமையாகத் தாக்குகிறார்கள். பேராசிரியர் பிண்டிலே ஷிர்ராஸ் (Professor Findlay Shirras)[2] 'வரி விதிப்புப் பற்றிய இக்கூற்றுக்கள்

[1] Adam Smith, 'The Wealth of Nations', Vol. II, p. 439.

[2] Findlay Shirras, 'The Science of Public Finance', p. 121, 123.

அரசு நிதியம் பற்றிய எவ்வகையான விளக்கத்திற்கும் ஒரு இன்றி யமையாத உறுப்பாகும்' என்று கூறுகிருர். 'கோன் (Cohn) என்பாரும், வாக்கர் (Walker) என்பாரும், நேர்மையற்ற முறையில் அழிவு பயக்கத்தக்க திறனுய்வுகளைக் கூறினுலும் ஸ்மித்தின் விதிகளைச் சிறந்தவை என்று பாராட்டுவது பொருத்தமேயாகும். இக் கால ஆசிரியர்கள், சிறப்பாகக் கார்னியர் (Garnier), ரோஷர் (Roscher), ரிக்கா ஸாலர்னே (Ricca Salerno), வாக்னர் (Wagner) போன்றவர்கள், ஒரு சிறந்த வரி விதிப்பு முறையின் சிறப்பியல்பு களைப் பற்றிய விதிகள் அல்லது கட்டளைகளை அறுதியிடுவதற்கு முனைந்தனர். இருப்பினும், ஆடம் ஸ்மித் இக் கோட்பாடுகளைத் தெளிவான எளிய விதிகளாகச் சுருக்கிக் கூறியது போல எந்த ஒரு மேதையும் கூறியதில்லை. முந்திய ஆராய்ச்சிகளுக்கு முற்றும் ஒரு புதிய திருப்பத்தை அவருடைய பரந்த உள்ளம் கொடுத்தது. அவருக்குப் பின் வந்தவர்கள், இக் கோட்பாடுகளைத் திருத்து வதிலோ அல்லது நிதிய அறிவியலில் அவை வகிக்கும் உயரிய இடத்திலிருந்து அவற்றை அகற்றுவதிலோ, கணிசமான அளவு வெற்றி பெறவில்லை.'

வாக்கர் கூறுவதாவது: 'ஆங்கிலேயப் பொருளியல் அறிஞர்கள் இக் கூற்றுக்களுக்கு அதிக முக்கியத்துவம் அளித் திருக்கின்றனர். அவை முக்கிய உண்மைகளைத் தம்முள் கொண் டிருப்பதாகக் கருதி, அவற்றை மீண்டும் மீண்டும் மேற்கோளாகக் காட்டியிருக்கின்றனர். இருப்பினும், அவற்றை ஒருவர் ஆராய் வாராகில், அவை மிகச் சாமானியமானவை (trivial) என்பதைக் காண்பார். மிகப் புகழ் வாய்ந்த முதலாவது விதியை தூள்தூளாகப் போகாத வண்ணம் சிறிய சோதனைக்கு உட்படுத்துவதும் முடியாது.' வாக்கர் 'அரசின் பாதுகாப்பு' என்ற சொற்கள் வேண்டாதவை என நினைக்கிருர். ஆடம் ஸ்மித்துக்காகப் பரிந்து பேசுவோர் இச் சொற்றெடர் பல்வேறு நாடுகளில் சொத்துக்களை வைத்திருக்கும் தனியார்களைக் குறிக்கின்றது எனவும், ஸ்மித் இங்கு இரட்டை வரி விதிப்பைக் (double taxation) கண்டிக்கிருர் எனவும் கூறுகிருர்கள். 'ஸ்மித்தின் விதிகள் சாதாரணமானவை என்பது உண்மையே. ஆனுல், பொதுவான விதிகள் வேறு எவ் வகையிலும் இருக்க முடியாது' என்பது பாஸ்டபிளின்[1] கூற்று. இக் கூற்றுக்கள் ஓரளவு நீதி பற்றியதாகவும், ஓரளவு பொருளியல் பற்றியதாகவும், ஓரளவு அரசியல் சட்டத்தைப் பற்றியதாகவும் இருப்பதாகச் சிலர் கூறுகிருர்கள்.

'இவ்விதிகள் ஒரு நூற்றுண்டு காலத்திற்கு மேலாகவே பொருளியல் சிந்தனைக்கும், போதனைக்கும், உண்மையில்

[1] Bastable, 'Public Finance', p. 420.

பாராட்டத் தக்க சேவைகள் செய்திருக்கின்றன. ஆடம் ஸ்மித்தின் தெளிவான சொற்றொடர்களில், இக் காலத்திய மிக விரிவான போதனைகளின் சாரம் காணக் கிடக்கின்றது என்று அடிக்கடி பேசப்படுகிறது. ஆயினும், இக் காலத்திய நம் சிக்கல்களிடையே அரசின் கடமைகள், மனிதனின் கடமைகள் இவை யாவும் இந் நான்கு வாக்கியங்களுள் அடங்கியுள்ளன என்று வலியுறுத்த முடியாது. 'அமெரிக்கா செல்ல வேண்டுமானால் மேற்கே திரும்பி நேராகச் செல்லுங்கள்' என்ற சிறந்த அறிவுரையைக் கொலம்பஸ் சொல்லலாம். ஆனால், அது நியூயார்க்கைக் கண்டு பிடிக்க முனையும் மாரிடானியாவுக்குத் [1] தெளிவான வழி சொல்லியதாக ஆகாது' (ஸ்டாம்ப்).[2]

'இந் நாளில் சொல் ஒற்றுமை மட்டும் நமக்குத் தேவைப் படவில்லை; நமக்குத் தேவைப்படுவது நிதானமானப் பரந்த பரிசீலனையே ஆகும். கோட்பாடுகளின் தொகைகளைக் குறைப் பதைக் காட்டிலும் அவற்றின் தொகைகளைத், தற்காலத்திய நடைமுறையில் பிரயோகிப்பதற்கு ஏற்ற வகையில் பெருக்குவதே சாலும். இவ் விதிகளில், விவாதத்திற்கு உரியதாக ஒன்றும் இல்லாவிடினும், நம்முன் நிற்கும் பல கடினப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் முயற்சிக்கு இவை போதியவை ஆகா. இருந்தாலும், நம்முடைய சிற்றறிவுக்குப் பொருள் புலப்படுகின்ற வகையில், உண்மைகளைத் தெளிவாக்க் கூறியதொன்றே இவ் விதிகளிடத்துக் காணப்படும் நல்ல அமிசங்களாகும்'[3] (ஸர் ஜோஸையா ஸ்டாம்ப்).

ஆடம் ஸ்மித்துக்குப் பின்னர் வந்த ஆசிரியர்கள் கீழ்க் காணும் விதிகளையும் ஒரு நல்ல வரியமைப்புக்கு வேண்டுமென்று இணைத்துள்ளார்கள்.

## 5. உற்பத்தித் திறன் விதி (The Canon of Productivity)

புதிதாக வரி ஒன்றை விதிக்க வேண்டுமெனில், அது போதிய வருவாயைக் கொடுக்கக் கூடியதாக இருக்க வேண்டும். ஆகையால், அதிக காலமும், செலவும் பிடிக்கும் பல சிறு வரிகளை வசூலிப்பதைக் காட்டிலும், ஒரே வரியை விதித்து அதிகமான வருவாயைப் பெறுவது நல்லது. இக் கோட்பாட்டை ஆடம் ஸ்மித்[4]

[1] மாரிடானியா ஒரு கப்பலின் பெயர். இதையும் லூஸிட்டானியா என்ற கப்பலையும் கட்டியவர்கள் குனார்டு ஸ்டீம் கப்பல் கம்பெனி. (Cunard Steam Ship Company.)

[2] Sir Josiah Stamp, 'The Fundamental Principles of Taxation', 1923, p. 3.

[3] Stamp, அதே நூல், பக்கம் 4.

[4] Adam Smith, 'The Wealth of Nations', Vol. II, p. 413.

ஒப்புக் கொண்டு பிரிட்டிஷ் ஏற்றுமதி, இறக்குமதி வரிகளைத் திருத்துவதற்கு யோசனைகள் கூறினர். பிறகு அது அரசினால் ஒப்புக்கொள்ளப்பட்டுப் பல சுங்கத் தீர்வைகள் நீக்கப்பட்டன. பல குறைக்கப் பட்டன. இச் சீர்திருத்தங்களின் பின்னரும் இவற்றிலிருந்து கிடைக்கும் வருவாய் குறையாமல் அதிகரித்தது. இவ் விதியைச் சிலர் போதுமான நிதிய விதி (Canon of Fiscal Adequacy) என்று கூறுவர். ஒரு வரியினால் கிடைக்கக் கூடிய வருவாய் குறுங்காலத்திலும் சரி, நெடுங்காலத்திலும் சரி போதியதாக இருக்க வேண்டும். பழைய வரிகள் நல்லன என்று கூறப்படுவதற்குக் காரணம் அவற்றிலிருந்து கிடைக்கும் வருவாய் கணிசமான அளவு இருப்பதாக நடைமுறையில் நிரூபிக்கப் பட்டதேயாகும். நெருக்கடியான காலங்களில், குறுங் காலத்தில் மட்டும் போதிய வருவாய் தரக் கூடியதாக ஒரு வரி இருந்தால் கூட நல்லதெனலாம். (உ-ம்.) வருமான வரியையும், மிகை இலாப வரியையும் விஸ்தரித்து இவ் வரிகளிலிருந்து விலக்கு அளிக்கப்பட்ட வருமானங்களையும், இலாபங்களையும் குறைத்ததாகும். சில சமயம் போர்க்காலத்தில் விதிக்கப்பட்ட வரிகள் சமாதான காலத்திலும் நெடுநாள் நிலைத்து நின்றன. இதற்கு உதாரணம் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் போர்க் காலத்தில் வருமான வரியை விதித்ததாகும். வருவாய் மூலங் களையே தூர்த்து விடக்கூடிய வரிகளை, இவ் விதியின்படி போடாமலிருப்பதே நல்லது.

## 6. நெகிழ்ச்சி விதி (The Canon of Elasticity)

நெருக்கடியான காலங்களில் அரசுக்கு அதிக வருமானம் வேண்டும். சில வரிகளின் வீதங்களை உயர்த்தினால் அதிக வருமானம் கிடைக்கக் கூடிய வாய்ப்பு இருக்க வேண்டும். அதேசமயம் அவற்றை வசூல் செய்வதற்கு அல்லது நிருவகிப் பதற்கு ஆகும் செலவு, வரியிலிருந்து கிடைக்கும் வருவாய் அதிகரிக்கும் அதே வீதத்தில் அதிகரிக்கக் கூடாது. இவ்வகை வரிகள் ஒவ்வொரு வரியமைப்பிலும் இடம்பெற வேண்டும். செல்வம் அல்லது மக்கள் தொகை அதிகரிக்கும் தோறும் இயல் பாகவே வரியின் தொகையும் அதிகரிக்குமானால், அதையும் இத் தலைப்பிலேயே சேர்க்கலாம். நெகிழ்ச்சிக்குச் சிறந்த எடுத்துக் காட்டு வருமான வரி. நெகிழ்ச்சியற்ற வரிக்கு உதாரணம்; இந்தியநிலவரி, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சொத்துவரி.

## 7. எளிமை விதி (The Canon of Simplicity)

வரியமைப்பு சாதாரண அறிவுடையோருக்கும் தெளிவாக விளங்கக் கூடியவாறு இருக்க வேண்டும். வேறு வகையாகச்

சொன்னால், வரியைச் செலுத்துவோருக்கும், வரியை நிருவகிப்பவருக்கும் வரி விதிப்பினால் ஏற்படும் அசௌகரியம் மிகக் குறைவாக இருக்கவேண்டும். வருமான வரிக்கு எதிரான திறனாய்வுகளில் தலையாயது அதன் சிக்கலே. விற்பனை வரியின் சிறந்த அமிசம் அதன் எளிமையே. வரியமைப்பில் இவ் வெளிமையைப் புகுத்துவது எளிதன்று. ஆயினும், சிறிது உன்னிப்பாகச் சட்டங்களை வகுப்பதன் மூலம் வரி குழப்பத்தைச் சிறிது குறைக்கலாம். ஒரு நாட்டின் பொருளாதாரம் வளர வளர அதன் வரியமைப்பு சிக்கலாக ஆவது இயற்கையே.

## 8. பல் வகைமை விதி (The Canon of Diversity)

ஒரு வரியமைப்பு பல்வேறுபட்ட வரிகளைக் கொண்டதாய் அமைந்திருக்க வேண்டும். வரிகளின் தொகையை அளவுக்கு மீறி அதிகரிப்பதையும், அல்லது ஒரே வரியை மட்டும் நம்பியிருப்பதையும் தவிர்க்க வேண்டும். 'என்னை ஒரு நல்ல வரி முறையை விளக்கச் சொன்னால், அதன் பளு எண்ணிறந்த புள்ளிகளின் மீது இலேசாகவும், ஒரு புள்ளியின்மீதும் கனமாகவும் இல்லாமலும் இருக்க வேண்டும் என்பேன்' என்று ஆர்தர் யங்[1] கூறினார். ஆனால், அளவுக்கு மீறிப் பல வரிகளை விதிப்பது நல்லதல்ல. (1) ஏனெனில், பல வரிகளை வசூல் செய்வதற்கு ஏராளமான ஊழியர்கள் வேண்டும்; ஏராளமான செலவும் பிடிக்கும். இது சிக்கன விதியை மீறியதாகும். (2) இவ்வித வரியமைப்பு மக்களுக்கு அதிகத் தொல்லையையும், எரிச்சலையும் கொடுக்கும் ஆதலால், இது வசதி விதியையும் மீறியதாகும். இம் முறையில் மொத்த வரிப்பளு குறைவாக இருக்கும் என்று கூற முடியாது. ஏனெனில், எண்ணற்ற சிறு பளுக்கள் சேர்ந்தால் ஒரு பெரிய பளுவாகும். டால்டன்[2] கூற்றுப்படி 'வரியிலிருந்து கிடைக்கும் வருமானத்தின் பெரும் பகுதிக்குச் சில திரண்ட வரிகளையே நம்பியிருப்பதிலேதான்' விவேகம் இருக்கிறது.

## 9. நெகிழ்வு விதி (The Canon of Flexibility)

மாறுதல்களை எளிதில் செய்யக்கூடியனவாக ஒரு வரியமைப்பு இருக்க வேண்டும். அரசியல் சட்டத்தைத் திருத்தாமலேயே, காலத்துக் கேற்ப, நிதிய மாறுதல்களைக் கொணரக் கூடியதாக அரசியல் அமைப்பு இருக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, பிரிட்டனில் இறப்பு வரிகள் ஒரு சாதாரண மசோதா பாராளுமன்றத்தில் இயற்றப்படுதல் போன்றே, விதிக்கப்பட்டு, நடை

[1] டாக்டர் டால்டன் மேற்கோளாக எடுத்தாண்டிருக்கிறார்.
Hugh Dalton, 'Principles of Public Finance', p. 45.46.

[2] அதே நூல், பக்கம் 46

முறையில் கொண்டு வரப்பட்டது. ஆனல், அமெரிக்க அரசியலமைப்பின்படி பல ஆண்டுகள் மைய அரசு நேர்முக வரிகளை விதிக்க முடியவில்லை. இதற்காக அரசியல் சட்டத்தைத் திருத்துவது இன்றியமையாததாயிற்று. புதிய வரிகளை விதிக்க வேண்டுவதன் நிமித்தம், பல அமெரிக்க மாநிலங்கள் தங்கள் தங்கள் அரசியல் சட்டங்களைத் திருத்த வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கின்றன. அரசியல் சட்டத்தைத் திருத்தாமல் வரியமைப்பைத் திருத்த முடியாமல் இருக்குமானல், வரிகளில் மாறுதல்களைச் சட்டசபைகள் கொணர முடியாது. இதனல் வரி செலுத்துவோரின் நலன்கள் பாதுகாக்கப்படாமல் போகின்றன. இதனல் வரிப் பளுவைப் பகிர்வதில் அநீதி ஏற்படுகிறது. இறுக்கமான வரி முறையால் அநீதியும், ஏற்றத் தாழ்வுமே விளைகின்றன.

வளர்வீத வரி – மனுவின் கூற்று: ஆடம் ஸ்மித் காலத்திற்கு ஏறக்குறைய ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்த இந்திய ஞானியும், அறநூல் ஆசிரியருமான மனுவின் விதியையும் இவ்விடம் தருதும்: 'வரிப்பளுவைச் சமமாகப் பகிர்வதால் விளையும் துன்பத்தைக் காட்டிலும் அவற்றின் பளுவை சமம் இல்லாத முறையில் பகிர்வது பெருந்தீங்கை விளைவிப்பதாகும். ஏனெனில், மிகக் குறைந்த அளவு வரி செலுத்துவோர் அடையும் துன்பம் அதிகமானது. வரிப் பளுவைச் சமமாக்க வேண்டும் என்றல், அது ஒவ்வொருவர்மீதும் சம அளவு துன்பத்தைத் தரும் வகையில் வகுக்கப் படவேண்டும். இதனை எண்களுக்கு உரிய வீதாசாரத்தாலேயே (Numerical Proportion) கொணர்தல் முடியாது. ஆண்டொன்றிற்கு 100 உரூபா வருமானம் உடைய ஒருவரின் வருவாயில் ஐந்தில் ஒரு கூறையோ அல்லது பாதியையோ வரித்தொகையாகப் பெறுவதால் அவர் அடையும் துன்பம், ஆண்டொன்றிற்கு 1,000 உரூபா வருமானம் உடைய வரிடமிருந்து, அதே அளவு வரியைப் பெறுவதைக் காட்டிலும் பெருந்துன்பத்தைத் தரும். ஆண்டொன்றிற்கு 10,000 உரூபா வருமானம் உடையவரிடமிருந்து அதேயளவு ($\frac{1}{5}$ அல்லது $\frac{1}{2}$) வரியைப் பெறுவதைக் காட்டிலும் ஆண்டொன்றிற்கு 100 உரூபா வருமானம் உடையவரின் வருமானத்திலிருந்து $\frac{1}{5}$ அல்லது $\frac{1}{2}$ பங்கை வரியாகப் பெறுவது இன்னும் பெருந்துன்பத்தைத் தரும்.'

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Bastable, 'Public Finance,' Book IV, Chapter IV

2. Findlay Shirras, 'The Science of Public Finance', Chapter XIII and XIV

# 11. வரி விதிப்பதன் நோக்கம்

## வரி விதிப்பதற்கான காரணங்கள்

நாட்டிலுள்ள அனைவரின் நலனுக்காகவும் அரசின் அலுவல்கள் நடத்தப் படுகின்றன. இவ் வலுவல்களைப் புரிவதற்கு அரசுக்குச் செலவு பிடிக்கிறது. இச் செலவைச் சரிக்கட்டுவதற்கு ஒவ்வொரு வரும் ஒரு தொகையை வரியாகச் செலுத்த வேண்டும் என்பது பகுத்தறிவுக்கு ஒத்ததே. எல்லோருடைய வருமானமும், சூழ் நிலைகளும் சமமாக இருக்குமானால், ஒரு நேர்மையான வரிமுறையில் ஒவ்வொருவரிடமிருந்தும் ஒரே தொகைப் பணத்தை வரியாக வசூலிக்கலாம். ஆனால், இக் காலச் சமுதாய அமைப்பில், வருமானத்தைப் பொறுத்த மட்டிலன்றி, சூழ்நிலைகளிலும் பெருத்த ஏற்றத் தாழ்வுகள் காணப்படுகின்றன. இதன் விளைவாக, வரி விதிப்பதில் பெருத்த இடர்ப்பாடும், வாதப் பிரதிவாதங்களும் தோன்றியிருக்கின்றன. இவற்றை விளக்கப் பல கருதுகோள் களும் எழுந்துள்ளன. இவற்றுள் சில, பல நாடுகளிலும், யாதா யினும் ஒரு வடிவில், ஏதாயினும் ஒரு காலத்தில் கடைப்பிடிக்கப் பட்டுள்ளன.

### 1. வரி விதிப்புப்பற்றிய நிதியக் கருதுகோள் (The Financial Theory of Taxation)

இக் கருதுகோளைப் புரிந்துகொள்வது மிகவும் எளிது. ஏனெனில் வரி விதிப்புக்கு இக் கோட்பாடு எந்த ஒரு இறுதி நோக்கத்தையும கற்பிக்கவில்லை. அரசுக்குத் தேவைப்படும் நிதியத்தைத் திரட்டுவதற்கு வரி ஒரு கருவியே என்பது இக் கருது கோளை விளக்குபவர்களின் கருத்து. இக் கருதுகோளில் அரசு செலவுகளின் நோக்கங்கள் பற்றிய பேச்சுக்கே இடமில்லை. அரசின் செலவின் நோக்கங்களை ஆட்சியாளர்கள் முடிவு செய் கிறார்கள். வேண்டிய பணத்தை விரைவாகவும், எளிதாகவும் பெறுவதே நிதியமைச்சரின் வேலை. அரசு பல கோடி உருபாக் களைப் போர்க்கப்பல்கள் கட்டுவதற்கோ, கல்விக்கோ, அல்லது

வயது முதிர்ந்தோரின் ஓய்வு கால ஊதியங்களுக்கோ செலவிடலாம். இந் நோக்கங்கள் பொருளாதார ரீதியில் விரும்பத்தக்கனவாகவும் இருக்கலாம்; விரும்பத் தகாதனவாகவும் இருக்கலாம். எவ்வாருயினும் வரியின் தன்மை மாறுவதில்லை. வரி செலுத்துவோரிடமிருந்து குறைந்த அசௌகரியத்துடன் பணத்தைப் பெறுவதற்காக உபயோகிக்கப்படும் ஒரு கருவியே வரியாகும். இக் கருதுகோள் சிலசமயம் வரி விதிப்பின் எரிச்சல் கருதுகோள் (Cynical Theory of Taxation) எனக் கூறப்படுகிறது. இதற்கு அடிப்படையாக அமைந்தது பிரஞ்சு அமைச்சர் கோல்பர்ட்டின் கூற்றுகும். அவர் 'மிகக் குறைந்த கூப்பாட்டுடன் வாத்தின் இறகுகளைப் பிய்க்க வேண்டும்'[1] என்று கூறினர்.

## தவருன ஒரு கருத்து

வருமானத்திற்காக மட்டும் வரி விதித்தல் என்பது தவருன கருத்தாகும். டால்டன் கூறுவது போல, 'வருமானத்தைத் திரட்டுவதுடன் வேறு பல விளைவுகளும் எல்லா வரிகளாலும் ஏற்படுகின்றன. வேண்டிய வருமானத்தைத் திரட்டுவதோடு, பொதுவாகச் சிறந்த விளைவுகளைத் தரும் வரிகளே சிறந்தனவாகும்'.[2] ஆயினும், வருமானத்திற்காக மட்டுமே வரி விதித்தல் என்ற கருத்து பிரிட்டிஷ் நிதியக் கொள்கை வரன்முறையில் ஆழமாகப் பதிந்திருப்பதால், 1894-ல் இறப்பு வரிகளைத் திருத்திய பொழுது ஹார்கோர்ட்டு (Harcourt) வேறு நோக்கங்கள் தமக்கு இல்லையென்று கூறினர். ஆயினும் அவருடைய கொள்கையால் ஏற்படும் இறுதி விளைவுகள், அறிவுடைய அனைவருக்கும் தெரிந்ததே. அது தான் பெரிய பண்ணைகளைச் சிறிது சிறிதாகத் துண்டாடுவது.

## திறனுய்வு

கூச்சல் இடுவோரின் வலிவைக் கொண்டே, நிதியமைச்சர், ஒரு வரியால் ஏற்படும் அசௌகரியத்தின் அளவைக் கணக்கிடக் கூடும். ஆனல், பெருங்கூச்சல் இடுகிறவர்கள் வரியால் மிகத் துன்புறுவோர் அல்லர். வரியைப் பற்றிய அறிவு விளக்கத்தோடு கூடிய கருத்து இல்லாதவிடத்து, எங்கெங்கு எதிர்க்கும் ஆற்றல் மிகக் குறைவாக உள்ளதோ அங்கங்கே மிக அதிகமான வரி விதிக்கப்படலாம். இது நீதியைப் புறக்கணிப்பதாக முடியும். இவ்விதமான சூழ்நிலையிலிருந்து எல்லாவிதமான கெடுதல்களும் தோன்றக் கூடும். வரி விதிப்பும் அதன் நோக்கங்களும் சரியானபடி ஆராயப்படாத நாட்களில் இவ்வகைக் கெடுதல்கள் தோன்றின.

[1] அதாவது ஒரு வரி விதிக்கப்பட்டதன் விளைவாக மக்கள் கிளர்ந்தெழுந்து ஆர்ப்பாட்டங்கள் செய்யக்கூடாது.

[2] Hugh Dalton, 'Principles of Public Finance', p. 14.

முடிவுரை

'வருமானத்திற்காக வரி விதித்தல் என்பது விக்டோரியா அரசியார் காலத்து ஓலமாகும். நாம் எல்லோரும், பணத்திற்காகத் திருமணம் செய்துகொள்வது தவறு எனவும், ஆனல், அதே சமயம் பணம் உள்ள இடத்தில் திருமணம் செய்து கொள்வது பாராட்டத்தக்கது எனவும் கேள்விப்பட்டிருக்கிறோம். அதே போல, வருமானத்திற்காக மட்டும் அல்லாமல், தண்டனை கொடுப்பது, அல்லது பண்ட நுகர்வைக் குறைப்பது என்பன போன்ற நோக்கங்களுக்காக வரி விதிப்பது, சில வேளைகளில் தவருனதாக இருக்கலாம். அவற்றை அபராதம் அல்லது தண்டனை என்றுதான் வழங்க வேண்டுமே தவிர, வரி என்று வழங்க முடியாது. ஆயினும், ஒரு வரியமைப்பின் மூலம் சிறந்தனவாகக் கருதப்படும் நோக்கங்களுக்கு அதைரியம் ஊட்டாமலும், தீய போக்கை விளைவிப்பனவற்றிற்கு நாட்டில் தைரியம் ஊட்டாமலும் வருமானத்தைத் திரட்டுவது என்று முடிவு செய்தால், நம்முடைய தெளிந்த பகுத்தறிவே இவ்வகை வரியமைப்புக்கான முகாந்திரமாகும்'. (ஸர். ஜோஸையா ஸ்டாம்ப்.[1])

பணியின் அடக்கச் செலவு கருதுகோள் (The Cost of Service Theory)

அரசு பொதுமக்களுக்குப் பல பணிகளைச் செய்கிறது. இப் பணிகளுக்கு ஆகும் செலவை மக்கள் வரிகளின் வாயிலாக அரசினுக்குத் தர வேண்டும் என்று இக் கருதுகோள் கூறுகிறது. பியூலர் (Buehler)[2] கூறுமாப்போல, 'ஒவ்வொருவருக்கும் அரசு ஆற்றும் பணிகளுக்கு ஆகும் செலவுக்கு ஏற்ப, செலுத்தப்படும் விலைகள் அல்லது கட்டணங்களே வரிகள் என்று பல்வேறு ஆசிரியர்களும் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள். இவ்வரசின் பணிகளைத் தங்கள் விருப்பம் போல் குடிமக்கள் ஏற்றுக் கொள்ளலாம் அல்லது தள்ளலாம் (நிராகரிக்கலாம்) என்ற கருத்தும் ஒரு வேளை இதில் பொதிந்திருக்கலாம். இவ்வாறு இக் கருதுகோளின்படி வரியும் விலையைப் போன்றதே. ஒருவர் அரசின் பணிகளைப் பயன்படுத்தாவிடில் அவரிடமிருந்து யாதொரு வரியும் தண்டக்கூடாது.

தற்கால வரி அமைப்பில் நிதியக் கருதுகோளுக்கு இடமில்லாதது போன்றே, இக் கருதுகோளுக்கும் இடமில்லை. முதலாவதாக, இக் கருதுகோள் தவருனது. ஏனெனில், இதன்படி ஒரு அரசின் உறுப்பினராயிருப்பது அவரவரின் விருப்பத்தைப்

[1] Sir Josiah Stamp, p. 170.

[2] Buehler, p. 377.

பொறுத்தாகும். ஆனால், நாம் அனைவரும் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் (கட்டாயமாக) அரசின் உறுப்பினர்கள்தாம். இரண்டாவதாக, வரி செலுத்துதல் என்பது ஒருவரின் விருப்பத்தைப் பொறுத்ததல்ல; கட்டாயமாகச் செலுத்தியே தீர வேண்டும். அரசின் பணிகளைக் கடுகளவேனும் பயன் படுத்தாதவர்களும் வரிகளைக் கட்டியே தீர வேண்டும். மூன்றாவதாக, அரசு ஆற்றும் பல்வேறுபட்ட பணிகளுக்கும், ஆள் ஒன்றுக்கு எவ்வளவு செலவு ஆகிறது என்பதைக் கணக்கிடுவது மிகவும் கடினம்; முடியாது என்று கூட கூறலாம். நான்காவதாக, பல்வேறுபட்ட அரசின் சேவைகளின் நோக்கம் ஏழைகளின் நலனைப் பேணுவதே ஆகும். (உ-ம்.) காசில் (இலவசக்) கல்வி, மருத்துவ வசதி பொன்றவை. இக் கருதுகோளைச் செயல்படுத்தினால், இச் சேவைகளின் நோக்கம் நிறைவேறாது. மேலும், இக் கருதுகோளின் படி வேலையிலிருந்து ஓய்வு பெற்றோர் தாம் பெறும் உதவித் தொகைகளை அரசினுக்குத் திருப்பித் தருவதுடன், இத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்காகும் செலவையும் ஏற்கவேண்டும். ஐந்தாவதாக, அரசு ஆற்றும் பணிகளில் பலவும் அனைவருக்கும் அல்லது ஒரு பகுதியினருக்கே ஒழியத் தனிப்பட்டவர்களுக்கல்ல. ஒரு குறிப்பிட்ட ஆளின் காப்புக்காக ஆகும் பாதுகாப்பு அல்லது ஊர்க்காவல் செலவைப் பிரித்து அறிவதும் முடியாதது. இறுதியாக, அனைவரும் ஏற்றுக்கொண்ட வரி பற்றிய விளக்கத்திற்கு, இக் கருதுகோள் முரணானது. ஏனெனில், வரி என்றாலே அதற்கு நேரிடையான கைம்மாறு கிடையாது என்பதுதான் பொருள். இக் கருதுகோளின்படி வரிக்கு இணையாக ஒரு கைம்மாறு கிடைக்கின்றது என்று ஆகின்றது. அது வரி பற்றிய விளக்கத்துடன் பொருந்துமாறு எங்ஙனம்?

இவ்வாறாக, இக் கருதுகோளைச் செயல்படுத்த முடியாது. 'அரசு அண்ணவியார்கள் பணியின் அடக்கச் செலவுக் கோட்பாட்டை, அஞ்சல், மின்சாரம் முதலான 'சேவைகளுக்குக் கடைப்பிடித்து, இச் சேவைகளின் விளைவுகளை இக் கோட்பாட்டுக்கு ஏற்ப அறுதியிடலாம். ஆயினும், சூட்சும அளவில் இக் கோட்பாடு எத்துணை நியாயமானதாகத் தோன்றினும், பரவலாகக் கடைப்பிடிக்க முடியாது' என்று டாக்டர் டால்டன் [1] கூறுகிறார். அரசினிடமிருந்து பணிகளைப் பொதுமக்கள் வாங்குவதால், இக் கருதுகோளைக் கொண்டல் கருதுகோள் (Purchase Theory) என்றும் கூறலாம்.

[1] Hugh Dalton, p.89.

**Purchase** - என்ற சொல்லுக்குத் தமிழில் கோடல் அல்லது கொள்ளல் என்று மொழி பெயர்க்கலாம். ஆயினும் ஒப்புமை ஆக்கம்பற்றி கொண்டல் என்றே மொழி பெயர்த்திருக்கின்றேன். கொண்டலுக்கும் பகுதி கொள் தான்.

**வரி விதிப்பைப் பற்றிய ஆதாய அல்லது கைம்மாறுக் கருதுகோள்**
(The Benefit or quid pro quo Theory of Taxation)

பணியின் அடக்கச் செலவு பற்றிய கருதுகோளினின்றும், இக் கருதுகோள் சிறிதே மாறுபட்டது. அதற்கும் இதற்கும் உள்ள ஒரு வேறுபாடாவது, இக் கருதுகோளில், பிரச்சினையை ஆதாயம் பெறுவோரின் கோணத்திலிருந்து அணுகுவதேயாகும். ஆதாயக் கருதுகோளில் வரி செலுத்துவோரின் கோணத்திலிருந்து பிரச்சினையை அணுகுகிறோம். பணியின் அடக்கச் செலவு பற்றிய கருதுகோளில் பிரச்சினையைப், பணியை விற்பவரின் அதாவது அரசின் கோணத்திலிருந்து அணுகுகிறோம்.

இக் கருதுகோளின்படி, அரசினிடமிருந்து தாங்கள் பெறும் ஆதாயத்திற்கு ஏற்ப, மக்கள் அரசுக்கு வரி செலுத்தவேண்டும். இக் கருத்து, பிரபுக்களுக்கு ஆற்ற வேண்டிய நில மானியச் சேவைகளுக்குப் பதிலாகப், பணம் செலுத்தும் பழக்கம் ஏற்பட்ட காலத்தில் தோன்றியிருக்கக் கூடும். மேலும், வரி விதிப்பதனால், சமுதாயத்திற்கு என்னென்ன பலன்கள் விளைகின்றன என்பதையும், வரி விதிப்பு அறத்தாறு உள்ளதா என்பதையும், இக் கருதுகோள் கவனத்தில் கொள்ளவில்லை. இந்தக் கூறில் இது நிதியக் கருதுகோளை ஒத்திருக்கிறது. மேலும், இக் கருதுகோளில் எவ்விதச் சீர்திருத்த அமிசமும் இல்லை. ஆனால், இக் கருதுகோளுக்கும், நிதியக் கருதுகோளுக்கும் உள்ள வேறுபாடு என்னவென்றால், இக் கருதுகோள் வருமானத்தை முற்றும் ஆய்வதுடன் அமையாது, தனியார்கள் செலுத்தும் வரித் தொகைக்கும், அதற்குக் கைம்மாறாக அவர்கள் பெறும் ஆதாயத்திற்கும் ஒரு தொடர்பை ஏற்படுத்த முயல்வதே ஆகும்.

ஜெர்மானிய ஆசிரியர்களான ஹ்யூகோ குரோஷியஸ் (Hugo Grotius), பியூபன்டார்ப் (Pufendorf) போன்றோரும், பிரிட்டனில் லாக் (Locke), ஸர் வில்லியம் பெட்டி (Sir William Petty), ஆடம் ஸ்மித் (Adam Smith) போன்றோரும், ஃபிரான்சில் ரூஸோவும், ஸிஸ்மாண்டியும் (Sismondi), ஆதாயக் கருதுகோளை ஆதரித்தனர். ஆடம் ஸ்மித்தின் நூலான நாடுகளின் செல்வம் (The Wealth of Nations) என்ற நூல் எழுவதற்கு ஒரு நூற்றாண்டுக்கு முன்பே, ஸர் வில்லியம் பெட்டி 'பொது அமைதியில் தங்களுக்கு இருக்கும் பங்கிற்கும், அக்கறைக்கும் ஏற்ப, மக்கள் அரசின் செலவிற்கு வரி செலுத்த வேண்டும்; அதாவது, அவர்களுடைய உடைமைகளுக்கும், செல்வத்திற்கும் ஏற்ப வரி செலுத்த வேண்டும் என்பதைப் பொதுவாக அனைவரும் ஒப்புக் கொள்கிறார்கள்' என்று வாதித்தார். இக் கோட்பாட்டில் ஆற்றல்

(ability), ஆதாயம் இரண்டின் கூறுகளும் விரவியிருக்கின்றன. இதே கோட்பாடு ஸ்மித்தின் வரி விதிப்பு பற்றி முதல் விதியில் காணக்கிடக்கிறது. 'கூடுமான வரையில் தங்கள் ஆற்றலுக்கு ஏற்றவாறு ஒரு நாட்டின் குடிமக்கள் அனைவரும் அரசினை ஆதரிப்பதற்கு வரி செலுத்த வேண்டும்; அதாவது, அரசின் பாதுகாப்பின்கீழ் தாங்கள் துய்க்கும் வருவாய்க்கு ஏற்றவாறு வரி செலுத்த வேண்டும்; ஒரு பெரிய நாட்டின் மக்களுக்கு அரசு செய்யும் செலவு, ஒரு பெரிய பண்ணையை மேலாண்மை செய்வதற்கு ஆகும் செலவை ஒத்திருக்கிறது. இச் செலவைக் கூட்டாகக் குத்தகைதாரர்கள் அனைவரும் ஏற்றுக் கொள்கிறார்கள். அவர்கள் தங்களுக்குப் பண்ணையில் எவ்வளவு பொறுப்பு உண்டோ அதற்கேற்ப குத்தகை செலுத்துகிறார்கள். வரி விதிப்பில் சமத்துவம், வரி விதிப்பில் சமத்துவமின்மை என்று கூறப்படுவதெல்லாம் இவ் விதியைக் கடைப் பிடிப்பதிலும், கடைப்பிடிக்காமல் இருப்பதிலும் தான் அடங்கியிருக்கிறது.'[1] இவ் விதியின் முதல் வாக்கியத்தில், ஸ்மித் ஆற்றல், ஆதாயம் இரண்டைப் பற்றியும் கூறியிருக்கிறார். இதனால், ஸ்மித்தை ஆதாயக் குழுவில் சேர்க்கலாமா என்ற ஐயம் எழுகிறது. ஆனாலும் அவர் நூலில் உள்ள பிற பகுதிகள் இவ் வையத்தைப் போக்குகின்றது. ஒல்லும் இடங்களிலெல்லாம் அரசின் செலவை ஆதாயத்துக்கு ஏற்றவாறு ஒதுக்கீடு செய்ய வேண்டும்; ஆதாயத்தின் அடிப்படையில் ஒதுக்கீடு செய்ய முடியாத இடங்களில் அரசின் செலவை, வேறு பொதுவான காரணங்களின் அடிப்படையில் ஒதுக்கீடு செய்ய வேண்டும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில், மெக் குல்லாக் (McCulloch), தையர்ஸ் (Thiers) போன்றவர்கள் ஆதாயக் கோட்பாட்டை மீண்டும் உயிர்ப்பித்தார்கள். வரி விதிப்புக்கு ஒரு குறுகிய விளக்கம் தந்தார்கள். வரி விதிப்பை காப்பீட்டுத் தொகையுடன் (Insurance Premium) ஒப்பிட்டார்கள். வரிகள் பாதுகாப்பிற்காகத் தரப் பட்ட கட்டணம் என்று கருதப்பட்டதால், மக்களுக்குப் பாதுகாப்புத் தரக்கூடிய பணிகளை மட்டுமே அரசு செய்ய வேண்டும் என்று கூறப்பட்டது. இதனால், அரசின் செலவிற்குக் குறுகிய எல்லை விதிக்கப்படலாயிற்று

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் பாண்டலியோனி (Pantaleoni)[2] மஸ்ஸோலா (Mazzola), டி விட்டி டி மார்க்கோ போன்ற இத்தாலியப் புலவர்களும், ஆஸ்திரியா நாட்டைச்

[1] Adam Smith, 'The Wealth of Nations.' Vol. 2, p. 350.

[2] Richard A. Musgrave, 'The Theory of Public Finance', 1959, Mc Graw-Hill Book Company, p. 69.

சார்ந்த ஸாக்ஸ் (Sax) என்பவரும், ஆதாயக் கோட்பாட்டிற்குப் புதிய விளக்கம் தந்தனர். ஆதாயத்திற்கு ஏற்றவாறு வரி விதிப்பதைத் தொன்னூல் ஆசிரியர்கள் (Classical Writers) நீதியின் ஒப்பளவு முதல் (Standard of Justice) ஆகக் கொண்டனர். இத்தாலிய, ஆஸ்திரிய ஆசிரியர்கள் ஆதாய விதியை ஒரு சமன்பாட்டுப் படிநிலையாகக் கொண்டனர்.

'அரசு பணிகளை ஆற்ற வேண்டும் என்றால், வளங்களைத் தனியார் உபயோகிப்பதைத் தடுக்க வேண்டும். இதனால், வரவு செலவுத் திட்டத்தின் வரி, செலவு அமிசங்களை ஒரு சேர எண்ணிப் பார்க்க வேண்டும்' என்று பாண்டலியோனி[1] கூறினார்.' 'சமுதாயத்தின் விருப்பங்களை நிறைவேற்றுவதற்கு அரசின் சேவைகள் பிரிக்கவொண்ணாததாய் (indivisable) இருக்க வேண்டும்.' என்று மஸ்ஸோலா கூறினார். ஸாக்ஸ், 'சமுதாயத்தின் கூட்டுத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு சமன் கோட்பாட்டை (Principle of Equivalence) தளமாகக் கொண்டார். ஒவ்வொருவரும் தான் அரசினுக்கு வரியாகச் செலுத்த வேண்டிய பங்கை அவரவரின் மதிப்பு ஒப்பளவு முதலுக்கு (Value Standard) ஏற்ப முடிவு செய்து கொள்ளலாம். எல்லோரும் ஏற்றுக் கொண்ட ஒரு திட்டத்தையே ஆளும் கணம் செயல்படுத்த வேண்டும் என்பதில் மஸ்ஸோலா, ஸாக்ஸ் இருவரும் கருத்தொருமை கொண்டிருந்தனர்.

அந்தோணி டி விட்டி டி மார்கோ (Antonio de Vitti de Marco) ஆதாயக் கருதுகோளில் சில திருத்தங்கள் செய்தார். பொதுவான சேவைகளை அரசு ஆற்றுகிறது. இச் சேவைகளை மக்கள் நுகர்கிறார்கள். இவர்கள் இருவருக்கும் இடையே ஒரு இடையீட்டு (பரிவர்த்தனை) உறவு நிலவுகிறது. அரசு ஆற்றும் இச் சேவைகள் பல்வேறுபட்ட பண்டங்களை உற்பத்தி செய்வதற்குத் துணை புரிகிறது. தனியார்கள் இப் பண்டங்களை நுகர்வதற்கும் இச் சேவைகள் இன்றியமையாதன. பண்டங்களை உற்பத்தி செய்வதற்குத் துணை புரிவதன் வாயிலாக மக்களுக்கு நேரிடையாகவும், அரசின் உதவியுடன் உற்பத்தி செய்யப்பட்ட இப் பண்டங்களை நுகர்வதற்கு மறைமுகமாகவும், இப் பணிகள் ஒத்தாசை செய்கின்றன. தங்கள் வருமானத்தின் வீதாசாரத்திற்கு ஏற்ப குடிமக்கள் ஆதாயம் பெறுகிறார்கள். அதிக வருமானம் பெறுபவன், நேரிடையாகவோ, மறைமுகமாகவோ, அரசின் பணிகளை அதிகம் நுகர்கிறான். ஆகவே, அவன்மீது அதிக வரி விதிக்க வேண்டும். குறைந்த வருமானம் பெறுபவன் அரசின்

[1] Richard A. Musgrave. 'The Theory of Public Finance', 1959, Mc Graw-Hill Book Company, p. 70.

பணிகளைக் குறைவாகவே நுகர்வதால், அவன்மீது குறைவான வரியையே விதிக்க வேண்டும். இவ்வாறு, வருமானத்தின் வீதாசாரத்திற்கு ஏற்ப வரி விதிப்பு இருக்க வேண்டும்.

**திறனாய்வு**

(1) கைம்மாறு கருதி வரி செலுத்தப்படவில்லை. வரியில் கைம்மாறு அமிசம் இல்லை. (2) அரசு அலுவல்களின் ஆதாயங்கள் அனைவருக்கும் கிட்டுகின்றது. தனிப்பட்டவர்களுக்கு இவ் வாதாயங்களைக் கூறிட்டுக் கொடுக்க முடியாது. ஒவ்வொருவரும் பெறும் ஆதாயத்தை அளவிட முடியாததால், அவர் எவ்வளவு வரியாகச் செலுத்த வேண்டும் என்பதையும் அறுதியிடமுடியாது. உதாரணமாகப் பாதுகாப்பு. ஒரு மாவட்டத்தில் மலேரியா வராமல் தடுப்பதற்காக மருந்து தெளித்தல், குடிநீரில். நோய்க் கிருமிகள் பரவாமல் பாதுகாத்தல் ஆகியவற்றால் ஒவ்வொருவரும் எத்துணை ஆதாயம் பெறுகிறார்கள் என்று கூற முடியாது. (3) இலவசக் கல்வி, மருத்துவ உதவி, மதிய உணவு போன்ற சமுதாய சேவைகளுக்கு இக் கருதுகோளைப் பிரயோகிக்க முடியாது. பிரயோகித்தால் பல ஏழைகள் இப் பணிகளை நுகர முடியாது. ஏனெனில், இவர்கள் பெறும் அரசின் பணிகளின் மதிப்பு, பொதுவாக, அவர்கள் செலுத்தும் வரித் தொகையை விடக் கூடுதலாகவே இருக்கிறது.

**ஆதாயக் கோட்பாட்டின் உபயோகம்**

அரசின் பணிகள் பலவற்றுக்கும் ஆதாயக் கோட்பாடு பொருந்தாது. அவை அறத்தாறு ஏற்றுக் கொள்ளக்கூடியனவாகவும் இல்லை. தீய விளைவுகள் நேரிடா வண்ணம் சிலவகை அரசுச் செலவுகளுக்கு ஆதாயத்தின் அடிப்படையில் வரி திரட்டலாம். இவ் வடிப்படையைப் பயன்படுத்தும் அளவுக்கு, வெற்றிக்கு முட்டுக்கட்டையாக இருக்கும் ஆற்றலைத் தளமாகக் கொண்ட வரிகளைத் தவிர்க்கலாம். (1) தனியார் பெறும் ஆதாயங்களை அளவிட முடியும்; என்றாலும், (2) இதனால் ஏற்படும் வரிப்பளுப் பகிர்வைச் சமுதாயம் அறத்தொடுபொருந்தியது என்று கருதினாலும் ஆதாயக் கோட்பாட்டைப் பின்பற்றலாம். அதாவது அற ஒப்பளவு முதல்களின்படி, ஆதாயங்களை அடைபவர்களே வரியைச் செலுத்த வேண்டும் என்றால் இக் கோட்பாட்டைப் பின்பற்றலாம்.

இவ்விரண்டு படி நிலைகளும் ஒரு சேர காணப்படும் அரசின் பணிகள் பலவற்றிலும், நேரிடையாகவே பணிகளை அவற்றைத் துய்ப்போருக்கு விற்க முடியும், விற்பனை முறையின்மூலம் பணிகள் வீணாவதைத் தவிர்க்க முடியும்; அரசுக்கும் உத்தம அளவு

உற்பத்தி செய்யும்படி வழிகாட்ட முடியும். இவற்றில் வரிகளுக்கு இடமேயில்லை. சில பணிகளில் இவ்விரண்டு படிநிலைகளும் ஒரு சேர காணப்பட்டாலும், கட்டணத்தை வசூலிப்பதற்கு அதிகச் செலவு பிடிப்பதாலோ அல்லது சராசரி ஆக்கச் செலவுக்கு ஈடாக ஒரு விலையை அறுதியிட்டு வசூலிப்பதால், பணிகளை நுகரும் அளவு கட்டுபடியாகாத குறைந்த மட்டங்களுக்குக் குறையும் என்பதாலோ பணிகளை விற்பனை செய்வது சாத்தியமாக இல்லாதிருக்கலாம். (உ-ம்.) பாலம் வேறு படிநிலைகளில் ஆதாயங்களை அடைவோர், ஆதாயங்களை அடையும் அக் கால எல்லைக்குள் வரியைச் செலுத்த முடியாதிருக்கலாம்; பிறிதொரு சமயத்தில் அவர்களாலும் வரியைச் செலுத்த இயலலாம்.

சாலை பராமரிப்பு ஆதாய அடிப்படைக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும். ஆதாயத்தைத் திட்டவட்டமாக அளவிட லாம் என்பது மட்டுமல்ல; அதை உபயோகிப்போரைப் பணம் செலுத்தும்படி செய்வதால் யாதொரு அநீதியும் விளையாது. ஆயினும், சுங்க வரிகளை வசூலிப்பதற்கு அதிகம் செலவு பிடிக்கிறது. அவற்றினால் பிரயாணிகளுக்கும் அதிகத் தொந்தரவு ஏற்படுகிறது. போக்குவரத்தை இன்றியமையாத காரணமின்றி மட்டுப்படுத்துவதனால், சாலைகளும் முழுவதும் பயன்படுத்தப் படுவதில்லை. அதே சமயம் பெட்ரோல் மீது வரிகளை விதிப்பதும் வசூலிப்பதும் எளிது; செலவும் குறைவாகவே ஆகிறது. எந்தவிதமான சுங்க முறையைக் காட்டிலும் சாலையைப் பயன் படுத்துவதைக் கண்டறிவதற்குப் பெட்ரோல் நுகர்வு ஒரு சிறந்த புறவய அளவு கோலாகும். நல்ல சாலைகளினால் கார் ஓட்டுபவர் பயன் பெறுகிறார் என்பது உண்மையே. ஆனால், இதே போன்று காரையும் பெட்ரோலையும் விற்கும் வணிகர்களும், அவற்றை உற்பத்தி செய்பவர்களும் இலாபம் பெறுகிறார்கள். முதன் முதலில் ஆதாயம் அடைபவர்கள் வரிக்கு ஆளாக வேண்டும் என்று கூறுவதும் நியாயமன்று. கார், பெட்ரோல் விற்பவர்கள், அவற்றை உற்பத்தி செய்பவர்கள் ஆகியவர்கள் பெறும் ஆதாயங்களைக் கணக்கிடுவது எப்படி? வயதான காலத்தில் ஆண்டுத் தொகைகளைப் பெறுவது இதற்கு மற்றுமோர் உதாரணமாகும். இவ்வாண்டுத் தொகைகளைப் பெறுவோர் அப்படிப் பெறும் காலத்தில் வரியைச் செலுத்த அவர்களுக்குக் கடப்படாது; ஆனால், அவர்கள் வேலையில் இருந்த காலத்தில் இதைச் செலுத்த முடியும். தல நிறுவனங்கள் விதிக்கும் வரிகளைக் கொண்டு தீயணைப்பு, கழிவுநீர் வசதி போன்ற பணிகள் செய்யப்படுகின்றன. இவற்றை ஆதாயத்தைத் தளமாகக் கொண்டு நிலைநாட்ட முடியும். உடைமையாளர்கள் இப் பணிகளினால் நேரிடையாகவே ஆதாயம்

பெறுகின்றனர். அரசு இப் பணிகளைச் செய்யாவிட்டால், அவர்கள் இப் பணிகளைப் புரியத் தனியார்களை நம்பவேண்டி இருந்திருக்கும். நீர்த்தேக்கங்கள், அணைகள் இவற்றைக் கட்டுவதற்கு விதிக்கப் படும் பிரத்தியேகத் தீர்வைகளும் (Special Assessments) ஆதா யத்தை அடித்தளமாகக் கொண்டவையே. ஆயினும், அறத்தாறு விரும்பிய குறிக்கோள்களை எய்த வேண்டுமென்றால், அரசின் பணிகளை ஆற்றுவதற்கு ஆற்றல் கோட்பாட்டையே நம்பியிருக்க வேண்டும்.

முடிவுரை

ஆதி காலத்தில் அரசின் வரிவிதிப்பில் ஆதாயக் கோட்பாடு பற்றிய கருதுகோளுக்கு இடமிருந்தது. ஆனால், இக் கருதுகோளை இக் காலத்தில் நடைமுறையில் கடைப்பிடிப்பது மிகவும் கடினம். வரியின் நோக்கம், வரியின் உண்மையான சிறப்பியல்பு இவை பற்றி அரசியல் அறிஞர்களும், பொருளியல் புலவர்களும் தம்முள் கருத்து மாறுபட்டாலும், இக் காலத்து நிதிய அமைப்புக்கு ஆதாயக் கருதுகோள் மட்டும் போதாது என்ற முடிவை ஒப்புக் கொள்கிறார்கள். 'வரிகளைப் பகிர்வு செய்வதற்கு ஆதாயக் கோட் பாட்டை ஓர் ஒப்பளவு முதலாகக் கொள்வது அத்துணை திருப்தி அளிக்காத போதிலும், வரி விதிப்பில் அதற்கு ஒரு சிறப்பான செல்வாக்கு இருக்கிறது' என்று பியூலர் (Buehler) [1] கூறுகிறார்.

4. சமுதாய அரசியல் கருதுகோள்கள் (The Socio - Politcal Theories)

சமுதாய அரசியல் கருதுகோள்களை அடைவுபட வகுத்த வர்கள் ஜெர்மானிய அறிஞர்கள்; சிறப்பாக, அடால்ப் வாக்னர் (Adolf Wagner) என்பவர் அதாவது ஒரு துறையில் சீர்திருத் தத்தைச் செய்வதற்கு வரி ஒரு ஏற்ற கருவியாகும் என்பதுதான் இக் கருதுகோள். இந்தச் சீர்திருத்தம் சமுதாயத் துறையிலோ, பொருட்டுறையிலோ, அரசியல் துறையிலோ செய்யப் படலாம். எடுத்துக் காட்டாக, பிற நாடுகளால் வேண்டப்படும் ஒரு பண்டத்தின்மீது நாட்டிற்கு ஏகபோக உரிமை (முற்றுரிமை) இருப்பதாக வைத்துக் கொள்வோம். இந்த உரிமையைப் பயன் படுத்தி ஒரு நாடு ஆதாயம் பெற விரும்பலாம். அது தன் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள ஏற்றுமதி வரி ஒன்றை விதிக்கலாம். இதே போன்று, இன்றியமையாத அல்லது குழவிப் பிராயத்தில் இருக்கும் ஒரு தொழிலை வளர்க்க விரும்பும் ஒரு சட்டமன்றம் இக் கோட்பாட்டின்படி, வெளிநாடுகளி லிருந்து தன் நாட்டுச் சரக்குகளுக்குப் போட்டியாக வந்து

[1] Alfred G. Buehler, 'Public Finance,' p. 380

இறங்கும் சரக்குகளின் மீது இறக்குமதி வரிகள் விதிப்பது நியாயமானதே. மக்களிடையே வருமானத்தை ஓரளவு சமமாகப் பகிர்வு செய்ய வேண்டும் என்று அரசு விரும்பினால், செல்வர் களின் மீது அதிகப் பளுவுடைய ஒரு வளர்வீத வரிமுறையை அரசு விதிக்கலாம்.

இவ்வாறாக, இக் கோட்பாடு சமுதாய அரசியல் கோட்பாடு அனைத்தையும் தன்னகத்தே கொண்டுள்ளது. இது நிதியக் கோட்பாட்டிற்கு எதிரானதாய் இருந்த போதிலும், இதைப் பொதுவுடைமைக் கருத்துடன் ஒன்றாகக் கருத முடியாது. தொழிலாளர் வருக்கத்தினருக்குப் பெரும் பங்கை அளிப்பதற்கு வரியை ஒரு கருவியாகப் பயன்படுத்த வேண்டும் என்ற அளவில் இக் கருதுகோளை ஆதரிப்பவர்களும், பொதுவுடைமை வாதிகளும் ஒருமித்த கருத்துடையவராய் இருக்கிறார்கள். ஆயினும், இந் நோக்கம் அவர்கள் திட்டத்தின் இன்றியமையாத கூறு அல்ல; உண்மையில் அவர்களுக்குத் தெளிவான திட்டமே இல்லை. வரி பற்றிய சமுதாய அரசியல் கோட்பாட்டை நம்புகின்றவர்கள், குறிப்பிட்ட ஒரு சீர்திருத்தத்தையோ அல்லது ஒரு குறிப்பிட்ட கட்சியையோ ஆதரிக்க வேண்டிய கட்டாயம் இல்லை. அரசு சரி என்று கருதும் சீர்திருத்தங்களைக் கொணர்வதற்கு வரியை ஒரு கருவியாகப் பயன்படுத்தலாம் என்று அவர்கள் கருது கிறார்கள். நோக்கம் பொதுவுடைமையாக இருக்கலாம்; அல்லது அதற்கு நேர் எதிரானதாய் இருந்தாலும் இருக்கலாம். ஆகை யால், இக் கோட்பாட்டிற்கு அனைத்து அரசியல் கட்சிகளிலும் ஆதரவாளர்கள் இருக்கிறார்கள்.

திறனாய்வு

சமுதாய அரசியல் கருதுகோள் முரண்பட்ட பல கோட்பாடு களையும் தன்னகத்தே கொண்டிருக்கிறது. ஈதொன்றே இதைக் குறை கூறுவதற்குச் சிறந்த முகாந்திரமாகும். வருமானம் பெறு வதற்கு மட்டுமே வரியைப் பயன்படுத்த வேண்டும், வேறெந்த நோக்கங்களுக்காகவும் வரியைப் பயன் படுத்தக்கூடாது என்ற கோட்பாட்டிற்கு இது ஒரு திருத்தமாகும். நிதியக் கருதுகோளைப் பற்றி ஒரு கணமாவது சிந்தித்த பின்பு, அதனை ஆதரிப்பவர் ஒரு சிலரே இருப்பர். இந்தச் சேவையைத் தவிர்த்து சமுதாய அரசியல் கருதுகோள் தெளிவற்றதாகக் காணப் படுகின்றது. ஏனெனில், இக் கருதுகோளின்படி வரி விதிப்பதற்கான நோக்கங் கள் தம்முள் ஒன்றுக்கொன்று முரணாக இருக்கலாம். வரி விதிப்பின் பொதுவான அமிசம் பற்றிய ஒரு கூற்றை மட்டும் கண்டறிவது நம் நோக்கமன்று. எந்த எந்த நோக்கங்களுக்காக வரி விதிக்

கலாம் என்பதையும் நாம் ஆராயவேண்டும். இதைப் பொறுத்த வரை இக் கருதுகோளின் ஆதரவாளர்கள் தம்மிடையே ஒன்றுபட்ட கருத்துடையவர்களாக இல்லை. அவர்கள் பல சிறு குழுக்களாகச் சிதறிப் போகின்றார்கள்.

**5. உற்பத்தியையும் நுகர்வையும் கட்டுப்படுத்துவதற்கான ஒரு கருவி வரி விதிப்பு** (Taxation is a means of Regulating production and Consumption)

வரிகளின் வாயிலாக நம் உற்பத்திச் சாதனங்களை மிகச் சிக்கனமான முறையில் திருத்தியமைப்பது சிலரின் நோக்கமாக இருக்கலாம். இந் நோக்கம் ஈடேறுவதற்கு இவர்கள் வேறுபாடுடைய (differential) வரி அமைப்பைக் கடைப்பிடிக்கலாம். சில தொழில்களுக்குச் சலுகை அளித்து அவற்றை அவர்கள் விரும்பிய அளவுக்கு வளரச் செய்ய நினைக்கலாம். வரிகளிலிருந்து கிடைத்த வருமானத்திலிருந்து எந்தெந்தத் தொழில்களை வளர்க்க வேண்டும் என்று கருதுகிறார்களோ அத் தொழில்களுக்கு மானியம் அளிக்க அவர்கள் விரும்பலாம்.

சிலர் போகப் பொருள்கள், போதை தரும் பொருள்கள், மது வகைகள் இவற்றின் உற்பத்தியைக் கட்டுப்படுத்தவும், இவற்றை ஒரு வரையறைக்கு உட்படுத்தவும் வரியை ஒரு கருவியாகப் பயன் படுத்தலாம். இவர்களின் நோக்கம் நிதியைத் திரட்டுவது அல்ல; இவர்கள் மக்களை நல்வழிப்படுத்த நினைக்கிறார்கள். ஆயினும், நடப்பில், இவ்வகையான வரிகளிலிருந்தே அரசுக்கு அதிக வருவாய் கிடைக்கின்றது. போகப் பொருள்களின்மீது வரி விதிப்பதால், மக்களின் ஊதாரிச் செலவு குறைகின்றது.

அடக்கத்திற்கும் குறைவாகச் சில பண்டங்களை விற்கலாம். அந்த இழப்பை அரசின் வருமானத்திலிருந்து ஈடு கட்டலாம். இவ்வாறு சில பண்டங்களின் நுகர்வை அதிகரிப்பதற்கு வரிகளைப் பயன்படுத்தலாம். பண்டங்களைக் குறைந்த விலைக்கு விற்பதன் வாயிலாகவும், பண்டங்களை அரசு அல்லது தல நிறுவனம் மக்களுக்கு நேரிடையாகப் பகிர்வு செய்வதன் வாயிலாகவும் இதை நிறைவேற்றலாம். உதாரணமாக, ஒரு நகராட்சி சேரி வாழ் மக்களின் ஆரோக்கியத்தைப் பேணுவதற்காக, நகர எல்லைக்குள் உள்ள சேரிகளில் பால் வழங்க ஏற்பாடு செய்யலாம். அங்காடி விலையை விடக் குறைவான விலைக்கு ஏழை எளிய மக்களுக்குப் பால் வழங்க ஏற்பாடு செய்யலாம் அல்லது ஏழைகளுக்கு இலவசமாகவே பாலை வழங்கலாம். இத் திட்டங்களை ஆதரிப்பவர்கள், இவற்றால் உடனடியாக ஏற்படும் செலவைக் காட்டிலும் இறுதியில்

மக்களின் உடல் நலம் அபிவிருத்தி அடைவதாலும், மக்களின் திறமை கூடுவதாலும் அதிக நன்மையே ஏற்படுகிறது என நம்புகிறார்கள்.

6. இழப்பீட்டுக் கருதுகோள் (The Compensatory View)

இக் கருத்தின்படிச் சிலர் செல்வத்தில் அல்லது பணத்தில் அதிகமாகப் புரளுவதற்கும், பலர் வறுமையில் உழல்வதற்கும், நாட்டின் அரசியல் அமைப்பே ஓரளவு காரணமாகும். ஒரு வருக்கத்தினர் செல்வராய் இருப்பதற்கும், மற்றொரு வருக்கத்தினர் வறிஞராய் இருப்பதற்கும், அரசே நேரிடையாகப் பொறுப்பாளி என்று நாம் கூறவில்லை. அரசின் தலையீட்டிற்குப் பின்பும், அல்லது அரசின் சம்பந்தம் இன்றியே இவ் வேற்றத்தாழ்வுகள் தோன்றியிருக்கக் கூடும். இவ் வேற்றத்தாழ்வை ஆணிவேரோடு அகற்றுவதற்கு அரசினால் முடியாமல் போனபோதிலும், இவ் வேற்றத்தாழ்வால் ஏற்படும் விளைவுகளைத், தக்க வரிகள் வாயிலாக அரசு குறைக்காமல் இருப்பதற்கு யாதொரு காரணமும் இல்லை என்று இக் கோட்பாட்டை நம்புகிறவர்கள் வாதிக்கிறார்கள்.

எடுத்துக்காட்டாக, ஒரு முற்றுரிமைக் கம்பெனி மக்களின் தேவைகளைப் பயன்படுத்திக் கொண்டு ஏராளமான இலாபத்தை ஈட்டலாம். ஆயினும், அரசு பாதுகாப்புத் தராவிட்டால், அக் கம்பெனியால் செல்வம் கொழிக்க முடியாது. அரசு அக் கம்பெனிக்குப் பிரத்தியேகச் சட்டப்பூர்வமான சலுகைகள் அளித்திருந்தால், இவ் வேற்றத்தாழ்வுகளைக் குறைக்க வேண்டிய அரசின் பொறுப்பு அதிகமாகின்றது. இக் கருதுகோளின் ஆதரவாளர்கள் முற்றுரிமையினால் அடையும் இலாபத்தின்மீது ஒரு சிறப்பு வரியை விதித்து, இலாபத்தில் ஒரு பங்கை நுகர்வோருக்குத் தர விழைகின்றார்கள். ஒரு சொத்தின் மதிப்பு, அதற்கு உடையவர் மேற்கொள்ளும் முயற்சியின்றியே உயரலாம்; மக்கள் பெருக்கத்தாலும் சொத்தின் மதிப்பு உயரலாம்; அரசு மேற்கொள்ளும் இருப்புப் பாதை, சாலை, நீர்ப்பாசனம் போன்ற வசதிகளினாலும் சொத்தின் மதிப்பு உயரலாம். இவ்விதச் சூழ்நிலையில் 'உழைப்பிலா ஏற்றத்தின்' மீது (unearned increment) ஒரு பிரத்தியேக வரி விதிப்பது ஏற்புடையதாகும்.

இவ் விழப்பை ஈடு செய்கின்ற கருதுகோளைப் பொதுவுடைமைக் கோட்பாடு என்று ஒருகாலும் கூறமுடியாது. பொதுவுடைமைக் கோட்பாட்டை எதிர்ப்பவர்களும், வருமான வரி, நிலப் பெருமானத்தின்மீது விதிக்கும் வரி, அபிவிருத்தி வரி (Betterment Tax) போன்ற வரிகள் வளர்வீத அடிப்படையில்

இருக்கவேண்டும் என்பதை ஒப்புக்கொள்கிறார்கள். வருமானத்திலும், செல்வத்திலும் உள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பது ஒரு முறையாகும். அவர்கள் தீவிரமான ஒரு திட்டத்தின்கீழ்ச் செல்வத்தையும், வருமானத்தையும் பிரித்துத் தருவதற்கு மேற்கொள்ளும் முயற்சியினின்றும், தங்கள் திட்டம் வேறுபட்டது என்று கூறுகிறார்கள். ஆயினும், அவர்கள் நிலைமை தெளிவாக இல்லை. பொதுவுடைமைப் பிரச்சினைகளைப் பொறுத்தவரை இரு சாராருக்கும் இடையே மிகுந்த கருத்து வேற்றுமை இருந்தபோதிலும், வரி, நலம் (welfare) இவற்றைப் பொறுத்தமட்டில் இவ்விரு சாராரின் கருத்துகளுக்கும் இடையே தெளிவான வேறுபாடு காணப்படவில்லை.

## 7. வருமானத்தை மறுபகிர்வு செய்வதற்கு வரிவிதிப்பு ஒரு கருவி

வரி பற்றிய பொதுவுடைமை கருதுகோள் கூறுவதாவது, பல் வேறுபட்ட வருக்கத்தினரிடையே காணப்படும் ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்கும் வகையில் அரசின் நிதிய அமைப்பு இருக்கவேண்டும். செல்வர்களுக்குக் கடுமையான வரி விதிக்க வேண்டும் என்றும், வறியவர்களுக்கு வரியே விதிக்கக் கூடாது என்றும், விதித்தாலும் வரிப்பளு இலேசாக இருக்கவேண்டும் என்றும், இதன் விளைவாக வருமானங்களின் பகிர்வு இப்போது உள்ளதைவிடக் குறைந்த ஏற்றத் தாழ்வுகளைக் கொண்டதாக இருக்கும் என்றும் பொதுவுடைமைக் கருதுகோள் கூறுகிறது.

தங்கள் வாதத்திற்கு உரமூட்ட, பொதுவுடைமைவாதிகள், குறைந்துசெல் பயன்பாட்டு விதி (the law of diminishing utility) என்ற பொருளியல் வாதத்தைத் துணையாகக் கொள்கிறார்கள். வளர்வீத வரிக்கான வாதங்களைக் கூறும்பொழுது, குறைந்துசெல் பயன்பாட்டு விதியைப்பற்றி ஓரளவு தெரிந்து கொண்டோம். பொதுவுடைமை வாதிகளின் நோக்கம் செல்வர்களிடமிருந்து ஏழைகளுக்குச் செல்வத்தை மாற்றுவதே. ஏழை மக்களுக்குச் செய்யப்படும் உதவி ரொக்கமாகவே இருக்கவேண்டும் என்பதில்லை. பொதுப்பணிகளுக்காகச் செலவு செய்வதன் வாயிலாக நுகர்வைச் சமுதாயத்திற்குரியதாக ஆக்குவதோடு அதனால் சமுதாயம் பெறும் மொத்தப் பயன்பாட்டையும் அதிகரிக்கலாம்.

எவ்வளவு கூடுதலாக வளர்வீத வரி விதித்தாலும், பொதுவுடைமை வாதிகள் இம் முறையை (வரியமைப்பை) இரண்டாம் பட்சமாகத்தான் கருதுகின்றார்கள் என்பதை நினைவில் இருத்த வேண்டும். அரசுபீடத்தில் அமர்ந்தால்தான் உற்பத்திச் சாதனங்

களைக் கட்டுப்படுத்த முடியும். அங்ஙனம் அரசுபீடத்தில் அமரும் வரையில், பொதுவுடைமை வாதிகள் வரியை ஒரு கருவியாக எவ்வளவு பயன்படுத்த முடியுமோ, அவ்வளவு பயன்படுத்த முனைகிறார்கள். ஆனால், தீவிரப் பொதுவுடைமை வாதிகள், மக்களுக்கு வருமானத்தைப் பகிர்வு செய்வதற்கு முன்னரே தகுந்த முறையில் உற்பத்திச் சாதனங்களைக் கட்டுப்பாடு செய்து, அரசினுக்கு வேண்டிய நிதியத்தைப் பெற முனைகிறார்கள். அவ்வாறான சூழ்நிலையில் வரியமைப்பு அடியோடு மாற்றப்படும்.

நாம் பொதுவுடைமைக் கோட்பாடு என்று குறிப்பிடும் பொழுது, இவ்வளவு முன்னேற்றம் அடைந்த ஒரு நிலையைச் சுட்டவில்லை. இப்பொழுது செல்வத்திலும் வருவாயிலும் காணப்படும் ஏற்றத் தாழ்வுகளை, வரியைக் கருவியாகக் கொண்டு சரிக்கட்ட வேண்டும் என்ற கோட்பாட்டையே நாம் பொதுவுடைமைக் கோட்பாடு என்று குறிப்பிடுகின்றோம். வேறு பொருத்தமான பெயரில்லாததால்தான் இக் கருதுகோள் பொதுவுடைமைக் கருதுகோள் எனப்படுகிறது. வேறு பெயரால் வழங்கப்பட்டால், இன்னும் பலரும் இக் கருதுகோளை ஏற்றுக் கொள்ளக் கூடும். நாம் எந்தப் பெயரைச் சூட்டினாலும், இக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்ட நிதிய அமைப்புத்தான் இப்பொழுது இயங்கி வருகிறது.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. E. R. A. Seligman, 'Progressive Taxation in Theory and Practice', Chapter II.
2. H. C. Adams, 'The Science of Finance', 1898, pp. 298—302 and pp. 321—332.
3. R. Balakrishan, 'Studies in Indian Economic Problems', pp. 254—267.
4. R. N. Bhargava, 'The Theory and Working of Union Finance in India', 1971, pp. 37—43.

# 12. வரி விதிப்பு பற்றிய ஆற்றல் அல்லது திறமைக் கருதுகோள்

## (The Faculty or Ability Theory of Taxation)

வரி விதிப்பில் அறமும், சிக்கனமும் (Equity and Economy in Taxation)

ஒருவர் பெறும் ஆதாயத்தை அளவிடுவது கடினமாக இருப்பதால், ஆதாயம் வரி விதிப்புக்கு ஏற்றதோர் அடிப்படையல்ல என்று கைவிடப்பட்டது. ஆற்றல் கோட்பாட்டை ஆதரிக்கும் ஆசிரியர்கள், ஒவ்வொரு குடிமகனும் அரசின் ஓர் உறுப்பு எனக் கொண்டார்கள். இயற்கையின் எல்லா அமைப்புகளிலும் ஒவ்வொரு உறுப்பு அல்லது செல் (Cell) உடல் முழுமைக்கும் தத்தம் ஆற்றல் அல்லது திறனுக்கேற்றவாறு துணை செய்வது போல, ஒவ்வொரு குடிமகனும் தன் தன் ஆற்றலுக்கேற்றவாறு வரி செலுத்தவேண்டும் என்று இவர்கள் கூறினர்கள். இக் கோட்பாடு ஆற்றல் அல்லது திறன் கோட்பாடு எனப்படுகிறது. போதின் (Bodin) என்ற பிரஞ்சு ஆசிரியர் முதன் முதல் இதை விளக்கினர். இது ஆடம் ஸ்மித் நுதலிய வரி பற்றிய விதிகளில் முதலாவதாகக் காணக்கிடக்கிறது. 'ஒவ்வொரு நாட்டின் குடிகளும் அரசை ஆதரிப்பதற்காகக் கூடுமானவரையில் தத்தம் ஆற்றலுக்கு ஏற்றவாறு வரி செலுத்தவேண்டும்' என்பதே அக் கூற்று. இப்போது வரிப்பளுவைப் பகிர்வதற்கு மிகவும் திருப்திகரமான ஒரே கோட்பாடாக இது எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

ஆற்றலுக்கு ஏற்றவாறு வரி விதிப்பு என்ற கருத்து எங்ஙனம் வளர்ந்தது என்பதை நாம் இப்பொழுது காண்போம். இதன் பின்பு ஆற்றலுக்கு ஏற்றவாறு வரி செலுத்துதல் என்ற கருத்துப் படிமத்திற்கு எழுந்த பல விளக்கங்களையும் காண்போம்.

வரிப் பளுவின் பகிர்வு நியாயமானதாக இருக்கவேண்டும் என்ற கருத்து மிகப் பழமையானது. ஆற்றலுக்கு ஏற்றவாறு வரி செலுத்துதல் என்பது நியாயமான வரி அமைப்பாகும். இக் கோட்பாடு ஆதாயக் கோட்பாட்டை விடக் காலத்தால் முற்பட்டது. குயிஸியார்டினி (Guicciardini) என்பவர் பதினாறும் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆற்றலை அடித்தளமாகக் கொண்டு வளர்வீத வரி முறையை ஆதரித்து ஒரு கட்டுரை எழுதினார். அந்த நூற்றாண்டின் இறுதியில் போதினும் ஆற்றலுக்கேற்றபடி வரி செலுத்தும் முறையை ஆதரித்தார். ஆனால், இவர் இதை அடிப்படையாகக் கொண்டு வீதாசார வரிமுறையை ஆதரித்தார். ஆற்றலுக்கு ஏற்றபடி வரி செலுத்துதல் என்னும் கோட்பாட்டை ரூஸோ, ஸிஸ்மாண்டி, ஜே. பி. ஸே (J. B. Say), மில், அடால்ப் வாக்னா போன்றோர் ஆதரித்தனர். பிராங்க்ளின் ரூஸ்வெல்ட்டும் இந்த வரிசையில் அடங்கியவர்.

## ஆற்றலுக்கு ஏற்றபடி வரி செலுத்துவது—அக விளக்கம் (Ability to Pay—The Subjective Interpretation)

'ஆற்றலுக்கேற்றபடி செலுத்துவது' என்ற சொற்றொடர் கவர்ச்சியாக இருந்தாலும், நடைமுறையில் கடைப்பிடிப்பதற்கு அதை ஒரு வழிகாட்டியாகக் கொள்ள முடியாது. ஒரு நடைமுறை வரித் திட்டத்தில் இக் கோட்பாட்டிற்கு ஒரு வடிவம் கொடுக்க ஒருவர் முயலுங்கால், பல இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன. முதலாவது ஆற்றல் என்பதற்குச் சரியான பொருள் என்ன? சிலர் ஆற்றல் என்ற சொல்லுக்கு அக விளக்கத்தை மேற்கொண்டு, ஒரு ஆள் எவ்வளவு தியாகம் செய்யவேண்டும் என்று விளக்கம் தருகின்றனர். பிறர் புற விளக்கத்தை ஏற்றுக் கொண்டு ஆற்றல் அல்லது திறனை வருமானம் அல்லது பிற புறச் சின்னங்கள் மூலம் அளவிட முற்படுகின்றனர். தோற்றத்தில் இவ்விரு கருத்துகளுக்கும் இடையே உள்ள வேறுபாட்டின் உண்மையான முக்கியத்துவம் புலனாகாமல் போகலாம். ஆயினும், நடைமுறையில் ஆற்றல் பற்றிய விதியைச் செயல்படுத்த ஒருவர் முனையுங்கால் இவ்வேறுபாடு தெளிவாகத் தெரிகின்றது.

## மூன்று வேறுபட்ட விளக்கங்கள்

ஆற்றலுக்கேற்றபடி வரி செலுத்துவது என்பது அவர்கள் (வரி செலுத்துவோர்) செய்யும் தியாகத்தின் அளவைப் பொறுத்தது. இந்த வாதத்தில் தெளிவில்லை. இதனால் ஒவ்வொருவரும் பெறும் 'துன்பத்தின்' அளவை அறுதியிடுவதற்குப் பல்வேறுபட்ட வழிமுறைகள் மேற்கொள்ளப்பட்டன. சம அளவு சார்பற்ற தியாகம் (equal absolute sacrifice) என்பது ஒரு விளக்கம்; சம அளவு

வீதாசாரத் தியாகம் (equal proportional sacrifice) என்பது இன்னென்று; சம அளவு இறுதிநிலைத் தியாகம் என்பது பிறிதொரு விளக்கம். நாம் இப்பொழுது இம் மூன்று விளக்கங்களையும் சற்று விரிவாக ஆராய்வோம்.

**சம அளவு சார்பற்ற தியாகக் கோட்பாடு** (The Principle of Equal Absolute Sacrifice)

'வரி விதிப்பில் சமத்துவம்' என்ற சொற்றொடருக்கு ஜான் ஸ்டூவர்ட் மில் 'சம அளவு தியாகம்' எனப் பொருள் கொண்டார். மில்லின் கூற்றுப்படி, 'அரசியலில் ஒரு கூற்றாக, வரியில் சமத்துவத்தைக் கொண்டால், அதன் பொருள் அரசின் செலவுக்காக ஒவ்வொருவரும் செலுத்தும் வரித் தொகையால் ஏற்படும் அசௌகரியம், பிறர் (வரி செலுத்துவதால்) அடையும் அசௌகரியத்தை விடக் கூடுதலாகவோ அல்லது குறைவாகவோ இருக்கக் கூடாது என்பதே.' மக்கள் பெரும்பாலும் வரி செலுத்துவதற்கு விரும்புவதில்லை. ஏனெனில், அதனால் அவர்கள் தங்கள் நுகர்வைக் குறைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இதுபற்றியே எட்மண்டு பர்க்கு (Edmund Burke) 'எவ்வாறு காதலும் அறிவும் ஒருங்கே இருப்பது கடினமோ, அதேபோன்று வரியை விதித்தும் மக்களிடம் அன்பாகவும் ஒருங்கே இருப்பது கடினம்' என்றார். இரண்டு வரி செலுத்துவோர்களின் வருமானம் ஒரே அளவாக இல்லாமல் வேறுபட்டு இருக்குமானால், அதிக வருமானம் பெறுவோர் அதிக வரியையும், குறைந்த வருமானம் பெறுவோர் குறைந்த வரியையும் செலுத்தவேண்டும். ஆனால், வரியைச் செலுத்துவதனால் ஏற்படும் தியாகம் இருவருக்கும் சம அளவில் இருக்க வேண்டும். தோற்றத்தில் இக் கருத்து நியாயமானதாகப் பட்டதால் இதற்கு அக் காலத்தில் மக்களின் அமோக ஆதரவு கிட்டியது. மில் சம அளவுத் தியாகத்தை வலியுறுத்தினாலும், சம அளவு என்பதற்குத் தெளிவான விளக்கம் தந்தாரில்லை. மார்ஷல், ஸிட்ஜ்விக் (Sidgvick) போன்றவர்கள் சம அளவு சார்பற்ற தியாகத்தை ஆதரித்தனர். 'ஒரே சூழ்நிலையில் வாழ்பவர்கள் சம அளவுத் தியாகம் செய்கிறார்கள் என்றால் நம்மால் ஓரளவு புரிந்து கொள்ள முடியும். ஆனால், வெவ்வேறுபட்ட சூழ்நிலைகளில் வாழ்பவர்கள் சம அளவுத் தியாகம் செய்கிறார்கள் என்று கூறுவது அத்துணை தெளிவாக இல்லை.' இங்ஙனம் பிகு[1] கூறுகிறார். இதிலிருந்து இக் கோட்பாட்டைச் செயலில் கொண்டுவர முடியாது என்று தெரிகிறது.

[1] Pigou, 'A Study in Public Finance', Third (Revised) Edition, 1952, p. 44.

### சம அளவு வீதாசாரத் தியாகக் கோட்பாடு

இக் கோட்பாட்டின்படி ஒவ்வொருவரும் தம்முடைய வருமானத்திலிருந்து அடையும் பொருளாதார நலனுக்கு ஏற்ற அளவில், வரியின் நேரிடையான பணப்பளு பகிர்வு செய்யப்பட வேண்டும். வருமானத்திற்கும் அதிலிருந்து கிடைக்கும் பொருளாதார நலனுக்கும் உள்ள உறவு, வரி செலுத்துவோர் எல்லோருக்கும் ஒரே மாதிரியானது என்று வைத்துக் கொண்டால், வருமானம் அதிகரிக்குந்தோறும் அதிலிருந்து கிடைக்கும் இறுதிநிலைப் பயன்பாடு குறைகிறது. ஆகவே, இக் கோட்பாட்டின்படி வரி மிகவும் வளர்வீதமாய் இருக்கவேண்டும் என்பது தெளிவு. உதாரணமாக, ஆண்டொன்றுக்கு ஐயாயிரம் உரூபா வருமானம் பெறுபவரைக் காட்டிலும், ஆண்டொன்றுக்குப் பதினாயிரம் உரூபா வருமானம் பெறுபவர் இரட்டிப்புத் தியாகத்தைச் (வரியாகச்) செய்ய வேண்டும். இவ் விளக்கத்தை கோஹன் ஸ்டுவர்ட் (Cohen Stuart) ஆதரித்தார்.

### சம அளவு இறுதிநிலைத் தியாகக் கோட்பாடு

பேராசிரியர் கார்வர் (Professor Carver) இவ் விளக்கத்தை மூதன்முதல் தந்தார். 'சமுதாயத்தின் எல்லா உறுப்பினர் பேரிலும் சமமான அளவு தியாகத்தைச் சுமத்துவதால் செல்வத்தின் வளர்ச்சிக்குத் தடை ஏற்படுகிறது. ஆனால், செல்வத்தால் மிகக் குறைந்த அளவு பயன் நுகர்வோரிடமிருந்து மட்டுமே வரி முழுவதையும் வசூல் செய்வதன்மூலம் குறைந்த அளவு தியாகமே சமுதாயம் முழுமைக்கும் ஏற்படுகிறது என்று கூறினர். எட்ஜ்வொர்த்தும், பிகுவும் சம அளவு சார்பற்ற தியாகம், சம அளவு வீதாசாரத் தியாகம் இவற்றில் எது சிறந்தது என்று தருக்கத்தன் வாயிலாகவோ, உய்த்துணர்வின் வாயிலாகவோ கூற முடியாது என்றும், சம அளவு இறுதிநிலைத் தியாகம்தான் சிறந்தது என்றும் கூறினர்கள். இதையும் அறம் அல்லது நீதியின் அடிப்படையில் கூறவில்லை. நலனை (welfare) அடிப்படையாகக் கொண்டே அவர்கள் இங்ஙனம் கூறினர்கள். நலனில் குறிக்கோள் குறும அளவு மொத்தத் தியாகமே (least aggregate sacrifice).

### சம அளவு இறுதிநிலைத் தியாகத்தை வரி விதிப்பின் இறுதிக் கோட்பாடாகக் கொள்ளுதல் (Equal Marginal Sacrifice as the Ultimate Principle of Taxation)

எட்ஜ்வொர்த்தும், பிகுவும், வரிகளால் மக்களுக்கு ஏற்படும் மொத்தத் தியாகத்தைக் குறைக்கும் விதத்திலும், அரசின் செலவு

களால் மக்களுக்குக் கிடைக்கும் நலனை அதிகரிக்கும் விதத்திலும் வரிகளையும் செலவுகளையும் ஒதுக்கீடு செய்யவேண்டும் என்றார்கள். எட்ஜ்வொர்த்தின் கூற்றுப்படி, 'வரி செலுத்துவோர் அனைவரும் குறைவான அளவு தியாகம் செய்யும்படி வரிகளை விதிப்பதே நல்லதாகும். பயன்பாட்டு ஒப்பளவு முதலை (utilitarian standard) உண்மையானதென்று கொண்டு, வரியைச் சரியானபடி பகிர்வு செய்வது என்பது சமஅளவு தியாகத்தைச் சுமத்துவது அன்று என வாதிக்கப்படுகிறது. சமுதாயம் முழுவதின்மீதும் குறுமத் தியாகத்தைச் சுமத்துவதற்கு ஏற்றவாறு வரிப்பளுவைப் பகிர்வு செய்வதால் சமுதாயம் அதிக அளவு நன்மை எய்தக்கூடும் என்றும், ஆகையால், சாதாரண நிலைக்கு மேற்பட்ட நிலையில் உள்ளவர்கள் மீது. அதிகமான வரிப்பளுவை ஏற்ற வேண்டும் என்றும், இந்நிலைக்குக்கீழ் உள்ளவர்களுக்கு வரியிலிருந்து முற்றும் விலக்களிக்க வேண்டுமென்றும் கூறப்படுகிறது (பாஸ்டபிள்)[1].

சமுதாயம் முழுமைக்கும் மிகக் குறைந்த அளவு தியாகம் ஏற்படும்படி வரி விதிக்க வேண்டும் என்றால், மிகக் குறைந்த அளவு பயன்பாட்டைத் தரும் செல்வத்தின் பகுதிகளை அரசு வரியாக எடுத்துக் கொள்ள வேண்டும். மிகப் பெரிய வருமானங்கள் மிகக் குறைந்த அளவு இறுதிநிலைப் பயன்பாட்டை நல்குமாயின், வரிப்பளு முழுவதையும் பெருஞ்செல்வர்கள்மீதே சுமத்த வேண்டும். இதனால், அவர்களுடைய வருமானம் குறைந்து அவர்களுக்கு அடுத்த கீழ்ப்படியில் உள்ளவர்களின் வருமானத்திற்குச் சமமாக ஆகக்கூடும். இவ்வாறு வரிப்பளு முழுமையும் எவரெவர் அப்பளுவைத் தாங்கத்தகுந்த ஆற்றல் உள்ளவர்களோ, அவர்கள் மீது திணிக்கப்படும். குறிப்பிட்ட அளவுக்குக் கீழ்ப்பட்ட வருமானங்கள் அனைத்திற்கும் வரியிலிருந்து விலக்கு அளிக்கப்படும்; மிக உயர்ந்த வருமானங்கள் முழுமையும் வரிகள்மூலம் எடுத்துக் கொள்ளப்படும் என்பதை எட்ஜ்வொர்த்தே ஒப்புக் கொண்டார். எட்ஜ்வொர்த்தும், பிகுவும் வரி வீதங்கள் மிகக் கடுமையாக இருந்தால், அவற்றால் உற்பத்திக்குக் குந்தகம் ஏற்படும் என்பதை உணர்ந்திருந்தார்கள். ஆகவே, இத் தீய விளைவுகள் ஏற்படாதவாறு குறுமஅளவு மொத்தத் தியாகத்திற்குப் புதிய விளக்கம் தரவேண்டும் என்று யோசனை தெரிவித்தார்கள்.

### வரிவிதிப்பின் சமுதாய நலன் கோட்பாடு (The Social Welfare Principle of Taxation)

பல சீர்திருத்தவாதிகளும், பொதுவுடைமையில் பற்றுக் கொண்டவர்களும் ஆற்றலுக்கு ஏற்றவாறு வரி செலுத்த வேண்டும்

[1] Bastable, 'Public Finance', p. 302.

என்ற கோட்பாட்டை வலியுறுத்தினர். வரியைக் கருவியாகக் கொண்டு வருமானத்தை மறுபகிர்வு செய்வதே அவர்கள் நோக்கமாகும். பிரஞ்சுப் புரட்சி நிகழ்ந்த காலத்து வாழ்ந்த தீவிர ஆசிரியர்களும், பிரஞ்சுப் புரட்சிக்கு முன்பு வாழ்ந்த ஸிஸ்மாண்டி, ஹால் போன்ற பொதுவுடைமைவாதிகளும் இக் கருத்தைக் கொண்டிருந்தனர். 1880ஆம் ஆண்டுவாக்கில் வாக்னரும் இதே கருத்தைத் தெரிவித்தார். வளர்வீத வரியினுல்தான் இந்நிலையைக் கொணர முடியும் என அவர் வாதித்தார்.

உச்சஅளவு நலக் கோட்பாடு (The Maximum Welfare Principle)

இக் காலத்தில் அரசின் செலவுகளை எங்ஙனம் வரி விதிப்பின் மூலம் நியாயமான முறையில் பகிர்வு செய்யலாம் என்ற ஆய்வுடன் வரிவிதிப்பை அறத்தை அடிப்படையாகக் கொண்டு அணுகியவர்கள் நிறுத்திக் கொண்டார்கள். நலனை அடிப்படையாகக் கொண்டு அணுகியவர்கள் வருமானப் பகிர்வை உள்ளிட்ட ஒரு பரவலான வீச்சில் தங்கள் கருத்தை ஓட விட்டார்கள். ஆயினும், இரு சாராரும் வரிபற்றி மட்டுமே ஆய்ந்தார்களே அல்லாமல், அரசின் பணிகளை அறுதியிட்டார்களில்லை.

இப்பொழுது நாம் அரசின் பணிகளை அறுதியிடுவதையும் கவனத்தில் கொள்வோம். ஐம்பதாண்டுகளுக்கு முன்பு ஷாபின் (Shaffle) என்பவர், அரசின் விருப்பங்களையும் தனியார் விருப்பங்களையும் வீதாசாரத்தில் பூர்த்தி செய்ய வேண்டும் என்ற கோட்பாட்டை வெளியிட்டார். இதை முன்மாதிரியாகக் கொண்டு பிகுவும், டால்டனும் வரவு செலவுக் கொள்கையை வகுப்பதற்கு இரு கோட்பாடுகளைத் தெரிவித்தனர். அவை வருமாறு: 1. அனைத்து செலவினங்களிலிருந்தும் கிடைக்கும் இறுதிநிலைப் பயன்பாடு சமமாக இருக்கும்படி, வளங்களைப் பல்வேறுபட்ட அரசு இனங்களிடையே பகிர்வு செய்ய வேண்டும். 2. அரசு செலவழிக்கும் இறுதி உருபாவிலிருந்து கிடைக்கும் பயன்பாடு, வரியாக வசூலிக்கப்படும் இறுதி உருபாவினுல் ஏற்படும் பயன்பாட்டு இழப்புக்குச் சமமாக இருக்க வேண்டும். இவ்வாருக, அரசுத் துறையிலிருந்து கிடைக்கும் இறுதிநிலைப் பயன்பாடும், தனியார் துறையிலிருந்து கிடைக்கும் இறுதிநிலைப் பயன்பாடும் சமமாக இருக்கும்.

இது கீழ்வரும் வரைபடத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. வரவு செலவு திட்டத்தில் காணப்படும் வரவினங்களும், செலவினங்களும் படுக்கைக்கோட்டிலும், அவற்ருல் ஏற்படும் இறுதிநிலைப் பயன்பாடு, அல்லது பயன்கேடு செங்குத்துக் கோட்டிலும்

அளவிடப்படுகிறது. அரசின் செலவில் அடுத்தடுத்து வரும் உருபாவின் இறுதிநிலைப் பயன்பாடு ee என்ற கோட்டிலும், வரிகளின் இறுதிநிலைப் பயன்கேடு tt என்ற கோட்டிலும் தெரிகிறது. செலவு ஏறஏற இறுதிநிலைப் பயன்பாடு குறைவதால், இரண்டு கோடுகளுமே இடமிருந்து வலமாகச் சரிந்து செல்கின்றன, ee-யிலிருந்து tt-யைக் கழித்தால் மிச்சம் வருவது nn.




படம் 1

பட்ஜெட் நடவடிக்கையினால் ஏற்படும் ஆதாயங்களும் இழப்புக்களும்

வரவு செலவு திட்டத்தினால் கிடைக்கும் நிகர ஆதாயங்களை இது சுட்டுகின்றது. வரவு செலவு திட்டத்தின் உத்தம அளவு CM என்ற புள்ளியில் அறுதியிடப்படுகிறது. அப்பொழுது இறுதிநிலை நிகர ஆதாயங்கள் பூஜ்யமாகும். 'இவ்வாறாக, வரிகளை ஒதுக்கீடு செய்வதில் குறும அளவுத் தியாகம் துணை செய்வது போன்றே, அரசின் செலவுகளை அறுதியிடுவதில் உச்ச அளவு ஆதாயம் துணை செய்கிறது. வரவு செலவு திட்டத்தைப் பற்றிய ஒரு பொதுவான கருதுகோளில் இரண்டும் இணைந்திருக்கின்றன'[1] (மஸ்கிரேவ்.)

[1] R. A. Musgrave, அதே நூல், பக்கம் 114.

# 13. வரிப் பளுவின் பகிர்வு

## வரிப் பகிர்வில் அறக் (நீதிக்) கூறு

## (Ethical Element in the Distribution of Taxation)

இப்பொழுது நாம் ஒரு முக்கியமான பிரச்சினையைப் பரிசீலிக்க வேண்டியிருக்கிறது. அதாவது, எங்ஙனம் வரிப்பளுவை வரி செலுத்துவோரிடையே பகிர்வது என்பதைத் தீர்மானிக்க வேண்டும். இப்பொழுது வரிப்பளு எவ்வாறு இருக்கிறது என்பதை ஆராயாமல், எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை நாம் ஆராயவேண்டும். பொதுவாகச் செல்வத்தைப் பகிர்வதைக் காட்டிலும் வரிப்பளுவைப் பகிர்வது மானிட நிறுவனங்களுக்கு மட்டுமே பொருந்தும் என்று கூறுவது அறத்தாற்றிற்கு இசைந்ததே என்று பாஸ்டபிள் [1] கூறுகிறார். எந்தெந்தப் பிரச்சினைகளில் விதித்தன செய்தலும், விலக்கியன தவிர்தலும் வருகின்றனவோ, அவையெல்லாம் அறத்தைப் பற்றியனவே. ஆயினும், அவற்றுக்குச் சரியான தீர்வு பொருளியல் நிதி விவகாரங்களுடன் பின்னிக் கிடப்பதால், அவை நிதியப் பரிசீலனையின் ஒரு உறுப்பாகவே இருக்க வேண்டும். சூழ்நிலையைப் பற்றிய அறிவில்லாமலும், வரி முறைகளின் விளைவுகளைப் பற்றிய அறிவில்லாமலும், வரி நீதிகளைப்பற்றி ஆராய்ந்து தீர்ப்புக் கூற முற்படுவது பேதமை. ஒரு வரிமுறையின் பெரும்பகுதியும் நீதிக்கு ஒத்ததாக இருக்கின்றது என்பது மட்டும் போதியதாகாது. 'அவ்வரி முறை நீதிக்கு இசைய இருக்கிறது என்பதைப் பொதுமக்கள் ஒப்புக் கொள்ளவேண்டும். பல்வேறு வருக்கத்தினிடையேயும் சமுதாயத்தின் தனிப்பட்ட உறுப்பினர்களிடையேயும் நேர்மையான முறையில் வரிப்பளுவுகள் பகிர்வு செய்யப்படவில்லை என்று, காரணமின்றி மக்கள் நம்பினாலும், அது சமுதாயத்தைக் குலைக்கும் சக்தியாகும். வரிப்பளுவுகளை நியாயமற்ற முறையில் பகிர்வதால் மக்களுக்கு அதிருப்தி ஏற்படும். அதுவே ஒரு புரட்சி தோன்று

[1] Bastable, 'Public Finance', p. 296.

வதற்கான நிமித்தமாகவும் இருக்கும். நிதி விவகாரங்கள் அரசியல் விவகாரங்களையும் பாதிக்கும். வரிப் பளுவுகளைச் சரியான முறையில் பகிர்வு செய்யாத எந்தவிதமான நிதி நிருவாக முறையையும் நாம் ஏற்க முடியாது. எவ்வித முகாந்திரங்களின் அடிப்படையில் வரிப்பளுவைப் பகிர்வு செய்ய வேண்டும் என்று ஆராய்வது மிகச் சிறந்த பயனை அளிக்கும்.

## வீதாசார வரி விதிப்பும், வளர்வீத வரி விதிப்பும்

மனிதர்கள் யாவரும் ஒரே அளவு செல்வத்தையோ அல்லது வருமானத்தையோ உடையவர்களாக இல்லை. ஒப்புமையில் வரிப்பளுவை இவர்கள்மீது எங்ஙனம் பகிர்வது? எந்த வரி அமைப்பு முறை சிறந்தது?

ஒருவரின் செல்வத்தின் மதிப்பு அல்லது வருமானம் உயர உயர வரி வீதமும் உயர்வது வளர்வீத வரி எனப்படும். (உ-ம்.) வருமான வரியில் முதல் உருபா 5,000-க்கு வரியில்லை என்றும் அடுத்த உருபா 5,000 மீது 10%-மும், அதற்கடுத்த உருபா 5,000 மீது 17%-மும், அதற்கடுத்த உருபா 5,000 மீது 23%-மும் வரி விதிக்கப்படுகிறது. செல்வத்தின் மதிப்பு அல்லது வருமானம் யாதாக இருந்தாலும், வரிவீதம் ஒன்றாக இருந்தால் அது வீதாசார வரி எனப்படும். (உ-ம்.) ஏக்கருக்குப் பத்து உருபா நிலவரி என்றால், ஐந்து ஏக்கர் வைத்திருப்பவர் ஐம்பது உருபாக்களும், நூறு ஏக்கர் வைத்திருப்பவர் ஆயிரம் உருபாக்களும், ஆயிரம் ஏக்கர் வைத்திருப்பவர் பதினாயிரம் உருபாக்களும் நில வரி செலுத்தவேண்டும்.

### 1. வீதாசார வரிகளுக்கான வாதங்கள்

(1) வரி செலுத்துவதற்கு முன்பு எந்த நிலையில் இருந்தார்களோ, அதே நிலையில், ஒப்புமையில், வரி செலுத்திய பிறகும் வரி செலுத்துவோர் இருக்கிறார்கள். இது இவ் வரியின் சிறப்பாகும். உதாரணமாக, அனைத்து நிகர வருமானங்களின்மீதும் 5% வருமான வரி விதிக்கப்படுகிறது என்று கொள்வோம்:

| வருமானம் | வரி | வரி செலுத்திய பின்பு எஞ்சிய வருமானம் |
|---|---|---|
| உருபா 100 | உருபா 5 | உருபா 95 |
| உருபா 1,000 | உருபா 50 | உருபா 950 |
| உருபா 10,000 | உருபா 500 | உருபா 9500 |
| உருபா 100,000 | உருபா 5000 | உருபா 95,000 |

வரி செலுத்து முன்பு இரண்டாமவரின் வருமானம் முதல்வரைப் போலப் பத்து மடங்கும், மூன்றுமவரின் வருமானம் இரண்டாமவரைப் போலப் பத்து மடங்கும், நான்காமவரின் வருமானம் மூன்றுமவரைப் போலப் பத்து மடங்கும் இருந்தது. வரி செலுத்திய பிறகும், ஒப்புமையில் இவர்களின் நிலையில் யாதொரு மாறுதலும் இல்லை.

இவ்வாதத்தில் உண்மையிருந்தாலும், இதையே திறனாய்வாளர்கள் ஒரு குறையாகச் சுட்டிக் காட்டுகின்றார்கள். பண வருமானத்தைப் பொறுத்தவரை அவர்களின் நிலையில் மாறுதல் நிகழாவிட்டாலும், அவர்களின் மெய்யான வருமானத்தில் மாறுதல் நிகழ்ந்திருக்கிறது. உயர்ந்த வருமானங்களின் மீதுள்ளதைக் காட்டிலும், குறைந்த வருமானங்களின்மீது வரிப் பளு அதிகமாக இருக்கிறது. பதினாயிரம் உருபாக்கள் வைத்திருப்பவன் வரியாக உருபா 500 செலுத்துவதைக் காட்டிலும் அல்லது நூறாயிரம் உருபாக்கள் வைத்திருப்பவன் உருபா 5,000 வரியாகச் செலுத்துவதைக் காட்டிலும், நூறு உருபாக்கள் வைத்திருப்பவன் உருபா 5 வரியாகச் செலுத்துவதை அதிகப் பளுவாகக் கருதுகிறான்.

(2) வீதாசார வரி முறை எளிதாகவும், ஒரே படியாகக் கடைப்பிடிக்கக் கூடியதாகவும் இருக்கிறது. வளர்வீத வரி முறையில் காணப்படும் சிக்கல் இதில் இல்லை. வளர்வீத வரி முறை இயல்பாகவே தான்தோன்றித்தனமானது. இவ் வரி முறை வீதங்கள் அப்பொழுது ஆட்சியில் இருக்கும் அரசின் விருப்பு, வெறுப்புகளைப் பொறுத்திருக்கிறது.

(3) இறுதியாக, வளர்வீத வரி முறையைத் துஷ்பிரயோகம் செய்வது போல் வீதாசார வரி முறையைத் துஷ்பிரயோகஞ் செய்ய முடியாது. வளர்வீத வரி முறையைக் கொண்டு செல்வர்களின் வருமானம் அல்லது செல்வம் முழுவதையும் பறிமுதல் செய்து விடலாம். இதற்கு நாம் சமாதானம் கூறமுடியும். வரிகள் வீதாசாரமாக இருந்தாலும் சரி, வளர்வீதமாக இருந்தாலும் சரி, அதிகப் பளுவாய் இருக்கமுடியும். உதாரணமாக, ஒவ்வொருவரும் தம் வருமானத்தில் 50% வரியாகச் செலுத்தவேண்டும் என்றால், இதனால் செல்வர்களைக் காட்டிலும் ஏழைகள்தாம் அதிகம் அவதிப்படுவார்கள்.

**வளர்வீத வரிக்கான வாதங்கள்**

(1) குறைந்து செல் பயன்பாட்டு விதி அடிப்படையில் அமைக்கப்பட்டது வளர்வீத வரி: ஆடம் ஸ்மித்[1] தமது முதல்

[1] Adam Smith, Vol. II, p. 350

விதியில் 'ஒவ்வொருவரும் தத்தம் ஆற்றலுக்கு ஏற்றவாறு அதாவது தாம் நுகரும் வருமானத்திற்கு ஏற்றவாறு வரி செலுத்த வேண்டும்' என்று கூறியதனால், அவர் வளர்வீத வரியை ஆதரிக்கவில்லை எனவும், அவர் வீதாசார வரியை ஆதரித்தார் எனவும் நாம் கருதலாம். ஆயினும், அவர் பிறிதோரிடத்தில் வளர்வீத வரிகளை ஆதரிப்பது போலத் தோன்றுகிறது. ஏனெனில், அவர் 'செல்வர்கள் அரசின் செலவிற்கு தம் வருமானத்திற்கு ஏற்ற அளவில் மட்டுமின்றி, சற்றுக் கூடுதலாகவே கொடுக்க வேண்டும்' என வலியுறுத்துகிறார்.

இப்பொழுது உலகெங்கும் வளர்வீத வருமான வரி விதிக்கப் படுகிறது. ஆனால், இந் நூற்றாண்டின் தொடக்கத்தில் பிரிட்டனில்' மிகுந்த முற்போக்கு வாய்ந்த சிந்தனையாளர்கள் கூட இதைச் சந்தேக மனப்பான்மையுடன் நோக்கினர். கிறிஸ்து பிறப்பதற்கு அறுநூறு ஆண்டுகளுக்கு முன்பு ஏதன்ஸ் நகரத்தில் ஒரு வளர் வீத வரி விதிக்கப்பட்டது. அதற்கும் ஓராயிரம் ஆண்டுகட்கு முன்னர் எகிப்தில் ஒரு வருமானவரி விதிக்கப்பட்டது. பிரிட்டனில் பதினான்கு, பதினைந்தாம் நூற்றாண்டுகளில் வளர்வீத வரிவிகிதம் வழக்கில் இருந்தாலும், வருமானத்தைப் பொறுத்தவரை இவ் வெண்ணம் நிலையாக வேரூன்றவில்லை.

ஆயினும், மாண்டஸ்கோ காலத்திலிருந்து வளர்வீத வரிக் கோட்பாட்டுக்கு விளக்கம் இல்லாமல் இல்லை. 1830-ல் பாலி (Paley) என்பவர் முதன்முதல் ஆங்கிலத்தில் அதற்கு விளக்கம் தந்தார். அவர் 'எஞ்சியுள்ள யாவற்றின் (உபரியின்) மீதும் நாம் வரி விதிக்க வேண்டும்' ('we should tax what can be spared')[1] எனக் கூறினார். இருப்பினும், இறுதிநிலைக் கருதுகோளுக்கு ஒரு அகவய விளக்கம் தரப்படும்வரை, வளர்வீத வரிக்குக் கோட் பாட்டளவில், உண்மையில் உறுதியான அடிப்படை ஏற்படவில்லை. இப்பொழுது நாம் அனைவரும் வரி செலுத்துவது ஒரு தியாகம் அல்லது துன்பம் என்பதை உணர்ந்திருக்கிறோம். நூறு ரூபா வருமானம் உடையவன் ஒரு ரூபாவை வரியாகச் செலுத்து வதனால் எவ்வளவு துன்பத்தை அடைகின்றானோ, அவ்வளவு துன்பத்தைப் பதினாயிரம் ரூபா வருமானம் உடையவன் ஒரு ரூபாவை வரியாகச் செலுத்துவதனால் அடைவதில்லை. பணம் அல்லது செல்வத்திலிருந்து கிடைக்கும் பயன்பாடு (அதனை உடையவருக்கு) குறைந்து கொண்டே செல்கிறது என்பதை அடிப்படையாகக் கொண்டது இக் கோட்பாடு. ஒரு குறிப்பிட்ட பண்டத்தை மேலும் மேலும் நுகர்வோமானால், நாம் அதிலிருந்து

[1] Quoted by Stamp. 'The Fundamental Principles of Taxation', p. 40.

பெறுகின்ற பயன்பாடு விரைவிலேயே குறைவதுடன், பயன்பாடே இல்லாமல் பயன்கேடும் ஏற்படும். எடுத்துக் காட்டாக, ஒரே பாட்டை மீண்டும் மீண்டும் ஒரே மாதிரி பாடக்கேட்டால் நமக்கு வெறுப்பே ஏற்படும். அதனால், பண்டங்களின் பொதுவான பயன்பாடு விரைவில் பூஜ்ய நிலையை எய்தும். பணம் உடையவனுக்குப் பணத்தின் தொகை உயர உயர அதன் பயன்பாடு குறைந்து கொண்டே வந்தாலும், பணத்தின் தொகை மிகப் பெருமளவு இருந்தாலொழியப் பூஜ்ய நிலையை எட்டுவதில்லை. ஏனெனில், ஒருவனுக்குப் பணத்தால் கிடைக்கக்கூடிய எல்லாப் பண்டங்களும் இருந்தாலும், மேலும் ஒரு தொகை ஒருவனுக்குக் கிடைத்தால், அதனால் அவனுடைய பெருமித உணர்ச்சிக்கு ஒரு நிறைவு ஏற்படுகிறது.[1]

இதற்கு எதிர்வாதம்

தனியாருக்கு ஒரு பண்டத்திலிருந்து கிடைக்கும் பயன்பாடு குறைந்து கொண்டே வருகிறது என்பதை ஸர் ஸிட்னி சாப்மென்[2] (Sir Sydney Chapman) மறுக்கிறார். முதலில் வருமானத்தில் ஏற்பட்ட ஏற்றத்தால் மிக இன்றியமையாத விருப்பங்கள் பூர்த்தி செய்யப்படுகின்றன என்றும், பின்னர் வருமானத்தில் ஏற்பட்ட ஏற்றத்தால் அவ்வளவு அவசியமில்லாத தேவைகள் பூர்த்தி செய்யப்படுகின்றன என்றும் கூறுகிறார். முந்திய செலவால் மிகுபயன் விளையலாம்; அல்லது விளையாமலும் இருக்கலாம். மிகச் சிறந்த தீர்வாவது லயனல் ராபின்ஸ் (Lionel Robbins) கூறியிருப்பதைப் பின்பற்றுவதாகும். அவர் 'மனிதர்கள் யாவரும் சமமாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இருப்பதாகவோ அல்லது அவர்களை எக்காலும் சமமாகவே கருத வேண்டும் என்பதாகவோ நான் ஒரு போதும் எண்ணியதில்லை. ஆயினும், பல சமயங்களிலும் அவர்கள் சமமாக இருப்பதாக எண்ணி அவர்களை நடத்தாத அரசியல் கணிப்பு, நீதி அடிப்படையில் எரிச்சல் ஊட்டுவதாக இருக்கின்றது' என்று கூறினார். (Economic Journal, Vol. 48, No 4, pp. 635-641, December, 1938.)

(2) ஆற்றலுக்கு ஏற்றபடி வரி செலுத்துதல் என்ற கோட்பாட்டின் அடிப்படையின்மீதும் வளர்வீத வரிகளை நிலை நாட்டலாம். ஒருவருடைய வரி செலுத்தும் ஆற்றல், அவருடைய வருமானம் அல்லது செல்வம் அதிகரிக்கும் அளவைக் காட்டிலும் கூடுதலாகவே அதிகரிக்கின்றது. அதிக வருமானம் உள்ளவருக்கு

[1] Stamp, 'The Fundamental Principles of Taxation', p. 41.
[2] Quoted by Stamp, அதே நூல், பக்கம் 46—47.

அதை மேலும் பெருக்குவதற்கு அதிக வாய்ப்பும், ஆற்றலும் இருக்கின்றது. செல்வராயினும், வறியராயினும்மனிதரின் உணவு, உடை, உறையுள் ஆகிய அடிப்படை முடைகளில் ஒருவருக்கு ஒருவர் பெரிதும் வேறுபாடு இல்லை. இவ் வகையான அவசியச் செலவுக்கு மேல் வரி செலுத்தும் ஆற்றலும், சேமிக்கும் ஆற்றலும் உள்ளன. திங்கள் ஒன்றுக்கு ஐந்நூறு உருபா ஈட்டுபவனைவிடத் திங்கள் ஒன்றுக்கு ஆயிரம் உருபா ஈட்டுபவனுக்கு இரு மடங்குக்கு மேல் வரி செலுத்தும் ஆற்றல் இருக்கிறது.

(3) சமுதாய முன்னேற்றத்தின் ஒரு கருவியாக வளர்வீத வரிக் கோட்பாட்டை நிறுவலாம். இவ் விருபதாம் நூற்றுண்டில் நாம் வாழும் இவ்வுலகு எல்லா உலகங்களிலும் மிகச் சிறந்தது என வாதிடுபவர் யாருமிலர். வருமானத்தில் பெரிய ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன. சிலர் கையில் செல்வம் அளவுக்கு மீறி முடங்குவதைத் தடுப்பதற்கும், செல்வத்தை நியாயமான முறையில் பகிர்ந்து அளிப்பதற்கும், அரசு வரி விதிக்கும் அதிகாரத்தை ஒரு கருவியாகப் பயன்படுத்தலாம். இங்ஙனம் செய்வதை அரசின் அலுவல் என்பதை நிதியத்தைப்பற்றி எழுதுவோர்களில் பெரும்பாலோரும் ஏற்றுக் கொள்கின்றனர். இவ்வகையான சீர்திருத்தத்தைக் கொணர்வதற்கு வளர்வீத வரி ஒரு சிறந்த கருவி. இதைப் பொதுவுடைமை அல்லது செல்வத்தைப் பரவலாக்கும் கருதுகோள் (diffusion of wealth theory) எனவும் கூறலாம். ‘பெரும்பான்மையான மக்களின் நலனுக்கு உகந்த முறையில், பொருளியல் சீர்திருத்தங்களையும், சமுதாயச் சீர்திருத்தங்களையும் கொணர்வதற்குத் தன் அதிகாரங்களைப் பயன்படுத்துவது அரசின் கடமையாகும்’ என மார்ஷல் (Marshall) [1] கூறுகிறுர். தான் விரும்புவது போலப் பொருட்டுறையில் மாறுதல்களைக் கொணர்வதற்கு அரசு வரி விதிக்கும் அதிகாரத்தைப் பயன்படுத்துவது முற்றிலும் பொருத்தமேயாகும்.

(4) வறியவர்களைக் காட்டிலும் செல்வர்கள்தாம் அரசின் பாதுகாப்பை அதிகம் நம்பியிருக்கின்றனர். முறையான நாகரிகமும், அந் நாகரிகத்தால் விளைந்த அரசின் நிலையான அமைப்புமே சிலர் அதிக வருமானத்தை நுகர்வதற்கு வசதியாக இருக்கிறது. அரசு போதிய அளவு பாதுகாப்பு அளிக்காவிடில், பெருத்த வருமானத்தை உடையோர் தங்கள் வருமானத்தில் பெரும்பகுதியையும், தங்கள் செல்வத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்காகச் செலவிட வேண்டியிருக்கும். இதற்காக இவர்கள் ஒரு படையையே திரட்டி வைத்துக் கொள்ள வேண்டியிருக்கும். வறிய

[1] Marshall, 'After-War Problems', p. 317, Quoted by Sir Josiah Stamp.

வர்கள் தங்கள் சொத்து களவாடப்படும் என்று அஞ்ச வேண்டிய தில்லை. ஏனெனில், மடியில் இருந்தால் தானே வழியில் பயம்?

பெருஞ் செல்வர்கள் தங்கள் வருமானத்தை நுகர்வதற்கு மட்டும் அரசினுக்குக் கடன் பட்டிருக்கவில்லை. அரசு இல்லை யானால், அவர்களால் இப் பெருந்தொகையினை ஈட்டியிருக்க முடியாது. ஏனெனில், சட்டம், அமைதி இல்லாதவிடத்து அவர்கள் தங்கள் திறமையைப் பயன்படுத்துவதற்கும், பயன்படுத்திப் பொருள் ஈட்டுவதற்கும் வாய்ப்பு இருக்காது. பெரும் வணிகர்கள் தாம் ஈட்டிய பெருஞ் செல்வம் அனைத்தும் தம் திறமையாலேயே சம்பாதித்தது என்றெண்ணுவது இயல்பே. பாலை நிலமான ஒரு நாட்டிலோ அல்லது பொருளியல் துறையில் பிற்போக்கான நிலையில் உள்ள ஒரு நாட்டிலோ தாங்கள் இத் திறமையைப் பெற முடியாது என்பதை அவர்கள் சிந்தித்தார்களில்லை. இக் காலத்தில் தொழில் அதிபரின் தொழில் முனைவு, பல ஆயிரக் கணக்கான தொழிலாளர், போக்கு வரவு ஊழியர், நுகர்வோர், இவர்களையும், எல்லாவற்றுக்கும் மேலாக, அவசியமான ஊர்க் காவலரை நல்கும் ஒழுங்கான அரசு இவையனைத்தையும் சார்ந் திருக்கிறது. இவையின்றேல் அமளியும், குழப்பமும் விளையும் என்பதையும், நிரம்பப் பொருளீட்டுவதில் வெற்றி பெற்றவர் அரசுக்கு மிகவும் கடன் பட்டிருப்பதையும் அதனால் அரசு தன் வருமானத்தை (வரியாக) வசூலிப்பதில் வளர்வீத முறையைக் கடைப்பிடிப்பது சரிதான் என்பதையும் உணர்ந்திருக்கிறார். யார் யாருக்கு அதிக செல்வம் அல்லது வருமானம் இருக்கின்றதோ, அவர்களிடமிருந்து அதிகம் வரியாக எடுத்துக் கொள்ளப்படும் என்பதே இக் கோட்பாடு.

உபரியின்மீது வரி விதிப்பு (Taxation of Surplus)

ஜே. ஏ. ஹாப்ஸன் (J.A.Hobson) வரி செலுத்தும் ஆற்றலைப் பின்வருமாறு விளக்குகிறார்: 'உற்பத்திக் காரணிகள் திறமையாகச் செயல்படவேண்டும். இதற்கு உற்பத்திக் காரணிகளை அவற்றிற்கு உரியவர்கள், திறமையாகப் பயன்படுத்துவது இன்றியமையாத தாகும். இது ஆக்கச் செலவில் (cost of production) அடங்கும். இதனால், உற்பத்திச் செலவின்மீது வரி விதிக்கப்பட்டால், அதற்கு வரியைத் தாங்கும் ஆற்றல் கிடையாது. உழைப்பாளிகள் தொடர்ந்து வேலை செய்ய வேண்டும் எனில், அவர்களுக்கு நல்ல ஊதியம் தரவேண்டும். அப்போதுதான் அவர்களும் நன்னிலையில் இருப்பார்கள். அவர்களின் திறமையும், வசதியும் நன்னிலையில் இருக்கும். ஆகவே, கூலிகளும் ஆக்கச் செலவில் அடங்கும். இப் போதிருக்கும் சமுதாயப் பொருளாதாரச் சூழ்நிலைகளில்

ஆக்கத்தைத் தரும் தொழிலை நிறுவ முனைவு கொண்டு, அதை அமைத்து நிருவகிப்பதற்குப் போதிய தொழில் திறன் வேண்டும். ஆகையால், இவ்வகையான மூளை உழைப்புக்குத் தரப்படும் சம்பளம், இலாபம் முதலானவையும் ஆக்கச் செலவில் அடங்கும். இத்துடன், தனியார் தொழில் முனைவுக்கு இன்றி யமையாத குறும வட்டியையும் சேர்க்கவேண்டும். அப்போது தான் போதிய சேமிப்பு ஏற்படும். உற்பத்தி செய்முறைகளுக்கு (productive processes) வேண்டிய எந்திரங்கள், கருவிகள், மூலப் பண்டங்கள் அனைத்தையும் வாங்குவதற்கு வேண்டிய புதிய மூலதனத்தை முதலீடு செய்வதன்மூலம் பெறமுடியும்.

ஆக்கச் செலவுகளின்மீது வரி விதித்தால் அவற்றுக்கு அவ் வரியைத் தாங்கும் ஆற்றல் இல்லை. இதனால், அவற்றின்மீது வரி விதிக்க இயலாதென்றோ, சிறிது காலத்திற்கு அவற்றின் மீது வரி விதிக்கக் கூடாதென்றோ நாம் கூறவில்லை. இச் செலவு களின்மீது வரி விதித்தால் 1. உற்பத்தி குறையக் கூடும். 2. இன்றியமையாத உற்பத்திச் சாதனங்களின் பகிர்வைக் குறைப்பதனால், அவற்றின் பேரில் வரி விதித்தால், அவ்வுற் பத்திக் காரணிகள், பிறர்மீது வரியைப் புரட்டக் (Shift) கூடும். இவ்வாறு வருமானத்தில் இரு கூறுகள் இருக்கின்றன. அவை: (1) ஆக்கச் செலவு, (2) உபரி. (அ) அனைத்து வரிகளையும் உபரியின்மீதே விதிக்க வேண்டும். ஆக்கச் செலவுகளின்மீது வரி விதித்தால், அவ் வரி உபரியின் மீது புரட்டப்படுகிறது. இதனால் உற்பத்திக்கு ஊறு ஏற்படுகிறது. மேலும், நுகர்வோர்களும் கசக்கிப் பிழியப்படுகிறார்கள். (ஆ) இங்ஙனம் வரி விதிப்பதால் வரியின் இறுதி நிலைப்பாடு எங்கு விழுகிறது என்பதை மக்கள் அறியாமல் ஏமாந்து போகிறார்கள். நாட்டின் பொருளாதார வாரம், வட்டி, இலாபம் போன்ற செல்லுகளை (payments) உபரியாகக் கொள்ளலாம். எல்லாவகை உபரிகளுக்கும் வரி தாங்கும் வல்லமை பூரணமாய் இருக்கிறது. இவ்வித உபரிகளின்மீது வரி விதித் தால், அவற்றால் வரியை நிராகரிக்கவோ அல்லது பிற மீது புரட்டவோ முடியாது. தவறான வரி விதிப்புக் கொள்கை யினால் ஆக்கச் செலவுகளின்மீது விதிக்கப்படும் வரிகள் அனைத்தும், யாதாயினும் ஒரு வடிவத்திலுள்ள உபரியின்மீது புரட்டப்படுகிறது.[1]

**எதிர்வாதங்கள்**

(1) வளர்வீத வரிமுறை இயல்பாகவே தான்தோன்றித் தனமாய் இருக்கிறது. வீதாசார முறை என்ற தெளிவான

[1] J. A. Hobson, 'Taxation in New State,' Mechmen & Co., Ltd., 1919, p. 41-43.

முறையைக் கைவிடுவது, கடலில், திசை காட்டும் கருவியும் துடுப்பும் இல்லாததால் ஒரு கப்பல் அலைக்கழிக்கப்படுவதை ஒக்கும். மேலும், அதனால் விளையும் அநீதிக்கு ஓர் எல்லை இராது என்று மெக் குல்லாக் (Mc Culloh—Quoted by Plehn, p. 97) பன்முறை கூறியிருக்கிறார். வரிசெலுத்துவதற்கு முன்பு இருந்த ஒப்புமை நிலையிலேயே, வரி செலுத்திய பின்பும், வரி செலுத்துவோர் இருக்க வேண்டும் என்பது அவரின் கருத்தாகும். ஸார்ஜெண்டு (Sargant) என்பவர் இவ் வரியை ஒரு குறிப்பிட்ட தொகையாகக் கொண்டார். 9 பென்சு செலுத்திவிட்டு ஒருவர் ஒரு பணியை அரசினிடமிருந்து பெறுகிறார். அதே பணிக்கு இன்னொருவரை ஒரு ஷில்லிங் தரும்படி அரசு கேட்பதற்கு யாதொரு முகாந்தரமும் இல்லை எனக் கருதுகிறார். 'எப்பொழுதாவது ஸார்ஜெண்டு ஒரு மருத்துவருக்குப் பணம் கொடுத்திருப்பாரா என்று ஒருவர் வியப்படைய வேண்டியிருக்கிறது,' என இதைப்பற்றி ஸர் ஜோஸையா ஸ்டாம்பு [1] திறனாய்வு செய்கிறார்.

(2) வளர்வீத வரிமுறையினால் மூலதனத்திரட்சி ஒருவேளை பாதிக்கப்படலாம் என்பதே இவ் வரி முறைக்கு எதிரான இன்னொரு வாதமாகும். பெருத்த செல்வத்தை ஈட்டலாம் என்பது சேமிப்புக்கு ஒரு முக்கிய காரணமாகும். ஆனால், இவ் விருப்பம் ஈடேறவொண்ணாமல் ஒரு வரி முறை தடுக்குமானால், அதனால் மூலதன வளர்ச்சி தடைப்படலாம். கடுமையான வரிகளை விதிக்கும் நாடுகளினின்றும் செல்வர்கள் நீங்கிப் பிற நாடுகளில் குடி புகலாம். ஏற்கனவே செல்வம் நாட்டைவிட்டு வெளியேறிக் கொண்டிருக்குமானால், வரிவிதிப்பினால் அத் தொகை அதிகரிக்கலாம். அதனால், பிற நாட்டிலிருந்து நம் நாட்டிற்கு வரும் செல்வமும் தடைப்படலாம். மிகவும் முற்போக்கு அடைந்த தொழில்கள் நிரம்பிய நாடுகளுக்குப் பிறிதொரு விளைவும் ஏற்படலாம். அதாவது குறைந்த வருமானத்திலேயே சேமிப்பு நின்றுவிடலாம். அமெரிக்க ஐக்கிய நாடுகள், மேற்கு ஜெர்மனி, பிரிட்டன் போன்ற நாடுகளிலிருந்து மூலதனம் எளிதில் வெளியேறாமல் இருக்கலாம். இருப்பினும், ஆண்டுதோறும் அதிகரித்துக் கொண்டு வரும் மூலதனத்தின் தொகை தேய்ந்து கொண்டே வந்து, இறுதியில் சேமிப்பு இல்லாமல் போய் விடலாம். புள்ளி வல்லுநரான வில்லியம் நியூ மார்ச் (William Newmarch)[2] என்பவர் வளர்வீத வரியைப் 'பறிமுதல்' என்றும், முன் யோசனை

[1] Sir Josiah Stamp, 'The Fundamental Principles of Taxation', 1923. Macmillan & Co., p. 39.

[2] William Newmarch, Quoted by Sri Josiah Stamp, 'The Fundamental Principles of Taxation', Macmillan & Co., p. 39.

யையும், சீரிய பண்பையும் தண்டிப்பது என்றும் கூறுகிறார். மேலும், ஒருவன் தனக்கும், பிறருக்கும் நன்மை செய்வதன்மீது விதிக்கப்படும் வரி வளர்வீத வரி என்றும் கூறுகிறார். 1861-ல் ஜான் ஸ்டூவர்ட்டு மில் (John Stuart Mill) 'ஒரு படித்தர வருமான வரி ஒரு படித்தரக் கொள்ளைக்கு (graduated robbery) ஒப்பாகும்' என்று கூறினார். மேலும், அவர் 'குறைந்த வருமானங்களைக் காட்டிலும், கூடுதலான வருமானங்களின் மீது கூடுதலான சதவீதத்தில் வரி விதிப்பது, உழைப்பு, சிக்கனம் இவற்றின்மீது விதிக்கப்படும் வரிக்குச் சமமானதாகும்' என உரைத்தார்.[1]

இவ் வெதிர்வாதங்களுக்கு மறுமொழியாக நாம் சொல்லக் கூடியது யாதெனில், அண்மைக் காலத்திய அனுபவத்தைப் பார்க்கும் பொழுது இவ்வித அச்சங்களுக்கு யாதொரு காரணமும் இல்லை என்பதே. வளர்வீத வரியினால் சேமிக்கும் எண்ணத்தின் வலி குன்றுது. அமெரிக்காவிலும், பிரிட்டனிலும் கடுமையான வளர்வீதங்களில் வருமான வரியும், இறப்பு வரியும் வசூலிக்கப் பட்டாலும் சேமிப்புக் குறையவில்லை. வளர்வீத வரி யார் யார் நிறைய வருமானத்தைப்பெறுகிறார்களோ, அவர்களையே பாதிக்கும். ஆனால், அவர்களோ சிந்தித்துச் செயலாற்றுவதன்மூலம் மட்டு மின்றி, பழக்கத்தினாலும் சேமிக்கிறார்கள். மற்றும், செல்வர்களின் மீது கடுமையான வரி விதித்து ஏழைகளுக்குப் பல நன்மைகளை அரசு செய்வதால், ஏழைகளின் வருமானம் பெருகும். அங்ஙனம் பெருகிய வருமானத்தின் ஒரு பகுதியை அவர்கள் சேமிக்கவும் கூடும். இதனால் மொத்தச் சேமிப்பு அதிகரிக்கலாம்.

(3) வளர்வீத வரிக்கு எதிரான இன்னொரு வாதம் அவ் வரியைப் பலர் செலுத்தாமல் தவிர்ப்பதே. வரி அதிகரிக்க அதிகரிக்க, அதைத் தவிர்ப்பதற்கான முயற்சிகளும் அதிகரிக் கின்றன. சிறந்த பண்டவகைகளின்மீது பிரத்தியேக வரிகளை விதித்தால், அதினின்றும் தப்புவதற்குப் பொய் வாக்குமூலங்களைக் கொடுக்கிறார்கள். வாரிசு வரிகளை வளர்வீத அடிப்படையில் விதித்தால், சில சொத்துகளை மறைப்பதன் வாயிலாகவும், வாய் மொழியாகச் சொத்துகளைப் பிறருக்குப் பரிசாக அளித்துப் பரா தீனம் செய்வதன் வாயிலாகவும், சிலர் வரி செலுத்தாமல் தப்பு கின்றனர். வருமான வரி செலுத்துவோரும் பொய் வாக்குமூலங் களைக் கொடுக்கின்றனர். இவ்வாறு வரியினின்றும் தப்புவதை ஓரளவு நிருவாக நடவடிக்கைகள்மூலம் தடுக்கலாம். பொய் யான அறிக்கைகளைத் தயாரித்தவர்களுக்கும், தயாரிப்பதற்குத் துணை நின்றவர்களுக்கும் கடுமையான தண்டனை வழங்குவது

[1] Quoted by Adams, p. 349.

இன்றியமையாதது. சம்பந்தப்பட்ட எல்லாக் கணக்குப் புத்தகங்களையும், ஆவணங்களையும் சமர்ப்பிக்குமாறு கட்டளை இடுவதற்கான அதிகாரங்களை, அரசு, வரி வசூலிக்கும் அதிகாரிகளுக்கு அளிக்கவேண்டும். வரிப்பளு அதிகமாக அதிகமாக, இச் சமுதாய துரோகிகளுக்கு வழங்கப்படும் தண்டனையும் இவ்வாறு வரித் தளத்தைப் பொறுத்தவரை வீதாசாரமாக இருக்கும். ஒரு வரி, வருமானத்தைப் பொறுத்தமட்டில் தேய்வு வீதமாக இருக்கலாம். பிந்திய பிரயோகம் அத்துணை சரியில்லை என்றாலும், அது ஒரு பயனுள்ள பொருளைத் தருவதால் அதன் வழக்கை விலக்குவது அறிவுடைமையாகாது. நாம் இதைப் புரிந்து கொண்டதால், இரண்டு பொருளில் இச் சொற்றொடரை (தேய்வு வீதம்) வழங்குவதால் எவ்விதமான ஆய்வுச் சிக்கலும் ஏற்படாது. பிந்திய பொருளில் அனைத்து வீதாசார வரிகளும், ஆள்வரியும் (Poll Tox) தேய்வு வீத வரிகளாகும்.




படம் 2

வீதாசார வரி
மாற்று (வரி) வீத
அட்டவணைகள்

வளர்வீத வரி
மாற்று (வரி) வீத
அட்டவணைகள்

தேய்வுவீத வரி
மாற்று (வரி) வீத
அட்டவணைகள்

தளத்தை (வரி) வீதத்தால் பெருக்கினால் செலுத்த வேண்டிய வரித்தொகை கிடைக்கும். ஒரு வீதாசார வரியில் பெருக்க வேண்டிய தொகையில் (multiplicand) மாறுதல்கள் நிகழ்ந்தாலும், பெருக்கி அல்லது பெருக்கும் எண் (multiplier) மாறாது இருக்கிறது. ஒரு வளர்வீத வரியில் பெருக்க வேண்டிய தொகை அதிகரிக்கும் பொழுது பெருக்கியும் அதிகரிக்கிறது. ஒரு தேய்வு வீத வரியில் பெருக்கவேண்டிய தொகை அதிகரிக்கும் பொழுது பெருக்கிக் குறைகிறது. இவ் வேறுபாடுகள் மேலேயுள்ள வரை படத்தில் காட்டப்பட்டிருக்கின்றன.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. E. R. A. Seligman, 'Progressive Taxation in Theory and Practice', 1908, Chapter III.

2. A. R. Prest, 'Public Finance in Theory and Practice,' Chapter VI.

# 14. வளர்வீத வரி

1908ஆம் ஆண்டில் ஸெலிக்மெனின் 'வளர்வீத வரி விதிப்பு' என்ற நூல் (இரண்டாம் பதிப்பு) வெளி வந்தது. 1909-ல் சூரட்டின் வளர்வீத வரி பற்றிய கருதுகோள் வெளி வந்தது.[1] இதன் பின், வளர்வீத வரி விதிப்புக்குச் சாதகமாகக் கூறப்பட்ட வாதங்கள் மாறின. இங்கு அவ் வாதங்களைப் பற்றி ஒரு ஆய்வு நிகழ்த்தப்படும். வளர்வீத வரி விதிப்புக்கு ஆதாவாகக் கூறப் படும் கருதுகோள்களை ஐந்து வகையாகப் பிரிக்கலாம். அவை வருமாறு :

1. தியாகக் கருதுகோள்கள் (Sacrifice Theories). இவை நான்கு வகைப்படும்: (அ) சம அளவு தியாகக் கருதுகோள், (ஆ) வீதாசார அளவு தியாகக் கருதுகோள், (இ) சம அளவு இறுதிநிலை தியாகக் கருதுகோள், (ஈ) குறைந்த அளவு தியாகக் கருதுகோள்.

2. ஆற்றல் கருதுகோள்
3. உபரி வருமானக் கருதுகோள்
4. சமுதாய முக்கியத்துவக் கருதுகோள்
5. சமுதாய-அரசியல் கருதுகோள்.

முதலில் தியாகக் கருதுகோள்களைப் பற்றி ஆய்வோம்.

## 1. தியாகக் கருதுகோள்கள்

அரசின் நிதியியலைப் பயிலுவோர் பல்வேறு தியாகக் கருது கோள்களைப் பற்றி அறிந்திருப்பார்கள். ஆயினும், இந்த ஆய்வில் கூறப்படும் பல்வேறு தியாகக் கோட்பாடுகளைத் தெளிவாக விளக்குதல் விரும்பத்தக்கது. ஏனையோரைப் போன்று ஒவ்வொரு

[1] Suret's 'Theories de l' impot Progressive.'

வரி செலுத்துவோரும் ஒரே அளவு பயன்பாட்டைத் (சமமான பகுதி) தியாகம் செய்யும்படி வரிகளை விதிப்பதே சம அளவு தியாகக் கருதுகோளாகும். ஒவ்வொருவரும் தன்னுடைய வருமானத்தில் ஒரே வீதாசார அளவு பயன்பாட்டைத் தியாகம் செய்வதே வீதாசார அளவு தியாகக் கருதுகோளாகும். சம அளவு இறுதிநிலை தியாகக் கருதுகோளின்படி ஒவ்வொருவரும் அடையும் இறுதிநிலைப் பயன்பாட்டுக்கேடு சமமாக இருக்க வேண்டும். குறைந்த அளவு தியாகக் கருதுகோளின்படி நேர் முகமாகவும், மறைமுகமாகவும் அனைவராலும் தியாகம் செய்யப் படும் பயன்பாட்டின் மொத்தம் அவர்கள் பெறும் வருவாயின் வீதாசாரத்துடன் ஒப்பிடும்பொழுது கூடுமானவரை மிகக் குறைவாக இருக்கவேண்டும்.

எந்த ஊகங்களை அடிப்படையாகக் கொண்டு தியாகக் கோட்பாடுகள் எழுந்தனவோ, அவற்றைக் கருத்தில் கொள்ளாமல் தியாகக் கருதுகோளின்படி வளர்வீத வரியைத்தான் விதிக்க வேண்டும் என்று கூறமுடியாது. நிதியத்தைப் பற்றிய இலக்கியம் நெடுகிலும் இவ் ஊகங்களைப் பற்றிய முழுமையான விளக்கங்கள் காணப்படவில்லை. ஆனால், மிகவும் சிந்தித்து எழுதிய அறிஞர்கள் தியாகக் கோட்பாடுகளைப் பற்றி சர்ச்சை செய்திருக்கிறார்கள். அவர்களுடைய நூல்களில் ஒன்பது தேரா ஏற்புகள் (Postulates) வெளிப் படையாகவோ அல்லது உள்ளுறையாகவோ கூறப்பட்டிருக்கின்றன. இவ் ஊகங்களில் ஏழு அனைத்து தியாகக் கோட்பாடுகளுக்கும் பொதுவானவை. அவை வருமாறு :

(அ) குறைந்த அளவு பிழைப்பு மட்டத்திற்கும் மிகையாகக் கிடைக்கும் வருமான வீதத்திற்கே வளர்வீத வரி பொருந்தும்.

(ஆ) பண வருமானத்தின் வீதங்கள் அதிகரித்துக் கொண்டு வந்தால், குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாடு செல்லுபடியாகும்.

(இ) வருமானத்தில் மாறுதல் ஏற்பட்டாலும், வருமானம் பெறுவோரின் புலனுணர்வுகள் மாறாது இருக்கின்றன; அதாவது வருமான வீதம் அதிகரித்தாலும், தனியாரின் புலனுணர்வுகள் மாறுவதில்லை.

(ஈ) வருமானத்தின் குறைந்து செல் இறுதிநிலைப் பயன் பாட்டிற்கும், அதிகரித்துக் கொண்டு வரும் வருமான வீதங்களுக்கும் இடையேயுள்ள உறவைக் காட்டும் வளைகோடே, வருமானத்தின் வளர்ந்து செல் இறுதிநிலைப் பயன்பாட்டிற்கும்,

வரியை விதித்த பின்பு குறைந்து வரும் வருமான வீதங்களுக்கும் இடையேயுள்ள உறவையும் காட்டுகிறது.

(உ) வெவ்வேறு வருமான வீதம் இருந்தாலும், அவை ஒவ்வொன்றிலிருந்தும், வரி செலுத்துவோருக்குக் கிடைக்கும் வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாடு சமமானது. அதாவது வரி செலுத்துவோர் யாராக இருந்தாலும், வருமானத்தின் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டின் வளைகோடு ஒரே வடிவினதாகவும், நிலையானதாகவும் இருக்கும்.

(ஊ) வரிகள் மூலம் கிடைத்த தொகையை அரசு செலவழிக்கிறது. இச் செலவினால் வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாடு மாறுவதில்லை.[1]

(எ) 1. ஒரு குறிப்பிட்ட வருமானத்தின் மெய்யான ஆக்கச் செலவு அனைத்து வரி செலுத்துவோருக்கும் சமமானது. 2. வெவ்வேறுபட்ட வரி செலுத்துவோர்களின் குடும்ப முடைகள் ஒரே மாதிரியானதே.

இந்த ஏழு ஊகங்களும் நடப்புக்குப் பொருந்தியிருந்தால் ஒழிய, தியாகக் கருதுகோள்களில் ஒன்றேனும் தருக்க முறையில் வளர்வீத வரி விதிப்புக்கு இட்டுச் செல்வதில்லை. இவ் வேழு ஊகங்களும் நடப்பு உண்மைக்குப் பொருந்தி இருக்கின்றதா என்பதை இப்போழுது பார்ப்போம்.

(1) குறைந்த அளவு பிழைப்பு மட்டத்திற்கும், மிகையாகக் கிடைக்கும் வருமானத்திற்கும் வளர்வீத வரி பொருந்தும் என்பது இவ் ஊகமாகும். இவ் ஊகம் உண்மைக்குப் பொருந்தியதா என்பது கேள்வியன்று. இது அறிவுக்குப் பொருந்தியதா என்பதே கேள்வி. இது அறிவுக்குப் பொருந்தியதுதான் என்பதற்கு ஆதாரமாக, பிழைப்பு மட்டத்திற்குக் குறைவாகக் கிடைக்கும் வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாடு அளவிறந்தது என்று வாதிப்பது சரியே. ஒப்பிடக் கூடிய பரப்புகளின் அளவுகளில் (Dimensions) ஒன்று அளவிறந்ததாக இருக்கும் பொழுது, தியாகத்தின் பரப்புகளை ஒப்பிட முடியாது. பிழைப்பு மட்ட வருமானத்தை உடையவரின் வரி செலுத்தும் ஆற்றல் பூஜ்யம் என்றும் வாதிடலாம். ஆகவே, அவருடைய வருமானத்தில் கை வைப்பது அவருடைய உயிரையே குடிக்கக் கூடும். பிழைப்பு மட்டத்திற்குமேல் வருமானம் பெறுகிறவர்கள் செலுத்தும் வரிகளினால் ஏற்படும்

[1] வரி விதிப்பைப் பற்றிய தியாகக் கருதுகோள்களின் ஆய்விலிருந்து, வரி ஒழிந்த அனைத்து வருவாய் வகைகளும் விலக்கப்படுகின்றன.

தியாகத்தைக் காட்டிலும், இத் தியாகம் தரத்திலும், கணியத்திலும் அளப்பரியதாகும்.

(2) 'இறுதிநிலைக் கருதுகோள் அதன் அகவுணர்வைக் கொண்டு விளக்கப்படும்வரை வளர்வீத வரிக்குக் கோட்பாட்டு அளவில் உறுதியான அடிப்படை உண்மையில் ஏற்படவில்லை' என்று ஸர் ஜோஸையா ஸ்டாம்பு[1] எழுதுகிறார். ஜெவன்ஸ், அவருடைய சீடர்கள் ஆகியவர்களின் இன்ப நல வாத உளவியலை (Hedonistic Psychology) ஸ்டாம்பு குறிப்பிடுவாரே யாகில், இக் கால உளவியல் அறிஞர்கள் அவருடைய கூற்றைப் பிழையானது என்று இலகுவில் நிரூபிக்க முடியும். குறைந்து செல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாடு சரியானதே என்பதற்கு இரண்டு நம்பத்தக்க வாதங்களை இக் கால ஆசிரியர்கள் கூறுகின்றனர். முதலாவதாக, பயன்பாட்டுக்குப் பதிலாக விரும்பும் தன்மையைக் (desiredness) கொண்டனர். இரண்டாவதாக, ஜெவன்ஸின் இன்ப நல வாதத்தை (Hedonism) விட்டு விட்டு அதற்குப் பதிலாக ஒரு உளவியல் அடிப்படையைக் கொள்கின்றனர். இவ்வடிப்படை தானும் இக் கால உளவியலுடன் ஒத்திருக்கிறது.

ஆயினும், ஒரே தன்மைத்தான பண்டங்கள், ஊழியங்கள் இவற்றின் நுகர்வுக்குக் குறைந்துசெல் பயன்பாட்டுக் கோட்பாடு பொருந்தும் என்று ஒத்துக்கொள்வது, இக் கோட்பாடு பண வருமானத்தின் அதிகரிப்புகளுக்கும் பொருந்தும் என்று ஒத்துக் கொள்வதிலிருந்து வேறானதாகும். பின்னர் கூறிய விளக்கத்தின் அடிப்படையிலேயே இக் கோட்பாடு வளர்வீத வரிக்கு அடிப்படை யாக விளங்குகிறது.

எந்த வாதங்களின் அடிப்படையில் வருமானத்தின் குறைந்து செல் இறுதிநிலைப் பயன்பாடு கூறப்படுகிறது என்பதனையும், அதன் திறனையும் ஸர் ஸிட்னி சாப்மென் இயம்புகிறார். இவ் வாதங்கள் மூன்றாகும்: (1.) நன்னிலையில் இருப்போர் பைசா நாணயங்களைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. (2.) எவ்வளவு செல்வந்தனாக ஒருவன் இருக்கிறானோ, அப்பொழுது, குறிப்பிட்ட வேலையைக் காட்டிலும் மிகுதியாகச் செய்யும்படித் தூண்டு வதற்கு, அதிக ஊதியம் வேண்டப்படுகிறது. இதற்கு அவன் செல்வந்தனாக இருக்கும்பொழுது, அவனுக்குப் பணத்திலிருந்து கிடைக்கும் பயன்பாடு குறைவாக இருக்கிறது என்பதே காரண மாகும். (3.) நாம் செல்வந்தர் ஆக ஆக, மிகவும் தொல்லை

[1] Sir Josiah Stamp, 'The Fundamental Principles of Taxation', p. 40.

கொடுக்கும் ஆசைகள் முதலில் திருப்தி செய்யப்படுகின்றன. அத்துணை தொல்லை தராத ஆசைகளைப் பின்னர் பூர்த்தி செய்து கொள்ளலாம் என்று விட்டு விடுகின்றார்கள். ஆகவே, அவைகளை நிறைவேற்றுவதால் நமக்குக் குறைந்த பயன்பாட்டே கிடைக்கிறது.

முதல் வாதத்தைச் சாப்மென் பின்வருமாறு மறுக்கிறார்: செல்வந்தர்கள் செலவழிக்கும் பொழுது பைசாக்களைக் கணக்கிடு அலகாகக் கொள்வதில்லை. பைசாக்களைச் சேமித்து வைப்பதற் கான உபாயங்களை வகுப்பதில் அவர்கள் தங்கள் பொன்னான நேரத்தைச் செலவிட விரும்பவில்லை. ஏழைகள் பைசாக்களைக் கவனமாகச் சேமித்தே, உரூபாக்களைச் சேமிக்கிறார்கள். செல் வர்கள் பைசாக்களைச் செலவழிப்பதில் கருத்தை ஊன்றினால் உரூபாக்களை இழப்பார்கள். இக் கருத்தையே 'கடுகு போகிற இடம் தெரியும்; பூசுணைக்காய் போகிற இடம் தெரியாது' என்ற தமிழ்ப்பழமொழியும் கூறுகிறது. ஆகவே, ஒப்பிடும்பொழுது, ஒப்பிடுவதற்கு எடுத்துக் கொண்ட இரண்டு பொருள்களில், ஒன்றில் எடுத்துக் கொள்ளாத தொகையினை நாம் ஒப்பளவு (standard) அலகாகக் எடுத்துக் கொள்ளக்கூடாது.

இரண்டாவது வாதத்தில், வாதத்திற்காக, வாதத்தின் முற் பகுதியை ஏற்றுக் கொண்டாலும், நாம் கொண்ட முடிவு இதி லிருந்து பெறப்படவில்லை என்கின்றார். 'ஒருவருக்கு அதிகச் செல்வம் இருந்தால், அவர் ஓய்வை அதிகமாக மதிப்பார். ஆகை யினால் ஒருவன் செல்வனான பிறகு, அதிகப்படியான உழைப்பை மேற்கொள்வதற்கு அதிக அளவு தியாகம் செய்ய வேண்டியிருக் கிறது. மேலும், அதிக ஈட்டங்களின் விளைவாக ஒருவர் அதிக மான செல்வத்தைப் பெற்றால், சம்பந்தப்பட்ட ஆள், குறைந்த ஊதிய வீதத்தை ஒப்புக் கொள்வதன் வாயிலாகத் தன்னைத்தானே வருத்திக் கொள்ள மாட்டார். இது தவிர, குறைந்த ஊதியத்திற்கு உழைப்பது, உயர்ந்த ஊதியத்திற்கு உழைத்து ஈட்டும் அவருடைய ஆற்றலைக் குறைக்கக் கூடும் என்பதையும் அவர் இயல்பாகவே கருத்தில் கொள்வார்.'

மூன்றாவது வாதத்தை அவர் பின் வருமாறு மறுக்கிறார்: 'ஆண்டு தோறும் எனக்கு 200 பவுன் வருமானமாக இருக்கும் பொழுது, அசல் சிப்பன்டேல் (chippendale) நாற்காலி ஒன்றை வாங்குவதற்குப் பதிலாக ஆறு போலி சிப்பன்டேல் நாற்காலிகளை வாங்குகிறேன் என்பதிலிருந்து, என்னுடைய ஆண்டைய வருமானம் 200 பவுனாக இருக்கும் பொழுது, அசல் நாற்காலி

பவுன்=பவுண்டு ஸ்டர்லிங்

ஒன்றை வாங்குவதற்குப் பதிலாக, ஆறு போலி நாற்காலிகளை வாங்குகிறேன் என்று தெரிகிறது. ஆறு போலி நாற்காலிகளின் விலையும், அசல் நாற்காலி ஒன்றின் விலையும் சமம். ஆனால், இதை விடக் கூடுதலாக என்னுடைய ஆண்டைய வருமானம் இருக்கும் பொழுது, விலையுயர்ந்த அசல் நாற்காலியை வாங்குகிறேன். முந்தைய நிலையில் ஆறு நாற்காலிகளை வாங்கியதனால் நான் பெற்ற துய்ப்பையும், இப்போதைய நிலையில் ஒரு நாற்காலியை வாங்கியதனால் நான் பெற்ற துய்ப்பையும் ஒப்பிட்டு, இதிலிருந்து நான் பின்னர் பெற்ற துய்ப்பைக் காட்டிலும் முன்னர்ப் பெற்ற துய்ப்பு அதிகமானது என்று நான் முடிவு கட்ட வேண்டும் என்று நிருபிக்க முடியாது'.

பண வருமானத்திற்குக் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாடு நடப்பில் பொருந்துமா என்பதை ஐயுறும்படி வேறு பல வாதங்களும் கொடுக்கப்படுகின்றன. நுகரக் கூடிய பண்டங்களையும், ஊழியங்களையும் பெறுவதற்கான ஒரு கருவியாக மட்டுமன்றி, பொருளாதார ஆற்றலையும் அரசியல் ஆற்றலையும் காட்டும் ஒரு கருவியாகவும், பகட்டான வெளிப் பூச்சுக்கான ஒரு வாயிலாகவும், பணம் விரும்பப்படுகிறது என்பது இவ் வாதங்களில் ஒன்றாகும். இவை யாவும் புலன்களால் அறியப்படமாட்டா. இவற்றில் யாதாயினும் ஒன்றில் மேலும் கூடுதல்கள் ஏற்பட்டு அவற்றிலிருந்து கிடைக்கும் மன நிறைவோ அல்லது அவற்றின் பேரில் உள்ள விருப்பமோ, எதிர்மறையாகச் செல்லும் வளைகோட்டைப் பின்பற்றுகிறது என்றோ அல்லது ஏதாயினும் ஒரு குறிப்பிட்ட உருவரையைப் (conformations) பின்பற்றுகிறது என்றோ கூறுவது அறிவுடைமை ஆகாது.

ஒரே தன்மையதான பண்டங்களுக்குக் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாடு பொருந்தும் என்று பொதுவாக ஒப்புக் கொள்ளப்படுகிறது. நுகர்வில் குறைநிரப்பும் பயன்பாட்டுக்கும் (complementary utility), பன்மைக்கும் (variety) கருவியாக இருக்கும் பண வருமானத்திற்குக் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாடு செல்லுபடி ஆகுமா என்பது ஐயத்திற்கு இடமானதே. ஒரே பண்டத்தில் மேலும் ஒரு அலகைப் பெறுவதற்குத்தனியாளுக்கு விருப்பமின்றி (பூஜ்யமாக) இருக்கலாம். புதிய பண்டங்களையோ அல்லது வேறு பண்டங்களையோ பெறுவதற்கு அவருக்கு விருப்பம் மிகுதியாக இருக்கலாம். 'தன்னுடைய வீட்டில் இருக்கும் தட்டுமுட்டுச் சாமான்களை (Furnishings) முற்றுப் பெறும்படிச் செய்வதற்கும், இசைவு (harmonize) செய்வதற்கும் அவருக்கு ஆசை இருக்கலாம்.' வேறொரு வீட்டை வேண்டாது நகரத்தில் இருக்கும் வீட்டுக்கு ஒரு குறை நிரப்பும் பொருள்

(complement) ஆக, கிராமத்தில் ஒரு வீட்டை வைத்திருக்க ஆசைப்படலாம் (வாட்கின்ஸ்). செலவாகும் ஒவ்வொரு உருபா விலிருந்து கிடைக்கும் பயன்பாடு குறையாமலேயே, நுகர்வுத் தொகுதிகளை முற்றுவிப்பதற்கு ஏராளமான வருமானத்தைச் செலவழிக்கலாம் என்பதும் சாத்தியமானதே (இயலுவதே).

(இ) குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாடு நடப்பில் பண வருமானத்திற்கும் பொருந்தும் என்பதில் ஒருவருக்குள்ள நம்பிக்கையை அசைப்பதற்கு வேண்டிய சான்றைத் தராவிடினும், தனியாளின் வருமானம் அதிகரிக்க அதிகரிக்க, அவருடைய உணர்வுகளில் எந்தவிதமான மாறுதலும் இல்லை என்ற ஊகத்தை அடிப்படையாகக் கொண்டே இக் கோட்பாடு எழுந்திருக்கிறது என்பதை வலியுறுத்த வேண்டும். மனித இயல்பை ஒரு சிறிதேனும் அறிந்த யாரும், இத் தேக்கநிலை தேரா ஏற்பு நடப் புண்மைகளுக்குப் பலகாலும் எதிராக உள்ளது என்பதை மறுக்க வொண்ணாது. சாப்மென் கூறுவதாவது: 'வருமானத்தில் ஒரு சிறிது கூடுதல் பெற்றவர்களின் வாழ்க்கைத் துய்ப்பு, வருமான அதிகரிப்பு ஏற்பட்ட வீதாசாரத்திற்கும் அதிகமாகவே இருப்பது நம்மனுபவமாகும். வருமான அதிகரிப்பினால், பயன்பாடு, குறைந்து செல் வீதத்திலேயே அதிகரிக்கும் என்று கொண்டால், இதனை மனநிறைவு தரும் வகையில் விளக்க முடியாது.[1] பண வருமானத்தின் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட் பாட்டை, இறுதிநிலைப் பயன்பாட்டுக்கும், வருமான வீதத்திற்கும் இடையே நிலவும் நடப்பு உறவின் வருணனையாகக் கொள்வதை, தனியாளின் வருமானம் அதிகரிக்க அதிகரிக்க, அவருடைய உணர்வுகளும் மாறுதல் அடைகின்றன என்ற முடிவு பொய்யாக்கு கிறது. பேராசிரியர் ஜே. எம். கிளார்க் (J. M. Clark) இதைப் பற்றிக் கூறுவது உண்மையே ஆகும். 'நுகர்வோர் அடையும் மாறுதல்களுக்குப் புறம்பாகவே குறைந்துசெல் பயன்பாட்டுக் கோட்பாட்டை உண்மையெனக் கூறமுடியும். ஒரு தேக்க நிலைக் கோட்பாடு என்று இதையே வேறு வகையாகவும் கூறலாம். இக் கோட்பாடு நுகர்வோர் மாறவே மாட்டார் என்று கூறவில்லை; ஆனால், அம் மாறுதலைக் கவனத்தில் கொள்வதில்லை. இதை எஞ் ஞான்றும் ஒரு தற்காலிக உபாயமாகக் கொள்வது நியாயமானதே. இதையே ஒரு நிரந்தர மனப்பான்மையாகக் கொள்வதும் நியாய மானதே. ஆனால், பொருளியல் அறிஞர் அக்கறை காண்பிக்கும் பண்டங்களைப் (விஷயங்களை) புறக்கணித்தால்தான் இஃது நியாய மானதாகும்.'

[1] துய்ப்பில் ஏற்படும் அதிகரிப்பைச் சாப்மென் நிரந்தரமானதெனக் கொண்டார்.

(ஈ) வருமானத்தில் மாறுதல்கள் ஏற்படாவிட்டாலும் கூட, தனியாளின் உணர்வுகள் இடையறாது மாறிக்கொண்டே இருப்பதால், பண வருமானத்தைப் பற்றிய குறைந்து செல் இறுதிநிலைப் பயன்பாட்டின் வளைகோட்டை தலைகீழாக மாற்ற முடியும் என்ற ஊகம் நடப்புக்குப் புறம்பானது.[1]

இவ் வளைகோட்டைத் தலைகீழாக மாற்ற முடியாமல் செய்யும் இன்னொரு காரணி, வளர்வீத வரியின் கீழோ அல்லது தேய்வு வீத வரியின் கீழோ, தனியாளின் பொருளாதாரத்திலும், சமுதாய அந்தஸ்திலும் ஒப்புமையில் ஏற்படும் மாறுதலேயாகும். உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட வரித் தொகையைச் செலுத்துவதனால் ஸ்மித் செய்யவேண்டிய தியாகம், அவருடைய வரித் தொகையைப் பொறுத்து மட்டுமின்றி அவருடைய சகாக்களான ஜோன்ஸ், பிரவுன், இன்னும் மற்றையோர் செலுத்தும் தொகையைப் பொறுத்தும் இருக்கிறது. அதாவது ஸ்மித் செய்யும் தியாகம் ஒன்றல்ல, பல என்பதாகும்.

(உ) அனைவரின் இயல்பும், வளர்ப்பும் ஒன்றாக இருந்தால் தான், அனைவரின் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டு வளைகோடுகளும் ஒன்று போலவே இருக்கின்றன என்ற நம்பிக்கையும் அறிவுக்கு உகந்ததாக இருக்கும். 'அனுபவ வழி பார்க்கும் பொழுது அனைவரின் (அனைத்து) குறைந்ததுசெல் இறுதிநிலைப் பயன்பாட்டு வளைகோடுகளும் ஒன்றே போல்வன என்ற ஊகம் பிழையானது. ஏனெனில், எல்லாரும் இத் துறையில் ஒன்றுபோல் இருந்தால், ஏதாயினும் ஒரு பண்பாட்டைப் பொறுத்தே அனைவரும் முற்றிலும் ஒன்றாக (absolute identity) இருக்கும் உதாரணமாக விளங்கும்.'

வெவ்வேறுபட்ட மக்களின் பயன்பாடுகளை ஒப்பிடுவது இயலாததாகையால், தியாகக் கருதுகோள்களைப் பற்றிப் பேசுபவர்கள் அனைத்து குறைந்துசெல் இறுதி நிலைப் பயன்பாட்டு வளைகோடுகளும் ஒன்று போல்வன என்ற ஊகத்தை மேற்கொண்டார்கள். வளர்வீத வரிக்குச் சாதகமான வாதங்களின் கருதுகோள் அளவினதாய உண்மையை நிலைநிறுத்த இந்த ஊகத்தை மேற்கொண்டார்கள். இந்த ஊகம் மிகவும் அறிவுக்குப் பொருத்தமானது அல்லது மிகவும் அறிவுக்குக் குறைந்த அளவே புறம்பானது என்றும் கொண்டார்கள். இத் துணைப் பெரிய காரியங்களைச் சாதிக்கவேண்டும் என்று முனைகின்ற ஒரு

[1] பாண்டலியோனியும் (Pantaleoni), 'எதிர் மறையான ஆசைகளின் அதிகரிப்பிலிருந்து எதிர்மறையல்லாத (positive) ஆசைகளின் அதிகரிப்பு வேறுபட்டது' என்ற கூற்றை ஆதரிக்கிறார்.

ஊகத்தை, ஒரு வளர்வீதம் பற்றிய கருதுகோளும் அதன் தருக்கரீதியான உண்மையும், அதன் நடைமுறைப் பிரயோகமும் சார்ந்திருப்பதைப் பலர் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். இவர்கள் வளர்வீத வரிக்குச் சாதகமான வாதங்களேயும், எதிரான வாதங்களேயும், உளவியல் உபாயம் என்ற துணிச்சலானதும், தெளிவானதுமான பழக்கத்தைக்கொண்டு முடிவு செய்ய மறுக்கிருர்கள்.

(ஊ) வரியிலிருந்து கிடைக்கும் அரசின் வருவாயைச் செலவழிப்பதனுல் வருமானத்தின் இறுதிநிலே மாறவில்லே என்ற ஊகம் நடப்புண்மையுடன் ஒத்திருக்கிறதா, இல்லேயா என்பதை இப்பொழுது நாம் ஆய்வோம். வரியிலிருந்து கிடைக்கும் வருவாயிலிருந்து எந்தவிதமான சிறப்பு ஆதாயத்தையும் வரி செலுத்துவோர் பெறுவதில்லே. இந்த விளக்கத்தைப் பொதுவாக யாவரும் ஏற்றுக்கொள்கிருர்கள். சிறப்பு ஆதாயம் இன்மையே வரிக்கும், ஏனேய கட்டணம் (fees), சிறப்புத் தீர்வை, அரசு விலே (public price) ஆகியவற்றுக்கும் உள்ள வேறுபாடாகும். ஆகவே, வரிப்பளுவைப் பகிர்வு செய்வதில் பிரதிபயன் (quid pro quo) உறவை முற்றும் ஒதுக்குவது வழக்கமாகும். சில சமயம் வரி செலுத்துவதற்குக் கைம்மாருக சிறப்பு ஆதாயம் கிடைக்கிறது. இதை டி விட்டி டி மார்க்கோ (De Vitti de Marco) ஒத்துக்கொள்கிருர். 'அரசியலில் கீழ்நிலேயிலோ அல்லது வலுவற்ற நிலேயிலோ இருக்கும் வருக்கத்தினர்கள் அரசின் பணிகளுக்காக வரி செலுத்துகின்ருர்கள். இப் பணிகளே அவர்களாகவே விரும்பிக் கேட்டிருக்கமாட்டார்கள். வரிகளில் பெரும்பாலானவற்றில் ஆதாயக் கோட்பாடு மிகவும் அருமையாகவே இல்லாததாகக் காணப்படுகிறது', என்று ஸர் ஜோஸையா ஸ்டாம்பும் கூறுகிருர். அரசு செலவுகளின் விளேவுகளே, வரி செலுத்துவதனுல் ஏற்படும் தியாகக் கணிப்பிலிருந்து விலக்கும் புனேவுகோள் நடப்புக்குப் பொருந்தாதது. அரசியல் சந்தர்ப்பத்தை முன்னிட்டு மட்டுமே இப் புனேவுகோளே மேற்கொள்ளலாம்.

(எ) தியாகத்தைப் பற்றிய கருதுகோள் அளவினதாகிய சர்ச்சையில், தொடக்க நிலேயில், இப் புனேவுகோளேக் கொள்வது இன்றியமையாததல்லவாயினும் மிகவும் சிறப்புடையது. ஆனுல், நடப்பு உலகில் தியாகத்தை மதிப்பிடுவதற்கு : (1.) ஒரு குறிப்பிட்ட வருமானத்தை ஈட்டுவதற்கு ஒருவருக்கு ஆகும் மெய்யான ஆக்கச் செலவுக்கும், அதே வருமானத்தை ஈட்டுவதற்கு மற்றையோருக்கு ஆகும் மெய்யான ஆக்கச் செலவுக்கும் உள்ள வேறுபாடுகளேயும், (2.) வரி செலுத்துவோருக்கு இருக்கும் குடும்ப பாரங்களின் (எத்தனேக் குழந்தைகள், இன்ன பிறவும்) வேறுபாடுகளேயும் கவனமாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

உதாரணமாக, நம்முடைய கருதுகோள் அளவினதாகிய ஊகத்தின் படி படித்தரமான வரிகளினுல் சம அளவுத் தியாகமே ஏற்படும். ஆனுல், நடைமுறையில் சம அளவுத் தியாகத்தைக் காண வேண்டும் என்ருல், இவ் ஊகத்திற்குப் பிற்சேர்க்கையாக அறிவு பூர்வமான வேற்றுமைப்பாடுகளையும், பிடித்தங்களையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

வளர்வீத வரி பற்றிய தியாகக் கோட்பாடுகளின் அடி மட்டத்தில் ஏழு பெரிய ஊகங்கள் புதைந்து கிடக்கின்றன. இவற்றின் மதிப்பீட்டையும் இப்பொழுது நாம் முடித்துவிட்டோம். இந் நீண்ட மதிப்பீட்டிலிருந்து ஒரு சுருக்கமான முடிவுக்கு வருகிருேம். தியாகக் கருதுகோள்களில் புதைந்திருக்கும் ஊகங் களில் ஒன்றையேனும் நீக்கிவிட்டால், தியாகக் கருதுகோள்களில் ஒன்றேனும் வளர்வீத வரிக்கு இட்டுச் செல்வதாகக் கூற முடியாது. எல்லா ஊகங்களையும் ஒத்துக்கொண்டாலோ, தியாகக் கோட் பாடுகளின் நடைமுறை முக்கியத்துவம் பறி போகிறது.

எட்டாவது ஊகம் ஒன்றும் உண்டு. இஃது குறைந்த அளவு தியாகக் கருதுகோளைத் தவிர ஏனைய எல்லா தியாகக் கருதுகோள் களுக்கும் பொருந்தும். வளர்வீத வரியை விதிப்பதால் எந்தவித மான மறைமுகத் தியாகமும் செய்ய வேண்டியதில்லை. சில வரி வடிவங்களினுல் 'சில விரும்பத்தக்க தொழில்கள், முனைவுகள்' வளரவொட்டாமல் தடை செய்யப்படுகின்றன. இவற்றை மறை முகத்தியாகங்கள் எனலாம். இவற்றுக்கு முக்கியத்துவம் அளிப்ப தில்லை. இந்த மறைமுக விளைவுகளைக் கருத்தில் கொள்ளாத கருது கோளுக்கு நடைமுறையில் முக்கியத்துவம் இல்லை. மறைமுக மாகவும், நெடுங்காலத்திற்கும் ஏற்படும் தியாகத்திற்கும் சரி, நேரிடையாகவும், உடனடியாகவும் (வரி விதிப்பினுல்) ஏற்படும் தியாகத்திற்கும் சரி, குறைந்த அளவு தியாகக் கருதுகோள் முக்கியத்துவம் நல்குகிறது. இதிலிருந்து வெவ்வேறு கால கட்டங்களில் ஏற்படும் இரு உளவியல் எண்ணளவு (Magnitudes) களையும் கூட்டுவதற்கு, அரசியல் அறிஞருக்கு இருக்கும் ஆற்றலைப் பொறுத்தே ஓரளவேனும் இக் கருதுகோளில் நடை முறை சாத்தியம் இருக்கிறது என்று தெரிகிறது. இவ்வாருன ஒரு கணிப்பைச் செய்ய முடியும் என்றே வைத்துக் கொண்டாலும், முற்கூறிய ஏழு ஊகங்களும், குறைந்த அளவு தியாகக் கருது கோளுக்கு முக்கியமான வரையறைகளை விதிக்கின்றன. இதனுல், குறைந்த அளவு தியாகக் கருதுகோளை, வளர்வீத வரியை விதிப் பதற்கான ஒரு அடித்தளமாகக் கொள்ள முடியாது.

சம அளவு தியாகக் கருதுகோளை, வளர்வீத வரிக்கு ஒரு அடிப்படையாகக் கொள்வது சரிதானா என்பது, முன்னர் சர்ச்சை செய்த எட்டு ஊகங்களை மட்டுமின்றி, இன்னொரு புனைவு கோளையும் (hypothesis) பொறுத்திருக்கிறது. இப் புனைவு கோளாவது, பணவருமானத்தின் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டு வளைகோடு ஒரு நீண்ட இரு புறவளைவைக் (hyperbola) காட்டிலும், செங்குத்தாக உள்ளது என்பதே. ஆனால், குறைந்து செல் இறுதிநிலைப் பயன்பாட்டு வளைகோட்டின் சரிவை அறுதியிடுவதற்குக் கடந்த காலத்தில் செய்யப்பட்ட முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின. முதலில் கூறிய எட்டு ஊகங்களும் நடப்புக்குப் பொருந்துவனவாக இருந்தாலொழிய, வளர்வீத வரிக்கு, சம அளவு தியாகக் கருதுகோளை அடிப்படையாகக் கொள்ள முடியாது.

## மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. The American Economics Association, 'Readings in The Economics of Taxation,' Part I, A, Chapter III, By Elmer D. Jagam.

2. A. C. Adams, 'The Science of Finance', p. 345—353.

3. E. R. A. Seligman, 'Progressive Taxation in Theory and Practice,' Second Edition, 1908, pp. 129—149, and pp. 239—302.

4. G. Findlay Shirras, 'The Science of Public Finance," pp. 163—170.

# 15. நேர்முக வரிகளும், மறைமுக வரிகளும்

வரிகளை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அவை யாவன: (1.) நேர்முக வரிகள், (2.) மறைமுக வரிகள். யாரார் வரிப் பளுவைத் தாங்க வேண்டுமோ அவர்கள் பேரிலேயே வரியை விதிப்பது நேர்முக வரியாகும். இங்ஙனம் விதிக்கப் படாத வரி மறைமுக வரியாகும். இவ் விருவகை வரிகளைப் பற்றி ஒரு ஆசிரியர் கூறுவதாவது: 'நேர்முக வரிகள், மறைமுக வரிகள் என்ற சொற்றொடர்களைப் பொதுவாக ஏற்றுக் கொண்டாலும், அவற்றைப் பிரயோகிப்பதில் வேறுபாடுகள் இருக்கின்றன'.[1] இக் கூற்றை நம்மால் மறுக்க முடியாது. வரியமைப்பில் அடங்கி யுள்ள வரிகள் காலந்தோறும் மாறுபடுகின்றன. இதனால், நாளா வட்டத்தில் இச் சொற்றொடர்களின் பிரயோகத்தையும் திருத்த வேண்டியிருக்கிறது. இதில் மிகப் பெரிய வேடிக்கை என்ன வென்றால், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றம் வருமான வரி ஒரு நேர்முக வரி அல்ல என்று தீர்ப்பு அளித்தது தான்.[2] இக் காலத்தில் வல்லுநர்களிடையேயும் இச் சொற் றொடர்களைப் பிரயோகிப்பதில் வேறுபாடுகள் இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, ஆக்ஸ்போர்டு ஆங்கில அகராதி தலவரியை நேர்முகவரி என்று கூறுகிறது. ஆனால், பல பொருளியல் புலவர் களும், மையப்புள்ளி விவர அலுவலகமும் இதை மறைமுகவரி என்று ஒத்துக்கொள்கின்றன. வருமான வரி அதிகாரிகள் தனியார் கார் மீது விதிக்கப்படும் மோட்டார் உரிம வரிகளை நேர்முக வரிகளாகக் கொள்கின்றன. பொருளியல் புலவர்களில் பலரும் இதை மறைமுக வரியாகக் கொள்கின்றனர். மையப்புள்ளி

[1] Handworterbuch der Staatswissenschaften. 'Article on direct and indirecttaxes'.

[2] *1862ஆம் ஆண்டு இந்தத் தீர்ப்பு வழங்கப்பட்டது. அமெரிக்க அரசியல் சட்டத்தின் முதலாவது விதி, உட்பிரிவு C 3-யைப் பயனற்ற தாகச் செய்த முயற்சி. இவ்விதி 'நேர்முக வரிகளைப் பல மாநிலங்கள் இடையேயும் அவற்றின் மக்கட் தொகைக்கு ஏற்ப, பகிர்ந்து கொடுக்க வேண்டும்' என்று கூறியது. இதன்படி நடந்தால் வருமான வரி விதிப்பதன் நோக்கம் நிறைவேறாது.*

விவரப் பணிமனையும் இவற்றை நேர்முக வரிகளாகவே கொள்கிறது. நிச்சயமாக இந்த நிலை திருப்தியாக இல்லாததால், நாம் இதைத் திருத்துவதற்குச் சிறிது சிந்தனையைச் செலுத்துவோமாக.

### வரிகளின் வகை

'நேர்முக', 'மறைமுக' என்ற சொற்றொடர்கள் எப்பொழுது வரிகளை வகைப்படுத்துவதற்கு முதன் முதலில் பிரயோகம் செய்யப்பட்டது என்று தெரியவில்லை. ஃபிரான்ஸில் பதினைரும் நூற்றாண்டிலேயே ஆளைப்பற்றிய வரிகளைச் (personal taxes) சுட்டுவதற்கு (assise directment) என்ற சொற்றொடரைப் பயன்படுத்தினர்கள். ஆடம்ஸ்மித் 'நேர்முகவரி' என்ற சொற்றொடரைப் பயன்படுத்தினாலும், அதைக் குறியீட்டுச் சொற்றொடராகப் பயன்படுத்தினரா என்பதை முடிவு செய்வது கடினமாக உள்ளது.[1] ஆடம்ஸ்மித், தன் நூலை எழுதிய காலத்து, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இச் சொற்றொடர்கள் குறியீடுகளாக வழக்கில் இருந்தன. ஆனல், அப்பொழுது நேர்முகவரி என்பதற்கு ஆள்வரி (poll tax) என்றுதான் பொருள். இங்கிலாந்தில் வருமான வரி விதிக்கப்படுவதற்கு முன்பு, வரிகளைத் 'தீர்வையிடப்பட்ட வரிகள்' (நிலம், ஜன்னல், ஏவலாட்கள் இன்னும் இவற்றைப் போன்ற செல்வத்தின் புறச்சின்னங்களைக் கொண்டு இவ் வரிகள் விதிக்கப்பட்டன) என்றும், இறக்குமதி, ஏற்றுமதி வரிகள் என்றும், ஆயத்தீர்வைகள் என்றும் வகைப்படுத்தி இருந்தனர். இதைப் போன்றே ஜெர்மனியில் ஆளைப்பற்றிய வரிகள், ஆயத்தீர்வைகள் என்றும், ஃபிரான்ஸில் 'assizes directment,' 'tariffs' என்றும் வரிகளை வகைப்படுத்தியிருந்தனர். இங்கிலாந்தில் தீர்வையிடப்பட்ட வரிகளைச் சாதாரணமாக நேர்முக வரிகளாகக் கொண்டார்கள். ஆயினும், வருமான வரியை விதித்த பிறகு தீர்வையிடப்பட்ட வரிகளின் முக்கியத்துவம் குறைந்ததாலும், வருமானவரி மிகவும் தெளிவாக நேரிடையானதாக இருந்ததாலும் இந்த வரியை ஏனைய நேர்முக வரிகளைக் காட்டிலும் மிகச் சிறந்த நேர்முக வரியாகக் கொண்டனர்.

முதன் முதலில் 'மறைமுக' என்ற சொற்றொடர் என்ன பொருளில் வழங்கிற்று என்பது விளங்கவில்லை. இச் சொற்றொடரும் 'நேர்முக' என்ற சொற்றொடரைப் போன்று அத்துணை அளவு

[1] நாடுகளின் செல்வம், தொகுதி 2, அதிகாரம் 2, பக்கம் 375, நேர்முகவரி விதிப்பதற்கு நிலத்தின் வாரத்தைக் காட்டிலும் வட்டி, அத்துணைச் சரியான தலைப்பன்று என்று இரு வேறுபட்ட சூழ்நிலைகளினால் ஏற்படுகிறது.

அடிக்கடி பயன்படுத்தப்படவில்லை. ஓர் ஆளின்மீது வரி விதிக்காமல் ஒரு பண்டத்தின் மீது வரி விதிப்பதை 'மறைமுகம்' எனக் கொண்டனர். ஆனால், எந்த ஒரு பண்டமும் தானகவே வரியைக் கொடுக்கமுடியாது. ஆதலால், இவ் விளக்கம் திருப்தியளிப்பதாக இல்லை. ஒரு சாரார்மீது வரியை விதித்துவிட்டு, இன்னொரு சாராரிடமிருந்து வரியை வசூலிப்பதில் தான் மறைமுகம் இருக்கிறது என்பது மேலே கூறியதைக் காட்டிலும் அறிவு பொதிந்த கருத்தாகும். இவர்கள் பின்னர், முற்கூறியவர்களிடமிருந்து வசூலித்துத் தங்கள் இழப்பைப் போக்கிக் கொள்வார்கள். வரி புரட்டுகையில் இவ் விளக்கம் பொதிந்திருக்கிறது. அதாவது, யாரிடமிருந்து வருவாய் அதிகாரிகள் வரியைப் பெறுகிறார்களோ அவரைத் தவிர்த்து, எங்கோயோ வேறொரு 'மெய்யான' வரி செலுத்துபவர் இருக்கிறார் என்பது தான் இக் கருதுகோளாகும்.

இவ்வாறாக, இங்கிலாந்திலாவது, வருமான வரியை (சிறப்பு வரிகளையும் சேர்த்து), ஒரு நேர்முக வரி என்று பொதுவாக ஒப்புக் கொண்டனர். இறக்குமதி, ஏற்றுமதி வரிகளையும், ஆயத் தீர்வைகளையும் மறைமுக வரிகள் என்றும் ஒப்புக்கொண்டனர். எஞ்சிய வரிகளைப்பற்றித்தான் (இவை முக்கியமானவையல்ல என்று கூற முடியாது) கருத்து வேற்றுமைகள் எழுந்தன; எழுகின்றன. பல வகைப்பட்ட ஆய்வுகளுக்கு வேண்டப்படும் வேறுபாடுகளை ஒரே வகையில் திணிப்பதற்கு மேற்கொண்ட முயற்சிகளினாலேயே இக் குழப்பம் எழுந்தது. மூன்று முக்கிய உபயோகங்களுக்காக நாம் வரிகளை வகைப்படுத்த வேண்டியிருக்கிறது. இவற்றை முறையே, ஆட்சி, சமுதாயக் கணக்கீடு, ஆய்வு உபயோகங்கள் எனலாம். இதுவரையில் ஒரே வகைதான் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இதற்குக் காரணம், இவற்றின் எல்லைகளின் பெரும்பகுதியும் ஒன்றின் மேல் ஒன்று கவிந்திருப்பதே (overlap) ஆகும். இதனால் குறுகிய கச்சை (strait jacket) தையற்காரர் தைத்ததாக ஆக்க முடியாது.

வரிகளை நேர்முக வரி என்றும், மறைமுக வரி என்றும் பாகுபாடு செய்தமை, தோற்றுவாயிலும் சரி, இப்பொழுதும் சரி, ஆட்சியினர் கற்பித்த வேறுபாடே. குறிப்பிட்ட குழுவைச் சேர்ந்த வரி செலுத்துவோரை (உ-ம். புகை பிடிப்பவர்களின் அல்லது குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த வருமானம் பெறுவோர்) கருத்தில் கொண்டே ஆட்சியினர் தொடங்குகின்றனர். இவர்களையெல்லாம் நேரிடையாகவும் தனித்தனியாகவும் தொடர்பு கொள்வதா, அல்லது மூன்றாம் மனிதர் வாயிலாகத் தொடர்பு கொள்வதா என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்கு·

ஆட்சியினருக்கு ஒரு பாகுபாடு தேவை. பெரும்பாலான உதாரணங்களில் இவ் வேறுபாடு மறைமுக வரிகள், நேர்முக வரிகள் என்ற பாகுபாட்டிற்கு வழிகோலுகிறது. ஆயினும், இதில் ஒரு சிறிய சங்கடம் உள்ளது.

வரியை விதிப்பதற்கோ, அல்லது தண்டுவதற்கோ வருவாய் அதிகாரிகள் வரி செலுத்துவோர்களை நேரிடையாக அணுகலாம். இவ்வாறுக, வருமான வரி விதிப்பு நேரிடையாக உள்ளது; ஆனுல், அதன் வசூல் மூலத்திலேயே பிடித்தம் செய்வதற்கான புதிய முறைகள் வகுக்கப்படும்தோறும், மேலும்,மேலும் மறை முகமாக ஆகிக்கொண்டு வருகிறது. மிகை இலாப வரியின் வசூல் முற்றும் மறைமுகமானதே. ஆனுல், மோட்டார் ஊர்தி, அல்லது வானெலிப் பெட்டிக்கான உரிம வரிகள் இவற்றைச் செலுத்தும் பொழுது, மக்கள் வருவாய் அதிகாரிகளுடனே, அல்லது அவர் களின் பிரதிநிதிகளுடனே நேரிடையான தொடர்பு கொள் கிருர்கள். ஆயினும், இவ் வரிகள், குறிப்பிட்ட வகை மூலதனப் பண்டங்களின் சேவைகளைத் துய்க்க வரி செலுத்துவோர் விரும்பு வதைப் பொறுத்திருக்கிறதே ஒழிய, உழைப்பிலிருந்தோ அல்லது உடைமையிலிருந்தோ அவர்களுக்குக் கிடைக்கும் வருமானத்தைப் பொறுத்ததில்லை. வீட்டின் ரகத்திற்கு ஏற்ப, தலவரி படித்தர மாக அமைந்திருப்பது போன்று, ஊர்தி உரிம வரியும் ஊர்தியின் வகையைப் பொறுத்துப் படித்தரமாக அமைந்துள்ளது. உரிமை யாளரே துய்ப்பவராகவும் இருக்கும்பொழுது, இவ்விரு வரிகளும் முற்றிலும் ஒன்றை ஒன்று ஒத்திருக்கின்றன.

எவ்வெவ் வரிகள் நேரிடையாக விதிக்கப்படுகின்றனவோ, அல்லது நேரிடையாக வசூலிக்கப்படுகின்றனவோ, அவை யாவற்றையும் நேர்முக வரிகளாகப் பிரிட்டிஷ் வருவாய் அதிகாரிகள் கொள்வதாகத் தெரிகிறது. ஆட்சிக்கு இம் முறை மிகவும் வசதியாக இருந்தால், அவ்விதம் செய்வதற்கு அவர் களுக்குப் பூரண உரிமை உண்டு. ஆட்சியின் சௌகரியத்திற் காகச் செய்யப்பட்ட ஒரு வேறுபாடு, பொருளியல் புலவர்கள் கருத்தின்படி நல்லதாக அமையாவிட்டால், அதற்காக அவர்கள் மறுப்புத் தெரிவிக்கலாகாது.

சமுதாயக் கணக்கீட்டு வேறுபாட்டு முறையில், நாம் முற்றும் வேறுபட்ட ஒரு புலத்தினுள் நுழைகிறேம். தேசிய வரு மானத்தைப் பற்றிய இரண்டு அடிப்படைகளில் வேறுபட்ட கருத்துப் படிமங்கள் இருப்பதை இப்பொழுது பொதுவாக யாவரும் ஒப்புக்கொள்கிருர்கள். இவற்றைப் பட்ஜெட் வெள்ளை யறிக்கை 'காரணி ஆக்கச் செலவின்படி தேசிய வருமானம்'

('National income at Factor cost') என்றும், 'அங்காடி விலைகளின்படி' தேசிய வருமானம்' ('National income at market prices') என்றும் முறையே கூறுகிறது. இவற்றில் முந்தியது புறவய அல்லது குறியீட்டுக் கருத்துப்படிமம், பிந்தியது அகவய அல்லது நலன் கருத்துப்படிமம் ஆகும். தேசிய வருமானத்தைக் காரணி ஆக்கச் செலவின்படிக் கணக்கிடும்பொழுது தேசிய உற்பத்தியில் அடங்கிய பல்வேறுபட்ட பண்டங்கள் அல்லது பணிகள் அவற்றைச் செய்வதற்கு ஆகியிருக்கும் உற்பத்திக் காரணிகளின் அளவிற்கு ஏற்ப, மதிப்பிடப்படுகின்றன. இறுதி நிலையில் ஒன்றுக்கொன்று பதிலியாகப் பல்வேறு காரணிகளை எந்த வீதங்களில் பயன்படுத்தப்படுகின்றதோ, இவை தாம் காரணிகளின் ஒப்புமை விலைகளைப் பிரதிபலிப்பதாகக் கொள்ளப் படுகின்றன. ஆகவே, ஒரு பண்டத்தை ஆக்குவதற்கு நாட்டின் வளங்கள் எவ்வளவு பயன்படுத்தப்பட்டிருக்கின்றனவோ, அவை தாம் ஒரு பண்டத்தின் ஆக்க விலையாகக் கொள்ளப்படுகின்றன. தேசிய வருமானத்தின் நலன் கருத்துப் படிமத்தின்படி பல்வேறு பட்ட பண்டங்களும், அவற்றின் ஆக்கச் செலவுகளைப் பொறுத்த தன்றி, அவற்றின் இறுதிநிலைப் பயன்பாடுகளின்படி ஒரு பொதுவான அளவைக்குக் கொண்டு வரப்படுகிறது. எல்லாப் பண்டங்களையும் பொறுத்தில்லா விட்டாலும் பல பண்டங்களைப் பொறுத்த மட்டிலாவது, பண்டங்களின் ஒப்புமைப் பண ஆக்க விலைகள் அவற்றின் குறியீட்டுப் பதிலி வீதங்களைப் பிரதிபலிப்பதைக் காட்டிலும், அவற்றின் இறுதிநிலைப் பயன்பாடுகளை மிகவும் நன்ருகப் பிரதிபலிக்கின்றன. இதிலிருந்து தேசிய வருமானத்தின் காரணி ஆக்கச் செலவு அளவைக் காட்டிலும், தேசிய வருமானத்தின் நலன் அளவே மேம்பட்டது எனக் கொள்ளவேண்டியதில்லை. வெவ்வேறுன நோக்கங்களுக்கு இவ்விரு அளவைகளும பயன் படுகின்றன. நலன் அளவைக் காட்டிலும், காரணி ஆக்கச் செலவு அளவை மேலும் பல நோக்கங்களுக்குப் பயன்படுகிறது. சில பண்டங்களைத் துய்க்கும் உரிமையைப் பெறுவதற்காக மக்கள் செலுத்தும் வரிகளிலிருந்து கிடைக்கும் வருவாயைக் கூட்டினுல், காரணி ஆக்கச் செலவு அளவையிலிருந்து நலன் அளவையை வருவிக்க முடியும். எந்தெந்த வரிகளைக் கூட்ட வேண்டும்? வெள்ளை அறிக்கை 'மறைமுக வரிகளைக்' கூட்டவேண்டும் என்று கூறுகிறது. இப் பொருளில் மறைமுக வரிகள் யாவை?

வருமானத்தைப் பற்றிய அறிக்கைகளை அடித்தளமாகக் கொண்டு காரணிகளின் ஆக்கச் செலவு கணிக்கப்படுகிறது. வருமான அறிக்கைகளில் அடங்கிய வருமான வரிகளுக்கும், காரணிகளின் ஆக்கச் செலவுகளுக்கும், பண்டத்தின் புரிச

விலைக்கும் இடைப்பட்ட தூரத்தைக் குறிக்கும் வரிகளுக்கும் இடையேயுள்ள வேறுபாடே இந்த ஆய்வுக்குப் பொருத்தமானது. வருமான வரிகளுக்கும், செலவு வரிகளுக்கும் இடையேயுள்ள வேறுபாடுதான் இவை இரண்டுக்கும் உள்ள வேறுபாடாகும். இச் செலவு உடனடியாகப் பண்டத்தை வாங்குவதற்குச் செலவழிந்த தொகையாகவோ, அல்லது இப் பண்டத்தைக் குறிப்பிட்ட காலத்திற்குப் பயன்படுத்துவதற்கான உரிமையை வாங்குவதற்குச் செலவழிந்த தொகையாகவோ இருக்கலாம்.

காரணியின் ஆக்கச் செலவிலிருந்து அங்காடி விலையைக் கண்டுபிடிப்பதற்குப் பின்வரும் வரிகளைக் கூட்டவேண்டும். (அ) குறிப்பிட்ட பண்டங்களையோ அல்லது பணிகளையோ துய்ப்பதற்கு ஒரு படிநிலையாக நுகர்வோர் கட்டவேண்டிய வரிகள். (உ-ம்.) கேளிக்கைவரி, விற்பனைவரி போல்வன. (ஆ) ஏதாயினும் ஓர் உற்பத்திக் கட்டத்தில் உற்பத்தியாளர்கள் பண்டங்களின்மீது செலுத்தும் வரிகள். (உ-ம்.) தொழில்களுக்குப் பயன்படும் பெட்ரோல்மீது வரி, ஆலைகளின்மீதான தல வரிகள் போல்வன. இவை யாவும் வெள்ளையறிக்கையில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆனால், அதில் வீடுகளின்மீது விதிக்கப்படும் தல வரிகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆனால், ஏனைய வரிகளைப் போன்றதல்ல வீடுகளின்மீதான தல வரிகள்.

கருதுகோள் அளவிலாவது வீடுகளின் மீது விதிக்கப்படும் தல வரிகள் வீட்டில் குடியிருப்பவர்மீதே விதிக்கப்படுகின்றன. தல வரிகளை 'அங்காடி விலை'யில் சேர்ப்பதைக் காட்டிலும், தல வரிகளை நீக்கி மீதியுள்ள நிகர வாரத்தை வீட்டில் குடியிருப்பதற்கான 'அங்காடி விலை' என்று கூறுவது மிகவும் பொருத்தமாக இருக்கும். இருந்தாலும், நலன் அளவைக்கு இணங்க தேசிய வருமானத்தைக் கணக்கிடுவதற்குத் தல வரிகளைச் சேர்ப்பது சரியே. ஏனெனில், வீட்டுக் குடியிருப்பின் அங்காடி விலையின் பகுதியாகத் தல வரிகள் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, அவை நிச்சயமாகப் புரிச வலையின் ஒரு பகுதி, அல்லது அவை பணத்தளவில் இறுதிநிலைப் பயன்பாடு ஆகும். வீட்டுக்காரர் தனக்கு எவ்வளவு குடியிருப்பு இடம் வேண்டும், வேறு பண்டங்கள் எவ்வளவு வேண்டும் என்று இரண்டையும் சீர்தூக்கிப் பார்க்கும் பொழுது, அவர் தல வரிகளை உள்ளிட்ட வாடகையையே கணக்கில் கொள்ளவேண்டும். ஆகவே, நலன் அளவையின்படி தேசிய வருமானத்தைக் கணக்கிடும்பொழுது தல வரிகளைச் சேர்த்துக் கொள்ள வேண்டியதுதான். இதிலிருந்து நாம் தெரிந்து

கொள்வது என்னவென்றால், நலன் அளவையை 'அங்காடி விலைகளின்படி தேசிய வருமானத்தைக்' கொண்டு சரியாக வருணிக்க முடியாது என்பதுதான்.

இவ் வேறுபாட்டைக் கருத்தில் கொள்ளத் தவறியதால், சில உதாரணங்களில் மையப் புள்ளி விவரப் பணிமனை, நடப்பில் தவறு செய்ய ஏதுவாயிற்று. தல வரிகள் எந்த வகையைச் சார்ந்ததோ, அதே வகையைச் சார்ந்ததுதான் ரேடியோ பெட்டி உரிமத்திலிருந்தும், தனியாருக்குச் சொந்தமாக இருக்கும் மோட்டார் ஊர்திகளின் உரிமத்திலிருந்தும் கிடைக்கும் வருவாயும். இவ் வரிகள் நுகர்வோர் 'அங்காடியில்' கொடுக்கும் விலையில் அடங்கியிருக்கவில்லை. ஆனால், காரணிகளின் ஆக்கச் செலவுக்கும் மேலாக, சில பயன்பாடுகளைப் பெறும் உரிமையை அடைவதற்காக அவர் கொடுக்கும் தொகையில் இஃது அடங்கியிருக்கிறது. இவற்றையெல்லாம் 'செலவு வரிகளாகக்' கொள்ளவேண்டும். சமுதாயக் கணக்கீட்டு முறையின்படி (social accounting sense) இவற்றை மறைமுக வரிகளாகக் கொள்ளவேண்டும். காரணிகளின் ஆக்கச் செலவின்படி, தேசிய வருமானத்தைக் கணக்கிடும் கருத்துப் படிமத்திலிருந்து, நலன் கருத்துப்படிமத்தின் அடிப்படையில் தேசிய வருமானத்தைக் கணக்கிடும் கருத்துப்படிமத்திற்குச் செல்லும் பொழுது இவ் வரிகளையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

ரேடியோ உரிமங்கள், தனியாருக்குச் சொந்தமான மோட்டார் ஊர்திகளுக்கான உரிமங்கள் இவற்றிலிருந்து கிடைக்கும் வருவாயை நேர்முக வரிகளின் பிரிவிலிருந்து மறைமுக வரிகளின் பிரிவுக்கு மாற்றுவது, தேசிய வருமானக் கணிப்பில் ஒரு திருத்தம் செய்ததாகும்.[1] ஆட்சிக்காக நேர்முக வரிகளுக்கும் மறைமுக வரிகளுக்கும் இடையில் வேறுபாடு கற்பிப்பது எத்துணை முக்கியமோ, அத்துணை முக்கியம் சமுதாயக் கணக்கீட்டுக்காகவும், நேர்முக வரிகளுக்கும், மறைமுக வரிகளுக்கும் இடையில் வேறுபாடு கற்பிப்பதாகும். இவ்விரண்டு பாகுபாடுகளையும் முற்றும் ஒத்துப் போகும்படி செய்வது இயலாததாகையால், இவற்றுக்கு வெவ்வேறு பெயர் கொடுப்பது விரும்பத்தக்கதாகும். எடுத்துக்காட்டாக, ஆட்சிக்கு, நேர்முக வரிகள், மறைமுக வரிகள் என்ற பாகுபாட்டினையும், சமுதாயக் கணக்கீட்டிற்கு வருமான வரிகள், செலவு வரிகள் என்ற பாகுபாட்டினையும் வைத்துக்கொள்ளலாம்.

தேசிய வருமானத்தைக் கணக்கிடும் தற்கால முறைகள் தொடங்கிய பொழுது, சமுதாயக் கணக்கீட்டு வரி வேறுபாடும்

[1] ஸ்டாம்பு வரிகளை நேர்முக வரிகளில்தான் சேர்க்கவேண்டும் அல்லது மறைமுக வரிகளில்தான் சேர்க்க வேண்டும் என்பதற்கு எந்தவிதமான மூகாந்திரமும் தருக்க அடிப்படையில் இல்லை.

தோன்றியது. பிந்தியது முந்தியதையும் பொறுத்தே உள்ளது. நாம் 'ஆய்வு' வேறுபாடு என்று கூறுவதை, நெடுங்காலமாக நூல்களில் கண்டு வந்திருக்கிறோம். வரி செலுத்துவோரின் மொத்த வருமானம் அல்லது செல்வத்தின்மீது விழும் வரிகள், ஏனைய வரிகளினின்றும் வேறுபட்ட வருக்கத்தைச் சேர்ந்தது என்பது இச் சிந்தனையாகும். இதன்படி மொத்த வருமானம் அல்லது செல்வத்தின்மீது விழும் வரிகளையே 'நேர்முக' வரிகள் என்னவேண்டும்.

இக் காட்சிக் கோணத்தை ஆட்சி வேறுபாட்டுடன் இணைத்து ஒட்ட வைப்பது சாத்தியமன்று. இருந்தாலும், இதற்குப் பின்னே ஒரு முக்கியமான கருத்து இருக்கிறது என்பதனை ஐயுற வேண்டியதில்லை. இக் கருத்துப் பொதுப்படையான ஆய்வு, ஒரு சிறை ஆய்வு இரண்டுக்கும் உள்ள இயல்பான பொருளாதார வேறுபாட்டுக்கு இணையாக உள்ளது. ஒற்றைக் கம்பெனி அல்லது தொழில் என்ற தொடக்கத்திலிருந்து சில பொருளாதாரப் பிரச்சினைகளை, (உ-ம்.) விலையைப் பற்றிய கொள்கையும், உற்பத்தியைப் பற்றிய கொள்கையும்) அணுகுவதும் சமுதாயக் கண்ணோட்டத்திலிருந்து செலவு, சேமிப்பு, முதலீடு இவற்றை அணுகுவதும் மிகச் சௌகரியமாக இருப்பதைப் போன்றே, பொருளாதாரப் புலத்தின் ஒரு குறிப்பிட்ட கோணத்திலிருந்து சில வரிகள் செயல்படுவதையும், பொதுப்படையான பின்னணியிலிருந்து ஏனைய வரிகள் செயல்படுவதையும், நாம் காண்பதுதான் அறிவுக்கு உகந்ததாகும்.

ஒரு வரையறைக்குட்பட்ட தொழில்களின் தொகுதி என்ற பணிச்சட்டத்திற்குள் செயல்படும் ஒரு சிறை (Partial) வரிகளுக்கும், நுகர்வு மட்டம், முதலீடு மட்டம் இவை முழுவதையும் பாதிக்கும் (பொதுப்படையான) வரிகளுக்கும் இடையில் ஒரு வேறுபாடு கற்பிக்கவேண்டும். இஃது கோல்வின் குழுவிற்கு (Colwyn Committee) முன்பு சாட்சியம் கூறிய சிலரின் முயற்சிகள் தோல்வியுற்றதிலிருந்து தெரிகிறது. அவர்கள் வருமான வரியை ஒருபக்க ஆய்வு செய்யவேண்டும் என்றும், வருமான வரியில் ஏற்பட்ட மாறுதலால் குறிப்பிட்ட விலைகளில் 'ஏற்றம்' ('mark ups') ஏற்பட்டதையும் தேடிக்கொண்டிருந்தார்கள். தேயிலைமீது போட்ட வரியை அதிகரித்ததால் ஏற்பட்ட விளைவுகளைத் தேடிக் கொண்டிருப்பதுபோல் காணப்பட்டார்கள்.

பொருளியல் புலவருக்குப் பொதுப்படையான வரிகள், ஒரு தலைப்பக்கமான வரிகள் என்ற பாகுபாடு தான் மிகவும் முக்கிய

மானது என்றாலும், இஃது மற்ற இரண்டு வேறுபாடுகளுடன் ஒரு சேர வைத்து எண்ணப்படமாட்டாது. முதலாவதாக, இஃது சௌகரியத்திற்காகச் செய்யப்பட்ட ஒரு பாகுபாடே. ஒரு குறிப்பிட்ட வேளையில் ஒருதலைப்பக்க ஆய்வைக் கொண்டே அவை செயல்படுவதைச் சௌகரியமாகக் கண்டறியும் வரிகளே ஒரு தலைப்பக்க வரிகளாகும். இந்த ஆய்வைச் சிற்சில வேறுபாடுகளுடன் பொதுப்படையான வரிகளுக்கும் பொருந்துமாறு செய்யலாம். இதிலிருந்து நாளாவட்டத்தில் தனிப்பட்ட வரிகளின் நிலை மாறலாம் என்று தெரிகிறது. எடுத்துக்காட்டாக, ஒரு தொல் பொருளியல் அறிஞர், ரொட்டியின் மீது விதிக்கப்பட்ட ஒரு வரியை, ஒரு பொதுப்படையான (ரிக்கார்டியன்) ஆய்வுமூலமாக ஆய்வது, தருக்க அடிப்படைக்கு முற்றும் பொருந்தியதாகவே இருக்கும். பிழைப்பு மட்டத்திற்குக் கீழும் தொழிலாளர்கள் இவ் வரியினால் தள்ளப்படுவதை அவர் வலியுறுத்தலாம். இக் காலத்தில், பிரிட்டிஷ் படிநிலைகளில் தேயிலையின்மீது விதிக்கப்பட்ட ஒரு வரியினைப் போன்றே, ரொட்டியின்மீது விதிக்கப்பட்ட ஒரு வரிக்கும் ஒரு தலைப்பக்க ஆய்வுதான் வேண்டும்; அதாவது ரொட்டியின் மீது வரி விதித்ததால் அதன் நுகர்வு, உற்பத்தி இவற்றின் பேரிலும், ரொட்டியுடன் தொடர்பு பூண்ட ஏனைய உணவுப் பண்டங்களின் நுகர்வு, உற்பத்தி இவற்றின் பேரிலும் ஏற்படும் விளைவுகளின் சாத்தியக் கூறுகளையும் ஆய்வது.

இரண்டாவதாக, தல வரி போன்ற சில வரிகள் இருக்கின்றன. இவை வடிவில் ஒருதலைப்பக்கமாயினும், மிகவும் பரந்துபட்ட முக்கியத்துவம் உடையவை. இவ் வுதாரணத்தில் இம் முக்கியத்துவம் வருமானத்தைப் பொறுத்தும் மூலதனத்தைப் பொறுத்தும் உள்ளது. ஆகவே, ஒருதலைப்பக்க வரிகளாக இவற்றை ஆய்வு செய்வதுடன் பிற்சேர்க்கையாக, அவற்றின் பொதுப்படையான விளைவுகளை ஆய்வதையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். இவ் விருவகை ஆய்வுகளின் ஒப்புமை முக்கியத்துவம் ஓரளவு, நாம் அக்கறை காட்டும் கால கட்டத்தைப் பொறுத்திருக்கிறது. தல வரிகளை உயர்த்துவதால் மிகவும் குறுகிய கால கட்டத்தில் கட்டட வேலை கணிசமான அளவு பாதிக்கப்படாது. ஆகவே, இந்த உதாரணத்தில் ஒருதலைப்பக்க ஆய்வு போதுமானது. ஆனால், நெடுங்காலத்தில் கட்டடம் கட்டுதலில் முதலீடு செய்வது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஆகவே, தல வரிகளால் முதலீட்டின் மீது ஏற்படும் விளைவுகளைக் கவனத்தில் கொள்வது தான் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது.

## மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Readings in 'The Economics of Taxation,' The American Economics Association, George Allen & Lourin Ltd., 1959, Chapter 13, The Terminology of Tax Analysis by Ursula K. Hicks, Chapter 8, Direct versus Indirect Taxes by I.M.D. Little.

2. A. R. Prest, 'Public Finance', Chapter 19.

# 16. வரியின் நிலைப்பாடு

வரிக்கொள்கை பற்றிய அடிப்படை உண்மைகள் இரண்டு. அவை வரிக்கொள்கை பற்றிய எந்தச் சர்ச்சைக்கும் பொருந்தும். அவற்றில் முதலாவது, வரிகள் யாவும் இறுதியில் தனியாரின் வருமானத்தினின்றே செலுத்தப்படுகின்றதென்பது. இவ் விதிக்குச் சில புறனடைகள் உண்டு. ஆனால், அவை முக்கியமானவை அல்ல. இதனால் கூடுமானவரை வரித்தளம் தனியார் வருமானமாகத்தான் இருக்கவேண்டும் என்ற முடிவுக்கு வருகிறோம். நம்முடைய வருமானத்திலிருந்துதான் வரிகளைச் செலுத்துகிறோம். இவ் வருமானத்தை அளவிடுவதற்கு வேறெந்த மாற்று வரித்தளமும் அத்துணைப் பொருத்தமானதன்று இவ் விதிக்குப் புறனடை செலவைக் கட்டுப்படுத்தும் வரி விதிப்பே (Sumptuary Taxation). செலவைக் கட்டுப்படுத்துவதற்கு மிகவும் வரம்புக்கு உட்பட்டதும், சிறப்புத் தேர்ச்சி பெற்றதுமான வரித்தளங்கள் வேண்டும்.

நாம் குறிப்பிட்ட இரண்டாவது அடிப்படை உண்மையாவது, யார்மீது வரி விதிக்கப் படுகின்றதோ, அவரே அவ் வரிப் பளுவைத் தாங்குகிறவராக இருக்கவேண்டிய அவசியம் இல்லை. ஈதிவ்வாறாக, வரியைப்பற்றிய கருதுகோள், ஒரு குறிப்பிட்ட வரி விதிக்கப்படுவதனால் ஏற்படும் வரிப்பளுவை யார் இறுதியில் தாங்குகிறார்கள் என்பதைத் தெரிவிக்கவேண்டும். இவ்வாறு தெரிந்தாலொழிய விரும்பத்தகாத விளைவுகள் பலகாலும் ஏற்படும். வரி விதிக்கப்பெற்ற ஒருவன் தன் வரிப்பளுவை எந்தெந்த படி நிலைகளில் பிறர்மீது புரட்டலாம் என்பதைப் பொதுவாக ஆய்வதே இவ் வதிகாரத்தின் நோக்கமாகும். குறிப்பிட்ட வரிகளைப்பற்றியும், அவற்றைப்பற்றிய வரி நிலைப்பாட்டைப்பற்றியும் அடுத்த அதிகாரத்தில் ஆராய்வோம்.

வரி நிலைப்பாட்டின் பிரச்சினையாவது யார் வரியைச் செலுத்துகின்றார் என்பதை அறுதியிடுவதாகும். யார்மீது வரிப்பளு விழுகிறது அல்லது நிலையாகத் தங்குகிறது? நாம் இதனை இறுதி

வரி நிலைப்பாடு (Final incidence) எனலாம். இதன் பொருள் இறுதியில் வரி எவ்விடத்தில் (யார்மீது) தங்குகிறது என்பது. இதைத்தான் பிளாங்க் (E.H. Plank) என்பார், 'வரியாகிய கோழிக் குஞ்சுகள் இறுதியாகத் தங்குமிடம்' என்றார். வரியை இறுதியாகச் செலுத்துபவர் வேறு யார்மீதும் வரியைப் புரட்டமுடியாமல் இருக்க வேண்டும். வரி நிலைப்பாட்டுக்கும் வரியின் தாக்குக்கும் (import of taxation) எடுத்துக்காட்டு வருமாறு: சிகரெட்டுக்களின்மீது விதிக்கப்படும் விற்பனைவரியும், ஆயத்தீர்வைகளும் முதன்முதலில் அதை விற்கும் வணிகர்களால் செலுத்தப்படுகின்றது. இறுதியில் வரியைச் செலுத்துவோர் சிகரெட்டை நுகர்வோரே. இதைப்பய கலைச்சொல்லில் கூறவேண்டுமானால், வணிகர்களின்மீது வரித் தாக்கும், நுகர்வோரின்மீது வரி 'நிலைப்பாடும்' ஒறுக்கின்றன. ஆகவே, வரித்தாக்கு என்பது, யாரிடமிருந்து வரி வசூலிக்கப் படுகிறதோ அவரைச் சாரும். யார் இறுதியாக வரியைச் செலுத்து கிறாரோ, அவர் தலையில் விலைப்பாடு விழும்.

வரிப்பளு ஒருவரிடமிருந்து இன்னொருவருக்கு மாற்றப்படு வதைத்தான் (transfer) வரி புரட்டுகை (shifting of tax) என்கிறோம். வரி புரட்டப்படும்பொழுது, முதலில் வரியைச் செலுத்தியவர் (வரித் தாக்குக்கு ஆளானவர்) வரியை வசூலிப்பதற்கு ஒரு முகவ ராகப் (Agent) பயன்படுகிறார். விற்பனையின்மூலமே வரி புரட்டப் படுகிறது.

### சில ஆசிரியர்களின் கருத்துகள்

வரிகள் பலவகைகளிலும் புரட்டப்படுகின்றன. வரி நிலைப் பாட்டைப் பின் தொடர்வது குழப்பத்தை விளைவிக்கிறது. சூழ் நிலைகளின் சிக்கலால் இவ் வரியின் தெள்ளிய நிலைப்பாட்டைத் தொடர்ந்து செல்வது கடினமாக இருக்கிறது. இதனால் டாக்டர் கானன் (Dr. Cannan) 'நிலைப்பாடு' என்ற சொல்லை முற்றும் அகற்றிவிடலாம் என யோசனை கூறுகிறார். ஆயினும், 'இச் சொல் நிலையாக, நன்றாக, வழக்கில் வந்து விட்டதாலும், வசதியாக இருப்பதனாலும் இம் மாதிரி இச் சொல்லைத் துறந்து விடுவதற் கில்லை' எனப் பாஸ்டபிள் [1] கூறுகிறார்.

ஒவ்வொரு வரியினாலும் பல பொருளாதார விளைவுகள் ஏற்படுகின்றன. பொதுப் பிரச்சினையான வரி விளைவுகளினின்றும் சிறப்புப் பிரச்சினையான நிலைப்பாட்டைத் தனியாகப் பிரிக்க இயலுமா என்று சிலர் வினவுகிறார்கள். பேராசிரியர் பிளன் (Plehn)[2]

[1] Bastable, p. 361.
[2] Plehn, p. 311.

கூறுவது வருமாறு : 'இப் பிரச்சினையைப் பரிசீலனை செய்த ஆசிரியர்கள் போன்றே நாமும் இதில் (வரியின் விளைவுகளி னின்றும் வரி நிலைபாட்டைப் பிரிப்பதில்) வெற்றி பெறுமல் போக லாம். இதிலுள்ள சங்கடம் விளைவுகள் நிலைப்பாட்டுடன் விரவு வதும், நிலைப்பாடு விளைவுகளுடன் விரவுவதுமாம்.'

'நாம் வரிவிதிப்பின் பணப்பளுப் பகிர்வைப்பற்றி ஏதாவது சொல்ல விரும்பினுல், அது வரியினுல் ஏற்படும் விளைவுகளினின்றும் வரி நிலைப்பாட்டைப் பிரிக்க முயற்சி செய்யவேண்டும் என்பதே யாகும். பல கோட்பாட்டுவாதிகளும், பாமர மக்களும் இவ் விஷயத்திற்கு அதிக முக்கியத்துவம் அளிக்கின்றுர்கள். (டாக்டர் டால்டன்).[1] ஸெலிக்மென், 'இறுதியாக வரி செலுத்து வோரின்மீது வரிப்பளு ஒறுப்பதே வரி நிலைப்பாடு' என்றுர். வான் மியரிங் (Von Mering)[2] வரியின் இறுதிப்பளு நிற்குமிடமே வரி நிலைப்பாடு என்கின்றுர். 'சில மனிதர்கள் அல்லது சில கும்பல்களின்மீது ஒரு வரியின் இறுதிப்பளு ஒறுப்பதனுல் அடுத்து ஏற்படும் விளைவுகள் புரட்டுகை கருதுகோளின் அடங்கியதல்ல' எனக் கூறுகிறுர்.

ஏ. ஆர். பிரஸ்ட் (A. R. Prest) கூறுவது வருமாறு: 'இவ் விஞவுக்கு (நாம் வரவிலும், செலவிலும் பல மாறுதல்களைப் புகுத்த வேண்டும் எனக் கூறுகிறேம். இம் மாறுதல்களைச் சில ஒப்பளவு முதல்களைக் (Criteria) கொண்டு சோதித்துப் பார்க்கவேண்டும் எனவும் கூறுறேம். வரி புரட்டுகை, வரி நிலைப்பாடு இவை பற்றிய மரபுவழி சர்ச்சைகளில் இவ் வொப்பளவு முதல்கள் பொருந்துவது யாங்ஙனம்?) மறுமொழி கூறுவதில் உள்ள கஷ்டம் நிலைப்பாடு என்பதற்குத் திட்டவட்டமான பொருளை வரையறை செய்வதிலேயே உள்ளது. பொருளியல் நூல்களில் பல சொற்களுக்கும் பல பொருள்கள் இருப்பது போன்றே நிலைப்பாடு என்ற சொல்லுக்கும், அதை எத்தனைபேர் ஆண்டிருக்கின்றுர்களோ அத்தனை பொருள்கள் உள. பல ஆசிரியர்களும் இச் சொல்லை, வரிகளால் விலைகளில் ஏற்படும் மாறுதல்களுடன் சேர்த்தே வழங்கியிருக்கிறுர்கள். வரிகள் எங்ஙனம் முன்னும் அல்லது பின்னும் புரட்டப்படுகின்றன என்பதை விளக்குவதற்கு ஸெலிக்மென் ஒன்றன் பின் ஒன்ருகச் செவ்வையாக ஆக்கப்பட்ட பல கருதுகோள்களை வகுத்தார். இவ்வாறு பண்டங்களின் விலைகளோ அல்லது காரணிகளின் விலைகளோ பாதிக்கப் படுகின்றன. பொதுவாகக் கூறுமிடத்து, மெய்யான வருமானப்

[1] Hugh Dalton, 'Principles of Public Finance', p. 51.
[2] Otto Von Mering 'The Shifting and Incidence of Taxation,' p. 4.

பகிர்வில் வரிகளால் ஏற்படும் விளைவுகளைப்பற்றியதேயாகும் இம் முறை. ஏனெனில், காரணிகளின் விலைகளிலும், பண்டங்களின் விலைகளிலும் மாறுதல்கள் நிகழும் பொழுது, மெய்யான வருமானப் பகிர்வில் மாறுதல்கள் ஏற்படுவது தெளிவு. பல்வேறு காலங்களில் 'நிலைப்பாடு' என்பதற்குப் பரந்த பொருள் தர முற்பட்டவரும் உண்டு, அவர்கள் கருத்தின்படி, தொழில்களுக்கிடையே காரணிகளை ஒதுக்கீடு செய்வதன்மீதும், அல்லது வேலைக்கு அமரும் காரணிகளின் கிடைப்பின்மீதும் ஏற்படும் விளைவுகள் நிலைப் பாட்டில் அடங்கும். இப் பரவலான விளக்கங்களை 1927-ல் கோல்வின் குழுவினர் (Colwyn Committee) எதிர்த்தனர். அவர்கள் நிலைப்பாடு என்பதற்குக் குறுகிய பொருள் கொண்டனர். மிகக் குறுகிய காலத்தில் . பகிர்வில் ஏற்படும் விளைவுகளையே அவர்கள் நிலைப்பாடு எனக் கொண்டனர். நெடுங்காலத்தில் ஒப்புமையில் உற்பத்தியின்மீது ஏற்படும் விளைவுகளையும், வேலையில் இருக்கும் காரணிகளின் கிடைப்பின்மீது ஏற்படும் விளைவுகளையும், அவர்கள் குறுகிய கால விளைவுகளினின்றும் வேறுபடுத்தினர்... இச் சொல்லில் (நிலைப்பாடு) தெளிவின்மையால் நாம் பொதுவாக இச்சொல்லைப் பயன்படுத்துவதைத் தவிர்ப்பதற்கு முயல்வோம்.'[1]

விளக்கம்

வரி புரட்டுகை, வரி நிலைப்பாடு, வரியினுல் ஏற்படும் விளைவுகள் இம் மூன்றினையும்பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்கு ஒரு விளக்கம் தரலாம். பிரிட்டனிலிருந்து நூல்களை இந்தியப் புத்தக வணிகர் ஒருவர் தருவிக்கிருர் என்று வைத்துக் கொள்வோம். அப் புத்தகங்களின்மீது இறக்குமதி வரி விதிக்கப் படுகிறதென்றும், அப் புத்தகங்கள் மாணுக்கர்களுக்கு விற்கப்படு கிறதென்றும் வைத்துக்கொள்வோம். புத்தக வியாபாரி இறக்குமதி வரியைச் சுங்கச் சாவடியிலேயே கட்டி விடுகிருர். அவர் மாணுக்கர்களுக்குப் புத்தகங்களை விற்கும் பொழுது இறக்குமதி வரியையும் கூட்டி விற்கிருர்; அதாவது வரியைப் புரட்டுகிருர். புத்தகங்களை வாங்கும் மாணுக்கர்கள் வரியைத் தவிர்க்க முடியாது; வேறு யார் மீதும் புரட்டவும் முடியாது. ஆகவே, வரி நிலைப்பாடு மாணுக்கர்களையே ஒறுக்கிறது என்று சொல்லலாம். வரி விதிக்கப்பட்டதனுல் புத்தகங்களின் விலைகள் ஏறுகின்றன. இங்ஙனம் ஏறியதன் விளைவாகப் புத்தகங்களின் விற்பனை குறைகிறது. புத்தகத்தை வெளியிடுவோரின் இலாபமும் புத்தக விற்பனையாளர்களின் இலாபமும் குறைகின்றன. புத்தக விற்பனையாளர்களின் எழுத்தர்கள், அச்சிடுவோர் இவர்களுக்

[1] A.R. Prest. 'Public Financc in Theory and Practice,' 1966, English Language Book Society and Weidenfeld and Nicolson, p. 28—29.

கான புரிசமும் குறைகிறது; குறையவே, அவர்களின் ஊதியமும் குறைகிறது. மேலும், சில மாணுக்கர்களால் புத்தங்களை வாங்க முடியவில்லை. வரி இல்லையாளுல், அவர்கள் புத்தங்களை வாங்கியிருக்கக் கூடும். இவையனைத்தும் வரியால் ஏற்பட்ட விளைவுகள். இவ் விளைவுகளினுல் அரசின் வருமானம் கூடுவதில்லை. வரி அதிகமாக இருந்தால், இவற்ருல் ஏற்படும் விளைவுகள் கடுமையாக இருக்கக்கூடும்.

வரி நிலைப்பாட்டைக் கட்டுப்படுத்தும் சில பொதுக் கோட்பாடுகள் உள. அவற்றை டாக்டர் டால்டன் [1] பின் வருமாறு கூறுகிருர்:

*1.* மற்றவை மாருதிருப்பின், எவ்வளவுக்கெவ்வளவு ஒரு பண்டத்தின் புரிசத்திற்கு (Demand) அதிக நெகிழ்ச்சி இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு வரி நிலைப்பாடு விற்பனையாளர் மீதே இருக்கும். புரிசம் அதிக நெகிழ்ச்சியுடையதாக இருந்தால், விலை ஏற்றம் காரணமாக அப் பண்டத்திற்கான புரிசம் மிகவும் குறையும். ஆகையால், வரித்தொகையை விலையுடன் கூட்டுவதற்கு விலைஞர் தயங்குவர். அவரே வரியைச் செலுத்திவிடுவார்.

2. மற்றவை மாருதிருப்பின், எவ்வளவுக்கெவ்வளவு ஒரு பண்டத்தின் கிடைப்பு (supply) அதிக நெகிழ்ச்சியுடைதாக இருக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு வரிநிலைப்பாடு வாங்குவோரின் (நுகர்வோரின்) மீதிருக்கும். கிடைப்பு அதிக நெகிழ்ச்சியுடையதாக இருந்தால், வரியின் காரணமாக ஆக்கவிலை ஏறும்; ஏறவே, கிடைப்பு மிகவும் குறையும். கிடைப்பு குறைந்தால் விலை ஏறும். அதாவது விலைஞர் வரியை வாங்குவோரின்மீது புரட்டுவர்.

*3.* ஒரு பிரிவைச் சேர்ந்த ஒரே ஒரு பண்டத்தின்மீது மட்டும் விதிக்கப்பட்ட வரியைக் காட்டிலும், அப் பிரிவைச் சேர்ந்த அனைத்துப் பண்டங்களின் மீதும் விதிக்கப்பட்ட ஒரு வரி புரட்டப்படுவது சாத்தியமாகும். எடுத்துக்காட்டாக, பான வகைகளான காப்பி, கோக்கோ, ஓவல்டின், தேயிலை இவற்றில் தேயிலைமீது மட்டும் ஒரு வரி விதிக்கப்பட்டால், விலைஞர் வாங்குவோரின்மீது அவ் வரியைப் புரட்டத் தயங்குவர். ஏனெனில், இதுவரை தேயிலையை வாங்கியவர்கள் அதை விடுத்து காப்பி, கோக்கோ, ஓவல்டின் முதலான பிற பான வகைகளை வாங்கக்கூடும். ஆனுல், இப் பிரிவைச் சேர்ந்த எல்லாப் பான வகைகளின் மீதும் வரி விதிக்கப்பட்டால், அதை வாங்குவோரின்மீது புரட்டுவது மிக எளிது.

[1] Hugh Dalton, 'Principles of Public Finance,' pp. 53—54.

4. வரித் தொகை அல்லது வரியின் அளவு மிகக் குறைந்ததாக இருப்பின், அது பெரும்பாலும் புரட்டப்படாது. விலை ஏற்றத்தால் மார்க்கெட்டைக் குழப்புவதை விலைஞர் விரும்பார். ஆகவே, அவர்கள் ஒரு சிறிய தொகையை வரியாகச் செலுத்துவதைப் பொருட்படுத்த மாட்டார்கள்.

5. அழுகும் பண்டங்களின்மீது ஒரு வரி விதிக்கப்பட்டால், அது விற்பனையாளரிடமே ஒட்டிக் கொள்கிறது. ஆனால், நீடித்த (durable) நுகர்வுப் பண்டங்களின்மீது ஒரு வரி விதிக்கப்பட்டால், அது வாங்குவோரின் மீது புரட்டப்படுகிறது. முந்தியதில் புரிசமும் பிந்தியதில் கிடைப்பும் முக்கியமான அமிசமாகும்.

6. வரி நிலைப்பாட்டை அறுதியிடுவதில் மூலதனத்தின் பெயர்ச்சியும் (migration of capital) ஓர் இன்றியமையாத அங்கம் வகிக்கிறது. தமது மூலதனத்தைப் பிற நோக்கங்களுக்குத் திருப்ப முடியாத பொழுதும், தம் சரக்குகளுக்கு மாற்றுச் சந்தை இல்லாத பொழுதும் ஓர் உற்பத்தியாளர் வரியைப் புரட்டக்கூடிய நிலையில் இல்லை.

7. முடிந்த பண்டங்களின்மீது விதிக்கப்படும் வரியைக் காட்டிலும், மூலப் பண்டங்களின்மீது விதிக்கப்படும் வரி எளிதாகப் புரட்டப்படும். மூலப் பண்டங்களைப் பொறுத்தவரை சம்பந்தப்பட்ட ஆளுக்கு, தாம் விலைக்கு வாங்கும் மூலப் பண்டங்களின் கிரயத்திலிருந்து வரித் தொகையைக் குறைப்பதற்கும், அம் மூலப் பண்டங்களைப் பயன்படுத்திச் செய்யப்படும் பண்டத்தின் விலையுடன் வரித் தொகையைக் கூட்டுவதற்கும் ஆக, இரண்டு வகையிலும் அனுகூலம் பெறக்கூடிய வசதி இருக்கிறது. முந்தியது பிற்பட்ட புரட்டுகை (backward shifting) என்றும், பிந்தியது முற்பட்ட புரட்டுகை (forward shifting) என்றும் கூறப்படும்.

8. வரி விதிக்கப்பட்ட பண்டத்தின் உற்பத்தியின் ஆக்கச் செலவைப் பொறுத்துப் புரட்டுகை இருக்கும். இவ் வாக்கச் செலவுகள் மாறுதன (constant), வளர்ந்து செல்வன (increasing) அல்லது குறைந்து செல்வன (diminishing) என மூவகைப்படும். ஒரு பண்டத்தின் ஆக்கச் செலவு மாறுதிருந்தால், அதன் வரி நிலைப்பாட்டைப்பற்றி ஒன்றும் தெளிவாகக் கூறமுடியாது. வரி நிலைப்பாட்டைப்பற்றிய பொதுவான விதிகள், வரி யாரால் செலுத்தப்படுகிறது என்பதை நிர்ணயிக்கும். ஒரு பண்டத்தின் ஆக்கச் செலவு வளர்ந்து சென்றால், வரியைப் பெரும்பாலும் புரட்டக் கூடும். ஒரு பண்டத்தின் ஆக்கச் செலவு குறைந்து

சென்றால், பொதுவாக வரி புரட்டப்படமாட்டாது. ஏனெனில், குறைந்து செல்லும் ஆக்கச் செலவிற்கு மேலாகக் கிடைக்கும் உபரியின் மீதுதான் வரி விதிக்கப்படுகிறது.

*9.* முற்றுரிமைப் படிநிலைகளில் ஒரு பண்டம் உற்பத்தி செய்யப்படுமாயின், வரியைப் புரட்டுவது எளிது. ஏனெனில், முற்றுரிமையாளர் தமக்குப் பெரிய இலாபம் கிடைக்கக் கூடிய வகையில் விலையை நிர்ணயிக்கலாம். ஆனால், இங்ஙனம் பெரும்பாலும் நடப்பதில்லை. இதைப்பற்றி அடுத்த அதிகாரத்தில் விரிவாகச் சர்ச்சை செய்கிறோம். இதற்கு மாறாகப் போட்டிப் படிநிலைகளில் உற்பத்தி செய்யப்படும் பண்டங்களின்மீது வரி விதிக்கப்பட்டால், அது விலைஞரின்மீதே ஒறுக்கும்.

*10.* ஒரு வளர்வீத வரியைக் காட்டிலும், ஒரு வீதாசார வரியைப் புரட்டுவது எளிது. வளர்வீத வரி உபரி வருமானத்தின் மீது விழுகிறது. வீதாசார வரி அனைத்து வருமானங்களின்மீதும் விழுகிறது. உபரி வருமானமில்லாத எவரும் வரியைச் செலுத்த முடியாமையால், பிறர்மீது வரியைப் புரட்ட முயல்கின்றனர்.

*11.* ஒரு பெறுமானவீத வரியைக் (ad valorem duty) காட்டிலும், ஒரு தனிப்பயன் வரியைப் புரட்டுவது எளிது. எல்லாப் பண்டங்களின்மீதும் அவற்றின் எடை, பருமன் இவற்றுக்குத் தக்கவாறு ஒரு தனிப்பயன் வரி விதிக்கப்படுகிறது. கீழ்நிலையில் உள்ள உற்பத்தியாளர்கள் வரியைச் செலுத்த இயலாமல் பிறர்மீது வரியைப் புரட்ட முற்படுகிறார்கள். பெறுமான வீத வரி பண்டங்களின் மதிப்பின் மீது விழுவதால், மேல்நிலையில் உள்ள உற்பத்தியாளர்களையே கடுமையாக ஒறுக்கும். அவர்களுக்கு வரியைப் புரட்டவேண்டிய நிர்ப்பந்தம் இல்லை.

*12.* பொருளாதார வாரத்தின்மீது விதிக்கப்படும் ஒரு வரி புரட்டப்படுவதில்லை. ஏனெனில், வாரம் விலையால் நிர்ணயிக்கப்படுகிறது. மேலும் வாரம் ஓர் உபரியாகும்.

வரிகளின் பிற விளைவுகள்

இதுகாறும் வரி விளைவுகளின் மொத்தக் கண்ணோட்டத்தில் ஒரு கூறாகவே வரி நிலைப்பாட்டுக்கு விளக்கம் தந்து நாம் வரி நிலைப்பாட்டைப்பற்றிய பகுத்தாய்வை நடத்தினோம். அரசுக்கு வரியாகச் செலுத்தப்படும் தொகை இறுதியில் நிலையாக நிற்குமிடமே நிலைப்பாடு என்பதன் பொருளாக நாம் ஒரு வரம்புக்கு உட்படுத்தியிருக்கிறோம். ஆனால், நிலைப்பாட்டைத் தவிர்த்து வேறு பல விளைவுகளும் வரி விதிப்பினால் ஏற்படுகின்றன என்றும்

நாம் குறிப்பிட்டோம். நெடுங்காலத்தில் இவ் விளைவுகள் நிலைப்பாட்டைக் காட்டிலும் பன்மடங்கு முக்கியம் வாய்ந்தவை. இப் பிற விளைவுகளை, (1) (நிலைப்பாடு நீங்கலாக) புரட்டுகையின்போது ஏற்பட்டவை என்றும், (2) நிலைப்பாட்டினால் ஏற்பட்டவை என்றும் நாம் இருவகையாகப் பிரிக்கலாம்.

**புரட்டுகையின்போது ஏற்படும் விளைவுகள்** (Effects created in the process of shifting)

ஒரு வரி புரட்டப்படாதபொழுது இவ்வகை விளைவுகள் ஏற்படுவதில்லை என்பது தெளிவு. ஆனால், ஒரு வரி புரட்டப்படும்பொழுது (நிலைப்பாட்டைத் தவிர்த்து) பல திறப்பட்ட இனம் சுட்டும் மாதிரியான விளைவுகள் ஒரே சமயத்தில் நிகழ்கின்றன. இடப்புறத்திலிருந்து வலப்புறத்திற்குச் சரிந்து கீழ்நோக்கிச் செல்லும் புரிசவளைகோட்டையும், இடப்புறத்திலிருந்து வலப்புறத்திற்கு மேல்நோக்கிச் செல்லும் இறுதிநிலை ஆக்கச் செலவு (ஆக்கச் செலவு ஏறுகின்ற) வளைகோட்டையும் மாதிரியாகக் கொண்டால், விற்பனையாகும் பண்டத்தின்மீது முற்பட்டு வரியைப் புரட்டுகையினால், அப் பண்டத்து அலகுகளின் விற்பனை எண்ணிக்கை குறையும். இங்ஙனம் விற்பனையாகும் கணியம் குறைவதால் வேலைக்கு அமர்த்தியிருக்கும் சில உற்பத்திக் காரணிகளின் புரிசமும் குறையும். வரி நிலைப்பாட்டின் ஒரு பகுதியை உற்பத்திக் காரணிகள் தாங்கும்படி நேர்ந்தால் இருப்பதைவிட, வேலையிழந்த காரணிகள் உடனடியாக அவல நிலையில் இருக்கிறார்கள் என்பது புலனாகும். பொதுவாக, இவ்வுற்பத்திக் காரணிகளின் கிடைப்பு மிகையாக இருப்பதால், நெடுங்காலத்தில் அவற்றின் வருமானம் குறையக்கூடும்.

வரிகளினால் தொழிலமைப்பின்மீது முக்கிய விளைவுகள் ஏற்படலாம். ஓர் உற்பத்திக் கட்டத்திலிருந்து இன்னோர் உற்பத்திக் கட்டத்திற்குப் பண்டம் மாறுந்தோறும், பொதுவான விற்பனை வரி ஒன்று விதிக்கப்பட்டால், அது தொழில் செங்குத்தாக ஒன்றிப் போவதற்குத் (vertical integration of industry) தூண்டுகோலாக அமையலாம். இறுதிநிலை விளைவுகளை (end product) விற்பதற்கு முன்பு நிகழும் பேரங்களின் எண்ணிக்கை குறைவதற்கு ஏற்ப, வரியின் ஒரு சிறு பகுதியே இறுதி விலையில் சேர்கிறது எனலாம். தன் பண்ணையில் விளைந்த தக்காளிப் பழத்தை விவசாயி, டப்பாவில் அடைப்பவனுக்கு விற்கிறான். அவன் தக்காளிப் பழத்தை மொத்த வியாபாரிக்கு விற்கிறான். மொத்த வியாபாரி சில்லறை வியாபாரிக்கு விற்கிறான். இதற்கிடையில் தக்காளிப் பழம் நான்கு முறை கைமாறுகிறது. உற்பத்தியின் ஒவ்வொரு கட்டமும் தனித்

தனியே ஒவ்வொருவரால் செய்யப்படுமாஞல், மூலப் பொருளி லிருந்து தக்காளிப் பழம் இறுதியில் நுகரப்படுவதற்கு முன்புவரை நான்கு முறை விலை பேரங்கள் நிகழ்கின்றன. இந்த ஒவ்வொரு கட்டத்திலும் விற்பனை வரி விதிக்கப்படுமாஞல், சில்லறை வியாபாரியின் விலையில் நான்கு வரிகள் அடங்கியிருக்கும். இறுதி யாக விதிக்கப்பட்ட மூன்று வரிகளும், முந்திய வரிகளைக் (தன்னகத்தே) கொண்ட விலைகளின் பேரில் கணக்கிடப்படும். இவ்வாருன வரியை முற்றும் புரட்டுதல் சில்லறை வியாபாரிக்கு மிகவும் கடினமாக இருக்கும். இவ் வரிகள் கூர்நுதிக்கோபுரம்போல் உயர்வதைப் பின்வரும் முறையைக் கடைப்பிடித்தால், தவிர்க்க லாம். எல்லா உற்பத்தி நிலைகளையும் இணைத்துக் குறைந்த எண்ணிக்கையுள்ள நிறுவனங்களின்மூலம் இவற்றைச் செய்து, பேரங்களின் எண்ணிக்கையைக் குறைத்து, இவ் வரிகளைத் தவிர்க்க லாம். பல மளிகைக் கடைகள் (grocery chain), தோட்டங்கள் பயிரிடுதல், டப்பாக்கள் செய்தல், மொத்த வியாபாரம் செய்தல் இவை யாவற்றையும் சொந்தமாக வைத்திருந்தால், பிற தனிப் பட்ட போட்டியாளர்களைக் காட்டிலும் குறைந்த சில்லறை விலைக்கு அவை பண்டங்களை விற்கமுடியும். அப் பண்டங்களை ஒருமுறைதான் விற்பனை செய்வதால், அக்கடை ஒரேவொரு முறைதான் வரிவிதிப்புக்கு ஆளாகிறது. இவ்வித இணைப்பு. வரியைத் தவிர்ப்பதற்கான தெளிவான உதாரணமாகும். இதனுல் வரியைப் புரட்டுகை எளிதாகிறது. வரியைப் புரட்ட முடியாவிட் டால் நிலைப்பாட்டைத் தாங்குவதும் எளிதாகிறது. இதனுல் இணைந்த நிறுவனங்களுக்குப் பொதுவான ஒரு விற்பனை வரியை விதித்தால், ஒப்புமையில் அனுகூலம் ஏற்படுகிறது. மேலும், இணைப்பு ஏற்படுவதற்கு இஃதோர் வலுவான காரணமாகும்.

### நிலைப்பாட்டினுல் ஏற்படும் விளைவுகள்

வரி நிலைப்பாடு யார்மீது விழுகிறதோ, அவர் ஓரளவு தம் வாங்கும் ஆற்றலைத் தியாகம் செய்ய வேண்டியவராக இருக்கிருர். வளங்களைத் தனியாட்களுக்கும் கோஷ்டிகளுக்கும் (கும்பல்) இடையே பகிர்வு செய்வதற்கும், வளங்களை அரசின் உபயோகத் திற்கும், தனியார் உபயோகத்திற்கும் இடையே பகிர்வு செய்வ தற்கும், வரிமுறை ஒரு வாயிலாகப் பயன்படுகிறது. இதனுல் ஏற்பட்ட தலையாய விளைவு, நிலைப்பாட்டைத் தவிர்ப்பதற்கு, மனிதர் தம் அறிவையும், ஆற்றலையும் செலவிடுவதுதான். தங்கள் தங்கள் மாநிலங்களிலும், தங்கள் தங்கள் தலங்களிலும் குடியிருப் போர் (residents) இருக்கவேண்டும், தொழில் கம்பெனிகள் இருக்க வேண்டும் என்பதற்கான போட்டி மாநிலங்கள் இடையேயும், தலங்கள் இடையேயும் இருக்கிறது. பிற காரணங்களினுல்

அறிவுக்கு ஒவ்வாதவையாக இருக்கும் வரிக்கொள்கைகளை, இப் போட்டியில் அரசு மேற்கொள்ளும்படி நேரிடுகிறது. எப்பொழுதும் பணத்திலே குறியாக உள்ளவர் தனியாள். அவர் வரி நிலைப் பாட்டைக் குறைப்பதற்கோ, அல்லது தவிர்ப்பதற்கோ தன்னாலான வற்றை எல்லாம் செய்கிறார். வரி நிலைப்பாட்டைக் குறைப்ப தற்கும் தவிர்ப்பதற்கும் கிடைக்கும் எல்லா வாய்ப்புகளையும் அவர் பயன்படுத்திக் கொள்கிறார். இவ்வாறாக, இலாபத்தில் ஓடிக்கொண் டிருக்கும் கார்ப்பரேஷன்கள், பல ஆண்டுகளாக இழப்பை அடைந்து கொண்டிருக்கும் கார்ப்பரேஷன்களுடன் இணைக்கப் பெறுகின்றன. இவ் விணைப்பால் (merger) இதுகாறும் தங்களுக்கு ஏற்பட்ட இழப்புகளை இக் கார்ப்பரேஷன்கள் நடப்பு வருமானத்தி லிருந்து கழித்துக்கொள்கின்றன. இது மட்டுமல்ல; குறைந்த வரி விதத்தைச் செலுத்துவதற்காகக் கார்ப்பரேஷன்கள் வருமானத்தை மூலதன ஆதாயமாகக் காட்டுகின்றன. ஆளைப் பொறுத்த வருமானத்திற்குப் (personal income) பதிலாகத் தொழில் செலவுக் கணக்குகளையும், கூடுதல் சம்பளங்களுக்குப் பதிலாகப் பங்கு விருப்பப் பேரங்களையும (stock options) காட்டிப், பல வழிகளிலும் கார்ப்பரேஷன்கள் வரிகளைத் தவிர்க்கலாம். இங்ஙனம் வரிகளைத் தவிர்ப்பதனால், அவற்றின் புரட்டுகையையும் தவிர்க்கலாம். தாங்கள் வரியைப் பெரிதும் தவிர்ப்பதற்கு உகந்த முறையில் வரிச் சட்டங்களை மாற்றியமைக்க, அவற்றில் அக்கறை கொண்ட கும்பல்கள் விடாமுயற்சி செய்வதுதான் மிகவும் வருந்துதற்குரியது. வரியிலிருந்து கிடைக்கக் கூடிய வருவாய்கள் குறையாமல் ஒரே படித்தாக இருக்கவேண்டும் என்றால், இவ்வாறு சிறிது சிறிதாக வரி அடித்தளத்தை அரிப்பதால், பிறர்மீது வரிப்பளு அதிகரிக்க ஏதுவாகும். இதனால் வரிப்பளுவின் பகிர்வில் கோணல்மாணலான ஒட்டுப் போடும் அமைப்பு ஏற்படலாம்.

வரியில்லாவிட்டால், ஒருவர் செலவு செய்யக்கூடிய வருமானம் எவ்வளவு இருக்குமோ, அவ் வருமானம் ஒரு வரியின் நிலைப்பாட்டைத் தாங்குவதால் குறைகிறது. இதனால், வரி விதிக்கப்பட்ட தொழில் நிறுவனத்தின் சேமிப்புத் தொகையும், முதலீட்டுத் தொகையும் குறையும். இதேபோல், வரி விதிக்கப் பட்ட தனியாளின் நுகர்வு, அல்லது சேமிப்பின் அளவும் பாதிக்கப்படும். இங்ஙனமாக, நிலைப்பாட்டைப் பகிர்வு செய் வதனால் மொத்த நுகர்வும், முதலீடும் பாதிக்கப்படுகின்றன. இதனால் மொத்தக் கோணங்களில், ஒப்புமையில், புரிசத்தின் வலு (relative strength of demand in segments of the aggregates) பாதிக்கப்படுகின்றது. இவ்வாறு நிலைப்பாடு, பகிர்வுப் பிரச்சினையின் மையத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது.

**புரட்டுகை நிலைப்பாடு பற்றிய முடிப்புரைகள்**

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அண்மையில், யார் இறுதியாக வரியைச் செலுத்துகின்றார்கள் என்பதைப்பற்றி ஒரு புலன்வழி (empirical) ஆராய்ச்சி நடந்தது. 1954-ல் வரிகளின் நிலைப் பாட்டைப் பொறுத்து, அவர்கள் சில பயன்வழி (pragmatic) முடிவு களுக்கு வந்திருக்கிறார்கள். இவ் வாராய்ச்சியின் பயனாக, அவர்கள், தனியார் வருமான வரிகள் புரட்டப்படுவதில்லை என்றும், கார்ப்பரேஷன் நிகர் வருமானத்தின்மீது விதிக்கப்படும் வரி களின் நிலைப்பாட்டில் மூன்றில் இரண்டு பங்கு, பங்குதாரர்களின் மீதும், ஒரு பங்கு நுகர்வோர்களின்மீதும் விழுகின்றது என்றும், விற்பனை வரிகள், ஆயத்தீர்வைகள், இறக்குமதி வரிகள் இவை நுகர்வோர்மீது ஒறுக்கின்றன என்றும், வீட்டின் சொந்தக் காரர்களே தங்கியிருக்கும் குடியிருப்புக்களின்மீது விதிக்கப்பட்ட உடைமை வரியின் நிலைப்பாடு, சொந்தக்காரர்களின் மீதே ஒறுக் கின்றது என்றும், தொழில் நிறுவனத்தின் சொத்தின் (business property) மீது விதிக்கப்பட்ட வரியின் பெரும் பகுதியும் நுகர் வோரின்மீது விழுகின்றது என்றும் முடிவுக்கு வந்துள்ளார்கள். இம் முடிவுகள், இப் பொருளைப் பற்றி ஆராய்ச்சி நடத்திய தலையாய வல்லுநரின் தோராயமான பொதுமைகள் (rough generalisations) என்பது தெளிவு. பாமர மக்களின் கருத்துடன் இவ் வல்லுநர்களின் முடிவுகளும் ஒத்திருக்கின்றன என்பது உண்மையே.

நிலைப்பாட்டைப் பற்றித் தற்பொழுது ஒத்துக்கொள்ளப்படும் எடுகோள்கள் (assumptions), வரிக்கொள்கையை அறுதியிடு வதில் பெரும்பங்கு வகிக்கின்றன. வரிகளை யார் செலுத்துகிறார்கள் என்பதை அறிந்திருப்பதும், இவ்வாறு அறிந்திருப்பதனால் அரசிறைத் துறையைச் சார்ந்த நடவடிக்கைகளின் (fiscal action) தலையாய குறிக்கோள்கள் எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்பதையும் அறிந்திருப்பது மிகவும் முக்கியமானது. வரிப்பளு வுகள் சரியான முறையில் பகிர்வு செய்யப்பட்டிருக்கின்றனவா என்பதை முடிவு கட்டுதற்கான அடித்தளங்கள் வருமாறு: பொருளாதார நிலைபேறு, பொருளாதார வளர்ச்சி, தேவையான அளவுக்கு வருமான மறுபகிர்வு, பகுத்தறிவுக்கு ஒத்த முறையில் தன்னல மறுப்புகள் ஆகியவற்றை அடித்தளமாகக் கொண்டு, குடி மக்களிடையே இயல்பாக, நீதியான அல்லது நேர்மையான முறையில் வரிப்பளு பகிர்வு செய்யப்பட்டிருக்கின்றதா என்பது முதலாவது குறிக்கோளாகும். எங்கெல்லாம் சாத்தியமோ அங்கெல் லாமிருந்து வருவாயைத் திரட்டுவது இரண்டாவது குறிக் கோளாகும். பொருளாதார நிலைபேறும், வளர்ச்சியும் உச்ச அளவு ஏற்படும்படிப் பேணுதல மூன்றாவது குறிக்கோளாகும். சமுதாய

மதிப்புகளைப் பொறுத்து வளங்களின் ஒதுக்கீட்டை உத்தம அளவில் இருக்கும்படி பேணுவது நான்காவது குறிக்கோளாகும். இறுதியாக, ஒரு குறிப்பிட்ட வரியை யார் செலுத்துகின்றனர் என்பது தெரியாத வரையில் வரி ஒதுக்கீட்டைப் பற்றிய இக் குறிக்கோள்கள் பொருளற்றவை அல்லது பயனற்றவை ஆகும். முதன்முதலில் ஒரு வரியின் தாக்கு எந்த அடிப்படையில் ஒதுக்கீடு செய்யப்படுகின்றது என்பதிலிருந்து, அதனால் சமுதாயத்திற்கு ஏற்படும் நன்மையைப் பற்றியோ, ஈடுகட்டும் பயனைப் (compensatory usefulness) பற்றியோ, அல்லது அதன் நிதியைப்பற்றியோ ஒன்றும் உறுதியாகச் சொல்வதற்கில்லை.

வரிக் கொள்கையை அறுதியிடுவதில் நிலைப்பாட்டைப்பற்றிய அறிவின் முக்கியத்துவத்தை நாம் கவனத்தில் கொள்ளவேண்டும். அதே போழ்து, புரட்டுகையைப் பாதிக்கும் காரணிகளைப் பற்றிய நம் பகுத்தாய்வு முற்றும் சரியாக இருந்தபோதிலும், இறுதிப் பளுவுகளைப் பற்றிய பகிர்வைப் பற்றி நாம் யாதொரு சரியான கணிய முடிவுகளுக்கும் வர முடியாது. ஆகவே, நாம் இப் பிரிவின் தோற்றுவாயில் குறிப்பிட்டபடி சில தோராயமான பொதுமைகளுக்கே வரவேண்டி இருக்கிறது. இதுமட்டுமன்று; நிலைப்பாட்டைப்பற்றிக் குறுகலான பொருளில் மட்டுமல்லாது, ஒரு குறிப்பிட்ட நிதியமைப்பினால் 'ஏற்படும் பலதிறப்பட்ட விளைவுகளையும் தன்னுள் அடக்கிய, நிதிய விளைவுகளைப் பற்றிய ஒரு பொதுவான கருதுகோள் நமக்கு வேண்டும். அவ்விதமான ஒரு கருதுகோள் இருந்தால் இப்பொழுது எடுகோள்களை அடித்தளமாகக் கொண்டு பகுதி பகுதியாக நாம் ஒரு முடிவுக்கு வருவது போலன்றி, இரண்டு மாற்று நிதிய முறைகளிடையே, எம் முறை சிறந்ததென்று நாம் முடிவுக்கு வருதல் எளிதாகும்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Musgrave, 'The Theory of Public Finance,' Part III, Chapters 10—16.

2. The American Economic Association, Readings in the Economics of Taxation, II A, Chapters 11 to 26.

3. Browndee and Allen, 'Economics of Public Finance', Chapter 13.

4. H.C. Adams, 'The Science of Finance', 1924, pp. 388—398.

5. G. Findlay Shirras, 'The Science of Public Finance', pp. 180—188.

6. R. N. Bhargava, 'The Theory and Working of Union Finance in India,' 1971, pp. 53—59.

7. Philip E. Taylor, 'The Economics of Public Finance', pp. 305--312.

# 17. குறிப்பிட்ட சில வரிகளைப்பற்றிய நிலைப்பாடு

**1. வருமான வரியின் நிலைப்பாடு - வருமான வரி, விலைகள் நிருணயம்பற்றிய முரண்பட்ட கருத்துகள்**

தாம் விற்கும் பண்டத்தின் விலையை ஏற்றுவதன் வாயிலாக ஒரு வணிகர், வருமான வரியில் எத்துணைப் பங்கை வாங்கு வோரின்மீது புரட்ட முடியும் என்பது விவாதத்திற்குரிய பொருளாகும். வணிகர்கள் வருமான வரியைக் குறைக்க வேண்டுமென விரும்புகிறார்கள். அதனால், தாம் எதிர்பார்த்த இலாபத்தைப் பெறுவதற்காக, உற்பத்தியாளர்கள், வருமான வரியை விலையேற்றத்தின்மூலம் நுகர்வோருக்குப் புரட்டுவதாகக் கருத்துத் தெரிவிக்கிறார்கள். இதனால் பண்டங்களுக்கான புரிசம் குறைகிறது; குறையவே, வணிகத்தில் குந்தகம் ஏற்படுகிறது. இவ்வாறு வருமான வரி நாட்டிற்கு ஒரு பெரிய பளுவாக இருக்கிறது. பொருளியல் புலவர்கள் இக் கருத்தை மறுக் கின்றார்கள். ஒரு பண்டத்தின் விலை இறுதிநிலை உற்பத்தியாளரின் (marginal producer) ஆக்கச் செலவால் நிருணயிக்கப்படுகிறது. இறுதிநிலை உற்பத்தியாளர் இலாபம் பெறுவதில்லை. ஆகவே, அவர் வருமான வரியும் செலுத்துவதில்லை. ஆகையால் வருமான வரி விலையில் இடம் பெறவில்லை. பிரிட்டனில் வரி விதிப்பு, தேசியக்கடன் இவற்றைப் பற்றி விரிவாக ஆராய்ந்த கோல்வின் குழுவினர் (Colwyn Committee) விலையை நிருணயிப்பதில் வருமான வரி இடம் பெறவில்லை என்பதற்குத் தக்க சான்றுகள் இருக்கின்றன என்ற முடிவுக்கு வந்தனர்.

தனியாரின் வருமானத்தின்மீது விதிக்கப்படும் வருமான வரி அவற்றைப் பெறுவோர் பிழைப்பு மட்டத்தை (subsistence level) அடைந்தால் ஒழியப் புரட்டப்படுவதில்லை. உபரியான நிகர வருமானத்தின்மீது விதிக்கப்படும் வரி புரட்டப்படுவதில்லை.

### போட்டிப் படிநிலைகளில் கிடைக்கும் இலாபத்தின்மீது வருமான வரியின் நிலைப்பாடு

போட்டிப் படிநிலைகளில் ஒரு வணிகர் மட்டும் விலையை ஏற்றுவது சாத்தியமன்று. ஏனெனில், அவருடைய சகாக்களே விலையைக் குறைத்து விற்கக் கூடும். இதனால் ஒரு வணிகர் தம் சகாக்களின் நடவடிக்கைகளையும் கவனத்தில் கொள்ள வேண்டும். அதனுடன் தம்முடைய வாடிக்கையாளர்கள் எவ்விதமாகச் செயல் படுவர் என்பதையும் யோசிக்க வேண்டும். அவர் விற்கும் பண்டத் திற்குப் புரிசம் மிகவும் நெகிழ்ச்சி உடையதாக இருக்கலாம். விலை யேற்றத்தினால் புரிசம் மிகவும் குறையும். அங்ஙனம் குறைந்தால், ஏற்கெனவே கிடைத்ததைக் காட்டிலும் நிகர இலாபம் குறையலாம். ஒருவேளை அங்காடியில் அப் பண்டத்திற்குப் பதிலிகள் இருந்தால், ஒரு வணிகர் விலையை ஏற்றினால், நுகர்வோர் பதிலிகளை வாங்கக் கூடும். இவ்வகையான சூழ்நிலையில் விலைகள் குறைவாகவும், கட்டுக்கடங்கியும் இருக்கும். கிடைப்பைக் கட்டுப்படுத்துவதன் மூலம் விலையை ஏற்ற முயல்வதும் வெற்றியைத் தராது. ஏனெனில் போட்டி அங்காடியில், ஓர் உற்பத்தியாளரின் உற்பத்திமட்டும் விலையைப் பாதிப்பதற்குப் போதியதாகாது. இவ்வாறு போட்டிப் படிநிலைகளில் வருமான வரி உற்பத்தியாளரால் நுகர்வோர்மீது புரட்டப்படுவதில்லை; வரி உற்பத்தியாளர்களையே ஒறுக்கிறது.

### முற்றுரிமைப் படிநிலைகளில் இலாபத்தின்மீது விதிக்கப்பட்ட வருமான வரியின் நிலைப்பாடு

முற்றுரிமை உடைய உற்பத்தியாளர் சாதாரணமாக விலையைக் கூட்டி வரியை நுகர்வோர்மீது புரட்ட முடியாது. அதுமட்டு மன்று; ஒரு மிதமான விலைக்கு விற்கும்பொழுது மட்டுமே ஒரு கம்பெனிக்கு அங்காடியில் ஓரளவு ஆதிக்கம் இருக்கும். விலையை உயர்த்துவதால் மீண்டும் போட்டிக்கு உயிர் ஊட்டக்கூடும்; அல்லது பதிலிகளைப் பயன்படுத்துவதற்கு ஆக்கம் தருவதாகவும் அமையும். இச் சூழலில் ஒரு கம்பெனியின்மீது விதிக்கப்படும் வருமான வரியைப் புரட்டுவது மிகக் கடினம். தாம் விற்கும் பண்டங்களின்மீது பூரண முற்றுரிமை கொண்டிருப்பதாகவும், தாம் விரும்பிய எந்த விலையையும் விதிக்க ஒரு கம்பெனிக்கு இயலும் என்றும் வைத்துக்கொள்வோம். அந் நிலையில் விலையின் வரம்பு முக்கியமாகப் புரிசத்தின் இயல்பைப் பொறுத்திருக்கும். அப் பண்டம் மிக இன்றியமையாதது என்றாலும், பண்டத்திற்கான புரிசம் நெகிழ்ச்சியின்றி இருந்தாலும், அதன் விலையை மிக உச்ச மட்டத்தில் நிருணயிக்கக் கூடும். பண்டத்திற்கான புரிசம் நெகிழ்ச்சி உடையதாக இருந்தால், விலை மிகவும் குறையக் கூடும். முற்றுரிமையாளர் உச்ச முற்றுரிமை வருவாயை (maximum

monopoly revenue) விரும்புகிறார். அவர் பெறும் இலாபம், அவருடைய ஆக்க விலைக்கும், பொருளின் விலைக்கும் இடையே உள்ள இட்டோட்டத்தையும், விற்பனையின் அளவையும் பொறுத்திருக்கிறது. இவை யாவும் வருமான வரி விதிப்பினால் மட்டும் பாதிக்கப்படுவதில்லை. இதன் விளைவாக, இவ் வரியும் விலையைப் பாதிப்பதில்லை. இவ்வகையான சூழ்நிலையில் முற்றுரிமையாளர் வரியைப் புரட்ட முடியாது.

## புறனடை (Exception)

ஒரே ஒரு படிநிலையில்தான் வருமான வரியைப் புரட்ட முடியும். அப் படிநிலை 'விலைஞர் அங்காடி' (sellers market) எனப்படும். கிடைப்புக் கட்டுப்பாட்டினாலோ, திடீர் என்று புரிசம் உயர்வதனாலோ விலைகள் மேனோக்கிச் செல்லலாம். அவ்வித நிலை ஒரு நீடித்த போரையடுத்து ஏற்படக் கூடும். அப்பொழுது விலைஞர் தங்கள் பண்டங்களுக்கான புரிசம் குறையும் என்ற அச்சம் இன்றியே விலைகளை உயர்த்தலாம். இரண்டாவதாக, ஒரு பண்டம், முற்றுரிமையாக இருக்கும் ஒரு பொதுவசதியால் (public utility) உற்பத்தி செய்யப்படலாம். அப்பொழுது வருமான வரியைப் புரட்டக்கூடும். ஒரு பொதுவசதியின் நிகர வருமானத்தின்மீது விதிக்கப்படும் வரி புரட்டப்படலாம். ஏனெனில், குறிப்பிட்ட ஒரு நிகர வருமானத்தைப் பெறக்கூடிய விதத்தில் விலை நிருணயிக்கப்பட்டிருக்கலாம்.

## முடிவுரை

வருமான வரியின் நிலைப்பாட்டைப் பற்றிப் பின்வருமாறு டாக்டர் டால்டன்[1] கூறுகிறார்: 'ஒரு வணிகர் (தம் பண்டத்திற்குப்) பெறும் விலை அவர் செலுத்தும் வருமான வரியின் தொகையைப் பொறுத்ததன்று. நிறைவுப் போட்டியில் ஒரு விலைஞருக்கு அங்காடி விலையை மாற்றுவதற்கு யாதோர் அதிகாரமும் இல்லை. ஒரு பூரண முற்றுரிமையில், அவருக்கு அங்காடி விலையைக் கூட்டுவதற்கு வரம்பில் அதிகாரம் உள்ளது. நிறைகுறை (imperfect) முற்றுரிமையில், அங்காடி விலையை மாற்ற அவருக்கு ஓரளவு அதிகாரம் உள்ளது. ஆனால், இம் மூவிடத்தும், அவருக்கு அளிக்கப்பட்ட வாய்ப்புகளை நீக்கிவிட்டுப் பார்ப்போமானால், அதிக இலாபத்தைத் தரக்கூடிய விலை, அவர் வருமான வரி செலுத்துகிறாரா? இல்லையா? அல்லது எவ்வளவு செலுத்துகிறார் என்பதைச் சார்ந்ததன்று.'

[1] Dalton, 'Principles of Public Finance,' 11th Impression, 1941 George Routledge & Sons, Ltd., p. 83.

## 2. இறப்பு வரியின் நிலைப்பாடு (The Incidence of Death Duties)

இறப்பு வரியின் நிலைப்பாட்டை அறுதியிடுவது எளிது. யார் சொத்தை வாரிசாகப் பெற்று அதன் பெறுமானத்தின்மீது வரியைச் செலுத்துகிருரோ, அவர்மீதுதான் வரிப்பளு விழுகிறது. இறப்பு வரியின் நிலைப்பாடு பின் சந்ததியார்மீதே விழுகிறது என்று டாக்டர் டால்டன் திட்டவட்டமான கருத்தைத் தெரிவிக்கிருர். ஏனெனில், 'வரி விதிக்கப்படுவதற்கு முன்பே உயில் எழுதியவர் இறந்துபட்டிருக்க வேண்டும். இறந்தவர்கள், பிற உயிரற்ற பொருள்களைப் போன்றே, யாதொரு வரியும் செலுத்துவதில்லை.' இவ் வரி இல்லாவிடில், பின் சந்ததியார் ஆதாயம் அடைவார்கள். ஏனெனில், வரியாகச் செலுத்திய தொகையையும் வாரிசுரிமையாகப் பெறுவார்கள். 'முன்னதாகவே உயில் எழுதியவர் வரி செலுத்துவதற்காகக் காப்புறுதி செய்திருக்கலாம் என்பது நிலைப்பாட்டுப் பிரச்சினைக்குத் தொடர்பற்றது. ஆனல், விளைவுகள் பிரச்சினையோடு தொடர்புள்ளது.'[1]

'உண்மையில் நிலைமை இவ்வளவு தெளிவாகவோ அல்லது நேர்பாட்டையினதாகவோ இல்லை. ஏனெனில், உயில் எழுதியவர் தம் வாழ்நாளிலேயே, இறப்பு வரி செலுத்துவதற்கு வகை செய்வது பொதுவான வழக்கம்' என்று சில்வர்மென் (Silverman) கூறுகிருர். 'உயில் எழுதியவர் இம் மண்ணுலக வரி வசூல் செய்வோரின் பிடியினுக்கு அப்பால் போகும்வரையில் இவ் வரிகள் கட்டப்படுவதில்லை என்பதும் உண்மையே. ஆயினும், இவ் வரிகள் இல்லையேல், உயில் எழுதியவர் ஒரு கணிசமான அளவு தொகையைச் சேர்த்துத் தனியே வைத்திருப்பதற்கான இன்றியமையாத நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கமாட்டார் என்பதும் உண்மையே.' இவ் வகையான வரி விதிப்பில், இறந்தவரின் தனிப்பட்ட இயல்பும், அவருக்கும் வாரிசுதாரருக்கும் உள்ள உறவின் நெருக்கமும் கருத்தில் கொள்ளப்படல்வேண்டும். இறந்தவருக்கு நேரிடையான வாரிசு இல்லாது, தூர உறவினர் ஒருவருக்குச் சொத்துப் போய்ச் சேருமாயின், இறந்தவர், வரியாகச் செலுத்தவேண்டிய தொகையைச் சேமித்து வைப்பதற்காகத் தம்மை வருத்திக் கொண்டிராது அசட்டையாக இருந்திருப்பார். இவ்வித நிலையில் இவ் வரியின் நிலைப்பாடு வாரிசுதாரரின் பேரிலேயே நிலைகொள்கிறது.

வரித் தொகையின் அளவும், உயில் எழுதியவரின் எண்ணத்தைப் பாதிக்கும் ஒரு காரணியாகும். இறப்பு வரிகள் மிகக் குறைவாக இருந்தால், இறந்தவர் அதனைச் செலுத்துவதற்

[1] டால்டன், அதே நூல், பக்கம் 53.

கான வகையைச் செய்திருக்கமாட்டார். ஆனால், வரித் தொகை கூடுதலாக இருந்தால், அதைச் செலுத்துவதற்கான வகையை அவரே செய்திருப்பார். இறந்தவரின் நோக்கு, சொத்தின் இயல்பாலும் பாதிக்கப்படும். சொத்து நிலமாகவோ அல்லது வணிக நிறுவனமாகவோ இருந்தால், உயில் எழுதியவர் அதைச் சிதறுண்டு போகச் சகியாது, தமது சொத்திற்கு யாதொரு ஊறும் ஏற்படாத வகையில் ஒரு தொகையைச் சேமிப்பதற்கும், அச் சேமிப்பிலிருந்து வரியைச் செலுத்துவதற்கும், சிறப்பான முயற்சிகளை மேற்கொண்டிருப்பார். அவருடைய செல்வம் பங்கு களாகவோ, அல்லது எளிதில் விலைபோகக் கூடியனவாகவும், பிரிக்கப்படக் கூடியனவுமான பொருள்களாகவோ இருக்குமாயின் அவருக்குத் தன் சொத்தைச் சிதறுண்டு போகாமல் தடுக்க வேண்டும் என்ற எண்ணம் அத்துணை வலுவாக இராது. இறுதி யாகச் சட்ட மன்றத்தின் நோக்கமும், இவ் வரியை இப்போதைய உடைமையாளரிடமிருந்து வசூலிப்பதேயாகும். வரியின் வீதமும், மொத்தப் பெறுமானத்திற்கு ஏற்றவாறு படித்தரமாக அமைக்கப் பட்டிருக்கிறது.

## 3. நில வரியின் நிலைப்பாடு

கருதுகோள் அளவில் நாம் பல்வேறுபட்ட நில வரிகளையும் வேறுபடுத்திக் கூறலாம்.

(1) பொருளாதார வாரத்தின்மீது வரி: பொருளாதார வாரத்தின்மீது ஒரு வரி விதித்தால், அது இவ் வாரத்தைப் பெறு வோரை மட்டுமே பாதிக்கும். இது இறுதிநிலை விவசாயிகளைப் பாதிக்காது; இறுதிநிலைக்குள் அடங்கிய (intra marginal) விவசாயிகளை மட்டுமே பாதிக்கும். ஆகவே, நில வரியினால் விலை பாதிக்கப்படுவதில்லை. இதன் விளைவாக, நில வரியின் நிலைப்பாடு, நிலத்தின் சொந்தக்காரர்களின்மீதுதான் விழுகிறதே ஒழிய, நுகர் வோர்களின்மீது விழுவதில்லை. ஆனால், நடப்பில் பொருளாதார வாரத்தைத் திட்டவட்டமாகத் தட்ட முடியாது. ஆகையால், வெளிப்படையாகப் பொருளாதார வாரத்தின்மீது வரி விதிப்பதும் ஓரோவழிதான் நிகழும்.

(2) நிலத்தின் அளவுக்கும், தன்மைக்கும் தக ஒரேபடித் தான (uniform) வரியை விதிப்பது: (அ) நிலத்தின் அளவுக்குத் தக ஒரு வரி விதிக்கப்படுகிறதாகக் கொள்வோம். ஏக்கருக்கு இவ்வளவு உரூபா என்று வரி விதித்தால் அது புரட்டப்படலாம். மூன்று நிலங்கள் 'க, கா, கி' என்று இருப்பதாகவும், அவற்றின் கண்டுமுதல் முறையே 12 கலம்,[1] 20 கலம், 45 கலம் நெல்

[1] ஒரு கலம் என்பது இருபத்து நான்கு பட்டணம் படி.

என்றும் கொள்வோம். அவற்றின் பயிர்ச் செலவு ஏக்கர் ஒன்றுக்கு உரூபா 200, உரூபா 300, உரூபா 600 ஆகிறதென்றும் வைத்துக் கொள்வோம். ஓர் ஏக்கர்மீது உரூபா 10 நிலவரியாக விதிக்கப் படுகிறதென்றும், ஒரு கலம் நெல் விலை உரூபா 17.50 என்றும் கொள்வோம். அப்பொழுது 'க' நிலத்திலிருந்து உரூபா 210-ம், 'கா' நிலத்திலிருந்து உரூபா 350-ம், 'கி' நிலத்திலிருந்து உரூபா 787.50-ம் வருவாய் கிடைக்கும். 'க' நிலத்தின் பயிர்ச் செலவு உரூபா 200+நிலவரி உரூபா 10 ஆக உரூபா 210-ம் அந் நிலத்தி லிருந்து கிடைக்கும் வருமானமும் சரியாய்ப் போனதால் நிலச் சொந்தக்காரருக்கு யாதொரு மிச்சமும் இல்லை. ஆனால், 'கா,' 'கி' நிலங்களின் சொந்தக்காரர்களுக்கு உரூபா 40-ம், உரூபா 177.50-ம் முறையே மிச்சமாகக் கிடைக்கின்றது. இதிலிருந்து இவர்கள் இருவரும் வரியைப் புரட்டுகிறார்கள் என்பது தெளிவு. இதற்கிடையில் புரிசத்தில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை என்று வைத்துக் கொள்கிறோம். (ஆ) இதே போன்று நிலத்தின் தன்மைக்கு ஏற்ப, பல்வேறு வீதங்களில் வரி விதிக்கப்பட்டால், வரியை நுகர்வோர்மீது புரட்டலாம். ஆயின், புரிசம் நிலையாக இருக்க வேண்டும். (இ) சில சமயம் நிலத்தின் மதிப்பிற்கேற்ப, நில வரி விதிக்கப்படலாம். வாரம் செலுத்தாத நிலத்திலிருந்து இவ்வித வரியை விதிக்க முடியாது. இங்ஙனம், வரி விதிக்கப் பட்டால் நிலத்திற்கு உரிமையாளர் அதைத் தரிசாகப் போடுவாரே தவிர வரியைச் செலுத்தமாட்டார். இங்ஙனம், சில நிலங்கள் தரிசாகக் கிடந்தால், அதனால் பாதிக்கப்படுபவர்கள் குத்தகை தாரர்களும், நுகர்வோர்களும்தாம்.

(3) மொத்த விளைச்சலின்மீது ஒரு வரி : பழைய காலத்தில் நிலத்தின் விளைச்சலின் ஆறில் ஒரு பங்கையோ, பத்தில் ஒரு பங்கையோ வரியாக வசூலித்தனர். இவ் வரி நுகர்வோர்மீது புரட்டப்படும். மொத்த விளைச்சலின்மீது வரியை விதித்தால், உற்பத்திக் காரணிகளும் வரி செலுத்த வேண்டியிருக்கிறது. இதனால் உற்பத்தி குறையும்.

(4) நிகர வருமானத்திற்கு ஏற்ப ஒரு செஸ் (Cess) விதித்தல் : சாதாரணமாக இவ் வரிகள் நுகர்வோர்மீது புரட்டப் படுவதில்லை. வேளாண்மையில் படிநிலைகள் மாறுவதற்கு ஏற்ப இவ் வரிகளை நிலத்திற்குச் சொந்தக்காரர்களோ, குத்தகை யாளர்களோ, அல்லது இருவருமோ செலுத்துகிறார்கள். ரிக்கார் டோவின் (Ricardo) கோட்பாட்டின்படி, நிலவரி முழுவதும் புரட்டப்படுகிறது. அங்ஙனம் புரட்டப்படவில்லையானால் நிலம் தரிசாகக் கிடக்கும் என்பது ரிக்கார்டோவின் வாதம். இங்ஙனம் நடக்கவேண்டும் என்றால், (அ) உழைப்புக்கும், மூலதனத்

துக்கும் பரிபூரணப் பெயர்ச்சி இருக்கவேண்டும். நடைமுறையில் இவ்வாறு பரிபூரணப் பெயர்ச்சி இல்லை. (ஆ) சமுதாயம் பிற நாடுகளுடன் தொடர்பின்றி இருக்கவேண்டும். அங்ஙனம் இருந் தால்தான் பிற நாடுகளிலிருந்து போட்டி இராது. போட்டி யில்லாவிடில் விவசாயிகள் தாங்கள் விரும்பிய விலைக்கு விளை பொருளை விற்க முடியும். ஆனால், பன்னாட்டுச் சூழ்நிலை இதற்கு நேர்மாருக இருக்கிறது.

(5) கட்டடங்களின்மீது விதிக்கப்படும் வரியின் நிலைப்பாடு: கட்டடங்களின்மீது விதிக்கப்படும் வரியின் நிலைப்பாட்டில் பல சிக்கல்கள் உள. உறைவிடத்திற்கான புரிசம் நெகிழ்ச்சி உடைய தாக இராவிடில், கட்டடங்களின்மீது விதிக்கப்படும் வரி குடியிருப் போரின்மீதே விழும். ஆனால், வீட்டிற்கான புரிசம் நெகிழ்ச்சி உடையதாக இருந்தால், அவ் வரி சொந்தக்காரர்மீது புரட்டப் படும். மேலும், வீட்டில் குடியிருப்பவர் வாணிபத்தில் ஈடுபட் டிருந்தால், அவர் வரியின் நிலைப்பாட்டின் ஒரு பகுதியைத் தம் விற்பனைப் பண்டங்களை வாங்குவோர்மீது புரட்டக் கூடும். இவ் விற்பனைப் பண்டங்கள் நுகர்வுப் பண்டங்களாக இராமல், எந்திரங் களாக இருக்குமானால், எந்திரங்களை வாங்குவோர் மீண்டும் தங்கள் மீது விழும் நிலைப்பாட்டின் ஒரு பகுதியைத் தங்களின் விற்பனைப் பண்டங்களை வாங்குவோர்மீது புரட்டலாம். பொதுவாக, வீடுகளுக் கான புரிசம், அவற்றின் கிடைப்பைக் காட்டிலும் கூடுதலாக இருப்பதால், வீட்டு வரி குடியிருப்பவர்களின் குடிக்கூலிக்கு அல்லது வாடகைக்கு இருப்பவர்கள்)மீது புரட்டப்படுகிறது.

## 4. பண்டங்களின் உற்பத்தி அல்லது விற்பனைமீது விதிக்கப் படும் வரிகள்

இவ் வகையில் ஆயத் தீர்வைகளும், விற்பனை வரிகளும் அடங்கும். ஒரே ஒரு முறைதான் இவ் வரி விதிக்கப்படுகின்றது என்று வைத்துக்கொள்வோம். ஆகவே, நம்முடைய பகுத்தாய் வில் மூலதனமாக்கல் (capitalization) அடங்காது. ஆயினும், வரியை முற்பட்டு அல்லது பிற்பட்டுப் புரட்டுவது சாத்தியமே.

பகுத்தாய்வுக்கு நாம் எடுத்துக்கொண்ட அலகு தனியாள் தொழில் நிறுவனம் ஆகும். முதன் முதல் விதிக்கப்படும் வரி இந் நிறுவனத்தின் மீது ஒறுக்கிறது. பண்டங்களின் விலை, அவற்றை உற்பத்தி செய்யும் கணியம் ஆகியவற்றை அத் தனியாள் நிறு வனமே அறுதியிடுகிறது. நிறுவனத்திற்குப் புறம்பே பண்டத் திற்குள்ள புரிசம் தீர்மானிக்கப்படுகின்றது என்றும், ஆக்கச் செலவு பெரும்பாலும் புறத்தே நிருணயிக்கப்படும் விலைகளால்

பாதிக்கப்படுகிறது என்றும், நிறுவனத்தின் குறிக்கோள் உச்ச இலாபத்தைப் பெறுவது என்றும் நாம் வைத்துக்கொள்வோம். இங்கு நாம் வரைபடம் வரைவதற்கு நிறைகுறைப் போட்டியை உதாரணமாக எடுத்துக்கொள்வோம். நிறைகுறைப் போட்டியில் பண்டங்களை உற்பத்தி செய்வோர் அல்லது விற்போர் இவர்களின் தொகை மிகக் குறைவாக இருப்பதால், அவர்களில் யாரேனும் ஒருவர் தம் உற்பத்தியின் (அல்லது விற்பனையின்) அளவில் செய்யும் மாறுதல், அவர் பெறும் விலையைப் பாதிக்கும். உற்பத்தியாகும் அல்லது விற்பனையாகும் ஒவ்வோர் அலகின்மீதும் நிலைத்த வீதத்தில் ஒரு தனிப்பயன் வரி (specific tax) விதிக்கப்படுகின்றதென்று நாம் வைத்துக்கொள்வோம். ஒவ்வோர் அலகின் விலையிலும் ஒரு நிலைத்த சதவீதத்தை ஒரு பெறுமானவீத வரி (ad valorem tax) எடுத்துக்கொள்ளும் (பெறுமான வீதவரி விதிக்கப்பட்டால்). நிறுவனத்தின் புரிச வளைகோடு கீழ்நோக்கிச் சரிவாகச் செல்லுமானல், பெரும் அளவு உற்பத்தியினுல் அலகின் விலை குறையும். ஆகையால், ஒவ்வோர் அலகிற்கும் குறைந்த அளவு உருபாக்களே வரி வருவாயாகக் கிடைக்கும்.




படம் 3

*மாறும் உற்பத்திச் செலவுகளுக்கு மாறுதலற்ற முறையில் கூடுதல் ஆகும் வரி (நிறைவில்லாப் போட்டி)*

உச்ச நிகர வருவாயைப் பெற விரும்பினுல் ஒரு நிறுவனம். அதன் இறுதிநிலை வருவாயும், இறுதிநிலை ஆக்கச் செலவும் சமன் ஆகும் வரையில் பண்டங்களை உற்பத்தி செய்ய வேண்டும். அங்ஙனம் சமனுகும் வரை ஒவ்வோர் அலகினுலும் மொத்த ஆக்கச் செலவு அதிகரிக்கும். ஆனுல், இதைவிடக் கூடுதலாக ஒவ்வோர் அலகையும் விற்பதன்மூலம் மொத்த வருவாய் அதி

கரிக்கும். அந் நிறுவனம் இந்தக் கணியத்திற்கு மேற்பட்டு யாதொரு அலகையும் உற்பத்தி செய்யாது. மூன்றும் வரை படத்தில் இக் கணியம் 500 அலகாகும். ஏனெனில், வரி செலுத்து வதற்கு முன்பு உள்ள இறுதிநிலை ஆக்கச் செலவு $MC_1$ ஆகும். DD′ என்ற புரிச வளைகோட்டிலிருந்து பெறும் இறுதிநிலை வருவாய் MR ஆகும். வரி வீதம் அலகொன்றுக்கு ஓர் உருபா ஆகும். இவ் வரியை $MC_1$யுடன் சேர்த்தால், நாம் ஒரு புதிய இறுதிநிலை ஆக்கச் செலவைப் பெறுகிறோம். இதுதான் $MC_2$. இப்பொழுது புதிய சமநிலை உற்பத்தியின் (equilibrium output) கணியம் 500 அலகுகளுக்கும் குறைவு (ஏறக்குறைய 457 அலகுகள்). சமநிலை விலையும் $P_1$-ல் இருந்து $P_2$ ஆக (6 உருபாவிலிருந்து 6.43 உருபா வாக) உயர்ந்திருக்கிறது. முந்திய ஆக்கச் செலவுகளுடன் வரி யையும் சேர்த்ததால் ஒரு புதிய சமநிலை ஏற்பட்டது. இப் புதிய சமநிலைக்கு நிறுவனம் தன்னை ஆயத்தம் செய்து கொள்ளும் பொழுது வரி நிலைப்பாட்டுக்கு என்ன ஏற்பட்டதென்பதை நாம் இப்பொழுது காண்போம்.

விலை ஏறியிருக்கிறது என்றாலும், வரித்தொகையைவிடக் குறைவாகவே விலை ஏறியிருக்கின்றது என்பதை நாம் முதலில் கவனத்தில் கொள்ளவேண்டும். விற்பனையின் கணியமும் குறைந்திருக்கிறது என்பதையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். இறுதியாகப் புதிய சமநிலையில் வரி நீங்கலாக உள்ள ஆக்கச்செலவு ($MC_1$), 500 அலகுகள் உற்பத்தி செய்யப்பட்ட பொழுது இருந்ததைக் காட்டிலும் குறைவாகவே இருக்கிறது. வரியின் முதல்தாக்கு பண்ட விலைஞரின்மீது விழுந்தது. அவர் வரியை முன்பணமாக அரசுக்குத் தந்தார் எனலாம். தம்முடைய பண்டத்தின் விலையை உயர்த்துவதன்மூலம், பின்னர் அவர் வாங்குபவரின்மீது வரியைப் புரட்டத் தம்மால் இயன்ற அளவு முயன்றார். ஆனால், வரித்தொகை முழுவதையும் விலையோடு கூட்ட முனைந்தால், புரிச நெகிழ்ச்சியினால், விற்பனையாகும் அலகுகளின் எண்ணிக்கை குறையும்; குறைந்தால் கிடைக்கக் கூடிய இலாபமும் மிகவும் குறையக்கூடும். ஆகவே, அவர் விலையை $P_2$ ஆக உயர்த்துகிறார். இதன்மூலம் புதிய சூழ்நிலைகளிலும் அவர் உச்ச இலாபத்தைப் பெற முடிகிறது. இதன்மூலம் அவர் தான் முன் பணமாகச் செலுத்திய வரியை ஓரளவு ஈடுசெய்து கொள் கிறார். ஆயினும், பூரா வரித்தொகையையும் அவரால் ஈடுசெய்து கொள்ள முடியவில்லை. ஏனெனில், வரி செலுத்துவதற்கு முன்பு இருந்ததைக் காட்டிலும், வரி செலுத்திய பின்பு, அவரின் மொத்த இலாபம் குறைவாகவே இருக்கிறது. இங்ஙனமாக வரி நிலைப்பாடு, பண்டத்தை விற்பவருக்கும் பண்டத்தை வாங்குபவருக்கும் இடையே பிரிக்கப்படுகிறது.

உற்பத்தி குறையவே, காரணிகளின் இறுதிநிலை ஆக்கச் செலவும் ஓரளவு குறைகிறது. அதாவது தள அச்சுக்கும் (base axis) $MC_1$-க்கும் இடையே உள்ள தூரம் 500 அலகுகளிலிருந்து 457 அலகுகளாகக் குறைகிறது. பேரளவு உற்பத்தி செய்வதைக் காட்டிலும் குறைந்த அளவு உற்பத்தி செய்யும் பொழுது உற்பத்திக் காரணிகளின் மொத்தச் செலவு குறைகிறது. இதிலிருந்து வரியில் ஒரு பகுதி உற்பத்திக்காரணிகளின்மீது புரட்டப்படுகின்றது என்று பொருளன்று. வேலையின்மையால் ஏற்படும் பளுவில் ஓரளவை உற்பத்திக் காரணிகளும் தாங்குகின்றன என்பது உண்மையே. ஆயினும், இப் பளு உற்பத்திக் குறைவினுல் நேரிடையாகவும், வரியைச் செலுத்துகையினுல் மறைமுகமாகவும் ஏற்படுகிறது. பண்டங்களை விற்பவர், வரியை முன்பணமாகத் தந்ததைக் காரணிகள் ஈடு செய்வதில்லை. வாங்குவோரின்மீது வரியைப் புரட்ட முயல்வதால், விற்பனையாகும் அலகுகளின் எண்ணிக்கை குறையும். இதனுல், காரணிகள் ஓரளவு வருமானத்தை இழக்கின்றன. இவ் வரியின் ஒரு பகுதியைக் காரணிகள் ஏற்றுக் கொள்வதனுல் $MC_1$ என்ற வளைகோடு கீழே சரியும். இங்ஙனம் சரிவது உற்பத்திக் காரணிகளுக்கான ஊதியத் தொகைகளின் வீதங்கள் குறைக்கப்பட்டதைப் பிரதிபலிப்பதாகும். குறுங்காலத்தில் இங்ஙனம் நேர்வதில்லை. ஆயினும், நெடுங்காலத்தில் காரணிகள் வேலையின்றி இருக்கின்றன. ஆகவே, அவற்றின் ஊதிய வீதங்கள் கீழ்நோக்கி இறங்கக் கூடும்.

குறுங்காலத்தில் பொதுவாகக் காணப்படும் ஒருசிறைப் புரட்டுகையை (partial shifting) மூன்றும் வரைபடத்தில் காட்டியிருக்கிருேம். இதைத் தவிர, வேறு எண்ணிறந்த உதாரணங்களையும் நாம் பரிசீலிக்கலாம். தனியார் நிறுவனத்தை எதிர்நோக்கியுள்ள புரிச நெகிழ்ச்சிகளுக்கும், ஆக்கச் செலவு நெகிழ்ச்சிகளுக்கும் இடையேயுள்ள வேறுபாடுகள்தாம் இவை. இவை தனியார் நிறுவனத்தை எதிர்நோக்கியுள்ள புரிச நெகிழ்ச்சிக்கும் அல்லது ஆக்கச் செலவு நெகிழ்ச்சிக்கும் உள்ள வேறுபாடே என்றும் கூறலாம்.

நான்காம் வரைபடத்தில், வரி நீங்கலாக உள்ள இறுதிநிலை ஆக்கச்செலவு ராசியை (marginal cost function—$MC_1$) நாம் எடுத்துக்கொண்டு பல்வேறுபட்ட புரிச நெகிழ்ச்சிகளினுல் ஏற்படும் விளைவுகளைக் காண்பித்திருக்கிருேம். D′ என்ற புரிசக் கோட்டைக் காட்டிலும் $D_1$ என்ற புரிச வளைகோடு நெடுகிலும் மிகுந்த நெகிழ்ச்சி உடையதாக இருக்கிறது. இப் புரிசங்கள் ஒவ்வொன்றின் இறுதிநிலை வருவாய் வளைகோடும் (MR and MR′ முறையே) படத்தில்

காட்டப்பட்டிருக்கின்றன. உச்ச நிகர வருமானத்தைப் பெற விரும்பும் எந்த வணிகனும் இறுதிநிலை வருவாயும், இறுதிநிலை ஆக்கச்செலவும் சமன் ஆகும் வரை, உற்பத்தியைப் பெருக்க முனைவான். இதுதான் $E_1$ என்னும் புள்ளியாகும். இரண்டு புரிச ராசிகளையும் பொறுத்தவரை இப் புள்ளி $E_1$ தான். புரிசம் D ஆக இருக்கும் பொழுது வரி விதிப்பதற்கு முன்புள்ள சமநிலை விலை $P_1 Q_1$ (நான்கு உரூபா) ஆகவும், சமநிலைக் கணியம் $O Q_1$ (400 அலகுகள்) ஆகவும் இருக்கும். புரிசம் D′ ஆக இருக்கும் பொழுது, சமநிலை விலை P′ Q (9 உரூபா) ஆகவும், சமநிலைக் கணியம் $O Q_1$ (400 அலகுகள்) ஆகவும் இருக்கும்.




படம் 4

வரி வீதம் அலகுக்கு ஓர் உரூபா

பல்வேறுபட்ட புரிச நெகிழ்ச்சிகளினால் வரிப் புரட்டுகையின் மீது ஏற்பட்ட விளைவு

அலகொன்றுக்கு ஓர் உரூபா வீதம் ஆயத் தீர்வைகள் விதிக்கப்படின், எல்லாக் கணியங்களின் இறுதிநிலை ஆக்கச் செலவும ஓர் உரூபா உயரும். இதனால், வரியை உள்ளிட்ட ஆக்கச் செலவின் வளைகோடு $MC_2$ ஆக இருக்கும். இப்பொழுது இவ்விருவகைப் புரிச நிலைகளின்கீழ் உள்ள சமநிலைப் புள்ளிகளும் ($E_2$ $E_2'$) மாறுகின்றன. புரிச நெகிழ்ச்சி கூடுதலாக இருக்கும்

பொழுது (D) புதிய சமநிலையில் விலை $P_2$ $Q_2$ ஆகவும், கணியம் O $Q_2$ ஆகவும் இருக்கும். புரிசம் மிகவும் நெகிழ்ச்சி உடையதாக இருக்கும்பொழுது விலை சிறிதே ஏறுகிறது; ஆனால், கணியம் பெருத்த அளவில் குறைகிறது. இவ்வாறாகப் புரிச நெகிழ்ச்சி குறைவாக இருக்கும்பொழுது, வரியை வாங்குவோர்மீது எளிதில் முற்பட்டுப் புரட்டலாம். வரியை முற்பட்டுப் புரட்டுகைக்கு வாங்குவோரிடம் காணப்படும் எதிர்ப்பு, புரிச நெகிழ்ச்சி என்ற அளவிலேயே பொருந்துவதாகும். புரிச நெகிழ்ச்சி மிக அதிகமாக இருக்கும்பொழுது, புரட்டுகைக்கு எதிர்ப்பும் அதிகமாக இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட அளவு விலை ஏறும்பொழுது, வாங்கும் கணியம், ஒப்புமையில் மிகவும் குறைவதே நெகிழ்ச்சி அதிகம் என்பதன் பொருளாகும். வாங்கும் கணியம் பெருமளவு குறைந்தால், அது விலைஞரின் மொத்த நிகர வருமானத்தைப் பாதிக்கும். நெகிழ்ச்சி எல்லையில்லாததாக இருப்பது மிகத் தீவிரமான உதாரணமாகும். அப்பொழுது புரிச வளைகோடு படுகிடையாக (horizontal) இருக்கும். இவ்வித நிலையில் விலை ஏறினால், குறுங் காலத்தில் விற்பனையின் கணியம் சூனியமாக இருக்கும். மற்றோர் புறத்து, புரிசம் நெகிழ்ச்சியின்மையாக இருப்பது, இப் பண்டமின்றி இயங்க முடியாத, வாங்குவோரின் ஆற்றாமையைப் புலப்படுத்துகிறது. அங்காடியில் கூடுதலான விலைகள் நிலவும் பொழுது, அவர்கள் பண்டங்களைப் பெரும்பாலும் வாங்காமல் இருப்பதில்லை. இதனால் அவர்கள் முற்பட்டுப் புரட்டுகைக்குச் சரியான இரையாகின்றனர்.

நிறுவனத்தின் ஆக்கச் செலவுகளின் நடப்பும்—அதாவது உற்பத்தியில் மாறுதல்களுக்கு ஏற்ப ஓர் அலகின் உற்பத்தி ஆக்கச் செலவிலும் மாறுதல் ஏற்படும் வீதம்—ஒரு பண்டம் உற்பத்தியாகும் பொழுது அல்லது விற்பனையாகும் பொழுது விதிக்கப்படும் வரியின் புரட்டுகையைப் பாதிக்கும். புரிசப் படிநிலைகளும், இறுதிநிலை வருவாய்ப் படிநிலைகளும் குறிப்பிட்ட நிலையில் இருக்கும்பொழுது, முற்றிலும் வேறுபட்ட இரண்டு இறுதிநிலை ஆக்கச் செலவு வளைகோடுகள் இருப்பதை ஐந்தாம் வரைபடம் காட்டுகிறது. வரித் திணிப்புக்கு முன்பு நிலவிய இவ் வேறுபட்ட ஆக்கச் செலவு நடப்புகளின் ரகங்களை (types of cost behaviour) $MC_1$ $MC'_1$, என்ற வளைகோடுகள் புலப்படுத்துகின்றன. இப் போக்கை மீண்டும் விரிவாக ஆராயாது, ஆக்கச்செலவுப் படிநிலைகள் $MC_2$ ஆக இருக்கும்பொழுது விலை $P_1$-ல் இருந்து $P_2$ ஆக ஏறுகின்றதென்பதையும், ஆக்கச் செலவு $MC'_2$ ஆக இருக்கும் பொழுது, விலை $P_1$-ல் இருந்து $P_3$ ஆக மட்டும் ஏறுகின்றதென்பதையும் நாம் காண்கின்றோம். இறுதிநிலை அலகின் ஆக்கச்

செலவு திடீரென்று ஏருது படிப்படியாக ஏறினால், விலை ஏற்றம் அதிகமாகவும், விற்பனையாகும் கணியத்தில் சரிவு அதிகமாகவும் இருக்கின்றன. இறுதிநிலை ஆக்கச் செலவு விரைவாக ஏறிக் கொண்டு வரும் பொழுது, கடைசிச் சில அலகுகள் விற்கப்படு வதால், நிறுவனத்தின் மொத்த நிகர வருமானம் அதிகமாகக் கூடுகின்றதென்பதே இதற்கான காரணமாகும். இவ் வருமான அதிகரிப்பு, படிப்படியாக இறுதிநிலை ஆக்கச் செலவு ஏறும் நிலையில் உற்பத்தி செய்யும் நிறுவனத்தைவிட அதிகமாக இருக் கிறது. (இறுதிநிலை வருவாய்க்கும், இறுதிநிலை ஆக்கச் செலவுக்கும் இடையிலுள்ள செங்குத்தான இடைவெளிகளால் மொத்த இலாபத்தில் ஏற்படும் கூடுதல்கள் அளவிடப் பெறு கின்றன). இவ்வாருக, மிகவும் செங்குத்தான இறுதிநிலை ஆக்கச்




படம் 5

*வரி வீதம் அலகுக்கு ஓர் உரூபா*

*பல்வேறுபட்ட இறுதிநிலை ஆக்கச் செலவு நெகிழ்ச்சிகளினால் புரட்டுகையின்மீது ஏற்படும் விளைவு*

செலவு ராசியை உடைய நிறுவனம் தீன் விலையை ஏற்றுந்தோறும் மிகுந்த இலாபத்தை நல்கக்கூடிய இவ் விறுதிநிலை அலகுகள் கைவிடப்பட்டு, நிறுவனத்தின் மொத்த இலாபமும் ஒப்புமையில் விரைவாகச் சரிகிறது. கணியத்தைக் குறைத்து விலையைச் சிறிதே ஏற்றினாலும் இலாப இழப்பு விரைவாக ஏற்படுவதால், விலையைக் கணிசமான அளவு ஏற்றுவதிலிருந்து நிறுவனம் தடுக்கப்படுகின்றது. விலையை ஏற்றி வரியை முற்பட்டுப் புரட்டு கைக்கும், தானே வரியைச் செலுத்துவதற்கும் இடைப்பட்ட சிறந்த நிலை $E_3$ என்ற சமநிலைப் புள்ளியில் ஏற்படுகின்றது. விலை ஏற்றத்தின்மூலம் வரி முற்பட்டுப் புரட்டப்படுகின்றது. இதனால்

சில விளைவுகள் ஏற்படுகின்றன. இவ் விளைவுகளைச் சிறிது குறைவான வேகத்துடன் இறுதிநிலை ஆக்கச் செலவுகள் ஏறும் நிறுவனம், நன்ருகத் தாங்கிக் கொள்ளக்கூடிய நிலையில் இருக்கின்றது. இவ்வாறு, மற்றவை மாருதிருப்பின், எவ்வளவுக்கெவ்வளவு இறுதிநிலை ஆக்கச் செலவின் ராசி குறைந்த நெகிழ்ச்சி உடையதாக இருக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு வரியை முற்பட்டுப் புரட்டுகைக்குப் பெரும் அளவில் எதிர்ப்பு இருக்கும்.

குறுங்காலத்தில் உற்பத்தி அல்லது விற்பனை செய்யப்படும் பண்டத்தின்மீது விதிக்கப்பட்ட வரியின் நிலைப்பாட்டுச் சாத்தியக் கூற்றை நாம் இதுகாறும் ஆராய்ந்தோம். வரியை விதித்தவுடன் அல்லது நெடுங்காலமாக அமலில் இருந்த ஒரு வரியின் வீதத்தைக் கூட்டியதாலோ, முதன்முதலில் வரிக்கு ஆட்படுகிறவர் தூக்கலான விலையின் மூலம் வரியின் ஒரு பகுதியை முற்பட்டுப் புரட்டுகிருர் என்பதும், ஒரு பகுதியைத் தாமே தாங்குகிருர் என்பதும், நாம் சாதாரணமாக ஏற்றுக்கொண்ட எடுகோள்களாகும். அவர் வரியை, எத்துணை முற்பட்டுப் புரட்ட முடியும் என்பது, பண்டத்தை வாங்குவோரிடமிருந்தும், தம் நிறுவனத்தின் அக ஆக்கச்செலவு படிநிலைகளிலிருந்தும் (internal cost conditions) ஏற்படும் எதிர்ப்பின் அளவைப் பொறுத்திருக்கின்றது. புரிசம் எத்துணை நெகிழ்ச்சி உடையதாக இருக்கின்றதோ, அத்துணை எதிர்ப்பு முற்பட்டுப் புரட்டுகைக்கு இருக்கும். இறுதிநிலை ஆக்கச் செலவில் மாறுதல் வீதம் எத்துணைக் குறைவக இருக்கின்றதோ அத்துணை அதிகமாகப் புரட்டுகைக்கு எதிப்பு இருக்கும். புரிசம் வரையறையின்றி நெகிழ்ச்சி உடையதாக இருக்குமாளுல், குறுங்காலத்தில் எவ்வித முற்பட்ட புரட்டுகையும் நேரிட முடியாது என்பதை நாம் இதுகாறும் கூறியவாற்ருன் உணர்ந்திருப்போம். மேலும், நெகிழ்ச்சியில் இறுதிநிலை ஆக்கச்செலவு சூனியமாக இருக்குமாளுல் — வளைகோடு முற்றும் செங்குத்தாக இருக்குமாளுல்—குறுங்காலத்தில் எவ்விதமான முற்பட்ட புரட்டுகையும் ஏற்படமுடியாது.

குறுங்காலத்தில் வரிப் புரட்டுகைக்கு வாய்ப்புகள் இல்லாதிருக்கலாம். நெடுங்காலத்தில் முற்பட்ட புரட்டுகைக்கும், பிற்பட்ட புரட்டுகைக்கும் வாய்ப்புகள் இருக்கலாம். குறுங்காலத்தில் ஓரளவு வரிப்பளுவை விலைஞர் தாங்கிக்கொண்டால், இதனுல் வரி இன்றியோ, அல்லது வரி விதிப்பதற்கு முன்போ இருந்ததைக் காட்டிலும், அவருடைய நிகர வருமானம் குறையும் எனலாம். இறுதிநிலையில் உள்ள அல்லது இறுதிநிலையில் இருக்கக் கூடிய நிறுவனங்கள் இழப்பை எய்தும். இவ் விறுதிநிலை நிறு

வனங்கள் அங்காடியை விட்டு அகலும். அங்ஙனம் அகலும் பொழுது எஞ்சியுள்ள நிறுவனங்களை எதிர்நோக்கியிருக்கும் புரிசம் வலுப்பெறுகிறது. அதாவது புரிச வளைகோடு ஏறுகிறது. மேலும், இங்ஙனம் நேரும்பொழுது, விற்பனையின் கணியத்தில் குறைவு நேராமல், விலையை ஏற்றலாம். இவ்வாறுகக் காலப்போக்கில் முற்பட்ட புரட்டுகை ஏற்பட ஏதுவாகும்.

முற்பட்ட புரட்டுகையினுல் குறுங்காலத்தில் விற்பனை செய்யப்பட்ட கணியம் குறைவதற்கேற்ப, உற்பத்திக் காரணிக்கு வேலையின்மையும் ஓரளவு ஏற்படும். இக் காரணிகளுக்கு வேறெங்கும் வேலை கிடைக்காவிடில், வேலையில் இருக்கும் காரணி களின் ஊதிய வீதங்களையும் குறைக்கும்படி நேரிடலாம். இதனுல், காலப்போக்கில் இறுதிநிலை ஆக்கச் செலவின் ராசி குறையலாம். மேலும், மற்றவை மாருதிருப்பின், குறைந்த விலையில் அதிகமான அளவு உற்பத்தியோடுகூடிய உச்ச இலாபம் கிடைக்கும் புதிய தோர் சமநிலை உருவாகலாம். எவ்வளவுக்கெவ்வளவு இங்ஙனம் நேர்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு, வரி, உற்பத்திக் காரணி களின்மீது பிற்பட்டுப் புரட்டப்படுகிறது.

குறுங்காலத்திய நிலைப்பாட்டின் பகுத்தாய்வில், குறிப்பிட்ட புரிச வளைகோடுகள், ஆக்கச் செலவு வளைகோடுகள் இவை நெடுகிலும் உள்ள இயக்கங்களில்தான் நாம் முழு அக்கறை காட்டினேம். நெடுங்கால நிலைப்பாட்டைப்பற்றிய பிரச்சினைகளில் நாம் நாட்டம் செலுத்தும்பொழுது, வளைகோடுகளின் சரிவில் அல்லது ஸ்தானத்தில் (position) மாறுதலை ஏற்படுத்தும் காரணி களைத் தேடுகின்றேம். இதில் வியப்படைவதற்கு ஒன்றுமில்லை. குறுங்காலத்தைப் பற்றிய கருத்து என்பதில் புரிசமும், ஆக்கச் செலவு படிநிலைகளும் குறிப்பிட்டவாறு மாருது இருக்கின்றன என்பது பொதிந்திருக்கிறது. புரசம், ஆக்கச் செலவு இவற்றின் அமைப்புகளில் மாறுதல்கள் ஏற்படத்தக்க காலவரையறையை நெடுங்காலம் என்று கூறலாம்.

விலைஞரின் பண்டத்தின்மீது விதிக்கப்பட்ட வரியின் குறுங் கால நிலைப்பாட்டை, குறிப்பிட்ட வரம்புக்கு உட்பட்ட சூழ்நிலை களில் அவர் சிறிதே மாற்ற முடியும். புரிசம், ஆக்கச் செலவு இவற்றின் அமைப்புகளும் மாருது நிலைத்திருக்குமானுல், பல சமயங்களில் உற்பத்தியைக் குறைத்து அவரால் விலையைக் கூட்ட முடியும். நெடுங்காலத்தில் இவற்றில் மாறுதல்களைப் புகுத்த அவருக்கு நல்ல வாய்ப்புகள் இருக்கின்றன. தேய்மானத்தின் மூலமோ அல்லது வேறு வகையாலோ அவர் தனது உற்பத்தித்

திறனை மாற்றிக்கொள்ள முடியும். தம்முடைய ஆலையில் அபி விருத்தி அடைந்த தொழில் நுட்பத்தைப் புகுத்துவதன்மூலம் தாம் முதலீடு செய்த ஒவ்வொரு உருபாவின் உற்பத்தித்திறனையும் அவரால் மாற்ற முடியும். இங்ஙனம் மாற்றினால் ஆக்கச் செலவின் அமைப்பு பாதிக்கப்படுகிறது. தம்முடைய பண்டத்தின் தரத்தை உயர்த்துவதன் மூலமாகவோ, அல்லது தம்முடைய விற்பனைத் திறனாலோ அவரால் தம்முடைய பண்டத்தின் புரிசத்தைப் பாதிக்க முடியும். அவர் கொணரும் மாறுதல்களைத் தவிர்த்து, அவர் கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்ட வாணிபச் சூழல், பொது மக்களின் விருப்பம், வருமானம், பண்டங்கள், உற்பத்திக் காரணிகளின் விலைகள், மக்கள் தொகை இவற்றாலும் புரிசத்தில் மாறுதல்கள் ஏற்படக்கூடும்.

வரி புரட்டுகையைப் பாதிக்கும் பிற காரணிகள்

வரி புரட்டுகையின் திசையையும், அளவையும் பாதிக்கும் அங்காடியில் உள்ள அகக் காரணிகளின் இயல்பை முன்பு பார்த்தோம். இவை : (1) வரியைப் புரட்டக்கூடிய வகையில் விலை ஒரு வாயிலாக அமைந்திருக்கின்றதா என்பதும், (2) ஆக்கச் செலவில் வரியைச் சேர்த்ததனால் உச்ச இலாபத்தைத் தரக் கூடிய விலைக்கும், கணியத்திற்கும் உள்ள சமநிலையில் மாறுதல்கள் ஏற்படுகின்றனவா என்பதும், (3) வரி விதிக்கப்பட்ட விற்பனை யாகும் பண்டத்தின் கிடைப்பிலும், புரிசத்திலும் நெகிழ்ச்சிகள் இருக்கின்றனவா என்பதும் ஆகும்.

வரி புரட்டுகையில் வேறு பல காரணிகளும் முக்கிய பங்கு வகிக்கின்றன. நாம் நெடுங்கால நிலைப்பாட்டைப் பற்றி நடத்திய சர்ச்சையில் இவற்றில் சில பொதிந்திருக்கின்றன. வரியைப் பற்றிய சட்டத்தின் தன்மையாலும், வரி புரட்டுகையின்மீது உண்மையான விளைவு ஏற்படக்கூடும். எடுத்துக்காட்டாக, வரியை நீக்கி விளம்பரம் செய்வதும், அல்லது எடுத்து எழுதுவதும், வரியை முற்பட்டுப் புரட்டுகைக்குத் துணை செய்கின்றன. பண்டத்தை வாங்கும் அப்பாவியான மனிதன் விளம்பரப்படுத் தப்பட்ட அல்லது எடுத்து எழுதப்பட்ட விலையை ஆதாரமாகக் கொண்டு அப் பண்டத்தை வாங்க முற்படுகிறன். வரியை விலை யுடன் சேர்த்தாலும், அவன் தான் வாங்க நினைத்ததை வாங்காமல் செல்வதில்லை. அதுபோலவே சிப்பங்களைக் கட்டியபின்பு, விற்பனை வரிகளை வசூலித்துக் கல்லாப்பெட்டியில் போடுவதனால், முற்பட்ட புரட்டுகைக்கு வாங்குவோரிடம் காணப்படும் எதிர்ப்பு நிலைகுலை கிறது. சில பண்டங்களின்மீது வரியைத் திணித்து அவற்றின்

பதிலிகளின்மேல் வரி விதிக்காமல் விடுவதனால், இவ் வரிகளை முற்பட்டுப் புரட்டுகைக்கு உள்ள எதிர்ப்பு கடுமையாகிறது.

குறுங்காலத்தில் அங்காடியில் வழக்கமான விலைகள் நீடிப்பதால், நுகர்வோரின்மீது வரியை முற்பட்டுப் புரட்டுகைக்கு ஊறு விளைகிறது வழக்கமாக 50 காசுக்கு சிகரெட் பெட்டியும், 50 காசுக்கு மண்ணெண்ணெயும் (லிட்டரும்), நூற்றைம்பது உரூபாவுக்கு ஒரு கைக்கடிகாரமும் விற்றால், வரியை விலையுடன் கூட்டுவதன்மூலம் விற்பனையாளர் தன்னுடைய வாடிக்கையாளர்களை (தொழில் நன்மதிப்பை) இழக்க நேரிடும். இது வழக்கமான விலை ஒரு சிறிய முழுத்தொகையாக இருக்குமிடத்தும், அல்லது விற்பனையாளர் தம்முடைய விளம்பரத்தில் ஒரே விலையைத் திரும்பத் திருப்ப அழுத்திக் கூறியிருக்குமிடத்தும் சிறப்பாகக் காணப்படுகிறது. ‘நூற்றைம்பது உரூபா கைக்கடிகாரம்’ என்று பலரும் அறிந்ததை நூற்று அறுபத்தைந்து உரூபாவாக விற்க முற்பட்டால், அதனால் புரிசத்துக்குக் கடுமையான பாதகங்கள் ஏற்படக் கூடும். உரூபா 181.80-க்கு விற்ற கைக்கடிகாரத்தை உரூபா 200 க்கு விற்பதால் ஏற்படும் விளைவுகளைவிட இது கடுமையாக இருக்கும். இவ்விரண்டு உதாரணங்களிலும் விலையேற்றம் 10 சதவீதமே. பல ஆயிரம் உரூபாக்களைக் குதப்பும் புகையிலையின் (chewing tobacco)[1] விளம்பரத்தில் செலவழித்த பின்பு, அதனால் ஏற்பட்ட தொழில் நன்மதிப்பை, வரியைப் புரட்டுகை செய்து விலையை ஏற்றுவதன்மூலம் இழக்க விலைஞர் துணியமாட்டார்.

பண்டத்தின் விலைக்கும், வரியின் பருமனுக்கும் உள்ள தொடர்பு, வழக்கமான விலையுடன் நெருங்கிய தொடர்புடையது. ஒரு பண்டத்தைப் பொறிவழி ஆக்கும்பொழுது 10 சதவீதம் வரியை விதித்தால், இவ் வரியை முற்பட்டுப் புரட்டுகை எளிதாகும். பொறிவழி ஆக்குவோர் மொத்த வணிகர்களுக்கு ஏராளமான பண்டங்களை மொத்த விலைக்கு விற்கும்பொழுது விலையை ஒரு சிறு சதவீதம் ஏற்றுவது இயல்வதே. சில்லறை வணிகர் ஒவ்வொரு அலகு பண்டத்தையும் 10 காசுக்கு விற்கிறார் என்றும், சாதாரணமாகச் சில்லறை வணிகரிடம் ஒரேசமயம் வாங்கப்படும் பண்டத்தின் அளவும் ஒரு அலகென்றும் வைத்துக் கொள்வோம். வரி முற்றும் சில்லறை வியாபாரிக்குப் புரட்டப்பட்டு, அவர் நுகர்வோருக்கு அவ் வரியைப் புரட்டினால், சில்லறை வியாபாரியின் விற்பனை விலை 10 காசுகளுக்கு மேலாகவும், 12 காசுகளுக்கு உட்பட்டும் இருக்கவேண்டும். அவ்வாறான படிநிலையில்

[1] வெற்றிலையுடன் சேர்த்துப் போடும் புகையிலையைக் குதப்பும் புகையிலை (Chewing tobacco) என்கின்றோம்.

சில்லறை வியாபாரி புரட்டப்பட்ட வரியைத் தானே செலுத்துவதும், தன்மீது வரி புரட்டப் படுவதைக் கூடுமானவரை எதிர்ப்பதும் அறிவுடைமையாகும்.

புவியியல் நீதியில் ஒரு வரிச்சட்டம் எத்துணைப் பரப்பின்மீது விதிக்கப்பட்டிருக்கிறது என்பதும் வரிப் புரட்டுகையை அறுதியிடும் முக்கிய சாதனமாகும். ஒரு நகரம் அல்லது மாநிலம் இவற்றின் ஆட்சி அதிகாரம் முறையே அந்த நகர எல்லைப்புறங்கள் வரையிலோ அல்லது மாநில எல்லைப்புறங்கள் வரையிலோ செல்கிறது. 1930-க்கும் 1940-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மாநில பெட்ரோல் வரிகள் மட்டத்தில், மாநிலங்களுக்கு இடையே பெருத்த வேறுபாடு இருந்தது. அப்போது பெட்ரோலின் விலையில் உடனடியான மாறுதல் இல்லாது, ஒருவர் குறைந்த வரி விதிக்கும் ஒரு மாநிலத்திலிருந்து உயர்ந்த வரி விதிக்கும் மாநிலத்திற்குப் பிரயாணம் செய்யலாம். ஒவ்வொரு மாநிலத்திலும் வரி முற்றும் புரட்டப்பட்டிருந்தால், ஒரு மாநில எல்லையைக் கடக்குந்தோறும், பெட்ரோலின் விலையில் திடீர் மாறுதலைக் காணலாம். இங்ஙனம் நிகழவில்லை என்பதிலிருந்தே வரி புரட்டுகைக்குப் பெரும் எதிர்ப்பு இருந்ததென்பதையும், அடுத்திருக்கும் அங்காடியில், குறைந்த விலைக்குப் பதிலி (குறைந்த வரியுள்ள பெட்ரோல்) கிடைக்கும் சாத்தியக்கூறு இருப்பதையும் இது புலப்படுத்துகிறது. உயர்ந்த வரி விதிக்கும் மாநிலத்தின் உட்பகுதியில் பொதுவாக விலைகள் கூடுதலாக இருந்தன. இதற்குக் காரணம் அவற்றுக்குப் போட்டியாகக் குறைந்த விலையில் பெட்ரோலை விற்பவர்கள் யாரும் இன்மையேயாகும். மேலும், வரி முற்றும் புரட்டப்பட்டமையாலும் விலைகள் கூடுதலாக இருந்தன. எல்லைப்புறத்தில் விற்பனைகளைப் பெரிதும் பாதிக்காமல் முற்பட்டுப் புரட்டுகை சாத்தியமல்ல. இவ்வாறு இருந்தபோதிலும், வரியின் பெரும்பகுதியும் தனிப்பட்ட சில்லறை வியாபாரிகளினால் ஏற்கப்பட்டதென்பதும் பொருந்தாது. வரியின் பெரும்பகுதியையும் மொத்த எண்ணெய் சுத்திகரிப்போர் ஏற்கின்றனர். அவர்கள் குறைந்த அடித்தள விலைகளில் சில்லறை வியாபாரிகளுக்குப் பெட்ரோலை விற்று, அதன் வாயிலாகச் சில்லறை வியாபாரிகளின்மூலம் விற்கும் பெட்ரோல் காலன்களின் எண்ணிக்கையை ஒரேபடித்தாக வைத்திருக்க முடிந்தது.

ஒரு பண்டத்தின் உற்பத்தி அல்லது விற்பனையின்மீது விதிக்கப்படும் வரியைப் புரட்டுகையை, வரி விதிக்கப்பட்ட நிலத்தின் பரப்பும் பாதிக்கும். அருகாமையிலுள்ள வரி விதிக்கப்படாத அங்காடிகளிலிருந்து, பண்டத்தை வாங்கக் கூடுமானால்

முற்பட்டு வரியைப் புரட்டச் செய்யப்படும் முயற்சிக்குக் கடுமையான எதிர்ப்பு ஏற்படும். வரி விதிக்கப்படாத பதிலிகள் அருகாமையிலுள்ள அங்காடியில் கிடைப்பதே இதற்குக் காரண மாகும். நுகர்வுக்குப் பயன்படுத்தப்படும் சொத்துரிமையின்மீது (உ-ம். குடியிருப்புகள்) விதிக்கப்படும் வரிகளின் புரட்டுகையை அல்லது வருமான வரிகளின் புரட்டுகையை, வரி விதிக்கப்பட்ட நிலப்பரப்பின் அளவு பொதுவாகப் பாதிக்காவிட்டாலும், குடியிருப்பை மாற்றியோ அல்லது வரி விதிக்கப்பட்ட சொத்தை இடம் மாற்றியோ, இவ் வரிகளைத் தவிர்ப்பதற்கு உரமூட்டுகின்றது.

புரிசம் தேக்க நிலையில் இருக்கும் பொழுது அல்லது சரிந்து கொண்டிருக்கும் பொழுது வரியை எளிதில் புரட்டமுடியாது என்பதற்கும், புரிசம் ஏறிக்கொண்டிருக்கும் பொழுது, காலப் போக்கில் எல்லா வரிகளையும் புரட்டலாம் என்பதற்கும், தக்க காரணம் இருக்கிறது. இவ்வாறு தேக்க நிலையில் இருக்கும் அல்லது தேய்ந்து கொண்டுவரும் ஒரு தொழிலைக் காட்டிலும், மிதப்பு நிலையில் இருக்கும் தொழிலின் மீது ஒரு வரியை முற்பட்டுப் புரட்டுகை மிக எளிதாகும். பொதுவான தொழில் மிதப்பினாலோ அல்லது ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் புரிசத்தைப் பாதிக்கும் சிறப்பான காரணங்களினாலோ, ஒரு பண்டத்தின் புரிசம் ஏறலாம். பிந்தியதில் புரிசம் அதிகரித்ததற்கு மக்களின் விருப்பங்களில் ஏற்பட்ட மாறுதலோ அல்லது வரி விதிக்கப்பட்ட பண்டத்திற்குப் புரிசம் அதிகரிக்குமாறு, அரசு வரியிலிருந்து கிடைத்த தொகைகளைச் செலவழிப்பதோ காரணமாக இருக்கலாம். பெட்ரோல் வரிகளிலிருந்து கிடைத்த தொகையை அரசு சாலைகளின் அபிவிருத்திக்குப் பயன்படுத்துவது இதற்கோர் எடுத்துக் காட்டாகும். புரிசம் ஏறுந்தோறும் நெகிழ்ச்சியும் குறைந்தால், வரியை முற்பட்டுப் புரட்டுகைக்கான வாய்ப்புகள் அதிகரிக்கின்றன. பண்ட வேறுபாட்டின் (product differentiation) மூலமும், சில்லோர் முற்றுரிமை (Oligopoly) ஆக்கப்பட்ட தொழிலில் விலை நிருணயத் தலைமை (price leadership) பூணுவதன் மூலமும், அல்லது தொழில் மிதப்பாக இருக்கும் காலத்தில் நிலவும் விலைஞர்களின் அங்காடிகளின் (sellers' markets) மூலமும், முற்பட்டுப் புரட்டுகை நடைபெறலாம்.

## 5. இறக்குமதி, ஏற்றுமதி நிலைப்பாடு

இறக்குமதி வரிகளின் நிலைப்பாடு சிக்கல் நிறைந்தது. இதன் நிலைப்பாட்டைத் தெரிந்து கொள்வதற்கு பன்னாட்டுச் சூழ்நிலைகளையும் ஆராய வேண்டியிருக்கிறது. இறக்குமதியாகும் பண்டங்களின்மீது விதிக்கப்படும் வரி, வருவாய் நோக்கத்திற்காகவோ,

அல்லது நாட்டுத் தொழில்களைக் காப்பதற்காகவோ விதிக்கப் படுகிறது. இறக்குமதி வரிகளின் நிலைப்பாட்டைப்பற்றி டாக்டர் டால்டன்[1] கூறுவது வருமாறு: 'இறக்குமதி வரிகளின் நிலைப்பாடு பிற நாட்டுப் பண்டங்களை நுகர்வோரைத்தான் ஒறுக்கிறது என்பது பொதுவான விதி. ஆகவே, இவ்வகை வரிகளைப் பிற நாட்டார் செலுத்தும்படிச் செய்வது (to made the foreigners pay) ஒரு போதும் வெற்றியடைய முடியாது'. இதை ஒரு பொது விதியாக ஏற்றுக் கொண்டு, இவ் விதிக்குச் சில புறனடைகளை ஆராய்வோம். பிற நாட்டு உற்பத்தியாளர் ஒருவர் இறக்குமதி வரிகள் முழுவதையுமோ அல்லது ஒரு பகுதியையோ செலுத்துவது சாத்தியமே. ஆனால், அதற்கு அப் பண்டத்தை இறக்குமதி செய்யும் நாடு மட்டுமே அங்காடியாக இருத்தல் வேண்டும். இவ் விதப் படிநிலைகள் காணப்படுவதில்லை; அல்லது காணப்பட்டாலும் அருகியே இருக்கும். பொதுவாகக் கூறுமிடத்து, தங்கள் பண்டங் களின்மீது வரியைத் திணித்ததன்மூலம், ஒரு நாட்டில் தங்கள் பண்டங்களுக்கான அங்காடி, குறைந்த இலாபம் தரத்தக்கதாக மாறினால், பிற நாட்டு உற்பத்தியாளர்கள் தங்கள் பண்டங்களுக்கு வேறு புதிய அங்காடிகளைத் தேடும் முயற்சியில் இறங்குவார்கள். இதன் விளைவாக, நுகர்வோர்களுக்கு இப் பண்டங்கள் அவசியம் வேண்டுமென்றால், அவர்கள், தங்கள் அரசு விதித்த வரிகளையும் செலுத்த வேண்டுவது இன்றியமையாததாகிறது. இறக்குமதி செய்யும் நாடு வாங்குவோரின் முற்றுரிமையைப் (Buyers' Monopoly) பெற்றிருந்தாலோ அல்லது ஏற்றுமதி செய்யும் நாடு, விலைஞர் முற்றுரிமையைப் (Sellers' Monopoly) பெற்றிருந்தாலோ தான் இவ் வரியின் ஒரு பகுதியையோ அல்லது முழுவதையுமோ, உள்நாட்டு நுகர்வோரிடமிருந்து வெளிநாட்டு உற்பத்தி யாளருக்குப் புரட்ட முடியும். இடைக்காலத்தில் பிளான்டர்ஸுக்கு (Flanders) பிரிட்டன் மட்டுமே ஆட்டு உரோமத்தை ஏற்றுமதி செய்து வந்தது. 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எந்திரங் களால் செய்யப்பட்டப் பண்டங்களை ஐரோப்பாக் கண்டத்திற்கும், நீராவி நிலக்கரியை (steam coal) உலகிலுள்ள அனைத்து நாட்டுக் கப்பல்களுக்கும் பிரிட்டன் மட்டுமே சப்ளை செய்து வந்தது. இக் காலத்தில் எண்ணெய் உற்பத்தி செய்யும் மேற்காசிய நாடுகள் இதைப்போன்ற ஒரு நிலையில் இருக்கின்றன. இந்தியா, பாகிஸ்தான் நாடுகளின் சணல் சப்ளையும் இவ்வகையான அனு கூலத்தைப் பெற்றிருக்கின்றன. சணல்மீது விதிக்கப்படும் ஏற்றுமதி வரி, வெளிநாட்டு நுகர்வோரால் செலுத்தப்படும் என எதிர்பார்க்கப்படுகிறது.

[1] Hugh Dalton, p. 57

இப்போதைய பன்னாட்டு வாணிபப் படிநிலையில், தாங்கள் ஏற்றுமதி செய்யும் பண்டங்களின் பெரும்பகுதி முடிந்த பண்டங்களாகவும், இறக்குமதி செய்யும் பண்டங்களின் பெரும்பகுதி உணவு, மூலப்பண்டங்களாகவும் இருக்கும் நாடுகள், இறக்குமதி, ஏற்றுமதி வரிகளை விதித்தால், அவை பிற நாட்டாரால் செலுத்தப் படுவது மிக அருமையே. ஏனெனில், பிற நாட்டு உணவுப் பண்டங்கள், மூலப்பண்டங்கள் இவற்றிற்கு அவர்கள் (இறக்குமதியாகும்) நாட்டில் புரிசம் நெகிழ்ச்சி குறைவாகவும், அவர்களுடைய முடிந்த பண்டங்களுக்குப் பிற நாடுகளில் உள்ள புரிசம் மிகவும் நெகிழ்ச்சி உடையதாகவும் இருக்கிறது. எடுத்துக்காட்டாக, பிரிட்டிஷ் மக்கள் பிரிட்டிஷ் இறக்குமதி, ஏற்றுமதி வரிகளைச் சில அருமையான சந்தர்ப்பங்களைத் தவிர்த்துப் பிற நாட்டினர் செலுத்தும்படிச் செய்யும் நிலையில் இப்பொழுது இல்லை.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. Dalton, 'Public Finance', Chapter VII and VIII.
2. Philip E. Taylor, 'The Economics of Public Finance', pp, 312—329.
3. G. Findlay Shirras, 'The Science of Public Finance', pp. 189—207.

# 18. வரி நிலைப்பாட்டைப்பற்றிய சில புதிய விளக்கங்கள்

### உர்ஸுலா ஹிக்ஸின் (Ursula K. Hicks) விளக்கம்

யார் இறுதியாக வரி செலுத்துகிறார்கள் என்பதைக் கண்டு பிடித்தலே வரி புரட்டுகையின் உட் கருத்தாகும். அரசு சிகரெட்டுக்களின்மீது ஒரு வரி விதிப்பதாகவும் இவ் வரியை சிகரெட்டு உற்பத்தியாளர்களிடமிருந்து வசூலிப்பதாகவும் கொள்வோம். சிகரெட்டு உற்பத்தியாளர், மொத்த வியாபாரியின் மீதும், மொத்த வியாபாரி சில்லறை வியாபாரியின்மீதும், சில்லறை வியாபாரி இறுதியாகச் சிகரெட்டுப் புகைப்பவர்மீதும், வரியைப் புரட்டுகிறார்கள். இவ் ஆய்வின் நோக்கமாவது முடிந்த பண்டத்தின் விலை எவ்வளவு உயர்ந்திருக்கிறது-வரிக்குச் சமமாகவா, வரியை விட அதிகமாகவா அல்லது வரியை விடக் குறைவாகவா உயர்ந்திருக்கிறது-என்பதைக் கண்டுபிடிப்பதுதான். இது வரி வசூலிக்கும் அதிகாரியின் கருத்தைப் பிரதிபலிக்கிறதே ஒழிய, பொருளியல் புலவரின் கருத்தைப் பிரதிபலிக்கவில்லை. நிதியமைச்சர் நிச்சயமாக இக் கோணத்திலிருந்து பார்க்கவில்லை என்று கூறலாம். அவர் சிகரெட் பிடிப்பவர்களின்மீது வரியை விதிப்பதாகத்தான் எண்ணிக் கொண்டிருக்கிறார். சிகரெட் பிடிப்பவரும் தான் வரியைச் செலுத்தவேண்டும் என்பதை உணர்ந்திருக்கிறார்.

இந்த முறையைத் தவறென்று கூறமுடியாது. ஆயினும் இதனால் ஏற்பட்ட விளைவுகள் திருப்தியாக இல்லை. இதற்குக் காரணங்கள் வருமாறு : (1) 'உண்மையான' வரி செலுத்துபவரைக் (உ-ம். புகை பிடிப்பவர்) கண்டுபிடிக்க நெடுநாள் ஆகிறது. பகுத்தாய்வை இத்துடன் நிறுத்தி விடுகிறோம். ஆனால், இந்தக் கட்டத்தில் தான் அக்கறை அதிகம் இருக்கவேண்டும். (2) இதனால் நம் கட்புலனின் வீச்சுக் குறைகிறது. தரத்தில் ஏற்படும் மாறுதல்களைக் (விலைகளில் மாறுதல்களைப் போன்றே

இவை ஏற்படுவதும் சாத்தியமானதே) கூட எடுத்துக் கொள்ள முடியாது. விலையில் அல்லது தரத்தில் மாறுதல்களைக் காட்டிலும், அவை ஏற்படுவதற்கான காரணங்களும், அவற்றின் விளைவுகளும் தாம் முக்கியமானவை. ஒரு குறிப்பிட்ட விலை உயர்வில் மறைந் திருக்கும் முற்றுரிமையின் அளவு முக்கியமானது. இதேபோன்று, வரி செலுத்துவோர் தங்கள் நுகர்வு அட்டவணைகளை மாற்ற வேண்டியிருப்பதும், வரியினால் ஏற்பட்ட மாறுதலினால் ஏற்பட்ட புதிய பொருளாதாரச் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு, உற்பத்தி யாளர்கள், காரணிகளை மறு ஒதுக்கீடு செய்ய வேண்டியிருப்பதும் முக்கியமான விளைவுகளாம். இறுதியாக, உவமை வாயிலாக வருமான வரியைப் புரட்டுகையைப்பற்றிய ஓர் இணைக் (parallel) கருதுகோளும் கூறப்படுகிறது. பண்டத்தின் விலைகளில் மாறு தல்கள் ஏற்படுவதற்குக் காரணம், வருமான வரி செலுத்து வோர்கள் வரியைப் புரட்ட முற்படுதலே எனப்படுகிறது. ஆனால், செலவு வரிகள்தாம் விலைகளில் சேர்க்கப்படுகின்றனவே அன்றி, வருமான வரிகள் அல்லவென்று நமக்குத் தெரியும். ஆகவே, இம் முயற்சி வீண். இதற்கும் மேலாக வருமான வரியைப் பற்றி அடிப்படையிலேயே தவறான எண்ணம் இருக்கிறது. வருமான வரிகள் செயல்படுவது வருமானங்கள் மட்டத்தில் அன்றி விலைகள் மட்டத்தில் அல்ல. இக் கஷ்டங்களினால், வரிகள் செயல்படு வதைப்பற்றி நாம் ஆயும்பொழுது, நாம் 'உண்மையான' வரி செலுத்துவோரிடமிருந்து தொடங்குவோம்.

### தோற்ற நிலைப்பாடும், பயன் விளையத்தக்க நிலைப்பாடும் (Formal Incidence and Effective Incidence)

பொருளியலில் நாம் வரி நிலைப்பாட்டைப் பற்றிய இரண்டு கருத்துப் படிமங்களை ஆய்கின்றோம். அதாவது, யார் பேரில் வரி விழுகிறது என்பது. முதலாவதாக, குறிப்பிட்ட காலத்தில் (சாதாரணமாக ஓராண்டு) ஏதாயினும் ஒரு குறிப்பிட்ட வரியி லிருந்து வசூலிக்கப்படும் வருவாய் எங்ஙனம் குடிமக்களிடையே (நம்முடைய சௌகரியத்திற்காக அவர்களை வருமான மட்டங் களுக்குத் தகுந்தாற்போல் பிரித்துக் கொள்கிறோம்) பகிர்வு செய்யப்படுகிறதென்பதை புள்ளியல் கணக்கீடு செய்தல் ஒரு முறையாகும். வரி விதிக்கு ஆளான பண்டத்தின் அங்காடி விலைக்கும், காரணிகளின் விலைக்கும் இடையேயுள்ள வேறுபாடே இவ் வரியாகும். இதையே வேறு வகையாகவும் கூறலாம். மக்களின் வருமானங்களில் எத்துணை வீதாசாரம், அவர்களுக்குப் பண்டங்களையும், பணிகளையும் விற்பவர்களுக்குப் போய்ச் சேராமல், அரசினுக்குச் செலுத்தப்படுகின்றதென்பது. அரசு இவ் வருவாயைக் கொண்டுதான் மக்களுக்குப் பொதுவான பல

தன்மைகளைச் செய்கிறது. இக் கணக்கீட்டின் விளைவை வரியின் தோற்ற நிலைப்பாடு எனலாம். இதை அனைத்து வரிகளிலிருந்தும் கிடைக்கும் வருவாயைக் கூட்டியும் கூறலாம். வருமானத்தைப் பகிர்வு செய்தல், மறு பகிர்வு செய்தல் பற்றிய பிரச்சினைகளைப் பொறுத்தவரையில் தோற்ற நிலைப்பாட்டின் கணக்கீடு பெரிதும் சமுதாய முக்கியத்துவம் வாய்ந்தது. உயர்ந்த மட்டத்தில் வேலை வாய்ப்புகளை வைத்திருப்பதற்காக அரசு தேசிய உற்பத்தியைப் பற்றித் திட்டமிடுகின்றபோதும், இது அரசுக்குப் பொருளியல் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கிறது. இதனால் வரியில் மாற்றம் செய்தால் நுகர்வு குறையுமா அல்லது சேமிப்புக் குறையுமா என்பதைக் கண்டறிவதற்கு, அரசுக்கு இது துணை செய்கிறது.

தோற்ற நிலைப்பாட்டைக் கணக்கிடுதல் முக்கியமாயினும், இதிலிருந்து வரியில் ஏற்பட்ட மாறுதல்களினால், வரி செலுத்து வோரின் எதிர்வினை (reaction) எங்ஙனம் இருக்கிறது என்பது பற்றியும், அதன் விளைவுகள்பற்றியும், நேரிடையாக ஒன்றும் தெரிவதில்லை. இப் பிரச்சினைகளைப்பற்றியதுதான் நிலைப்பாட்டின் இரண்டாவது கருத்துப் படிமம். ஒரு வரியினால் ஏற்படும் பொருளாதார விளைவுகளை முழுதும் தெரிந்துகொள்ள நாம் இரண்டு படங்களை வரைந்து ஒப்பு நோக்கவேண்டும். ஒரு படத்தில் வரி அமுலில் இருக்கும் பொழுது நிலவும் பொருளாதார அமைப்பையும் (நுகர்வோர்களின் வருமானப் பகிர்வு, விருப்பங் களின் பகிர்வு, காரணிகளின் ஒதுக்கீடு); இன்னொரு படத்தில் வரி இல்லாத பொழுது நிலவும் பொருளாதார அமைப்பையும் நாம் வரைந்து ஒப்பிட வேண்டும். இவ்விரண்டு படங்களுக்கு இடையேயும் காணப்படும் வேறுபாட்டைப் பயன் விளையத்தக்க நிலைப்பாடு என்கின்றோம். நாம் கூறியதிலிருந்து இது மிக சிக்கலான படம் என்பது விளங்கும். மேலும், இரண்டு படி நிலைகளும் ஒருங்கே சேர்ந்து இருக்கவும் முடியாது. ஒரு படம் நம் பகுத்தறிவால் நிறுவப்பட்டது; காட்சி அறிவினால் (Observation) நிறுவப்பட்டதல்ல.

இவ்வாறாகப் பயன் விளையத்தக்க நிலைப்பாட்டை நிறுவு வதற்குச் சங்கிலி கோத்தாற்போல முறையான அறிவாராய்ச்சி வேண்டும். செலவு வரிகளைப் பொறுத்த வரையில் இதற்குத் தளமாக, அங்காடி நிலவரங்கள், புரிசம், ஆக்கச் செலவு ஆகிய காரணிகள் இவற்றைப்பற்றிய காட்சி அறிவும், வருமான வரிகளைப் பொறுத்தவரையில் இதற்குத் தளமாக, வருமானப் பகிர்வு, செல்வப் பகிர்வு, ஒரு நாடு எத்துணை தொழில் மயம் ஆகியிருக்கின்ற தென்பது, நிறுவனத்தின் இனம் தட்டும் அளவு (typical size of the firm) இவற்றைப்பற்றிய காட்சி அறிவும் வேண்டும்.

எங்கெல்லாம் கூடுமோ அங்கெல்லாம் நம்முடைய வாதங்களுக்கு ஆதரவாகப் புள்ளியியல் சான்று தரவேண்டும். ஆயினும், காரணிகளில் பலவும் தம்மிடையே உள்ள உறவினாலும், சிக்கலினாலும் புள்ளியியல் சான்று பகுத்தறிவு முறைக்கு (deductive process) ஒரு ஆதரவாகத்தான் இருக்க முடியுமேயல்லாது, இதற்கு மேலாக இருக்கமுடியாது. ஒவ்வொரு வரியைப் பற்றியும் சங்கிலித் தொடர் போன்ற இவ் வாராய்ச்சியை நடத்திய பின்பே, கொள்கைக் கோணத்திலிருந்து, எந்த வரிகளைக் கொள்ளவேண்டும், எந்த வரிகளைத் தள்ள வேண்டும் என்று நாம் கூறமுடியும்.

## ஆர். எ. மஸ்கிரேவின் (R. A. Musgrave) விளக்கம்

வரவு செலவுத் திட்டத்தில் அரசின் வரவும் செலவும் (இவற்றை வரிகளின் வாயிலாகவோ, கடன்களின் வாயிலாகவோ, காகித நோட்டுகளை அச்சடிப்பதன் வாயிலாகவோ, பெற முடியும்), அடங்கும். வரவு செலவு திட்டத்தில் ஏற்படும் மாறுதல்களால், மூன்று முக்கியமான விளைவுகள் நேரிடுகின்றன. அவை யாவன : (அ) வளங்கள் மாற்றங்களில் மாறுதல்கள் (வளங்களைத் தனியாரிடமிருந்து அரசினுக்கு மாற்றுவது), (ஆ) உற்பத்தியில் ஏற்படும் மாறுதல்கள், (இ) வருமானப் பகிர்வில் மக்களிடையே ஏற்படும் விளைவுகள். நிலைப்பாடு என்பதற்கு வரியினால், தனியார் உபயோகத்திற்கு இருக்கும் வருமானப் பகிர்வில் ஏற்படும் மாறுதல்கள் என்று மஸ்கிரேவ் விளக்கம் தருகின்றார். இது நாம் வரி நிலைப்பாடு என்பதற்குக் கொண்ட பொருளிலிருந்து வேறானதாகும். மேலும், நாம் இதுவரையில் அரசின் வரியின் நிலைப்பாட்டைப் பற்றித்தான் சர்ச்சை செய்தோமே ஒழிய அரசின் செலவினால் ஏற்படும் மாறுதல்களைக் கணக்கில் கொள்ளவில்லை. மஸ்கிரேவ் வரிகள், அரசின் செலவு இரண்டினாலும் வருமான பகிர்வில் ஏற்படும் மாறுதல்களை ஆராய்கிறார்.

வரவு செலவு திட்டத்தின் கொள்கையைப் பொறுத்து நாம் நிலைப்பாட்டை ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம். அரசின் செலவு மாறாது இருக்கின்றது என்றும், வரிக்கொள்கையில் மட்டும் மாறுதல்கள் ஏற்படுகின்றன என்றும் கொள்வோம். ஒரு வரியின் வீதங்களை உயர்த்துவதால் அல்லது குறைப்பதால் பகிர்வில் ஏற்படும் மாறுதல்களைத் (1) தனிப்பயன் வரி நிலைப்பாடு (specific tax incidence) எனலாம். உதாரணமாக, வருமான வரியின் வீதங்களில் மட்டும் மாறுதல்கள் செய்வதாகக் கொள்வோம். நிறைவுடை வேலை வாய்ப்பு இருக்கும் படிநிலைகளில் வருமான வரியின் வீதத்தைக் குறைத்தால், மக்கள் கையில் அதிக வருமானம்

இருக்கும். இதனால் பண்டங்களுக்கும், பணிகளுக்கும் ஆன புரிசம் அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கலாம். இதனால் விலையும் ஆக்கச் செலவும் அதிகரிக்கும். ஆகவே, மக்களின் பணச்செலவு அதிகரித்தால்தான் (இப் பணம் காகித நோட்டுக்களை அச்சடிப்பதால் கிடைக்கிறது என்று வைத்துக் கொள்ளலாம்) முன்பு விற்ற அதே அளவு பண்டங்களையும், பணிகளையும் விற்க முடியும். இவ்வாருகப் பண வீக்கம் உண்டாகிறது. இதேபோன்று வருமான வரி வீதங்களை உயர்த்தினுலும், மக்கள் செலவு குறையும்; குறையவே பணவாட்டம் ஏற்படும். பணவீக்கமும் சரி, பண வாட்டமும் சரி வருமானப் பகிர்வைப் பாதிக்கின்றன. இவ்வாருக இருவகை நிலைப்பாடுகள் உள்ளன. இதனால் நிலைமை உண்மையாகவே சிக்கலாகிறது. முதல் நிலைப்பாடு ஒரு வரி வீதத்தில் நிகழ்ந்த மாறுதலால் ஏற்பட்டது. இரண்டாவது நிலைப்பாடு பணவீக்கம் அல்லது பண வாட்டத்தினுல் ஏற்பட்டது. தனிப்பயன் நிலைப்பாடு தோற்றத்தில் எளியதாக இருந்தாலும், உண்மையில் சிக்கலானதாக இருக்கிறது.

(2) வேறுபடுத்திய வரி நிலைப்பாடு (differential tax incidence) ஒரு வரிக்குப் பதிலியாக இன்னொரு வரியை விதிப்பதால் பகிர்வில் ஏற்படும் மாறுதல்களை வேறுபடுத்திய வரி நிலைப்பாடு எனலாம். இரண்டு வரிகளிலிருந்தும் கிடைக்கும் பண வருவாய் சமம் என்று கொள்வோம். இந் நிலையில் அரசின் செலவின் அளவில் மாறுதல் நிகழ முடியாது. பண்டங்களுக்கும், பணிகளுக்கும் ஆன தனியாரின் புரிசத்திலும், அரசின் புரிசத்திலும் மாறுதல் இல்லை. ஆயினும் வேறுபட்ட வரிகள் தனியார் புரிசத்தை வெவ்வேறு விதத்தில் பாதிக்கின்றன. இதனால் விலைகளும் வெவ்வேறு விதத்தில் பாதிக்கப்படுகின்றன. ஆகவே, அதே அளவு மெய்யான செலவுகளைச் செய்வதற்கு அரசுக்கு முன்பு கிடைத்த வரி வருவாய் போதாது. ஆகவே, வேறுபடுத்திய வரி நிலைப்பாட்டுக்கு வேருெரு விளக்கம் தருவோம். இரண்டு வரிக்கொள்கைகளினுல் பகிர்வின் விளைவுகளில் ஏற்படும் வேறுபாடே வேறுபடுத்திய வரி நிலைப்பாடு எனலாம். பண்டங்களையும், பணிகளையும் வாங்குவதற்கும் சமமான வருவாயை இவை தரவேண்டும். அரசின் குறிப்பிட்ட வரிசை மெய்யான செலவுகளைச் செய்வதற்குப் போதிய வருவாயைத் தருவதாக இருக்க வேண்டும் (ஒவ்வொரு வரியின்கீழ் விலைகள் சார்பில்லாத பொழுதும், ஒப்புமையிலும் எங்ஙனம் இருந்தாலும்) என்று இதையே வேறு வகையாகவும் கூறலாம். பொருளாதாரத்தை நிலைபேருகச் செய்வதற்கு எந்த வரிக் கொள்கை சரியானது என்பதை எண்ணும்பொழுது வேறுபடுத்திய வரிநிலைப்பாடு என்ற கருத்துப் படிமம் முக்கியமானது.

செலவு நிலைப்பாடு (Expenditure Incidence)

வரிகளின் வீத அமைப்பும், தீர்வை வாய்பாடுகளும் மாறாமல் இருப்பதாகவும், அரசின் செலவில் மட்டும் மாறுதல்கள் ஏற்படுவதாகவும் கொண்டால், பகிர்வில் சில மாறுதல்கள் நிகழும். இவற்றைச் செலவு நிலைப்பாடு எனலாம். அரசின் செலவை உயர்த்தினாலும், அல்லது தாழ்த்தினாலும், அரசின் உபயோகத்திற்கு வளங்கள் அதிகரிக்கின்றன அல்லது குறைகின்றன என்பது தெளிவு. பகிர்வில் இதனால் ஏற்படும் மாறுதல்களை (3) தனிப்பட்ட செலவு நிலைப்பாடு எனக் குறிப்பிடலாம். ஒரு குறிப்பிட்ட சமயத்தில் அரசின் செலவை அதிகரித்தால் பொதுவாக மக்களுக்கு அதிக வருமானம் கிடைக்கும். ஆனால், இதனால் பண்டங்கள், பணிகள் இவற்றின் விலைகளும் ஏறும். இதனால் பணவீக்கம் ஏற்படும். இதேபோன்று அரசின் செலவு குறைந்தால் மக்களின் வருமானம் குறைவதோடு, பணவாட்டமும் ஏற்படும். இவ்விதமாக, அரசின் செலவில் மாறுதல்கள் நிகழும்பொழுது பகிர்வில் இருவகையில் மாறுதல்கள் நிகழ்கின்றன. (அ) அரசின் செலவினால் ஏற்படும் மாறுதல்கள், (ஆ) பணவீக்கம், அல்லது பணவாட்டத்தினால் ஏற்படும் மாறுதல்கள். இவ்வாறாக, தனிப் பயன் வரி நிலைப்பாட்டிலிருந்து என்ன தீய விளைவுகள் ஏற்பட்டனவோ, அதே தீய விளைவுகள் தனிப்பயன் செலவு நிலைப்பாட்டிலிருந்தும் ஏற்படுகின்றன.

அரசின் செலவின் மாறுதல்களால் விளையும், பணவீக்கம், பணவாட்டம் இவற்றின் நிலைப்பாட்டைத் தடுக்க வேண்டும் என்றால், நாம் ஒரு சமநிலை வரவு செலவுத் திட்டம் என்ற எல்லைக்குள் அரசின் செலவுகளில் ஏற்படும் மாறுதல்களை நோக்க வேண்டும். இதன் பொருளாவது ஒரு துறையில் அரசின் செலவை அதிகரித்தால் இன்னொரு துறையில் அரசின் செலவைக் குறைக்க வேண்டும் என்பதே. இவ்வகை அரசு செலவின் பகிர்வு விளைவுகளை (4) வேறுபடுத்திய செலவு நிலைப்பாடு (differential tax incidence) எனலாம். வேறுபடுத்திய வரி நிலைப்பாடு என்ற கருத்துப்படிமத்தைப் போன்று, செலவின் நிலைப்பாடு—அது தனிப்பயன் செலவாயிலும் சரி, வேறுபாடுடைய செலவாயினும் சரி—அத்துணை உபயோகமுள்ளதல்ல என்று மஸ்கிரேவ் விளக்குகிறார். 'பண்டங்களுக்கும், பணிகளுக்கும் ஆன அரசின் செலவுகளில் ஏற்படும் மாறுதல்களைக் காட்டிலும், வரிக் கொள்கை அல்லது மாற்றக் கொள்கையில் (transfer policy) ஏற்படும் மாறுதல்களில் தாம் நிலைப்பாடு பிரச்சினை, இயல்பாகவே அதிகச் சுவை உள்ளதாக இருக்கின்றது. அரசின் பணிகளிலிருந்து கிடைக்கும் ஆதாயங்களுக்குச் சிறப்பாகத் தகுதி விருப்பங்களைப் (merit wants)

பொறுத்த அளவில், பகிர்வில் முக்கியத்துவம் இருக்குமானாலும், இங்கு விளக்கப்பட்டபடி இவ் வாதாயங்கள் நிலைப்பாட்டின் கூறல்ல. தனியார் உபயோகத்திற்குக் கிடைக்கும் வருமானப் பகிர்வில் நிகழும் மாறுதல்களை மட்டுமே, நாம் நிலைப்பாடு என்ற சொல்லைப் பயன்படுத்துகிறோம்.'

5. சமநிலை வரவு செலவு திட்ட நிலைப்பாடு (Balanced Budget incidence)

இறுதியாக, வரவு செலவு இரண்டிலும் ஏற்பட்ட மாறுதல்களினால் பகிர்வில் ஏற்படும் மாறுதல்களை நாம் காண்போம். உதாரணமாக, அரசின் செலவில் ஏற்படும் ஒரு மாறுதலினால், வள மாற்றத்தின் மட்டத்திலும் (level of resource transfer) ஒரு மாறுதல் நிகழலாம். இத்துடன் வரிகளிலும் மாறுதல்கள் நேரலாம். இம் மாறுதல்களினால் வேண்டிய நிதிகள் (பண அளவிலும், பண்டங்கள் பணிகள் அளவிலும்) கிடைக்கலாம். இவற்றால் பகிர்வில் விளையும் மாறுதல்களைச் சமநிலை வரவு செலவுத் திட்ட நிலைப்பாடு (balanced budget incidence) எனலாம். நிலைப்பாட்டைப்பற்றிய இக் கருத்துப் படிமத்தை மிகச் சிறந்தது எனலாம். ஏனெனில், இவ் விளக்கம்தான் நிலைப்பாட்டைப்பற்றிய சாதாரணப் பகுத்தறிவு விளக்கத்திற்கு மிக நெருங்கியதாகக் காணப்படுகிறது. இதன்படி அரசின் பணிகளுக்கு ஆகும் செலவை தொகுதி உறுப்பினர்களிடையே ஒதுக்கிடுவதுதான் நிலைப்பாடாகும்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Ursula K. Hicks, 'Public Finance', Chapter XVI

2. Musgrave, 'The Theory of Public Finance', Chapter X.

# 19. வரிதாங்கு வல்லமை

## (Taxable Capacity)

'வரிதாங்கு வல்லமை' என்ற சொற்றொடர் ஒரு புரியாத புதிர் என எண்ணப்படுகிறது. ஆனல், இது துரதிருஷ்ட வசமானது. ஏனெனில், அதிக வருவாயைத் திரட்டுதல், சமநிலை வரவு செலவு திட்டங்களைத் தயாரித்தல், போருக்காக வாங்கிய கடன்களை அடைத்தல், அதிகரித்துக் கொண்டு செல்லும் சமுதாயச் செலவைச் சமாளித்தல், ஒரு நவீன போருக்கு நிதி திரட்டுதல் ஆகியவற்றிற்கெல்லாம் இதுதான் அடிப்படை. இது ஒரு முக்கியப் பிரச்சினையாகும். டாக்டர் டால்டன் கூறுவது போலத் தெளிவற்ற குழம்பிய கருத்துப் படிமமாக (dim and confused conception) இதனைக் கருதுவதற்கில்லை.

திரு ஃபிண்டிலே ஷிர்ராஸ் (Findlay Shirras),[1] 'வாழ்க்கைத் தரம் மாருது, குறிப்பிட்ட அளவு உற்பத்தி செய்வதற்கான குறும நுகர்வை விட, உபரியாய் இருக்கும் மொத்த உற்பத்தியே வரி தாங்கு வல்லமை' எனக் கூறுகிருர். இவ் விளக்கம் பொருள் பொதிந்துள்ளதாகவும், பயனுள்ளதாகவும் இருந்தாலும், மிகவும் குளறுபடியாக இருக்கிறது. மேலும், இவ் விளக்கம் அரசின் செலவைக் கருத்தில் எடுத்துக் கொள்ளவில்லை. சர் ஜோஸையா ஸ்டாம்பு (Sir Josiah Stamp)[2], 'மக்களின் பிழைப்பு மட்டத்திற்கும், மொத்த உற்பத்திக்கும் உள்ள இட்டோட்டமே வரிதாங்கு வல்லமை', என விளக்குகிருர். மேலும், அவர் 'மகிழ்ச்சியில்லாத மிகவும் சீரழிக்கப்பட்ட வாழ்க்கையை நடத்தாமலும், பொருளியல் அமைப்பை மிகவும் சீர்குலைக்காமலும்', எவ்வளவு தொகையை அரசினுக்கு மக்கள் செலுத்த முடியுமோ, அதை வரிதாங்கு வல்லமை எனலாம் என்கின்ருர். மக்கள் 'மகிழ்ச்சியில்லாத சீரழிக்கப்பட்ட வாழ்க்கையை' நடத்தாமலும், 'பொருளியல் அமைப்பை மிகவும் சீர்குலைக்காமலும்' வரியைச் செலுத்து

1. G. Findlay Shirras, p. 131, 132.
2. Sir Josiah Stamp, 'Wealth and Taxable Capacity', p. 134.

கின்றார்களா என்பதை நம்மால் கண்டறிய முடியாது. மேலும், வரியைச் செலுத்துதல் ஒரு போதும் மகிழ்ச்சியைத் தரக்கூடியதாக இருக்க முடியாது. இவ்வாறாக, இவ்விரண்டு விளக்கங்களிலும் குறைகள் தென்படுகின்றன.

சுருங்கக் கூறின், அரசின் செலவுக்கு ஒரு நாட்டின் குடி மக்கள் செலுத்தக் கூடிய உச்ச அளவு தொகையே வரிதாங்கு வல்லமை எனலாம். ஆனால், இவ்வாறு செலுத்தும் பொழுது அவர்கள் தாங்க முடியாத துன்பத்திற்கு ஆளாகக் கூடாது. தனி யாள் ஒவ்வொருவரும் உழைத்துச் சேமிக்கக் கூடியவராக இருக்க வேண்டும். அதேசமயம் நாட்டின் உற்பத்தி ஆற்றலும் இப்போ திருக்கும் நிலையைக் காட்டிலும் மேன்மேலும் ஆண்டுதோறும் உயர்வதற்கு வழி செய்ய வேண்டும். மொத்த உற்பத்திக்கும், குறைந்த அளவு நுகர்வுக்கும் இடையேயுள்ள வேறுபாடு (அல்லது உபரி) ஒரு குறிப்பிட்ட நிலையான தொகையன்று; ஒரு நாட்டின் மொத்த உற்பத்தியும், மக்களின் குறைந்த அளவு நுகர்வும் மாறும் தன்மையனவாகும். எடுத்துக் காட்டாக, மற்றவை மாறாதிருப் பின் (உ-ம். ஒருவரை அண்டியிருப்போரின் தொகை மாறாமல் இருக்குமானால்), ஒருவரின் வருமானம் அதிகரிக்குந்தோறும் அவர் தம்மைக்காட்டிலும் குறைந்த வருமானம் உள்ளவரைவிடக் கூடுதலான வரித்தொகையைக் கட்ட முடியும். வேறுவகையாகக் கூறினால், (வரி) செலுத்தும் ஆற்றலும், வரிதாங்கு வல்லமையும் ஒரு பொருட் சொற்றொடர்களாகும்.

**முழுமையான வரிதாங்கு வல்லமையும், ஒப்புமையில் வரிதாங்கு வல்லமையும்** (Absolute Taxable Capacity and Relative Taxable Capacity)

முழு வரிதாங்கு வல்லமைக்கும், ஒப்புமையில் வரிதாங்கு வல்லமைக்கும் வேறுபாடு கற்பிக்க வேண்டும். பிந்தியது ஒரு பொது நிதிக்கு, இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட சமுதாயங்கள் தரும் வரியைக் குறிக்கின்றது. முழு வரிதாங்கு வல்லமையைக் காட்டிலும், ஒப்புமையில் வரிதாங்கு வல்லமையை எளிதில் அறுதியிடலாம்; மிகத் துல்லியமாக அளவிடலாம். இவ் வகையான பிரச்சினையில் தீர்மானிக்க வேண்டியது, பல்வேறு பட்ட நாடுகளும் எத்துணை வீதாசாரப்படித் தொகைகளைத் தர வேண்டும் என்பதே. எடுத்துக்காட்டாக, இணைப்புச் சட்டத்தின் (Act of union) கீழ் பிரிட்டிஷ் கருவூலத்திற்கு அயர்லாந்து தந்த அளிப்பும், இந்தியாவில் மெஸ்டன் தீர்ப்பின் (Meston Award) கீழ்ப் பல மாநிலங்களும் மத்திய அரசுக்குத் தந்த அளிப்பும், ஐக்கிய நாடுகள் நிறுவனத்துக்கு உறுப்பு நாடுகள் தரும் அளிப்பும், இக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டவை.

**வரிதாங்கு வல்லமையின் வரம்புகள்** (Limits of Taxable Capacity)

வரிதாங்கு வல்லமையின் வரம்புகள் யாவை? இவ் வினவிற்குப் பலதரப்பட்ட விடைகள் அளிக்கப்பட்டுள்ளன. 'உற்பத்தி செய்வதற்கான ஊக்கம் குறையுமாறு, வரி செலுத்துவோரிடமிருந்து அதிகம் வரியாக வசூலிக்கும்பொழுது (கைவசம் இருக்கும் மூலதனத்தின் தேய்மானத்தைச் சரிக்கட்டுவதற்குப் போதாமலும், மக்கள் தொகைப் பெருக்கத்தினுல் புதிய தொழிலாளர்களுக்கு வேலை தர முடியாமலும்), வரிதாங்கு வல்லமையின் வரம்பு எய்தப்பட்டதென்று, திரு.எல்லிங்கர் (Ellinger) [1] கருதினுர். 'அளவுக்கு மீறி உற்பத்தியைப் பாதித்தால், வரிதாங்கு வல்லமையின் எல்லை எய்தப்பட்டது' எனத் திரு. மேஸன் (Mason) கருதினுர். 'தாம் செலுத்தவேண்டிய வரிக்காக, பேங்குகளிலிருந்து (Bank) வரி செலுத்துவோர் கடன் வாங்க வேண்டிய நிர்ப்பந்த நிலை ஏற்படின், ஒரு நாட்டின் வரிதாங்கு வல்லமையின் உச்சம் எய்தப்படும்' என்று சர் டிரம்மண்டு ஃபிரேஸர் (Sir Drummond Fraser) கூறுகிருர். வரியிலிருந்து கிடைக்கும் மொத்த வருவாய் குறையும் பொழுது இவ் வெல்லை அடையப்பட்டது என்று வேருெரு ஆசிரியர் கூறுகிருர். 'சாதாரண ஆண்டுகளில் எதுதான் எல்லை என்று உலகத்தாரால் ஒப்புக்கொள்ளக்கூடிய திட்டவட்டமான யாதொரு விளக்கமும் தர முடியாது. நாட்டின் பொருளியல் அமைப்பின்மீது ஏற்பட்ட விளைவே முக்கிய சோதனையாகும். வரி செலுத்துவோரின் உற்பத்தி ஆற்றல் குறைக்கப்பட்டால், வரிதாங்கு வல்லமையின் உச்சக்கட்டத்தை அடைந்து விட்டதாகக் கூறலாம்' (ஸில்வர்மென்). [2] ஸர் ஹில்டன் யங் (Sir Hilton Young), 'நேரடியாக உற்பத்திக் கணக்கெடுப்பைக் கொண்டும், மறைமுகமாக வரி செலுத்துபவர் எதனைச் சிறந்த அளவுகோல் என்று கருதுகிருரோ அதனைக் கொண்டும், வரிதாங்கு வல்லமையை அளவிடலாம்' என்று கூறுகிருர்.

**வரிதாங்கு வல்லமையை அறுதியிடுபவை** (Determinants of Taxable Capacity)

அ. **வரிவிதிப்பின் இயல்பும், முறைகளும்:** மேற்கூறியாங்கு வரிதாங்கு வல்லமை ஒரு முழுமையான இலக்கம் (absolute figure) அன்று. வரிதாங்கு வல்லமையை அறுதியிடுவதில் வரி விதிப்பின் இயல்புக்கும், முறைகளுக்கும் முக்கிய பங்கு உண்டு. அறிவுக்கு

[1] Quoted by Hugh Dalton, p. 166, 167.

[2] H. A. Silverman, 'Taxation—Its Incidence and Effects', Macmillan & Co., 1931, p. 65.

ஒவ்வாத முறையில் வருவாயைத் திரட்டுவதால் குறைந்த பயனே கிடைக்கும்; பொதுமக்களுக்கு ஆத்திரத்தையும் மூட்டும். செவ்வையாகத் திட்டமிடப்பட்டுச் செயல்படுத்தப்பட்ட வரி முறையால் அதிகம் வருவாய் கிடைக்கும். ஒரேவொரு வரியை மட்டும் நம்பியிராமல், பல வரிகளைக்கொண்ட கலவை வரி விதிப்பு முறையால் அதிக வருவாய் கிடைக்கும். எடுத்துக்காட்டாக, எத்துணைப் பரந்துபட்டதாக வரிவலை இருந்தாலும், பண்டங்களின்மீது மட்டும் வரி விதித்து இக் காலத்திய அரசுகளுக்கு வேண்டப்படும் அவ்வளவு பெரிய தொகையைத் திரட்ட முடியாது. முற்காலத்தில் வருவாயின் பெரும்பகுதியும் மறைமுக வரிகளின் மூலம் பெறப்பட்டது. ஆனால், இற்றைநாளில் நேர்முக வரிகளால் கிடைக்கும் வருவாயை மறைமுக வரிகள் தரமாட்டா. நேர்முக வரிகளில் உள்ளதுபோல் மறைமுக வரிகளில் வளர்வீத முறைக்கு இடமில்லை. சுருங்கக்கூறின், இடையருது எதிர்ப்பையும் சேதத்தையும் விளைக்கும் வரிகளைவிடக் குறைந்த அளவு எதிர்ப்பை மூட்டும் அல்லது மிகக்குறைந்த அளவில் பொருளாதாரத் தொழில் முனைவைப் பாதிக்கும் வரிகளினுல் வரிதாங்கு வல்லமை அதிகரிக்கிறது.

ஆ. மக்கள் தொகையின் அளவு: வரிதாங்கு வல்லமை ஒரு நாட்டு மக்களின் எண்ணிக்கையையும் பொறுத்துள்ளது. நாட்டின் வருமானத்தைக் காட்டிலும், மக்கள் தொகை கூடுதலான வேகத்தில் பெருகுமாயின் மக்களின் வரிதாங்கு வல்லமை குறையும் என்பது தெளிவு. முன்னேறிய நாடுகளில் உள்ளது போல, மக்கள் தொகையைக் காட்டிலும், நாட்டின் வருமானம் அதிக விரைவாக அதிகரிக்குமானுல் வரிதாங்கு வல்லமை அதிகரிக்கும். மக்கள் தொகை மட்டுமின்றி அவர்கள் உற்பத்தி செய்யும் பண்டங்கள், பணிகள் இவையும் வரிதாங்கு வல்லமையின் வரம்பை அறுதியிடும். எவ்வளவுக்கெவ்வளவு வருமானத்தின் பெரும்பகுதி அவசியமற்ற நுகர்வுக்குச் செலவழிக்கப் படுகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு வரிதாங்கு வல்லமையும் அதிகரிக்கின்றது. பெருமளவு மூலதனப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாட்டின் வரிதாங்கு வல்லமையைவிட, பெருமளவு நுகர்வுப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நாட்டின் வரிதாங்கு வல்லமை குறைவாகும்.

இ. நாட்டு வருமானத்தின் பகிர்வு (Distribution of National Income): எவ்வளவுக்கெவ்வளவு வருமானத்தின் பகிர்வில் ஏற்றத்தாழ்வுகள் இருக்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு மக்களின் வல்லமையும் கூடுகிறது. எடுத்துக்காட்டாக, ஒருவருக்கு ஆண்டொன்றுக்கு ஈராயிரம் உருபா வருமானம் கிடைக்கின்றதென்றும், ஒருவருக்கு ஆண்டொன்றுக்கு நூறு உருபா வீதம் இருபது

பேருக்கு ஆண்டொன்றுக்கு ஈராயிரம் உரூபா கிடைக்கிறதென்றும் வைத்துக் கொள்வோம். முதல் ஆளின் வரிதாங்கு வல்லமை, மற்ற இருபது பேரின் வரிதாங்கு வல்லமையைக் காட்டிலும் பொதுவாக அதிகமாக இருக்கும். இந் நாலாயிரம் உரூபாக்களையும் இவ்விருபத்தொன்று பெயர்களிடையேயும் சமமாகப் பிரித்துத் தந்தால், மொத்த வரிதாங்கு வல்லமை குறையும். ஏற்றத் தாழ்வுகளினுல் வரிதாங்கு வல்லமை அதிகரிக்கின்றது என்பதனுலேயே, செல்வத்தில் ஏற்றத் தாழ்வான பகிர்வை நாம் ஆதரிக்கின்றேம் என்று கொள்ளக் கூடாது. அதிக வரி தாங்கு வல்லமை ஒரு நாட்டிற்கு இருக்கின்றது என்பதனுலேயே அந் நாட்டுக்குச் சிறப்பொன்றுமில்லை. அரசு பெருமளவு வருவாயைத் திரட்ட வேண்டிய நிர்ப்பந்தமும் இல்லை. இக் கோணத்திலிருந்து பார்த்தால், ஃபிரான்சைவிடப் பிரிட்டனுக்கு அதிக வரிதாங்கு வல்லமை இருக்கின்றது. பிரிட்டனில் உள்ளதைப் போல ஃபிரான்சில் ஏற்றத் தாழ்வுகள் அவ்வளவு உறுத்துபவையாக இல்லை.

ஈ. அரசின் செலவின் தன்மை: வரிகளிலிருந்து கிடைத்த வருமானம் எங்ஙனம் செலவழிக்கப்படுகின்றது என்பதைப் பொறுத்து வரிதாங்கு வல்லமை இருக்கின்றது. ஸர் பேஸில் பிளாக்கட்டு (Sir Basil Blackett) ஒருமுறை கூறியதுபோல 'வரி தாங்கு வல்லமை, வரிவிதிப்பைக் காட்டிலும் செலவுடன் மிக நெருங்கிய தொடர்புடையது.' வரிகளின் வாயிலாகத் திரட்டிய தொகையை அரசு எவ்வாறு பயன்படுத்துகின்றது என்பது வரி தாங்கு வல்லமையின் இலக்கத்தை உருவாக்குவதில் பெரும்பங்கு பெறுகிறது. வரிகளிலிருந்து கிடைத்த பணத்தைச் சாலைகள், கல்வி, சுகாதாரம், தொழில்கள், வேளாண்மை போன்ற நாட்டின் பொருளாதாரத்தை வளர்க்கும் துறைகளுக்குச் செலவழித்தால் மக்களின் வரிதாங்கு வல்லமை மிகவும் உயரக்கூடும். உள்நாட்டுக் கடனை அடைப்பதற்கு வரிப்பணம் பயன்படுத்தப்பட்டால், அது நாட்டின் வரிதாங்கு வல்லமையைப் பாதிப்பதில்லை. ஏனென்னில், வட்டியைச் செலுத்துவதும், முதலைத் திருப்பித் தருவதும், ஒரு நாட்டின் எந்தவகை வளங்களையும் குன்றச்செய்வதில்லை. ஆனுல், பிற நாட்டாருக்கு இத் தொகைகள் (வட்டியும்-முதலும்) தரப்படுமானுல் ஒரு நாட்டின் வரிதாங்கு வல்லமை குறையும். வருவாயின் பெரும்பகுதி பாதுகாப்புக்கும், பிறபயனிலா (unproductive) நோக்கங்களுக்கும் செலவிடப்பட்டாலும், வரிதாங்கு வல்லமை குறையும். இக் கோணத்திலிருந்து பார்க்கும் பொழுது, இந்தியா, சீனு, பாகிஸ்தான், சோவியத் யூனியன், அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்ற பல நாடுகளும் பாதுகாப்புக்காக அதிகம் செலவு செய்வது கண்டனத்திற்கு உரியது.

**உ. அரசியல் உளவியல் காரணிகள்** (Political and Psychological Factors) : ஒரு நாட்டின் வரிதாங்கு வல்லமை அரசியல், உளவியல் காரணிகளாலும் பெரிதும் பாதிக்கப்படுகிறது. அரசியல், அகவியல் காரணிகளைப் பொருளியல் ரீதியில் அளவிடமுடியாது. சமாதான காலத்தில் இருப்பதைவிட, ஒரு நாடு போரில் ஈடு பட்டிருக்கும் பொழுது, அதன் வரிதாங்கு வல்லமை அதிகமாக இருக்கின்றது. ஏனெனில், மக்கள், சாதாரண காலங்களில் வலி யுறுத்தும் குறும வாழ்க்கைத் தரத்தைக் குறைத்துக் கொள்ளவும், பெருந் தியாகங்களைச் செய்யவும், போர்க்காலத்தில் ஆயத்தமாக இருக்கிறார்கள். இரண்டாவது உலகப்போர் நிகழ்ந்து கொண்டிருந்த பொழுது, பிரிட்டனில் தொழிலாளர் கூலியில் ஒரு பகுதி பிடிக்கப் பட்டு அரசுக்குக் கடனாக அளிக்கப்பட்டது. இத் தொகைகள் ஒத்திவைக்கப்பட்ட சேமிப்புகள் (deferred savings) என்ற கீன்ஸ் பிரபுவின் (Lord Keynes) திட்டத்தின்கீழ் திரட்டப்பட்டன. சமாதான காலத்தில்கூட, சில நாட்டினரைவிட (உ-ம். பிரஞ்சுக் காரர்) சில நாட்டினர் (உ-ம். ஆங்கிலேயர்) வரியை ஒப்புமையில், விருப்பத்தோடு ஏற்கின்றனர். இந்தியாவில் மக்களிடம் தாங்கள் இந் நாட்டின் குடிமக்கள் என்ற கடமையுணர்ச்சி வளராததால், சமுதாயத்தின் இன்றியமையாத நோக்கங்களுக்காகக்கூட வரி செலுத்துவதற்குத் தயங்குகின்றார்கள். இவ்வாறு அரசியலைப் போல வரி விதிப்பிலும் உணர்ச்சி முக்கிய அங்கம் வகிக்கிறது. கொடுங்கோன்மை சிலரை வீரர்கள் ஆக்கலாம்; சிலரை அடிமைகள் ஆக்கலாம். கூடுதலான வரிகளை விதிப்பதால் சிலர் கடுமையான உழைப்பாளிகளாகவும், தொழில் முனைவு உள்ளவர் களாகவும், செல்வர்களாகவும் ஆகிறார்கள்; சிலர் சோம்பேறி களாகவும், மனம் ஒடிந்தவர்களாகவும், வறிஞர்களாகவும் ஆகிறார்கள்.

**இயக்க நிலைப் பிரச்சினை (Dynamic Problem)**

வரிதாங்கு வல்லமையைத் தேக்கநிலைப் பிரச்சினையாகக் (static problem) கருதாமல், இயக்கநிலைப் பிரச்சினையாகக் கருத வேண்டும். வரிகளை விதிப்பதால் பலதிறப்பட்ட மக்களின் வருமானத்தில் உடனடியாக என்னென்ன விளைவுகள் ஏற்படு கின்றன என்பதை மட்டும் ஆய்தல் போதாது. பொதுவாகச் செல்வத்தை உற்பத்தி செய்யும் சக்திகள், வரி செலுத்துவோரின் பொருளியல் தூண்டுதல் (economic incentive) இவற்றின்மீது, வரி விதிப்பினால் என்ன விளைவுகள் ஏற்படுகின்றன என்பதை ஆய்வதே அரசியல் அறிஞரின் கருத்துப்படி தலையாயதாகும். இங்ஙனம் நோக்கும் பொழுது, ஒரு நாட்டின் வரிதாங்கு வல்லமையை அளவிடுவது என்பது மிகக் கடினமாகும். ஆயினும்,

வரிதாங்கு வல்லமையையும், நாட்டின் வருமானத்தையும் அளப்பதால் ஏற்படும் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிட முடியாது.

**வரிதாங்கு வல்லமையை அளத்தல்** (Measurement of Taxable Capacity)

எங்ஙனம் வரிதாங்கு வல்லமையை அளக்க வேண்டும்? புள்ளியியல் முறைப்படி வரிதாங்கு வல்லமையை அறுதியிடுவது மிகக் கடினம். வரிதாங்கு வல்லமையை மதிப்பிடுவதற்குச் சிறந்த வழி கீழ்க்காணும் இரு முறைகளில் ஒன்றைப் பயன்படுத்துவது: (அ) தனியாள் அல்லது மொத்த வருமான முறை (The Personal or Aggregate Income Method). இம் முறை பிரிட்டனில் கடைப் பிடிக்கப்படுகிறது. ஒவ்வொருவரும் அனுப்பும் வருமான அறிக்கையை அடிப்படையாகக் கொண்டு தயாரித்த தனியாரின் வருமானங்களைப்பற்றிய புள்ளி விவரங்கள், இறப்பு வரிகளைப் பற்றிய புள்ளி விவரங்கள், பிற நேர்முக வரிகளைப்பற்றிய புள்ளி விவரங்கள் இவற்றை உள்நாட்டு வருவாய்த் துறையினர் (Inland Revenue Department) வைத்திருக்கின்றனர். இப் புள்ளியியல் விவரங்கள் பிரிட்டனில் தேசிய வருமானத்தை மதிப்பிடுவதற்குப் பெரிதும் துணை செய்கின்றன. (ஆ) இன்னொன்று, உற்பத்திக் கணக்கெடுப்பு முறை (Census of Production Method) என்பதாகும். இம் முறை நாட்டின் மொத்த செல்வ உற்பத்தி சாதனங்களைப்பற்றிய புள்ளி விவரங்களைச் சேகரிக்கின்றது. பிரிட்டிஷ் இந்தியாவின் வருமானத்தைக் கணக்கிடுவதற்கு இம் முறையை டாக்டர் வி.கே.ஆர்.வி. ராவ் (Dr. V.K.R.V. Rao) பயன்படுத்தினர். இந்தியாவில் வேளாண்மை வருமானத்தின் மீது வருமான வரி விதிக்கப்படுவதில்லை. ஆகவே, வருமான வரி அறிக்கைகளிலிருந்து இந்தியாவின் வருமானத்தை மதிப்பிடுதல் அரைகுறையாகவே இருக்கமுடியும். இந்தியாவில் மாநிலங்கள் தோறும் எவ்வளவு ஏக்கர்கள் சாகுபடி செய்யப்படுகின்றன; ஒவ்வொரு ஆண்டிலும் பல்வேறு பயிர்களின் விளைச்சல் எவ்வளவு என்பதை முதலில் தெரிந்து கொள்ளவேண்டும். பயிர்களின் ரொக்க மதிப்பைக் கண்டுபிடிப்பதற்கு ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு வருடத்திய மொத்த விலைகளின் சராசரியை எடுத்துக்கொள்ள வேண்டும். காடுகள், சுரங்கங்கள் இவற்றின் ஆண்டு உற்பத்தியைப் பற்றியும், முக்கியத் தொழில்களின் வருடாந்திர உற்பத்தியைப் பற்றியும் புள்ளி விவரங்கள் கிடைக்கின்றன. பால், பால் பண்டங்கள் இவற்றின் உற்பத்தியைப்பற்றிய சில விவரங்களும் கிடைக்கின்றன. ஆயினும், நம் நாட்டில் ஒவ்வொரு துறையின் உற்பத்தியைப்பற்றிய முழு கணக்கெடுப்பு இதுகாறும் எடுக்கப்

படவில்லை. இவை யாவற்றையும் கூட்டினால், தேசிய வரு மானத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

**இந்தியாவின் வரிதாங்கு வல்லமை**

இந்தியாவின் வரிதாங்கு வல்லமை எவ்வளவு? இந்தியா வரி தாங்கு வல்லமையின் வரம்பை எய்தி விட்டதா? இவ்விரண்டு சர்ச்சைக்குரிய பிரச்சினைகள்பற்றிக் கருத்து வேறுபாடு நிலவு கிறது. இந்தியா ஒரு ஏழை நாடென்றும், பலருக்கு இரண்டு வேளை சோற்றுக்கே வழியில்லை என்றும், ஆகவே, மேலும் வரிப்பளுவை அதிகரிக்க முடியாது என்றும், இப்பொழுது இருக்கும் வரிப்பளுவே அதிகம் என்றும் ஒரு சாரார் கூறுகின்றனர். இன்னொரு சாரார் இந்தியாவில் இன்னும் வரிதாங்கு வல்லமையின் எல்லை எய்தப்படவில்லை என்றும், ஆகவே மேலும் வரிகள் விதிக்க லாம் என்றும் கூறுகின்றனர். *1939—1940*-ல் இந்தியர் ஒரு வரின் சராசரி வரிப்பளு உருபா 5-0-2 ஆக இருந்தது. இது *1971—1972*-ல் உருபா 52 ஆக உயர்ந்திருக்கிறது. *1953—54* ஆம் ஆண்டைய இந்திய வரி விதிப்பு விசாரணைக் குழுமத்தின் (The Taxation Enquiry Commission) அறிக்கையின்படி, இந்திய தேசிய வருமானத்தில் 7% அல்லது 8%-ம் தான் வரியாகச் செலுத்தப்படுகிறது. இச் சதவீதம் இப்பொழுது 12 ஆக உயர்ந் திருக்கிறது. ஆயினும், பிற நாடுகளுடன் ஒப்பிடும்பொழுது இது மிகவும் குறைவே. முன்னாள் நிதியமைச்சர் ஸி. டி. தேஷ்முக்கின் (C. D. Deshmukh) கூற்றுப்படி பிலிப்பைன்ஸ், பிரேஸில், கியூபா, எகிப்து, இலங்கை ஆகிய நாடுகள் தங்கள் நாட்டு வருமானத்தில் முறையே 9.5%, 14.4%, 15.3%, 16%, 21.5%-ஐ வரியாகச் செலுத்துகின்றன. டாக்டர் பி. எஸ். லோகநாதனின் (Dr. P. S. Loganathan) கூற்றுப்படி *1957—58*-ல் இந்தியா வருமானத்தில் 9.2% வரியாக வசூலிக்கப்பெற்றது. இச் சதவீதம் அமெரிக்க ஐக்கிய நாடுகள், பிரிட்டன், ஜப்பான், பர்மா, பிலிப் பைன்சில் முறையே 32.6, 36, 21, 15.6, 10.9 ஆகவும் இருந்தது. இச் சதவீதம் ஆஸ்திரேலியாவில் 22-ம், நியூஸீலந்தில் 27-ம், கனடாவில் 19-ம் ஆகும். இதிலிருந்து இந்தியாவில் வரிப்பளு குறைவு என்பதும், இன்னும் வரி விதிப்பதற்கு இடமிருக் கிறது என்பதும் தெளிவாகிறது.

இந்தியாவில் மொத்த வரிவிதிப்பிற்கும், தேசிய வருமானத் திற்கும் உள்ள வீதம் குறைவாக இருப்பதற்குக் காரணங்கள் வருமாறு: (1) பெரும்பான்மை இந்தியரின் வாழ்க்கைத் தரம் மிகவும் குறைவாக இருக்கின்றது. இந்தியரின் சராசரி வருமானம் மிகக் குறைவு.

ஆகவே, பெரும்பாலோரின்மீது மேலும் வரி விதிப்பதற்கு வாய்ப்பு இல்லை. (2) இந்தியாவில் பணம் புழங்காத (non-monetised) பெரிய துறை ஒன்று இருக்கிறது. உற்பத்தியின் பெரும் பகுதி அங்காடிக்கு வருவதில்லை. உதாரணமாக, பல சிறு விவசாயி களும் தாங்கள் உற்பத்தி செய்த பண்டங்களைத் தாங்களே நுகர் கின்றனர். பெரும்பாலான வேளாண்மைத் தொழிலாளர்களுக்குக் கூலி தானியமாகவே தரப்படுகிறது. கிராமங்களில் பண்டமாற்று ஓரளவு நிலவி வருகிறது. ஒரு மதிப்பீட்டின்படி நுகர்வில் 37% பண்டமாற்றின் மூலமே நடைபெறுகிறது. கிராம மக்கள் உணவுப் பண்டங்கள், பருப்பு வகைகள், பால் முதலானவற்றின்மீது செல விடும் தொகையில் 66-ல் இருந்து 73% வரை ரொக்கம் கொடுத்து வாங்குவதில்லை. இவ்விதம் பணம் புழங்காத ஒரு பெரிய துறை இருப்பது வரி விதிப்பின் வீச்சை மட்டுப்படுத்துகின்றது. உதாரண மாக, ரொக்கம் கொடுத்து வாங்காத பண்டங்கள் விற்பனை வரிக்கு ஆளாவதில்லை. (3) இந்தியாவின் பன்னாட்டு வாணிபம் அதன் பரப்புக்கும், மக்கள் தொகைக்கும் ஏற்ற அளவில் இல்லை. உதாரண மாக, இந்தியாவின் மக்கள் தொகையில் 2% தான் மலேஷியாவில் (சில ஆண்டுகளுக்கு முன்பு மலேயாவும், சிங்கப்பூரும் ஒன்று சேர்ந்து ஒரே அரசுக்கு உட்பட்டிருந்தன. இதற்கு மலேஷியா என்று பெயர்) இருந்தது. ஆயினும் மலேஷியாவின் பன்னாட்டு வாணிபத்தின் மதிப்பு இந்தியப் பன்னாட்டு வாணிபத்தில் பாதி ஆகும். இதனால், இறக்குமதி வரிகள், ஏற்றுமதி வரிகள்மூலம் இந்திய அரசு அதிக வருவாயைப் பெற முடியவில்லை. (4) இறுதி யாக, பேரளவு உற்பத்தி அலகுகளைக் காட்டிலும் சிற்றளவு உற்பத்தி அலகுகள்தான் எண்ணிக்கையில் அதிகமாக இருக்கிறது. இதனால், வரியை வசூலிப்பது கடினமாக இருப்பதுடன் வரியை ஏய்ப்பதும் எளிதாக இருக்கிறது. வேளாண்மைத் தொழிலிலும் சிறிய மிராசுதாரர்களின் எண்ணிக்கை, பெரிய மிராசுதாரர்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் மிகவும் அதிகமாக இருக்கிறது. இதனால் (நில) வரியை வசூலிப்பதற்கு ஆகும் செலவும் அதிகமா கிறது.

இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முன்பு வரிதாங்கு வல்ல மையின் வரம்பை எய்திவிட்டது. இதற்குக் காரணம் வரிகளுக் கும், அவற்றிலிருந்து சமுதாயம் பெற்ற ஆதாயங்களுக்கும் நேரி டையான தொடர்போ அல்லது மறைமுகமான தொடர்போ இல்லாததே ஆகும். சுதந்திரம் பெற்ற பின்பு நிலைமை மாறி வருகிறது. இந்தியாவின் வரிதாங்கு வல்லமை வளர்ந்து வந்திருக் கின்றது. இதற்கான காரணங்கள் வருமாறு:

1. விடுதலை பெற்ற பிறகு அரசின் செலவில் பெரும் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. முன்பெல்லாம் அரசு சட்டத்தையும், அமைதி

யையும் நிலை நாட்டவும், பிற நாட்டுப் படையெடுப்புகளினின்று நாட்டைப் பாதுகாக்கவும் தன் வருவாயில் பெரும்பகுதியைச் செலவழித்தது. நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும், சமுதாய நலனுக்கும் மிகச் சிறு பகுதியையே செலவழித்தது. வரி விதிப்பு விசாரணைக் குழுமம் கூறுவது போன்று, 'வரிப்பணத்தைச் சமுதாய நலன்களைப் பெருக்குவதற்கும், பொருளாதார வளர்ச்சிக்கும் செலவழித்தாலும், இதை மக்கள் அதிகம் பாராட்டினாலும், வரி தாங்கு வல்லமை அதிகமாக இருக்கும்.' இப்பொழுது இந்தியாவில் இவ்வகைச் செலவுகள் அதிகரித்துக் கொண்டு வருகின்றன.

2. ஐந்தாண்டுத் திட்டங்களின் பயனாக, தேசிய வருமானம் தொடர்ந்து உயர்ந்துகொண்டே வருகின்றது. ஆகவே, பெருகிய வருமானத்தின்மீது, மேலும் கூடுதலாக வரி விதித்தல் சாத்தியமே. இவ் வதிகப்படியான வரியினால் தனியார் நுகர்வும், தனியார் முதலீடும் குறைய வேண்டியதில்லை.

3. திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியில்கூட சில வருக்கங்களும், சில பிரதேசங்களும் அதிகமான ஆதாயத்தைப் பெறலாம். இவர்கள் பெறும் ஆதாயத்தின் ஒரு பகுதியை அபி விருத்தி வரிகள் (betterment taxes or levies) வாயிலாக அரசு வசூலிக்கலாம். நீர்ப்பாசனத் திட்டங்களினால் ஆதாயம் பெற்ற பகுதிகளின்மீது பல மாநில அரசுகளும் அபிவிருத்தி வரியை விதித்தது இதற்கொரு உதாரணமாகும்.

4. திட்ட மிடப்பட்ட பொருளாதார வளர்ச்சியினால் சமுதாயம் முழுவதும் ஆதாயம் பெறும். ஆகவே, வருமான வரி, சொத்து வரி இவற்றினால் பாதிக்கப்படாத குறைந்த வருமானம் உள்ளவர்கள்மீது, மேன்மேலும் பண்டங்களின்மீது வரி விதிப்பதன் வாயிலாக அதிக வருவாயைப் பெறலாம். மேலும், திட்டமிடப் பட்ட பொருளாதாரத்தில் பண்டங்களின் கிடைப்பை, பண்டங் களின் புரிசத்திற்குச் சரிக்கட்டுவதற்கு இம் மறைமுக (பண்ட) வரிகள் ஒரு கருவியாகும்.

5. இறுதியாக, துண்டு நிதியத்தினால் (deficit financing)[1] காலப்போக்கில் பணம் புழங்காத துறையைச் சிதறடித்து, சமுதாயத்தின் பண வருமானத்தையும், மெய்யான வருமானத் தையும் பெருக்க முடியும். துண்டு நிதியத்தினால் பணவீக்கம் ஏற்படும். இப் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த அதிகப்படியான வரிகளை விதிக்கலாம்.

[1] துண்டு நிதியம் பற்றுக் குறை நிதியம் என்றும் கூறப்படும்.

ஆகவே, இந்தியாவில் வரி விதிப்பின் எல்லை இன்னும் எய்தப் படவில்லை என்பதும், மேலும் வரிகள் விதிப்பதற்கு வாய்ப்பு இருக் கிறது என்பதும் விளங்கும். 'வரிதாங்கு வல்லமை அதிகரித்திருக் கிறது என்பதை நம்புவதற்குக் காரணம் இருந்தாலும், இரண்டாம் உலகப்போருக்குப் பிந்திய காலத்தில் வரிகளிலிருந்து கிடைக்கும் வருவாய்க்கும், நாட்டின் வருமானத்திற்கும் இடையே உள்ள வீதாசாரத்தில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை. இப்போது அமலில் உள்ள வரியமைப்பின்படியும், வரி வீதங்களின்படியும், இந்திய நாட்டின் வரிதாங்கு வளங்களை முழுமையாக (வரிகளாக) வசூலிக்கவில்லை. மேலும், வரி வளங்களுக்கான முடை இருப்பதை இத்துடன் இணைத்துப் பார்க்கும்பொழுது, இந்திய வரிகளை ஓரளவு அதிகரிப்பதற்குத் தகுந்த முகாந்திரம் இருப்பது புலனாகும்' என்று இந்திய வரி விதிப்பு விசாரணைக் குழுமத்தினர் தங்கள் முடிவான கருத்தை வெளியிட்டிருக்கிறார்கள்.

### டாக்டர் லோகநாதனின் கருத்து

டாக்டர் லோகநாதனின் கருத்தும் இந்திய வரி விதிப்பு விசாரணைக் குழுமத்தின் முடிவை ஒட்டியே இருக்கிறது. இந்தியப் பொருளாதாரம், மேலும் வரிகளைத் தாங்கக் கூடும் என்பதற்கு அவர் கூறும் காரணங்களாவன: 1. நம் நாட்டில் செல்வர்களின் மீது வரிப்பளு மிகவும் குறைவாக இருக்கிறது. அவருடைய மதிப் பீட்டின்படி 1957-ல் நேர்முக வரிகளின் சாராசரி வரிப்பளு உருபா 6.10. அதேசமயம் மறைமுக வரிகளின் சராசரி வரிப்பளு உருபா 18.30 ஆகும். நேர்முக வரிகளின் வரிப்பளுவின் பெரும்பகுதியும் செல்வர்கள்மீதும், மறைமுக வரிகளின் வரிப்பளுவின் பெரும் பகுதியும் ஏழைகள்மீதும் விழுகிறது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. இதிலிருந்து செல்வர்களின்மீது வரியை உயர்த்து வதற்கு வாய்ப்பு இருக்கின்றது என்று தெரிகிறது. 2. வரிகளினால் உற்பத்திக்கோ அல்லது சேமிப்புக்கோ ஊறு நேரவில்லை. 1951—52-க்கும், 1957—58-க்கும் இடையில் மைய, மாநில அரசு களின் வரிப்பளு ஆள் ஒன்றுக்கு 30% அதிகரித்தது. 1951—52-ல் ஒரு ஆள் உருபா 21 வரியாகச் செலுத்தினார். இது 1957—58-ல் உருபா 27 ஆக உயர்ந்தது. இவ் வரி உயர்வினால் சேமிப்புக்கும், இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கும் ஊறு நேரவில்லை. இதை விளைவியல் பொருளாதார ஆராய்ச்சி தேசியக் குழு (National Council of Applied Economic Research) நடத்திய ஒரு விசாரணை யும் நிரூபித்தது. இக் குழுவின் மதிப்பீட்டின்படி 1950-51-ல் இருந்து தனியார் முதலீடும், அரசின் முதலீடும் அதிகரித்து வந்திருக்கிறது. 1950—51-ல் உருபா 207 கோடியாக இருந்த அரசின் முதலீடு, 1956—57-ல் உருபா 590 கோடியாக உயர்ந்தது.

இதே காலத்தில் தனியார் முதலீடு உருபா 370 கோடியிலிருந்து உருபா 550 கோடியாக உயர்ந்தது. தனியார் துறையில் மூலதனத் திரட்சியும் விரைவாக அதிகரித்து வந்திருக்கிறது. 1951-ல் 6% ஆக இருந்த தனியார் மூலதனத் திரட்சி 1957-ல் 16.5% ஆக உயர்ந்தது. 'இப்போது நிலவும் நேர்முக வரிகளின் உயர்ந்த மட்டத்தினால், தொழில் முனைவுக்கும், முதலீட்டுக்கும் கடுமையான ஊறு ஏற்பட்டதாக யாதொரு சான்றும் இல்லை. அண்மைக் காலத்தில் மறைமுக வரிகளை அதிகரித்ததனால், நாட்டின் இடைத் தரத்திலும், கடைத்தரத்திலும் உள்ளவர்களின் வாழ்க்கை மட்டங்கள் பாதிக்கப்பட்டிருக்கலாம். ஆயினும், ஓட்டு மொத்த மாகப் பார்க்கும்பொழுது, இந்தியா அளவுக்கு மீறிய வரிப் பளுவுக்கு ஆட்பட்டிருப்பதாகச் சொல்ல முடியாது' என்று டாக்டர் லோக நாதன் முடிவுரையாகக் கூறுகின்றார். 'வருமான வரி செலுத்து பவர்களில், இடைநிலையிலும், தலைநிலையிலும் இருப்பவர்கள் இன்னும் சிறிது கூடுதலான பளுவைச் சுமக்க முடியும்' என்று நான்காம் ஐந்தாண்டுத் திட்டத்தில் கூறப்பட்டிருக்கிறது.

குறிப்பு: இப்பொழுது நம் நாட்டில் நேர்முக வரிகளைச் செலுத்துபவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவு. வேலை செய்து பொருளீட்டுபவர்களில் ½% தான் நேர்முக வரிகளைச் செலுத்து கின்றார்கள்.

மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Dalton, 'Public Finance', Chapters X and XI.

2. N. Kaldor, 'Indian Tax Reform'.

3. Report of the Taxation Enquiry Commission, 1953-54, Vol. I, Chapter VIII.

4. H. A. Silverman, 'Taxation—Its Incidence and Effects', Chapter III, p. 52-65.

5. Sir Josiah Stamp, 'Wealth and Taxable Capacity', Chapter IV.

6. G. Findlay Shirras, 'Science of Finance' Chapter XV, p. 130—149.

# 20. வரி விதிப்புபற்றிய சில பிரச்சினைகள்

வரிகளை விதிப்பதால் பணவீக்கம் ஏற்படுகின்றது என்று சிலரும், வரி விதிப்பு பண வீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கு ஒரு சிறந்த கருவி என்று வேறு சிலரும் கூறுகிறார்கள். நாம் இவர்கள் கருத்தைப் பகுத்து நோக்கி உண்மை காண்போம்.

**பணவீக்கம் விளக்கம்**

பொதுவாக, விலைகளின் ஏற்றத்தைப் பணவீக்கம் எனலாம். இவ் விலையேற்றம் பண வருமானம் அதிகரிப்பதாலும், பண்டங்களின் கிடைப்பு ஒப்புமையில் நெகிழ்ச்சியின்றி இருப்பதாலும் ஏற்படலாம். வரிகளை விதிப்பதால் பண வருமானங்களும், பண்டங்களின் கிடைப்பும் பாதிக்கப்படுகின்றன. பண்டங்களின் கிடைப்பு பாதிக்கப்பட்டால், பண்டங்களின் விலை உயரும். வரி விதிப்பதால் மக்கள் கையில் இருக்கும் வருமானம் குறையும். குறையவே, பண்டங்களின் விலை குறையும்.

**பணவீக்கத்திற்குக் காரணம் வரிகளே**

ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் வரி விதித்தால் பணவீக்கம் ஏற்படுமென்று சிலர் வாதிடுகின்றனர்.

(அ) வருமான வரி வீதங்களை உயர்த்தினால், மக்கள் கையில் இருக்கும் வருமானம் குறையும். குறையவே, அவர்களின் பண்டங்களை வாங்கும் ஆற்றலும் குறையும். இதனால் சம்பளத்திற்கும், கூலிக்கும் வேலை செய்வோர் தங்கள் சம்பளத்தையும், கூலியையும் உயர்த்த வேண்டும் என்று கோருகிறார்கள். அவர்களின் சம்பளங்களையும், கூலிகளையும் உயர்த்தினால், மேலும் விலைகள் உயரும்.

(ஆ) வரிகளை உயர்த்தியும், அங்ஙனம் வசூலித்த வருவாய் அனைத்தையும், அரசு செலவழிக்க முற்பட்டால், மீண்டும் அங்காடியில் பணப் புழக்கம் அதிகமாகும். இங்ஙனம் அதிக-

மானல் விலைகள் மேலும் உயரும். வரிகளை உயர்த்தியிருக்கா விட்டால், மக்கள் கையில் அதிகப் பணம் இருக்கும். இவ்வளவையும் செலவழிக்காது, இதில் ஒரு பகுதியையாவது மக்கள் சேமிக்கலாம். இங்ஙனம் சேமித்தால் மேலும் விலைகள் ஏற மாட்டா.

(இ) வரிகளால் தனியார் முதலீடும் பாதிக்கப்படும். வேற்றுமைப்படுத்திய (differential) வரி விதிப்பால் அரசு மிதமிஞ்சிய ஒருவகை முதலீட்டுக்கு உரம் அளிக்கலாம். முதலீடு அதிகரித்தால் உடனடியாகப் பணவருமானம் அதிகரிக்கும். ஆனல், பண்டங்களின் உற்பத்தி உடனடியாகப் பெருகாது. அதற்கு நெடுநாள் ஆகும். பண வருமானம் அதிகரிப்பதால் விலைகள் ஏறும்.

(ஈ) மறைமுக வரிகளை அதிகரிப்பதால், பண்டங்களின் விலைகளும், பணிகளின் விலைகளும் ஏறும். இதனல் மக்களின் சேமிப்புக் குறைந்து, செலவு அதிகரிக்கும். மொத்த நுகர்வுச் செலவு அதிகரிக்கவே, மேலும் பணவீக்கம் ஏற்பட்டு நிலைமை மோசமாகும்.

(உ) வரி வீதங்கள் உயர்வதால், உற்பத்தி குறையலாம். உற்பத்தி குறையவே பண்டங்களின் விலை மேலும் அதிகரிக்கும்.

பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தும் ஒரு கருவி—வரி

வரி பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தும் ஒரு கருவி என்று தான் பொதுவாகப் பலரும் எண்ணுகிறார்கள்.

(அ) வரி செலுத்துவதனல் மக்கள் கையில் இருக்கும் பணத்தின் அளவு குறைகிறது; குறையவே, அவர்களின் செலவும் குறையும். இதனல் பண்டங்கள், பணிகள் இவற்றின் விலையும் குறையும். இங்ஙனம் விலைகள் குறையவேண்டும் என்றல் அரசு வரியாக வசூலித்த பணம் அனைத்தையும் செலவழிக்கக் கூடாது. அரசு கணிசமான அளவு உபரி இருக்கும்படியாக, வரவு செலவு திட்டத்தைத் தயாரிக்க வேண்டும்.

(ஆ) கடுமையான பண்ட வரிகளை விதிப்பதனல் பண்டங்களின் விலைகள் உயரும்; உயரவே, பண்டங்களுக்கு இருக்கும் புரிசமும் குறையும். இவ் வரிகள் தற்காலிகமாகச் சிறிது காலத்திற்குத்தான் இருக்கும் என்று மக்கள் நம்பினல், பண்டங்களின் புரிசம் குறையும். அவ்வாறின்றித் தொடர்ந்து நிரந்தரமாக இவ் வரிகள் இருக்குமென்றல், பண்டங்களின் புரிசம் குறையாது. புரிசம் குறைந்தால்தான் விலைகள் மேலும் ஏற மாட்டா.

(இ) அரசு விலைக் கட்டுப்பாட்டை அமுல் நடத்தலாம். அதேசமயம் ஆயத்தீர்வைகளையும் விதிக்கலாம். இதனால் நுகர்வோர் பண்டங்களுக்குத் தரும் விலைகள் கூடாது. ஆயத்தீர்வைகளினால் தொழிலதிபர்களின் இலாபம் குறையும். இதனால் தொழிலதிபர்கள் முதலீடு செய்வது குறையும்; உற்பத்திக் காரணிகளின் ஊதியங்களும் குறையும். இதனால் பணவீக்க அழுத்தமும் குறையும்.

### முடிவுரை

வரிகளினால் பணவீக்கத்தை ஓரளவு கட்டுப்படுத்த முடியும். ஆனால், அதேசமயம் சம்பளங்கள், கூலிகள் உயராமல் இருக்கும்படிப் பார்த்துக் கொள்ளவேண்டும். அரசின் வரவு செலவு திட்டத்தில், செலவைக் காட்டிலும், வரவு உபரியாக இருக்க வேண்டியது மிக அவசியம்.

### வரி விதிப்பும் மூலதனத் திரட்சியும் (Taxation and Capital Formation)

வளர்ச்சி குன்றிய நாடுகளில் மூலதனத்தைத் திரட்டுவது வரி விதிப்பின் நோக்கங்களில் ஒன்றாகும். சாதாரணமாக, எந்திரங்கள், கட்டடங்கள், போக்குவரத்துச் சாதனங்கள் (transportation equipment) இவற்றை மூலதனம் என்கின்றோம். இவை யாவும் மனிதனின் முயற்சியால் செய்யப்பட்டவை. இவை நாட்டின் உற்பத்தி ஆற்றலை அதிகரிக்கத் துணை செய்கின்றன. இந்தியா போன்ற வளர்ச்சி குன்றிய நாடுகளில் எந்திரங்கள், கட்டடங்கள், போக்குவரத்துச் சாதனங்கள், மூலப் பண்டங்கள் இவற்றுடன் தொழிலாளர் பயிற்சியையும், ஓரளவு உணவையும், ஏனைய ஊதியப் பண்டங்களையும் (wage goods) மூலதனத்தில் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

இப்பொழுதிருக்கும் மூலதனத்திற்கு ஊறு நேராமல் பார்த்துக் கொள்வதுடன், மூலதனத்தை அதிகரிக்கவும் ஒவ்வொரு நாடும் முற்படவேண்டும். முன்னேறிய நாட்டில் மூலதனத் திரட்சி வீதம் அதிகமாக இருப்பதனால், உற்பத்தி ஆற்றலும் அதிகமாக இருக்கிறது. இதனால், அந் நாட்டில் மக்களின் சராசரி வருமானம் அதிகமாக இருப்பதுடன் வாழ்க்கைத் தரமும் உயர்வாக இருக்கிறது. வளர்ச்சி குன்றிய நாடுகளில் ஆண்டொன்றுக்கு 5-ல் இருந்து 6% மூலதனத் திரட்சி ஏற்படுகிறது. முன்னேறிய நாடுகளில் திரட்சி வீதம் 12-ல் இருந்து 15% ஆக இருக்கிறது.

மூலதனத் திரட்சி மூவகையில் ஏற்படலாம். (அ) நுகர்வுக்குப் பயன்படுத்தப்படும் வளங்களை மூலதனப் பண்டங்களின்

உற்பத்திக்குப் பயன்படுத்துதலும், இப்பொழுது பயன்படுத்தப் படாமல் இருக்கும் வளங்களை மூலதனப் பண்டங்களின் உற்பத்திக்குப் பயன்படுத்துதலும் ஒருவகை. (ஆ) மக்களிடமிருந்து சேமிப்புகளைத் திரட்டுவதற்கும், அங்ஙனம் திரட்டிய பணத்தை முதலீடு செய்வோருக்கு அளிப்பதற்குப் பேங்குகளையும், பிற நிறுவனங்களையும் நிறுவுதல் இரண்டாவது வகை. (இ) பண வளங்களையும், பிற வளங்களையும் மூலதனப் பண்டங்களின் உற்பத்தியில் முதலீடு செய்தல் மூன்ருவது வகையாகும். சுருங்கக் கூறின் நுகர்வைச் சுருக்கி, சேமிப்பையும் முதலீட்டையும் பெருக்குவதே மூலதனத்தைத் திரட்டுவதற்கான வழியாம்.

முன்னேறிய நாடுகளில் பெரும்பாலும் தனியார் துறையே மூலதனத்தைத் திரட்டுகின்றது. அரசு தனியார் துறைக்கு உறுதுணையாக இருக்கிறது. வரி வசூல் மூலம் கிடைத்த தொகைகளைக் கொண்டு அரசு, சாலைகள், இருப்புப்பாதைகள், நீர்த்தேக்கங்கள், மின்சாரம், செய்திப்போக்குவரத்து (தபால், தந்தி முதலானவை) போன்ற வசதிகளைச் செய்து தருகிறது. இவ் வசதிகளைச் செய்வதற்கு அரசு சில சமயம் கடன் வாங்கலாம். அதிக வரி விதித்து அக் கடனை அடைக்கிறது.

கருதுகோள் அளவில் நேர்முக வரிகள் உழைக்கும் ஆற்றலையும், சேமிக்கும் விருப்பத்தையும் பாதிப்பதாகக் கூறப்படுகிறது. ஆனுல், வருமான வரி, இறப்பு வரி, செல்வ வரி முதலான நேர்முக வரிகளால் மூலதனத் திரட்சிக்கு ஊறு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. வரி விதிப்பினுல் ஏற்படும் பாதகமான விளைவுகள் அரசின் செலவினுல் களையப்படுகின்றன என்றும் கூறலாம். வாணிப மந்த காலத்தில் வரிகளைக் குறைத்தும், அரசின் செலவை அதிகரித்தும் (துண்டு வரவு செலவு திட்டத்தின் வாயிலாக), மிதப்புக் காலத்தில் வரிகளை உயர்த்தியும் (உபரி வரவு செலவு திட்டத்தின் வாயிலாக), அரசின் செலவைக் குறைத்தும் மக்களின் வருமானத்தை நிலைபெருக்க அரசு முயல்கிறது. நாட்டின் சேமிப்பும், முதலீடும் நிலைபெருக்கப்படுகின்றது. இதிலிருந்து மூலதனத் திரட்சியைப் பொறுத்தவரை அரசு நடுவுநிலைமை வகிக்கிறது என்று தெரிகிறது.

'மூலதனத் திரட்சி வீதத்தில் கணிசமான அளவு அதிகரிப்பு ஏற்பட்டால் ஒழிய, வளர்ச்சி குன்றிய நாடுகளின் பொருளாதார நிலைமையில் பெருத்த முன்னேற்றம் ஏற்பட முடியாது. அவ்விதம் மூலதனத் திரட்சிவீதம் அதிகரித்த பின்பு, திரட்சி வீதத்தைக் குறையாமல் பார்த்துக் கொள்வதற்கு அரசு பிரத்தியேக முயற்சிகள் செய்வது வேண்டாதது' என்று வான் பிலிப்ஸ் (Van

Philips) கூறுகிறார். இந் நாடுகளில் மூலதனத் திரட்சி வீதம் குறைவாக இருப்பதற்குக் காரணங்கள்: (அ) மக்களில் பெரும் பகுதியினர் ஏழைகளாக இருப்பதும், (ஆ) செல்வர்கள் ஆடம்பரமான ஊதாரிச் செலவுகள் செய்வதும், (இ) முதலீட்டுக்குப் போதிய வாய்ப்புகள் இல்லாததும் ஆகும். இப்படிப்பட்ட நிலையில் தான் 'தனியார் சேமிப்புகளையும், முதலீடுகளையும் தூண்டுவதற்கும், தேங்கிக் கிடக்கும் வளங்களைத் திரட்டுவதற்கும், வரிக் கொள்கை ஒரு முக்கியமான கருவியாக அமைகிறது' என்று ஜான் ஹெச். ஆட்லர் (John H. Adler) கூறுகிறார்.

மூலதனத் திரட்சி வீதத்தை விரைவுபடுத்துதற்கு, வரிப் பளுவைப் பாமர மக்கள் ஏற்க வேண்டியது அவசியம். இதற்குப் பண்ட வரிகள் நல்ல கருவியாகும். சிலர் ஏற்கெனவே இந் நாடுகளில் வாழ்க்கைத்தரம் மிகவும் குறைவாக இருப்பதனால், மேலும் வரிப்பளுவை ஏற்ற முடியாதெனக் கருதுகின்றனர். வேறு சிலர் குறுங்காலத்தில் மக்கள் அதிகமான வரிப்பளுவை ஏற்றுக்கொண்டால், நெடுங்காலத்தில் அவர்கள் நன்னிலையில் இருப்பார்கள் என்று வாதிக்கிறார்கள். குறுங்காலத்தில் நுகர்வுப் பண்டங்களின் உற்பத்தியைப் பெருக்குவதற்குப் பதிலாக மூலதனப் பண்டங்களை உற்பத்தி செய்ய வேண்டும் என்பதும் இவர்களின் வாதம். இப்போதிருக்கும் வாழ்க்கைத் தரத்தை வேண்டுமானால், மேலும் குறையாமல் பார்த்துக் கொள்ளலாம். எங்ஙனமாயினும், மேற்கொண்டு உற்பத்தி செய்வதில் ஒரு வளர்ந்து வரும் பங்கை, மூலதனப் பண்டங்களின் உற்பத்திக்கு ஒதுக்க வேண்டியது இன்றியமையாதது.

செல்வர்களின் ஊதாரிச் செலவைக் குறைப்பதற்கு வருமான வரி, செல்வவரி, செலவுவரி, இறப்புவரி போன்ற பல வரிகளையும் பயன்படுத்த வேண்டியதுதான். இறுதியாக, வரிகளிலிருந்து கிடைத்த வருவாயை அரசு, கல்வி, சுகாதாரம், இருப்புப்பாதைகள் போன்றவைகளுக்குச் செலவழிக்கலாம்; அல்லது தானே தொழில்களைத் தொடங்கலாம்.

இவ்வாறாக, ஒரு வளர்ச்சி குன்றிய நாட்டில் சமுதாயத்தின் சேமிப்புக் கருவியாக வரி பயன்படுகிறது. ஆயினும், மக்களின் வரிதாங்கு வல்லமை மிகக் குறைவாக இருப்பதால், வரியை மிகுதியும் பயன்படுத்துதற்கு வரம்புகள் இருக்கின்றன. இந்தியாவில் மிகச் சிறிய எண்ணிக்கையினரே நேர்முக வரிகளைச் செலுத்துகிறார்கள். மொத்த மக்கள் தொகையில் இவர்களின் எண்ணிக்கை ½ சத வீதத்துக்கும் குறைவே. இவ்வகையில்

சோவியத் யூனியன் நமக்கு முன் மாதிரியாகும். விற்பனைப் புரள்வு வரியை (Turnover tax) விதித்து சோவியத் அரசு மக்களின் நுகர்வைக் குறைத்து, சமுதாயத்தின் சேமிப்புகளைத் திரட்டி, மூலதனத் திரட்சி செய்தது. 'அதிகப்படியான நேர்முக வரிகளை, சரியான இடத்தில் (ஆட்களின் மீது) விதித்தால்—ஆனால், வரிப்பளு மிதமிஞ்சி இருக்கக்கூடாது—வளர்ச்சியின் முதல் கட்டத்தில் தனியார் மூலதனத் திரட்சி செய்வதைத் தடுக்காது. தனியார் மூலதனத் திரட்சியைத் தடுக்கும் அளவுக்கு, இவ் விழப்பை, அரசு முதலீடுகள், தனியார் முதலீடுகள் இவற்றின் வாயிலாக உற்பத்தித் திறனை மிகுதியும் அதிகரிப்பதன் மூலம் ஈடு செய்யலாம். அதிகப்படி கிடைத்த வரி வருவாய்களிலிருந்து இம் முதலீடுகள் சாத்தியமாயிற்று.' இவ்வாறு பால் வான் பிலிப்ஸ் கருத்துத் தெரிவிக்கிறார்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. Report of the Taxation Enquiry Commission, 1953—54, Vol. I, Chapter VIII
2. Hicks, 'Public Finance', Chapter, XVIII
3. The American Economic Association, Readings in Fiscal Policy, Chapters 4, 5, 6, 10, 11 and 32
4. R. Balakrishna, 'Studies in Indian Economic Problems', pp. 231—253.

# 21. வருமான வரி

வருமானவரி பண்டைக் காலத்திலிருந்தே விதிக்கப்படுகிறது. இயேசு கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே பல நாடுகளும் இவ் வரியை விதித்தன. இவ் வரி எத்துணை பழையது என்றும் கூறமுடியாது. இந்திய வரலாற்றிலும், எகிப்திய வரலாற்றிலும் வருமான வரியைப் பற்றிய சான்றுகள் இருக்கின்றன. விவிலிய நூலில் (Bible) பல இடங்களிலும் வருமான வரியைப்பற்றிய கருத்துப் படிமம் காணக் கிடக்கிறது. யூதர்கள் விதித்த டைத் (tithe) என்பது ஒரு எளிய வருமான வரியே ஆகும்.

வருமானத்தைப்பற்றிய விளக்கம்

ஒருவர் ஒரு குறிப்பிட்ட காலவரையறையில் பெறும் பொருளாதார ஆதாயமே வருமானம் எனப்படும். அதில் மூன்று கூறுகள் அடங்கியுள்ளன. (அ) அவர் பிறரிடமிருந்து பெற்ற மொத்த வருமானம். அவர் இவ் வருமானத்தை ஈட்டுவதற்கு மேற்கொண்ட செலவுகளை இதிலிருந்து கழிக்கவேண்டும். ஆனால், இச் செலவுகளில் அன்றாட வாழ்க்கைச் செலவுகள் அடங்காது. (ஆ) தனக்குச் சொந்தமாக இருக்கும் பண்டங் களின் நுகர்வின் பெறுமானமும் வருமானத்தில் அடங்கும். ஒருவருக்குச் சொந்தமாக வீடிருந்து அதில் குடியிருந்தால் அவ் வீட்டிலிருந்து கிடைக்கும் பணியும், சொந்தக் காய்கறித் தோட்ட மிருந்தால் அக் காய்கறிகளும் வருமானத்தில் அடங்கும். (இ) குறிப்பிட்ட காலத்தில் சொத்துகளின் பெறுமானம் அதிகரித்தாலும் அதுவும் வருமானத்தில் அடங்கும்.

பொருளியல் புலவர்கள் வரிதாங்கு வருமானம் என்னும் சொற்றொடருக்கு மூன்று விளக்கங்கள் தருகிறார்கள். (அ) ஒரு குறிப்பிட்ட காலவரையறையில் ஒருவர் நுகரும் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் மதிப்பு வருமானம் எனப்படும். இதை வாழ்க்கைக்குரிய நுகர்வுப் பண்டங்கள் ஓடுகால் (Scrvicc-flow concept) என்பர். இவ் விளக்கத்தின்படி நீடித்திருக்கக் கூடிய நுகர்வுப் பண்டங்களுக்கும், மூலதனப் பண்டங்களுக்கும் செலவு

செய்தல் சேமிப்பில் அடங்கும். ஆகவே, இது வரிக்கு உட்படாது. இதுவே, இதன் குறைபாடுமாகும். இக் கருத்துப் படிமத்தை உருவாக்கியவர் இர்விங் பிஷர் (Irving Fisher). (ஆ) கார்ல் பிளன் (Carl Plahn) என்பவர் வருமானம் என்பதற்கு இடையருத வரவு (Recurrent Receipt) என விளக்கம் தந்தார். இதில் மூன்று பண்புகள் அடங்கியுள்ளன. அவை யாவன : (1) வரவு. (2) இடையருது வரும் என்று எதிர்பார்த்தல். (3) செலவு செய்யக் கூடியது. இப் பொருளில், கூலி, சம்பளம், வட்டி, வாரம் (அல்லது வாடகை), ஆண்டுத் தொகைகள் (annuities), ஓய்வுகால ஊதியம், இலாப ஈவுகள் ஆகியவை வருமானத்தில் அடங்கும். இதிலுள்ள முக்கிய குறைபாடாவது மூலதன ஆதாயம் போன்ற ஒரோ வழி கிடைக்கும் வருமானங்கள் சேர்க்கப்படாமையே ஆகும்.

(இ) நிகர வருமான கருத்துப் படிமம் (Net accretion concept of income). இதன்படி எல்லாவகை வரவுகள் அல்லது தொகை ஏற்றங்களும் (accruals) வருமானத்தில் அடங்கும். இதில் கீழ்க்கண்டவை அடங்கும்: (1) இடையருது வரும் வருமான வரவுகள். (2) வாரிசுரிமை, கொடை, மூலதன ஆஸ்திகளின் மதிப்பேற்றம் இவற்றிலிருந்து கிடைக்கும் வரவுகள். (3) பல்வேறுபட்ட மெய்யான வருமானங்களின் பண மதிப்பு. இதில் ஒருவர் ஒரு குறிப்பிட்ட காலத்தில் அடைந்த எல்லாவகை வருமானங்களும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதிலுள்ள ஒரு சங்கடம் தானியமாகப் பெறும் வருமானத்தை அளவிடுவதுதான்.

எல்லா நாடுகளிலும் இயற்றப்பட்ட சட்டங்களில் வருமானத்திற்குச் செல்வத்தின் ஓடுகால் (flow of wealth) என்றே விளக்கம் தந்திருக்கின்றனர். இதில் பண வரவுகளும், பண்ட வரவுகளும் அடங்கும். இவ் விளக்கத்தின்படி ஒருவருக்குச் செல்வ வரத்து (flow of wealth) இருக்கவேண்டும். அதாவது வரி செலுத்துவோருக்கும், பிறருக்கும் இடையே ஒரு இடையீடு (transaction) நிகழ்ந்தால்தான் வரியை விதிக்க முடியும். உதாரணமாக, வீட்டுக்குடையவரே வீட்டில் குடியிருந்தால், அவருக்கு வரியிலிருந்து விலக்கு உண்டு. (ஆ) வருமானம் கைக்குவந்தால்தான் வரி விதிக்கப்படுகிறது. உதாரணமாகச், சொத்தை விற்றால்தான், அதிகரித்த சொத்தின் மதிப்பின்மீது வரி விதிக்கப்படும். இச் சட்ட விளக்கம் சௌகரியத்தைப் பொறுத்துச் செய்யப்பட்டதே. இதில் சில குறைபாடுகள் உள்ளன. (1) நிருவாகச் சௌகரியத்தை முன்னிட்டு அங்காடியில் விற்பனைக்கு வராத வருமான இனங்களுக்கு வரியிலிருந்து இது விலக்கு அளிக்கிறது. இதனால் தாங்களே இச் செயல்களை மேற்கொள்ள முடியாமல் அல்லது

மேற்கொள்ள விரும்பாமல் இருப்பவர்களை இது வேற்றுமைப் படுத்துகிறது. (2) குடியிருக்கும் வீட்டின் வாடகை மதிப்பும், ஏனைய நீடித்த நுகர்வுப் பண்டங்களின் மதிப்பும் வருமானத்தில் சேர்க்கப்படவில்லை. ஆகவே, இவை வரிக்கு ஆளாவதில்லை. இதனால் வீடுகளில் முதலீடு செய்தவர்களுக்கு ஆதாயமும், பிற முதலீடுகள் செய்தவர்களுக்குப் பாதகமும் ஏற்படுகிறது.

### சிலவகை வருமானங்களுக்குப் பிரத்தியேகச் சலுகை அளித்தல்

சமமானவர்களைச் சமமாக நடத்தவேண்டும் என்பது அறநெறி. ஆகவே, அனைவர் பேரிலும் ஒரேபடித்தான வரியை விதிக்க வேண்டும். சில பிரத்தியேகச் சூழ்நிலைகளில் சலுகைகள் அளிக்கலாம். (அ) இடைருது தொடர்ந்து வருமானம் வருதலை ஒரு ஒப்பளவு முதலாகக் கொள்ள வேண்டும். ஆகவே, எப்போதாயினும் ஒரோவழி கிடைக்கும் வருமானத்திற்கு வருமான வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும் அல்லது அதை வேறு விதமாக நடத்த வேண்டும். இவ் வருமானங்களுக்கு வரியிலிருந்து முற்றும் விலக்களித்தல் அறமன்று. ஆயினும், வளர்வீதத்தில் இவ் வருமானங்களின்மீது வரி விதித்தால், வரிப்பளு மிகவும் அதிகமாகும். ஆகவே, சராசரி வருமானத்தை அடிப்படையாகக் கொள்ளுதல் நன்று. (ஆ) மூலதன ஆதாயங்களில் சில சிறப்புக் கூறுகள் காணப்படுகின்றன. ஆகவே, அவற்றைச் சிறப்பு வகையில் நடத்துதல் நல்லது. (இ) கொடைகளையும், வாரிசுரிமையாக உடைமைகளையும் பெறுவதை வருமானமாகக் கொள்ள வேண்டும். ஆனால், இவை தொடர்ந்து கிடைக்காமையால் இவற்றைச் சிறப்புவகையில் நடத்த வேண்டும். (ஈ) உலகிலுள்ள நாடுகளில் பெரும்பான்மையும் உழைப்பு வருமானத்துக்கும், உழைப்பிலா வருமானத்துக்கும் இடையே வேறுபாடு கற்பிக்கின்றன. (உ) சில வகை வருமானங்கள் ஓரளவு முதலீடு செய்த மூலதனத்துக்கான ஆதாயமாகவும், ஓரளவு வருமானமாகவும் கொள்ளத்தக்கன. ஆண்டுத் தொகைகள், காப்புறுதி ஓய்வு ஊதிய ஆதாயங்கள், சமுதாய நலக் காப்புறுதி ஆதாயங்கள் ஆகியவை இவ்வகை வருமானங்களுக்கு எடுத்துக்காட்டுகளாகும். மூலதன ஆதாயமாகக் கருதப்படும் பகுதியை விலக்கிவிட்டு, வருமானமாகக் கருதப்படும் பகுதியின்மீது வரி விதிக்கலாம்.

### மொத்த வருமானமும், நிகர வருமானமும்

வருமான வரியை விதிப்பதற்கு, மொத்த வருமானத்துக்கும் நிகர வருமானத்துக்கும் இடையே ஒரு தெளிவான வேறுபாடு கற்பிக்க வேண்டும். விற்பனைமூலம் கிடைத்த தொகைகள்

முழுவதையும் ஒரு வணிகரின் வருமானமாகக் கொள்ள முடியாது. ஏனெனில், மூலப் பண்டங்களுக்கு ஆன செலவு, தொழிலாளர் ஊதியம் ஆகியவற்றை மொத்த வருமானத்திலிருந்து கழிக்க வேண்டும். இதேபோன்று, ஒரு கட்டடத்தை வாடகைக்கு விட்டிருந்தால், வாடகையாகக் கிடைக்கும் தொகை முழுவதையும் வருமானமாகக் கொள்ளமுடியாது. ஏனெனில், கட்டடத்தைப் பழுது பார்ப்பதற்கு ஆன செலவுகளையும், பிற பராமரிப்புச் செலவு களையும் வாடகையிலிருந்து கழிக்க வேண்டும். வருமான வரியை விதிப்பதற்கு நிகர வருமானத்தையே அடிப்படையாகக் கொள்ள வேண்டும். ஒருவரின் நிகர வருமானத்தைக் கணக்கிடுவதற்கு அவருடைய மொத்த வருமானத்திலிருந்து சில பிடித்தங்களைச் செய்ய வேண்டும். வருமானத்தை ஈட்ட வேண்டுமானால் இச் செலவுகளைச் செய்தே தீர வேண்டும். ஆகவே, ஒருவருடைய சொந்தச் செலவுகளுக்கு இத் தொகைகள் பயன்படா.

வருமானத்தை ஈட்டுவதற்கு ஆகும் செலவுகளுக்கும், நுகர்வுச் செலவுகளுக்கும் வேறுபாடு உள்ளது. நிகர வருமானத்தின்மீது வருமானவரி விதிக்க வேண்டும் என்றால், இவ் வருமானத்தை ஈட்டுவதற்குச் செய்த செலவுகளை மொத்த வருமானத்திலிருந்து கழிக்க வேண்டும். நடைமுறையில் வருமானத்தை ஈட்டுவதற்கு ஆகும் செலவுகளைச் சுலுவில் கண்டுபிடிக்கலாம். ஒரு தொழில் முனைவை நடத்தி அதிலிருந்து வருமானத்தையும் பெற வேண்டும் என்றால், தொழிலாளர்களுக்குக் கூலி அளிக்கவேண்டும்; மூலப் பண்டங்களை வாங்கவேண்டும்; எரிபொருள், போக்குவரத்து ஆகியவற்றுக்கும் செலவு செய்ய வேண்டும்; வாங்கிய கடன் பேரில் வட்டியையும் செலுத்தவேண்டும். இவை யாவும் வருமானத்தை ஈட்டுவதற்கு ஆகும் செலவுகள். உணவு, உடை, குடியிருப்பு, பொழுதுபோக்கு ஆகியவற்றுக்கு ஆகும் செலவுகள் நுகர்வுச் செலவுகள் ஆகும்.

சில வேளைகளில் வணிகச் செலவுகளாகக் கொள்வதா அல்லது நுகர்வுச் செலவுகளாகக் கொள்வதா என்று தீர்மானிப்பது கடினம். சில பண்டங்கள் நுகர்வுக்காகவும் வாங்கப்படலாம்; வணிகத்திற்காகவும் வாங்கப்படலாம் (அதாவது நுகர்வுக்கும், வணிகத்திற்கும் பயன்படலாம்). சிறு வணிகர்களும், குடியான வர்களும், உத்தியோகஸ்தர்களும் இவ்வாறு பண்டங்களை (நுகர் வுக்கும், வணிகத்திற்கும் பயன்படும்படி) வாங்குகிறார்கள். எடுத்துக்காட்டாக, ஒரு குடியானவர் ஒரு டிராக்டர் இழுவையைத் (trailer) தன் நிலத்திற்கு எரு அடிக்கவும், நிலத்திலிருந்து வீட்டுக்கு நெல்லைக் கொணரவும் பயன்படுத்தலாம்; அருகாமையிலுள்ள நகரத்திலிருந்து வீட்டுக்கு வேண்டிய மளிகைச் சாமான்களை

வாங்கி வரவும் பயன்படுத்தலாம். இதேபோன்று ஒரு எழுத்தாளர் பொழுதுபோக்குக்காகவும் ஒரு சுற்றுலாவை மேற்கொள்ளலாம்; அடுத்த நவீனத்தை (நாவல்) எழுதுவதற்கு வேண்டிய கருப்பொருட்களைச் சேகரிப்பததற்காகவும் சுற்றுலாவை மேற்கொள்ளலாம். இம்மாதிரியான இனங்களில் வணிகச் செலவுகளையும், நுகர்வுச் செலவுகளையும் பிரிப்பது கடினம்.

## வணிகச் செலவுகளைப் பிடித்தம் செய்வதில் உள்ள சங்கடங்கள்

சிலர் சம்பளமாகவோ அல்லது கூலியாகவோ வருமானத்தைப் பெறுகின்றனர். அவர்களைப் பொறுத்தவரையில் இவ் வருமானத்தை ஈட்டுவதற்கு ஆன செலவுகளைக் கண்டுபிடிப்பது கடினமல்ல. ஆனல், வணிகச் செலவுகளைக் கணக்கிடுவதில் சில சங்கடங்கள் உள்ளன. தன்னுடைய வரிப் பளுவைக் குறைப்பதற்காக ஒரு தொழில் முனைவர் தன்னுடைய வணிகச் செலவுகளை மிகைப்படுத்திக் கூறலாம். எடுத்துக்காட்டாக, அவர் உறவினர் ஒருவருக்கு வேலை தந்து அதற்குச் சம்பளமும் தரலாம். உறவினர் அவ் வேலையைச் செய்திருக்கலாம்; செய்யாமலும் இருக்கலாம். இதிலிருந்து தொழில் செலவுகளில் சில நியாய மற்றவையாக இருக்கலாம் என்று தெரிகிறது.

சிலவகைத் தொழில் செலவுகளைக் கணக்கிடுவதில் உள்ள படியே சிரமங்கள் இருக்கலாம். உதாரணமாக, எந்திரத்தை வாங்குவதைக் கூறலாம். இது செலவுதான். எவ்வளவு ஆண்டுகள் இந்த எந்திரம் நல்ல நிலைமையில் இருந்ததோ அவ்வளவு ஆண்டுகளுக்கும் எந்திரத்தின் விலையை ஒதுக்கீடு செய்யவேண்டும். இதைத்தான் தேய்மான வீதம் (depreciation Charge) என்கின்ருேம். நடப்பில் தேய்மான வீதத்தைக் கண்டு பிடிப்பது மிகவும் கடினம்.

## நிகர வருமானத்தை மதிப்பிடுவதில் காலக்கூறு (The Problem of Time in Estimating Net Income)

ஒரு தொழிலதிபர் வரி செலுத்தத் துவங்கியதிலிருந்து அவர் தொழிலை விட்டு விலகும் வரை அல்லது இறக்கும்வரை வருமானத்தைப் பெற்றுக் கொண்டிருக்கிருர். இவ் வருமானம் ஆண்டுதோறும் கணக்கிடப்படுகிறது. சென்ற ஆண்டில் வாங்கிய மூலப் பண்டங்களையும், பொருட் சேமக் குவை (Stores)களையும் கொண்டு பண்டங்களை இவ்வாண்டு உற்பத்தி செய்து விற்கலாம். இதேபோன்று இவ்வாண்டு வாங்கிய மூலப் பண்டங்களையும், பொருட் சேமக் குவைகளையும் கொண்டு எதிர்காலத்தில் பண்டங்கள் செய்யலாம். தொழிலின் பரிமாணமும், விலையும்,

இலாபமும், வரி வீதங்களும் மாருதிருக்கும்வரை ஒரு பிரச்சினை யும் இல்லை. இவற்றில் ஒன்ருே, பலவோ அல்லது அனைத்துமோ மாறினுல் சிக்கல்கள் ஏற்படும். இதனுல், இலாபம் இழப்பாகவோ, இழப்பு இலாபமாகவோ மாறலாம். முதலீடு செய்த மூலதனம் முழுமையும் வரி செலுத்தாமல் இருக்கும் படியாகத் தேய்மான வீதம் இருக்கவேண்டும். ஆனுல், சட்டம் அனுமதிக்கும் தேய்மான வீதம் குறைவாக இருக்கலாம்.

### வருமானம் தொடர்ந்து கிடைக்காமை

பல வருமானங்கள் ஒரோவழி கிடைக்கின்றன. அலுவலாளர் கள், வாணிக நிறுவனங்கள் இவற்றின் வருமானங்கள் ஒரேபடித் தாக இருப்பதில்லை. இவ்வித வருமானங்களின்மீது வரி விதிப்ப தற்கு மூன்று வழிகள் இருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட காலவரை யறையின் (உ-ம். ஐந்தாண்டுகள்) சராசரி வருமானத்தின்மீது வரி விதிக்கலாம். இது மிகவும் சுளுவான முறை. இரண்டாவது முறையைச் சராசரி மீள் கணிப்பு (average recalculation) என்று கூறலாம். இதன்படி வரி செலுத்துபவர் தான் வரியைச் செலுத்த வேண்டிய தொகையைக் கடந்த பல்லாண்டுகளுக்கு (உ-ம். ஐந்தி லிருந்து பத்தாண்டுகள்) மீள் கணிப்புச் செய்து கொள்ளலாம். இம்முறையின்படி கிடைத்த சராசரியை ஒவ்வொரு ஆண்டுக்கும் வரிதாங்கு வருமானமாகக் கொள்ளலாம். சராசரி குவிமுறை (cumulative average method) என்பது மூன்ருவது முறையாகும். இந்த முறையை முதன் முதலில் கூறியவர் வில்லியம் விக்ரே (William Vickrey) என்பவர்.

### வருமான வரியும் ஆற்றல் கோட்பாடும்

நிகர வருமானத்திலிருந்து சில விலக்குகளேயும் (exemptions), பிடித்தங்களேயும் செய்து கொள்ளலாம். இவற்றை அனுமதிப்பதற்கு மூன்று காரணங்கள் உள. (அ) வரித்தளத்தை வரி செலுத்தும் ஆற்றலுக்கு ஏற்றவாறு திருத்துதல்; (ஆ) சில வகைச் செலவு களுக்கு உரம் ஊட்டுதல்; (இ) நிருவாகச் சிக்கலேக் குறைத்தல். முதலிலிருந்தே வருமான வரி ஆற்றல் கோட்பாட்டுக்கு ஏற்ப இருப்பதாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. இவ் வரியிலிருந்து குறைந்த வருமானம் உடையவர்களுக்கு விலக்களித்தலும், செல்வந்தர்களின்மீது அவர்களின் வருமானத்திற்கு ஏற்ப வரிப் பளுவை ஏற்றுதலும் அறத்தின் பாற்பட்டவையே. ஒருவரின் பொருளாதார நலனை அளவிடுவதற்கு வருமானமே ஏற்ற கருவி யாம். ஆயினும், ஒவ்வொருவரும் உணவு, உடை, உறையுள், பொழுதுபோக்கு முதலானவற்றிற்கு ஒரு குறும அளவு செலவு

செய்ய வேண்டியிருக்கிறது. இச் செலவுகள் அவரின் வரிதாங்கு வல்லமையைச் சுட்டுவது ஆகாது. ஆகவே, இவற்றிற்கு வரியி லிருந்து விலக்களிக்க வேண்டும். குடும்பத்தில் உள்ளவர்களின் எண்ணிக்கையையும் அதிகாரிகள் கருத்தில் கொள்ள வேண்டும். குடும்பத்தில் உள்ள பேர்வழிகளின் எண்ணிக்கை அதிகமாக அதிகமாக, அக் குடும்பத்தின் வாழ்க்கை மட்டம் குறையும். ஆகவே, அவர்களுக்கும் வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும். இங்கு நாம் நான்கு பிரச்சினைகளுக்குத் தீர்வு காண வேண்டியிருக்கிறது. (அ) எவ்வளவு விலக்களிக்கவேண்டும்? (ஆ) எங்ஙனம் விலக்களிப்பது? வருமானத்திலிருந்து பிடித்தம் செய்யலாமா அல்லது வரியிலிருந்து பிடித்தம் செய்யலாமா? பொது வாக, வருமானத்தி லிருந்துதான் பிடித்தம் செய்யப்படுகிறது. (இ) அகவையில் வேற்றுமைகளைப் பாராமலும், அண்டியிருப் போரின் எண்ணிக்கையைப் பாராமலும் அனைவருக்கும் ஒரேவித மாகப் பிடித்தம் செய்யலாமா? (ஈ) அண்டியிருப்போர் என்பதற்கு விளக்கம் யாது? குடும்பத்தின் அளவிற்கு ஏற்ப வரிப்பளுவைச் சரிக்கட்டுவது வருமான வரியின் தனிச்சிறப்பாகும்.

பல நாடுகளில் மருத்துவச் செலவுகளுக்கும் விலக்களிக்கப் படுகிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகள், கானடா போன்ற நாடு களில், ஒரு குறிப்பிட்ட உச்ச வரம்புக்கு உட்பட்டு மருத்துவச் செலவுகளுக்கு அரசு வருமான வரியிலிருந்து விலக்களிக்கிறது. இடிபாட்டு இழப்புகளுக்கும் (casualty losses) பிடித்தம் செய்ய லாம். தீ, திருட்டு, விபத்து முதலானவற்றால் உடைமைக்கு ஏற் பட்ட இழப்புகளைப் பிடித்தம் செய்து கொள்ளலாம். இவ் விழப்பு களினால் நிகர செல்வம் குறைவதால், இப் பிடித்தங்கள் செய்வது சரியே. இறுதியாகச் சில நாடுகளில், பிற வரிகளைச் செலுத்து வதற்காக, வருமானத்திலிருந்து பிடித்தங்களைச் செய்து கொள்ள லாம். இரட்டை வரி விதிப்பைத் (double taxation) தவிர்ப்பதற் காக இங்ஙனம் செய்யப்படுகிறது. ஆனால், இது சர்ச்சைக்குரியது.

சிலவகைச் செயல்களை ஊக்குவதற்காக எல்லா நாடுகளு சிலவகைப் பிடித்தங்களை அனுமதிக்கின்றன. இவற்றில் அற நிலையங்களுக்கும், டிரஸ்டுகளுக்கும் (trusts), சமய நிறுவனங் களுக்கும் தரும் நன்கொடைகள் அடங்கும். இச் செயல்களைத் தனியார் மேற்கொள்ளாவிடில், அரசே மேற்கொள்ள வேண்டி யிருக்கும். சமுதாயத்தின் நலனுக்காகத் தனியாரின் சில செயல் களுக்கு அரசு ஊக்கம் அளிக்கிறது. இவற்றில் காப்புறுதித் தொகைகளும், சேமிப்புகளும், ஆலையை விரிவுபடுத்துதற்கு வேண்டிய பணமும் அடங்கும்.

### விலக்கும், நேர்மைக்கோட்பாடும் (Exemption and The Principle of Equity)

இரண்டு பிரச்சினைகளை நாம் எதிர்நோக்கியுள்ளோம். எவ்வளவு வருமானம் உடையவருக்கு வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும் என்பது ஒன்று. வளர்வீதம் எத்தன்மையதாய் இருக்கவேண்டும் என்பது இன்னொன்று. ஒரு குறிப்பிட்ட வருமான மட்டத்திற்குக் கீழ் உள்ளவர்களுக்கு வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும் என்பதை எல்லோரும் ஏற்றுக்கொள்கிறார்கள். ஆனால், இவ் வருமான மட்டம் எந்த அளவு இருக்கவேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்கிறது. வருமான வரி செலுத்தும் அனைவரும் வளர்வீதத்திலேயே வரி செலுத்த வேண்டும். குடும்பத்திலுள்ளவர்களின் எண்ணிக்கையைப் பொறுத்து ஒப்புமையில் வரிப்பளுவைச் சரிக்கட்ட வேண்டும்.

### வளர்வீதக் கோட்பாடும் வரி அமைப்பும் (The Principle of Progression and the Rate Structure)

வருமான வரி வளர்வீதத்தில் இருக்க வேண்டும் என்பதை யாவரும் ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால், வரி எத்துணை வளர்வீதமாக இருக்க வேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்கிறது. வரி அமைப்பில் வளர்வீதம் இரண்டு காரணங்களைப் பொறுத்திருக்கிறது. (அ) ஒரு சமுதாயத்தில் வருமானத்தின் பகிர்வு எங்ஙனம் இருக்க வேண்டும் என்று பொதுவாக மக்கள் விரும்புகிறார்கள் என்பதையும், (ஆ) வளர்வீதத்தினால் ஏற்படும் பொருளாதார விளைவுகளின் முக்கியத்துவம் எவ்வளவு என்பதையும் பொறுத்து வளர்வீதம் இருக்கும்.

### உழைப்பு வருமானமும் உழைப்பிலா வருமானமும் (Earned and Unearned Income)

தானே உழைத்து ஈட்டிய வருமானத்தை உழைப்பு வருமானம் என்றும், சொத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தை உழைப்பிலா வருமானம் என்றும் கூறுகிறோம். உழைப்பிலா வருமானத்திற்கு உதாரணங்கள் வருமாறு : ஒரு நகராட்சி ஒருவருடைய வீட்டிற்கு அருகில் ஒரு பூங்காவை அமைக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அதனால் அந்த வீட்டின் மதிப்பும், வீட்டு வாடகையின் மதிப்பும் உயரும். இதேபோன்று ஆலைகளை அமைக்கும் இடங்களுக்கு அருகாமையிலுள்ள நிலத்தின் மதிப்பு கிடுகிடுவென உயர்கிறது. மக்கள் தொகைப் பெருக்கத்தினாலும் நகரங்களில் உள்ள வீடுகளின் மதிப்பும், மனைக்கட்டின் மதிப்பும் உயர்கிறது. இவை யாவும் உழைப்பிலா வருமானங்கள்

ஆகும். ஏனெனில், இவ் வருமானங்கள் ஒருவரின் உழைப்பின் கணியத்தையும், தரத்தையும் பொறுத்தில்லை. குதிரைப் பந்தயம், லாட்டரி இவற்றில் பரிசுகள் விழுந்தாலும் இவையும் உழைப்பிலா வருமானமே. முன்னோர் தேடி வைத்த நிலம், சொத்து இவற்றிலிருந்து கிடைக்கும் வருமானமும் உழைப்பிலா வருமானமே.

### வேற்றுமைப்பாட்டிற்கான காரணங்கள் (Reasons for Discrimination)

உழைப்பு வருமானத்தின்மீது குறைவான வரி வீதமும், உழைப்பிலா வருமானத்தின்மீது அதிகமான வரி வீதமும் விதிக்கப் படுகிறது. இதற்குக் காரணங்கள் வருமாறு : (1) உழைப்பவர்கள் தங்கள் ஓய்வைத் தியாகம் செய்து வருமானத்தை ஈட்ட வேண்டியிருக்கிறது. உழைப்பிலா வருமானத்தைப் பெறுபவர் தங்கள் ஓய்வு நேரத்தைத் தியாகம் செய்ய வேண்டியதில்லை. (2) உழைத்தால் தான் உழைப்பு வருமானத்தைப் பெற முடியும். உழைக்காமல் நின்று விட்டால் வருமானமும் நின்று போகும். உழைப்பிலா வருமானம் அப்படியன்று. அதிலிருந்து தொடர்ந்து வருமானம் கிடைத்துக் கொண்டேயிருக்கும். உழைப்பவர் இறந்து போனாலும், நோய்வாய்ப்பட்டு வேலைக்குச் செல்லாவிட்டாலும் இவ் வருமானமும் நின்று போகும். ஆனால், உழைப்பிலா வருமானம் தொடர்ந்து அவருடைய வாரிசுதாரருக்குக் கிடைக்கும். மேலும், உழைப்பு வருமானத்தில் ஏற்ற-இறக்கங்கள் ஏற்படும். அது நிலையானதன்று. ஒப்புமையில் உழைப்பிலா வருமானம் நிலையானது. (3) உழைப்பு வருமானத்தைப் பெறுவதற்குச் சில செலவுகளைச் செய்யவேண்டியிருக்கிறது. இதற்கு உடல் உழைப்பும், மூளை உழைப்பும் தேவை. மேலும், கல்வி, பயிற்சி ஆகியவற்றில் செய்த முதலீட்டுக்கான ஊதியமே உழைப்பு வருமானம் எனலாம். உழைப்பிலா வருமானத்தில் இவ்வகைச் செலவுகள் இல்லை. ஆகவே, உழைப்பு வருமானத்திற்குச் சலுகை தர வேண்டும். இல்லையேல், இவ்விதமான முதலீட்டைச் செய்ய ஒருவரும் முன் வராமல் போகலாம். (4) உழைப்பவர்களின் ஆற்றல் காலம் செல்லச் செல்ல (வயது ஏற ஏற) குறைந்து கொண்டே போகிறது. இதற்கான ஒரு தேய்வு வீதத்தை அரசு அனுமதிப்பதில்லை. மேலும், தங்கள் ஓய்வு காலத்திற்காக உழைப்பவர்கள் இப் பொழுதே சேமித்து வைக்கவேண்டியிருக்கிறது. இன்னோரன்ன சங்கடங்கள் எல்லாம் சொத்துடையவர்களுக்கு இல்லை. அவர்கள் நிகழ்காலத்தைப் பற்றியோ, எதிர்காலத்தைப் பற்றியோ கவலைப் பட வேண்டியதும் இல்லை. (5) சொத்துடையவர்களுக்கு வேறு சில நன்மைகளும் இருக்கின்றன. இவற்றை உளவியல்

நன்மைகள் எனலாம். சொத்து அவர்களுக்குப் பாதுகாப்பையும், அதிகாரத்தையும் நல்குகிறது. அவர்கள் தங்களுடைய ஆண்டு வருமானத்திற்கேற்ப நுகர்வைச் சுருக்கிக் கொள்ள வேண்டியதும் இல்லை. (6) இறுதியாக, உழைப்பு வருமானத்தின்மீது குறைவான வரி வீதம் விதிப்பதால், அவர் கடினமாக உழைப்பதற்கு ஊக்கத்தைத் தருகிறது. இதனால், அவருக்கும் நன்மை; சமுதாயத்திற்கும் நன்மை. ஆனால், உழைப்பிலா வருமானத்தின் மீது அதிக வரி விதிப்பதால் ஒருவரின் உழைப்புக்கு எந்தவிதமான ஊறும் ஏற்படப் போவதில்லை.

மேற்கூறிய வாதங்கள் யாவும் உண்மையன்று. ஜே. எஸ். மில் (J. S. Mill) கூறியது போன்று, 'தற்காலிக வருமானத்தின்மீது தற்காலிகமாகவே வரி விதிக்கப்படுகிறது; நிரந்தரமான வருமானத்தின்மீது நிரந்தரமாக வரி விதிக்கப்படுகின்றது.' ஆகவே, உழைப்பு வருமானத்திற்குச் சலுகை அளிக்கவேண்டிய அவசியம் இல்லை. மேலும், காப்புறுதிக்காகப் பிடித்தம் செய்து கொள்ளும்படி அரசு அனுமதிக்கவில்லையா? சுகாதாரத்திற்கும், பிற சமுதாய நலக் காப்புறு வசதிகளுக்காகவும் பிடித்தம் செய்யவில்லையா? உழைப்பு வருமானத்தை ஈட்டுவதற்கு மெய்யான செலவு செய்ய வேண்டியிருக்கிறது என்பதும் பொருந்தாது. ஏனெனில், உழைப்பு வருமானத்தை ஈட்டுவதற்கு மெய்யான செலவானால், அதற்காக அரசு விலக்களிக்கலாம். ஆனால், பிரத்தியேக வரி வீதங்களை விதிக்க வேண்டிய அவசியம் இல்லை.

### எதிர்வாதங்கள்

(1) உழைப்பு வருமானம், உழைப்பிலா வருமானம் இரண்டின் பேரிலும் ஒரே வரி வீதத்தை விதித்தால், இப்பொழுது உழைப்பிலா வருமானத்தின் மீதுள்ள வரி வீதங்கள் குறையும். குறையவே, சேமிப்பும் முதலீடும் அதிகரிக்கும். இதனால் பொருளாதார வளர்ச்சி வீதம் அதிகரிக்கும். வளர்ச்சி வீதம் அதிகரித்தால் சமுதாயமும் நன்மை பெறும். (2) பல்வேறுபட்ட தொழில்களிடையே மூலதனத்தைப் பகிர்வு செய்வதின் மீதும் இதனால் நல்ல விளைவுகள் ஏற்படும். ஆபத்தேற்பு அதிகமுள்ள தொழில்களிலும் முதலீடு செய்வதற்குத் தூண்டுகோல் ஏற்படும்.

### இவ் வேற்றுமைப்பாட்டை அகற்றி விடலாமா?

இவ் வேற்றுமைப்பாட்டை அகற்றிய பின்பு அதே அளவு வருவாயைப் பெறுவது எப்படி? உழைப்பு வருமானத்திற்கு இப்பொழுது தரும் சலுகையை நீக்கிவிட்டால், குறைந்த வருமானம்

உடையவர்கள் அவதிப்படுவார்கள். வரி வீதங்களை மாற்ருமலிருந்தால் கூட, அவர்கள் செலுத்த வேண்டிய வரித்தொகை உயரும். ஆகவே, அவர்கள் துன்புறுவார்கள். அரசுக்கு, வருமான வரியிலிருந்து கிடைக்கும் மொத்த தொகையும் உயரும். முன்பு கிடைத்த வருமானமே போதும் என்ருல், அரசு வரி வீதங்களைத் தளர்த்த வேண்டும். இங்ஙனம் தளர்த்துவதில் பல சங்கடங்கள் இருக்கின்றன. (அ) அனைத்து வருமான மட்டங்களுக்கும் வீதாசாரத்தில் வரி வீதங்களைக் குறைக்கலாம். இங்ஙனம் குறைத்தால் உயர்ந்த வருமானத்தைப் பெறுகிறவர்கள் மீதுள்ள வரிப்பளு அதிகமாகக் குறையும். (ஆ) அதிக வருமானங்களைப் பெறுபவர்கள் மீதுள்ள வரி வீதங்களை மட்டும் குறைக்கலாம். (இ) குறைந்த வருமானங்களை உடையவர்கள் மீதுள்ள வரி வீதங்களை மட்டும் குறைக்கலாம். இங்ஙனம் செய்தால், இடைத்தர, முதல்தர வருமான வருக்கத்தினர்கள் முன்பைவிட அதிக வரிப்பளுவை ஒப்புமையில் ஏற்க வேண்டும். அதாவது, குறைந்த நிலை வருக்கத்தினர்களுக்கும், இவர்களுக்கும் வருமான வரி வீதங்களில் இருந்த வேறுபாடு இப்பொழுது அதிகமாகும்.

## இக் காலத்திய அறிஞர்களின் கருத்து

'இந்தியாவில் செல்வ வரியை விதித்த பின்பு, உழைப்பு வருமானத்திற்கும், உழைப்பிலா வருமானத்திற்கும் இடையே வேற்றுமை பாராட்டுவதனல் யாதொரு நன்மையும் ஏற்படுவதாக எனக்குத் தோன்றவில்லை' என்று கால்டர் (Kaldor) கூறுகிருர். (1) செல்வ வரியை விதித்தால், அதனல் ஒருவரின் ஈட்டும் திறன் குறைகிறது. (2) அதனல், வருமானத்தைத் தரும் சொத்துகளின் மதிப்பும் குறைகிறது. ஆகவே, இவ் வேறுபாடு வேண்டியதில்லை. பேராசிரியர் ஏ. ஆர். பிரஸ்டும்[1] (Professor A. R. Prest) இவ் வேறுபாடு வேண்டியதில்லை எனவும், ஒரு நிகர மதிப்பு வரியை (net worth tax) விதிக்கலாம் எனவும் யோசனை கூறுகிருர். 'உழைப்பிலா வருமானத்திற்கு எதிராகப் பேதங் காட்டுகையை விட்டு விட்டு, அதற்குப் பதிலாக, ஆண்டைய நிகர மதிப்பின்மீது ஒரு வரி விதிப்பதே இதற்கான சரியான தீர்வாகும்' என்று அவர் கூறுகிருர். ஆண்டைய நிகர மதிப்பு வரியும், ஆண்டைய செல்வ வரியும் ஒன்றுதான். இதனல், ஒருவரின் கைவசம் இருக்கும் மூலதனத்தின் மண்டையில் அடித்தது போலவும் இருக்கும். அதேசமயம் அவருடைய மூலதனமும், அதிலிருந்து கிடைக்கும் வருமானமும் குறையும்: மேலும், இவ் வரி ஆபத்து அதிகமுள்ள முதலீடுகளுக்கும், ஆபத்து அதிகமில்லாத

[1] A. R. Prest, 'Public Finance in Theory and Practice,' p.280—281

முதலீடுகளுக்கும் இடையிலும், நீர்மைத்தன்மை உள்ள ஆஸ்தி களுக்கும் (liquid assets), நீர்மைத்தன்மையற்ற ஆஸ்திகளுக்கும் இடையிலும் பேதம் காட்டாது.

வருமான வரியின் விளைவுகள்

இவ் விளைவுகளை மூன்று பிரிவுகளாகக் காண்போம். வருமான வரியும் உற்பத்திக் காரணிகளின் கிடைப்பும்: வருமான வரி விதிப்பால் உற்பத்திக் காரணிகளின் ஊதியம் குறைகிறது. வருமான வரியினுல் உற்பத்திக் காரணிகளின் கிடைப்பு அதிகரிக்குமா அல்லது குறையுமா என்பது, அக் காரணிகளின் கிடைப்பிலுள்ள நெகிழ்ச்சி வீதத்தைப் பொறுத்திருக்கிறது. காரணியின் கிடைப்பு முற்றும் நெகிழ்ச்சியற்றிருந்தால், காரணி களின் கிடைப்பும், அவற்றின் கணியமும், வருமான வரி விதித்த பிறகும் மாருது. அதிக ஊதியம் தந்தால் அதிக அலகு காரணிகள் கிடைக்கும் என்ருல், வருமான வரியை விதிப்பதால், காரணி களின் கிடைப்புக் கணியம் குறையும். குறைந்த ஊதியத்தில் அதிக அலகு காரணிகள் கிடைக்கும் என்ருல், வருமான வரியை விதிப்பதால், காரணிகளின் கிடைப்புக் கணியம் அதிகரிக்கும்.

உதாரணமாக, தொழிலாளர்களின் கிடைப்பை எடுத்துக் கொள்வோம். வருமான வரியை விதிப்பதால், தொழிலாளரின் ஊதியம் குறைகிறது. இதனுல் ஓய்வின் ஆக்கச் செலவு அதிகமா கிறது. உழைப்பிலிருந்து கிடைக்கும் ஊதியமே ஓய்வின் ஆக்கச் செலவாகும். இதனுல் தொழிலாளர் அதிக ஓய்வையும், குறைந்த உழைப்பையும் விரும்பலாம். இதைத்தான் பதிலீட்டு விளைவு (substitution effect) என்கிருேம். அதேசமயம், கூலி குறைவதால் நுகர்வும் குறையும். ஆகவே, வரியினுல் ஏற்படும் வருமானக் குறைவை ஈடுகட்டத் தொழிலாளி மிகை நேரம் உழைக்கலாம். இதை வருமான விளைவு (income effect) எனலாம். போதுமான வருமானம் உள்ளவனே பொதுவாக ஓய்வு எடுத்துக் கொள்ள முடியும்.

வரி வீதங்களும், வரியிலிருந்து விலக்கு வரம்புகளும் (exemption limits) ஒருவரின் உழைக்கும் விருப்பத்தைப் பாதிக்கும். இதேபோன்று வருமான வரி மிகைநேர (overtime) உழைப் பையும், பிற அதிகப்படியான (extra) வேலைகளில் ஈடுபடுவதையும் பாதிக்குமே தவிர, பிரதான வேலையைப் பாதிக்காது. அதே சமயம், தொழிலாளி உழைப்பையும், ஓய்வையும் பற்றி என்ன எண்ணுகின்ருர் என்பதையும் பார்க்க வேண்டும். எடுத்துக் காட்டாக, இரண்டாவது உலகப்போர் நிகழ்ந்த காலத்தில் அரசுகள் அதிகமான வரி விதித்தன. அங்ஙனமிருந்தும், பாட்டாளிகள் தங்களால் இயன்ற அளவு அதிகம் உழைத்தனர்.

புலன்வழி விசாரணைகளிலிருந்து கீழ்க்கண்ட முடிவுகளுக்கு வந்திருக்கிறார்கள்: (அ) வருமான வரி தொழிலாளர்கள், சம்பளத்திற்கு ஊழியம் செய்பவர்கள் இவர்களின் உழைப்பைக் குறைப்பதில்லை; மாறாக, இவர்களைக் கடினமாக உழைக்கும்படித் தூண்டுகிறது. (ஆ) சிலர் பதவி அல்லது உத்தியோக உயர்வு வேண்டாம் என்று கூறுவதற்கு வருமான வரிதான் காரணம். பதவி உயர்வு பெற்றாலும், பொறுப்பு அதிகரிக்கிறதே ஒழிய, நிகர வருமானம் அதிகரிப்பதில்லை. (இ) பெரும் பதவி வகிப்பவர்களுக்கு நிதியம் ஒழிந்த பிற நன்மைகள் இருக்கின்றன. சமுதாயத்தில் அவர்களுடைய மதிப்பு உயர்கிறது. ஆகவே, கடுமையான வரி விதித்தாலும் மிகப் பொறுப்புள்ள பதவிகளுக்குப் போதிய ஆட்கள் முன் வருகிறார்கள்.

மூலதனத்தின் கிடைப்பை வருமான வரி எங்ஙனம் பாதிக்கிறது என்பதை நாம் இனிக் காண்போம். கடுமையான வளர்வீத வருமான வரிகளினால் சேமிப்பின் அளவு மிகவும் பாதிக்கப்படும். ஆனால், புலன்வழிச் சான்றுகளிலிருந்து முழு வருமான வரி வீதங்களுக்கு ஆளாகாமல் மூலதன நிதிகளைத் திரட்ட முடியும் என்று தெரிகிறது. அதேசமயம், வட்டியாகவும், இலாப ஈவாகவும், கிடைக்கும் வருமானம் வருமான வரியால் குறைவதால், மூலதனத்தின் கிடைப்புக் குறையலாம். ஆயினும், கடன் பத்திரங்கள், பங்குகள் ஆகியவற்றை வாங்குவது குறையவில்லை என்று புலன்வழி ஆராய்ச்சி தெரிவிக்கிறது. பொதுவாக, இவர்கள் வரியின் காரணமாக குறைந்த இலாபமும், குறைந்த ஆபத்தும் உடைய முதலீடுகளை அதிகம் செய்யலாம். இவ்வாறு வருமான வரியால் காரணிகளின் கிடைப்புப் பாதிக்கப்படுகிறது என்று கூறுகிறவர்கள் மிகைப்படுத்திக் கூறுகிறார்கள் எனலாம்.

### வருமான வரியும் காரணிகளுக்கான புரிசமும் (Income Tax and the Demand for Factors)

(அ) வருமான வரியின் விளைவாக, நுகர்வுக்காகத் தனியார் செலவிடுவது குறையலாம். (ஆ) வணிக நிறுவனங்களின் வருமானம் குறைவதால், காரணிகளுக்கான அவற்றின் புரிசமும் குறைகிறது. (இ) தொழிலை விரிவடையச் செய்வதற்காக, நிதி திரட்டுவது குறையும். தொழிலை விரிவடையச் செய்து மேலும் ஈட்டிய வருமானத்தின் பெரும்பகுதியும், வரியாக வசூலிக்கப்படும் என்பதை உணர்ந்த தொழிலதிபர்கள் தொழிலை விரிவு படுத்தமாட்டார்கள். அதுவுமின்றி, தொழிலை விரிவுபடுத்தினால் அது வெற்றி பெறுவது திண்ணம் என்று சொல்லவும் முடியாது. சில நாடுகளில் தொழிலதிபர்கள் பணத்தை ரொக்கமாகவே வைத்திருக்கிறார்கள்.

இவையெல்லாம் நம்பிக்கை ஊட்டுவன அல்ல. ஆயினும், அரசின் செலவினுல் உற்பத்திக் காரணிகளுக்கான புரிசம் அதிகரிக்கும் என்பதை நாம் நினைவில் இருத்த வேண்டும். ஆனுல், அரசின் செலவின் பெரும்பகுதியும் பாதுகாப்புக்கும், பிற உற்பத்தியைப் பெருக்காத இனங்களுக்கும் செலவழிக்கப்பட்டால் உற்பத்திக் காரணிகளுக்கான புரிசம் அதிகரிக்காது. பொருளாதாரமும் வளராது.

### வருமான வரியும் வளங்கள் ஒதுக்கீடும் (Income Tax and Resource Allocation)

வளர்வீத வருமான வரி விதிப்பினுல், உயர்ந்த வருமானம் உள்ளவர்கள் உபயோகிக்கும் பண்டங்களின் உற்பத்தி குறையும். செல்வர்களின் சேமிப்பும் குறையலாம். அரசின் செலவின் பெரும் பகுதியும் நுகர்வுப் பண்டங்களுக்காகவே இருக்கலாம். இதனுல் மூலதனத் திரட்சி வீதம் குறையலாம். நெடுங்காலத்தில் பொருளாதார நலனும் குறையலாம். மூலதனத் திரட்சி வீதம் அதிகமாக இருந்தால்தான், குறுங்காலத்தில் நுகர்வுப் பண்டங் களின் உற்பத்தி குறைந்தாலும், நெடுங்காலத்தில் வாழ்க்கைத் தரம் உயரும். ஆனுல், ஒரு வளரும் பொருளாதாரத்தில், காரணி களுக்கான புரிச அதிகரிப்பில் பெரும்பகுதியும் கடவு, மின்சாரம், கல்வி, சுகாதாரம் இவற்றுக்கே இருக்கிறது. இதனுல் ஒரு நாடு விரைவில் தொழில் துறையில் முன்னேறலாம்.

### வருமான வரியும் பகிர்வு விளைவுகளும் (Distributional Effects of Income Taxation)

வளர்வீத வருமான வரியினுல் இப்பொழுது வருமானத்தில் இருக்கும் ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்கலாம் என்று பலர் கருது கிருர்கள். ஆயினும், நடைமுறையில் வருமானத்தை மறுபகிர்வு செய்வதில் வருமான வரி வெற்றி பெறவில்லை. ஸ்வீடன் நாடு மட்டுமே செல்வத்தையும், வருமானத்தையும் மறுபகிர்வு செய்வதில் வெற்றி கண்டிருக்கிறது. 'இதற்குக் காரணம் வருமான வரிச் சட்டத்தில் பல இடுக்குகள் இருப்பதும், அவற்றைச் சட்ட மன்றங்கள் சகித்துக் கொள்வதுமேயாகும். (சில சமயம் இவ் விடுக்குகள் வேண்டுமென்றே பேணப்படுகின்றன). வருமானத்தை அல்லது செல்வத்தை முழுதும் தெரிவிக்கும்படிக் கட்டாயப்படுத்துவதில் வரி நிருவாகமும் தோல்வி கண்டது. இதனுல் வருமான வரியின் வீதங்கள் தோற்றத்தில் எவ்வளவாக இருந்தாலும், சொத்துடையவர்களின் உண்மையான வரிப் பளு மிகவும் குறைவாக இருக்கிறது' என்று ஃபிரஸ்ட் கருத்துத் தெரிவிக்கிருர். சம்பளம் வாங்கும் பணி முதல்வர்கள் முழுச்

சம்பளத்தையும் அதிகாரிகளுக்குத் தெரிவிக்க வேண்டியிருக்கிறது. ஆனால், சொத்து வைத்திருப்பவர்களும், தொழிலதிபர்களும் தங்களுடைய வருமானத்தின் ஒரு பகுதியை மறைப்பதற்கு வாய்ப்புகள் அளிக்கப்படுகின்றன. இங்ஙனம் வளர்வீத வருமான வரியினால் பணி முதல்வர்கள், ஆட்சியாளர்கள், அறிஞர்கள் இவர்கள் பேரில் அளவுக்கு மீறிய வரிப்பளு சுமத்தப்படுகிறது. பலரும் வருமான வரி செலுத்தாது ஏய்க்கின்றனர் அல்லது தப்பித்துக் கொள்கின்றனர். இக் காரணங்களினால் வருமான வரியினால் வருமான மறுபகிர்வு ஏற்படுவதில்லை.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. Report of the Taxation Enquiry Commission, 1953-54, Vol. II, Chapters I, II and III.
2. John L. Due,' Government Finance,' Chapters 7, 8, 9, and 10.
3. A. R. Prest, 'Public Finance in Theory and Practice,' Chapter 14.
4. Taylor, 'The Economics of Public Finance,' Chapters 16 and 19.
5. B. R. Misra, 'Indian Federal Finance,' pp. 243—257
6. G. Findlay Shirras, 'The Science of Public Finance,' Chapters XXI and XXII
7. E. R. A. Seligman, 'Progressive Taxation in Theory and Practice,' pp. 310—315.
8. J. A. Hobson, 'Taxation in The New State,' Chapters IV and V.
9. N. Kaldor, 'Indian Tax Reform,' Chapetrs 1 and 9.
10. W. Vickrey, 'Agenda for Progressive Taxation.
11. R.N. Bhargava, 'The Theory and Working of Union Finance In India,' pp. 267—276.

# 22. மூலதன ஆதாய வரி

## (Capital Gains Taxation)

சில நாடுகளில் மூலதன ஆதாயங்களின்மீது வருமான வரி விதிப்பதில்லை. வேறு சில நாடுகளில் இவை பிரத்தியேகமாக விதிக்கப்படுகின்றன. மூலதன ஆதாயங்களை எங்ஙனம் நடத்த வேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்கிறது. இப் பிரச்சினையை கீழ்க்கண்ட தலைப்புகளில் நாம் காண்போம். (அ) மூலதன ஆதாயங்களை வரிதாங்கு வருமானமாகக் கொள்ள லாமா? (ஆ) மூலதன ஆதாயங்களின்மீது வரி விதிக்க வேண்டுமென்றால், அவற்றின்மீது வரி விதித்தற்கு எந்த முறையைக் கையாள வேண்டும்? (இ) மூலதன ஆதாயங்களை இயல்பான (Normal) வருமானமாகக் கொள்ளலாமா? அல்லது அவற்றைப் பிரத்தியேகமான முறையில் நடத்த வேண்டுமா?

### மூலதன ஆதாயங்களின் இயல்பும், விளக்கமும்

சொத்தின் மதிப்பில் ஏற்படும் அனைத்து அதிகரிப்புகளும் மூலதன ஆதாயங்கள் ஆகும். ஒரு வாணிப பேரத்தில் பண்டங்களை வாங்குவதனாலும் விற்பதனாலும், கிடைக்கும் இலாபங்களை இதிலிருந்து நீக்க வேண்டும். நிலம், கட்டடம், மூலதன உபகரணம், பங்குகள் இவை போன்றவற்றை வாங்கின விலைகளைவிடக் கூடுதலான விலைகளுக்கு விற்றால், மூலதன ஆதாயம் கிடைத்திருக்கிறது என்று பொருளாகும். மூலதன ஆதாயம் கிடைப்பதற்கு இரண்டு வழிகள் உள்ளன. கம்பெனி பங்குகளின் விலைகள் ஏறுவதால் மூலதன ஆதாயம் ஏற்படுவது ஒரு வழியாகும். நிலத்தின் விலை அதிகரிப்பதாலும் மூலதன ஆதாயம் கிடைக்கும். பிற வழிகளில் கிடைக்கும் மூலதன ஆதாயம் அவ்வளவு முக்கியமன்று. பங்குகள், நிலம் இவற்றின் விலை ஏறு வதற்குக் காரணங்கள்: (அ) கம்பெனி தன் இலாபத்தை மீண்டும் முதலீடு செய்வதால் பங்குகளின் விலை ஏறுகிறது. (ஆ) கம்பெனியின் பங்குகளின் விலை ஏறுவதற்குக் கம்பெனியின்

வருமானத்தை ஈட்டும் ஆற்றல் அதிகரித்ததும் ஒரு காரணமாக இருக்கலாம். இது சிறந்த மேலாண்மையினுலும், போட்டி குறைந்ததனுலும் (அல்லது போட்டி இல்லாததனுலும்), புதிய எந்திரங்களையும், புத்தாக்கங்களையும் புகுத்தியதனுலும் ஏற்படலாம். (இ) மக்கள்தொகைப் பெருக்கத்தினுலும் கம்பெனிகளின் வருமானமும், நிலத்தின் மதிப்பும் அதிகரிக்கலாம். முன்பு நாட்டுப்புறமாக இருந்த இடங்கள் நகர்ப்புறமாக மாறிய இடங்களில்தான் நிலத்தின் மதிப்பு மிகவும் அதிகரித்திருக்கிறது. (ஈ) இறுதியாக அங்காடி வட்டி வீதம் குறைந்தாலும் கடன் பத்திரங்களின் விலை ஏறும்.

**மூலதன ஆதாயமும், விலை மட்டமும்** (Capital Gains and the Price Level)

மூலதன ஆதாயம் இரு வகைப்படும்: ஒன்று உண்மையான ஆதாயமாகும்; மற்றொன்று தோற்ற (illusory) ஆதாயமாகும். ஓர் உதாரணத்தின் வாயிலாக இதை விளக்கலாம். ஒருவர் ஒரு வீட்டை உரூபா 5,000-க்கு வாங்கி உரூபா 20,000-க்கு விற்பனை செய்து, இத் தொகையைக் கொண்டு நான்கு வீடுகள் வாங்கினுர் என்றால், அவர் முன்பைவிட நன்றாக இருக்கிறார் என்று பொருள். அவருடைய பொருளாதார நலன் அதிகரித்திருக்கிறது. இதை மெய்யான அல்லது தூய மூலதன ஆதாயம் எனலாம். வேறொருவர் உரூபா 5,000-க்கு வாங்கிய வீட்டை உரூபா 20,000-க்கு விற்று, புதிய வீடு ஒன்றை உரூபா 20,000-க்கு வாங்குகிறார். இவ் வீடும் பழைய வீட்டைக் காட்டிலும் பெரியதுமன்று. இந் நிலையில் அவருடைய பொருளாதார நலன் அதிகரிக்கவில்லை. ஆனால், அவர் மூலதன ஆதாயத்தைப் பெற்றிருக்கிறார். இதைத் தோற்ற ஆதாயம் எனலாம். விலை உயர்வால் இது கிடைத்தது.

**மூலதன ஆதாயமும் வட்டி வீத மாறுதல்களும்**

நெடுங்கால வட்டி வீதம் குறைவதால் கடன் பத்திரங்களின் விலை ஏறும். ஒருவர் கடன் பத்திரங்களை விற்று மூலதன ஆதாயம் பெற முடியும். ஆனால், அவர் அத் தொகையைக் கொண்டு மீண்டும் வேறு கடன் பத்திரங்களை வாங்கினால் அவருடைய வருமானம் உயராது. இப்பொழுது மூலதன ஆதாயத்தின்மீது ஒரு வரியை விதித்தால் அவர் முன்பைவிட மோசமான நிலையில் இருப்பார். ஓர் உதாரணத்தின் வாயிலாக இதை விளக்குவோம். ஒருவர் உரூபா 10,000-க்குக் கடன் பத்திரங்களை வாங்குகிறார் என்றும், அவற்றுக்கு 4% வட்டி கிடைக்கிறதென்றும் கொள்வோம். அவருக்கு உரூபா 400 வட்டியாகக் கிடைக்கும். வட்டி வீதம் 2%

ஆகக் குறைந்தால் கடன் பத்திரங்களின் விலை உரூபா 20,000 ஆக ஏறும். அவர் உரூபா 20,000-க்குக் கடன் பத்திரங்களை விற்றால் அவருக்குக் கிடைக்கும் மூலதன ஆதாயம் உரூபா 10,000 ஆகும். முன்பு கிடைத்த வட்டித் தொகையே இப்பொழுதும் அவருக்குக் கிடைக்க வேண்டும் என்றால், அவர் உரூபா 20,000-க்கும் கடன் பத்திரங்கள் வாங்க வேண்டும். அரசு மூலதன ஆதாயத்தின்மீது ஒரு வரியை விதித்தால், அவருடைய ஆண்டு வருமானம் குறையும். ஆகவே, இதைத் தோற்ற வருமானம் எனலாம்.

அங்காடி வட்டி வீதம் அதிகரித்தால், கடன் பத்திரங்களின் விலை குறையும். இதனால் பத்திரங்களை வைத்திருப்பவர்களுக்கு இழப்பு ஒன்றுமில்லை (அவர்கள் மீண்டும் பத்திரங்களிலேயே முதலீடு செய்தால்). மூலதன இழப்புகளை வருமானத்திலிருந்து கழித்துக் கொள்ளலாம் என்றால், பத்திரங்களை வைத்திருப்பவர் அவற்றை விற்று, இழப்பைப் பிற வருமானங்களிலிருந்து கழித்து விட்டு, அத் தொகைக்குப் புதிய கடன் பத்திரங்களை வாங்கலாம். இதனால் அவர் செலுத்தவேண்டிய வரி குறைவதால் அவருக்கு ஆதாயம் கிடைக்கிறது.

அதிக விலைக்குக் கடன் பத்திரங்கள் விற்கும் பொழுது அவற்றை விற்பவர், அத் தொகையைக் கொண்டு வேறு கடன் பத்திரங்களை வாங்கினால் அதனால் அவருக்கு நன்மையில்லை. அங்ஙனம் இன்றி அத் தொகையை நுகர்வுப் பண்டங்கள் வாங்கு வதற்கோ அல்லது பங்குகள் வாங்குவதற்கோ செலவிட்டால் அவர் முன்பைவிட நல்ல நிலையில் இருப்பார். இவ்வாறாக, ஒரு பொருளில் மூலதன ஆதாயம் கற்பனையாகவும், இன்னொரு பொருளில் மெய்யாகவும் இருக்கிறது. மூலதன ஆதாய வரியை எதிர்ப்பவர்கள் அனைவரும் இவ் வாதாயங்கள் தோற்றத்தில்தான் இருக்கின்றன என்றும், இவை வட்டி வீதம் குறைந்ததாலும், விலைவாசி ஏறியதாலும் ஏற்பட்டதென்றும் கூறுகின்றார்கள். இவர்கள் வாதத்தை ஏற்றுக்கொண்டால், மூலதன ஆதாயங் களின்மீது வரி விதிக்கக் கூடாது. நாம் இவர்களின் வாதத்தை ஏற்றுக்கொள்கின்றோம் இல்லை. மேலும், இதே வாதத்தை வட்டி, இலாபம், கூலி இவற்றில் ஏற்படும் உயர்வுக்கும் கூறலாம். அப் பொழுது அவற்றையும் தோற்றமாகக் கொண்டு, வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும். நிலம், பங்குகள், கடன் பத்திரங்கள் இவற்றின் கணிசமான பகுதி செல்வந்தர் கையில் இருப்பதால், இவற்றின் விலை ஏறினால் இவர்கள் மேலும் செல்வந்தர்கள்

ஆவார்கள். இதனுல் மூலதன ஆதாயத்திற்கு வரியிலிருந்து விலக்கு அளிக்கக்கூடாது. மேலும் விலக்கு அளிப்பதனுல் வரி அமைப்பின் வளர்வீதமும் குறையும்.

## மூலதன ஆதாய வரியை விதிக்கவேண்டும் என்பதற்கான வாதங்கள்

(அ) அறத்தின் அடிப்படையில் இவ் வரியை விதிக்க வேண்டும் எனக் கூறலாம். மூலதன ஆதாயம் பெறுபவர்களுக்கு வரியிலிருந்து விலக்கு அளித்தால், அது பிறரின் வரிப்பளுவை அதிகரிக்கும். மூலதன ஆதாயத்தை ஒரு சாரார் (செல்வர்) மட்டுமே பெறுகின்ருர்கள். ஏனெனில், செல்வர்களுக்குத்தான் ஆள் ஒன்றுக்கு அதிகம் மூலதனம் இருக்கிறது. அவர்கள் முதலீட்டின் மதிப்பு உயரக்கூடும். கால்டர் கூறுவது போன்று, 'அறத்தின் அடிப்படையில் மூலதன ஆதாயங்களுக்கு வருமான வரியிலிருந்து விலக்கு அளிப்பது சரியன்று; ஏனெனில், இதனுல் வரி செலுத்துவோர்களில் சிலருக்கு மட்டும் சலுகை அளிக்கப் படுகின்றது.' (ஆ) மக்கள்தொகையும், மூலதனமும் வளர வளர நகரத்திலுள்ள மனைக்கட்டுகளின் மதிப்பும் ஏறுகிறது. இம் மனைக்கட்டுகளின் விலை உயர்வதற்கு இவற்றின் சொந்தக் காரர்கள் செய்தது என்ன? ஒன்றுமில்லை. மேலும், இவ் வரியை விதிப்பதால் மனைக்கட்டுகளின் கிடைப்புக் குறையப் போவதும் இல்லை. (இ) வாணிபச் சகடத்திற்கு எதிராகவும் மூலதன ஆதாயவரிகளைப் பயன்படுத்தலாம். மிதப்புக் காலத்தில் மூலதன மதிப்புகள் அதிகரிப்பதால், இவ் வரியிலிருந்து அரசுக்கும் நல்ல வருவாய் கிடைக்கின்றது. அந்த அளவுக்கு மிதப்புப் படிநிலைகளை இவ் வரி கட்டுப்படுத்தும். இக் காலத்தில் நடப்பு வட்டி வீதம் உயரும். இதனுல் கடன் பத்திரங்களின் அங்காடி மதிப்புக் குறையும். இவ்வாறு மூலதன இழப்புகள் ஏற்படும். இதனுலும் மிதப்புப் படிநிலை கட்டுக்குள் வரும். (இ) பலர் வரி கொடாது தப்பிப்பதற்குக் காரணம், மூலதன ஆதாயங்களை வருமான வரி விதிப்பிலிருந்து விலக்கியதே ஆகும்.

## எதிர்வாதங்கள்

(அ) மூலதன ஆதாயங்கள் தோற்ற அளவிலேயே இருக்க லாம். இங்ஙனம் இருந்தால்கூட இவ் வரியை விதிக்கலாம். இதற்குக் காரணங்கள் வருமாறு: (1) கடன் பத்திரங்களை வைத் திருப்பவர்களைக் காட்டிலும் சொத்து வைத்திருப்பவர்கள் பண வீக்கக் காலத்தில் நன்ருக இருக்கிருர்கள். (உ) எந்த முதலீடு களின் மதிப்பு அதிகரிக்கின்றதோ, அவற்றை வைத்திருப்பவர்கள் தான் பணவீக்கத்தினுல் மிகக் குறைந்த துன்பம் அடைகிருர்கள்.

(3) 'பணவீக்கத்தினுல் விளையும் தீமைகள் பெருமளவில் இருப்ப தால், பணவீக்கத்தினுல் கிடைக்கும் மூலதன ஆதாயங்களின்மீது வரி விதிப்பதனுல் அநீதி வளராது.' மேலும், விலைக்குறியீட்டு எண்ணின்மூலம் மூலதனத்தில் ஏற்படும் தோற்ற ஆதாயங்களைத் திருத்திக் கொள்ளலாம். 'மூலதன ஆதாயம் மட்டுமின்றி எல்லா வகை சேமிப்புமே (பல்வேறுபட்ட அளவில்) தோற்ற அளவே தான். ஆகவே, நுகர்வு அல்லது நிகர மதிப்பை விட்டு விட்டு வருமானத்தை வரிக்கு அடித்தளமாகக் கொள்வதை வேண்டு மானுல் நாம் எதிர்க்கலாம். ஆனுல், மூலதன இலாபங்களை வருமானத்தில் சேர்க்கக் கூடாது என்ற வாதத்தைச் சரியானது என ஏற்றுக் கொள்ள முடியாது' எனக் கால்டர் கூறுகிருர். (ஆ) மூலதன ஆதாயம் எப்போதாயினும் ஒரோவழி ஏற்படுவ தால் அதைத் தொடர்ந்து கிடைக்கும் வருமானத்திற்குச் சமமாக எண்ணக் கூடாது என்பது ஒரு வாதம். வேண்டுமானுல் அவற்றின் மீது வரி வீதங்கள் சிறிது குறைவாக இருக்க வேண்டும் என்று வாதிக்கலாமே ஒழிய, அவற்றை வருமான வரியினின்றும் முற்றும் நீக்குதல் வேண்டும் என்ற வாதம் பொருந்தாது. அங்ஙனமானுல் வாணிப இலாபங்களையும் வருமான வரியிலிருந்து நீக்குதல் வேண்டும். ஏனெனில், இலாபத்தின் பெரும்பகுதியும் ஒரேபடி யாகவும், தொடர்ச்சியாகவும் கிடைப்பதில்லை. 'வருமானத்தைத் தளமாகக் கொண்டு வரியும், வரி வீதமும் இருக்குமளவும், கைக்குக் கிடைத்த அனைத்து ஆதாயங்களையும் சமமாக நடத்து வதுதான், நடுவுநிலைமையிலிருந்து வருமான கருத்துப்படிமம் ஆகும்' என்று கால்டர் கருத்துத் தெரிவிக்கிருர். (இ) ஆபத்து அதிகமுள்ள தொழில் முனைவுகளில் முதலீடு செய்யப் பலரும் முன்வரமட்டார்கள். இதனுல் தேசிய வருமானம் பாதிக்கப்படும். இவ் வாதத்தில் ஓரளவு உண்மையிருக்கிறது. (ஈ) மூலதன ஆதாய வரியை விதிப்பதால் பங்குகளும், கடன் பத்திரங்களும் வாங்குவது குறையும். இவ் வாதத்தின் உட்கிடக்கையாவது மூலதன ஆதாய வரியை விதிக்கக்கூடாது என்பதும், அங்ஙனம் விதித்தாலும் வரி வீதம் குறைவாக இருக்கவேண்டும் என்பதும் ஆகும். (உ) மூலதன ஆதாயங்களின்மீது வரி விதிப்பதால் முதலீடுகள் முடங்கிப் போகின்றன. அதாவது அவற்றை விற்க முன் வருவதில்லை. விற்ருல்தான் ஆதாயம் கிடைக்கும். ஆதாயம் கிடைத்தால்தான் வரி விதிக்கலாம். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இறக்கும்வரை ஒருவர் மூலதன ஆதாயத்தை வைத்திருந்தால் அவருக்கு வரி கிடையாது எனச் சட்டம் கூறுகிறது. இதனுல் இருக்கின்ற முதலீடுகளை விற்கச் சிலர், குறிப்பாக முதியோர் முன்வருவதில்லை. இதற்குப் பூட்டிவைத்தப் பிரச்சினை (locked-in problem) என்று பெயர். இவ் விரண்டு வாதங்களும் பொருந்தாது.

ஏனெனில், மூலதன ஆதாயம் கைக்கு வரும்வரை காத்திருக்காமல், தொகை ஏற்றம் (aecrual) ஏற்பட்ட உடனேயே வரி விதிப்பதாலும், வரி வீதங்களைக் குறைப்பதாலும் இப் பிரச்சினைகளைச் சமாளிக்கலாம். (ஊ) இறுதியாக, சிலர் மூலதன ஆதாயங்களின்மீது வரி விதிப்பதால், வரியைத் தவிர்ப்பது அதிகமாகும் என வாதிடுகின்றனர்.

இவ் வரியின் முக்கியப் பிரச்சினை இதைச் சரியாக அமல் செய்வதே. நிருவாகச் சங்கடத்தை முன்னிட்டே சில நாடுகள் இவ் வரியை விதிக்கவில்லை, பங்கு அங்காடிகளில் விலைக்கு வராத பங்குகளின் மதிப்பையும், உடனடியாக அங்காடி மதிப்பு இன்னதென்று கூற முடியாத சில ஆஸ்திகளின் மதிப்பையும் கண்டு பிடிக்க முடியாது வரி செலுத்துவோர்களிடமிருந்து மூலதன ஆதாயங்களைப் பற்றிய தகவல்களைச் சேகரிப்பதும், அவை சரிதானா என்று ஒத்திட்டு பார்ப்பதும் கடினம். அறத்தின் அடிப்படையில் இவ் வரியை விதிக்கத்தான் வேண்டும் என்ற முடிவுக்கு நாம் வருகின்றோம்.

### வளர்ச்சி குன்றிய நாட்டில் மூலதன ஆதாய வரி

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் வரி விதிப்பில் மூலதன ஆதாயங்களுக்கு ஓரளவு சலுகை தரப்படுகின்றது. பிரிட்டனில் இவ் வரியை இன்னும் விதிக்கவில்லை. அங்ஙனமிருக்க, வளர்ச்சி குன்றிய நாட்டில் மூலதன ஆதாய வரியின் பங்கென்ன? இவ் வரியை விதிக்க வேண்டியதில்லை என்று கூறலாம். இதை அமல் நடத்துவதிலும் சங்கடம் இருக்கிறது. இவ் வரி பொருந்தாது என்பதற்குக் காரணங்கள் : (அ) இவ் வரியிலிருந்து கிடைக்கும் வருமானம் ஒப்புமையில் குறைவாக இருக்கும். (ஆ) இவ் வரியை விதிப்பதால் தனியார் முதலீடு குறையும். இதனால் தேசிய வருமானமும் பாதிக்கப்படும். (இ) கடன் பத்திரங்களும், பங்குகளும் மூலதன அங்காடியில் தங்கு தடையின்றிப் புரள்வது பாதிக்கப்படும். இதனால் தொழிற்றுறையின் வளர்ச்சி தடைப்படும். இவ் வாதங்களில் ஓரளவு உண்மையிருப்பினும் இவை மட்டுமே மூலதன ஆதாய வரியை விதிக்காமல் இருப்பதற்குப் போதியவை அன்று. முதல் சில ஆண்டுகளில்தான் வரியிலிருந்து கிடைக்கும் வருமானம் குறைவாக இருக்கும். இதற்குக் காரணங்கள் வருமாறு: 1. சொத்தைச் சரியானபடி மதிப்பீடு செய்து வரி விதிப்பதற்கு அதிகாரிகளுக்கு ஓரளவு பயிற்சி ஏற்பட வேண்டும். 2. பொருளாதார வளர்ச்சியின்மையால் முதல் சில ஆண்டுகளில் இவ் வரியைச் செலுத்துபவர்களின் எண்ணிக்கை அதிகம் இருக்க முடியாது. காலப் போக்கில் தொழில் வளர்ச்சி ஏற்படும்

பொழுது மூலதன ஆதாயங்கள் பெருகும். பங்குப் பரிவர்த்தனையில் ஊக வாணிபத்தினால் மதிப்பு ஏறுவதனாலும், நகரங்களில் மனைக் கட்டுகளின் மதிப்பு ஏறுவதனாலும் அதிக ஆதாயம் கிடைக்கும். ஆகவே, குறுங்காலத்தில் சொற்ப வருவாயே கிடைக்கும் எண்றெண்ணி இவ் வரியை விதிக்காமல் இருக்கக் கூடாது. ஆரம்ப காலத்தில் முதலீடே குறைவாக இருக்குமாதலால் அது பாதிக்கப்படும் என்று கூறுவதும் சரியன்று.

இதிலிருந்து கிடைக்கும் வருவாயைக் கருத்தில் கொள்ளாமல் அறத்தின் அடிப்படையில் இவ் வரியை விதிக்கலாம். இவ்வா தாயம் சிலரின் கையிலேயே குவிந்திருப்பதாலும், அவர்களுக்கு மேலும் பொருளீட்ட வாய்ப்பிருப்பதாலும் மூலதன ஆதாய வரியை விதிக்கலாம். கால்டரின் மதிப்பீட்டின்படி, வருவாயைப் பொறுத்த வரைகூட, இவ் வரியிலிருந்து இந்திய அரசுக்கு ஆண்டொன்றுக்கு உரூபா 25-ல் இருந்து 40 கோடிவரை கிடைக்கலாம். நிருவாகச் சங்கடத்தை அகற்றினால் வளர்ச்சி குன்றிய நாடுகளிலும் இவ் வரியை விதிக்கலாம். இதற்குத் தனியாள் வரியின் (personal taxation) கீழ் வருமானவரி, மூலதன ஆதாய வரி ஆண்டைய செல்வ வரி, செல்வ வரி, கொடை வரி ஆகிய வரிகளை ஒன்று சேர்த்தல் வேண்டும்.

### நிருவாகச் சிக்கல்கள்

எப்பொழுது இவ் வரியை விதிக்கவேண்டும் என்பதுதான் முக்கியமான பிரச்சினையாகும். (அ) நுகர்வும், நிகர செல்வத்தின் அதிகரிப்பும் சேர்ந்ததுதான் ஒருவருடைய வருமானம் என்று விளக்கம் தந்தால், மூலதன ஆதாயவரத்து (accrual) ஏற்படும் பொழுது வரி விதிக்கவேண்டும். சொத்துகளின் மதிப்பு ஏறும் பொழுதெல்லாம், அல்லது ஒவ்வொரு ஆண்டும் மூலதன ஆதாயத்தின்மீது வரி விதிக்கலாம். இங்ஙனம் ஒவ்வோர் ஆண்டும் வரி விதித்தால், வரியைத் தவிர்ப்பதையும் தடுக்க முடியும். ஆனால், இம் முறையில் ஒரு நிருவாகச் சங்கடம் இருக்கிறது. ஒவ்வொரு ஆண்டும் சொத்துகளை மதிப்பிடுவது மிகக் கடினம். (ஆ) ஆதாயங்கள் கைக்குக் கிடைத்தபின் அதை அடிப்படையாக உபயோகிப்பது ஒரு முறை. இம் முறைதான். எல்லா நாடுகளிலும் அமலில் இருக்கிறது. மூலதன ஆதாயங்கள் கைக்குக் கிடைத்த பின்பே, அதாவது, அவற்றை விற்ற பின்பே, வரி விதிக்கப்படுகிறது. இம் முறையில் மூன்று சங்கடங்கள் இருக்கின்றன. (1) மூலதன ஆதாயங்கள் பல ஆண்டுகள் கிடைத்தாலும், அவை கைக்குக் கிடைப்பது ஒரே ஒரு ஆண்டில் தான். ஆகவே, அவற்றின்மீது வளர்வீதத்தில் வரி விதித்தால்

மிகையான வரிப்பளு ஏற்படும். (2) வரி செலுத்துவோர் தங்களின் நிதி சௌகரியத்திற்கு ஏற்றாற் போல, கைக்குக் ஆதாயம் கிடைக்கும் காலத்தை மாற்றிக் கொள்ளமுடியும். (3) இவ் வரி இருப்பதால் சொத்தை விற்பது தடைப்படுகிறது. இச் சங்கடங்களைச் சமாளிக்க வரி செலுத்துவோர் 5 அல்லது 10 ஆண்டுகளில் கிடைக்கும் ஆதாயங்களின் சராசரியின் பேரில் வரி செலுத்தலாம் என்று கூறலாம். மூலதன ஆதாயங்களின்மீது குறைவான வரி வீதத்தை விதிக்கலாம். இதனால், கம்பெனிகள் தங்கள் இலாபத்தை இலாப ஈவு என்று அறிவித்துப் பங்குதாரர் களுக்குப் பகிர்வு செய்யாமல் வைத்திருக்கலாம். பின்பு பங்குகளை விற்று அவற்றை மூலதன ஆதாயமாகக் காட்டி குறைந்த வரியைச் செலுத்தலாம்.

இவ் வரியிலுள்ள சில குறைபாடுகளைப் போக்கப் பேராசிரியர் ஃபிரஸ்டு சில யோசனைகளைக் கூறுகிறார். (அ) இறக்கும் வரையில் வைத்திருந்தாலும் அல்லது பிறருக்கு நன்கொடையாக அளித்தாலும், இம் மூலதன ஆதாயங்களுக்கு வரியிலிருந்து விலக்கு அளிக்கக்கூடாது. (ஆ) எவ்வளவு காலத்திற்கு வைத் திருக்கப்பட்டது என்ற அடிப்படையில் மூலதன ஆதாயங் களிடையே வேறுபாடு காண்பிக்கக்கூடாது. (இ) மூலதன இழப்புகளை மூலதன ஆதாயங்களுக்கு எதிராக இப்பொழுதோ அல்லது எதிர்காலத்திலோ சரிக்கட்டவேண்டும். (ஈ) மேல் வரி (surtax) செலுத்துபவர்கள் மட்டுமே மூலதன ஆதாய வரிக்கு உட்படவேண்டும். அப்பொழுது இத் தீர்வைகளை முழுமை யாகவும், தீவிரமாகவும் ஆயமுடியும்.

### மூலதன வரியும், மூலதன இறையும் (Capital Tax and Capital Levy)

மூலதன ஆதாய வரி, அதிகரித்த சொத்தின் மதிப்பின்மீது விதிக்கப்படுகிறது. மூலதன வரி, மூலதன மதிப்பின்மீது விதிக்கப் படுகிறது. இவ் வரியை விதிக்கும் முறைகள் இரண்டாகும். அவை யாவன: 1. மூலதனத்திலிருந்து ஆண்டுதோறும் கிடைக்கும் ஊதியத்தின்மீது வரி விதிக்கலாம். ஒருவரிடம் ரூபா 10,000 மதிப்புள்ள கடன் பத்திரங்கள் இருப்பதாகவும், அவற்றின் வட்டி வீதம் 5% என்றும் கொண்டால் ஆண்டுதோறும் அவற்றிலிருந்து ரூபா 500 கிடைக்கும். இதை வரி விதிப்பதற்கு அடிப்படை யாகக் கொள்ளலாம். 2. மூலதன வரியை மூலதன சொத்தின் ஆண்டைய (annual) மதிப்பின்மீதும் விதிக்கலாம். இவ் வரி வீதாசாரமாகவும் இருக்கலாம்; வளர்வீதமாகவும் இருக்கலாம். (இ) மூலதன இறை என்பது எல்லாவகைச் சொத்துகளின்

மீதோ அல்லது சிலவகைச் சொத்துகளின் மீதோ ஒரே ஒரு முறை விதிக்கப்படுகிறது. இவ் வரியை வேண்டுமானால் பல தவணை களில் கட்டலாம். சிலவகைச் சொத்துகளின்மீது மட்டும் இவ் வரியை விதித்தால், இதுவும் வாரிசு வரியும் (inheritance tax) ஏறக்குறைய ஒன்றுதான்.

மூலதன வரிக்கும், மூலதன இறைக்கும் அடிப்படை சமுதாய நீதிதான் என்றாலும், இரண்டும் வேறுபட்டவை. மூலதன வரியின் நோக்கம் செல்வம், பொருளாதார ஆற்றல் (economic power) இவற்றின் செறிவு அல்லது குவிவைத் தடுத்தலாகும். மூலதன இறையை விதித்தாலும் இதே விளைவுதான் ஏற்படும் என்றாலும், அது எப்போதோ ஒரு முறை விதிக்கப்படுவதால் அதன் விளைவு தொடர்ந்து இருக்காது. பொதுவாக, மூலதன வரி தொடர்ந்து விதிக்கப்படுகிறது. மூலதன இறை தொடர்ந்து விதிக்கப்படுவதில்லை. மூவகை வரிகளும் சேமிப்புகளைப் பாதிக்கும் என்பது ஒரு எதிர்வாதமாகும். ஆனால், இதை ஏற்றுக் கொள்வதற்கில்லை. மூலதன வரியைப் பற்றியும் மூலதன இறையைப் பற்றியும் பின்வரும் அதிகாரங்களில் காண்போம்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. A. R. Prest, 'Public Finance in Theory and Practice', pp. 287—301.
2. Taylor, 'The Economics of Public Finance', Pages 394—407.
3. John F. Due, 'Government Finance', Chapter 11.
4. N. Kaldor, 'Indian Tax Reform', Chapter 3.
5. I. S. Gulati, 'Capital Taxation in a Developing Economy', Chapters 1—7.
6. L. H. Seltze, 'The Nature and Tax Treatment of Capital Gains and Losses', Chapters 4 and 6—9.
7. B. R. Misra, 'Indian Federal Finance', pp. 311—316.

# 23. கார்ப்பொரேஷன் வருமான வரி
## (Corporation Income Taxation)

இதுவரை தனியாள் வருமான வரியைப்பற்றி ஆராய்ந்தோம். ஆனால், முன்னேறிய நாடுகளில் பெரும்பான்மையான வாணிபமும், தொழிலும் கம்பெனிகள்மூலம் நடைபெறுகின்றன. இந்தியாவில் கூட கூட்டுப் பங்கு நிறுவனத்தின் முக்கியத்துவம் அதிகரித்துக் கொண்டு வருகிறது. கூட்டுப்பங்கு நிறுவனத்திற்குத்தான் கார்ப்பொரேஷன் என்றொரு பெயர். சட்டப்படி அது, அதன் பங்கு தார்களிடமிருந்தும் வேறுபட்ட ஸ்தாபனமாகும். கார்ப்பொரேஷன் தான் முதலில் இலாபத்தைப் பெறுகிறது. இவ் விலாபத்தை அப்படியே இலாப ஈவாகப் பங்குதார்களுக்குக் கொடுக்கலாம்; அல்லது இலாபத்தில் ஒரு பகுதியை மட்டும் இலாப ஈவாகக் கொடுக்கலாம். இலாபத்தை இலாப ஈவாகக் கொடுக்காமலும் வைத்திருக்கலாம்.

கார்ப்பொரேஷன் வருமானங்களின்மீது தனியே ஒரு வரி (தனியாள் வருமான வரியைத் தவிர்த்து) விதிக்க வேண்டுமா என்பதுபற்றி வாதப்பிரதிவாதங்கள் ஒரு காலத்தில் நடந்து கொண்டிருந்தன.

(அ) சிலர் ஆதாயக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு இவ் வரியை ஆதரிக்கின்றார்கள். சட்டத்தின் படைப்பே கார்ப்பொரேஷன். அதன் உரிமைகள், அதிகாரங்கள், ஆதாயங்கள் யாவும் அரசு தந்ததே. அதன் பங்குதாரர்கள், கம்பெனியின் கடன்களுக்கு, ஒரு வரையறைக்கு உட்பட்டுத்தான் பொறுப்பு ஆவார்கள். கம்பெனி நிரந்தரமாக வாழுகிறது (மூடினால் ஒழிய). பங்குகளை ஒருவரிடமிருந்து ஒருவர் மாற்றிக் கொள்ளலாம். பல துறைகளிலிருந்து வேண்டிய நிதிகளைத் திரட்டிக் கொள்ளலாம். இச் சலுகைகளுக்காகவும், ஆதாயங்களுக்காகவும் கார்ப்பொரேஷன்கள்மீது வரி விதிப்பது நியாயமே கூட்டுப்பங்கு கம்பெனிகளை நிறுவுவது சுலபமாக இருப்பதாலும், கம்பெனிகள்

பெறும் ஆதாயங்களை அளவிட முடியாததாலும், பொதுமக்களின் நலன்களைக் காப்பதற்காகவே இவ் வுரிமைகளை அரசு அளிப்பதாலும். இவ் வாதங்கள் வலுவற்றவை ஆகும்.

(ஆ) சமுதாயச் செலவுகளை ஒதுக்கிடுவது (allocation of social costs). கல்வி, சுகாதாரம் இவற்றுக்காகவும், சட்டத்தையும் அமைதியையும் நிலைநாட்டுவதற்காகவும், சொத்தைப் பாதுகாப்பதற்காவும், ஒப்பந்தங்களை அமல் செய்வதற்காகவும், ஏமாற்றுபவர்கள்மீது வழக்குத் தொடுப்பதற் காகவும், அரசுக்கு அதிகச் செலவாகிறது. இவ் வலுவல்களை அரசு ஆற்றுவதால்தான் தனியார் தங்கள் தொழில்களை நடத்த முடிகிறது. ஆலைகளின் எண்ணிக்கை பெருகப் பெருக அவை கக்கும் புகையும், அவற்றால் ஏற்படும் விபத்துகளும் அதிக மாகின்றன. மக்கள் நெரிசலால் நகரங்களில் சேரிகளும் தோன்று கின்றன. இச் செலவுகளைச் சமாளிக்க அரசு கம்பெனிகளின்மீது வரி விதிப்பது நியாயமே. இவ் வாதத்தை ஏற்றுக் கொள்ள முடியாது. ஏனெனில், எல்லாவகை வாணிப நிறுவனங்களின் மீதும் வரி விதித்தால்தான் இது பொருந்தும். கூட்டுப் பங்கு நிறுவனங்கள்மீது மட்டும் வரி விதித்தல் நியாயமாகாது.

(இ) ஆற்றலுக் கேற்றபடி செலுத்துதல் என்ற கோட்பாட்டை கார்ப்பொரேஷன் வருமான வரிக்கு ஆதரவாகக் கொள்ளமுடியாது. ஏனெனில், பல நாடுகளிலும் பணக்காரப் பங்குதாரர்கள் ஒப்புமையில் குறைவாகவும், ஏனைய பங்குதாரர்கள் அதிக மாகவும் வரி செலுத்துகிறார்கள்.

(ஈ) இவ் வரியிலிருந்து நிறைய வருவாய் கிடைக்கிறது. இதை அமல் நடத்துவதும் சுளுவாக உள்ளது.

**எதிர்வாதங்கள்**

(அ) தனியாள் வருமான வரியுடன், கார்ப்பொரேஷன் வருமான வரியையும் விதிப்பது இரட்டை வரி விதிப்பாகும் (double taxation). கம்பெனியின் இலாபத்தின்மீது கார்ப்பொ ரேஷன் வருமான வரியும், பங்குதாரர்கள் பெறும் இலாப ஈவின்மீது தனியாள் வருமான வரியும் விதிக்கப்படுகிறது. இவ் வரி இரட்டை வரி விதிப்பு ஆகாது. ஏனெனில் சட்டப்படி கார்ப்பொரேஷன் அதன் பங்குதாரர்களிடமிருந்தும் வேறுபட்டது. மேலும், ஒரே வருமானத்தின் மீது இரண்டு முறை வரி விதப்பதாலேயே அது இரட்டை வரி விதிப்பு ஆகாது. உதாரணமாக, ஒருவர் வருமானத்தைப் பெறும்பொழுது வருமானவரியையும், அதைச்

செலவழிக்கும் பொழுது ஆயத் தீர்வைகள், விற்பனை வரி முதலான பல வரிகளையும் செலுத்துகிறார். இதேபோன்று ஒருவர் தன்னுடைய சொத்தின் மதிப்பின்மீது ஒரு வரியையும், அதிலிருந்து கிடைக்கும் வருவாயின்மீது ஒரு வருமான வரியையும் செலுத்தலாம், இதெல்லாம் இரட்டை வரி விதிப்பு ஆகா.

(ஆ) கார்ப்பொரேஷன் வருமான வரியை, கார்ப்பொரேஷனின் பண்டங்களை வாங்குவோர்மீது முற்பட்டுப் புரட்டலாம்.

(இ) இவ் வரியினால் ஆபத்து அதிகம் உள்ள நிறுவனங்களில் முதலீடு செய்யப் பலர் முன்வர மாட்டார்கள். இது உண்மையானால், இக் குற்றச்சாட்டு வருமான வரிக்கும் பொருந்தும்.

(ஈ) இவ் வரி முழுதும் சாதாரணப் பங்குதாரர்களின் மீதே விழும். இது உண்மையே. முன்னுரிமைப் பங்குதாரர்கள் (preference share-holders) இவ் வரியிலிருந்து தப்பித்துக் கொள்வார்கள். இலாபங்களை முழுதும் பகிர்வு செய்தால், சாதாரணப் பங்குதாரர்கள் அதிகமான இலாப ஈவுகளைப் பெறுவார்கள். ஆகவே, அவர்கள் பேரில் இவ் வரியின் முழுப்பளுவும் இருப்பது நியாயமே.

(உ) இவ் வரியின் விளைவாகப் பல கம்பெனிகளும் பங்குகளை விற்று மூலதனத்தைத் திரட்டுவதற்குப் பதிலாகக் கடன் பத்திரங்களை விற்று மூலதனத்தைத் திரட்டலாம். இது உண்மையே. ஆனால், கடன் பத்திரங்களை விற்று அதிகப்படியான மூலதனத்தைத் திரட்டுவதில் தவறு ஒன்றுமில்லை.

(ஊ) இறுதியாக, கார்ப்பொரேஷன் வருமான வரி நியாயமானதாக இருக்க முடியாது. ஏனெனில், ஏழை பங்குதாரர்களும் சரி, பணக்காரப் பங்குதாரர்களும் சரி. ஏற்கெனவேயே வளர்வீத தனியாள் வருமான வரியைச் செலுத்துகின்றார்கள். இவ் வாதங்களில் எல்லாம் உண்மையிருப்பினும், கார்ப்பொரேஷன் வரி கூடாது என்று சொல்வதற்கு இவையே போதிய காரணங்கள் ஆகா. இவ் வாதங்களில் காணப்படும் சில குற்றச்சாட்டுகளைக் களைவதற்காகத்தான், எல்லா நாடுகளிலும் கார்ப்பொரேஷன் வருமான வரியைத் தனியாள் வருமான வரியுடன் இணைப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்கிறார்கள்.

### கார்ப்பொரேஷன் வருமான வரியின் பொருளாதார விளைவுகள்

(அ) கார்ப்பொரேஷன் வருமான வரிகளை விதிப்பதால், கம்பெனிகளின் விஸ்தரிப்பு பாதிக்கப்படும். இறுதிநிலை திட்டப் பணிகளைக் (marginal projects) கம்பெனிகள் மேற்கொள்ளா-

ஆபத்து அதிகம் உள்ள புதிய முனைவுகளையும் மேற்கொள்ள மாட்டார்கள். ஆயினும், வரியில் தள்ளுபடி சலுகைகள் அளிப் பதன்மூலம், கம்பெனிகளைப் புதிய முதலீடுகளைச் செய்யும்படி ஊக்கு விக்கலாம். 'வேறு எந்தப் பிரதான வரியைக் காட்டிலும், கார்ப்ப ரேஷன் வருமான வரி, அதிலிருந்து கிடைக்கும் நிகர வருவாய்க்கும் அதிகமாகவே தனியார் முதலீட்டைக் கட்டுப்படுத்து கின்றது' என்று ரிச்சர்டு கூட் (Richard Goode) முடிவு கட்டுகிறார். விரைவாக அங்காடி விரிவடைவதனால் முதலீடு அதிகரிக்கலாம். இவ்வாறான விளைவை, முன்னேறிய நாடுகளைக் காட்டிலும், வளர்ச்சி குன்றிய நாடுகளில் அதிகம் எதிர்பார்க்கலாம்.

(ஆ) புலன்வழி ஆராய்ச்சிகளிலிருந்து, கார்ப்பொரேஷன் வருமான வரியினால் கம்பெனிகளின் சேமிப்புகளும், தனியார் களின் சேமிப்புகளும் குறைவதாகத் தெரிகிறது. கார்ப்பரேஷன் வருமான வரி, தனியாள் வருமான வரி இவற்றைக் காட்டிலும் ஆயத் தீர்வைகளினால்தான் நுகர்வு அதிகம் பாதிக்கப்படுவதாக ரிச்சர்டு கூட் கூறுகிறார்.

(இ) கார்ப்பொரேஷன் வருமான வரியினால் தேசிய வருமானமும், வேலை வாய்ப்பும் எவ்வாறு பாதிக்கப்படுகின்ற தென்பதைக் காண்போம். புதிய கம்பெனிகள் இவ் வரியால் மிகவும் கஷ்டப்படும். அவற்றின் வளர்ச்சி தடைப்படும். இதனால் பழைய கம்பெனிகளுக்கு முற்றுரிமை அல்லது அரைகுறை முற்றுரிமை (semi-monopoly) நன்மைகள் கிட்டும். இதிலிருந்து கார்ப்பொரேஷன் வருமான வரியினால் தேசிய வருமானமும், வேலைவாய்ப்பும் குறைவதனால், நாட்டின் பொருளாதார வளர்ச்சியும் பாதிக்கப்படுகிறது. ஆனால், கார்ப்பொரேஷன் வருமான வரி மட்டுமல்லாது அனைத்து வரிகளுமே நுகர்வையும். சேமிப்பையும் பாதிக்கின்றன. வரிகள் விதிப்பதன் முக்கியமான நோக்கம் தனியார் செலவுகளைக் குறைத்து அரசினுக்கு வேண்டிய நிதியைத் திரட்டுவதேயாகும். மேலும், நாட்டில் ஏற்கெனவே பணவீக்கம் ஏற்பட்டிருந்தால், அதைக் கட்டுப்படுத்துவதற்குக் கார்ப்பொரேஷன் வருமான வரியும் துணை செய்யும். ஆயினும், வாணிப மந்த காலத்தில் அல்லது பணவாட்ட காலத்தில் வேலையின்மை பெருகுவதனால், கார்ப்பொரேஷன் வருமான வரியைக் குறை கூறலாம். ஆனால், இதே வாதத்தை எல்லா வரிகளுக்கும் எதிராகக் கூறலாம். மேலும், வாணிப மந்தகாலத்தில் வரி வீதங்களைக் குறைத்துக் கொள்ளலாம்.

(ஈ) கார்ப்பொரேஷன் வருமான வரியினால் நிறுவனங்கள் விரிவடைவது தடைப்படும். பொதுவாகக் கம்பெனிகள் தங்கள்

நிறுவனங்களை விரிவடையச் செய்ய தங்கள் சொந்த நிதிகளையே நம்பியிருக்கின்றன. ஆனால், வரி கடுமையாக இருந்தால் கம்பெனிகளின் சொந்த நிதி குறையும். புதிதாகப் பங்குகளை விற்றுப் பணம் திரட்டலாம். ஆனால், இம் முறையால் பங்குதாரர் களின் எண்ணிக்கை அதிகமாவதால், ஏற்கெனவே உள்ள பங்கு தாரர்களின் பிடிப்புத் தளரும்; அவர்களின் இலாபமும் குறையும். கடன் பத்திரங்களை விற்று நிதி திரட்டலாம் என்றாலோ, ஆண்டு தோறும் வட்டி செலுத்த வேண்டியிருக்கும். இக் கடனை அடைப் பதும், மிகப் பளுவாக இருக்கலாம். சில சமயங்களில் கம்பெனியே ஒட்டாண்டி (திவாலா) யாகக் கூடிய நிலைமையும் நேரிடலாம். இவ் வாதங்களில் உண்மை இருந்தாலும், இத் தீய விளைவுகள் எல்லாம் கார்ப்பொரேஷன் வருமான வரியை விதிப்பதால் மட்டும் ஏற்படுவன அல்ல; வாணிப, தொழில் நிறுவனங்களின்மீது எந்த விதமான வரிகளை விதித்தாலும் இவ் விளைவுகள் ஏற்படத்தான் செய்யும். இவ் வரி வளர்வீதமாக இருப்பதும், வரியின் பெரும் பகுதியும் வரிப்பளுவைத் தாங்கக் கூடிய செல்வர்கள்மீது விழுவதும் இதிலுள்ள நிறைகளாகும். ரிச்சர்டு கூட் கூறுவது போன்று, 'கார்ப்பொரேஷன் வருமான வரி இல்லாவிட்டால் வரி அமைப்பு எத்துணை வளர்வீதமாக இருக்குமோ, அதைவிட அதிக வளர்வீதமாகவே இவ் வரியை விதிப்பதனால் இருக்கும்.

## வரிதாங்கு (வரிக்கு இலக்காகும்) இலாபங்களை அளவிடுதல் (Measurement of Taxable Profits)

எங்ஙனம் கம்பெனிகளின் இலாபங்களைக் கணக்கிட வேண்டும் என்று பொருளியல் புலவர்களும், வழக்கறிஞர்களும், கணக்கர் களும் (accountants) கருத்துகளைத் தெரிவித்திருக்கிறார்கள். ஆயினும், இதற்கு இறுதித் தீர்வைக் கண்டுவிட்டதாகக் கூற முடியாது. கம்பெனிகளின் இலாபங்களை அளவிடுவதில் இரண்டு பிரச்சினைகள் இருக்கின்றன. அவை யாவன: சரக்குகளின் மதிப்பீடு (inventory valuation), தேய்மான வீதம். கார்ப்பொ ரேஷனின் நிகர வருமானத்தின்மீது (நிகர இலாபம்) வரி விதிப்பதால், விற்பனையாகாமல் கைவசம் தேங்கி நிற்கும் சரக்கு களின் மதிப்பையும், கட்டடங்கள், எந்திரங்கள் இவற்றின் தேய்மான மதிப்பையும், மொத்த வருமானத்திலிருந்து கழிக்க வேண்டும்.

## சரக்கு மதிப்பீடு (Inventory Valuation)

ஆண்டுத் தொடக்கத்தின் பொழுதும், ஆண்டு முடிந்த பொழுதும் இருந்த சரக்குகள் அல்லது இருப்புகளின் மதிப்பையும்,

பண்டங்களை விற்ற விலையையும் கண்டறிந்தால்தான் நிகர வருமானத்தைத் தெரிந்து கொள்ளமுடியும். கொள்முதல் செய்த பண்டங்களின் விலைகள் மாருது இருக்குமாளுல் ஒரு சிக்கலும் இல்லை. ஆனால், விலைகள் மாறினல் சிக்கல் ஏற்படுகிறது. விலைகள் ஏறிக் கொண்டிருக்கும் பொழுது, ஆண்டின் இறுதியில் நிலவிய கொள்முதல் (அடக்க) விலைகளை எடுத்துக் கொண்டால், கம்பெனியின் இலாபம் குறைவாகத் தோற்றம் அளிக்கும். அவ்வாறின்றி ஆண்டின் தொடக்கத்தில் நிலவிய கொள்முதல் விலைகளை எடுத்துக் கொண்டால், கம்பெனியின் இலாபம் கூடுதலாகத் தோற்றம் அளிக்கும்.

சரக்குகளை மதிப்பீடு செய்ய இரு முறைகளைக் கையாளுகிருர்கள். (1) இதன்படி ஆண்டின் தொடக்கத்தில் கொள்முதல் செய்த பண்டங்களின் மதிப்பை, அப்பொழுது நிலவிய விலைகளைக் கொண்டு கணக்கிடுதல் வேண்டும். ஆண்டின் இறுதியில் கைவசம் இருக்கும் இருப்புகளின் மதிப்பை அவற்றை வாங்கிய விலை, அப்பொழுது அங்காடியில் நிலவும் விலை இவற்றில் எது குறைவாக இருக்கின்றதோ அதன்படியும் மதிப்பிடவேண்டும். விலை குறைந்து கொண்டு வந்தால் இம் முறையின்படி மதிப்பீடு செய்யப் பெற்ற கம்பெனியின் வருமானம் குறைவாக இருக்கும். இம் முறையை 'முதலில் வந்து, முதலில் வெளியேறுதல்' ('first in, first out') எனலாம். இதையே 'முவமுவெ' (FIFO) என்று சுருக்கிக் கூறுவர்.

இருப்பை மதிப்பிடுதலில் இன்னெரு முறை வருமாறு: (2) இறுதியாகக் கொள்முதல் செய்த பண்டங்களை முதலில் விற்றதாகக் கொண்டு, கைவசம் இருக்கும் இருப்பை ஆண்டின் தொடக்கத்தில் நிலவிய விலைகளைக் கொண்டு மதிப்பிடுவது ஆகும். இதற்கு 'இறுதியில் வந்து, முதலில் வெளியேறுதல்' ('last in, first out') என்று பெயர். இதை இவமுவெ (LIFO) என்று சுருக்கிக் கூறுவர். எந்த முறையைக் கையாண்டாலும், வரி வீதங்கள் மாருதிருக்குமாளுல் ஒரு குறிப்பிட்ட காலத்தைச் சேர்ந்த மொத்த இலாபங்களும், மொத்த வரிப் பொறுப்புகளும் ஒன்ருகவே இருக்கும். ஆயினும், வரி வீதங்கள் மாறிக்கொண்டும், வளர்வீதமாகவும் இருக்குமாளுல், தெரிந்தெடுக்கும் முறையைப் பொறுத்து, கட்ட வேண்டிய வரித்தொகை மாறும். ஒரே முறையைக் கண்டிப்பாகப் பின்பற்ற வேண்டியதில்லை. தங்கள் விருப்பம் போல் வாணிப நிறுவனங்கள், இருப்பை மதிப்பீடு செய்யும்படி விட்டு விடலாம் என்று ஃபிரஸ்டு எண்ணுகிருர்.

### தேய்மானக் கழிவு (Depreciation Allowance)

ஒவ்வொரு கம்பெனிக்கும் சொந்தமாகக் கட்டடங்கள், எந்திரங்கள், அறைகலன்கள் (furniture) முதலானவை இருக்கின்றன. இவை யாவும் பல ஆண்டுகளுக்குப் பயன்படுகின்றன. இவற்றை வாங்குவதற்கு ஆன செலவை, இவை எவ்வளவு ஆண்டுகளுக்குப் பயன்படுமோ, அவ்வளவு ஆண்டுகளுக்கும் இடையே அதைப் பிரித்து, ஆண்டொன்றுக்கு இவ்வளவு தொகை என்று கூறுதல் தேய்மானக் கழிவு எனப்படும். தேய்மானக் கழிவை மதிப்பிடுவதில் பல சங்கடங்கள் இருக்கின்றன.

(அ) எந்தக் கம்பெனியும் இந்த எந்தரம் இவ்வளவு ஆண்டுகளுக்குப் பயன்படும் என்று உறுதியாகக் கூற முடியாது. கம்பெனியின் கணிப்பு தவருகவும் இருக்கலாம்; சரியாகவும் இருக்கலாம்.

(ஆ) பல்வேறு கம்பெனிகளும் பல்வேறு முறைகளில் தேய்மானக் கழிவை கணிக்கின்றன.

(இ) ஒரு ஆண்டில் எவ்வளவு உருபா, தேய்மானக் கழிவாகக் கொள்ளப்பட்டது என்பது முக்கியம் அன்று. ஏனெனில், முந்திய ஆண்டுகளில் குறைவாகவோ, கூடுதலாகவோ தேய்மானக் கழிவு செய்திருந்தால், அதைப் பிந்திய ஆண்டுகளில் ஈடுசெய்து கொள்ளலாம். இச் சிக்கல்களுக்கெல்லாம் காரணம் வரி விதிப்பதற்கு ஓராண்டை அலகாகக் கொள்வதுதான்.

### பணவீக்கமும் தேய்மானக் கழிவும்

1939ஆம் ஆண்டிலிருந்து விலைகள் ஏறிக்கொண்டே வருகின்றன. இதனுல் ஒரு சிக்கல் ஏற்பட்டிருக்கிறது. தேய்மானக் கழிவை எங்ஙனம் மதிப்பிடுவது என்பதுதான் அந்தச் சிக்கல். எந்திரத்தை வாங்கியபொழுது நிலவிய விலையை எடுத்துக் கொள்வதா அல்லது இப்பொழுது அங்காடியில் நிலவும் விலையை எடுத்துக் கொள்வதா? பிந்தியது ஈடுசெய் செலவு (replacement cost) எனப்படும். தேய்மானக் கழிவைக் கணிப்பதற்கு ஈடுசெய் செலவை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று பலர் கூறுகின்றனர். ஆனுல், இதைப் பலர் எதிர்க்கின்ருர்கள். சாதாரண மக்களுக்கு பணவீக்கத்தினுல் ஏற்பட்ட இழப்பை ஈடு கட்ட வரியில் வழி செய்யாதபோது, கம்பெனிகளுக்கு மட்டும் ஏன் இச் சலுகையை அளிக்க வேண்டும்? மேலும், குறைந்த விலையில் வாங்கிய எந்திரங்களைக் கொண்டு உற்பத்தி செய்த பண்டங்களை

கூடுதல் விலைகளுக்குக் கம்பெனிகள் விற்கின்றன. இதில் கம்பெனி களுக்கு ஆதாயமே தவிர இழப்பு ஒன்றுமில்லை. 'மூலதன எந்திரங்களை சேர்த்து வைக்கப்பெற்ற தேய்மான நிதிகளிலிருந்து தான் ஈடுகட்ட வேண்டும் என்று யாதொரு புனித ஆணையும் (holy write) இல்லை. வேறு எத்தனையோ நிதிகள் இருக்கின்றன. (உ-ம். கடந்த காலத்தில் அல்லது நடப்புக் காலத்தில் பகிர்வு செய்யாது வைத்திருந்த இலாபத் தொகைகள்). இவையெல்லாம் காலியான பின்பே, போதிய தேய்மானக் கழிவு செய்யாமையால் மூலதன எந்திரத்தை ஈடு செய்ய முடியவில்லை' என்ற முடிவுக்கு வரலாம் (பிரஸ்ட்).

**தேய்மானப் பிரச்சினையும் வளர்ச்சி குன்றிய நாடுகளும்**

முதலீட்டைப் பெருக்குவதற்காக வளர்ச்சி குன்றிய நாடுகள் பல முறைகளைக் கையாளுகின்றன. ஐந்து அல்லது பத்தாண்டு களுக்குப் புதிய கம்பெனிகளுக்குக் கார்ப்பொரேஷன் வரியிலிருந்து விலக்களிப்பது ஒரு முறை. இதற்கு வரியிலிருந்து ஓய்வு (tax holiday) என்று பெயர். பிரத்தியேக உதவிக் கொடைகளையும் (Subsidies) அரசு அக் கம்பெனிகளுக்கு அளிக்கலாம். கம்பெனிகள் தேய்மானக் கழிவுகளைத் தாராளமாகச் செய்து கொள்ளும்படியும் அரசு அனுமதிக்கலாம். இத் தேய்மானக் கழிவுகள் ஈடுசெய் செலவின் அடிப்படையில் இருக்கலாம். சிலர் ஈடுசெய் செலவின் அடிப்படையில் தேய்மானக் கழிவைச் செய்வதற்குப் பதிலாக, தேய்மானக் கழிவுடன், அரசு முதலீட்டுப் படிகளைத் (investment allowances) தரலாம் என்று கருத்துத் தெரிவிக்கிறார்கள்.

**வட்டி, நிகர வாடகை**

கம்பெனிகள் தங்களின் மொத்த வருமானத்திலிருந்து, தாங்கள் கடன் பத்திரங்களின் பேரில் தரும் வட்டித் தொகையைக் கழித்துக் கொள்ளலாம். இதேபோன்று இலாப ஈவுகளையும் கழித்துக் கொள்ள அனுமதி தரவேண்டும் என்று சிலர் கோரு கிறார்கள். இங்ஙனம் அனுமதித்தால் கார்ப்பொரேஷன் வருமான வரி பகிர்வு செய்யப்படாத இலாபத்தின் மீதான வரியாகும். இதை அடுத்த பகுதியில் ஆய்வோம். வட்டியை மொத்த இலாபத்தி லிருந்து கழித்துக் கொள்ள அனுமதி அளிக்கக் கூடாது என்று சிலர் கூறுகிறார்கள். இங்ஙனம் செய்வது கொடுமையானது. இதனால் கம்பெனிகளின் வரிப்பளு அதிகமாகும். இதேபோன்று சிலர் கம்பெனி தரும் வாடகை அல்லது வாரத்தையும் மொத்த இலாபத்திலிருந்து கழிக்க வேண்டும் என்று கூறுகிறார்கள். இதை இங்கு விரிவாக ஆய்வது சாத்தியமன்று.

**கார்ப்பொரேஷன் வருமான வரியையும், தனியாள் வருமான வரியையும் இணைத்தல்** (Integration of Corporate and Personal Income Taxes)

எல்லா வருமானங்களையும் ஒன்று சேர்த்து ஒரே வரியை விதிப்பது நல்லது. இதைச் செய்யும் சிறந்த முறையாவது அனைத்துப் பங்குதாரர்களுக்கும் மொத்த இலாபத்திலிருந்து கிடைக்கக்கூடிய பங்குகளின்மீது வரி விதிப்பதாகும். இங்ஙனம் செய்தால் கார்ப்பொரேஷன் வருமான வரியை அகற்றிவிடலாம். இலாப ஈவுகளின்மீது மட்டும் வரி விதிப்பது இன்னொரு முறையாகும். இதனால் கம்பெனிகள் பகிர்வு செய்யாது வைத்திருக்கும் இலாபத்தின்மீது வரிசெலுத்த வேண்டியதில்லை. இதன் விளைவாகக் கம்பெனிகள் தம் சொந்த நிதிகளைக் கொண்டே மேலும் உற்பத்தியை அதிகரிக்கலாம். வேறு சிலர் கார்ப்பொரேஷன் வருமான வரி தொடர்ந்து இருக்கலாம் என்றும், ஆனால், தனியாள் வருமான வரியிலிருந்து இலாப ஈவுகளுக்கு விலக்களிக்க வேண்டும் என்றும் கூறுகிறார்கள். இப்படி இரு வரிகளையும் இணைத்தல் நியாயமானது என்றும், இதனால் நல்ல பொருளாதார விளைவு ஏற்படுமென்றும் கூறுகிறார்கள். இதன் விளைவாக முதலீடு பெருகும்.

**முழு இணைப்பு—கூட்டு வாணிப முறை** (Full Integration-Partnership Approach)

இந்த முறையில் கார்ப்பொரேஷன் வருமான வரி அகற்றப்படும். இலாப ஈவுகள் பங்குதாரர்களின் வருமானமாகக் கருதப்பட்டு வரி விதிக்கப்படும். இப்பொழுது இம் முறையைக் கையாண்டுதான் சம்பளம் வாங்குபவர்களின்மீது விதிக்கப்படும் வருமான வரி சம்பளம் கொடுக்கப்படும்பொழுது பிடித்தம் செய்யப்படுகிறது. இன்னொரு முறை ஒரு சிறை இணைப்பு (partial integration) எனப்படுகிறது. இம் முறையில் இரண்டு வரிகளும் தொடர்ந்து இருக்கும். இவ் விரண்டு வரிகளையும் வசூலிப்பதை இரட்டை வரி விதிப்பாகக் கொண்டு, இவ் விரட்டை வரி விதிப்பைக் குறைப்பதற்கு அல்லது நீக்குவதற்கு இம் முறை முயல்கிறது. இம் முறையை மூன்று வழிகளில் கடைப்பிடிக்கிறார்கள். இரண்டு வரிகளும் தொடர்ந்து இருக்கும். ஆனால், கம்பெனிகள் தங்களின் வட்டிச் செலவைக் கழித்துக் கொள்வது போன்றே, இலாப ஈவுகளையும் மொத்தஇலாபத்திலிருந்து கழித்துக்கொள்ளலாம். இதற்குச் செலுத்தப்பட்ட இலாப ஈவுகளை வரவு வைக்கும் அணுகுமுறை (dividends paid credit approach) என்றும், பகிர்வு செய்யப்படாத இலாப வரி அணுகுமுறை (undistributed profits approach) என்றும்

பெயர்கள். இதுதான் மிகச் சிறந்த முறையாகத் தோன்றுகின்றது. இரண்டாவது முறை பிடித்தம் செய்யும் அணுகு முறையாகும் (witholding approach). இதன்படி கம்பெனிகள் கார்ப்பொரேஷன் வருமான வரியைச் செலுத்திவிட்டு, இலாப ஈவில் எவ்வளவு வரியாகச் செலுத்தப்பட்டிருக்கிறது என்று பங்குதாரர்களுக்கு அறிவிக்கும். பங்குதாரர்கள் வருமான வரி அறிக்கை சமர்ப்பிக்கும் பொழுது, தம்முடைய அறிக்கைகளில் தங்களுடைய இலாப ஈவுகளையும், கம்பெனிகள் அவற்றின் பேரில் செலுத்திய வரியையும் குறிப்பிடுகின்றார்கள். தான் எவ்வளவு தொகையை வரியாகச் செலுத்தவேண்டும் என்று கணித்த பின்பு, பங்குதாரர் அத் தொகையிலிருந்து கம்பெனி தனக்காகச் செலுத்திய வரித் தொகையைக் கழிக்கின்றார். எஞ்சிய வருமானத்தின்மீது வரி செலுத்துகிறார். அவர் செலுத்த வேண்டிய வரித் தொகைக்கு அதிகமாகவே, கம்பெனி வரிப்பிடித்தம் செய்திருக்குமானால் (அவருடைய வருமானம் அவ்வளவுதான் இருக்கிறது), அரசு அவருக்குப் பணத்தைத் திருப்பித்தரும். மூன்றாவது முறைக்கு பெற்ற இலாப ஈவை வரவு வைக்கும் அணுகுமுறை (dividends received credit approach) என்று பெயர். இதன்படி கார்ப்பொரேஷன் வருமான வரி தொடர்ந்திருக்கும். ஆனால், தனியாள் வருமான வரியிலிருந்து இலாப ஈவின் ஒரு பகுதிக்கு விலக்கு அளிக்கப்படும். இம் முறை அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 1936-க்கு முன்பு அமலில் இருந்தது.

தனியாள் வருமான வரியையும், கார்ப்பொரேஷன் வருமான வரியையும் இணைக்க வேண்டியதன் அவசியம்பற்றி இரண்டாம் உலகப்போருக்கு முன்பும், பின்பும் பரவலாகப் பேசப்பட்டது. அண்மைய ஆண்டுகளில் இதைப்பற்றிய பேச்சில்லை. கம்பெனிகளின்மீது தனியாக ஒரு வருமான வரியை விதிக்க வேண்டியது தான் என்ற கருத்துக்குப் பலரும் ஆதரவு தருகிறார்கள்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. 'Report of the Taxation Enquiry Commission', 1953-54, Volume II, Chapters X and XI.
2. A. R. Prest, 'Public Finance in Theory and Practice', Chapters 16 and 17.
3. John F. Due, 'Government Finance', Chapter 13.
4. Taylor, 'The Economics of Public Finance', Chapter 18.

5. Richard Coode, 'The Corporation Income Tax', Chapters 3, 7—10.

6. Seligman, 'Essays in Taxation', Chapters VI and VII.

7. E. R. A. Seligman, 'Progressive Taxation in Theory and Practice', pp. 316—318.

8. R. N. Bhargava, 'The Theory and Working of Union Finance in India', pp. 276—282.

# 24. செல்வ வரி

வருமான வரி ஒருவரின் வருமானத்திலிருந்து செலுத்தப் பெறுகிறது. மூலதன வரி அல்லது சொத்து வரி வருமான வரியி லிருந்தும் வேறுபட்டதாகும். மூலதன வரிகள் இரண்டு வகைப் படும். (அ) சில வரிகள் மூலதனத்தின்மீது விதிக்கப்படுகின்றன; ஆனால், வருமானத்திலிருந்து செலுத்தப் பெறுகின்றன. (ஆ) சில வரிகள் மூலதனத்தின்மீது விதிக்கப்பட்டு மூலதனத்திலிருந்தே செலுத்தப் பெறுகின்றன. திருமதி உர்ஸுலா ஹிக்ஸின் (Mrs. Ursula Hicks) கருத்துப்படி ஒரு மூலதன வரி இரண்டு நிபந்தனைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும். (1) வருமானத்தி லிருந்து செலுத்தப்பட முடியாத அளவுக்கு வரி பெரும் தொகை யினதாக இருக்க வேண்டும். (2) வரி எதிர்பாராததாக இருக்க வேண்டும்.

### மூலதன வரிகளின் வகைகள்

மூலதன வரிகளில் மூவகை உண்டு. (அ) ஆண்டு (வருடாந்திர) மூலதன வரி அல்லது நிகரச் செல்வத்தின் மீதான ஆண்டு வரி (annual tax on net wealth). (ஆ) மூலதன இறை. (இ) இறப்பு வரி. ஆண்டுதோறும் ஒரு தனியாளின் நிகரச் செல்வத்தின்மீது வரி விதிப்பது மூலதன வரி அல்லது செல்வ வரி யாகும். மூலதன இறை ஓரோவழி விதிக்கப்படுவதாகும். இறப்பு வரி வாரிசாகப் பெற்ற அனைத்து உடைமையின்மீதும் விதிக்கப்படும் வரியாகும். ஒவ்வொரு தடவை சொத்தின் வாரிசுதாரர் மாறும் பொழுது இவ் வரி விதிக்கப்படுகிறது. மூன்று வரிகளுக்கும் இரண்டு பொதுவான இயல்புகள் உள்ளன: (1) இவை யாவும் மூலதனத்தின்மீது விதிக்கப்படுகின்றன. (2) இவை பொதுத் தன்மையுடையன. ஒருவர் வைத்திருக்கும் மூலதனத்தின் மதிப்பைப் பொறுத்து இவ் வரிகள் விதிக்கப்படுகின்றன.

செல்வ வரியை விதிப்பது நியாயந்தானு ?

இதுகாறும் ஒருவரின் வருமானத்தையும், செலவையும் அடிப்படையாகக் கொண்டுதான் வரிகள் விதிக்கப்பட்டு வந்திருக்கின்றன. செல்வத்தை அடிப்படையாகக் கொண்டும் வரி விதிக்கலாம். வருமானத்தையும், செலவையும் போன்றே செல்வமும், ஒருவரின் பொருளாதார நலனைக் காட்டும் அடையாளமாகும். வருமானம் ஓர் ஓடுகால்; செல்வம் ஓர் இருப்பு அல்லது நிதியைப் போன்றது.

வருமான வரியுடன் ஒரு செல்வ வரியையும் விதிக்க வேண்டியது அவசியம். உதாரணமாக, ஒருவரிடம் உரூபா 10 இலட்சம் பெறுமானமுள்ள நகைகள் இருப்பதாக வைத்துக் கொள்வோம். நகைகளிலிருந்து யாதொரு வருமானமும் கிடைக்கவில்லை என்றாலும், நகைகளை வைத்திருப்பவர் ஒரு வருமானமும் இல்லாத ஒரு பிச்சைக்காரனைக் காட்டிலும் நல்ல நிலையில் இருக்கிறார் என்பது உறுதி. செல்வ வரியை விதிப்பதனால் உயர்ந்த இறுதிநிலை வருமான வரி வீதங்கள் குறையும். வரிப்பளுவும் பல்வேறுபட்ட செல்வங்களை வைத்திருப்பவர்கள்மீது சமமாகப் பகிரப்படும். வருமான வரியுடன், ஒரு செல்வ வரியையும் விதிப்பதனால் நான்கு விளைவுகள் ஏற்படுகின்றன: 1. இதனால் உழைப்பு வருமானங்களைக் காட்டிலும், உழைப்பிலா வருமானங்களின்மீது அதிக வரிப்பளு ஏற்படும். 2. ரொக்கம், நகைகள், பேங்க் நடப்புக் கணக்குகள் போன்ற சொத்து வகைகளிலிருந்து வருமானம் கிடைக்காமல் இருக்கலாம். இவற்றின்மீது செல்வ வரி விதிக்கலாம். இவை வருமான வரிக்கு உள்ளாவதில்லை. 3. குறைந்த ஊதியமும், குறும ஆபத்தும் உடைய முதலீடுகளைச் செல்வ வரியினால்தான் நியாயமாக நடத்த முடியும். 4. ஒருவரின் செல்வம் வீடுகளாக இருக்கலாம். இவற்றின்மீது வரி விதிப்பதற்குச் செல்வ வரிதான் சிறந்த வழி. வீடுகளின் வாடகை மதிப்பு இவ்வளவு என்று கற்பனை செய்யப்பட்டு, இவ் வாடகை மதிப்பு வரிதாங்கு வருமானத்தில் சேர்த்துக் கொள்ளப்படுகிறது. ஆனால், இதைக் காட்டிலும் செல்வ வரியை விதிப்பதுதான் சிறந்த வழி. இவ்வாறு செல்வ வரியை விதிப்பதனால் வரியமைப்பு நேர்மைமிக்கதாவதுடன், வரிப்பளுவும் நியாயமான முறையில் பகிர்வு செய்யப்படுகிறது.

பொருளாதார விளைவுகள்

1. வருமான வரியை விடச் செல்வ வரி சிறிது மேலானது. ஏனெனில், வருமான வரியைப் போன்று செல்வ வரியில் ஆபத்து அதிகமான முதலீடுகளுக்கு எதிராகப் பேதம் காட்டப்படுவதில்லை.

2. மேலும், வருமான வரியிலிருந்து தங்கம், நகைகள் போன்ற வைகளுக்கு முழு விலக்கு அளிக்கப்படுகிறது. இதற்குக் காரணம் இவற்றிலிருந்து யாதொரு வருமானமும் கிடைக்காததுதான். மூலதன ஆதாயங்களுக்கும் வருமான வரியிலிருந்து விலக்கு அளிக்கப்படுகிறது. செல்வ வரியில் இவற்றின்மீதும் வரி விதிக்கப் படும்.

## நிருவாகத் திறமை

நிருவாகக் கோணத்திலிருந்து பார்க்கும் பொழுது, வருமான வரியை மட்டும் விதிப்பதைக் காட்டிலும், வருமான வரி, செல்வ வரி இரண்டையும் விதிப்பது நல்லது. ஏனெனில், இதனுல் 'வரி கொடாது ஏமாற்றுவதும், (வருமான அறிக்கை அல்லது சொத்து அறிக்கையிலிருந்து வருமானத்தை அல்லது சொத்தை) மறைப் பதும்' தடுக்கப்படும். நிருவாகத் திறமையும் அதிகரிக்கும். 'ஏனெனில் ஒருவருடைய சொத்துகளைப்பற்றி ஆயும் பொழுது, அவர் (வருமான வரி அதிகாரியிடமிருந்து) மறைத்த வருமானத் தையும், இதேபோன்று ஒருவருடைய வருமானத்தைப்பற்றி ஆயும் பொழுது அவர் மறைத்த சொத்தையும் கண்டுபிடிக்க வழி உண்டாகும்' (கால்டர்).

## எதிர்வாதங்கள்

1. செல்வ வரி அறத்தாறு ஆகாது என்பது சிலரின் வாதம். நகைகள், பேங்க் நடப்புக் கணக்கு இவற்றிலிருந்து வருமானம் கிடைக்காத பொழுது, இவற்றின்மீது வரி விதிப்பது எங்ஙனம் நியாயமாகும்? சிலர் நகைகளாகவும், பேங்க் நடப்பு வைப்புக் களாகவும் தங்கள் சேமிப்புகளை வைத்திருப்பதற்குக் காரணம், அவற்றிலிருந்து பண வருமானம் கிடைக்காமல் போனுலும், அவற்றின் மதிப்பு எதிர்காலத்தில் ஏறலாம் என்பதும் அல்லது அவற்றை வைத்திருப்பதனுல், தனக்குப் பெயரும் (புகழும்), பாதுகாப்பும் கிடைக்கிறது என்பதும் ஆகும். அதனுல் இவ் வரியை விதிப்பது நியாயமே ஆகும். பலர் சிறிதளவே செல்வத்தை வைத்திருப்பதும், வாணிப மந்தம் போன்ற காலங் களில் செல்வத்தின் மதிப்புக் குறைவாக இருப்பதும், ஒரு குறிப் பிட்ட அளவுக்குக்கீழ் செல்வம் வைத்திருப்பவர்களுக்கு இவ் வரியிலிருந்து விலக்கு அளிக்கவேண்டும் என்பதையும், வரி வீதங்கள் குறைவாக இருக்கவேண்டும் என்பதையும், வரியைச் செலுத்துவதற்குச் சௌகரியமாக இருக்கும்படி (வரி செலுத்து பவருக்கு) வாய்ப்பு அளிக்கவேண்டும் என்பதையும் புலப்படுத்து கின்றன.

2. செல்வ வரி பயன்தரும் முனைவுகளில் முதலீடு செய்வதைத் தடுக்கிறது என்பது ஒரு வாதமாகும். ஆனால், எல்லா வரிகளுமே ஒரு வகையில் பயன்தரும் முயற்சிகளுக்கு ஊறு செய்கின்றன. ஒரே அளவு வரியை வருமான வரியின் வாயிலாகவும், செல்வ வரியின் வாயிலாகவும் வசூலித்தால், செல்வ வரியைக் காட்டிலும் வருமான வரியினால்தான் ஆக்கம் ஈனும் முனைவுகள் (productive enterprises) மிகவும் பாதிக்கப்படுகின்றன எனப் பொருளியல் புலவர்கள் கூறுகின்றனர். செல்வ வரியை இறுதியாக நுகர்வோர்மீது புரட்டுவதும் இயலாததொன்று. கால்டர் கூறுவது போன்று 'ஒரே அளவு வருமானத்தைத் தரும் வருமான வரியைக் காட்டிலும், சொத்துவரியின் நிலைப்பாட்டைப் புரட்டுவதற்கான சாத்தியக் கூறு மிகவும் குறைவே.'

3. நிருவாகக் கோணத்திலிருந்து பார்க்கும் பொழுது, செல்வ வரியை ஒரு நல்ல வரி என்று கூற முடியாது. ஓரளவு செல்வத்தை மறைக்கலாம்; அல்லது செல்வத்தின் மதிப்பைக் குறைத்துக் கூறலாம். இதை ஒரு குற்றமாகக் கொள்ள முடியாது. ஏனெனில், செல்வத்தை மறைத்தால் செல்வத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தையும் மறைத்தது ஆகும். வருமானம் தெரிந்தால், அவ் வருமானத்தை நல்கும் செல்வத்தையும் கண்டுபிடிக்க முடியும். ஆகவே, செல்வ வரியை விதிப்பதனால், புதிதாக எந்த நிருவாகப் பிரச்சினையும் எழவில்லை. செல்வ மதிப்பீட்டிலுள்ள சிக்கல் செல்வத்தை ஒவ்வோர் ஆண்டும் மதிப்பிட வேண்டி இருப்பதேயாகும். இறப்பு வரி, மூலதன ஆதாய வரி, கொடை வரி போன்ற வரிகளை விதித்தாலும் உடைமையை மதிப்பீடு செய்ய வேண்டியிருக்கிறது. ஆகவே, உடைமை மதிப்பீடு என்பது செல்வ வரிக்கு மட்டும் உரியதன்று. மேலும், ஒவ்வோர் ஆண்டும் செல்வத்தை மதிப்பிட வேண்டும் என்ற அவசியமும் இல்லை. முதலில் செல்வ வரியை விதித்த பொழுது, செல்வத்தை மதிப்பீடு செய்தால் போதும். அச் செல்வத்தை விற்பதன் வாயிலாகவோ, கொடையின் வாயிலாகவோ பிறருக்கு மாற்றும் வரை, முதலில் செய்த மதிப்பீட்டைக் கொண்டே வரியை விதித்து வரலாம். ஆகவே, முடிவாக, வருமான வரியுடன் செல்வ வரியையும் விதிக்கலாம் என்று கூறலாம்.

### வளர்ச்சி குன்றிய நாடும், செல்வ வரியும்

வளர்ச்சி குன்றிய நாட்டில் செல்வ வரியை விதிக்கலாம். முதலாவதாக, இதனால் நடப்பு நுகர்வு குறைந்து, வளங்கள் பொருளாதார வளர்ச்சிக்குத் திசை திருப்பப்படும். இரண்டாவதாக, இவ் வரியினால் தனியார் முதலீடு குறையாது. ஏனெனில்,

செல்வ வரிக்கும், முதலீட்டுக்கும் நெருங்கிய தொடர்பில்லை. மூன்றாவதாக, அனைத்து உடைமைகளின்மீதும் இவ் வரி சமமாக உறுத்தலால், வருமான வரியைப் போன்று செல்வ வரி, அதிக ஊதியத்தையும், அதிக ஆபத்தையும் தருவதான முதலீட்டுக்கு எதிராகப் பேதங்காட்டுவது இல்லை. நான்காவதாக, ஓரளவு ஏற்ற இறக்கங்களைக் குறைத்து, சமத்துவத்தை ஏற்படுத்தவும் இவ் வரி சிறந்த கருவியாகப் பயன்படுகிறது. இறுதியாக, வளர்ச்சி குன்றிய நாடுகளில் அரசுகள் வேளாண்மைக்கும், நீர்ப்பாசன வசதிகள் முதலானவற்றிற்கும் அதிக முதலீடு செய்கின்றன. இதனால் வேளாண்மை நிலங்களின் மதிப்பு அதிகரிப்பதுடன், அவற்றி லிருந்து கிடைக்கும் விளைச்சலும் அதிகரிக்கிறது. இந் நிலையில் செல்வ வரியை விதிப்பதால் அரசுக்குப் பெரும் வருவாய் கிடைக்கும். மேலும், இப்பொழுது வேளாண்மை நிலத்தின் மீதுள்ள வரி நிலைப்பாட்டின் சமனக் குறைவையும் (inbalance) செல்வ வரி நிறைவு செய்யும். இதுகாறும் கூறியவற்றிலிருந்து செல்வ வரியை விதிப்பது நியாயமானது என்று துணியப்படும்.

### செல்வ வரியின் பொருளாதார விளைவுகள்

பொதுவாக, எல்லா வரிகளுமே நுகர்வையும், சேமிப்பையும் குறைக்கின்றன. ஒரு வரியினால் நுகர்வு மட்டும் குறைய வேண்டு மென்றால், வரியின் அளவு குறைவாக இருக்க வேண்டும். சராசரி வரி செலுத்துவோரின் வருமானத்தில் பெரும் பகுதியும், நுகர்வுக்காகச் செலவிடப்படுவதால், செல்வ வரி, சேமிப்பைக் காட்டிலும், நுகர்வை அதிகமாகக் குறைக்கும் என்று கூறலாம். ஆனால், இவ் வாதம் மிகப் பெருத்த வருமானம் உடையவர் களுக்குப் பொருந்தாது. ஏனெனில், இவரின் நுகர்வைவிடச் சேமிப்புதான் அதிகம் இருக்கும். ஆகவே, பெருத்த வருமானம் உடையவர்களைப் பொறுத்தமட்டில் சேமிப்புதான் அதிகம் குறையும். ஒரே ஒருமுறை செல்வ வரி விதிக்கப்பட்டால், வரி வீதம் மிகவும் அதிகமாக இருக்கும். ஆகவே, ஒருவர் தம்முடைய சேமிப்புகளிலிருந்துதான் இவ் வரியைக் கட்டவேண்டியிருக்கும். ஆனால், ஆண்டுதோறும் விதிக்கப்படும் செல்வ வரி நுகர்வைக் குறைத்துக் கட்டப்படலாம் என்று பொதுவாகக் கூறலாம்.

### செல்வ வரியும், முதலீடும்

(அ) செல்வ வரியினால் சேமிப்புக் குறையும். ஆகவே, முதலீடும் குறையும் என்றும், (ஆ) முதலீட்டின் நோக்கம் கிடைக்கும் ஊதியத்தைத் திரட்டி வைப்பதுதான் என்றாலும் முதலீடு பாதிக்கப்படும் என்றும் சிலர் வாதிடுகின்றனர். சேமிப்பைப் பொறுத்தே முதலீடு இருக்கின்றதென்றும், சேமிப்பு அதிகரித்தால்

முதலீடும் அதிகரிக்கும் என்றும் சிலர் கருதுகின்றனர். ஆனால், இது பொருந்தாது. ஒருவர் முதலீடு செய்வதற்கு, (அ) முதலீட்டிலிருந்து கிடைக்கும் ஊதியத்தின் அளவும், (ஆ) நடப்பு வட்டி வீதமும், (இ) நிதி கிடைப்பும் முக்கியமானவை. தான் சேமித்து வைத்த தொகையிலிருந்து ஒருவர் முதலீடு செய்வாரானால், செல்வத்தின் மீது வரி விதிப்பதனாலேயே முதலீடு பாதிக்கப்படாது. ஏனெனில், அவர் பணத்தை ரொக்கமாக வைத்திருந்தாலும் சரி, அல்லது முதலீடு செய்தாலும் சரி, அவர் வரியைச் செலுத்த வேண்டியது தான். இதிலிருந்து தனியாளின் சேமிப்பு அவர் முதலீட்டைப் பாதிப்பதில்லை எனத் தெரிகிறது. மேலும், முதலீட்டிலிருந்து கிடைக்கும் ஊதியங்களுக்கு ஏற்ப, வரி வீதம் மாறினால்தான் முதலீடு பாதிக்கப்படும். செல்வ வரியில் ஊதியங்களைக் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை. கடந்த காலத்தில் திரட்டிய செல்வத்தின் மதிப்புக்கு ஏற்பவே, வரி விதிக்கப்படுகிறது.

முதலீட்டின் நோக்கம், நுகர்வு செய்வதற்கான வருமானத்தைப் பெறுவது அன்று என்றும், மேலும் நிதியைத் திரட்டுவதே என்றும் சிலர் கூறுகின்றனர்கள். ஏற்கெனவே போதிய வருமானத்தை உடையவர் முதலீடு செய்தால், அவரின் நோக்கம் சேமிப்புச் செய்வதேயாகும் என்றும், இது வரி விதிப்பினால் குறையும் என்றும் சிலர் கூறுகின்றனர்கள். இம்மாதிரி சேமிப்புக் குறையலாம். ஆயினும், இரண்டு கருத்துகளை நாம் நினைவில் கொள்ள வேண்டும். முதலீட்டிலிருந்து கிடைக்கும் வருமானத்தின் பெரும்பகுதியும் நுகர்வுக்குச் செலவழிக்கப்பட்டால், இவ் வாதம் அடிபட்டுப் போகிறது. இதுதவிர, முன்னேறிய நாடுகளில், கம்பெனிகள், தாங்கள் பகிர்வு செய்யாது திரட்டி வைத்திருந்த தொகைகளிருந்தே முதலீடு செய்கின்றன. கம்பெனிகள்மீது செல்வ வரி விதிப்பதில்லை. தனியார்களின் மீதே செல்வ வரி விதிக்கப்படுகிறது. செல்வ வரிக்கும் முதலீட்டுக்கும் நேரிடையான, நெருங்கிய தொடர்பில்லை என்பது பொருளியல் புலவர்களின் தேர்ந்த கருத்தாகும்.

## மூலதன வரிகளின் முக்கியத்துவம்

வினைசெயல் நிதியத்தின் (functional finance) கருவியாக எங்ஙனம் மூலதன வரி பயன்படுகிறது என்பதைக் காண்போம். மூலதன வரியினால் இரண்டு விளைவுகள் ஏற்படுகின்றன. வரி செலுத்துவோரின் வருமானமும் குறைகின்றது; அவருடைய செல்வத்தின் மதிப்பும் குறைகின்றது. முந்தியது வருமான விளைவு (income effect), பிந்தியது செல்வ விளைவு (wealth effect) என்றும் கூறப்படும். இவ் விரண்டு விளைவுகளின் காரணமாக,

வரி செலுத்துவோர் குறைவாகச் செலவிட வேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. ஆனால், அலுவல் நிதியத்தின் ஒரு கருவியாகச் செல்வ வரியை நோக்கும் பொழுது, அது வருமான வரியைவிட மட்டமானதே. ஒரு வளர்வீத வருமான வரியின்கீழ், வருமானம் அதிகரிக்க அதிகரிக்க, வரி வீதமும் மாறுவதால், இவ் வரியிலிருந்து கிடைக்கும் வருமானம் அதிகரிக்கிறது. இதனால் செலவு அதிகரிப்பது உடனடியாகத் தடைப்படுகின்றது. இதே போன்று. வருமானம் குறையும் பொழுது, ஒருவர் கட்ட வேண்டிய வரி வீதமும் குறைகிறது. ஆகவே, வருமான வரியிலிருந்து கிடைக்கும் வருவாயும் குறைகிறது. இதனால் செலவு குறைவதும் தடைப்படுகிறது. ஆனால், மூலதன வரிக்கும், மூலதனத்திலிருந்து கிடைக்கும் வருவாய்க்கும் யாதொரு தொடர்பும் இன்றி இருக்கலாம். மிதப்புக் காலத்திலும், பணவீக்கக் காலத்திலும் வருமானங்கள் உயர்கின்ற அளவு மூலதன மதிப்புகள் உயராமல் இருக்கலாம். ஆகவே, மூலதன வரியினால் கிடைக்கும் வருவாய் அதிகரிக்காமல் இருக்கலாம். ஆகவே, வரி செலுத்துவோரின் செலவும் குறையாமல் போகலாம். வாணிப மந்த காலத்தில் வருமானம் பூஜ்யமாக இருக்கலாம்; ஆனால், மூலதன மதிப்புகள் பூஜ்யம் ஆகாமல் இருக்கலாம். மூலதன வரித் தொகை அதிகம் குறையாததனால், மக்களின் செலவு குறையும். இதனால் பொருளாதார நிலைமை மேலும் மோசமாகும்.

### செல்வ வரி பற்றிய சில பிரச்சினைகள்

வருமான வரிக்கு ஒரு பிற்சேர்க்கையாகச் செல்வ வரியையும் விதிக்கலாம். ஆனால், இவ் வரியை விதிப்பதில் நடைமுறையில் சில சங்கடங்கள் ஏற்படுகின்றன.

### கார்ப்பொரேஷன் மூலதனத்தை எங்ஙனம் நடத்துவது (Treatment of Corporate Capital)?

1. வாணிப நிறுவனங்களின் மூலதனத்தின்மீது வரி விதிக்கக்கூடாது என்பதை ஏறக்குறைய அனைவரும் ஏற்றுக்கொள்கின்றனர். ஜே. ஆர். ஹிக்ஸின் (J. R. Hicks)[1] கருத்துப்படி 'தனியார்கள் வைத்திருக்கும் கடன் பத்திரங்கள், பங்குகள் இவற்றின் மதிப்பின்மீது வரி விதிப்பதன் வாயிலாகத்தான் கார்ப்பொரேஷன் செல்வத்தை அணுகவேண்டுமே தவிர, கார்ப்பொரேஷன் உடைமையின்மீதே வரி விதிக்கக்கூடாது. தனியார்களிடம் இருக்கும் கார்ப்பொரேஷன் பங்குகளின்மீதும், கார்ப்பொ

[1] J. R. Hicks, U. R. Hicks and L. Rostas, 'The Taxation of War Wealth', p. 206.

ரேஷன் உடைமையின்மீதும் வரி விதிக்கவும் கூடாது. ஏனெனில் இது இரட்டை வரி விதிப்பாகும்.

2. கார்ப்பொரேஷன் உடைமையின்மீது ஒரு மூலதன வரியை விதித்தால், இதனுல் விலைகளை உயர்த்தி வரிப்பளுவை நுகர்வோர்மீது புரட்டுவதற்கு வகை செய்ததாகும். இங்ஙனம் வரிப்பளு நுகர்வோர்மீது விழுவது அரசின் கருத்தன்று.

3. கார்ப்பொரேஷன் உடைமையின்மீது வரி விதித்தால், வாணிப நிறுவனங்களுடன் ஒப்பிடும் பொழுது தொழில் நிறுவனங்கள் அதிக இடைஞ்சலுக்கு உள்ளாகும். ஏனெனில், வாணிப நிறுவனங்களைக் (commercial enterprises) காட்டிலும், தொழில் நிறுவனங்கள் (industrial enterprises) அதிக இருப்புக் களையும், அதிக நிதியையும் வைத்திருக்க வேண்டும். இவ் வரியை விதித்தால், பலர் தங்கள் முதலீட்டைத் தொழில் நிறுவனங்களி லிருந்து வாணிப நிறுவனங்களுக்கு மாற்றுவார்கள். இங்ஙனம் செய்வது நாட்டுக்கு நல்லதன்று.

4. இறுதியாக, கார்ப்பொரேஷன் உடைமையின்மீது வரி விதித்தால், இவ் வரியை வளர்வீதமாகச் செய்வது கடினம். தனியார்களின்மீது செல்வ வரியை விதித்தால்தான், வளர் வீதத்தில் அதை விதிப்பது சாத்தியமாகும். ஆயினும், காலக்கி (Kalacki) போன்ற பொருளியல் புலவர்கள் மூலதன வரியைக் கம்பெனிகளின்மீதும், தனியார்களின்மீதும் விதிக்க வேண்டும் எனக் கூறுகிருர்கள். தனியார்களின்மீது வரியை விதிக்கும் பொழுது, மூலதனம் மதிப்பீடு செய்யப்படுகிறது. இவ்வித மதிப் பீடும், மறு மதிப்பீடும் செல்வ வரிக்கு மட்டுமன்றி கொடை வரிக்கும், மூலதன ஆதாய வரிக்கும் பயன்படும்.

ஒரு வரையறைக்குட்பட்ட அளவில் செலவு வரிகள் எல்லா நாடுகளிலும் நகராட்சிகளும், பிற தல ஸ்தாபனங்களும் விதிக் கின்றன. ஆனுல், தனியாளின் எல்லாவகைச் செல்வங்களின் மீதும் மிகச் சில நாடுகளே வரி விதித்திருக்கின்றன. வரி ஏய்ப் பதைத் தடுக்க வேண்டும் என்ருல் செல்வ வரியை விதிக்க வேண்டியது அவசியம். ஆனுல், இதைச் செயல்படுத்துவதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. A. R. Prest, 'Public Finance in Theory and Practice', Chapters 16 and 17.

2. Taylor, 'The Economics of Public Finance', Chapter 15.

3. I. S. Gulati, 'Capital Taxation', Parts I and II.

4. N. Kaldor, 'Indian Tax Reform', Chapter II.

5. Ursula Hicks, 'Public Finance', Chapter 13.

6. John F. Due, 'Government Finance', Chapters 20 and 21.

7. B. R. Misra, 'Indian Federal Finance', Chapter XIII.

# 25. செலவு வரி

ஒருவருடைய வரி செலுத்தும் ஆற்றலை அளவிடுவதற்கு, வருமானந்தான் சிறந்த அளவுகோல் என்று பலர் கருதிய போதிலும், வருமானத்திற்குப் பதிலாகச் செலவை அடிப் படையாகக் கொள்ளலாம் என்ற கருத்தும் நெடுநாட்களாக நிலவி வந்திருக்கிறது.

## வருமானமும், செலவும்

*1.* வருமான வரி, குறிக்கோள் அளவில் சிறந்த வரியாகக் கருதப்படுகிறது. *2.* வருமான வரியைப் பொதுவாகப் பிறர்மீது புரட்டவும் முடியாது. *3.* ஒவ்வோர் குடும்பத்தின் சூழ்நிலைக்கும் ஏற்ப (குடும்பத்தில் உள்ளவர்களின் எண்ணிக்கை, மருத்துவக் கல்விச் செலவுகள் முதலானவை) வருமான வரி வீதத்தை வேறு படுத்த முடியும். *4.* இறுதியாக, வளர்வீதத்தைக் கடைப்பிடிக்க முடியும். இது அறம், நீதி இவற்றைப்பற்றிய நம்முடைய கருத்துகளுக்கு ஒத்திருக்கிறது. மேலும், வருமான வரி, பல்வேறுபட்ட செலவுகளுக்கு இடையே நடுவு நிலைமை வகிக்கிறது. இக் காரணங்களினால் ஒரு நல்ல வரிக்கு உரிய எல்லா இலக்கணங்களும் இதற்குப் பொருந்தியிருக்கின்றன எனலாம்.

வருமான வரியில் பல நன்மைகள் இருக்கின்றன என்பதை ஒத்துக் கொண்டாலும், ஒருவரின் வரிதாங்கு வல்லமையை அறிவதற்கு வருமானம்தான் சிறந்த அடிப்படையா என்ற வினாவைச் சிலர் எழுப்புகின்றனர். *1861*-ல் ஜான் ஸ்டூவர்ட் மில் செலவு வரியை விதிக்க வேண்டும் என்பதற்கான வாதங்களைப் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் ஒரு பொறுக்குக் குழுவின் முன்பு எடுத்துரைத்தார். ‘ஒருவருடைய வக்குக்குத் (means) தகுந்தாற் போல் வரி விதிப்பு வளர் வீதமாக இருக்க வேண்டும்’ என்று அவர் உரைத்தார். ஆனால் ‘வக்கு’ என்றால் என்ன? வரி எந்த அளவுக்கு வளர்வீதமாக இருக்க வேண்டும்?

'வக்கு' என்பதற்குப் பலரும் செலவழிக்கும் ஆற்றல் (spending power) என்றே பொருள் கொள்கின்றனர். நடைமுறையில் ஒருவர் செலவழிப்பதைக் காட்டிலும், அவருடைய செலவழிக்கும் ஆற்றலே வரி தாங்கும் ஆற்றலைக் கண்டுபிடிக்கச் சிறந்த கருவியாகும். இதற்குக் காரணம் செலவின் மீதான ஒரு வரியைக் காட்டிலும், செலவழிக்கும் ஆற்றலின் மீதான ஒரு வரி அதிகம் வளர்வீதமாக இருக்கமுடியும் என்பதேயாம். ஒரு குறுமத்திற்கு மேல், எவ்வளவுக்கு எவ்வளவு செலவழிக்கும் ஆற்றல் அதிகமாக இருக்கின்றதோ, அவ்வளவுக்கு அவ்வளவு அதில் ஒரு சிறிய வீதாசாரத்தையே ஒருவர் செலவழிப்பார். ஒரு நியாயமான வரி என்றால், அது தனிப்பட்டவர்களின் முடிவுகளையும், மனப்பான்மைகளையும் பொறுத்திருக்கக் கூடாது எனலாம். இவ்வாறான நிலையில், ஒருவர் எவ்வளவு செலவழிக்கிறார் என்பதைக் காட்டிலும், அவர் எவ்வளவு செலவழிக்க இயலும் என்பது அவருடைய வரிதாங்கு ஆற்றலை அளவிடும் சிறந்த கருவி எனலாம்.

செலவு வரிக்குச் சார்பான வாதங்கள்

*1.* வருமான வரியின் குறைபாடுகள்: கால்டர் கூறுவதுபோன்று 'நுகர்வையும் சேமிப்பையும் சேர்த்து (வருமானம்) வரி விதிக்க முற்படும் எந்த வரி முறையும் தன் நோக்கத்தை எய்த முடியாது.' செலவழிக்கும் ஆற்றலின் மூலம் வருமானம். ஆனால், வருமானம் பல்வேறு வழிகளில் கிடைக்கிறது. சம்பளமாகவும், கூலியாகவும், கிடைக்கின்ற வருமானம், கடன் பத்திரங்களிலிருந்து வட்டியாகக் கிடைக்கின்ற வருமானம், பங்குகளிலிருந்து இலாப ஈவாகக் கிடைக்கிற வருமானம் ஆகியவற்றிலிருந்து, உடைமையிலிருந்து கிடைக்கிற வருமானம் வேறுபட்டது. உடைமைகளிலிருந்து கிடைக்கும் வருமானத்தைத் தவிர்த்து, ஒருவர் உடைமைகளுக்கு உரியவராக இருப்பதனாலேயே அவருடைய எதிர்கால செலவழிக்கும் ஆற்றல் அதிகமாகிறது. இதேபோன்று மூலதன ஆதாயங்கள் மூலமும், கொடைகள் மூலமும் வாரிசுரிமைகள் மூலமும் கிடைக்கும் வருமானமும் நியதியற்றது. இப்பொழுது அமலில் இருக்கும் வருமான வரியும் மிகவும் தான்தோன்றித்தனமாக (arbitrary) உள்ளது. சிலவகைச் சேமிப்புகளுக்கு விலக்கு அளிக்கிறது; சிலவகைச் சேமிப்புகளுக்குச் சலுகை அளிக்கிறது; ஏனையச் சேமிப்புகளின் பேரில் முழு அளவில் வரி விதிக்கிறது. ஆகவே, வருமானத்தைப்பற்றிய சரியான விளக்கம் கிடைப்பதும் கஷ்டமாக இருக்கிறது. வரி செலுத்தும் ஆற்றலைக் கணிப்பதற்கு வருமானம் சிறந்த அடிப்படையும் ஆகாது. பலவகை வருமானங்களையும் ஒப்பிட முடியாமையால் இப் பிரச்சினைகள்

எழுகின்றன. உழைப்பு வருமானத்தையும், உழைப்பிலா வருமானத்தையும், தற்காலிக வருமானத்தையும் நிரந்தர வருமானத்தையும், கற்பனையான மூலதன ஆதாயத்தையும், உண்மையான மூலதன ஆதாயத்தையும், நியதியான (regular) வருமானத்தையும், நியதியற்ற வருமானத்தையும் ஒப்பிடுவது யாங்ஙனம்? ஆகையால், உண்மையில் ஒருவர் செலவழிப்பதையே அவருடைய வரிதாங்கு ஆற்றலின் அடையாளமாகக் கொள்ள வேண்டும். மேலும், வருமான வரியின் இரண்டு அடிப்படைக் குறைகளை வலியுறுத்த வேண்டும். (1) வருமான வரி சேமிப்பையும், மூலதனத் திரட்சியையும் பாதிக்கிறது. நுகர்வுக்கும், சேமிப்புக்கும் இடையே வேறுபாடு காட்டாததால், சாதாரணமாக வருமான வரி சேமிப்பின்மீதே விழுகிறது. இதனால் சேமிப்புக் குறைகிறது. (2) வரியை ஏய்ப்பதற்கும், வரியைத் தவிர்ப்பதற்கும் வருமான வரியில் பல வாய்ப்புகள் இருக்கின்றன.

2. செலவுக்குத் திட்டவட்டமான விளக்கம் தர முடியும்: வருமானத்தைக் காட்டிலும் செலவுக்குத் திட்டவட்டமான விளக்கம் தரலாம். பல்வேறு மூலங்களிலிருந்து கிடைக்கும் வருமானங்களை ஒப்பிட முடியாது. செலவு அப்படியன்று.

3. நுகர்வில் ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க முடியும்: வருமான வரியினால் இவ்வேற்றத் தாழ்வுகளைக் குறைக்க முடியாது. மூலதன ஆதாயங்களின்மீதும், ஏனைய நியதியற்ற வருமானங்களின்மீதும் விதிக்கப்படும் வருமான வரியைக் கொடாது தப்பித்துக் கொள்ள லாம். ஆனால், இவ் வருமானங்களைச் செலவிடும் பொழுது, செலவு வரியைக் கொடுத்துத்தான் தீர வேண்டும். சேமிப்புகளி லிருந்து செலவு செய்தால் வருமான வரி செலுத்த வேண்டிய தில்லை; ஆனால், செலவு வரியைச் செலுத்த வேண்டும். இவ் வகைகளில் வருமான வரியைக் காட்டிலும் செலவு வரி மேலானது. செலவு வரியிலுள்ள சங்கடம் செலவிலுள்ள ஏற்றத்தாழ்வுகள் எங்ஙனம் குறைக்கப்படுகின்றதென்பதே. 'நுகர்வில் அதிக அளவு சமத்துவத்தைக் கொணர்வதற்கு, வருமான வரி, செலவு வரி ஆகிய இரண்டில் எது சிறந்தது என்று தீர்ப்புக் கூற வேண்டு மானால், நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் செலவு வரியே சிறந்தது எனலாம். ஒரு குறிப்பிட்ட காலத்திலும் சரி, காலப் போக்கிலும் சரி, இரண்டு தனியாட்களிடையேயோ அல்லது தனி யாட்கள் அடங்கிய இரண்டு கும்பல்கள் இடையேயோ நுகர்வில் அதிக அளவு சமத்துவத்தைக் கொணர்வதற்குச் செலவு வரியே சிறந்தது' (பிரஸ்டு).[1]

[1] A. R. Prest. 'Public Finance' p. 130.

4. சேமிப்பையும், மூலதனத் திரட்சியையும் தூண்டுகின்றது: சேமிப்புக்கு விலக்களிப்பதால், மூலதனத் திரட்சிக்குச் செலவு வரி ஊக்கம் அளிக்கின்றது. இவ் வாதம் முன்னேறிய நாட்டைக் காட்டிலும், வளர்ச்சி குன்றிய நாட்டிற்கே அதிகம் பொருந்தும். ஆனால், சேமிப்பினால் முதலீடும், உற்பத்தியும், தேசிய வருமானமும், வேலை வாய்ப்பும் அதிகரித்தால்தான் மூலதனத் திரட்சியும் அதிகரிக்கும். மேலும், இப்பொழுது நிலவும் மூலதனத் திரட்சி வீதம் உத்தம அளவில் இல்லாவிட்டால்தான் சேமிப்புகளைத் தூண்ட வேண்டும். சேமிப்புகளுக்கு வரியிலிருந்து விலக்களிப்பதால், செல்வப் பகிர்வில் உள்ள ஏற்றத்தாழ்வுகள் அதிகரிக்கும். இது உண்மையே.

5. முதலீட்டுக்கு ஊறு நேர்வதில்லை: வருமான வரியைப் பொறுத்த வரையில். இரு விதத்தில் அது முதலீட்டைப் பாதிக்கிறது. (அ) முதலீடு செய்யக்கூடிய பணத்தின் பெரும் பகுதியையும், அது வரியாக வசூலித்து விடுகிறது. (ஆ) வருமான வரியினால் முதலீட்டிலிருந்து கிடைக்கும் நிகர ஊதியங்கள் குறைகின்றன. சேமிப்புகளின்மீது செலவு வரி விதிக்கப்படுவதில்லை. வளர்வீத வருமான வரியினால் உழைக்கும் விருப்பம் குறையக் கூடும். இவ்வித விளைவு செலவு வரியில் ஏற்படுவதில்லை.

6. பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தத் துணைசெய்கிறது: பணவீக்கக் காலத்தில் மக்கள் செலவை மட்டுப்படுத்திச் சேமிப்பை அதிகரிக்க வேண்டியது அவசியம். செலவு வரியினால் செலவு குறைவதோடு மட்டுமின்றிச், செலவழித்தால் தண்டனையும் வழங்கப் பெறுகிறது. ஆனால், பணவீக்கம் இல்லாத காலத்தில் செலவு வரியினால் மந்தநிலை மேலும் மோசமாகலாம்.

7. நேர்மைக் கோட்பாட்டிற்கு உகந்தது: வருமான வரியைக் காட்டிலும் செலவு வரி நேர்மையானது; நியாயமானது. ஏனெனில், 'பொது நிதியத்துக்குத் தாங்கள் என்ன கொடுக்கிறார்கள் என்பதை அடிப்படையாகக் கொள்ளாது, அவர்கள் பொது நிதியத்திலிருந்து என்ன எடுத்துக் கொள்கிறார்கள் என்பதை அடிப்படையாகக் கொண்டு செலவு வரி விதிக்கப்படுகிறது' (கால்டர்)[1]. 'பொருளை ஈட்டுவதனாலோ அல்லது சேமிப்பதனாலோ அன்றி, செலவழிப்பதனால் மட்டுமே ஒரு தனியாள் தன்னுடைய நோக்கங்களைக் கைகூடும்படிச் செய்வதற்காகச், சமுதாயத்தின்மீது ஒரு பளுவைச் சுமத்துகிறார்.' தண்டச் செலவைக் குறைப்பதால்,

[1] Kaldor, 'An Expenditure Tax,' p. 53

செலவு வரி மேலானது. இச் சந்தர்ப்பத்தில் ஹாப்ஸின் (Hobbes) கூற்றும் நினைவில் வைத்தற்கு உரியது. 'வரியின் நியாயம் நுகர்வின் சமத்துவத்தில் இருக்கின்றதே ஒழிய, நுகர்வோரின் செல்வம் சமமாக இருக்க வேண்டும் என்பதில் அன்று...... நுகர்கின்ற பண்டங்களின் மீது வரிகளை விதிக்கும் பொழுது, ஒவ்வொருவரும் தான் நுகர்வதற்குச் சமமாக வரி செலுத்துகிருர். தனியார்களின் ஆடம்பரச் செலவினுல் அரசு ஏமாற்றப்படுவதும் இல்லை.'[2]

இவ் வாதத்தை எல்லோரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள் ஏற்றத்தாழ்வுகளை அளவிடுவதற்குப் பல அளவுகோல்கள் இருக்கின்றன. அவை வருமானம், நுகர்வு, செல்வம் முதலானவையாகும். மனிதர்களிடையே உள்ள பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை அளவிடுவதற்கு நுகர்வு அல்லது செலவழிக்கும் ஆற்றல் மட்டுமே ஒப்புளவு முதலாக இருக்க வேண்டும் என்பது ஏற்றுக் கொள்ளக் கூடியதன்று. வரி விதிப்பதன் முக்கியமான நோக்கம் நுகர்வைக் குறைப்பதுதான் என்று ஒப்புக் கொண்டால் கூட, நுகர்வின்மீது வரி விதிப்பதன் வாயிலாக இந் நோக்கத்தை ஈடேற்றிக் கொள்ள முடியும் என்று கூற முடியாது. ஆகவே, வருமான வரியுடன் கூட ஒரு செலவு வரியையும் விதிக்கலாம் என்று நாம் முடிவு செய்யலாம்.

### எதிர்வாதங்கள்

1. தனியார் நுகர்வுச் செலவுக்கும், ஆக்கச் செலவுக்கும் உள்ள வேறுபாட்டைக் கண்டு பிடிப்பது மிகவும் கடினம். மகிழ்ச்சிக்கான சுற்றுலாவையும் (pleasure trips), வாணிபச் சுற்றுலாவையும் பிரித்துக் காட்டுவது கடினம். நுகர்வுக்கும், சேமிப்புக்கும் இடையேகூட வேறுபாடு கற்பிப்பது கடினம். உதாரணமாக, ஒரு வீடு அல்லது கார் வாங்குவதை நுகர்வாகவும் கொள்ளலாம்; சேமிப்பாகவும் கொள்ளலாம். ஆகவே, வருமானத்தைக் காட்டிலும் செலவை வரியின் அடிப்படையாக எடுத்துக் கொள்வதை மேலானது என்று கூற முடியாது.

2. ஜோஸையா ஸ்டாம்பும், பிறரும் வரி விதிப்பதற்குச் செலவை ஒப்பளவு முதலாகக் கொள்ள முடியாது என்று கூறுகின்றனர். எவ்வளவுக் கெவ்வளவு ஒருவர் செல்வராக இருக்கிருரோ அவ்வளவுக் கவ்வளவு அவருடைய செலவின் வீதாசாரம் குறைவாகவும், சேமிக்கும் ஆற்றல் அதிகமாகவும் இருக்கும். ஒரு வீதாசார வரியை விதித்தால்தான் இக் கூற்று

உண்மையாக இருக்கும். கால்டர் சுட்டிக் காட்டுவது போன்று இது அவசியம் இல்லை. 'வரியின் வளர்வீதம் வருமான வரியின் கீழும், செலவு வரியின் கீழும் ஒன்றாக இருக்கிறது என்று கொண்டு, ஆண்டொன்றுக்கு £ 5,000 வருமானம் உடையவர் அதில் பாதியைச் செலவழிக்கிறார் என்றும், ஆண்டொன்றுக்கு £ 1,000 வருமானம் உடையவர் அதை முழுதும் செலவழிக்கிறார் என்றும் கொண்டால், செலவு வரியைக் காட்டிலும் ஒரு வருமான வரியின் கீழ், முதலாவது வகுப்பினர் இரண்டாவது வகுப்பினரைக் காட்டிலும் இலேசான வரிப் பளுவையே சுமப்பார். ஆயினும், இவ்வித எடுகோளை நாம் செய்ய வேண்டிய முடையில்லை. உண்மையில், ஒரு வருமான வரியைக் காட்டிலும் ஒரு செலவு வரியின் கீழ், முதலாவது வகுப்பினர் ஒப்புமையில் மோசமான நிலையில் இருக்கும்படி வளர்வீதத்தை மாற்றுவது முழுவதும் சாத்தியமே' (கால்டர்).[1] வரியின் அடிப்படையைச் செலவாக மாற்றி, வருமான வரியில் இருக்கும் இடுக்குகளை அடைப்பதற்குத் தக்க நடவடிக்கைகளை எடுத்து, வரி தவிர்ப்பையும், வரி ஏய்ப்பையும் தடுத்தால், இப்போது வருமான வரியில் நிலவும் வளர் வீதங்களைக் குறைத்தேயாக வேண்டும் என்று கால்டர் கூறுகிறார். இவ்விதம் வரி வீதங்களைக் குறைக்காமல் வரியின் அடிப்படையை, வருமானத்திலிருந்து செலவாக மாற்றினால், பிரிட்டனில் உடைமைகளிலிருந்து கிடைக்கும் மூலதன ஆதாயங்களைக் கொண்டு வாழ்பவர்கள்மீது வரிப்பளுவை 12-ல் இருந்து 20 மடங்குவரை அதிகரிக்க வேண்டி இருக்கும்.

3. ஒரு செலவு வரியின் கீழ் ஒரு உலோபி குறைந்த தொகையையே செலுத்த வேண்டியிருக்கும். ஆனால், வருமான வரியின் கீழ் இவன் அதிகத் தொகையை வரியாகச் செலுத்த வேண்டியிருக்கும். இது உண்மையே. ஆயினும், சிலர் வக்கிரமாக நடப்பதைத் தவிர, ஒரே சமுதாய அந்தஸ்திலும், பொருளியல் சூழ்நிலையிலும் இருக்கும் பெரும்பாலோர் ஒரே அளவு செலவு செய்கிறார்கள் எனலாம்.

4. வரி செலுத்துவோர்கள் இடையே எல்லோருக்கும் ஒரே மாதிரியான குடும்பப் பொறுப்புகள் இருப்பதில்லை. சிலருக்குப் பெரிய குடும்பம்; சிலருக்கு அளவான குடும்பம். வேறு சிலருக்கு மக்கட்பேறு கிடையாது. சிலர் மருத்துவத்திற்கும், கல்விக்கும் அதிகமாகச் செலவழிக்க வேண்டியிருக்கிறது. இவ் வேறுபாடுகளுக் கெல்லாம் வருமான வரியில் வகை செய்ய முடியும்; செலவு வரியில் வகை செயய முடியாது. இது உண்மையாக

[1] கால்டர், அதே நூல். பக்கம். 49

இருந்தாலும், செலவு வரியிலிருந்து விலக்கு அளிக்கும் வரம்பை உயர்த்துவதன் வாயிலாக, இப் பிரச்சினையை ஓரளவு சமாளிக்கலாம்.

5. செலவுகள் ஆண்டுக்கு ஆண்டு மாறுபடுகின்றன. உதாரணமாக, ஓராண்டில் ஒரு காரை வாங்கினால், அந்த ஆண்டில் மட்டும் எக்கச்சக்கமான அளவு செலவு வரி கட்ட வேண்டியிருக்கும். ஆனால், காரைப் பல ஆண்டுகள் பயன் படுத்திக் கொள்ளலாம். இதை ஓரளவு சரிக்கட்டுவதற்கு, ஐந்து அல்லது பத்தாண்டுகளில் செய்த செலவுகளின் சராசரியை எடுத்துக் கொள்ளலாம். இதனால் வரிப்பளு ஓரளவு குறையும்.

6. இறுதியாகப், பலர் ஒரு வருமான வரியை அமல் நடத்துவதைக் காட்டிலும் ஒரு செலவு வரியை அமல் நடத்துவது மிகவும் கடினம் என்கிறார்கள். ஆனால், இச் சங்கடங்களைச் சமாளித்து விடலாம் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் முன்னாள் கருவூல வல்லுநராக (Treasury Expert) இருந்த கென்னத் ஈ. பூல் (Kenneth E. Poole) எழுதுவதாவது: 'ஆட்சிக் கோணத்திலிருந்து பார்க்கும் பொழுது, செலவு வரியினால் கடக்க முடியாத சங்கடங்கள் ஏற்படாது என்ற முடிவு அறிவுக்கு உகந்ததாகவே தோன்றுகின்றது. ஆள்மாகாணம் பற்றாக்குறையாக (deficit of manpower) இருப்பதும், வரி செலுத்துவோர் ஏராளமான பேர் இருப்பதும். வரி அறிக்கைகளைச் சரிபார்ப்பதை மிகக் கடுமையான பிரச்சினையாக ஆக்கியிருக்கிறது. செலவு வரியில் சிக்கலாகத் தோற்றும் பல ஆட்சி விவரங்கள் (administrative details) வருமான வரியின் கீழும் இடைஞ்சல் அளிப்பதாகவே உள்ளன.'[1]

அறம், தூண்டுகோல், பொருளாதார ஆற்றல் இவற்றின் அடிப்படையில் வருமான வரியைக் காட்டிலும், செலவு வரி மேலானது என்று முடிவாகக் கூறலாம். ஆனால், வருமான வரியைப் பல்லாண்டுகளாக அமல் நடத்திப் பல நாடுகளும் அனுபவம் பெற்றிருக்கின்றன. செலவு வரியை அமல் நடத்துவதில் அவ்வித அனுபவத்தைப் பெறவில்லை. ஆகவே, ஒரு வருமான வரியுடன் செலவு வரியையும் விதிக்கலாம் என்று நாம் கூறலாம். இப்பொழுது நிலவும் வருமான வரியின் இடத்தைப் பிடித்துக் கொள்ள செலவு வரிக்குப் பல்லாண்டுகள் ஆகும்.

### வளர்ச்சி குன்றிய நாட்டில் செலவு வரி

முன்னேறிய நாடுகளே செலவு வரியை விதிக்காமல் இருக்கும் பொழுது, வளர்ச்சி குன்றிய நாடு இவ் வரியை விதிக்கலாமா?

[1] American Economic Review, March 1943

செலவு வரியை விதிப்பதனல் வளர்ச்சி குன்றிய நாடுகளுக்குப் பல நன்மைகள் உண்டு. 1. அது தனியார் சேமிப்புகளையும், மூலதனத் திரட்சியையும் ஊக்குவிக்கும். 2. வருமான வரியினுல் முதலீடு பாதிக்கப்படுவதுபோல, செலவு வரியினுல் முதலீடு பாதிக்கப்படுவதில்லை. 3. வருமான வரியை ஏய்ப்பதற்கும், தவிர்ப்பதற்கும் பல வாய்ப்புகள் இருக்கின்றன. செலவு வரியினுல் வருமான வரியில் உள்ள இடுக்குகளை அடைக்க முடியும். 4. வளர்ந்து வரும் பொருளாதாரத்தில் திட்டச் செலவுகளினுல் பணவீக்கம் ஏற்படுகிறது. செலவு வரியினுல் தண்டச் செலவுகளைக் குறைத்துப் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தலாம். 5. வருமானத்தின் மீதும், உடைமையின் மீதும் கடுமையான வரி விதித்துவிட்டு, திரட்டிய செல்வத்திலிருந்து செலவு செய்வதின்மீது மட்டும் வரி விதிக்காவிட்டால், செல்வர்கள் தங்கள் செல்வத்தைப் பல வழிகளிலும் செலவழித்துக் கரைப்பார்களே தவிர, தங்கள் நுகர்வு மட்டத்தைக் குறைத்துக் கொள்ளமாட்டார்கள். ஆகவே, இந் நாடுகள் செலவு வரியை விதிப்பது நல்லது.

சில எதிர்வாதங்கள் வருமாறு: 1. இப்பொழுது இருக்கும் வருமான வரியை அல்லாது மேலும் செலவு வரியை விதித்தால் வரிப்பளு தாங்கமுடியாததாக ஆகும். 2. வருமான வரிக்குப் பதிலாகச் செலவு வரியை விதித்தால், சேமிப்பு அதிகமாகும் என்பது உண்மைதான். ஆயினும், அதேசமயம் செல்வம் சிலர் கையில் குவியும். செல்வம் குவிவதைத் தடுப்பதற்காக வளர்வீத செல்வ வரிகளை விதித்தாலோ, சேமிப்புப் பாதிக்கப்படும். 3. வருமான வரியைக் காட்டிலும், செலவு வரியை அமல் நடத்துவது கடினம். 4. வேளாண்மை வருமானம் குறைவாக இருப்பதால், விவசாயிகளுக்கு இவ் வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டியிருக்கும்.

இவ் வாதங்களுக்கு எல்லாம் மறுப்புரைகள் மேலே தரப்பட்டன. ஆகவே, அவற்றை மீண்டும் கூற வேண்டிய அவசியம் இல்லை. வளர்ச்சி குன்றிய நாடுகளின் சேமிப்பை அதிகரிக்க வேண்டியது அவசியமாதலால் செலவு வரியை விதிக்க வேண்டியதே. ஆடம்பர நுகர்வை மட்டுப்படுத்துவதற்கு இவ் வரி தகுந்த கருவியாகும்.

### முடிவுரை

செலவு வரியை விதிப்பதால் மட்டும் ஒரு நாடு பொருளாதார வளர்ச்சி அடைந்துவிட முடியும் என்று கூற முடியாது. கீன்ஸ் போன்றவர்கள் எல்லாம் இவ் வரியை அமல் நடத்துவது இயலாது

என்று கூறியிருக்கிறார்கள். கொடைகளுக்கு வரியிலிருந்து விலக்கு அளிப்பதா அல்லது அவற்றின்மீதும் வரி விதிப்பதா, பந்தயம், லாட்டரிகள் இவற்றுக்கு ஆகும் செலவுகளுக்கு வரி விதிப்பதா அல்லது வேண்டாமா என்பதை யெல்லாம் தீர்மானிப்பது கடினம். மேலும், வரியைத் தவிர்ப்பதற்காகப் பலர் பாகப்பிரிவினை செய்து கொண்டு தனிக்குடித்தனம் வைக்கலாம். ஆனால், இவையெல்லாம் தீர்வு காணமுடியாத பிரச்சினைகள் அல்ல. செலவு வரியிலுள்ள ஒரே சங்கடம் அது புதுமையாக இருப்பதுதான். புதிய கருத்துகளை மக்கள் ஏற்றுக் கொள்வதற்கு நெடுநாளாகும்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. Nicholes Kaldor, 'An Expenditure Tax'.
2. N. Kaldor, 'Indian Tax Reform,' Chapter 4.
3. W. Vickrey, 'Agenda for Progressive Taxation', Chapter 12.
4. K. E. Poole, The Spendings Tax, : Problems of Administration and Equity in American Economic Review, March 1943.
5. B. R. Misra, 'Indian Federal Finance,' 4th Edition, 1963, pp. 292—303.
6. John F. Due, 'Government Finance,' Chapter 15.

# 26. இறப்பு வரியும் கொடை வரியும்

'இந்த உலகத்தின் பாணி (fashion) மாறுகிறது' என்று ஒரு கிறிஸ்தவப் பெரியார் கூறினர். பழையன கழிதலும், புதியன புகுதலும் உலகெங்கணும் எல்லாத் துறைகளிலும் காணப்படுகின்றது. வரிகள் இதற்கு விலக்கல்ல. பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில், மறைமுக வரிகளிலிருந்து போதிய வருவாய் கிடைக்கவில்லை என்பதைப் பல நாடுகளும் உணர்ந்தன. புதிய வரி மூலங்களைக் கண்டுபிடிக்கத் தொடங்கின. அவற்றில் இறப்பு வரியும் ஒன்று.

## இறப்பு வரி வேண்டும் என்பதற்கு ஆதாரமான வாதங்கள்

1. உயில் எழுதாமல் இறப்பவர்களின் உடைமைகளுக்குத் தாய உரிமை கொண்டாடுதலை ஒழித்தல் (Abolition of Intestute Succession)

ஆடம் ஸ்மித் இவ் வரியை வரி செலுத்தும் 'ஆற்றலின்' அடிப்படையில் ஆதரித்தார். அவர் இதை உடைமையின்மீதான ஒரு கழிந்த வரியாகவும் (back tax) கொண்டார். இவ் வரியை முதன் முதலில் ஆதரித்தவர் பெந்தம் (Bentham). அவர் உயில் எழுதாமல் இறப்பவர்களின் உடைமைகளுக்கு வாரிசுரிமை கொண்டாடுதலை ஒழிக்க வேண்டும் என்றுர். உயில் எழுதாமல் யாராவது இறந்தால், அவர்களின் உடைமை அரசைச் சேர வேண்டும். இதற்கு இரண்டு விலக்குகளை ஒப்புக் கொண்டார். அவை யாவன: (அ) நேரிடையான வாரிசுதாரர்கள் இருந்தால், ஒருவர் உயில் எழுதாமல் இறந்திருந்தாலும் அவருடைய உடைமை வாரிசுதாரர்களையே சேரும். (ஆ) நேரிடையான வாரிசுதாரர்கள் இல்லாதவர்களின் உயில் எழுதும் உரிமை வரையறுக்கப்பட வேண்டும். நேரிடையான வாரிசுதாரர்கள் இல்லாமலும், உயிலும் எழுதாமலும் இறந்தவர்களின் உடைமைகள் மன்னரையோ (அரசையோ) அல்லது பிரபுவையோ சேரும் என்று ஒரு சட்டம் இடைக்காலத்தில் நில (படை) மானிய முறை

(feudalism) நிலவியபோது இருந்தது. இவ் விதியை உடைமைகளை வாரிசாகப் பெறும் தாயாதிகளுக்கும் செல்லுமாறு விஸ்தரிக்க வேண்டும். நெருங்கிய உறவினர்களான பாட்டன், பாட்டி, சிற்றப்பன், சிற்றன்னை, மாமன், மாமி, மருமகன், மருமகள் இவர்கள் உடைமைகளைப் (உயில் வாயிலாகவோ, உயில் இன்றியோ) பெற்றால், அரசும் ஒரு சம பங்கைப் பெறவேண்டும். நேரிடையான வாரிசுதாரர்களுக்கும் குழந்தைகள் இல்லையென்றால் உடைமை அரசினுக்குச் சேரவேண்டும்.

2. அரசு கூட்டு வாரிசுதாரர் என்னும் கருதுகோள் (The Theory of State Co-heirship)

இக் கருதுகோளைக் கூறியவர் ஜெர்மானிய ஆசிரியரான பிளண்ட்ஷ்லி (Bluntschli) ஆவார். இக் கருதுகோள் அண்மையில் வந்த சில நூல்களிலும் காணக்கிடக்கிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகளைச் சேர்ந்தவரும், கோடீசுவரரும் ஆன ஆண்ட்ரூ கார்னஜி (Andrew Carnegie) இக் கருதுகோளை முழு மூச்சுடன் ஆதரிக்கிறார். அதேசமயம் அவர் வருமான வரியை எதிர்க்கின்றார். 'அரசின் உதவியோ அல்லது பாதுகாப்போ இன்றி தொழிலை நடத்துவதும் சரி, செல்வத்தைத் திரட்டுவதும் சரி, முடியாது. ஒவ்வொரு குடிமகனின் தொழிலிலும் (வாணிபத்திலும்) அரசு ஓர் உழைக்காத (silent) பங்காளியாகக் கருதப்படுகிறது. ஒரு பங்காளி இறந்தவுடன் இந்தப் பங்காளி வாணிபம் கலைக்கப்படுகிறது. இப்பொழுது உழைக்காத பங்காளிக்கு மூலதனத்தில் ஒரு பங்குக்கு உரிமை உண்டு.'

3. பொதுவுடைமை அல்லது செல்வத்தைப் பரவலாக்கும் கருதுகோள் (The Socialistic or Diffusion of Wealth Theory)

'செல்வம் பரவலாக இருக்கும் பொழுது அரசு எப்பொழுதும் நல்ல நிலையில் இருக்கிறது' என்று பேகன் (Bacon) கூறினார். 'ஒரு நியாயமான அளவிற்குமேல் ஒருவரும் (சொத்தைக்) சேருவது சரியன்று' என ஜான் ஸ்டூவர்ட் மில் எண்ணினார். அவருடைய திட்டம் வருமாறு: 'சுமாராகச் சுதந்திரமாக இருக்கும் அளவுக்கு மேல், சொத்தை வாரிசாகப் பெறுவதற்கு ஒருவரையும் அனுமதிக்கக்கூடாது. உயில் எழுதாமல் இறந்தால் சொத்து முழுவதும் அரசைச் சேர வேண்டும். இறந்தவரின் சந்ததியார்களுக்கு நியாயமாகவும், அறிவுக்கு உகந்த முறையிலும் அரசு வகை செய்ய வேண்டும். இப்படிச் செய்யும் பொழுது அவர்களின் (சந்ததியார்களின்) பெற்றோர் அல்லது மூதாதையர் என்ன செய்திருக்க வேண்டுமோ அப்படி அரசு செய்ய வேண்டும். அரசு ஏற்பாடு செய்யும் பொழுது அவர்களின் சூழ்நிலைகள், திறங்கள், வளர்க்கப்

பட்ட விதம் யாவற்றையும் கருத்தில் கொள்ள வேண்டும்.' இதைப் பொதுவுடைமை வாதம் எனக் கூற முடியாது என்று பேராசிரியர் ஸெலிக்மென் கூறுகிருர். இவ் வாதம் உடைமையைப்பற்றிய குடும்பக் கருதுகோளுக்கு (family theory of property) எதிரானது. நேரிடையான வாரிசுதாரர்களுக்கு வாரிசுரிமையை மறுப்பது குடும்ப ஒருமையை எதிர்ப்பதாகும். யாருக்கு வேண்டுமானுலும் உயில் எழுதி வைக்கலாம் என்ற உரிமையால், குடும்பத்திற்குள் வாரிசாக வரும் உரிமை ஏற்கனவேயே திருத்தப்பட்டிருக்கிறது. தன் குடும்பத்தைச் சேராத அயலார்களுக்குத் தன் உடைமை முழுவதையும் கொடுக்கலாம் என்ருல் நாம் குடும்ப உரிமையைப் பற்றிப் பேச முடியாது.

இக் கோட்பாட்டை ஆதரிக்கும் பலரும், சிலரின் கையில் செல்வம் குவிவதைத் தடுப்பதும், செல்வத்தில் ஏற்றத் தாழ்வுகளை நிரவல் செய்வதும் அரசின் கடமை என்று நினைக்கிருர்கள். வாரிசுரிமையாலோ, உயில் மூலமாகவோ பெற்ற செல்வத்திற்கு மட்டுமின்றி, எல்லாவகையானும் பெறப்பட்ட எல்லாவகைச் செல்வத்திற்கும் வரம்பு விதிக்க வேண்டுமென்று இவர்கள் விரும்பு கிருர்கள். யாருடைய செல்வமும் குறிப்பிட்ட அளவுக்கு மேல் போகக்கூடாது. இவ் வாதத்தை ஆதரிப்பவர்கள் பொது வுடைமைவாதிகளாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை.

4. பணி ஆக்கச் செலவு கருதுகோள் (The Cost of Service Theory)

இக் கருதுகோளின்படி வாரிசு வரி ஒரு கட்டணமாகக் (fee) கொள்ளப்படுகிறது. எழுதிவைத்த உயில் சரிதானு என்று பார்த்து நற்சான்றுகள் கொடுப்பதற்குத் தனியே விருப்ப ஆவண மன்றங்கள் (probate courts) இருக்கின்றன. இவற்றின் சேவை களைப் பயன்படுத்திக் கொள்வோர் இவற்றிலிருந்து தனிப்பட்ட ஆதாயங்களைப் பெறுகின்றனர். ஆகவே, தனிப்பட்ட ஆதாயங் களைப் பெறுவோர் இதற்காகும் செலவை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறுவது நியாயமானதல்லவா? இவ் வாதத்தை ஒத்துக் கொண்டால் மிகக் குறைந்த கட்டணங்களையே விதிக்க வேண்டும். தருக்க முறைப்படி இக் கட்டணம் தேய்வு வீதமாக இருக்க வேண்டுமேயன்றி வீதாசாரமாகவோ, அல்லது வளர்வீத மாகவோ இருக்கக்கூடாது என்பது இன்னொரு எதிர்வாதமாகும். ஒரு சிறிய தொகையைக் காட்டிலும் ஒரு பெரிய தொகைக்கு, உயிலுக்குச் சான்று தருவதற்கு வீதாசாரத்தில் குறைந்த தொகையே செலவு ஆவதால், சிறிய வாரிசுடைமையைக் காட்டி லும் பெரிய வாரிசுடைமையின்மீது வரியின் வீதம் குறைவாக

இருக்கவேண்டும். எங்ஙனமாயினும் வாரிசுடைமையின் அளவுக்குத் தகுந்தாற்போல வரியின் வீதம் அதிகரிக்கக் கூடாது.

5. கால்வழியுரிமைச் சலுகையின்மீது விதிக்கப்பட்ட கட்டணமே வாரிசுடைமை வரி என்பது (Inheritance Tax Viewed as a Charge on the more Privilage of Succession)

அமெரிக்கத் தலைமை நீதி மன்றத்தில் நீதிபதியாக இருந்த திரு மெக்கன்னு (Mekenna) அவர்கள், *1897*-ல், ' தாய வுரிமைப் படியோ அல்லது உயிலின் மூலமோ உடைமையை எடுத்துக் கொள்ளும் உரிமை, சட்டம் படைத்த உரிமையே தவிர, இயற்கையான உரிமையன்று. இது ஒரு சலுகையாகும். ஆகவே, எந்த அண்ணுவியார் இந்தச் சலுகையைத் தருகிறார்களோ, அவர்கள் இதன் மீது படிநிலைகளையும் (நிபந்தனைகளையும்) விதிக்கலாம்' என்று கூறினார். இதே போன்று பிரிட்டிஷ் பாராளு மன்றத்தில் *1894*ஆம் ஆண்டில் இறப்பு வரிகளில் திருத்தங்களைக் கொண்டுவந்த பொழுது, ஸர் வில்லியம் ஹார்கோர்ட்டு, ' தன்னுடைய வாழ்நாளுக்கு அப்பாலும் இந் நிலவுலகப் பண்டங் களின்மீது ஆணை செலுத்துவதற்கு, இயற்கை ஒருவருக்கு அதிகாரம் அளிக்கவில்லை. தன்னுடைய வாழ்நாள் முடிந்த பின்பும் உயில் எழுதுவதன் வாயிலாக தன் ஆணையை நீட்டிக்கும் அதிகாரம்—தங்கள் உடைமையை இன்னவிதமாகத் தாங்கள் இறந்த பின்பு பாத்தீடு செய்ய வேண்டும் என்று இறந்தவர்களுக் கிருக்கும் உரிமை—முற்றும் சட்டத்தின் படைப்பாகும். எந்தப் படி நிலைகளின் கீழும், வரையறைகளுக்கு உட்பட்டும் இந்த அதிகாரத்தைப் பயன்படுத்த வேண்டும் என்பதை அறுதியிடும் உரிமை அரசுக்கு உள்ளது ' என்று கூறினார். எவ்வளவு தூரம் வாரிசுடைமை ஓர் இயற்கையான உரிமை என்பதை முடிவு செய்வது மிகவும் கடினமான ஒரு பிரச்சினையாகும். 'வாரிசுரிமை' ஓர் இயற்கையான உரிமையா அல்லது சட்டத்தின் ஓர் படைப்பா என்பது அவரவர் கருத்தைப் பொறுத்ததாகும்' என்று பேராசிரியர் பிளன் (Plehn) [1] எண்ணுகிறார். ஆயினும், ' வாரிசுடைமை பழக்கத்தை இக் காலத்தில் பலரும் ஓர் இயற்கையான உரிமையாகவோ அல்லது தனியார் உடைமை உரிமையின் ஓர் இன்றியமையாத விளைவாகவோ கொள்ளாது, மொத்தத்தில் சமுதாயத்தில் விரும்பத்தக்க ஒரு நிறுவனம் என்று கொள்வதைச் சிந்தனையாளர்கள் பலரும், பெரும்பாலான பாமர மக்களும் ஒத்துக் கொள்வார்கள் ' என்று பேராசிரியர் ஸெலிக்மென் கருத்துத் தெரிவிக்கிறார். இக் கருத்தைப் பல ஆசிரியர்களும் ஏற்றுக் கொள்கிறார்கள்.

[1] Plehn. 'Introduction to Public Finance', Fourth Edition. p. 209

**எதிர்வாதங்கள்**

ஒரு தனியாருக்கு உடைமையைச் சொந்தமாக வைத்துக் கொள்ள இயற்கையான உரிமை இருக்கிறது. இவ் வரி இவ்வியற்கையான உரிமைக்கு எதிராக இருந்ததாலும், மூலதனத்தைக் குறைத்ததாலும் ரிக்கார்டோ இவ் வரியை எதிர்த்தார். இதே காரணத்தைக் காட்டிப் ஃபிரான்ஸில் ஜே. பி. ஸேயும், எம். லிராய் போலோவும் (M. Leroy-Beaulieu), இறப்பு வரிகளை எதிர்த்தார்கள். சிக்கனத்தையும், மூலதனத் திரட்சியையும் ஊக்குவிக்காததால், இவ் வரிகள் சமுதாயத்திற்கு அழிவு பயப்பனவாகும். மூலதனத்திலிருந்து வரி செலுத்தப்படுவதாகவும், அரசு இதிலிருந்து கிடைக்கும் தொகையை வருமானம் எனக் கருதி செலவழிப்பதாகவும், இதனல் மூலதனம் கரைந்து நாடு ஏழையாவதாகவும் வாதிக்கப்படுகிறது. ஆனல், பிளன் சுட்டிக் காட்டுவது போன்று வரி வீதம் மிகக் கடுமையாக இருந்தால்தான் இவ் வெதிர்வாதங்கள் பொருந்தும்.

ஆடம் ஸ்மித் [1] இவ் வரிக்கு வேருெரு மறுப்பையும் தெரிவிக்கிருர். 'சம மதிப்புக்கொண்ட உடைமைகள் யாவும் ஒரே காலத்திலேயே கை மாறுவதில்லை'. டாக்டர் பென்ஹம் கூறுவது போன்று, 'ஐம்பதாண்டுகளில் ஓர் உடைமை கை மாருததினுல், அதிலிருந்து இறப்பு வரியாக யாதொரு தொகையும் கிடைக்காதிருக்கலாம். ஆனல், அந்த ஐம்பது ஆண்டுகளுக்குள் வேருெரு உடைமை பலமுறை கை மாறலாம்.' ஒரு குடும்பத்தில் அடுத்தடுத்துப் பல சாவுகள் நேருமானல், தொடர்ந்து விதிக்கப்படும் வரிகளால் உடைமையின் பெரும்பகுதியும் பறிமுதல் ஆகும். சில நாடுகளில் இந்த அநீதியை உணர்ந்து, ஒரே உடைமை, பத்து அல்லது இருபதாண்டுகளுக்குள், மீண்டும் வரி விதிப்புக்கு ஆளாகக் கூடாது என்று சட்டம் இயற்றியிருக்கிருர்கள். எடுத்துக்காட்டாக, 1878-ல் இயற்றப்பட்ட சில்லி நாட்டு வாரிசுடைமை வரியைக் கூறலாம். இதன்படி பத்தாண்டுகளுக்குள் கைமாறும் உடைமையின்மீது இரண்டாவது தடவையாக வரி விதிக்கப்படமாட்டாது.

வாரிசுடைமை வரி உறுதி விதியை மீறுவதாகக் கூறப்படுகிறது. டாக்டர் பென்ஹம் கூறுவது போன்று 'இறப்பு வரிகளிலிருந்து இவ்வளவு வருவாய் கிடைக்கும் என்று ஒரு நிதியமைச்சரால் சரியாக மதிப்பீடு செய்ய முடியாது. ஏனெனில், வருகிற ஆண்டில் எந்தெந்தச் செல்வந்தர்கள் இறப்பார்கள் என்று

[1] Adam Smith, 'The Wealth of Nations', Vol. 2, p. 391.

அவருக்கு முன்கூட்டியே தெரியாது.' இவ் வாதம் உண்மையே. தனிப்பட்ட செல்வந்தர்கள் இறந்த பின்பே மரண வரிகளை விதித்து வசூலிக்க முடியும்.

முடிவுரை

பல முன்னேறிய குடியாட்சி நாடுகளிலும் வாரிசுடைமை வரி, வரியமைப்பின் ஓர் இன்றியமையாத உறுப்பாகிவிட்டது. ஆற்றல், வசதி, சிக்கனம் இவ் வடிப்படைகளைக் கொண்டு இவ் வரி நியாய மானதே என நிலை நாட்டுகிறார்கள். வாரிசாகப் பெறும் சொத்தை அனைவரும் எதிர்பார்க்கவில்லை என்றும், இஃது குருட்டு வழியில் கிடைத்த நற்பேறு என்றும் கூற முடியாது. மேலும், வாரிசுரிமை கொண்டாடி உடைமையைப் பெறுவதால், ஒருவரின் வரி செலுத்தும் ஆற்றலும் கூடுகிறது. மேலும், சுலபமாக வரியைச் செலுத்தக் கூடிய தறுவாயிலேயே வரி விதிக்கப்படுகிறது. அதை வசூலிக்க ஆகும் செலவும் குறைவே. இவ் வரியிலிருந்து பெருத்த வருவாயும் கிடைக்கிறது. சிலர் இதைக் கழிந்த வரியாகவும் (back tax) கொள்கின்றனர். வாழ்நாளில் வருமான வரியைக் கொடாது ஏய்த்து ஓரளவு தப்பித்திருக்கின்றனராதலால், வரியிலிருந்து தப்பிக்க முடியாத பொழுது உடைமைமீது வாரிசுடைமை வரியை விதிப்பது சரியானதே.

ரிக்னோவின் இறப்பு வரித் திட்டங்கள்

புகழ்பெற்ற இத்தாலியப் பொருளியல் புலவரான பேராசிரியர் யூஜெனியோ ரிக்னோ, 'வருமானங்களில் ஏற்றத் தாழ்வுகளைக் குறைப்பதற்கும், அதேசமயத்தில் அவை உற்பத்தியைக் குறைப்பதைத் தடுப்பதற்கும் ஒரு சிறப்பு வகை வாரிசு வரியை விதிக்கலாம்' என்று யோசனை தெரிவித்தார். 'வாரிசு வரி விதிப்பில், காலத்தில் வளர்வீத வரி முறையைக் கடைப்பிடிக்க வேண்டும்' என்று அவர் கருத்துத் தெரிவிக்கிறார். இதுகாறும் உடைமையின் அளவையும், பெறுமானத்தையும் பொறுத்து மரண வரி விதிக்கப் பட்டது. உடைமையின் அகவைக்கு ஏற்ப, மரண வரி விதிப்பது மூன்றாவது வகையாகும். உடைமையின் அகவையை அடிப் படையாகக் கொண்டால், இறந்தவரின் உடைமையில், மிகப் பலர் கை மாறி வந்த உடைமைகளின்மீது கூடுதல் வரி வீதத்தையும், பிற உடைமைகளின்மீது குறைவான வரி வீதத்தையும் விதிக்க வேண்டியிருக்கும்.

ரிக்னோவின் திட்டங்களுக்குப் பல விளக்கங்கள் தரப் பட்டுள்ளன. அவற்றுள் இரண்டு விளக்கங்கள் முக்கியமானவை. ஒன்று, 'உச்சத் திட்டம்' (maximum project) என்றும்,

மற்ருென்று, ‘ குறுமத் திட்டம் ’ (minimum project) என்றும் கூறப்படும். உச்சத் திட்டத்தின்கீழ் ஒவ்வொரு தடவை உடமை கைமாறும்பொழுதும் வரி வீதத்தை உயர்த்திக் கொண்டே வந்து, மூன்று தலைமுறைகளில் உடைமை முழுதும் மரண வரியாகக் கொள்ளப்படும். குறுமத் திட்டத்தின்கீழ் வரி வீதம் ஒரு காலத்தும் 100% ஆக உயராது. இத் திட்டப்படி மரண வரியில் இருவகைப் பட்ட வரி வீதங்கள் விதிக்கப்படும். உயில் எழுதியவர் தாமே தம் சொந்த முயற்சியால் சேர்த்து வைத்த சொத்துகளின்மீது சிறிது குறைந்த வீதத்திலும், அவர் வாரிசுடைமையாகப் பெற்ற சொத்துகளின் மீது சிறிது கூடுதலான வீதத்திலும் இறப்பு வரி விதிக்கப்படும்.

திறனாய்வு

ரிக்னனோவின் திட்டங்களைச் செயல்படுத்துவதில் மூன்று சங்கடங்கள் உள்ளன. அவை யாவன :— (1) நிருவாகச் சங்கடங்கள். (2) சமுதாய, தனியாள் சம்பந்தப்பட்ட அநீதிகள் (social and personal injustices). (3) பொருளாதாரக் குறை பாடுகள். பூரணமாக ஆவணங்களைத் (records) தயாரிப்பதற்கு இரண்டு தலைமுறையேனும் ஆகும். கூட்டு முதலீடுகளுக்கும் (join investments), செட்டில்மெண்டுகளுக்கும் (settlements), டிரஸ்டு களுக்கும் சிறப்பு விதிகளைச் சட்டத்தில் சேர்க்க வேண்டும். வாய் மொழி வாயிலாக அளிக்கப்பட்ட கொடைகளை மறைப்பவர் களுக்குக் கடுமையான தண்டனை வழங்கவேண்டும். வாரிசு தாரர்கள், தாங்கள் வாரிசாகப்பெற்ற செல்வத்தை விற்காமல் தடை செய்யவேண்டும். உயில் எழுதியவர் வாரிசாகப்பெற்ற செல்வம் ஊதாரித்தனத்தினால் கரைக்கப்பட்டிருக்குமானால், அவர் வாரிசாகப்பெற்ற செல்வத்தை அவர் சொந்த முயற்சியால் சேர்த்து வைத்த செல்வத்திலிருந்து பிரிக்க முடியாது. சொத்துகளின் பல பகுதிகளின்மீதும் பல்வேறு வீதங்களில் வரி விதிப்பதனால், அநீதி விளையலாம். முதல் தடவை வரி விதிப்புக்கும், இரண்டாம் தடவை வரி விதிப்புக்கும் இடைப்பட்ட காலத்தில் விலைகள் ஏறியிருந்தால், கூடுதல் வீதத்தில் வரி விதிப்பது அநீதியாகும். ஏனெனில், வாரிசுதாரர் முன்னர், குறிப்பிட்ட ஒரு பணத்தொகைக்கு வாங்கியதைவிடக் குறை வாகவே இப்போது பண்டங்களை வாங்க முடியும் (பணத்தின் வாங்கும் சக்தி குறைந்து விட்டது). ஆனால், விலைகள் குறைந் திருந்தால், அதே அளவு வரி விதித்தால் வரிப்பளு குறையும். ரிக்னனோவின் திட்டத்தால் சேமிப்பு அதிகரிக்கும். எவ்வா றெனில், ரிக்னனோ திட்டத்தின்கீழ் வாரிசுதாரர் தாம் முன்னோ ரிடமிருந்து பெற்ற உடைமைகளில் சிறிது தொகை குறையலாம்

என்பதையும் உணர்ந்திருப்பார். அதேபோல், தாம் சேர்த்து வைக்கும் உடைமைகளின்மீது அதிக வரி விதிக்கப்படமாட்டாது என்பதையும் உணர்ந்திருப்பார். ஆதலால், அவர் அதிகம் சொத்து சேர்த்து வைக்கலாம். கோல்வின் குழு ரிக்ஞேவின் திட்டங்களுக்கு ஆதரவு தந்தது.

### இந்தியாவில் எஸ்டேட் வரி

1953ஆம் ஆண்டில் எஸ்டேட் வரிச் சட்டம் இயற்றப்பட்டு, அக்டோபர் 15ஆம் நாள் அமலுக்கு வந்தது. இதற்கு முன்பு மொகலாயப் பேரரசர்கள் தங்களிடம் பணியாற்றிய பிரபுக்களின் சொத்துகளை வாரிசாகப் பெறுவதற்கு உரிமை கொண்டாடினர்கள். சில வேளைகளில் செல்வந்தர்களாக இருந்த வணிகர்களின் உடைமைகளுக்கும், உரிமை கொண்டாடினர்கள். அவுரங்கசீப் ஷாஜஹானுக்கு எழுதிய கடித்ததை ஃபிரான்ஸ் நாட்டிலிருந்து இந்தியாவுக்கு வந்த பெர்னியர் என்னும் வழிப்போக்கர் பாதுகாப்பாக வைத்திருக்கிருர். அக் கடிதத்தின் ஒரு பகுதி வருமாறு: 'ஒரு பிரபு அல்லது செல்வந்தரான ஒரு வணிகர் இறந்தவுடன், சில வேளைகளில் அவர் உடலிலிருந்து ஆவி பிரிவதற்கு முன்பே, அவருடைய பணப்பேழைகளின் மீது முத்திரை (seal) வைப்பதும், அவர் வீட்டில் உள்ள அனைத்துச் சொத்தையும் (மிகவும் குறைந்த பெறுமானமுள்ள நகையைக்கூட விடுவதில்லை) பற்றிய தகவல்களைத் தெரிவிக்கும்வரை அவருடைய ஏவலாளர்கள் அல்லது பணி முதல்வர்களைச் சிறையில் தள்ளுவதும், அடிப்பதும் நம்முடைய வழக்கமாகும். இவ் வழக்கம் ஆதாயத்தை நல்குகிறது என்பதைப்பற்றி ஐயமில்லை. ஆனுல், அதன் அநீதியையும் கொடுமையையும் நம்மால் மறுக்க முடியுமா?'[1] இங்ஙனம் எழுதியபோதிலும், அவுரங்கசீப் பட்டத்திற்கு வந்த பிறகு இந்த வழக்கத்தைக் கைவிடவில்லை. இதன்மூலம் பெருந்தொகை வருவாயாகக் கிடைத்தது. 1641ஆம் ஆண்டில் அஸப்கான் இறந்தபொழுது, மொகலாய அரசுக்கு உருபா 19 கோடி கிடைத்தது. இத் தொகை மிகைப்படுத்திக் கூறப்பட்டதாகும் என்று நாம் நினைக்கிறோம். இருந்தாலும் எதிர்பாராத இவ் வரவின்மூலம் பெருந்தொகை கிடைத்தது என்று தெரிகிறது. அரசினிடம் பணி புரிந்த உத்தியோகஸ்தர்களைப் பொறுத்தவரை, இவ்வகைச் சொத்துப் பறிமுதல் அவர்கள் அரசுடன் செய்து கொண்ட ஊழிய ஒப்பந்தத்தின் ஒரு பகுதியாகும் எனலாம். ஏனெனில், பேராசையால் உந்தப்பட்டு மக்களிடமிருந்து உத்தியோகஸ்தர்கள் கொள்ளையடித்த பொருளை அரசு பறிமுதல் செய்து

[1] G. Findlay Shirras, 'The Science of Public Finance', p. 396.

திரும்பப்பெறுவது நியாயமே. ஆனால், வணிகர்களின் சொத்தை அரசு பறிமுதல் செய்ததால், தொழிலுக்கும், வணிகத்துக்கும் பெரிதும் குந்தகம் ஏற்பட்டிருக்கவேண்டும்.

இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முன்பு பீகானீர் சுதேச சமஸ்தானத்தில் மட்டும் இறப்பு வரி விதிக்கப்பட்டது. இந்திய வரி விதிப்பு விசாரணைக் குழுவும் (The Indian Taxation Enquiry Committee) *1924—25-ல்*, தனியாளின் சங்கம சொத்துகளின்மீது வரிகளை விரிவாக்க வேண்டுமென்று சிபாரிசு செய்தது. *1944—45-ல்* இந்திய அரசின் நிதிய உறுப்பினராக (Finance Member) இருந்த ஸர் ஜெரிமி ரெய்ஸ்மான் வரவு செலவு திட்டத்தைச் சமர்ப்பித்து பேசும் பொழுது, ' இறப்பு வரிகளைக் கொணர அரசு கருதியிருக்கிறது என்று ' கூறினர். கூட்டரசின் நீதிமன்றம் (Federal Court) ' எஸ்டேட் வரியை விதிக்க இந்திய அரசுக்கு அதிகாரம் இல்லை ' என்று கூறியது. இதன் பிறகு அப்பொழுது இந்தியாவின் துணை மந்திரியாக (Under-Secretary of State for India) இருந்த லிஸ்டோவல் பிரபு பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் *1935*ஆம் ஆண்டைய இந்திய அரசுச் சட்டத்திற்கு ஒரு திருத்தத்தைக் கொணர்ந்தார். இதன்படி, இந்தியக் கூட்டரசின் சட்ட மன்றத்திற்கு (Federal Legislature) இவ்விதச் சட்டத்தை இயற்றும் அதிகாரம் அளிக்கப்பட்டது. இந்திய அரசு ஒரு எஸ்டேட் வரி மசோதாவைத் தயாரிக்கும்படி ஸர் பி. என். ராவை (Sri B. N. Rau) நியமித்தது. இதற்கிடையே, இந்தியாவில் அரசியல் மாறுதல்கள் ஏற்பட்டன. *1947*ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் *15*ஆம் நாள் இந்தியா டொமினியன் அந்தஸ்தைப் (Dominion States) பெற்றது. *1950*ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் *26*ஆம் நாள் இந்தியா ஒரு குடியரசு நாடாயிற்று.

*1953*ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட எஸ்டேட் வரியின் முக்கியமான கூறுகளாவன: (*1*) இறக்கும் பொழுது ஒருவர் வைத்து விட்டுப்போன உடைமையின் மதிப்பின்மீது இவ் வரி விதிக்கப்படுகிறது. (*2*) பாகப் பிரிவினை ஆகாத இந்து குடும்பங்களைப் பொறுத்தவரை உருபா *50,000*-க்கு குறைந்த மதிப்புள்ள உடைமைகளுக்கு இவ் வரியிலிருந்து விலக்களிக்கப்பட்டது. (*3*) பிற உடைமைகளைப் பொறுத்தவரை வரி விலக்கு வரம்பு

எச்சமில் பொருளையும் அரசனுக்குரிய வரவு என்று கௌடலீயம்-பொருணூல் (பக்கம் *167-168*) கூறும். எச்சமில் பொருளாவது மக்கள் பேறில்லாதார் பொருள், இழந்தத்தன் நினைப்பு, வினைஞர் தண்டம், நெறியிலி, அழிவிளீடு, கையுறை, பூசலால் எய்தும் பொருள், எச்சமில் பொருள், நிதி என்னும் இவை வேருயது ஆகும். கௌடலீயம் பொருணூல்', தமிழ் மொழி பெயர்ப்பு, பண்டிதமணி, மு. கதிரேசஞ் செட்டியார், சிரோமணி, வித்துவான், பி. ஸ்ரீ. இராமாநுஜாசாரி, *1955*.

நூருயிரம் உரூபாவாகும். (4) கம்பெனிகளும், கார்ப்பொரேஷன் களும் இறப்பு வரியைச் செலுத்த வேண்டியதில்லை. (5) உடைமையில், ரொக்கப் பணம், பொன், வெள்ளி நகைகள், கார்கள், பங்குகள், கடன் பத்திரங்கள், பிறரிடமிருந்து வரவேண்டிய கடன்கள், நிலம் முதலான யாவும் அடங்கும். (6) இறப்பதற்கு ஆறு திங்களுக்கு முன்பு அறத்திற்காக ஒரு நன்கொடை வழங்கியிருந்தால், அதற்கு வரியிலிருந்து விலக்கு உண்டு. பிற கொடைகளைப் பொறுத்த வரையில் அவை ஈராண்டுகளுக்கு முன்பு வழங்கப்பட்டிருந்தால் அவற்றுக்கு வரி கிடையாது. நன்கொடையைப் பெற்றவர் உடனே அச் சொத்தை தம் வசம் எடுத்துக் கொள்ள வேண்டும் (7) இவ் வரியின் வீதம் வளர் வீதத்தில் 4%-ல் இருந்து 85% வரை உயர்ந்து செல்கிறது. (8) குடும்பத்தில் அடிக்கடி சாவுகள் ஏற்பட்டால், அதற்கு ஓரளவு இவ் வரியிலிருந்து நிவாரணம் அளிக்கப்படுகிறது. ஒரு குடும்பத்தில் இரண்டாவது மரணம் (முதல் மரணத்தை அடுத்து) 1,2,3,4,5 ஆண்டுகளில் ஏற்பட்டால், அதற்கேற்ப வரியின் வீதம் 50%, 40%, 30%, 20%, 10% குறைக்கப்படும். வரியின் வீதங்கள் வருமாறு :

(அ) முதல் உரூபா 50,000 மதிப்புள்ள சொத்தின்மீது வரி கிடையாது.

(ஆ) அடுத்த உரூபா 50,000 மதிப்புள்ள சொத்தின்மீது 4%-உம்,

(இ) அடுத்த உரூபா 1,00,000 மதிப்புள்ள சொத்தின்மீது 10%-உம்,

(ஈ) அடுத்த உரூபா 1,50,000 மதிப்புள்ள சொத்தின்மீது 15%-உம்,

(உ) அடுத்த உரூபா 1,50,000 மதிப்புள்ள சொத்தின்மீது 25%-உம்,

(ஊ) அடுத்த உரூபா 5,00,000 மதிப்புள்ள சொத்தின் மீது 30%-உம்,

(எ) அடுத்த உரூபா 5,00,000 மதிப்புள்ள சொத்தின்மீது 40%-உம்,

(ஏ) அடுத்த உரூபா 25,00,000 மதிப்புள்ள சொத்தின்மீது 50%-உம்,

(ஐ) எஞ்சியுள்ள சொத்தின் மதிப்பின்மீது 85% உம் வரி செலுத்தவேண்டும். (அதாவது ஒருவர் உரூபா 40 இலட்சத்திற்கு மேல் மதிப்புள்ள சொத்துகளைப் பெற்ருல்). ஒருவர் உரூபா

50 இலட்சம் மதிப்புள்ள சொத்துகளைப் பெற்ருல், அவர் உருபா 22,22,000 எஸ்டேட் வரியாகச் செலுத்த வேண்டியிருக்கும். இது மொத்த சொத்தின் மதிப்பில் ஏறத்தாழ 40% ஆகும்.

இந்தியாவில் சமுதாயக் காப்புறுதி அனைவருக்கும் இல்லை. ஆகவே, நம் நாட்டில் கால்வழியினருக்குக் கிடைக்கும் சொத்தின் மீது கடுமையான எஸ்டேட் வரி விதிப்பது அநீதியாகும். வாஞ்சுக் குழு வரி விதிப்பை உருபா 2 இலட்சமாக உயர்த்தவேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறது.

எஸ்டேட் வரியிலிருந்து கீழ்க்கண்ட சொத்துகளுக்கு விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

1. இந்தியாவுக்கு வெளியேயுள்ள அனைத்து உடைமைகள்.

2. இறந்தவருக்கு டிரஸ்டி உரிமை மட்டும் இருந்த உடைமை.

3. உருபா 2,500-க்கும் குறைவான மதிப்புள்ள வீட்டுப் பண்டங்கள், சாமான்கள், உபகரணங்கள்.

4. விலைப்படுத்தற்குச் சேகரிக்காமல் பொழுதுபோக்குக் காகச் சேகரித்த படங்கள், ஓவியங்கள், கையெழுத்துப்படிகள், பிற ஆள் (Personal) உடைமைகள்.

5. உருபா 5,000-க்கு மேற்படாத திருமணப் பரிசுகள். 1958-ல் இத் தொகை உருபா 10,000 ஆக உயர்த்தப்பட்டது.

6. உருபா 1,000-க்கு மேற்படாத ஈமக்கிரியைச் செலவுகள்.

7. உண்மையான கடன்கள், பிற கலன்கள் (Encum-derances).

8. உருபா 5,000-க்கு மேற்படாத விதவையின் கடன்.

9. இறப்பதற்கு மூன்று திங்களுக்கு முன்பு இறந்தவர் எஸ்டேட் வரி செலுத்தியிருந்தால், அவர் இறந்த பின்பு அவருடைய வாரிசுதாரர் எஸ்டேட் வரி செலுத்த வேண்டிய தில்லை. எஸ்டேட் வரியிலிருந்து ஆண்டுதோறும் ஏறக்குறைய உருபா 7 கோடி கிடைக்கிறது. எடுத்துக்காட்டாக, 1973-74ஆம் ஆண்டில் இவ் வரியின் மூலமாக உருபா 9.2 கோடி கிடைக்கு மென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. நாட்டின் மக்கள் தொகையை யும், பரப்பையும் பார்க்கும் பொழுது இத் தொகை மிகவும் குறைவு.

### கொடை வரி (Gift Tax)

திரு. நிக்கோலஸ் கால்டர் சிபாரிசு செய்தபடி இந்திய அரசு 1958-ல் இவ் வரியை விதித்தது. இது செல்வ வரிக்கும்,

எஸ்டேட் வரிக்கும் அநுசரணையானது. செல்வ வரி, செலவு வரி, எஸ்டேட் வரி இவற்றைச் செலுத்தாமல் ஏய்ப்பதைத் தடுப்பதற்கு இவ் வரியை விதிப்பது இன்றியமையாததாயிற்று. கொடை வரி வளர் வீதத்தில் விதிக்கப்படுகிறது. இவ் வரியின் வீதம் 5% வீதத்திலிருந்து 50% வரை செல்கிறது. உரூபா 10,000-க்குக் குறைந்த மதிப்புள்ள கொடைகளுக்கு வரி கிடையாது.

| | | | | |
|---|---|---|---|---|
| அடுத்த உரூபா | 15,000 | இன்மீது | 5% | உம், |
| ,, ,, | 25,000 | ,, | 8% | ,, |
| ,, ,, | 50,000 | ,, | 10% | ,, |
| ,, ,, | 50,000 | ,, | 15% | ,, |
| ,, ,, | 50.000 | ,, | 17½% | ,, |
| ,, ,, | 1,50,000 | ,, | 20% | ,, |
| ,, ,, | 1,50,000 | ,, | 25% | ,, |
| ,, ,, | 5,00,000 | ,, | 30% | ,, |
| ,, ,, | 5,00,000 | ,, | 40% | ,, |

எஞ்சிய தொகையின்மீது 50% உம், வரி விதிக்கப்படுகிறது. அதாவது, உரூபா 14,90,000 நன்கொடை பெறுபவர்கள், உரூபா 4.41,500 (ஏறக்குறைய 30%) கொடை வரியாகச் செலுத்த வேண்டும்.

கொடை வரியிலிருந்து கீழ்க்கண்ட விலக்குகள் அளிக்கப் பட்டுள்ளன:

1. இந்தியக் குடிகள் அல்லாதவர்கள் சங்கமச் சொத்துகளை வைத்திருந்தால், அவர்களுக்கு இவ் வரி கிடையாது.

2. தபால் சேமிப்பு சான்றிதழ்கள் (postal savings certificates).

3. அரசினுக்கு அல்லது தல அரசினுக்கு வழங்கப்படும் கொடைகள்.

4. குறிப்பிட்ட சமயத்தவர் மட்டும் ஆதாயம் அடையாது அனைவரும் ஆதாயம் பெறக்கூடிய அறக் கொடைகள்.

5. திருமணத்திற்கு அளிக்கப்படும் கொடைகள் (உரூபா 10,000-க்குமேல் போகாமலிருந்தால்).

6. மனைவிக்கு அல்லது கணவனுக்கு உரூபா 1 இலட்சம் வரை அளிக்கப்படும் கொடைகள்.

7. காப்புறுதித் தொகைகள் (உருபா 10,000 வரை).

8. இறக்கும் தறுவாயில் அளிக்கப்பட்ட கொடை (இவ் விதக் கொடையின் மீது எஸ்டேட் வரி விதிக்கப்படும்).

9. குழந்தைகளின் கல்விச் செலவுக்காக அளிக்கப்படும் கொடை.

10. ஏவலாளருக்கோ அல்லது ஏவலாளரின் குடும்பத் தினருக்கோ இனுமாகவோ, போனஸாகவோ, ஓய்வுச் சம்பள மாகவோ அளிக்கப்படும் தொகை.

11. பூமிதானம் அல்லது சம்பத்து தான இயக்கத்தினர் களுக்கு அளிக்கப்படும் கொடை.

12. தனியார் கம்பெனிகள் ஒழிந்த ஏனைய கம்பெனிகள் அளிக்கும் கொடைகள்.

1972-73ஆம் ஆண்டில் 3, 8 கோடி உருபா இவ் வரியின் மூலம் இந்திய அரசுக்குக் கிடைத்தது (திருந்திய பட்ஜெட்).

கால்டர் சிபாரிசு செய்தபடி இவ் வரி விதிக்கப்படவில்லை. அவர் இப்போதுள்ள எஸ்டேட் வரியை அகற்றிவிட்டு ஒரு கொடை வரியை விதிக்கவேண்டும் என்று கூறினர். கொடையைப் பெறுவோர்தான் இவ் வரியைச் செலுத்தவேண்டும். அவர் பெற்ற அனைத்துச் செல்வத்தின் மீதும் (இக் கொடையையும் சேர்த்து) வரியை வளர்வீதத்தில் விதிக்கவேண்டும். ஆனல், இப்பொழுது உள்ள சட்டத்தின்படி கொடையாளியே வரியைச் செலுத்துகிருர். இவ் வரி ஒரு முக்கியமான வருவாய்மூலம் அல்லவாயினும், எதிர் காலத்தில் ஒரு முக்கியமான இடத்தைப் பெறலாம்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Report of the Taxation Enquiry Commission, 1953-1954, Vol. II.

2. N. Kaldor, 'Report on Indian Tax Reform.'

3. R. Seshachalam, 'A Study in Public Finance,' 1950, Chapter 25, Pages 215-242.

4. Seligman, 'Essays in Taxation', Chapter 5, Pages 126-144.

5. J. A. Hobson, 'Taxation in the New State', Methuen & Co., 1919, Chapter 6.

6. G. Findlay Shirras, 'The Science of Public Finance', Chapter 23.

7. John F. Due, 'Government Finance', Chapter 19.

8. Philip E. Taylor, 'The Economics of Public Finance', Chapter 21.

9. Seligman, 'Progressive Taxation in Theroy and Practice', 2nd Edition, 1908, pp. 319-322.

10. B. R. Misra, 'Indian Federal Finance', Chapter 14 and pp. 303—310.

# 27. நில வரி

உலகெங்கணும் நில வரி விதிக்கப்படுகிறது. வரிகளில் மிகத் தொன்மையானது நில வரி என்று சிலர் கூறுகிறார்கள். ஆயினும், வேறு சிலர் ஆள் வரிகளும் (poll tax), பண்டைக் காலத்திய குடிசை வரிகளும் (hut taxes), நிலவரியைக் காட்டிலும் தொன்மையானது என்று கருதுகிறார்கள். சீனாவிலும், எகிப்திலும் கி. மு. 2,000 இலேயே நில வரி விதிக்கப்பட்டது.

## ஏதென்ஸில் நில வரி

நிலத்தின் மொத்த விளைச்சலின்மீது இவ் வரி விதிக்கப்பட்டது. நாசினிக்கஸ் (Nausinicus) காலத்தில் (கி. மு. 378) இது பொதுவான சொத்து வரியாக உரு மாறியது. நிலம், வீடு, அடிமைகள், கால்நடை, நாற்காலி, மேஜை, பணம் ஆகியவற்றின் மீது இவ் வரி விதிக்கப்பட்டது.

## உரோமில் நில வரி

உரோமானியக் குடியரசில் போரில் தோற்ற மக்களின் நிலம் உரோமானியக் குடியரசுக்கு உரித்தாயிற்று. பத்தில் ஒரு பங்கு (tithes) அரசின் கடமையாகக் கொள்ளப்பட்டது. சில சமயம் பணமாகவும் இவ் வரி வசூலிக்கப்பட்டது. சில மாகாணங்களில் தானியமாகவே வசூலிக்கப்பட்டது. இத் தானியம் உரோமாபுரி மக்களுக்கு இலவசமாக வழங்கப்பட்டது. வரி வசூல் உரிமை ஏலத்திற்கு விடப்பட்டது. வரி வசூல் உரிமையை ஏலத்தின்மூலம் பெற்றவர்கள் இரக்கமில்லாமல் மக்களைக் கொள்ளையடித்து ஒரு குறிப்பிட்ட பகுதியை அரசுக்குச் செலுத்தவிட்டு, எஞ்சியதைத் தாங்களே சுருட்டிக்கொண்டனர். உரோமானியச் சக்கரவர்த்தியே வரி வீதத்தை அறுதியிட்டார். வரியைத் தள்ளுபடி (வஜா) செய்யும் அதிகாரமும் பேரரசருக்குத்தான் இருந்தது. மக்கள் கணக்கெடுப்பில் (Cences) நிலத்தின் பரப்பு, சாகுபடி முறை, ஒவ்வொரு நிலத்திலும் கிடைத்த விளைச்சல் இவை குறிக்கப்பட்டன.

கடந்த பத்தாண்டுகளின் சராசரி விளைச்சல் ஒப்பளவாகக் கொள்ளப்பட்டது. பேரரசர் டயோகிளிட்டியன் (கி. பி. 245-313) நிலவரி முறையைத் திருத்தியமைத்தார். அவர் மீளவும் ஸெட்டில் மெண்ட் (Settlement) அல்லது மதிப்பீடு செய்வதற்குப் பதினைந்து ஆண்டுகளைக் கால அளவாகக் கொண்டார்.

இந்தியாவில் மிகப் பழங் காலத்திலிருந்தே நில வரி வசூலிக்கப்பட்டு வருகிறது. களத்துமேட்டிலிருந்து ஆறிலொரு பங்கு விளைச்சலை அரசன் வரியாகக் கொள்ளக்கடவன் என்று மனுதரும சாத்திரம் கூறும்.[1] ஆனால், போர் முதலிய நெருக்கடியான காலங்களில் நாலில் ஒரு பங்கு விளைச்சலை வரியாகத் தண்டலாம். தானியமாகவே நில வரி வசூலிக்கப்பட்டது. காலம் செல்லச் செல்ல, சிறப்பாக மகம்மதியர்களின் ஆட்சி ஏற்பட்ட பிறகு நில வரி பணமாக வசூலிக்கப்பட்டது. இந்து அரசர்கள் நிறுவிய இவ் வரியமைப்பில் மொகலாயர்கள் யாதொரு அடிப்படையான மாறுதலையும் செய்யவில்லை. இந்து அரசர்களின் காலத்தியப் பழக்கங்களை முஸ்லீம் மன்னர்கள் ஒரு கட்டமைந்த கோப்பாகத் தொகுத்தார்கள். கணக்கேடுகளும், வருவாய்க் கணக்குகளும் முறையாக ஏற்பட்டன. ஷெர்ஷா சில சீர்திருத்தங்களைப் புகுத்தினர். இப்பொழுது நிலவும் நில வரி முறையின் பெரும் பகுதியும் பேரரசர் அக்பரின் அமைச்சராக இருந்த ராஜா தோடர்மால் புகுத்தியதேயாகும். இதன்படி நிலம் நான்கு தரங்களாக வகுக்கப்பட்டது. நிலங்களை அளப்பதற்கு ஒரு பொதுவான அளவுகோலும் நிர்ணயிக்கப்பட்டது. கடந்த பத்தாண்டுகளின் விளைச்சலைக் கொண்டு, நிலத்தின் சராசரி விளைச்சல் அறுதியிடப்பட்டது. இதைப் பணமாக மாற்றுவதற்குக் கடந்த பத்தொன்பது ஆண்டுகளில் நிலவிய விலைகள் அடிப்படையாகக் கொள்ளப்பட்டது. இங்ஙனம் அறுதியிடப்பட்ட விலையில் மூன்றில் ஒரு பங்கு அரசுக்குச் செலுத்தப்பட வேண்டிய வரியாகும். அரசு அதிகாரிகள் நில வரியை நிலக்கிழார்களிடமிருந்து நேரிடையாக வசூலித்தார்கள். வின்ஸெண்ட் ஸ்மித் என்ற வரலாற்று பேராசிரியர் அக்பருடைய ஏற்பாடு ரயத்வாரி முறைதான் (ரயத் என்னும் சொல்லுக்கு இந்தியில் குடியானவன் என்று பொருள். நில வரியை இந்தியில் கிஸ்தி என்பர்) என்பதை ஒப்புக் கொள்கிறார். ஒன்பதாண்டுகளுக்கு ஒரு முறை ஸெட்டில்மெண்ட் (Settlement) செய்ய வேண்டும். ஆயினும், பல

[1] 'தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்று ஆங்கு ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை' என்னும் குறளுக்கு, ஐவகையும் அறம் செய்தற்கு இடனாகலின் ஐம்புலனென்றார். அரசனுக்கு இறைப்பொருள் ஆறில் ஒன்றாயிற்று. இவ் வைம்புலத்திற்கும் ஐந்து கூறு வேண்டுதலான் என்பதறிக, என்ற பரிமேலழகர் உரையை ஒப்பு நோக்குக.

தலைமுறைகளாக இதில் எந்தவித மாறுதலும் செய்யப்படவில்லை. தோடர்மால் செய்ததைப் போன்று, தக்கணத்தின் ஆமத் நகரத்தில் அமைச்சராக இருந்த மாலிக் ஆம்பர் என்பார் நில வரி வசூலில் சில சீர்திருத்தங்களைச் செய்தார். மராட்டிய நில வரி முறை, மாலிக் ஆம்பரின் சீர்திருத்தத்தைப் பின்பற்றிச் செய்யப் பட்டதேயாகும்.

மொகலாயப் பேரரசு சரிய ஆரம்பித்தபொழுது நில வரி வசூல் உரிமையை ஏலத்திற்கு விடும் பழக்கம் தோன்றியது. இதன்படி ஏலம் எடுத்த ஒப்பந்தக்காரர்கள், வசூலான தொகையில் ஒன்பது பங்கை அரசுக்குச் செலுத்திவிட்டு, எஞ்சிய ஒரு பங்கைத் தங்களின் ஊதியமாக எடுத்துக் கொண்டனர். படிப்படியாக இவர்கள் அதிகாரங்களைப் பெருக்கிக் கொண்டதுமன்னியில், இந் நிலங்களி லிருந்து வரி வசூல் செய்வதற்குப் பரம்பரை உரிமை கொண்டாடி னார்கள். நிலத்தைப் பயிரிட்டு வந்த குடியானவர்களை இவர்கள் கொடுமைப்படுத்திக் கசக்கிப் பிழிந்தார்கள். இவர்கள்தாம் பிற் காலத்தில் ஜமீன்தார்கள் எனப்பட்டவர்கள்.

இங்ஙனமாகப் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் பணி மிகக் கடினமானதாக ஆயிற்று. முதலில் அவர்கள் பல தவறுதல்களைச் செய்தனர். 1765-ல் வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய மூன்று மாகாணங்களிலும் நில வரியை வசூல் செய்யும் உரிமையைக் கிழக் கிந்தியக் கம்பெனி பெற்றது. 1772-ல் இரட்டை ஆட்சிமுறை (Dual Government) அகற்றப்பட்டது. ஒன்றின்பின் ஒன்றாகப் பல சீர்திருத்தங்களைச் செய்தபிறகு, 1793-ல் காரன்வாலிஸ் பிரபு வங்காள நிரந்தர ஏற்பாட்டைச் (Permanent Settlement of Bengal) செய்தார். இதன்படி ஜமீன்தார்கள் நிலத்திற்கு உரியவர்கள் என்று ஒப்புக் கொள்ளப்பட்டது. அவர்கள் அரசுக்குச் செலுத்த வேண்டிய வரியும் நிரந்தரமாக அறுதியிடப்பட்டது. ஆனால், புதிய ஏற்பாட்டின் விளைவுகள் அவ்வளவு மகிழ்ச்சியைத் தருவதாக இல்லை. முதலில், ஜமீன்தார்களால் இவ் வரியைச் செலுத்த முடிய வில்லை. ஆதலால், குத்தகைதாரர்கள் பெரிதும் துன்புறுத்தப் பட்டனர். 1859ஆம் ஆண்டிலும், 1885ஆம் ஆண்டிலும், குத்தகைதாரர்களின் உரிமைகளைப் பாதுகாக்கச் சட்டங்கள் இயற்றப்பட்டன. ஆயினும், அவற்றால் எதிர்பார்த்த விளைவுகள் கிட்டவில்லை. 1795ஆம் ஆண்டில் இந் நிரந்தர ஏற்பாடு வாரணா சிக்கும் (காசிக்கு), 1802-ல் சென்னை மாகாணத்தில் சில பகுதி களுக்கும் விஸ்தரிக்கப்பட்டது. தமிழ் மாவட்டங்களில் இருந்த பாளையக்காரர்களின் அந்தஸ்து, வட மாவட்டங்களில் இருந்த ஜமீன்தார்களின் அந்தஸ்தைப் பெரிதும் ஒத்திருந்தது.

1802-க்கும் 1807-க்கும் இடையில் பாளையக்காரர்கள் நிலத்திற்கு என்றென்றும் உரியவர்களாக அறிவிக்கப்பட்டனர். அவர்கள் அரசுக்குச் செலுத்தவேண்டிய வரியும் (இது பெய்குஷ் எனப்படும்) நிரந்தரமாக அறுதியிடப்பட்டது. இங்ஙனமாகச் சர்க்கார் மாவட்டங்களிலும் (இதில் கோதாவரி, கிருஷ்ணை, குண்டூர், விசாகப் பட்டினம் மாவட்டங்கள் அடங்கும்), சித்தூர் (இம் மாவட்டங்கள் இப்பொழுது ஆந்திரப் பிரதேசத்தின் பகுதிகள்), இராமநாதபுரம், திருநெல்வேலி, திண்டுக்கல் மாவட்டங்களில் (இப்பொழுது திண்டுக்கல் தனி மாவட்டமாக இல்லை. மதுரை மாவட்டத்தின் பகுதியாகும்) சில பகுதிகளிலும் ஜமீன்தாரி முறை விஸ்தரிக்கப் பட்டது. ஜமீன்தாரி முறையை விஸ்தரிக்கும் முயற்சி 1820-ல் கைவிடப்பட்டது. 1820-க்குப் பிறகு பல மாகாணங்களிலும் செய்யப்பட்ட ஏற்பாடுகள் தற்காலிகமானதாகவே செய்யப்பட்டன. இருபது ஆண்டிலிருந்து முப்பது ஆண்டுக்கு ஒரு முறை இவ்வேற் பாடுகள் செய்யப்பட்டன. இது ரயத்வாரி முறை என்று பெயர் பெறும். ரயத்வாரி முறைதான் இந்தியாவில் மிகப் பரவலாக உள்ளது.

1947-ல் இந்தியா விடுதலை பெற்றபிறகு, பல மாநிலங் களிலும் ஆட்சியில் இருந்த காங்கிரஸ் கட்சி ஜமீன்தாரி முறையை ஒழிக்கச் சட்டம் இயற்றியது. ஜமீன்தார்களுக்கு இழப்பீடாக ரூபா 570 கோடி அளிக்கப்படும் என்று மதிப்பிடப்பெற்றது. கடந்த சில ஆண்டுகளில் பல மாநிலங்களும், ஒவ்வொரு குடும்பமும் இவ்வளவுதான் நிலம் வைத்திருக்கலாம் என்று உச்ச வரம்புச் சட்டம் இயற்றியுள்ளன.

இந்தியாவில் நில வரி முக்கியமானதோர் வருவாய் இன மானாலும், அதன் முக்கியத்துவம் குறைந்து வருகிறது. இவ் வரி நிலத்தின் நிகர வருமானம், நிகரக் குத்தகை அல்லது குத்தகை யின் மதிப்பு இவற்றின்மீது விதிக்கப்படுகிறது. உத்திரப் பிரதேசம், கிழக்குப் பஞ்சாப், மத்தியப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் நிலத்தின் குத்தகையின்மீதும், தமிழ் நாடு, ஆந்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் நிகர வருமானத்தின் மீதும், மகாராஷ்டிரத் தில் குத்தகையாகச் செலுத்தப்பட்ட தொகைகளின் மீதும், நில வரி விதிக்கப்படுகிறது. வரி விதிப்பு விசாரணைக் குழுமம் நில வரியைப் (கிஸ்தி) பற்றிச் சில சிபாரிசுகளைச் செய்தது (பின் வரும் அதி காரத்தில் காண்க). நில வரிக்குப் பதிலியாக வேளாண்மை வருமான வரியை விதிக்க வேண்டுமென்ற யோசனையை குழுமம் ஏற்கவில்லை.[1] மொத்த நிலங்களில், ஐந்து ஏக்கருக்கு

[1] வரி விதிப்பு விசாரணைக் குழுமத்தின் அறிக்கை, 1953-54, தொகுதி III, பக்கம் 529.

உட்பட்ட நிலங்கள் 50%-க்கு மேலும், பத்து ஏக்கருக்கு உட்பட்ட நிலங்கள் 75%-ம் இருப்பதால், நில வரிக்குப் பதிலியாக வேளாண்மை வருமான வரியை மாநிலங்கள் விதித்தால், அதனுல் அதிக வருவாய் கிடைக்காது என்பதைக் குழுமம் கூட்டிக்காட்டுகிறது. இப்பொழுது பல மாநிலங்களிலும் நில உடைமைக்கு உச்ச வரம்பு விதிக்கப்பட்டிருப்பதால், வேளாண்மை வருமானம் பெரிதும் குறையும். ஆகையால், நிலவரிக்குப் பதிலியாக வேளாண்மை வருமான வரியை விதிப்பது உசிதமன்று. நில வரியையும் நீக்காமல், மேற்கொண்டு வேளாண்மை வருமான வரியையும் விதிக்கலாம் (இதைப்பற்றி, ராஜ் குழு ஆய்ந்திருக்கிறது. அந்த ஆய்வை அடுத்த அதிகாரத்தில் காணலாம்).

பிரிட்டிஷார் ஆட்சி தொடங்கிய நாளிலிருந்து உணவுத் தானியங்களின் விலே ஏறிக்கொண்டே வருவதால், நில வரியின் பளு குறைந்துகொண்டே வருகிறது. தல ஆட்சியினர் நில வரியின்மீது ஒரு மேல் கட்டணத்தை (surcharge) வசூலித்தல் கண்டிக்கத்தக்கதன்று. விலேகள் 25% ஏறிஞலோ அல்லது இறங்கிஞலோ, நில வரியில் யாதொரு மாறுதலும் செய்ய வேண்டியதில்லே. நில வரியிலிருந்து கிடைக்கும் தொகையில் 15%-க்குக் குறையாமல் தல ஆட்சிகளுக்குப் பகிர்வு செய்யப்பட வேண்டும். திறமையான கூட்டுறவுச் சங்கங்கள் இருக்குமாஞல், அவற்றின் மூலம் நில வரியைத் தண்டலாம். நில வரி வசூலேக் கிராமப் பஞ்சாயத்துகளிடம் ஒப்படைக்கலாம் என்பதும், அவற்றுக்கு ஒரு தரகு (commission) அளிக்கலாம் என்பதும் நல்ல யோசனேயே. பரம்பரையாக வேலே பார்த்துவரும் கிராமப் பணியாளர்களுக்குப் பதிலாகக் சல்வி அந்தஸ்தைப் பொறுத்து, நில வரியை வசூலிப்பதற்குக் கிராமத்தில் பட்டா நிலத்துடன் கூடியவர்களேச் சம்பளத்திற்குக் கிராமப் பணியாளர்களாக நியமிக்கலாம். இறுதியாக, வேளாண்மை வருமான வரியையும், வேளாண்மை ஒழிந்த வருமான வரியையும் ஒன்ருக இணேத்து, ஒரே வருமான வரியாக ஆக்க வேண்டுமென்பது வரி விதிப்பு விசாரணேக் குழுமத்தின் சிபாரிசாகும். இவ் வரியை மைய அரசு விதிக்க வேண்டும் என்பதும், இப்பொழுது வருமான வரியிலிருந்து கிடைக்கும் வருவாயைப் பிரித்துக் கொடுப்பது போல, இவ் விணேக்கப்பட்ட வருமான வரியிலிருந்து கிடைக்கும் வருவாயையும், மாநிலங்களுக்குக் குறிப்பிட்ட ஓர் அடிப்படையில் பிரித்துக் கொடுக்க வேண்டும் என்பதும் இக் குழுமத்தின் யோசனேயாகும்.

கடந்த சில ஆண்டுகளில் நில வரிமூலம் கிடைத்த வருவாய் கீழ்வரும் அட்டவணையில் தரப்பட்டிருக்கிறது.

| | 1969-70 | 1970-71 | 1971-72 | 1972-73 பட்ஜெட் மதிப்பீடு | 1972-73 திருத்தப் பட்ட மதிப்பீடு | 1973-47 பட்ஜெட் மதிப்பீடு |
|---|---|---|---|---|---|---|
| | | | | (கோடி உருபாவில்)[1] | | |
| நிலவரி | 102·8 | 112·6 | 100·8 | 106·4 | 99·0 | 124·3 |

*1973-74* பட்ஜெட் மதிப்பீட்டின்படி மாநிலங்களுக்கு வரி களிலிருந்து கிடைக்கும் மொத்த வருவாய் உருபா *2,013·6* கோடி யாகும். இதில் நில வரியிலிருந்து கிடைத்த தொகை 6 சத வீத மாகும்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Shirras, 'The Science of Public Finance', Second Edition 1925, Chapter XX.
2. Baden Powell, 'Land Revenue in British India'.
3. E. R. A. Seligman, 'Progressive Taxation in Theory and Practice', Second Edition, 1908, pp. 305-309.
4. B. R. Misra, 'Indian Federal Finance', IV Edition 1963, Chapter XI.
5. Philip E. Taylor, 'The Economics of Public Finance', Chapter XV.

[1] மூலம்: Reserve Bank of India Bulletin, June 1973, p. 946

# 28. வேளாண்மை வருமான வரியும் ராஜ் குழுவின் அறிக்கையும்

மைய அரசு விதிக்கும் வருமான வரியிலிருந்து வேளாண்மை வருமானத்திற்கு விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. 1935 ஆம் ஆண்டு இயற்றப்பட்ட இந்திய அரசுச் சட்டத்தின்படி, வேளாண்மை வருமானத்தின்மீது வரி விதிக்கும் வருமானத்தை மாநிலங்கள் பெற்றன. முதன் முதலில் 1938-ல் பீஹார் மாகாணம் இவ் வரியை விதித்தது. இப்பொழுது அஸ்ஸாம், பீஹார், கேரளம், மகாராஷ்டிரம், மைசூர், தமிழ்நாடு, திரிபுரா, உத்தரப்பிரதேசம், மேற்கு வங்காளம் ஆகிய ஒன்பது மாநிலங்களும் இவ் வரியை விதிக்கின்றன. 1960 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 1 ஆம் நாள் ராஜஸ்தானம் இவ் வரியை அகற்றியது. உத்தரப் பிரதேசம் போன்ற மாநிலங்களில் உரூபா 3,000 வரை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்படுகிறது. 1951-52ல் இவ் வரியிலிருந்து மாநிலங்களுக்கு உரூபா 4½ கோடி கிடைத்தது. 1973-74 ஆம் ஆண்டைய பட்ஜெட் மதிப்பீட்டின்படி மாநிலங்களுக்கு இவ் வரியின் மூலம் உரூபா 12·1 கோடி கிடைத்தது. இது மாநிலங்களின் மொத்த வரி வருவாயில் 1 சதவீதத்திற்கும் குறைவாகும். வேளாண்மை வருமான வரியிலிருந்து மாநிலங்களுக்குக் கிடைத்த வருவாய் வருமாறு :

| 1969-70 | 1970-71 | 1971-72 | 1972-73 பட்ஜெட் மதிப்பீடு | 1972-73 திருத்தப் பட்ட மதிப்பீடு | 1973-74 பட்ஜெட் மதிப்பீடு |
|---|---|---|---|---|---|
| | | | (கோடி உரூபாவில்) | | |
| 14·0 | 10·5 | 12·8 | 13·2 | 12·4 | 12·1 |

**ராஜ் குழுவின் அறிக்கை** (Raj Committee Report)

இந்தியாவில் இருக்கும் மொத்த குடும்பங்களில் மிகப் பெரிய பணக்காரக் குடும்பங்கள் 10% ஆகும். மொத்த தனியார் நுகர்வில்

25% இக் குடும்பங்கள் நுகர்கின்றன. அனைத்துக் குடும்பங்களுக்கும் கிடைக்கும் மொத்த வருமானத்தில் 40%-க்கு மேல் கிடைப்பதுடன், மொத்த தனியார் செல்வத்தில் மூன்றில் இரண்டு பங்குக்குக் குறையாது இக் குடும்பங்களுக்கு உரியது. ஆகவே, கூடுதலாக நிதியத்தைத் திரட்ட வேண்டுமெனில், அஃது இந்த 10% குடும்பங்களிலிருந்தே கிடைக்க வேண்டும்.

மறைமுக வரியில் ஓரளவு வளர்வீதத்தை புகுத்த முடியுமேனும், பண்டங்களின்மீது வரிகளை விதிப்பதற்குக் கடுமையான வரையறைகள் உள்ளன. இவற்றை இலகுவாகப் புரட்ட முடியுமாதலால், பல சமயங்களில் ஆக்கச் செலவுகள் எதிர்பாராமல் ஏறி விடுகின்றன. ஆகவே, வரிப் பளுவை நீதி அடிப்படையில் பகிர்வு செய்ய வேண்டுமானல், நேர்முக வரிகளை இயன்ற அளவு பயன்படுத்துவது இன்றியமையாததாகும்.

இப்பொழுது வேளாண்மையின்மீது விதிக்கப்படும் நேர்முக வரிகளாவன: நிலவரி, நில செஸ், நில வரியை அடிப்படையாகக் கொண்டு விதிக்கப்பட்ட மேல் கட்டணங்கள் (surcharges), பயிர் செயல்கள் (crop cesses), விவசாய வருமான வரி ஆகியவையாகும். நிலத்தின் நிகர வருமானத்தில் கிட்டத்தட்ட 1% தான் இவ் வரிகளின் வாயிலாகக் கிடைக்கிறது. இந்த வீதாசாரமும் மாநிலங்கள்தோறும் வேறுபடுகிறது. இஃது ஒரிஸ்ஸாவிலும், பஞ்சாபிலும், ஏறக்குறைய 0·24% ஆகும்; ராஜஸ்தானத்தில் 1.34% ஆகும்.

வேளாண்மையின்மீது நேர்முக வரிகளை விதிக்குங்கால், ஒப்புமையில் நன்னிலையில் இருப்போர் தங்கள் வருமானத்திலிருந்தும், செல்வத்திலிருந்தும், தங்கள் வீதாசாரத்திற்கு அதிகமாகவே வரியைச் செலுத்த வேண்டும். வரியிலும் கணிசமான அளவு வளர்வீதம் இருக்க வேண்டும். இதுவரையில் நிலவரியில் வளர்வீதமே இருந்ததில்லை. நிலவரியின்மீது விதிக்கப்படும் மேல் கட்டணங்களின் நிலைப்பாட்டில் கணிசமான அளவு வளர்வீதம் இல்லையாதலாலும், வேளாண்மையின்மீது விதிக்கப்படும் ஏனைய வரிகள் இலேசாக இருப்பதாலும், உயர்ந்த வருமானம் பெறுவோர் குறைவாகவே வரி செலுத்துகின்றனர். இவர்களை ஒத்த நிலையில் உள்ளவர்கள் வேளாண்மை ஒழிந்த வரி மூலங்களிலிருந்து வருவாய் பெறுகின்றனர். பிந்தியவர்களைக் காட்டிலும் முந்தியவர்கள் செலுத்தும் வரி குறைவாகவே உள்ளது.

பல மாநிலங்களும் நிலவுடைமையின்மீது உச்ச வரம்புகள் விதித்திருக்கின்றன. இவ் வரம்புகளைக் குறைப்பதற்கான முயற்சி

கள்[1] நடந்து வருகின்றன. இங்ஙனமிருந்தும், வேளாண் நிலங்களின்மீது கூட வளர்வீத வரியை விதிப்பதற்கு இடம் இருக்கிறது. அதுவுமன்றி, நடைமுறையில் பயிரிடப்படும் நிலங்களின் அளவு (size of operational holdings)[2] நில உச்ச வரம்புச் சட்டங்களினுல் பாதிக்கப்படாமலிருக்கலாம். மேலும், எந்திரங்களைப் பயன்படுத்துவதனுலும், நவீன சாகுபடி முறைகளைப் பயன்படுத்துவதனுலும் நிலத்தின் உற்பத்தி ஆற்றல் அதிகரிக்கலாம்.

நேர்முக வரிகளை விதிப்பதற்குக் குடும்பத்தை அடிப்படை அலகாகக் கொள்ளலாம். இங்கே குடும்பம் என்ருல் கணவன், மனைவி, வயது வராத குழந்தைகள் அடங்கிய குடும்பத்தையே குறிக்கின்ருேம். பெரும் அளவில் வரியைத் தவிர்ப்பதைத் தடை செய்வதற்கும் இஃது வேண்டப்படுகிறது. நிலவுடைமையின்மீது உச்சவரம்பு விதிக்கப்படுவதால், பலர் வேளாண்மையை விட்டு விட்டுப் பிற தொழில்களை மேற்கொள்ளலாம். ஆகவே, வருவாயின் உடல் வேளாண்மையாக இருந்தாலும் சரி, பிற தொழில்களாக இருந்தாலும் சரி, இவ் வருவாய்கள் யாவற்றையும் வளர்வீதத்தில் வரி விதிப்பதற்குக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

வேளாண்மையின்மீது பொருத்தமான நேர்முக வரிகளை விதிக்க எண்ணும் பொழுது இந்தியா ஒரு கூட்டாட்சி நாடு என்பதையும், மைய அரசின் அலுவல்கள், அதிகாரங்கள் இன்னின்னவை, மாநில அரசுகளின் அலுவல்கள், அதிகாரங்கள் இன்னின்னவை என்பதையும் நினைவில் இருத்த வேண்டும். இல்லையென்ருல், வேறு வழி ஒன்றும் உள்ளது. வேளாண்மைச் செல்வத்தையும், வேளாண்மை ஒழிந்த செல்வத்தையும் ஒன்ருக்கி வரி விதிக்க வேண்டும். மைய அரசு இப்படிப்பட்ட வரியை விதிப்பதற்கு அரசியல் சட்டத்தில் தடையொன்றுமில்லை. இதற்கு குடும்பத்தை அடிப்படை அலகாகக் கொண்டு வரியின் வீச்சை அதிகரிக்கலாம்; அல்லது அடிப்படை விலக்கு வரம்பை (exemption

[1] ஐந்து பேர் கொண்ட ஒரு குடும்பத்தினர் 10-ல் இருந்து 18 ஏக்கர் வரை நிலம வைத்திருக்கலாம். ஆண்டு முழுதும் நீர்ப்பாசன வசதி உடையதாகவோ அல்லது இரு போகம் விளையக்கூடியதாகவோ இந் நிலம் இருக்கலாம். எந்தக் காரணத்தைக் கொண்டும் ஒரு குடும்பத்திற்கு (எவ்வளவு பேர் இருந்தாலும்) 54 ஏக்கருக்கு மேல் நிலம் இருக்கக்கூடாது. மேற்கு வங்காளம், கேரளம், தமிழநாடு ஆகிய மூன்று மாநிலங்களில் மட்டுமே ஒரு குடும்பத்தினர் வைத்திருக்கும் நிலத்தின் உச்ச அளவு மேலே குறிப்பிட்டிருக்கும் வரம்புக்கு உட்பட்டு இருக்கிறது.

[2] ஒருவருக்குச் சொந்தமாகச் சிறிதே நிலம் இருந்தாலும், அவர் சில நிலக்கிழார்களிடமிருந்து நிலங்களைக் குத்தகைக்கும எடுத்துக்கொண்டால், நிலத்தின் அளவு கூடும். சில மாநிலங்களில் குத்தகை நிலஙகளுக்கும் உச்ச வரம்பு விதிக்கப்படுகிறது. எடுத்துக் காட்டாக, தமிழ்நாட்டில் ஒரு குத்தகைதாரர் 15 மா தான் சாகுபடி செய்யலாம். (15 மா=ஏறக்குறைய 5 ஏக்கர்.)

limit) குறைக்கலாம்; அல்லது விலக்குகளின் எண்ணிக்கையைக் குறைக்கலாம். அக்காலை செல்வ வரி நேர்முக வரி விதிப்புக்கு ஒரு பயனுள்ள கருவியாகும். ஆனால், விலக்கு வரம்பைக் குறைப்பதனால் பல சங்கடங்கள் எழும். இவற்றில் யார் யார் வரியைச் செலுத்தக் கூடியவர்கள் என்பதைக் கண்டு பிடிப்பதும், வரிதாங்கு உடைமைகளைக் கண்டுபிடிப்பதும், அவற்றை மதிப்பீடு செய்வதும் முதலான பிரச்சினைகள் அடங்கும். இந்தியச் சூழ்நிலைகளில் இவ்வாறு செய்தால் அதிகத் தொல்லை ஏற்படுவதுமன்றி, விரும்பத்தகாத சேமிப்புகளும் ஏற்படலாம். பொன்னாகவும், காகித நோட்டுகளாகவும் மக்கள் அதிகம் சேமித்து வைக்கக் கூடும். இவற்றை வரி அதிகாரிகளின் கண்களில் படாது மறைக்கவும் முடியும். ஆகவே, வேளாண் மக்களிடமிருந்து நிதியத்தைத் திரட்டுவதற்குச் செல்வ வரியைத் தலையாய கருவியாகப் பயன் படுத்துவதில் சற்று விழிப்புடன் இருக்க வேண்டும்.

வருவாய் உடல்கள் யாதாக இருந்தாலும் வருமான வரி விதிப்பது வேறொரு வழியாகும். வருவாய் மூலங்கள் வேளாண்மையாகவும் இருக்கலாம்; வேளாண்மை ஒழிந்த ஏனைய வினைகளாகவும் இருக்கலாம். ஆனால், அங்ஙனம் செய்வதற்கு அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும். இவ்வாறு திருத்திய பிறகே மைய அரசு வேளாண்மை வருமானங்களின் மீதும் வருமான வரி விதிக்க முடியும். ஆனால், இங்ஙனம் அரசியல் சட்டத்தைத் திருத்துவதை மாநிலங்கள் எதிர்க்கின்றன. வேளாண்மை வருமானங்களைச் சரியானபடி மதிப்பீடு செய்வதற்குத் தலப்படி நிலைகளைப்பற்றி ஓரளவு தெரிந்திருக்க வேண்டும். ஆகவே, நடைமுறையில் இவ் வரியை இறுக்கும் பொறுப்பும், வசூலிக்கும் பொறுப்பும் மாநிலங்களுக்கே இருக்க வேண்டும். இஃதன்றி, ஆண்டுதோறும் குடியானவர்களின் வருமானங்களை மதிப்பீடு செய்வதும் தலைவலியைத் தருகிறது. நடப்பு வருவாயைத் திட்டவட்டமாகக் கணக்கிடுவதும் மிகவும் கடினம். மிகச் சில குடியானவர்களே விரிவாகக் கணக்கெழுதி வைக்கிறார்கள். ஆகவே, 'நடப்பு வருமானத்தை' வரி அடிப்படையாகக் கொண்டிருக்குமானால், வரி அதிகாரிகளின் தொல்லை அதிகரிப்பதுடன் வருமானத்தைக் குறைத்துக் கூறுவதற்கும் பல வாய்ப்புகள் ஏற்படும்.

இப்பொழுது நிலவும் நிலவரியின்மீது ஒரு வளர்வீத மேல் கட்டணத்தை விதிப்பது இன்னொரு முறையாகும். ஆனால், பல மாநிலங்களும் நில வருவாய்க்குத் தீர்வை விதிப்பதில் வெவ்வேறு கோட்பாடுகளையும், நெறிமுறைகளையும் பின்பற்றுகின்றன. ஒரே

மாநிலத்தில்கூட வெவ்வேறு பகுதிகளுக்கு வெவ்வேறு கோட்பாடுகளும், நெறிமுறைகளும் கடைப்பிடிக்கப்படுகின்றன. ஆகவே, இப்பொழுது நடப்பில் இருக்கும் நில வரியின்மீது ஒரு வளர்வீத மேல் கட்டணம் விதிப்பதற்கு திருப்திகரமான அடிப்படை இல்லை.

**வேளாண் நிலங்கள் சட்டம் (Agricultural Holdings Act)**

நிலங்களின் உற்பத்தித்திறன் வேறுபடுவதற்கான காரணங்கள்: (1) மண்வாகு (மண்ணின் தன்மை), தட்ப வெப்ப வேறுபாடுகள், (2) நீர்ப்பாசன வசதி, (3) சாகுபடியாகும் பயிர்கள். இக் காரணிகளையெல்லாம் கருத்தில் கொண்டு ஒரு வேளாண் நிலங்கள் சட்டத்தை வகுக்க வேண்டும். இவ் வரியின் சிறப்பியல்புகளாவன: (அ) நிலத்தின் தன்மை, தட்ப வெப்ப நிலைமை இவற்றுக்கு ஏற்றாற் போல நாடு முழுவதையும் ஓரினத்தைச் சேர்ந்த மாவட்டங்களாகவோ அல்லது பகுதிகளாகவோ பிரிக்கவேண்டும். (ஆ) கடந்த பத்தாண்டுகளின் விளைச்சலை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொரு மாவட்டம் அல்லது பகுதிக்கும் ஆண்டுதோறும் வெவ்வேறு பயிர்களும் இவ்வளவுதான் விளையும் என்று ஒப்பளவுகளைத் தயாரிக்க வேண்டும். கடந்த மூன்றாண்டுகளில் நிலவிய சராசரி விலையை அடிப்படையாகக் கொண்டு உருபாவாக மாற்ற வேண்டும். ஒவ்வொரு மாவட்டத்திலும் அல்லது பகுதியிலும் ஒவ்வொரு பயிருக்கும் அறுவடை காலம் இன்னதென்றும், அறுவடைக்குப் பிந்திய காலம் இன்னதென்றும் அறிவிக்கவேண்டும். இக் காலங்களில் நிலவும் விலைகளைத் தொகுத்துப் பதிந்து வெளியிட வேண்டும். (இ) இங்ஙனம் கண்டுபிடிக்கப்பட்ட மொத்த விளைச்சலின் மதிப்பிலிருந்து நீர்ப்பாசனத்திற்கு ஏற்படும் செலவுகளைத் தவிர்த்துப் பிற சாகுபடிச் செலவுகளைக் கழிக்க வேண்டும். கால்நடைகளைத் தவிர, பிற ஆஸ்திகளின் தேய்மானத்தையும் கழிக்க வேண்டும். (ஈ) இந்த ஒப்பளவுகள்தாம் ஒரு ஹெக்டேர் நிலத்திலிருந்து வரி விதிக்கப்பட வேண்டிய வீதமாகும். (உ) ஒரு குறிப்பிட்ட ஆண்டில் ஒரு மாவட்டத்தில் ஒரு பயிரின் சராசரி விளைச்சல் பாதிக்கும் குறைவு என்றால், அந் நிலையில் வரி விதிக்கும் வீதமும் பூஜ்யமாகும். அதாவது அந்த ஆண்டு வரி விதிக்கக்கூடாது. ஏதாயினும் ஒரு பகுதியில் அல்லது மாவட்டத்தில் விளைச்சலே இல்லாமற் போகுமானால், தகுந்த அதிகாரியைக் கொண்டு ஒரு விசாரணையை நடத்திய பிறகு நிவாரணம் அளிக்கலாம். (ஊ) கணிப்பைச் சுலபமாக்கும் பொருட்டு ஒரு மாவட்டத்தில் அல்லது ஒரு பகுதியில் விளையும் பயிர்களைச் சில பயிர் தொகுதிகளுக்குள் அடக்கலாம். (எ) ஒவ்வொரு மாவட்டத்

திற்கும் அல்லது பகுதிக்கும், ஒவ்வொரு ஹெக்டேர் நிலத்திற்கும் வெவ்வேறு பயிர்கள் அல்லது பயிர்த்தொகுதிகளுக்கு விதிக்கப்பட வேண்டிய வரிவீதப் பட்டியலைத் தொகுக்க வேண்டும். கடந்த பத்தாண்டுகளில் கிடைத்த விளைச்சல்களையும், கடந்த மூன்றாண்டுகளில் அறுவடை காலத்தில் நிலவிய விலைகளையும் அடிப்படையாகக் கொண்டு ஆண்டுதோறும் இப் பட்டியலைத் திருத்த வேண்டும். சாகுபடி செலவுகள் மாறுவதற்கு ஏற்ப, செய்ய வேண்டிய பிடித்தங்களும் மாறும். (ஏ) ஓர் அபிவிருத்தி அல்லது வளர்ச்சிப்படி (development allowance) அளிக்கப்படும். இது வரிவிதிப்பு வீதத்தில் 20% ஆக இருக்கும். ஆனால், உருபா 1,000-க்குமேல் போகக்கூடாது. (ஐ) வரி வீதம் மதிப்பு உருபா 600-க்கும் குறைவாக இருந்தால், ஒவ்வொரு நிலத்திற்கும் ஒரு உருபா கொடுக்கவேண்டும் என்று விதிக்கலாம்.

இவ் வரியை இரண்டு கட்டங்களில் செயல்படுத்தலாம். முதல் கட்டத்தில், எந்தெந்த நிலங்களில் வரிவீத மதிப்பு உருபா 5,000 அல்லது 5,000-க்கு மேல் உள்ளதோ, அவற்றின்மீது விதிக்கப்படும் நில வரியை அகற்றிவிட்டு அதற்குப் பதிலாக வேளாண் நிலங்கள் வரியை விதிக்கவேண்டும். இரண்டாவது கட்டத்தில், மாநில அரசின் சௌகரியம்போல உருபா 5,000-க்கும் குறைந்த வரிவீத மதிப்புள்ள நிலங்களின் மீதும் இவ் வரியை விதிக்கலாம். வரிவீத மதிப்பை அறுதியிடுவதற்குப் பயிர்களைப் பார்வையிட வேண்டும். ஒவ்வொரு பயிரின் கீழும் எத்தனை ஏக்கர் நிலம் இருக்கிறது என்பதையும் குறிப்பிட வேண்டும். இதற்காக ஒவ்வொரு நிலக்கிழாருக்கும் 'வேளாண் நிலப் புத்தகத்தை' ('Agricultural Holding Book') கொடுத்துவிடுதல் நல்லது. அதில், அவருடைய குடும்ப உறுப்பினர்களைப் பற்றிய விவரங்கள், நிலங்களின் விவரங்கள், ஆண்டுதோறும் பயிர்கள் பயிரிடப்படும் பரப்பில் ஏற்படும் மாறுதல்கள், ஆண்டின் வெவ்வேறு பருவங்களிலும் பயிரிடப்படும் வெவ்வேறு பயிர்கள் ஆகிய விவரங்கள் அடங்கியிருக்கும். இப் புத்தகத்திலேயே நிலத்தின் வரிவீத மதிப்பும், அதில் எதது‌ணை தவணைகளில் வரி செலுத்தப்பட்டிருக்கிறது என்பதும், அந் நில சம்பந்தப்பட்ட கடன்களும் அடங்கியிருக்கும். இப் புத்தகத்தை நிலக்கிழாரே நிரந்தரமாக வைத்திருக்க வேண்டும்.

வரி விதிப்பு ஆண்டு ஜூலை ஒன்றும் நாள் தொடங்கி ஜூன் 30ஆம் நாளுடன் முடியவேண்டும். இவ் வரியை படிப்படியாக வரிவீத மதிப்பு உருபா 2,500-க்கும் அதற்கு அதிகமாக உள்ளதற்கும் விரிவுபடுத்த வேண்டும். எஞ்சிய நிலங்கள் எவ்வாறு

பயன்படுத்தப்படுகின்றன என்பதைப் பற்றியும், வெவ்வேறு பயிர்கள் சாகுபடியாகும் நிலங்களின் பரப்பையும் குறித்துக்கொள்ள வேண்டும். இக் கணக்கெடுப்பை ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை செய்தால்போதும். அறுநூறு உரூபாவுக்கும் குறைந்த வரிவீத மதிப்புள்ள நிலங்கள் வீதாசாரத்தில், நிலத்திற்கு ஒரு உரூபா வீதம் வரி விதிக்க வேண்டும். அற டிரஸ்டுகளுக்கும், சமய டிரஸ்டுகளுக்கும் எந்தவிதமான சலுகையும் கிடையாது.

இந்தியா முழுமைக்கும் ஒரேபடித்தான வரியை விதிப்பதற்கு, வேளாண் நிலங்கள் வரியைப்பற்றிய நிரந்தரமான அகில இந்திய குழுக்கள் இருக்க வேண்டும். இந்தக் குழுவைத் திட்டக் குழுமம் நியமிக்க வேண்டும். அது மூன்று உறுப்பினர்கள் கொண்டதாக இருக்க வேண்டும். அவர்களில் ஒருவர் உத்தியோகச் சார்பில்லாத பொருளியல் புலவராகவும், ஒருவர் மாநில மட்டத்தில் வருவாய் திருவாகத்தில் அனுபவம் பெற்ற அதிகாரியாகவும், இன்னொருவர் மாநிலத்தில் வேளாண் இயக்குநராக இருந்தவராகவோ அல்லது இருப்பவராகவோ இருக்க வேண்டும். ஒவ்வோர் ஆண்டும் இக் குழு கூடி ஆய்ந்து தங்களின் முடிவுகளைத் திட்டக் குழுமத்துக்கும், தேசிய அபிவிருத்திக் கவுன்ஸிலுக்கும் அனுப்பி வைக்கவேண்டும்.

ஐயாயிரம் உரூபா வரிவீத மதிப்புள்ள நிலங்களின்மீது இவ் வரியை விதித்தால் ஆண்டொன்றுக்கு உரூபா 200 கோடி கிடைக்கக் கூடும். நிலவரி, நில செஸ்கள், மேல் கட்டணங்கள் யாவற்றுக்கும் பதிலியாக இவ் வரியை விதித்தால், இதிலிருந்து ஆண்டு ஒன்றுக்கு ஏறக்குறைய உரூபா 150 கோடி நிகர வருமானம் கிடைக்கும். உரூபா 2,500-க்கும், அதற்கு மேற்பட்ட வரிவீத மதிப்புள்ள நிலங்களின்மீது மட்டும் விதித்தால் கூடுதலாக ஏறக்குறைய உரூபா 200 கோடி கிடைக்கக் கூடும்.

### வேளாண் வருமானத்தையும், வேளாண்மை ஒழிந்த ஏனைய வருமானத்தையும் ஓரளவு ஒன்றித்தல்

மைய அரசு வேளாண்மை ஒழிந்த வருமானங்களின்மீது வருமான வரி விதிக்கிறது. எந்த வீதத்தில் இவ் வரியை விதிக்க வேண்டும் என்பதற்கு வேளாண் வருமானங்களையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். இங்ஙனம் செய்தால் எந்த மூலத்தி லிருந்து வருமானம் வந்தாலும், வரி வீதங்களில் அதிகம் வேறு பாடு இராது. ஒரு பகுதி வருமானத்தை வேளாண்மையிலிருந்து கிடைத்த வருமானம் என்று கூறி இப்பொழுது வருமான வரியைச் செலுத்தாமல் ஏய்ப்பதையும் தடுக்க முடியும். இதற்கு 1961ஆம் ஆண்டின் வருமான வரிச் சட்டத்தில் ஒரு விதியைச் சேர்க்க

வேண்டும். இதன்படி எல்லா வருமானங்களையும் ஒன்று சேர்த்தால் வருகின்ற வருமானத்திற்கு என்ன வீதத்தில் வரி விதிக்க வேண்டுமோ அந்த வீதத்தில் வருமான வரியை விதிக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, ஒருவருக்கு உரூபா 12,000 ஒரு ஆண்டு வருமானம் என்றும், இதில் உரூபா 6,000 வேளாண்மையிலிருந்தும், உரூபா 6,000 பிற இனங்களிலிருந்து கிடைப்பதாகவும் வைத்துக் கொள்வோம். இப்பொழுதுள்ள சட்டத்தின்படி மைய அரசு உரூபா 6,000 மீதுதான் வருமான வரி விதிக்க முடியும். இதில் உரூபா 5,000-த்திற்கு வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டால் அவர் உரூபா 1,000 மீதுதான் வரி செலுத்த வேண்டும். உரூபா 1,000 ஆண்டு வருமானத்தின்மீது செலுத்தும் வரி வீதத்தைக் காட்டிலும், உரூபா 7,000 வருமானத்தின்மீது செலுத்தும் வரி வீதம் அதிகமாக இருக்கும். ராஜ் குழுவின் சிபாரிசின்படி அவருடைய வேளாண்மை ஒழிந்த வருமானம் உரூபா 6,000 ஆக இருந்தாலும், உரூபா 7,000 வருமானம் உடையவர் எந்த வீதத்தில் வருமான வரி செலுத்துவாரோ அதே வீதத்தில் இவரும் செலுத்த வேண்டும் என்பதாகும். இதன்படி மைய அரசு வேளாண்மை வருமானத்தின்மீது வரி விதிக்கவில்லையாதலால், அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டியதும் இல்லை. வேளாண்மை வருமானத்தைக் கணக்கிடுவதில் வேளாண் நிலங்களின் மீதான வரியைப் பிடித்தம் செய்யக் கூடாது.

வேளாண் நிலங்களின் வரிக்குப் பிற்சேர்க்கையாக வேளாண் உடைமையின்மீது ஒரு வரியையும், இதில் ஏற்படும் உரிமை மாற்றங்களினால் கிடைக்கும் மூலதன ஆதாயங்களின்மீதும் ஒரு வரியையும் விதிக்க வேண்டும். பாராளுமன்றம் வேளாண் நிலங்களை உள்ளிட்ட அனைத்துச் செல்வங்களின்மீதும் செல்வ வரியை விதிக்கலாம் என்பது இப்பொழுது ஒப்புக் கொள்ளப்பட்டு வழக்குக்கும் வந்து விட்டது. செல்வ வரியிலிருந்து விலக்கு அளிப்பதை உரூபா 1½ இலட்சத்திற்கு உயர்த்த வேண்டும். பிற விலக்குகளை எல்லாம் கூடியவரை அகற்றிவிட வேண்டும். வரி வீதத்தையும் குறைப்பதற்கு நியாயம் இருக்கிறது. பங்குதாரர்களுக்குக் கம்பெனிகளிலும், கூட்டுறவுச் சங்கங்களிலும் இருக்கும் பங்குகளின் மதிப்பையும், பங்குதாரர்களின் வரிதாங்கு செல்வத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டும். இச் செல்வ வரியிலிருந்து சமயக் கட்டளைகளுக்கும், அறக்கட்டளைகளுக்கும் யாதொரு சலுகையும் வழங்கக் கூடாது.

செல்வ வரியை விதிப்பதற்கு நிலத்தின் மதிப்பைக் கண்டறிய வேண்டும். நிலத்தின் மதிப்பைக் கண்டுபிடிப்பதற்கு ஒரு இலகு

வான முறையைக் கையாளலாம். இதன்படி குறிப்பிட்ட ஆண்டு களில் வரிவீத மதிப்பின் சராசரியை எடுத்துக் கொண்டு, அதைப் போல் நான்கிலிருந்து ஆறு மடங்கு நிலத்தின் மதிப்பு என்று கொள்ளலாம். வேளாண் செல்வத்தின்மீதும், வேளாண் உடைமை களின் மூலதன ஆதாயங்களின்மீதும் வரியை விதித்தால், கூடுதலாக ஆண்டொன்றுக்கு உருபா 100-ல் இருந்து உருபா 150 கோடிவரை வருமானம் கிடைக்கலாம்.

வேளாண் நிலங்கள் வரிக்கு அடிப்படை அலகு ஒரு குடும்பமே. குடும்பத்தில் கணவன், மனைவி, வயது வராத (பருவம் அடையாத) குழந்தைகள் அடங்கும். இதைப் போன்றே செல்வ வரிக்கும், வருமான வரிக்கும் குடும்பம்தான் அடிப்படை அலகாக இருக்க வேண்டும். குடும்பத்தை அலகாகக் கொண்டால், பாகப் பிரிவினை ஆகாத[1] குடும்பத்தை ஒரு வரி அலகாகக் கொள்வதை அகற்றிவிட வேண்டும். இப்பொழுது கால்நடைப் பண்ணைக்கும், கோழி, வாத்துப் பண்ணைகளுக்கும், பால் பண்ணைக்கும் வருமான வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருப்பதை அகற்றிவிட வேண்டும். நீர்ப்பாசன வசதியை ஓர் உள்ளீடாகக் (input) கொண்டு, செலவான தொகையைச் சரிக்கட்டும் விதத்தில் தண்ணீர்த் தீர்வையை விதிக்க வேண்டும். திட்டங்களுக்கு ஆன மூலதனச் செலவைச் சரிக்கட்டுவதற்கு அபிவிருத்தி வரி (betterment levy) சரியான வாயிலன்று. நகர்ப்புறத்தை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்றால், அதற்கான செலவுகளைச் சரிக்கட்ட ஒரு நிலக் குழுமத்தை நியமிக்க வேண்டும். அதற்கு 'நிலத்தை வாங்கவும், மேலாண்மை செய்யவும், விற்கவும் அதிகாரம் இருக்க வேண்டும்'. மேலும், அபிவிருத்தித் திட்டங்களுக்கு வேண்டிய நிதியத்தைத் திரட்டுவதற்கும் நிலக் குழுமம் பயனுள்ள வழியில் பணியாற்றலாம்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்

Raj Committee Report.

[1] பாகப் பிரிவினை ஆகாத குடும்பத்தை அவிபக்த குடும்பம் என்றும் கூறுவர்.

# 29. உல்கு

## (Customs duties)

ஆயத்தீர்வைகளைக் காட்டிலும் காலத்தால் முற்பட்டவை உல்கு[1] ஆகும். இவை கடலிறை (sea customs), நிலவிறை (land customs) என இருவகைப்படும். ஆடம் ஸ்மித்தின் கருத்துப்படி 'கஸ்டம்ஸ்' என்ற பெயரே அவை நினைவுக்கு எட்டாத காலம் தொட்டு வழக்கமாகச் செலுத்தப்பட்டு வந்த வரிகள் என்பதைக் குறிக்கும். இடைக் காலத்தில் ஐரோப்பாவில் நில மானியப் பிரபு தன் ஆளுகைக்கு உட்பட்ட நிலத்தின் வழியாகச் செல்லும் பண்டங்களின் மீது வரி விதிக்க உரிமை உண்டென்றான். இவ்வரியைக் கொண்டு சாலைகளையும், பாலங்களையும், கால்வாய்களையும் நன்னிலையில் வைத்திருக்க முயன்றான். இவ்வித வரிகளை போக்கு வரிகள் (transit duties) எனலாம். இந்த நூற்றாண்டில் இப்போக்கு வரிகள் கைவிடப்பட்டன.

**உல்கு வரிகளை விதிப்பதன் நோக்கம்**

*1.* குறிப்பிட்ட தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பது. தங்களின் சொந்த நலன்களுக்காகவே இப் பாதுகாப்பை அத் தொழில்கள் பெற்றிருக்கலாம்.

*2.* சிறப்புத் தேர்ச்சி (specialisation) அளவுக்கு மீறிச் செல்வதை மட்டுப்படுத்தவும், பலவகைத் தொழில்களையும் நிலைத்திருக்கும்படிச் செய்யவும், அனைவருக்கும் ஆதாயம் கிடைக்கும்படி குறிப்பிட்ட தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிக்கலாம்.

[1] 'உல்கு' பொருள்:— கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது என்று கௌடலீயம் (ப. 300) கூறுகிறது. 'உறுபொருளும் உல்கு பொருளும் தன் ஒன்னார்த் தெறுபொருளும் வேந்தன் பொருள்' என்னும் குறளின் உரையில் 'உல்கு' என்னும் சொல்லுக்குச் 'சுங்கம்' என்று பொருள் கொண்டாரேனும், 'முக்கண்ணன்' என்னும் சொல் மூன்று கண்களையுடைய பிள்ளையாரையும், சிவபெருமானையும் குறிக்குமேயாயினும், வழக்கில் சிவபெருமானை மட்டுமே குறித்தல் போல, நாமும் customs என்பதற்கு 'உல்கு' என்றும், tolls என்பதற்குச் சுங்கம் என்றும் கூறலாம்.

3. நாட்டின் பாதுகாப்புக்காகச் சில இன்றியமையாத தொழில்களுக்கும், உணவுப் பண்டங்களுக்கும் பாதுகாப்பு அளித்து நாட்டிற்குத் தேவையான அளவு இவை கிடைக்கும்படிச் செய்தல்.

4. அயல் நாட்டினர் தம் பண்டங்களை நம் நாட்டில் மலிவான விலைக்குக் கொட்டலைத் (dumping) தடுத்தல்.

5. பிற நாடுகள் விதிக்கும் இறக்குமதி வரிகளுக்கு எதிராகவும், அந் நாடுகளுடன் பேரம் பேசும் நோக்கத்துடனும் இறக்குமதி வரிகளை விதித்தல்.

6. குறிப்பிட்ட சில துறைகளில் வணிகத்தைப் பேணுதல்; ஏற்கெனவே இருக்கும் ஒற்றுமை உணர்வை வளர்த்தல்.

7. ஒரு தொழிலைத் தொடங்குவதற்காகவும் இறக்குமதி வரிகளை விதிக்கலாம். இயற்கையான அநுகூலங்கள் இருப்பதனால் இத் தொழில் சிறிது காலம் சென்றபிறகு தன் காலிலேயே (அதாவது அரசின் உதவியின்றியே) நிற்கக்கூடும். இதனைச் சேய் தொழில் (infant industry) வாதம் என்பர்.

### ஏற்றுமதி வரிகள்

ஒரு நாட்டின் எல்லையை விட்டு நீங்கும்போது பண்டங்களின் மீது ஏற்றுமதி வரிகள் விதிக்கப்படுகின்றன. அவற்றைய நிதிய முக்கியத்துவத்தை இடைக் காலத்தில் உணர்ந்திருந்தனர். நில மானியக் கோட்பாட்டின்படி, பிரபுக்கள் தமக்கு அடங்கிய சிறு பிரபுக்களின் செயல்கள் தங்களைப் பாதிப்பதாகக் கொண்டனர். ஆகவே, சிறு பிரபுவோ, பிற்காலத்தில் குடிமகனோ ஆதாயத்தைப் பெறுவதற்கான ஒரு புதிய வழியைக் கண்டுபிடித்தால், அவ் வாதாயத்தில் ஒரு பகுதியைப் பிரபுவுக்கோ அல்லது அரசனுக்கோ கொடுத்துவிட வேண்டும். ஒரு குடிமகன் ஒரு பண்டத்தை அயல் நாட்டானுக்கு விற்றால், அரசனுக்குரிய பண்டங்கள் பிற நாட்டார்களுக்குச் சொந்தமாக்கப் படுவதாகவும், இச் சலுகைக்காக அரசனுக்கு இறை செலுத்த வேண்டுமென்றும் கருதினர். ஏற்றுமதிகளைத் தடுப்பதற்காகவும் சில வேளைகளில் ஏற்றுமதி வரிகள் விதிக்கப்பட்டன. ஏற்றுமதி வரிகளினால் ஏற்றுமதிகள் தடைப்பட்டனவாதலாலும், மெர்க்கண்டிலிஸ்டுகளின்[1] போதனைகளாலும், ஏற்றுமதி வரிகளை அவ்வளவாக அரசுகள் விரும்பவில்லை. இப்பொழுது ஏற்றுமதி வரிகள் மிகவும் அருகியே பயன்படுத்தப் படுகின்றன.

[1] 16, 17, 18 ஆம் நூற்றாண்டுகளில் ஐரோப்பிய அரசுகள் பின்பற்றிய பொருளாதாரக் கருத்துகளும், கொள்கைகளும் மெர்க்கண்டிலிஸம் (mercantilism) அல்லது வணிகவாதம் எனப்படும். இதற்கு கோல்பர்ட்டிஸம் (colbertism,) காமிரலிஸம் (cameralism), வரையறுக்கும் அமைப்பு (restrictive system) என்ற வேறு பெயர்களும் உண்டு.

### இறக்குமதி வரிகள்

இக் காலத்தில் 'கஸ்டம்ஸ்' (customs) என்று சொன்னாலே இறக்குமதி வரிகளைத்தான் குறிக்கிறது. ஏற்றுமதி வரிகளை அறவே அகற்றிவிட்டாலும், பல நாடுகளின் நிதியங்கள் பாதிக்கப் படா. ஆனால், இறக்குமதி வரிகளில் சிறிது அதிர்வு ஏற்பட்டாலும் ஏறக்குறைய எல்லா நாடுகளும் மிகவும் பாதிக்கப்படும்.

ஒரே சமயத்தில் இறக்குமதி வரிகளிலிருந்து அதிக வருவாயைப் பெறுதலும், தொழில்களுக்குப் பாதுகாப்பு அளித்தலும் சாத்திய மன்று. ஓர் இறக்குமதி வரியினால் ஒரு தொழிலுக்குப் பாதுகாப்பு கிடைக்குமானால், அதிலிருந்து போதிய வருவாய் கிடைக்காது. இதை ஆடம் ஸ்மித் தெளிவாக்கினார். 'இறக்குமதியைத் தடை செய்ய வேண்டும் அல்லது குறைக்கவேண்டும் என்ற நோக்குடன் விதிக்கப்படும் இறக்குமதி வரி, தடையிலா வாணிபத்திற்கு நாசம் விளைவிப்பது போன்றே, வருவாய்க்கும் நாசம் விளைவிக்கும்'[1] என்பது அவருடைய கூற்று.

எந்த ஒரு வரி அமைப்பிலும் இறக்குமதி வரிகளுக்கு முக்கிய பங்கு உண்டு. இவற்றை விதிப்பது கண்ணியக் குறைவு என்று கருதிய காலமும் ஒன்றுண்டு. இறக்குமதி வரிகளை வசூலிப்பது அரசுக்குக் கண்ணியக் குறைவு என்று போதான் கருதினர். அரசின் வரி விதிப்புக் கொள்கையில் ஏற்பட்டிருக்கும் பெருத்த மாறுதலை கீழ்வரும் ஹெய்லியின் கூற்றால் உணரலாம். ஸர் மால்காம் ஹெய்லி (1920—22) இந்திய அரசின் நிதிய உறுப்பினராக இருந்தார். அவர் மத்திய சட்ட மன்றத்தில் 'அதிகப்படியாக வருவாய்கள் தேவைப்படும் பொழுது, முதன் முதலில் இயற்கையாக ஒருவருக்குச் சிந்தனை திரும்புவது உல்கு என்ற தலைப்பே' என்று கூறினர்.

கூடுமானவரை இறக்குமதி வரிகளை அவற்றிலிருந்து கிடைக்கும் வருவாய்க்காகவே விதிக்க வேண்டும். இன்றியமை யாத பண்டங்களின்மீது இறக்குமதி வரிகளை விதித்தால், அவற்றின் வீதங்கள் மிகக் குறைவாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் ஒரு காப்புப் பொருளாதாரத்தில் நியாயம் கிடைக்கும். சில பண்டங்களின்மீதே இறக்குமதி வரிகளை விதிக்க வேண்டும். அப்பொழுதுதான் அவற்றைத் தண்டுவதற்கு ஆகும் செலவு குறைவதோடு, போதிய வருவாயும் கிடைக்கும்.

[1] Adam Smith. 'The Wealth of Nations'. Vol. I p. 495.

**இந்தியாவில் இறக்குமதி வரிகள்**

கடந்த நூற்றாண்டு வரை இந்திய இறக்குமதி வரிகள்[1] தடையிலா வாணிபத்தின் அடிப்படையிலேயே விதிக்கப்பட்டன. 1882-க்கும் 1894-க்கும் இடையில் இறக்குமதி வரிகளே விதிக்கப் படவில்லை எனலாம். 1894-ல் பருத்தி நூல், பருத்தி ஆடைகளைத் தவிர, பிற எல்லாப் பண்டங்களின்மீதும் அவற்றின் பெறுமானத்தில் (ad valorem) 5 சதவீதம் இறக்குமதி வரி விதிக்கப்பட்டது. இவ் வரியின் நோக்கம் வருவாய் பெறுவதே அன்றித் தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதல்ல. அவ் வாண்டின் இறுதியில் இவ் வரி பருத்தி நூலுக்கும், பருத்தி ஆடைகளுக்கும் விஸ்தரிக்கப்பட்டது. 1896-ல் பருத்தி ஆடைகளின்மீது விதிக்கப்பட்ட வரியின் வீதம் 3½% ஆகக் குறைக்கப்பட்டது. இதற்கு இணையாக இந்தியாவிலேயே உற்பத்தியான ஆலைத் துணிகளின்மீது ஒரு ஆயத்தீர்வையும், விதிக்கப்பட்டது. இவ் வரியை மக்கள் மிகவும் வெறுத்தாலும், 1926ஆம் ஆண்டுதான் இவ் வாயத்தீர்வை அகற்றப்பட்டது.

1914—18-ல் நடந்த முதல் உலகப்போரிலிருந்து இறக்குமதி வரிகளில் பரவலான மாறுதல்கள் செய்யப்பட்டன. முதலில் இவ் வரிகள் வருவாய்க்காகவே விதிக்கப்பட்டன. 1924-ல் வேற்றுமைப்படுத்திய பாதுகாப்புக் (discriminate protection) சொள்கையை அரசு ஏற்றுக்கொண்டது. ஆகவே, இறக்குமதி வரிகளின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டே வந்தது. ஏகாதிபத்தியச் சலுகை (imperial preference) என்ற கருத்தும், நம்முடைய இறக்குமதி வரி ஏற்பாடுகளில் இடம் பெற்றது. 1932ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 20ஆம் நாளன்று ஒட்டாவா நகரத்தில் இந்தியாவுக்கும், பிரிட்டனுக்கும் இடையே ஒரு வணிக உடன்பாடு ஏற்பட்டது. இதையடுத்து, செப்டம்பர் திங்களில் 22ஆம் நாளன்று இரும்பு, உருக்கு ஆகியவைகளைப் பற்றிய ஒரு துணை (supplementary) உடன்பாடும் ஏற்பட்டது. இவ் வுடன் பாடுகளின் நோக்கமாவது இந்திய ஏற்றுமதிகளுக்குப் பாதுகாப்பு அளிப்பதும், அவற்றை மந்த நிலையிலிருந்து மீட்பதும், இயன்ற வரை புதிய வளர்ச்சித் துறைகளுக்கு வழி செய்வதும் ஆகும். இந்தியப் பண்டங்கள் சிலவற்றிற்குப் பிரிட்டன் சலுகை அளித்தது. இதைப் போன்றே பிரிட்டிஷ் பண்டங்களுக்கும் இந்தியா சலுகை

[1] நம் நாட்டுத் தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காகவும் இறக்குமதி வரிகளை விதிக்கலாம். வருவாய்க்காகவும் இறக்குமதி வரிகளை விதிக்கலாம். இரண்டுக்கும் உள்ள வேறுபாடு நோக்கம் பற்றியதாகும். தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காக விதிக்கப்பட்டால் இறக்குமதி வரி வீதங்கள் அதிகமாகவும், வருவாய்க்காக விதிக்கப்பட்டால் வரி வீதங்கள் குறைவாகவும் இருக்கும்.

அளித்தது. இதனால், ஒரே அடுக்காக இருந்த இறக்குமதி வரிப் பட்டியல் ஈரடுக்குக் கொண்டதாக மாறியது. இதன்படி பிரிட்டனி லிருந்து வந்த பண்டங்களின்மீது குறைவான வரி வீதங்களும், வேறு நாடுகளிலிருந்து வந்த பண்டங்களின்மீது சிறிது அதிகமான வரி வீதங்களும் விதிக்கப்பெற்றன. 1949—1950-ல் பாக்கு, மோட்டார் எண்ணெய் இன்னும் வேறு சில பண்டங்கள் இவற்றின் மீது விதிக்கப்பட்ட வரிகளின வீதங்கள் உயர்த்தப்பட்டன. இப் பொழுது விதிக்கப்படும் இறக்குமதி வரிகளில் பெரும்பான்மையும் பெறுமனத்தைப் பொறுத்தே விதிக்கப்படுகின்றன. பொதுவாக, இவற்றின் வரிவீதம் 30%-ல் இருந்து 40% ஆகும். சில போகப் பண்டங்களின்மீது 75-ல் இருந்து 200% வரை வரி விதிக்கப் படுகிறது. இவற்றில் புகையிலைப் பண்டங்களும், சாராய வகை களும், பட்டு ஆடைகளும், மோட்டார் ஊர்திகளும் அடங்கும். சில உணவுப் பண்டங்கள், மூலப் பண்டங்கள், வேளாண்மைக் கருவிகள், எரிபொருள் எண்ணெய்கள் (fuel oils) இவற்றின்மீது குறைவான வரி வீதங்கள் விதிக்கப்படுகின்றன; அல்லது இவற்றுக்கு விலக்கு அளிக்கப்படுகின்றன. 1973—74-ல் இறக்கு மதி வரிகளிலிருந்து மைய அரசுக்கு ரூ. 765·6 கோடி கிடைக்கும். (பட்ஜெட் மதிப்பீடு).

## இந்தியாவில் ஏற்றுமதி வரிகள்

1860-ம் ஆண்டு வரையில் ஏறக்குறைய எல்லா ஏற்றுமதிப் பண்டங்களின்மீதும் 3% வீதம் ஏற்றுமதி வரி விதிக்கப்பட்டது. 1860-க்கும், 1880-க்கும் இடையில் இவ் வரிகளில் பலவும் அகற்றப்பட்டன. இப்பொழுது சணல் பண்டங்கள், தேயிலை, கடலைப் பிண்ணாக்கு, புகையிலை, அபிரகம், தோல், மாங்கனீஸ் தாது, இரும்பு ஆகியவற்றின்மீது ஏற்றுமதி வரி விதிக்கப்படுகிறது. 1973—74-ல் ஏற்றுமதி வரிகளின் வாயிலாக இந்திய அரசுக்கு, ரூ. 82·4 கோடி கிடைக்கும். (பட்ஜெட் மதிப்பீடு).

### உல்கு வருவாய்

| ஆண்டு | கோடி உருபாவில் | ஆண்டு | கோடி உருபாவில் |
|---|---|---|---|
| 1861 | 2·8 | 1950—51 | 157·15 |
| 1881 | 2·3 | 1955—56 | 166·70 |
| 1901 | 5·7 | 1960—61 | 170·03 |
| 1914 | 9·4 | 1965—66 | 538·97 |
| 1917 | 16·5 | 1966—67 | 585·37 |
| 1918 | 18·1 | 1967—68 | 513·35 |

| ஆண்டு | கோடி உருபாவில் | ஆண்டு | கோடி உருபாவில் |
|---|---|---|---|
| 1919 | 22·5 | 1968—69 | 446·50 |
| 1925 | 47·8 | 1969—70 | 402·5 |
| 1935 | 54·1 | 1970—71 | 490·7 |
| 1948 | 54·50 | 1971—72 | 715·8 |
| | | 1972—73 (பட்ஜெட் மதிப்பீடு). | 747·4 |
| | | 1972—73 (திருத்தப்பட்ட மதிப்பீடு) | 837·7 |
| | | 1973—74 (பட்ஜெட் மதிப்பீடு) | 848·0 |

## மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. R. Balakrishna, 'Studies in Indian Economic Problems', Second Edition, 1958, pp. 342—412.
2. G. Findlay Shirras, ' The Science of Public Finance ', Second Edition, 1925, Chapter XXVI.
3. R. N. Bhargava, ' The Theory and Working of Union Finance in India ,' Third Edition, 1971, Chapter XIX.
4. B. R. Misra, ' Indian Federal Finance ,' 1963, Chapter XVII.
5. J. A. Hobson, ' Taxation in the New State ' Chapter VIII.

## 30. ஆயத்தீர்வைகள்

ஹோமர் என்னும் கிரேக்கப் புலவர் உப்பைக் 'கடவுள் தன்மை' வாய்ந்தது என்கிறார். பிளேட்டோ உப்பைத் தெய்வங்களுக்கு விருப்பமான பொருள் என்றார். பண்டைய காலத்திலிருந்தே உப்பின்மீது வரி விதிக்கப்பட்டு வருகிறது. ரோமானியப் பேரரசு காலத்தில் படை அதிகாரிகளுக்கும், படை வீரர்களுக்கும் உப்புக்காக வழங்கப்பட்ட படியே 'சம்பளம்' ஆகும். பின்னர் இது பணமாக அளிக்கப்பட்டது. இந்தியாவில் பெரும்பான்மையினர் புலால் உண்பவர்களாயினும் வருமான முட்டுப்பாட்டினால் புலாலை மறக்க வேண்டியிருக்கிறது. புலால் உண்பவர்களுக்கும், பால் பருகுபவர்களுக்கும் வேண்டியிருக்கும் அளவைக் காட்டிலும், புலால் மறுப்பவர்களுக்கு அதிக அளவு உப்பு வேண்டியிருக்கிறது. பம்பாய் அரசின் தொழிலாளர் அலுவலகம் தொகுத்தக் குடும்ப வரவு செலவுத் திட்டங்களின்படி ஆண்டொன்றுக்கு ஓர் இந்தியனுக்கு சராசரி பன்னிரண்டு பவுண்டு உப்பு வேண்டியிருக்கிறது.

இந்தியாவை மொகலாயர்கள் ஆண்டபொழுது பல போக்கு வரிகள் (transit dues) வசூல் செய்யப்பட்ட தன்னியில் உப்பு வரியும் வசூலிக்கப்பட்டது. *1843*-ல் இவ் வழிச் சுங்கங்கள் அகற்றப்பட்டன. அதேசமயம் உப்புத்தீர்வை உயர்த்தப்பட்டது. *1882*-ல் உப்பு வரியின் வீதம் மணங்குக்கு உருபா 2 ஆகவும், *1888*-ல் உருபா $2\frac{1}{2}$ ஆகவும் இருந்தது. இவ் வரிவீதம் மிகவும் கடுமையானது. *1903*-ல் இருந்து உப்பு வரி குறைந்து கொண்டே வந்தது. *1939*-ல் உப்பு வரி வீதம் உருபா *1–40* ஆகும். மேல் கட்டணத்தையும் (surcharge) சேர்த்தால் இது உருபா *1–90* ஆயிற்று. ஏடனிலிருந்து வந்த உப்பைத்தவிர, இறக்குமதியான உப்பின்மீது கூடுதலாக ஒரு காப்பு இறக்குமதி வரியும் விதிக்கப்பட்டது. வாழ்க்கைக்கு இன்றியமையாத பண்டம் உப்பு. அதனால் உப்பு வரியின் நிலைப்பாடு மிகவும் இலேசாக இருந்தாலும், மக்கள் இவ் வரியை விரும்பவில்லை. இவ் வரியை அகற்ற வேண்டும் என்று மக்கள் கோரினர். மஹாத்மா காந்தி உப்பு வரியை நீக்க

வேண்டும் என்று ஒரு போராட்டமே நடத்தினர்.[1] 1946-ல் நிதியமைச்சராக இருந்த லியாகத் அலிகான் உப்பு வரியை அகற்றினர். இதனல் அரசு ஆண்டொன்றுக்கு உரூபா 9 கோடியை இழந்தது. உப்பு வரியை அகற்றியது தவறு எனப் பேராசிரியர் பார்க்கவா [2] கருதுகிருர். ஏனெனில், இதனல் ஏழைகளுக்கு நன்மை ஏற்படவில்லை. மண்ணெண்ணெய், தீப்பெட்டி போன்ற பண்டங்களையும் ஏழைகள் மிகுதியாகப் பயன்படுத்துகிருர்கள். அவற்றின் மீது மைய அரசு ஆயத்தீர்வைகளை விதிக்கிறது.

அபினி

1858-ல் நில வரிக்கு அடுத்தபடியாக அதிக வருவாயைக் கொடுத்தது அபினி வரிதான். வங்காளத்தில் அபினி அரசின் முற்றுரிமையாக இருந்தது. பம்பாயிலிருந்து ஏற்றுமதியான அபினியின்மீது ஒரு வரியும் விதிக்கப்பட்டது. இரண்டு மூலங்களிலிருந்தும் ஏறக்குறைய சமமான வருவாய் கிடைத்தது. ஏற்றுமதி செய்யப்பட்ட அபினியில் பெரும்பகுதியும் சீனவுக்குச் சென்றது. அபினி உண்ணும் பழக்கத்தை ஒழிக்கச் சீன அரசு நடவடிக்கை மேற்கொண்டது. இந்திய அரசு 1907-லும், 1911-லும் சீன அரசுடன் ஓர் உடன்பாடு செய்து கொண்டது. இதன்படி சீனவுக்கு ஏற்றுமதியாகும் அபினியைப் படிப்படியாக வளர்வீதத்தில் குறைக்க இந்திய அரசு ஒப்புக்கொண்டது. சீன அரசும் அபினிச் சாகுபடியைக் குறைக்கவும, அபினி இறக்குமதியைக் குறைக்கவும் ஒப்புக்கொண்டது. 1926-ல் மருந்துகள் செய்வதற்காக அன்றி வேறு எத்தக் காரணத்திற்காகவும் அபினியை ஏற்றுமதி செய்வதில்லை என்று இந்திய அரசு அறிவித்தது. இப்பொழுது அபினி ஏற்றுமதி செய்யப்படுவதில்லை. அபினியிலிருந்து ஆண்டொன்றுக்கு ஏறக்குறைய உரூபா 8 கோடி கிடைத்தது. இப்பொழுது அபினிமீது விதிக்கும் ஆயத் தீர்வைகளிலிருந்து ஆண்டொன்றுக்கு உரூபா ஒரு கோடிக்குக் குறைவாகவே கிடைக்கிறது. உள் நாட்டில் அபினி நுகர்வும் கடுமையாக வரையறுக்கப்பட்டுள்ளது.

பருத்தி

1894-ல் முதன் முதல் பருத்தியின்மீது ஆயத்தீர்வை விதிக்கப்பட்டது. அந்த ஆண்டில் நிதிய நிலைமை மோசமாக இருந்ததால் இறக்குமதி செய்யப்பட்ட பருத்தியாடைகளின்மீதும், பருத்தி நூலின்மீதும் 5% வரி விதிக்கப்பட்டது. அதே ஆண்டில் இந்தியாவில் உற்பத்தியான பருத்தி நூலின் மீதும் 5% வரி விதிக்கப்

[1] இது உப்பு அறப்போர் (உப்பு சத்தியாகிருஹம்) எனப்படும்.

[2] R. N. Bhargava 'The Theory and Working of Union Finance in India'. 3rd Edition, 1971. Page. 311

பட்டது. இங்கிலாந்தில் பொதுமக்கள் சபை இப்பற்றிய தீர்மானத்திற்கிணங்க, பருத்தி நூலின்மீது ஒரு வரியை விதிக்க வேண்டும் என்று இந்தியா மந்திரி கூறியதன் பேரிலேயே இவ் வரி விதிக்கப்பட்டதென, அப்பொழுது நிதிய உறுப்பினராக இருந்த ஸர் ஜேம்ஸ் வெஸ்ட்லாண்டு விளக்கினர். 1896-ல் இறக்குமதியான பருத்தி ஆடைகளின் மீது விதிக்கப்பட்ட இறக்குமதி வரி 3½% ஆகக் குறைக்கப்பட்ட சமயத்தில், இந்தியாவிலேயே உற்பத்தியான ஆலைத் துணியின் மீதும் 3½% ஆயத் தீர்வை விதிக்கப்பட்டது. பருத்தி நூலின் மீது வரி விதிக்கப்படவில்லை. 1917-ல் இறக்குமதியான துணியின் மீது விதிக்கப்பட்ட இறக்குமதி வரி 7½% ஆகவும், 19 1-ல், 11%-மும் உயர்த்தப்பட்டது. ஆனால், இந்தியாவில் உற்பத்தியான துணியின் மீது விதிக்கப்பட்ட ஆயத் தீர்வை 3½% ஆகவே, இருந்தது. அதே ஆண்டில் உருக்குப் பாளங்கள், எந்திர லைட்டர்கள் (mechanical lighters) இவற்றின்மீதும் வரி விதிக்கப்பட்டது. 1941-ல் காற்றடைக்கப்பட்ட (pneumatic) டயர்களும், டியூபுகளும், 1943-ல் மரக்கறி பண்டங்களும் ஆயத் தீர்வைகளுக்கு ஆளாயின. படிப்படியாக ஆயத்தீர்வைகளைப் பற்றிய கருத்துப் படிமத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. பொருளாதாரக் கொள்கையின் ஒரு கருவியாகவும், முக்கியமான ஆகாருகவும் (source of revenue) மாறிற்று.

புகையிலைமீது ஆயத்தீர்வை விதிப்பதற்குப் பல முயற்சிகள் நடந்தன. இறுதியாக 1943-ல் புகையிலைமீதும், 1944-ல் காப்பி, தேயிலை, பாக்கு ஆகியவற்றின்மீதும் ஆயத் தீர்வைகள் விதிக்கப்பட்டன. 1948-ல் சிகரெட்டின்மீதும், 1949-ல் ஆலைத் துணியின் மீதும் வரி விதிக்கப்பட்டது. ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றுவதற்குப் பெருமளவு நிதி வேண்டியிருந்தது. நிதியைத் திரட்டுவதற்கு ஆயத்தீர்வைகள் எய்ப்பில் வைப்பாகப் பயன்பட்டன. இந்தியா போன்ற ஏழை நாடுகளில் மறைமுக வரிகளைக் கொண்டே நிதி திரட்ட வேண்டியிருக்கிறது. 'பெரும்பாலான மக்கள் ஏழைகளாக இருக்கும் இந்தியா போன்ற நாட்டில், அனைத்துவருக்கத்தினர்களும் ஓரளவு தியாகம் செய்யாமல் போதிய அளவு நிதியத்தைத் திரட்டுவதற்கு வழியில்லை என்று' திட்டக் குழுமமும் கூறியது. 1954-ல் ஸிமெண்டு, காலணி, சோப்பு முதலான பல பண்டங்களின் பேரிலும் ஆயத்தீர்வை விதிக்கப்பட்டது. 1948-49-ல் 15 பண்டங்கள்தான் ஆயத்தீர்வைகளுக்கு ஆளாயின. 1960-61-ல் இவ் வெண்ணிக்கை 41 உயர்ந்தது 1973-ல் 116 பண்டங்களின்மீது ஆயத்தீர்வைகள் விதிக்கப்பட்டது.

1960-ஆம் ஆண்டுவரை மூலப்பண்டங்களின்மீது வரி விதிக்கப்படவில்லை; முடிந்த பண்டங்களின்மீது மட்டுமே வரி

விதிக்கப்பட்டது. 1961-ல் எரிசோடா (soda ash), சோடா காரம் (caustic soda),[1] கிளிஸரின், (glycerin), கீல் சாயங்கள் (coaltar dyes), துத்தநாகம் முதலியவற்றின்மீதும், மருந்து வகைகள், பூச்சுப் பவுடர் (cosmetics), தட்ப வெப்பத்தைச் சீராக்கும் எந்திரங்கள், குளிர்பதனப் பெட்டிகள் இவற்றின்மீதும் வரிகள் அதிகரிக்கப்பட்டன. 1962-63-ல்வரிக்கு ஆளான பண்டங்களின் எண்ணிக்கை 67 ஆகும். 1920—21-ல் இந்த எண்ணிக்கை 2 ஆக இருந்தது. 1920—21-ல் மொத்த வரி வருவாயில் 4.68% ஆக இருந்த இவ் வரியின் பங்கு 1973—74-ல் 52.08% ஆக உயர்ந்தது.

கீழேயுள்ள அட்டவணை கடந்த நாற்பதாண்டுகளில் இவ் வரியினால் கிடைக்கும் வருவாய் உயர்ந்துகொண்டே வந்ததைக் காட்டுகிறது.

| ஆண்டு. | ஆயத் தீர்வைகள் விதிக்கப்பட்ட பண்டங்களின் எண்ணிக்கை. | மொத்த மைய ஆயத் தீர்வை வருவாய். | மொத்த வரி வருவாய். | மொத்த வரி வருவாயில் ஆயத் தீர்வைகளின் வருவாய் இன்ன சதவீதம் என்பது. |
|---|---|---|---|---|
| | | | (மில்லியன் ரூபாவில்) | |
| 1920—21 | 2 | 29·5 | 608·5 | 4·68 |
| 1925—26 | 3 | 32·1 | 728·5 | 4·41 |
| 1931—32 | 4 | 61·9 | 756·2 | 8·19 |
| 1938—39 | 8 | 87·2 | 818·7 | 10·65 |
| 1948—49 | 15 | 508·9 | 3,851·8 | 13·00 |
| 1953—54 | 15 | 935·2 | 4,246·4 | 22·02 |
| 1954—55 | 19 | 1,079·1 | 4,602·5 | 23·45 |
| 1955—56 | 27 | 1,468·6 | 4,922·2 | 29·84 |
| 1956—57 | 30 | 1,905·7 | 5,787·2 | 32·93 |
| 1957—58 | 32 | 2,744·4 | 7,043·3 | 38 96 |
| 1958—59 | 32 | 3,127·4 | 7,226·6 | 43·28 |
| 1959—60 | 32 | 4,642·3 | 8,231·8 | 44·25 |
| 1960—61 | 41 | 4,131·6 | 9,177·7 | 45·02 |
| 1961—62 | 58 | 4,817·9 | 10,635·8 | 45·30 |
| 1962—63 | 67 | 5,505·9 | 11,902·4 | 46·26 |
| 1963—64 | 67 | 6,936·2 | 15,010·8 | 46·39 |
| 1973—74 | | 26,230·7 | 50,120·0 | 52·08 |

(பட்ஜெட் மதிப்பீடு).

[1] Soda ash இயற்கையாகக் கிடைப்பது; Caustic Soda செயற்கையாகச் செய்யப்படுவது. இதுதான் இரண்டுக்குமுள்ள வேறுபாடு.

ஆயத்தீர்வைகள் முக்கியமாக வருவாயைத் திரட்டுவதற்காகவே விதிக்கப்படுகின்றனவாயினும், அரசின் பொருளாதாரக் கொள்கைக்கு ஆக்கம் தேடவும் பல விதிகள் சேர்க்கப்பட்டன. (1) கிராமத் தொழில்களுக்கும், சிறு தொழில்களுக்கும் சலுகைகளும், விலக்குகளும் அளிக்கப்பட்டன. இந்தியாவில் தேசிய வருமானத்தில் 46% வேளாண்மையிலிருந்து வருகிறது. சிறு தொழில்களும், கிராமத் தொழில்களும் பலருக்கும் வேலை வாய்ப்பு அளிக்கும். தேசிய வருமானமும் நியாயமான முறையில் பகிர்வு செய்யப்படும். கிராமப்புறங்களும் பொருளாதார மறுவாழ்வு பெறும். எடுத்துக்காட்டாக, மின்சாரம், எண்ணெய் போன்ற சக்திகளைப் பயன்படுத்தாத சிறு அலகுகளுக்கு இத் தீர்வைகளிலிருந்து முழுதும் விலக்களிக்கப்படுகிறது. சிலவகைப் பண்டங்களின் உற்பத்தியைச் சிறு தொழில்களுக்கு ஒதுக்குவதற்காகவும் ஆயத்தீர்வைகள் ஒரு கருவியாகப் பயன்படுகின்றன. உதாரணமாக, ஒரு நெசவாலை குறிப்பிட்ட அளவுக்கு மேல வேட்டிகளை உற்பத்தி செய்யுமானால் ஆயத்தீர்வைகளின் வீதம் மிகக் கடுமையாக உயர்த்தப்படுகிறது. (2) வேறுபல நோக்கங்களுக்கும் ஆயத்தீர்வை ஒரு கருவியாகப் பயன்படுகிறது. சுத்தி செய்யப்பட்ட டியசல் எண்ணெய்மீது வரி விதிக்கப்படுவதன் நோக்கம் அந்நியச் செலாவணியை வீண் விரயம் ஆக்கக் கூடாது என்பதே. ஏற்றுமதிகளை அதிகரிப்பதற்கு ஆக்கம் அளிக்கும் பொருட்டு காப்பி, தேயிலை ஆகியவற்றின் மீது வரி விதிக்கப்படுகிறது. ஒவ்வோர் ஆலைக்கும் அறுதியிடப்பட்ட அளவுகளுக்கும் குறைவாக ஏற்றுமதியானால், ஜீனி, பருத்தி நெசவாலைகள்மீது ஒறுப்பு வரி (penal rate) விதிக்கப்படுகிறது. ஒன்றுக்கு மேற்பட்ட தொழில்களுக்குப் பொருளாதார உதவி அளிப்பதற்கான ஒரு வழியாகவும், சில சமயத்தில் தனிப்பட்ட அலகுகளுக்கு உதவி அளிப்பதற்கான ஒரு வழியாகவும் ஆயத்தீர்வை பயன்படுத்தப்படுகிறது. உற்பத்தியை உச்ச அளவு பெருக்குவதற்காக இறுதிநிலை அலகுகள், சிறு அலகுகள், திறமையின்றி இயங்கும் அலகுகள் இவற்றுக்கும் உதவியளிக்க ஆயத்தீர்வை பயன்படுகிறது.

ஆயத்தீர்வைகளின் உச்ச வீதம் இவ்வளவு என்று அறுதியிடப்படுகிறது. இவற்றுக்குப் பாராளுமன்றம் இணக்கம் அளித்த பின்பு, உச்ச வீதத்திற்கு உட்பட்டு இவ் வீதங்களைக் குறைக்கவோ, கூட்டவோ, திருத்தவோ நிருவாகத்திற்கு அதிகாரம் இருக்கிறது. ஆனால், இம் முறை அரசியல சட்டத்தின்படி சரிதானா என்பதைப் பற்றி ஐயம் இருக்கிறது. இப் பிரச்சினையை ஆராய்ந்த மைய ஆயத்தீர்வைச் சீரமைப்புக் குழு (The Central Excise Re-organization committee) *1963*-ல் கூறியதாவது: 'தேசியத் திட்டத்

திற்கும், தேசிய வளர்ச்சிக்கும் நிதியச்சலுகை கருத்துப்படிமத்தை ஒரு கருவியாகப் பயன்படுத்துதல் புதிதன்று. தேசியத் தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்கும், அவற்றை வளர்ப்பதற்கும், அவற்றின் போட்டியிடும் ஆற்றலை அதிகரிப்பதற்கும் காப்பு வரிகள் நெடுங்காலமாகவே பயன்படுத்தப்பட்டு வருகின்றன. சில வேளைகளில் இதற்கும் மேலாக ஓர் உதவித்தொகையும் அளிக்கப்படுகின்றது. இதைப் போன்றே, பேரளவு உற்பத்தியாளர்களுடன் போட்டிபோட்டுக்கொண்டு சிற்றளவு உற்பத்தியாளர்களும் தங்கள் பண்டங்களை விற்பதற்குத் துணையாகவும், அவர்களுக்கு ஓரளவு காப்பு நடவடிக்கையாகவும் ஆயத்தீர்வைகளை விதிக்கலாம் என்று வாதிடுகின்றார்கள். கருதுகோள் அளவில் இம் முறை சரியே என்றாலும், அதனை நடைமுறையில் கடைப்பிடித்தலில் பல சங்கடங்கள் ஏற்படுகின்றன. சில சமயங்களில் இதனால் எதிர்பார்த்த விளைவுக்கு நேர் எதிரான விளைவும் ஏற்படுகிறது. நாம் எதிர்பார்க்கும் விளைவு, உற்பத்தியை உச்ச அளவு ஆக்குவதும், வேலை வாய்ப்பை இன்னும் நிறைவுடையதாக ஆக்குவதும் ஆகும். வெவ்வேறுபட்ட வரி வீதங்களை விதிப்பதும், வெவ்வேறுபட்ட விலக்குகளை அளிப்பதும், சில சமயம் உற்பத்தி அலகுகளைச் சிதறுண்டு போகும்படிச் செய்திருக்கின்றன. இங்ஙனம் சிதறுண்டதால் அவை விலக்களிக்கப்பட்ட அல்லது சலுகையளிக்கப்பட்ட துறையில் இடம் பெறுகின்றன. ஆயத்தீர்வையைத் தவிர்ப்பதற்காகவே இங்ஙனம் அலகுகளைச் சிதற அடிக்கிறார்கள். இவ்வாறாக, வருவாயிலும் உற்பத்தியிலும் இழப்பு ஏற்படுகிறது.'

ஆயத்தீர்வை சட்டத்தில் பண்டங்களின் பெறுமானத்தைப் பொறுத்து வரியை விதிக்கும் அதிகாரத்தை அளித்திருப்பது அரசியல் சட்டத்திற்கு முரணானது என்று சிலர் வாதிடுகிறார்கள். விற்பனையின் போது இருக்கும் பெறுமானத்தை அடித்தளமாகக் கொண்டு விதிக்கப்படும் எந்த ஒரு வரியையும் விற்பனை வரியாகக் கொள்வதைத் தவிர வழியில்லை. இத்துடன் நில்லாது, பண்டத்தை விலைப்படுத்தும் பொழுது வரியைத் தண்டுவதும், ஆயத்தீர்வையை வேடம் தாங்கிய அல்லது கரந்த விற்பனை வரி என்றே கொள்ளச் செய்கிறது. அரசியல் சட்டப்படி விற்பனை வரிகளை விதிக்கும் அதிகாரம் மாநிலங்களுக்கே தரப்பட்டிருக்கிறது. இக் கருத்தை மொழிபவர்கள், இது சரியா, அல்லவா என்பதனை இதுகாறும் தலைமை நீதிமன்றத்தில் சோதித்துப் பார்த்தாரில்லை.

விற்பனை வரிக்கும், ஆயத்தீர்வைக்கும் பல ஒற்றுமைகள் இருப்பதால் வரி விதிப்பு விசாரணைக் குழுமத்திடமும் (Taxation

Enquiry Commission),[1] மைய ஆயத்தீர்வைச் சீரமைப்புக் குழுவினிடமும்,[2] மைய அரசே ஆயத்தீர்வைகள் விதிக்கப்படும் எல்லாப் பண்டங்களின்மீதும் விற்பனை வரியை விதிக்க வேண்டு மென்றும், மைய ஆயத்தீர்வைகளை வசூலிப்பது போன்றே விற்பனை வரியையும் மைய அரசே வசூலிக்க வேண்டும் என்றும் கோரிக்கைகள் எழுந்தன.

இவற்றைப் பற்றி ஆராய்ந்த வரி விதிப்பு விசாரணைக் குழுமம் விற்பனை வரியை விதிக்கும் அதிகாரம் தொடர்ந்து மாநிலங் களுக்கே இருக்கவேண்டும் என்று சிபாரிசு செய்தது. மைய ஆயத்தீர்வைச் சீரமைப்புக் குழுவும் இந்த முடிவை மறுக்கவில்லை. இங்ஙனமிருந்தும் 1956—57-ல் ஆலைத் துணிகள், ஜீனி, புகை யிலை இவற்றின்மீது மாநிலங்கள் விற்பனை வரி விதிப்பதற்குப் பதிலாக மைய அரசே கூடுதல் ஆயத்தீர்வைகளை விதிப்பதென்று முடிவாயிற்று. இதற்கு மாநிலங்களும் ஒப்புதல் அளித்தன. இதி லிருந்து கிடைத்த நிகர வருவாய் மாநிலங்களிடையே பகிர்வு செய்யப்பட்டது. ஆகவே, 1957ஆம் ஆண்டிலிருந்து புகையிலை (புகையிலைப் பண்டங்களையும் சேர்த்து), ஜீனி, ஆலைத் துணிகள் இவற்றின்மீது மாநிலங்கள் விற்பனை வரி விதிக்கவில்லை. மைய அரசே கூடுதல் ஆயத்தீர்வைகளை இவற்றின்மீது விதிக்கிறது. தொழிலதிபர்களும், வணிகர்களும் இவ் வேற்பாட்டை வர வேற்றனர். அவர்கள் இதேபோன்று பிற பண்டங்களின் மீதும் விற்பனை வரியை அகற்றி கூடுதல் ஆயத்தீர்வைகளை விதிக்க வேண்டும் என்று கோரினர்.

இம் மூன்று பண்டங்களின்மீதும் விற்பனை வரி விதிக்கும் உரிமையைக் கைவிட்ட பின்பு, மாநிலங்கள் இவ்வாறு செய்த மைக்கு வருந்தின. ஆகவே, புதிதாக தங்கள் வரி விதிக்கும் அதிகாரங்களை மைய அரசுக்கு விட்டுக் கொடுக்க அவை ஆயத்த மாக இல்லை. நில வரியிலிருந்து கிடைக்கும் வருவாய் சுருங்கிக் கொண்டே வருகிறது. மதுவிலக்கை அமுல் செய்தால், மாநிலங் களுக்கு இருக்கும் ஒரே நெகிழ்ச்சியான வருவாய் இனம் விற்பனை வரி மட்டுமே. 'இதையும் அவை ஓர் இடப்பீட்டு உடன்பாட்டைச் செய்துகொண்டு, மைய அரசுக்கு விட்டுக் கொடுக்குமேயாகில், நிதியச் சுயேச்சைக்குப் (financial autonomy) பொருளே (மதிப்பே) இராது' (அசோக் சந்தா).

[1] 1953—54

[2] 1961—63

**மாநிலங்களில் ஆயத்தீர்வைகள்**

வரி விதிப்பு விசாரணைக் குழு (1923—24) உல்குடன் (customs) ஒப்பு நோக்கி, ஆயத்தீர்வைகளை விதிக்கவேண்டி யிருப்பதால், இவற்றை மைய அரசே விதிக்க வேண்டுமென்று கூறியது. 1935ஆம் ஆண்டைய இந்திய அரசுச் சட்டம் இயற்றப் படுவதற்கு முன்பு நடந்த சர்ச்சையில் சட்டக் குழுமம் (Statutory Commission) ஆயத்தீர்வையிலிருந்து கிடைக்கும் வருவாயை மைய அரசுக்கும், மாகாண அரசுகளுக்கும் இடையே பிரிக்க வேண்டும் என்றும், புதிய ஆயத்தீர்வைகளை (உப்பு வரியையும் சேர்த்து) விதிக்கும் பொழுது, அவற்றிலிருந்து கிடைக்கும் வருவாயை ஒரு மாகாண நிதியில் வரவு வைக்க வேண்டும் என்றும், இத் தொகையைத் தலைக்கு இவ்வளவு என்ற அடிப்படையில் மாகாணங்களுக்கிடையே பிரித்துக் கொடுக்கவேண்டும் என்றும் கூறியது. பெர்ஸி குழு (Percy Committee, 1932) பிந்திய யோச னையை ஆதரிக்காவிட்டாலும், மைய ஆயத்தீர்வைகளிலிருந்து கிடைக்கும் வருவாய் முழுவதையும் அல்லது ஒரு பகுதியை மாகாணங்களுக்குப் பிரித்துக் கொடுக்க அதிகாரம் இருக்க வேண்டும் என்று சிபாரிசு செய்தது. இந்த சிபாரிசை இந்திய அரசியல் சட்டச் சீர்திருத்தங்களை ஆராய்ந்த கூட்டு நாடாளு மன்றக் குழுவும் (Joint Parlimentary Committee on Indian Constitutional Reforms) ஏற்றுக் கொண்டது. இச் சிபாரிசு 1935ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தில் 140-வது பிரிவில் இடம் பெற்றது. 1935ஆம் ஆண்டுச் சட்டம் அனுமதித்தபோதிலும் மாகாணங்களுக்கு ஆயத்தீர்வைகளில் யாதொரு பங்கையும் இந்திய அரசு அளிக்கவில்லை. இந் நிலை 1952ஆம் ஆண்டுவரை நீடித்தது. தீப்பெட்டிகள், ஜீனி, புகையிலை, காய்கறிப் பொருள்கள் (vegetable products) இவற்றின் மீது விதிக்கப்பட்ட ஆயத்தீர்வைகளைச் சுதேச சமஸ்தானங்களுடன் மைய அரசு பங்கிட்டுக் கொள்வதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்ததை மாகாண அரசுகள் அறிந்திருந்தாலும், அவை ஆயத்தீர்வைகளில் பங்கு கோராதது விந்தையே. சுதந்திரம் பெற்ற பின்பு முதல் நிதியக் குழுமத்தை இந்திய அரசு 1951-ல் அமைத்தது. அப்பொழுது கூட மாநிலங்கள் ஆயத்தீர்வைகளில் பங்கு கேட்க வில்லை. அவர்களாக இப் பிரச்சினையை ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட பொழுதுதான் மாநிலங்கள் கோரிக்கைகளை எழுப்பின.

1935ஆம் ஆண்டைய இந்தியச் சட்டத்தின்படியும், 1950ஆம் ஆண்டு இயற்றப்பட்ட இந்திய அரசியல் சட்டத்தின் படியும், மதுவகைகள மீது மாநிலங்கள் (1950ஆம் ஆண்டுக்கு முன்பு இவை மாகாணங்கள் எனப்பட்டன) ஆயத்தீர்வைகளை

விதிக்கலாம். பழைய காலத்திலிருந்தே இந்தியாவில் கள்ளின் மீது வரி விதிக்கப்பட்டு வந்திருக்கிறது. 'அரசன் பொருளாலன்றித் (தம் பொருளால்) கள் செய்வோர், கள், தோப்பி, அரிட்டம், மது, பழச்சாறு, கருப்பங்கள் இவைகளுக்கு நூற்றுக்கு ஐந்து வீதம் உல்கு[1] கொடுத்தல் வேண்டும்' என்று கௌடலியம்-பொருநூல் (பக்கம் 330) கூறுவதால், மௌரியர் காலத்தில் தனியார்களுக்குச் சொந்தமாக இருந்த கள்ளுக்கடைகளின்மீது வரி விதிக்கப்பட்டதென்பதும், கள் அறுவகைப்படும் என்பதும், அரசருக்கும் சொந்தமாகக் கள்ளுக்கடைகள் இருந்தன என்பதும் அறியப்படும். 'கெட்ட கள்ளைத் தவிர மற்றைக் கள்ளை விலை குறையவாதல் கடனாகவாதல் கொடுத்தலாகாது' (ப. 324) என்பதனால், தரமான கள்ளையே விற்கவேண்டும் என்பதில் அரசினர் கண்ணும் கருத்துமாக இருந்தமையும், 'குடிக்கும் இல்லத்தைக் குடித்தற்குரிய இடங்களையுடையதாகவும், பல கட்டுகளை உடையதாகவும், தனித்தனிப் படுக்கை இருக்கைகளை உடையதாகவும், மணப்பொருள், மாலை, நீர் இவைகளை உடையதாகவும் பருவங்களுக்கேற்ற இன்பம் அளிப்பதாகவும் செய்வித்தல் வேண்டும்' (ப. 325) என்பதனால், மக்களிடம் கட்குடிப் பழக்கம் பரவுவதற்கு அரசு மேற்கொண்ட முயற்சிகளையும் அறியலாம்.

*1951—52-ல்* ஆயத்தீர்வைகளிலிருந்து மாநிலங்களுக்கு கிடைத்த வருவாய் உருபா *49·41* கோடியாகும். *1971—72-ல்* (பட்ஜெட் மதிப்பீடு) இத் தொகை உருபா *208·59* கோடியாக உயர்ந்தது. *1948*ஆம் ஆண்டு அக்டோபர் இரண்டாம் நாளிலிருந்து சென்னை மாகாணத்தில் பூரண மதுவிலக்கு அமல் செய்யப்பட்டது. அதனால் ஆண்டுக்கு பதினேழு கோடி உருபா வருவாயை இழந்தது. *22* ஆண்டுகள் கழித்து மீண்டும் தமிழ்நாடு மதுவிலக்கைத் 'தற்காலிகமாக ரத்துச்' செய்தது. *1973*ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் முதல் நாளிலிருந்து மீண்டும் கள்ளுக்கடைகள் மூடப்பட்டன. *1974*ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் முதல் நாளிலிருந்து தமிழ்நாட்டில் சாராயக் கடைகளும் மூடப்பட்டன. பூரண மதுவிலக்கில் தீவிரம் காட்டிய பல மாநிலங்களும் இப்பொழுது மதுவிலக்கு விதிகளைப் பெரிதும் தளர்த்தியுள்ளன. இப்பொழுது தமிழ்நாடு, கூர்ஜரம் (குஜராத்) மாநிலங்களில் மட்டுமே பூரண மதுவிலக்கு அமலில் இருக்கிறது. ஆகவே, வருகிற ஆண்டுகளில் ஆயத்தீர்வைகளிலிருந்து மாநிலங்களுக்குக்

[1] உல்கு=இறைப்பொருள்.

கிடைக்கும் வருவாய் இன்னும் சிறிது கூடலாம். இதில் வேடிக்கை என்னவென்றால், கள்ளுக் கடைகளும், சாராயக் கடைகளும் திறக்கப்பட்ட பின்பும் கள்ளச் சாராயம் காய்ச்சுவது குறையாமையே ஆகும். இதற்குக் காரணம் கடைகளில் கிடைக்கும் சாராயத்தைக் காட்டிலும், கள்ளச் சாராயத்தின் விலை குறைவாக இருப்பதேயாகும்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. 'Report of the Taxation Enquiry Commission', 1953-54, Volume II.
2. Asokh Chanda, 'Federalism in India', pages 244—259.
3. B. R. Misra, 'Indian Federal Finance', 1963, Chapters 16 and 18.
4. R. N. Bhargava, 'The Theory and Working of Union Finance in India', 1971, pp. 310—324.
5. John F. Due, 'Government Finance', Chapter 18.
6. Dr. D. T. Lakdawala, 'Mobilisation of States' Resources, 1972, pp. 18—20.
7. G. Findlay Shirras, 'The Science of Public Finance', 2nd Edition, 1925, Chapter 27.

# 31. விற்பனை வரி

விற்பனை வரி பழங்காலத்திலிருந்தே நம் நாட்டில் விதிக்கப் பட்டு வருகிறது. 'முகத்தலளவைப் பொருள்களுக்குப் பதினறில் ஒரு கூறும், நிறுத்தலளவைப் பொருள்களுக்கு இருபதில் ஒரு கூறும், எண்ணலளவைப் பொருள்களுக்குப் பதினொன்றில் ஒரு கூறும் அரசிறையாகும்' என்று கௌடலியம்-பொருணூல் (பக்கம் 272) கூறுகிறது. சுக்கிரநீதி சாரத்திலும் விற்பனைவரியைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. ஆனல், வரியின் வீதம் மௌரியர்களின் காலத்தைக் காட்டிலும் மிகவும் குறைவாகும்.

இடைக்காலத்தில் ஐரோப்பாவில் பண்டங்களின் விற்பனை யின்மீது வரிகள் விதிக்கப்பட்டன. ஸ்பெயின் நாட்டில் விதிக்கப் பட்ட அல்காவாலா (alcavala) இவற்றில் மிக முக்கியமானதாகும். 1342-ல் விதிக்கப்பட்ட இவ் வரி 1843ஆம் ஆண்டுவரை தொடர்ந்து இருந்தது. ஆடம் ஸ்மித் உள்ளிட்ட பல அறிஞர் களும் இவ் வரியைக் கண்டித்தார்கள். 1843ஆம் ஆண்டில் ஜூன் திங்களில் இவ் வரி அகற்றப்பட்டது. பத்தொன்பதாம் நூற்றுண்டில் சில அமெரிக்க மாநிலங்கள் இவ் வரியை விதித்தன. இருந்தாலும், முதல் உலகப் போர் நிகழ்ந்த (1914—18) காலத்தி லும், அதன் பின்பும் பல நாடுகளும் இவ் வரியை விதித்தன. 1916-ல் ஜெர்மனியும், 1919-ல் ஃபிரான்ஸ், இத்தாலி, செக்கோஸ் லோவகியா நாடுகளும், 1921-ல் பெல்ஜியமும், இவ் வரியை விதித் தன. பெரிய வாணிப மந்த காலத்தில் (1929—1933) பல நாடு களும் விற்பனை வரியை விதித்தன. பல அமெரிக்க மாநிலங்களும் இக் காலத்தில்தான் விற்பனை வரியை விதித்தன. 1937ஆம் ஆண்டின் இறுதியில் அமெரிக்காவில் 29 மாநிலங்களிலும், பிரிட்டிஷ் காமன்வெல்த்தில் மூன்று நாடுகளிலும், ஐரோப்பாவில் பன்னிரண்டு நாடுகளிலும், தென் அமெரிக்காவில் ஆறு குடியரசு களிலும் இவ் வரி விதிக்கப்பட்டது. 1921-ல் சோவியத் யூனியன் விற்பனை வரியை விதித்தது. அங்கு இதற்கு விற்பனைப் புரள்வு வரி (turnover tax) என்று பெயர். விற்பனை வரியிலிருந்து கிடைக்கும் வருவாயும் அதிகரித்துக் கொண்டே வந்திருக்கிறது.

நிதிய நெருக்கடியைச் சமாளிப்பதற்கு நிதியமைச்சர்களுக்கு உற்றுழி உதவும் ஊன்றுகோலாக விற்பனை வரி விளங்குகிறது. விற்பனை வரியின் வரலாறும், 1930ஆம் ஆண்டுக்குப் பிறகு இந்தியாவில் விற்பனை வரியை விதித்ததும் ஆடம் ஸ்மித்தின்[1] கூற்றை மெய்ப்பிக்கின்றது. அவர் கூற்று வருமாறு: 'மக்களுடைய பணப்பையை எங்ஙனம் காலி செய்வது என்னும் கலையைக் காட்டிலும் வேறு எந்தக் கலையையும் ஒரு அரசு இன்னொரு அரசினிடமிருந்து அவ்வளவு விரைவாகக் கற்றுக்கொள்வதில்லை.'

1938-ல் மத்திய மாகாணங்களும், பீஹாரும் விற்பனை வரியை தெரிந்தெடுக்கப்பட்ட அடிப்படையில் (selective basis) மோட்டார் எண்ணெய்கள்மீதும், மசை எண்ணெய்கள் (lubricants) மீதும் விதித்தது. 1939-ல் சென்னை மாகாணம் பொதுப்படையான விற்பனை வரியை 'பல முனை' அடிப்படையில் விதித்தது. வங்காளமும், பஞ்சாபும் 1941-லும், பீஹார் 1944-லும் இவ் வரியை விதித்தன. 1946-க்கும், 1948-க்கும் இடையில் பல மாகாணங்களும் இவ் வரியை விதித்தன. 1948ஆம் ஆண்டில் அனைத்து மாநிலங்களும் இவ் வரியை விதித்தன. சில மாநிலங்கள் ஒரு முனை வரியை விட்டுப் பலமுனை வரியையும், வேறு சில மாநிலங்கள் பலமுனை வரியை விட்டு ஒருமுனை வரியையும் விதித்திருக்கின்றன. சில கொண்டல் வரியை (purchase tax), ஓரளவுக்கு விதித்திருக்கின்றன.

1935ஆம் ஆண்டு இயற்றப்பட்ட இந்திய அரசுச் சட்டத்தின்படி விற்பனை வரியை விதிக்கும் அதிகாரம் மாகாணங்களுக்கு வழங்கப்பட்டது. 1950ஆம் ஆண்டு இயற்றப்பட்ட இந்திய அரசியல் சட்டப்படியும் செய்தித் தாள்களைத் தவிர, பிற பண்டங்களின்மீது விற்பனை வரியை விதிக்கும் அதிகாரம் மாநிலங்களுக்கே வழங்கப்பட்டது. அரசியல் சட்டத்தின் 286-வது விதியின்படி சில பண்டங்களின்மேல் விற்பனை வரி விதிக்க மாநிலங்களுக்கு அதிகாரம் இல்லை. ஒரு மாநிலத்திலிருந்து இன்னொரு மாநிலத்திற்கு விற்பனையாகும் பண்டங்களின்மீது மாநிலங்கள் விற்பனை வரி விதிக்க முடியாது. இதுதவிர, பிறநாடுகள் நடத்தும் வாணிபத்தில் விற்பனையாகும் பண்டங்கள்மீதும், இன்னொரு மாநிலத்தில் நுகர்வுக்காக விற்பனை செய்யப்படும் பண்டங்களின் மீதும் மாநிலங்கள் வரி விதிக்க முடியாது. நாடாளுமன்றம் இன்றியமையாத பண்டங்கள் என அறிவித்த பண்டங்களின்மீது விற்பனை வரி விதிப்பதற்குக் குடியரசுத் தலைவரின் ஒப்புதலை

[1] Adam Smith, 'The Wealth of Nations', Edited by Edwin Cannan, 1961, (University Paperbads) Vol. 2, p. 389—390.

மாநிலங்கள் பெற வேண்டும். 1952-ல் இன்றியமையாத பண்டங்களின் (விற்பது அல்லது வாங்குவதன்மீது வரி விதிப்பதை அறிவிப்பதும் கட்டுப்படுத்துவதும்) சட்டத்தை[1] இயற்றியது. இதன்படி சில பண்டங்கள் இன்றியமையாதவை என அறிவிக்கப் பட்டன. வரி விதிப்பு விசாரணைக் குழுமத்தின் சிபாரிசின் விளைவாக மாநிலங்களுக்கிடையே விற்கப்படும் அல்லது வாங்கப் படும் பண்டங்களின்மீது வரி விதிக்கும் அதிகாரம் யூனியன் அரசுக்கு வழங்கப்பட்டது. 1956-ல் சில பண்டங்கள் சிறப்பு முக்கியத்துவம் வாய்ந்தவை என்று அறிவித்து ஒரு சட்டம் இயற்றப்பட்டது. அதேசமயம் 1952ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டம் ரத்துச் செய்யப்பட்டது. அண்மையில் யூனியன் அரசு எடுத்த ஒரு முடிவின்படி சில குறிப்பிட்ட போகப் பண்டங்களின் மீது விற்பனை வரி 7% வீதம் ஒரேபடித்தாக நாடு முழுவதும் விதிக் கப்பட வேண்டும். 1956ஆம் ஆண்டிலிருந்து மைய அரசு ஒரு விற்பனை வரியைவிதிக்கிறது. இம் மைய விற்பனை வரி மாநிலங்கள் இடையே நிகழும் வணிகத்தின் போது விற்கப்படும் அல்லது வாங்கப்படும் பண்டங்கள்மீது மட்டும் விதிக்கப்படுகிறது. இவ் வரியை அமல் செய்வது மாநிலங்களே. மாநிலங்கள் வசூல் செய்யும் மைய விற்பனை வரியை, மாநிலங்களே வைத்துக் கொள்கின்றன.

விற்பனை வரி, பண்டங்கள் விற்பனையாகும்பொழுது (மொத்த விற்பனையாக இருந்தாலும், சில்லறை விற்பனையாக இருந்தாலும்) விதிக்கப்படுகிறது. 'புலனாகக்கூடிய தனியாள் சொத்துகளை வணிகத்தின்போது விற்கும் தருணத்தில் விதிக்கப்படும் வரியே விற்பனை வரியாகும். இஃது மொத்த விற்பனையின் பொழுதோ, சில்லறை விற்பனையின் பொழுதோ அல்லது ஆக்க நிலையிலோ (manufacturing stage), சட்டத்தில் குறிக்கப்பட்ட விலக்குகளைத் தவிர்த்துப் பண்டங்களின்மீது விதிக்கப்படலாம்' என்று ஹெயிக்கும், ஷூப்பும் (Heig and Shoup) கூறுகிறார்கள்.

### விற்பனை வரியின் நன்மைகளும், தீமைகளும்

விற்பனை வரியைப் பொதுவாக நுகர்வோர்களே செலுத்து கிறார்கள். வணிகர்கள் விற்பனை வரியை நுகர்வோர்மீது புரட்டு கிறார்கள். இவ் வரியைக் கொடாது ஏய்ப்பதும் மிகக் கடினம். வணிகம் பெருகினால் விற்பனை வரியிலிருந்து கிடைக்கும் வருவாயும் பெருகும். இவ் வரியினால் போதிய வருவாய் கிடைப் பதுடன், வரிப் பளுவும் பலரின்மீது பரவலாக விழுகிறது. வரியின்

[1] Essential Goods (Declaration and Regulation of Tax on Sale or Purchase) Act., 1952.

வீதம் மிகக் குறைவாக இருப்பதால் நுகர்வோர்களுக்கு இவ் வரியைச் செலுத்துவது ஒரு பெரும் பாரமன்று.

எதிர்வாதங்கள்

*1.* விற்பனை வரியை வசூலிப்பதற்கு வணிக வரித்துறை (commercial tax department) என்று தனித்துறை வேண்டியிருக்கிறது. *2.* பலர் சரியாகவோ, தவறுதலாகவோ இவ் வரியை தொழிற்றுறையில் முன்னேறிய நாடுகள்தான் விதிக்கலாம் என எண்ணுகிறார்கள். இக் கருத்து தவறானதாகும். ஏனெனில், முன்னம் வேளாண்மை நாடுகளாக இருந்த போலந்து, ஹங்கேரி, பிலிப்பைன்ஸ் முதலான நாடுகளும் இவ் வரியை விதித்திருக்கின்றன. 3. ஒரு பேரத்தைக் கொண்டு மட்டும் வரிப் பளுவை அளத்தல் தவறானது. கைமாறும்போதெல்லாம் பண்டத்தின்மீது வரி விதிக்கப்படுவதால் அரசு விதித்த வரியைவிட பன்மடங்கு அதிகமான தொகையை நுகர்வோர் செலுத்துகிறார்கள். (4) வரி நிலைப்பாடு பெரும்பாலும் தேய்வு வீதமாகவே இருக்கிறது. நுகர்வின்மீது விதிக்கப்படும் வரியானதால் ஏழை எளியவர்கள் தான் இவ் வரியின் பெரும் பகுதியையும் செலுத்துகிறார்கள். ஆயினும் தேயிலை, தீப்பெட்டி முதலான பண்டங்களின்மீது விதிக்கப்படும் ஆயத்தீர்வைகளைக் காட்டிலும், இவ் வரியின் பளு அதிகமானதல்ல. வேண்டுமானால் போகப் பண்டங்களின்மீது மட்டும் ஒரு விற்பனை வரியை விதிக்கலாம்.

## விற்பனை வரியின் வகைகள்

விற்பனை வரியும், விற்பனைப் புரள்வு வரியும் (Turnover Tax)

பண்டங்களின் விற்பனையின்மீது மட்டும் விதிக்கப்படும் வரி விற்பனை வரியாகும். ஆனால், விற்பனைப் புரள்வு வரி பண்டங்கள் விற்பனை, ஊழியங்கள் விற்பனை ஆகிய இரண்டின்மீதும் விதிக்கப்படுகிறது. பேராசிரியர் ஷிர்ராஸ் (Professor Shirras) இவ் வேறுபாட்டை ஏற்றுக் கொள்ளவில்லை. அவர் இரண்டு வரிகளும் ஒன்றேயென்று கருதுகிறார். இந்தியாவில் விற்பனை வரியும், சோவித் யூனியனில் விற்பனைப் புரள்வு வரியும் விதிக்கப்படுகிறது.

பொறுக்கு விற்பனை வரியும், பொது விற்பனை வரியும்

குறிப்பிட்ட சில பண்டங்களின்மீது மட்டும் வரி விதித்துப் பிற பண்டங்களுக்கு விலக்களித்தல் பொறுக்கு விற்பனை வரியாகும். இன்றியமையாத பண்டங்களுக்கு விலக்களித்துப் போகப் பண்டங்களின்மீது மட்டும் இவ்வகை வரி விதிக்கப்படும். அனைத்துப் பண்டங்களின்மீதும் வரி விதித்தால், அது பொது விற்பனை வரி எனப்படும்.

### ஒருமுனை வரியும் (single-point tax), பலமுனை வரியும் (multi-point tax)

பண்டங்கள் விற்பனையாகும்பொழுது ஒரே ஒரு கட்டத்தில் மட்டும் வரி விதிப்பது ஒருமுனை வரியாகும். இவ் வரியை பண்டங்கள் ஆக்கப்படும் கட்டத்திலோ, மொத்த விற்பனை கட்டத்திலோ அல்லது சில்லறை விற்பனை கட்டத்திலோ (ஏதாயினும் ஒரு கட்டத்தில்) மட்டும் விதிக்கப்படும். பொதுவாக, ஒருமுனை வரியின் வீதம் பலமுனை வரியின் வீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருக்கும். பலமுனை வரி, ஒரு பண்டம் விற்பனையாகும் ஒவ்வொரு கட்டத்திலும் விதிக்கப்படும். பண்டத்தை உற்பத்தி செய்வோர் மொத்த வணிகருக்கு விற்கும்பொழுது ஒரு முறையும், மொத்த வணிகர் சில்லறை வணிகருக்கு விற்கும்பொழுது ஒரு முறையும், சில்லறை வணிகர் நுகர்வோருக்கு விற்கும் பொழுது ஒரு முறையும் இவ் வரி விதிக்கப்படலாம். இதேபோன்று பண்டங்கள் ஐந்து முறை விற்பனையானால், ஐந்து முறை அதே பண்டத்தின்மீது வரி செலுத்த வேண்டும். பொதுவாகப் பலமுனை விற்பனை வரியின் வீதம் ஒருமுனை விற்பனை வரி வீதத்தைக் காட்டிலும் மிகக் குறைவாக இருக்கும்.

### மொத்த விற்பனை வரியும், சில்லறை விற்பனை வரியும்

மொத்த வியாபாரிகள்மீது மட்டும் விற்பனை வரி விதிக்கப் பட்டால் அதை மொத்த விற்பனை வரி என்றும், சில்லறை வியா பாரிகள்மீது மட்டும் விதிக்கப்பட்டால், அதைச் சில்லறை விற்பனை வரி என்றும் கூறுகின்றோம்.

விற்பனை வரியின் முக்கியத்துவம் அதிகரித்துக்கொண்டே வந்திருக்கிறது. *1950—51*-ல் மாநிலங்களின் வரி வருவாய்களில் 25·9% விற்பனை வரியிலிருந்து கிடைத்தது. *1973—74*-ல் (பட்ஜெட் மதிப்பீடு) இவ் வீதம் *39%* ஆக உயர்ந்தது. இந்திய அரசுக்கு ஆயத்தீர்வைகள் எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் மாநிலங்களுக்கு விற்பனை வரியாகும். இது பின்வரும் அட்டவணை யிலிருந்து புலனாகும்.

இதில் மோட்டார் எண்ணெய்மீது விதிக்கப்படும் விற்பனை வரியும், மைய அரசு விதிக்கும் விற்பனை வரியும் சேர்க்கப்படவில்லை.

| ஆண்டு | மாநிலங்களின் விற்பனை வரி வருவாய். | மாநிலங்களின் மொத்த வரி வருவாய். | மொத்த வருவாயில் விற்பனை வரியின் சதவீதம். |
|---|---|---|---|
| | (கோடி உரூபாவில்) | (கோடி உரூபாவில்) | |
| 1951—52 | 58·93 | 227·70 | 25·9 |
| 1960—61 | 158·74 | 456·20 | 34·8 |
| 1969—70 | 490·8 | 1,355·51 | 36·00 |
| 1970—71 | 561 6 | 1,527·8 | 27·00 |
| 1971—72 | 636·2 | 1,695·3 | 27·00 |
| 1972—73 (பட்ஜெட் மதிப்பீடு) | 691·8 | 1,849·9 | 37·00 |
| 1973—74 (பட்ஜெட் மதிப்பீடு) | 758·0 | 2,013·6 | 39·00 |

## மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. D. T. Lakdawala, 'Mobilisation of States', Resources, pp. 20—26.

2. John F. Due, ' Government Finance', Chapter 17.

3. A. R. Prest, ' Public Finance ' pp. 174-5 and 387—395.

4. Philip E. Taylor, ' The Economics of Public Finance,' Chapter 20.

5. Dr. B. V. Narayanaswamy Naidu and S. Thiruvengadathan, ' The Madras General Sales Tax Act '—A Study, 1940.

6. R. Balakrishna, ' Studies in Indian Economic Problems,' 2nd Edition, 1958, pp. 287—303.

# 32. வரி தவிர்ப்பும் வரி ஏய்ப்பும்

## வரியைத் தவிர்த்தல் (Tax Avoidance)

வரியை மக்கள் ஒரு பளுவாகக் கருதுகிறார்கள். வரியைச் செலுத்துவதனால் மக்களின் வாங்கும் ஆற்றல் குறைகிறது. ஆகவே, வரி செலுத்தாமல் தப்பித்துக் கொள்ளப் பல வழிமுறைகளையும் கையாளுகிறார்கள். அரசுக்கு இதனால் சில சங்கடங்கள் ஏற்படுகின்றன. இவ்வளவு வருமானம் வேண்டும் என்று மதிப்பீடு செய்து, அரசு வரி வீதங்களை விதிக்கிறது. மக்கள் வரி செலுத்தாது தப்பித்துக் கொள்ளும் பொழுது, அரசின் மதிப்பீட்டின்படி வருமானம் கிடைப்பதில்லை. அரசின் மதிப்பீட்டைக் காட்டிலும் குறைவாகவே வருமானம் கிடைக்கிறது. ஆகவே, அரசின் செலவுக்கு வேண்டிய பணமும் குறைகிறது. அதனால், இப் பிரச்சினையை இங்கு நாம் ஆராய்வோம்.

### வரியைத் தவிர்க்கும் முறைகள்

வரிப் பளுவிலிருந்து தப்பித்துக் கொள்ள இரண்டு வழிகள் உள்ளன. முதலாவது, வரியைச் செலுத்தாது ஏய்க்கலாம். அரசுக்கு வரியைச் செலுத்த வேண்டியவர்கள் அதைச் செலுத்துவதில்லை. இது சட்டப்படி குற்றமாகும். சட்டத்தில் உள்ள விலக்குகளையும் அல்லது சட்டம் அளிக்கும் சலுகைகளையும் துணையாகக் கொண்டோ, அல்லது வரி விதிப்புக்கு உட்பட்ட பண்டங்களை வாங்காமலோ, மக்கள் வரியைச் செலுத்தாதிருக்கலாம். இதற்கு வரியைத் தவிர்த்தல் என்று பெயர். இது சட்டப்படிக் குற்றம் ஆகாது.

## வரி ஏய்ப்பு (Tax Evasion)

சட்டத்தின்படி வரி செலுத்த வேண்டிய ஒருவர், வரி செலுத்தவில்லை என்றால் இது வரி ஏய்ப்பாகும். ஒருவர் தான் செலுத்த வேண்டிய வருமானத்தின் ஒரு பகுதியைத் தெரிவிக்காமல்

மறைத்தல் இதற்கு ஓர் உதாரணமாகும். உண்மைகளைத் திரித்தும், பொய்க் கணக்குகளை எழுதியும், பித்தலாட்டம் செய்தும், மோசம் செய்வது வரி ஏய்ப்பாகும்.[1]

**கருப்புப் பணம்**

சட்ட விதிகளை மீறியும், மனச்சான்றுக்கு எதிராகவும் ஈட்டிய பணம் கருப்புப் பணமாகும். பெயரிலிருந்தே இப் பணம் மறை பொருளாக வைத்திருக்கப்படுகிறது என்றும், இத் தொகையைச் சம்பாதித்த வழிகள் மர்மமாகவே இருக்கின்றன என்றும் தெளிவாக உணரலாம். வரி ஏய்ப்பும், கருப்புப் பணமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. வரியை ஏய்ப்பதனுல் கருப்புப் பணம் உண்டாகிறது. கருப்புப் பணத்தைப் பயன்படுத்தி மேலும் பணத்தை ஈட்டும் பொழுது அதை வரி அதிகாரிகளின் கண்களிலிருந்து மறைக்கப் பார்ப்பது இயல்பேயாகும். கருப்புப் பணத்தின் புழக்கத்தினுல் நாட்டின் முன்னேற்றம் தடைப்படுகிறது. ஏனெனில், திட்டங்களைச் செயல்படுத்துவதற்கு வேண்டிய பணம் கிடைப்பதில்லை. கறுப்புப் பணம் புற்றுநோய் போன்றது. அதை முளையிலேயே கிள்ளா விட்டால் முழுதும் பரவி நாட்டின் பொருளாதாரத்தை உருக்குலைத்து அழிக்கும்.

கருப்புப் பணத் தொகையைப்பற்றிச் சரியான புள்ளி விவரங்கள் கிடையாது; இருக்கவும் முடியாது. ஆய்வு நெறியகத்தின் (ஆராய்ச்சி புள்ளியியல், வெளியீடு)[2] கணிப்புப்படி *1961—62*-ல் வரி செலுத்தாது ஏய்க்கப்பட்ட தொகை உருபா *811* கோடியாகும். *1965—66*-ல் இத் தொகை உருபா *1,216* கோடியாக அதிகரித்தது. *1968—69*-ல் வரி செலுத்தாது ஏய்க்கப்பட்ட வருமானம் உருபா *1,400* கோடியாகும். இதில், வருமான வரியாகச் செலுத்தாமல் ஏய்க்கப்பட்ட தொகை உருபா *470* கோடியாகும். *1968—69*-ல் கருப்புப் பணத்தைக் கொண்டு நடத்தப்பட்ட பேரங்களின் மதிப்பு உருபா *7,000* கோடியாகும்.

[1] வாஞ்சுக் குழு, வரியைத் திட்டமிடுதல் (tax planning), வரி ஏய்ப்பு, வரி தவிர்ப்பு என்ற மூன்று சொற்றொடர்களைக் கையாளுகிறது. நாம் வரி தவிர்ப்பு என்று கூறுவதை, அவர்கள் வரியைத் திட்டமிடல் என்று கூறுகிருர்கள். அவர்களின் கருத்தின்படி வரியைத் திட்டமிடலுக்கும், வரி ஏய்ப்புக்கும் இடைநிலையில் இருப்பது வரி தவிர்ப்பு ஆகும். இவ்வகை, தெளிவாக இல்லாததால், அவர்களின் முறையை நாம் பின்பற்றுகிறேமில்லை. சட்டத்தின் விதிகளுக்கு இணங்க நடந்து, ஆனல், அதே வேளையில் வரிப் பளுவைக் குறைப்பதற்கு அல்லது அகற்றுவதற்குச் செய்யப்படும் முயற்சிகளை வரி தவிர்ப்பு என்கின்றனர். இவர்கள் சட்டத்தை வெளிப்படையாக மீறவில்லையாயினும், சட்டத்தின் கருத்துக்கும், சாராம்சத்திற்கும் ஏற்ப நடக்க வில்லையாதலால், இவர்களை வரி தவிர்ப்புச் செய்தவர்கள் என்றும். சில வேளைகளில் இவ் வரி தவிர்ப்புக்கும், வரி ஏய்ப்புக்கும் இடையே வேறுபாடு காணவில்லை என்றும் வாஞ்சுக் குழு கூறுகிறது. இவ் வகை வரி தவிர்ப்பைக் குழு கண்டிக்கிறது.

[2] Directorate of Inspection (Research, Statistics and Publication)

### கருப்புப் பணத்தைப் பயன்படுத்தும் வழிகள்

திரை மறைவில் நடத்தப்படும் வணிகப் பேரங்களிலும், பொன்னையும், போகப் பண்டங்களையும் கள்ளக் கடத்தல் செய்வதிலும், இறக்குமதி செய்வதற்கான கோட்டா அளவுகளைச் (quotas) சட்டத்திற்குப் புறம்பாக வாங்குவதிலும், உரிமங்களை அதிக விலைக்கு வாங்குவதிலும், இரகசியமாகக் காரியங்களை முடிப்பதற்காகத் தரப்படும் பணத்திலும், அரசியல் கட்சிகளுக்கு நன்கொடைகள் கொடுப்பதிலும், பினுமி (Benami) பெயர்களில் உடைமைகளை வாங்குவதிலும், கருப்புப் பணம் பரவலாகக் காணப்படுகிறது. கறுப்புப் பணத்தைக் கொண்டுதான் ஆடம்பரமான வாழ்க்கை நடத்துகிருர்கள் ; திருமணங்களுக்கும், திருவிழாக்களுக்கும் ஏராளமாகச் செலவு செய்கிருர்கள்.

### வரி ஏய்ப்புக்குக் காரணங்கள்

அனைத்து வரிகளையும் செலுத்தாமல் ஏய்ப்பதற்கு முயற்சி நடந்தாலும், சில வரிகளை ஏய்ப்பது பரவலாக இருக்கிறது. வரி ஏய்ப்புக்குக் காரணங்கள் வருமாறு : (1) எவ்வளவுக் கெவ்வளவு வரிப்பளு, முக்கியமாக நேர்முக வரிவீதங்கள் அதிகமாக இருக்கிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு வரியைச் செலுத்தாமல் ஏய்ப்பதற்குத் தூண்டுகோல் செய்ததாக ஆகிறது. (2) கட்டுப்பாடுகள், உரிமங்கள் இவற்றின் விளைவாகப் பல பண்டங்களும் தட்டுப்பாடாக இருப்பதும் ஒரு காரணம். (3) அரசியல் கட்சிகளுக்கு நன்கொடைகள். (4) ஊழல் மிகுந்த வாணிப முறைகள். (5) வணிகச் செலவுகளுக்கு உச்சவரம்பு, (6) விற்பனை வரி, ஏனைய வரிகள் இவற்றின் கடுமையான வீதங்கள். (7) வரிகள் பற்றிய சட்டங்களைச் சரிவர அமல் நடத்தாமை. நம் நாட்டில் நிருவாகத் திறமை மிகவும் குறைவாக இருக்கிறது என்பதை மஹாவீர தியாகியின் தலைமையில் அமைக்கப்பட்ட குழுவும் சுட்டிக் காட்டியது. வரிகளின் நிருவாகத்தைப்பற்றித் திறனாய்வு செய்த தியாகிக் குழு, அதிகாரிகள் வரி கொடாதிருந்தோர்மீது வழக்குத் தொடராததையும், அவர்களின் குற்றத்திற்கேற்ற தண்டனைகளை அமல் செய்யாததையும் கண்டித்தது. நாடாளுமன்றத்தின் பொதுக் கணக்குக் குழுக்களில் (Public Accounts Committees) ஒன்று கூறியதுபோல, *1953*-க்கும், *1963*-க்கும் இடைப்பட்ட பத்தாண்டுகளில் ஒருவர்கூட தண்டனை பெறவில்லை. *1961—62*-ல் நம் நாட்டிலேயே ஒரே ஒருவர்மீதுதான் வழக்குத் தொடரப்பட்டது ; அவருக்கும் தண்டனை கிடைக்கவில்லை.

*1965—66*-ல் ஒரு வழக்குகூட தொடரப்படவில்லை. வரி ஏய்ப்பு பரவலாக இருக்கும் ஒரு நாட்டில் இங்ஙனம் நடப்பதை

என்னவென்று சொல்ல? (8) மக்களின் ஒழுக்கம் குறைந்ததும் ஒரு காரணமாகும். நிருவாகச் சீர்திருத்தக் குழுமத்தின் செயல் குழு கூறுமாறு: ‘மேலை நாடுகளில் வரி ஏய்ப்பை ஒரு சமுதாயக் குற்றமாகச் சமுதாயம் எண்ணுகிறது.’ நம் நாட்டிலோ வரியை ஏய்ப்பதை மதிநுட்பத்தையும், அறிவுக் கூர்மையையும் காண்பிப்ப தாகவும், அதனுல் வரியை ஏய்ப்போர் பாராட்டுதலுக்கு உரிய வராகவும் கொள்ளப்படுகிருர்கள். (9) உடைமைகளின்மீது வரி விதிப்பதற்கு, எல்லா உடைமைகளேயும் மதிப்பிட வேண்டும். சில உடைமைகள், முக்கியமாக நகைகள் முதலானவற்றை வரி அதிகாரிகளின் கண்களில் படாமல் செய்து விடலாம். சுயமாகச் சம்பாதிக்கும் மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், வணிகர்கள் இவர்கள் யாவரும் பூர்த்தி செய்து அனுப்பும் வருமான வரி விண்ணப்பங்களே, அதிகாரிகள் நம்பித்தான் தீரவேண்டியிருக் கிறது. அவர்கள் தங்கள் வருவாயின் ஒரு பகுதியைத் தெரிவிக் காது மறைத்து விட்டால் அதைக் கண்டுபிடிப்பது மிகவும் கடினம். (10) வரிகளேப் பற்றிய சட்டங்கள் மேன்மேலும் சிக்கலாக ஆகும் பொழுது, அவற்றைச் செயல்படுத்துவது கடினம்; அதேசமயம் ஏய்ப்பது எளிது. விலக்குகள், பிடித்தங்கள், வேறு சில வகை விதிகள், இவை யாவும் புதிது புதிதான நிருவாகப் பிரச்சினைகளைத் தோற்றுவிக்கின்றன. வரி விதிப்பு நியாயமாக இருக்கவேண்டும். என்ற விருப்பமே பல சிக்கல்கள் எழுவதற்குக் காரணமாக இருக்கலாம். (11) வரித்தளத்தைக் கண்டுபிடிப்பது கடினமாக இருப்பதாலும், வரி ஏய்ப்பு நடைபெறலாம். நிகர வருமானத்தைக் கண்டு பிடிப்பது மிகவும் கடினம். ஆகவே, வரி ஏய்ப்பு ஏதாயினும் ஒரு வடிவில் தோன்றக் கூடும். (12) வரி களின்மீது மக்கள் அதிருப்தி கொண்டிருந்தாலும், வரியைச் செலுத்தாமல் ஏய்ப்பவர்கள், தங்கள் செய்கை சரியானதே என்று மேலும் துணிச்சல் கொள்கிருர்கள். ஒரு வரியை மக்களுக்கு மிகவும் பிடிக்காவிட்டால், அதை அகற்றி விடுவதே அறிவுடைமை யாகும்; இல்லாவிட்டால் பொதுமக்களின் ஒழுக்கத்தைக் குறைத்த பழி அரசினேயே சாரும்.

### வரி ஏய்ப்பின் வகைகள்

1. வரவுகளைக் குறைத்துக் காண்பிப்பது: தாங்கள் பெற்ற தொகைகளுக்கு ரசீது கொடுக்காமலோ அல்லது குறைந்த தொகைகளுக்கு ரசீது கொடுத்தோ, மக்கள் வரி கொடாது ஏய்க் கிருர்கள். எடுத்துக்காட்டாக, ஸ்டாம்ப் செலவைக் குறைப் பதற்காக, வீடு அல்லது நிலத்தை வாங்கும்பொழுது, அதன் உண்மையான கிரயத் தொகையைக் காட்டாது, குறைந்த தொகையை எழுதுதல். இதேபோன்று ஒப்பந்தங்களைச் செய்து

முடித்தமைக்காகப் பெருந்தொகைகளை ஒப்பந்தக்காரர்கள் பெற்றாலும், தாங்கள் பெற்ற தொகைகளுக்குக் குறைவான தொகைகளுக்கே ரசீது தருகிறார்கள். வீட்டு வாடகையை வாங்கும் பொழுது வீட்டின் சொந்தக்காரர்கள் ரசீது தருவது இல்லை; அங்ஙனம் தந்தாலும் குறைந்த தொகைக்கே தருகிறார்கள். இதேபோல் வட்டிக்குக் கடன் அளிப்பவர்களும் அதிக வட்டியை வாங்கிக்கொண்டு குறைத்த வட்டிக்கே ரசீது தருகிறார்கள்.

2. சொந்தச் செலவுகளை வாணிபத்திற்கு ஆன செலவுகளாகப் பிடித்தம் (deduction) செய்தல்: பல தொழில் முனைவர்களும், வணிகர்களும் கம்பெனிப் பணத்தை எடுத்துச் சொந்த செலவு செய்து கொள்கின்றனர். தங்கள் ஊதியத்தில் ஒரு பங்கைப் பண்டமாகவும் பெற்றுக் கொள்கின்றனர். இங்ஙனம் பண்டமாகப் பெறுவதால் அவர்கள் அதன்மீது வரி செலுத்துவதில்லை. இந் நிலையை டெயிலர் பின்வருமாறு வருணிக்கிறார்: 'பல உல்லாசக் கப்பல்களும், மோட்டார் கார்களும் சொந்த நலனுக்காகக் கம்பெனியின் செலவில் இப்பொழுது நடத்தப்படுகின்றன என்று நம்மிடம் கூறுகிறார்கள். இரவு விடுதிகளும், செலவு அதிகம் பிடிக்கும். இளைப்பாறு மிடங்களும் (restaurants) வாணிப ரீதியில் இலாபகரமாக நடப்பதற்கு, அவை செலவு அதிகம் பிடிக்கும் கேளிக்கைகள் வாயிலாக வரிகளைத் தவிர்ப்பதுதான் காரணம் என்றும், பல குடும்பங்கள் ஐரோப்பாவுக்கும், பிற இடங்களுக்கும் உல்லாச யாத்திரை போவது, பெயளரவில் வாணிகப் பிரயாணங்களாகக் (business trips) காட்டப்படுகிறது என்றும் நம்மிடம் கூறுகிறார்கள்.'

3. கள்ளக்கடத்தல்: எந்தெந்தப் பண்டங்களின்மீது அதிக இறக்குமதி வரிகள் விதிக்கப்படுகின்றனவோ, அவை கள்ளக் கடத்தல்மூலம் கொண்டு வரப்படுகின்றன. கள்ளக்கடத்தலில் ஈடுபட்டிருப்பவர்கள் வரி கொடாது ஏய்க்கிறார்கள்.

4. எஸ்டேட் வரியையும் செலுத்தாமல் ஏய்க்கலாம். வரி தாங்கும் சொத்தின் ஒரு பகுதியை (முக்கியமாக) நகைகளை மறைத்துவிடலாம். ஆதாயம் பெறுபவர்களின் பேரில் பொய்யாகக் கடன்களை எழுதி வைக்கலாம். எஸ்டேட்டை நடத்தும் பொறுப்புள்ளவர்களும், எஸ்டேட்டை நிருவகிப்பவர்களும் பெரும் சம்பளத்தைப் பெறலாம். வரியைச் செலுத்தாமல் ஏய்ப்பதற்கு வேறு உபாயங்களையும் கையாளலாம்.

5. இறுதியாக, மொத்த வருமானத்தைக் குறைத்துக் காண்பித்தும், ஒரோவழி கிடைக்கும் வருவாய்களைக் காண்பிக்காமலும்,

வரியை ஏய்க்கலாம். உதாரணமாக, ஆசிரியர் ஒருவர் தன் சம்பளத்தை வருமான வரி விண்ணப்பத்தில் குறித்திருக்கலாம். ஆனால், தேர்வு விடைத்தாள்களைத் திருத்துவதற்குக் கிடைக்கும் ஊதியத்தை மறைக்கக் கூடும்.

### வரி தவிர்ப்பு

சட்டத்தில் இருக்கின்ற இடுக்குகளைப் பயன்படுத்தி ஒருவர் வரியை முற்றும் கொடாமல் தவிர்க்கலாம்; அல்லது கொடுக்க வேண்டிய வரித் தொகையைக் குறைத்துக் கொள்ளலாம். வரி வீதங்கள் கடுமையாக இருக்கும் பொழுதும், சட்டங்கள் மிகவும் சிக்கலாக இருந்து அவற்றில் உள்ள குறைபாடுகளைக் கெட்டிக்கார வழக்குரைஞர்களும், கணக்கர்களும் கண்டுபிடிக்கும் பொழுதும், நிருவாகம் ஊழலாக இருக்கும் பொழுதும், மிகுந்த இலாபம் கிடைக்கும் வகையில் முதலீடு செய்யக்கூடிய வாய்ப்புகள் இருக்கும்பொழுதும் வரி தவிர்ப்பு பரவலாகத் தென்படுகிறது. சட்டத்தில் உள்ள இடுக்குகளை அடைப்பதன் வாயிலாகவும், வரி வீதங்கள் மிகவும் அதிகமாக இல்லாமல் பார்த்துக் கொள்வதன் வாயிலாகவும், வரி தவிர்ப்பைக் குறைக்கலாம். வரி தவிர்த்தலை தீய ஒழுக்கமென்று கூற முடியாது. சமுதாய அளவில் இது வரவேற்கத் தகுந்ததே என்றுகூட கூறலாம். ஒருவன் மது அருந்துவதை விட்டு விடுவதால் வரியைத் (நம் நாட்டில் ஆயத் தீர்வைகளை) தவிர்க்கலாம். இதனால், அவன் நடத்தை மற்ற வருக்கும் முன் மாதிரியாக இருக்கும். இந்தச் சூழ்நிலையில் அவன் மதுவைக் குடித்துவிட்டு வரி செலுத்துவதை வரவேற்க முடியாது.

### வரியைத் தவிர்க்கும் வழிகள்

1. கம்பெனியின் ஈட்டத்தை (earnings) மீண்டும் முதலீடு செய்வதால், ஒருவர் தனியாள் வருமான வரியிலிருந்து தப்பிக்கலாம்.

2. டிரஸ்டு (trust) நிதிகளை நிறுவியும் ஒருவர் வரியைச் செலுத்தாமல் தவிர்க்கலாம். தன்னுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களின் நலனுக்காகவும், பிறரின் நலனுக்காகவும், ஒருவர், பல நாடுகளிலும் டிரஸ்டு நிதிகளை ஏற்படுத்தச் சட்டம் இடம் தருகிறது. வருமானத்தை ஈனும் சொத்துகளை, வரி செலுத்துவோர் டிரஸ்டுகளின் பெயரில் எழுதி வைத்து விடுவர். இந்த டிரஸ்டுகளை நிருவகிக்கும் நம்பர்கள் அல்லது அறங்காவலர் களும் இவர்களே. பல்வேறுபட்ட சட்டங்களின் விதிகளின்படி, இந்த நம்பர்கள், டிரஸ்டு நிதிகளிலிருந்து ஆதாயங்களைப் பலருக் கும் வழங்குகின்றனர். இந்த யுக்தியின்படி, பெரும் வருமானம்

உடைய ஒருவர், தன்னுடைய வருமானத்தைப் பல கூறுகளாகப் பிரித்து வருமானத்தின்மீது வளர்வீத வரிகளைச் செலுத்துவதைத் தவிர்க்கிறார். ஆயினும், அதே வேளையில், டிரஸ்டு நிதிகளுக்கு வருமானத்தை நல்குவதற்கு அடிப்படையாக இருக்கும் உடைமையின்மீது அவர் ஓரளவு பிடிப்பைத் தன் கைக்குள் வைத்திருக்கிறார்.

3. அற நிலையங்களுக்கும், கல்வி நிலையங்களுக்கும், சமய நிறுவனங்களுக்கும், ஏராளமான நன்கொடைகளை வழங்குவதன் வாயிலாகவும் வருமான வரியைத் தவிர்க்கலாம். வருமானங்களும் மிக உயர் மட்டத்தில் இருந்து, வரிவீதங்களும், அதிகமாக இருக்கும் பொழுது, அற நிலையங்களுக்கு நன்கொடைகள் அளிப்பதனால், கொடையாளிக்கு ஒரு இழப்பும் இல்லை. இதன் மூலம் அவர் தன்னை வள்ளன்மை உடையவராக காட்டிக் கொள்ளலாம்.

4. பண்டங்களை நுகரும் மாநிலங்களைக் காட்டிலும், வரி வீதங்கள் குறைவாக உள்ள பிற மாநிலங்களில், பண்டங்களைக் கொள்முதல் செய்து, விற்பனை வரிகளை ஓரளவேனும் தவிர்க்கலாம்.

5. சாகும் தறுவாயில் சொத்துகளை நன்கொடையாக அளிப்பதன் வாயிலாகவும் எஸ்டேட் வரிகளைத் தவிர்க்கலாம்.

6. இறுதியாக, ஆயுள் காப்புறுதி பத்திரத்தையும் (Life Insurance Policy), அரசின் கடன் பத்திரங்களையும், வாங்குவதன் வாயிலாகவும், வரியைத் தவிர்க்கலாம்.

இவைதாம் வரி ஏய்ப்புக்கும், வரி தவிர்ப்புக்கும் தலையாய காரணங்கள். இந்த இரண்டு பிரச்சினைகளும் நம் நாட்டில் நெடு நாட்களாகவே இருந்து வருகின்றன. இதுகாறும், அரசு மேற்கொண்ட நடவடிக்கைகளினால் வரி ஏய்ப்பைத் தடுக்க முடிந்ததாகத் தெரியவில்லை. வரி ஏய்ப்பு, வரி தவிர்ப்பு இவை யிரண்டின் விளைவும் ஒன்றே. அரசின் வருமானம் குறைவது தான் இவ் விளைவு ஆகும். இதனால் ஒழுங்காக வரி செலுத்து வோர்களின் மீதுள்ள வரிப்பளு அதிகரிக்கிறது.

1956-ல் பேராசிரியர் கால்டர் வரி ஏய்ப்பைத் தடுக்க சில யோசனைகளைத் தெரிவித்தார். ஒவ்வொரு ஆண்டும் வரி செலுத்து வோர் ஒவ்வொருவரும் அவரவருடைய சொந்த ஐந்தொகை வருமானக் கணக்கு, இலவச மாற்றங்கள், மூலதன ஆஸ்திகளை வாங்கியது அல்லது விற்றது, கடன் வாங்கியது, கடன் அளித்தது, ஏனைய மூலதன அல்லது தற் செயலாக நிகழ்ந்த (casual)

பேரங்கள், சொந்தச் செலவு இவை பற்றிய ஒரு விரிவான அறிக்கையைத் தாக்கல் செய்ய வேண்டும் என்று அவர் யோசனை கூறினர். பொய்க் கணக்குகளைக் காட்டி வரி கொடாமல் மோசம் செய்வதன் அளவை இவ் விரிவான அறிக்கை குறைக்கக் கூடும் என்று அவர் நம்பினர். ஆயினும், தியாகிக் குழுவும், மைய வருவாய் வாரியமும் (Central Board of Revenue) இந்த யோசனைகளை ஏற்கவில்லை.

1958ஆம் ஆண்டு ஜூன் திங்களில் இந்திய அரசு நேர்முக வரி நிருவாக விசாரணைக் குழு (Direct Tax Administration Enquiry Committee) என்ற ஒரு குழுவை நியமித்தது. இதன் தலைவர் மஹாவீர தியாகி. 1959ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 21ஆம் நாளன்று இக் குழுவின் அறிக்கை நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது. மதிப்பீட்டு முறைகள், பிரத்தியேகப் பிரச்சினைகள், வரி வசூல், மீட்சி (recovery), திருப்பித் தருதல் (refund), வரி ஏய்ப்பு, வரி தவிர்ப்பு, நிருவாகம், பொதுமக்களுடன் சரியான தொடர்பு வைத்திருக்க வேண்டியதன் இன்றியமையாமை, இன்னோரன்ன பல விஷயங்கள் குறித்து இக் குழு 367 சிபாரிசுகளைச் செய்தது.

வரி ஏய்ப்பையும், வரி தவிர்ப்பையும் தடுப்பதற்கு இக் குழு பல யோசனைகளைத் தெரிவித்தது. வரி ஏய்ப்புக்கு எதிராகப் பொது மக்களின் உணர்வைத் தூண்டிவிட வேண்டும் எனவும், ஐயாயிரம் உருபாவுக்கு மேல் தண்டனை விதிக்கப்பட்டவர்களின் (வரி செலுத்தாமல் ஏய்த்தவர்களின்) பெயர்களையும், அவர்கள் தாக்கல் செய்த வருமான வரி விண்ணப்பப் பாரங்களையும், செய்தித் தாள்களில் வெளியிட வேண்டும் எனவும், வரியை ஏய்த்தவர்களுக்குக் கவுரவம் தருவதும், சலுகை அளிப்பதும் கூடாதெனவும், அவர்களுக்குப் பரிசுகள், விருதுகள் இவற்றை வழங்கக் கூடாதெனவும் இக் குழு யோசனை கூறியது. வருமானத்தை மறைத்ததால் பிராஸிகியூஷனுக்கு (prosecution) ஆளானவர்களையும், தண்டனை பெற்றவர்களையும், அரசு நியமிக்கும் எந்தக் குழுவிலும் அல்லது குழுமத்திலும் உறுப்பினராகப் பதவி வகிக்கத் தகுதியற்றவர்களாக ஆக்க வேண்டும் என்றும் இக் குழு யோசனை தெரிவித்தது.

நேர்முக வரி விதிப்பு விசாரணைக் குழு ஒன்றை மைய அரசு 1970ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 2ஆம் நாளன்று நியமித்தது. இதன் தலைவர் தலைமை நீதிமன்றத்தின் முன்னாள் பிரதம நீதிபதியாக இருந்த திரு. கே. என். வாஞ்சு (K. N. Wanchoo) ஆவார். திரு. எம். பி. சித்தாலே, (M. P. Chitale), திரு. எஸ். பிரகாஷ்

சோப்ரா (S. Prakash Chopra), பி. ஸி. பதி (P. C. Padhi), டி. கே. ரங்கநேகர் (D. K. Rangnekar) ஆகியவர்கள் இக் குழுவின் பிற உறுப்பினர்கள் ஆவார்கள். இக் குழுவின் செயலாளர் எஸ். நாராயண் (S. Narayan) ஆவார். கருப்புப் பணத்தை வெளியே கொணர்வதற்கும், மேலும் வரி ஏய்ப்பின் வாயிலாகக் கருப்புப் பணம் பெருகுவதைத் தடுப்பதற்கும், டிரஸ்டுகளை ஏற்படுத்துவது போன்ற பல்வேறுபட்ட சட்ட உபாயங்களைக் கொண்டு வரியைத் தவிர்த்தலைத் தடுப்பதற்கும், வரி பாக்கிகளைக் குறைப்பதற்கும் உருப்படியான யோசனைகளையும், பயன்தரும் யோசனைகளையும் அளிக்கவேண்டும் என்று இக் குழு பணிக்கப்பெற்றது. இக் குழு 1971ஆம் ஆண்டு மே திங்களில் ஓர் இடைக்கால அறிக்கையை அரசினிடம் அளித்தது. 1972ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 20ஆம் நாளன்று வாஞ்சு அவர்கள் இறுதி அறிக்கையை நாடாளு மன்றத்திடம் அளித்தார். சொத்துகளில் பினாமி மாற்றங்கள் செய்வதைத் தடுப்பதற்குக் குழு கூறிய யோசனைகளை அரசு ஏற்றுக் கொண்டது. வரி ஏய்ப்பைத் தடுப்பதற்கும், கருப்புப் பணப் புழக்கத்தைத் தடுப்பதற்கும் ஒரு சட்ட மூலம் (மசோதா) கொண்டுவரப்பட்டது. இம் மசோதா இப்பொழுது மக்கள் சபையின் பொறுக்குக் குழுவின் பரிசீலனையில் இருக்கிறது.

கருப்புப் பணத்தை வெளிக்கொணர வாஞ்சுக் குழுவினர் தெரிவித்த யோசனைகளாவன : (1) விதிக்கப்பட்ட தீர்வைகள் நியாயமாகவும், விரிவாகவும், சுயேச்சையாகவும் இருக்க வேண்டும். அவற்றை நேர்முக வரிகள் ஸெட்டில்மெண்ட் மன்றத்திற்கு (Direct Taxes Settlement Tribunal) ஒப்படைக்கலாம். இம் மன்றத்தைப் புதிதாக நியமிக்கவேண்டும். (2) வருமான வரிச் சட்டத்தின்கீழ் சோதனை போடும் அதிகாரம் இருக்கிறது. ஆட்கள், ஊர்திகள், பாத்திரங்கள் யாவற்றையும் சோதனையிட அதிகாரம் வழங்க வேண்டும். (3) தாமாகவே முன் வந்து தங்களின் உடைமைகளையும், வருமானத்தையும் இவ்வளவு என்று காண்பிக்கும் திட்டத்தைக் குழு ஆதரிக்கவில்லை.

வரி ஏய்ப்பைத் தடுப்பதற்குக் கீழ்க்கண்ட நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் என்று வாஞ்சுக் குழு கூறியது. அவையாவன:

1. மேல்கட்டணத்தை (surcharge) உள்ளிட்ட வருமான வரி வீதங்களைக் குறைக்கவேண்டும். இப்பொழுது உச்ச அளவு வரி வீதம் 97·75% சதவீதமாக உள்ளது. இதை 75% ஆகக் குறைக்க வேண்டும். இடைநிலையிலும், கீழ்நிலையிலும் உள்ள வருமானங்

களுக்கும் சிறிது வரி வீதங்களைக் குறைக்கலாம். குழு சிபாரிசு செய்த வரிவீதப் பட்டியல் வருமாறு :

| வருமானம் | வரி வீதம் |
|---|---|
| 0— 5,000 | வரி இல்லை. |
| 5,001—10,000 | 10% |
| 10,001—15,000 | 500+15% |
| 15,001—20,000 | 1,250+20% |
| 20,001—25,000 | 2,250+25% |
| 25,001—30,000 | 2,500+35% |
| 30,001—40,000 | 5,250+45% |
| 40,001—50,000 | 9,750+50% |
| 50,001—60,000 | 14,750+55% |
| 60,001—70,000 | 20,250+60% |
| —70,000-க்குமேல் | 26,250+65% |

உருபா 15,000-க்கு மேற்பட்ட வருமானங்களின்மீது 15% மேல்கட்டணம் விதிக்கவேண்டும். நிக்கோலஸ் கால்டர் கார்ப்பொரேஷன் வரியின் உச்ச அளவு 44%-க்குமேல் போகக் கூடாது எனவும் மேல்தள வரியின் (super tax) உச்ச அளவு 45%-க்குமேல் போகக்கூடாதெனவும், இவ் வரி வீதமும் ஆண்டொன்றுக்கு உருபா 25,000-க்குமேல் உள்ள வருமானங்களின்மீதே விதிக்கப்படவேண்டும் எனவும் சிபாரிசு செய்ததும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

2. இப்போதிருக்கும் கட்டுப்பாடுகள், உரிமங்கள், பர்மிட் முறைகள் இவற்றில் எவை எவையெல்லாம் வேண்டியதில்லையோ அவற்றை அகற்றுவதற்கு, ஒரு வல்லுநர் குழுவை நியமிக்க வேண்டும்.

3. மேற்கு ஜெர்மனியிலும், ஜப்பானிலும் இருப்பது போன்று நம் நாட்டிலும் அரசியல் கட்சிகளுக்கு வேண்டிய நிதியை அரசே கொடுக்கவேண்டும். அரசியல் கட்சிகளுக்கு அரசு அங்கீகாரம் அளிப்பதற்கு அவை, 1860ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட சங்கங்கள் பதிவுச் சட்டத்தின்கீழ் (Societies Registration Act) பதிவு செய்யப்பட்டிருக்கவேண்டும். அவற்றின் கணக்குகளும் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட கெடுவுக்குள் தணிக்கை செய்யப்பட்டிருக்க வேண்டும். தனியார்கள் தங்களின் மொத்த வருமானத்தில் 10%வரை அரசியல் கட்சிகளுக்குக் கொடை அளிக்கலாம். ஆனால், இத் தொகை பதினாயிர உருபாவுக்குமேல் போகக்

கூடாது. இத் தொகையில் 50% வருமான வரியில் பிடித்தம் செய்துகொள்ளலாம். கம்பெனிகள் அரசியல் கட்சிகளுக்குக் கொடையளிப்பதன்மீதுள்ள தடையை அகற்றக்கூடாது.

4. 'கடுகு போகிற இடம் தெரிகிறது; பூசணிக்காய் போகிற இடம் தெரியவில்லை' என்று தமிழில் ஒரு பழமொழி உண்டு. இதைப் போன்று வருமான வரி அதிகாரிகள் வருமானம் குறைவாக உள்ளவர்களின்மீது அதிகக் கெடுபிடி செய்கிறார்கள். பெருத்த வருமானம் உள்ளவர்களின்மீது ஜாடைமாடையாக இருந்து விடுகிறார்கள். இதனால்தான் வருமான வரி அதிகாரிகளைப்பற்றி மக்களிடையே நல்லெண்ணம் இல்லை. ஆகவே, இந் நிலையை மாற்றவேண்டும்.

5. வருமானத்தை அடிப்படையாகக்கொண்டு விதிக்கப்படும் அபராதம், குறைந்த வருமானம் உடையவர்களையே அதிகமாகப் பாதிக்கிறது.

ஆகவே, எவ்வளவு வருமானம் மறைக்கப்பட்டதோ அதற்கான தண்டனை, ஏய்க்கப்பட்ட வரித் தொகையினைப் பொறுத்து இருக்கவேண்டும். குறும அபராதம் ஏய்க்கப்பட்ட வரித் தொகையாகவும், உச்ச அளவு அபராதம், இதைப்போல் இரண்டு மடங்கும் இருக்கவேண்டும்.

6. உடைமைகளைக் குறைவாக மதிப்பிடுவதைத் தடுப்பதற்கு ஒரு யோசனையையும் குழு தெரிவித்தது. இதன்படி எந்தெந்த உடைமைகள் குறைவாக மதிப்பிடப்பட்டிருக்கின்றனவோ, அம் மதிப்புடன் 15%-யும் சேர்த்து இழப்பீடாகக் கொடுத்து, அரசு அவ் வுடைமைகளை எடுத்துக்கொள்ள அதிகாரம் அளிக்க வேண்டும்.

7. வரி கொடாது ஏய்ப்பவர்களின்மீது வழக்குத் தொடுத்து பிராஸிக்யூஷன் செய்வதைத் தீவிரப்படுத்தவேண்டும்.

8. புலன் விசாரணையைத் தீவிரப்படுத்தவேண்டும். இதற்காக, அதிகாரிகளுக்குத் தேவைப்படும் உருப்பெருக்கிக் கண்ணாடிகள், தொலைவு போட்டோ (telephoto) காமிராக்கள், நாடாப் பதிவு கருவுகள், போட்டோஸ்டாட் (photostat) எந்திரங்கள், அதீத ஊதா விளக்குகள் (ultraviolet), குறைந்த சிவப்பு (infra-red) ஒளி விளக்குகள், மைக்ரோ பிலிம் (micro film) கருவிகள் இவற்றை அளிக்க வகை செய்யவேண்டும்.

*9.* ஒரு வருமான வரி புலனாய்வு செய்யும் அதிகாரி, சாதாரண மாக ஆண்டொன்றில் 40-ல் இருந்து 50 வழக்குகளுக்குமேல் புலனாய்வுக்கு எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. மிகவும் சிக்க லான வழக்குகளாக இருந்தால் நான்கு அல்லது ஐந்து வழக்கு களைப் புலனாய்வு செய்தால் போதும்.

*10.* வரி ஏய்ப்பைப்பற்றி உளவு சொல்கிறவர்களுக்குக் கொடுக்கப்படும் ரொக்கப் பரிசுகளுக்கு வருமான வரியிலிருந்து விலக்களிக்கவேண்டும்.

*11.* சோதனைகள் நடத்திய விவரங்களையும், கைப்பற்றிய பண்டங்கள், ஏடுகள்பற்றிய விவரங்களையும், பிராஸிகியூஷன் களையும் செய்தித் தாள்களில் வெளியிடவேண்டும். இதற்காக, அப்பீல் முடிவுகள் வரும்வரை காத்திருக்க வேண்டியதில்லை. இதற்குச் சட்டத்தையும் திருத்தவேண்டும்.

*12.* வேளாண்மை வருமானத்தின்மீதும் வருமான வரி விதிக்கவேண்டும். இதற்காக, அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும். இவ் வரியினால் வசூலான தொகையை மாநிலங் களுக்குப் பிரித்துக் கொடுக்கலாம்.

*13.* பல்வேறுபட்ட பண்டங்களின்மீதும் இப்போது மாநிலங்கள் வசூலிக்கும் விற்பனை வரிகளுக்குப் பதிலாக, மைய அரசு கூடுதலான ஆயத்தீர்வைகளை விதிக்கவேண்டும்.

*14.* ஆண்டொன்றுக்கு உரூபா 25,000-க்குமேல் வருமானம் உள்ளவர்களும், மொத்த விற்பனை ஆண்டொன்றுக்கு உரூபா $2\frac{1}{2}$ லட்சத்திற்கு மேல் உள்ள நிறுவனங்களும் கணக்குகளை வைத் திருக்கவேண்டும் என்று கட்டாயப்படுத்தவேண்டும். பேரேடு களையும் ரொக்கப் புத்தகங்களையும் (cash book), பதினாறு ஆண்டு களுக்கும், பிற கணக்குப் புத்தகங்களை எட்டாண்டுகளுக்கும் வைத்திருக்கவேண்டும்.

*15.* ஒவ்வொருவருக்கும் நிரந்தரமான ஒரு கணக்கு எண்ணைக் (account number) கொடுக்கவேண்டும்.

*16.* *1949*ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பேங்குகளை ஒழுங்கு படுத்தும் சட்டத்தைத் (Banking Regulation Act) திருத்த வேண்டும். இதன்படி உரூபா 25,000-க்கும் மேற்பட்ட தொகை களைக் கொண்ட நிதிய நடவடிக்கைகளை, அவை ஐயத்திற்கு இடமளிப்பவை அல்லது அசாதாரணமானவை என்று பேங்குகள் கருதினால், அவற்றை ரிசர்வ் பேங்குக்குத் தெரிவிக்கவேண்டும்.

17. பொதுவான தகவல்களைப் பேங்கரிடமிருந்து பெறுவதற்கு அதிகாரிகளுக்கு அதிகாரம் வழங்கவேண்டும்.

18. வருமான வரி விண்ணப்பப் பாரம் இப்பொழுது உள்ளதைக் காட்டிலும் இன்னும் விரிவானதாக இருக்கவேண்டும்.

19. செலவு வரியை மீண்டும் விதிக்கவேண்டும்.

20. கணக்கு ஆண்டு (accounting) ஒரேபடித் தன்மையதாக இருக்கவேண்டும்.

21. ஸ்டாம்பு சட்டத்தின்கீழ் கைமாறும் சொத்துகளை மதிப்பிடுவதற்கு வகை செய்யவேண்டும்.

22. உடைமைகளைக் குறைத்து மதிப்பிடுவதைத் தடுப்பதற்கு, தமிழ்நாடு அரசு, 1967-ல், 1899ஆம் ஆண்டு இயற்றப்பட்ட இந்திய ஸ்டாம்பு சட்டத்தைத் திருத்தியது. இதே போல், இந்திய அரசும் இந்திய ஸ்டாம்பு சட்டத்தைத் திருத்தவேண்டும்.

23. ஆண்டுதோறும் ஏறக்குறைய உருபா 240 கோடி பெறுமானமுள்ள அயல்நாட்டுச் செலாவணி கை நழுவிப் (leakage) போய்விடுவதாக ஒரு கணிப்புக் கூறுகிறது. இதைத் தடுப்பதற்கு அந்நியச் செலாவணியை ஒழுங்குபடுத்தும் சட்டத்தைத் (Foreign Exchange Regulation Act) திருத்தவேண்டும்.

24. வரி ஏய்ப்பு சம்பந்தமான தகவல்களைப் பரிமாறிக் கொள்வதற்குப் பிற நாடுகளுடன் இந்திய அரசு ஒப்பந்தம் செய்து கொள்ளவேண்டும்.

25. சினிமா நடர்களும், நடிகளும் வரி ஏய்ப்பில் பரவலாக ஈடுபட்டிருப்பதாகக் கருதப்படுகிறது. ஆகவே, ஐயாயிரம் உருபாவுக்குமேல் எந்த நடன் அல்லது நடி பெற்றால், அவர்களும் சரி, சினிமாப் படம் பிடிப்பவர்களும் சரி, தாங்கள் செய்து கொண்ட உடன்பாடுகளின் படி ஒன்றை வருமான வரி அதிகாரிகளுக்கு அனுப்பவேண்டும்.

26. ஒப்பந்தக்காரர்களும் (Contractors), உள் ஒப்பந்தக்காரர்களும் (sub-contractors) தங்களின் அன்றாட வரவுகளுக்கும், செலவுகளுக்கும் ஒரு கணக்குப் புத்தகத்தை வைத்திருக்க வேண்டும். காலப் போக்கில் இவற்றுக்கான நமூனுக்களையும் (forms) அறுதியிடவேண்டும்.

'இக் காலத்தில் நடிகர், நடிகை என்று கூறுவதைச் சிலப்பதிகாரம், நடன், நடி என்றே கூறும்.

27. தங்களின் வருமானத்தையும், அல்லது செல்வத்தையும் அல்லது இரண்டையும் கரப்பவர்களுக்கு மூன்றுண்டுகளுக்கு ஒப்பந்தங்கள் தரக்கூடாது.

28. கடந்த மூன்றுண்டுகளில், வருமானத்தையும், செல்வத்தையும் அல்லது இரண்டையும் மறைத்து வைத்ததற்காகத் தான் எந்தவிதத் தண்டனையும் பெறவில்லை அல்லது பிராஸிகியூஷன் செய்யப்படவில்லை என்று, வாக்குமூலம் (affidavit) தந்தால் ஒழிய, யாருக்கும் உருபா 25,000-க்குமேல் எந்த ஷெடியூல்டு (scheduled) பேங்கும் கடனளிப்பதற்குத் தடை விதிக்கவேண்டும்.

29. உயர்ந்த மட்டத்தில் ஊழல்கள் நடப்பதைத் தடுப்பதற்கு மக்கள்பாலர் (லோக்பால்) களையும், மக்கள்யுத்தர் (லோக்யுக்தர்) களையும் நியமிக்கவேண்டும்.

30. வரி ஏய்ப்பவர்களுக்கு எதிராக மக்களின் உணர்வைத் தட்டி யெழுப்பவேண்டும்.

31. தண்டனையடைந்தவர்களுக்குத் தேசிய விருதுகள் அளிக்கக்கூடாது; அவர்கள் எந்தவிதமான தேர்தலுக்கும் ஆறுண்டுகளுக்கு நிற்கக் கூடாதென்று தடை விதிக்கவேண்டும்.

32. அவர்கள் ஆறுண்டுகளுக்கு எந்தக் கம்பெனியிலும் டைரக்டராக இருக்கக்கூடாது. இதற்கு ஏற்ப, 1956ஆம் ஆண்டு இயற்றப்பட்ட கம்பெனிகளின் சட்டத்தைத் திருத்தவேண்டும்.

33. வருமான வரி அறிக்கைகளைச் சரியானபடி தாக்கல் செய்து, குறித்த தவணைகளில் வரியைச் செலுத்தியவர்களை உடுக் குறியிட்ட (நக்ஷத்திர) தீர்வையாளர்களாக (starred assessees) நடத்தவேண்டும்.

வரி தவிர்ப்பு

1. வரி என்பதற்கு ஒரு விரிவான விளக்கத்தை வருமான வரிச் சட்டம் தரவேண்டும்.

2. இப்பொழுது, தற்செயலாகக் (casual) கிடைக்கும் வருமானங்களுக்கும், தொடர்ந்து கிடைக்காத வருமானங்களுக்கும் வருமான வரிச் சட்டத்திலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. இவ் விலக்கை அகற்றிவிட வேண்டும்.

3. மாநிலங்கள் நடத்தும் பரிசு சீட்டுக் குலுக்கல்களிலிருந்து கிடைக்கும் பரிசு தொகைகளின்மீது வருமான வரியை விதிக்க

வேண்டும். ஆனால், வருமான வரி வீதங்களில் சலுகை காண்பிக்கவேண்டும்.

4. கணவன், மனைவி, வயது வராத குழந்தைகள் அனைவரையும் சேர்த்து ஒரே அலகாகக் (வரி விதிப்புக்கு) கொள்வதை குழு ஆதரிக்கவில்லை.

5. வருமான வரியிலிருந்து விலக்குக் கோரும் அறநிலையங்கள், சமய நிறுவனங்கள் அனைத்தும் வருமான வரித் துறையினரிடம் தங்களைப் பதிவு செய்துகொள்ளவேண்டும். குறிப்பிட்ட தவணைக்குள் பதிவு செய்துகொள்ளாத நிறுவனங்களுக்கு வருமான வரியிலிருந்து விலக்குக் கிடையாது.

6. ஆண்டுதோறும் உருபா 25,000-க்குமேல் வருமானத்தைப் பெறும் நிறுவனங்கள் அனைத்தும் குறிப்பிட்ட வக்கணைப்படி தங்கள் கணக்குகளைத் தணிக்கை செய்து (audit) கொள்ள வேண்டும்.

7. அறநிலையங்களுக்கு அளிக்கப்படும் அநாமதேயக் கொடைகள் அனைத்தின்மீதும் 65% வீதம் வருமான வரி விதிக்க வேண்டும். சமய நிறுவனங்களுக்கு வரியிலிருந்து விலக்களிக்க வேண்டும்.

8. ஆண்டுதோறும் ஐம்பதினாயிரம் உருபாவுக்குமேல் வருமானம் உடைய டிரஸ்டுகளுக்கு ஒரு நம்பரையோ, ஒன்றுக்கு மேற்பட்ட நம்பர்களையோ நியமிப்பதற்கு அரசுக்கு அதிகாரம் இருக்கவேண்டும். ஆயுட் காலம் முழுதும் நம்பர்களாக இருப்பவர்களின் எண்ணிக்கை, மொத்த நம்பர்களில் 25%-க்குமேல் இருக்கக்கூடாது. பிற நம்பர்களைப் பொறுத்தவரை ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை மூன்றில் ஒரு பங்கினர் ஓய்வு பெறவேண்டும். ஒரு முறைக்கு மேல் மீண்டும் ஒருவர் நம்பராக நியமிக்கப்படக் கூடாது.

வரி பாக்கி

நம் நாட்டில் வரி பாக்கிகள் இருக்கும் அளவுக்கு வேறு எந்த நாட்டிலும் இருப்பதாகத் தெரியவில்லை. வரி பாக்கிக்கான காரணங்களாவன:

(அ) வசூலுக்கு உரியதல்லாத தொகைகளையும், வரி கொடுக்க வேண்டும் என்று வருமான வரித் துறையினர் அனுப்பிய அறிவிப்புகளையும் (அவை சரியல்லவென்று சம்பந்தப்பட்டோர் வழக்குத் தொடர்ந்திருந்தாலும்) வரி பாக்கியாகக் கொள்வது.

(ஆ) நடப்புண்மைக்குப் பொருத்தமின்றி அளவுக்கு மீறிய வரி வீதங்களை விதிப்பது.

(இ) நிருவாகத்தில் ஏற்படும் தாமதங்கள் நிதியாண்டின் இறுதியில் முக்கியமான புள்ளிகளின்மீது வரியை விதிப்பது, பல ஆண்டுகளுக்கும் சேர்த்து ஒருமித்து வருமான வரியை விதிப்பது, மேல்முறையீடு (அப்பீல்)களைப் பைசல் செய்வதில் ஏற்படும் தாமதம் போல்வன. இதற்கு எடுத்துக்காட்டாக, மைசூர் மாநிலத்தில் *1962*-க்கும், *1966*-க்கும் இடைப்பட்ட காலத்தில் பைசல் செய்யப்படாத விற்பனை வரி வழக்குகள் *83,000* இருந்ததைக் கூறலாம். இவற்றில், *4,200* ஐந்தாண்டுகளுக்கு மேலும் பைசல் செய்யப்படவில்லை. இதேபோன்று *1959*-க்கும் *1969*-க்கும் இடைப்பட்ட காலத்தில் முடிக்கப்படாத வருமான வரித் தீர்வைகள் (income tax assessments) வருமாறு:

| சராசரி பைசல். | வருமான வரி அலுவலகங்களின் எண்ணிக்கை. | ஆண்டு. | பைசல் செய்ய வேண்டியது (இலட்சத்தில்) (To be disposed in Lakhs.) | பைசல் செய்யப்பட்ட எண்ணிக்கை (இலட்சத்தில்). | பைசல் செய்யப்பட வேண்டியதன் சதவீதம். | இன்னும் பைசலுக்குக் காத்திருப்பவை (இலட்சத்தில்) (Pending in Lakhs). | மொத்தத்தில் இதன் சதவீதம். |
|---|---|---|---|---|---|---|---|
| 939 | 1,238 | 1959—60 | 16·9 | 11·6 | 69·6 | 5.6 | 30·4 |
| 1,467 | 1,648 | 1966—67 | 47·6 | 24·1 | 50·5 | 24.4 | 49·5 |

இந்தப் பத்தாண்டுகளில் பைசல் செய்யவேண்டிய வழக்குகள் மூன்று மடங்காகவும், பைசலுக்குக் காத்திருக்கும் வழக்குகள் ஐந்து மடங்காகவும் அதிகரித்திருப்பது கண்கூடு.

(ஈ) வருமானத் துறையினரின் கட்டுப்பாட்டுக்கு அடங்காத காரணிகள்: கம்பெனிகளின் கலைப்பு, வருமான வரி செலுத்த வேண்டியவர்கள் நாட்டை விட்டுக் கம்பி நீட்டுதல், அல்லது அவர்கள் இருக்கும் இடங்களைக் கண்டுபிடிக்க முடியாமல் போதல், அவர்கள் தங்கள் உடைமைகளைப் பிறர் பெயருக்கு மாற்றுகை (பராதீனம்) போல்வன.

(உ) வசூலிக்க முடியாத தொகைகளைக் காலாவதியானதாக எழுதுவதிலும், (வரியில் ஒரு பகுதியை) வசூலிக்க முடியாத தொகைகளைக் குறைப்பதிலும் ஏற்படும் தாமதம்.

1. வரியை வசூலிக்கும் அதிகாரிகள் அனைவருக்கும் உடைமைகளைப் பறிமுதல் செய்யும் அதிகாரம் இருக்கவேண்டும் (distraint).

2. வரியை வசூலிக்கும் அதிகாரிகளுக்குப் போதிய பயிற்சி அளிக்கவேண்டும்.

3. வரியைச் செலுத்தாதவர்களை ஸிவில் சிறையில் (civil jail) போடவேண்டும்.

4. வரிபாக்கி ஓர் இலட்சம் உருபாவுக்குமேல் இருந்தால் அத் தொகையைக் குறைப்பதற்கும் அல்லது காலாவதியாக்குவதற்கும் (write off) பெரும் அதிகாரிகளைக் கொண்ட ஒரு குழுவை நியமிக்கவேண்டும்.

5. வரியைச் செலுத்துவதற்குச் சிறிது காலதாமதமானால் (அது முதன் முறையாக இருந்தால்), செலுத்தவேண்டிய வரியில் 10%-க்கு மிகாமல் அபராதம் விதிக்கலாம்.

6. வரியை ஏய்த்தவர் ஒருவரின் வழக்கு, புலன் விசாரணையில் இருக்கும்பொழுதும், வரி இவ்வளவு என்று அறுதியிடப்படுவதற்கு முன்பும், தற்காலிகமாக வரி செலுத்து வோரின் உடைமைகளை ஜப்தி (attachment) செய்வதற்கு வரு மான வரி அதிகாரிகளுக்கு அதிகாரம் இருக்கவேண்டும்.

7. வரி நிலுவைகளைத் தண்டுவதற்கு முதல் நடவடிக்கை யாக, தொழில் முனைவுகள் ஒழிந்த ஏனைய வாணிபங்களைத் தற்காலிகமாக மூடும்படி செய்ய வரி மீட்சி (recovery) அதிகாரிகளுக்கு அதிகாரம் இருக்கவேண்டும்.

8. மூலத்திலேயே வரிகளைப் பிடித்தம் செய்வதற்கான விதிகளை ராயல்டிகள் (royalties), வாடகை, தொழில் சம்பந்தமான கட்டணங்கள் (professional fees), காப்புறுதிக் கமிஷன்கள் உள்ளிட்ட கமிஷன்கள் அனைத்துக்கும் செல்லும்படியாகச் செய்ய வேண்டும். பரிசு சீட்டுக் குலுக்கலில் விழும் பரிசு தொகை களிலும், குறுக்கெழுத்துப் போட்டிப் பரிசு தொகைகளிலும், குதிரைப் பந்தயப் பரிசுகளிலும், ராயல்டிகளிலும் 33%-யும், ஏனைய இனங்களில் 10%-யும் பிடித்தம் செய்யவேண்டும்.

9. மைய அரசோ, மாநில அரசோ, தல ஆட்சியோ, அரசு துறை முனிவோ அல்லது ஒரு கம்பெனியோ ஒப்பந்தக்காரர் களுக்குத் தரும் ஒப்பந்தத் தொகையில் 3% (ஒப்பந்தக்காரர்

வருமான வரி அதிகாரியிடமிருந்து, இதற்கும் குறைவாகப் பிடித்தம் செய்யலாம் அல்லது பிடித்தமே செய்ய வேண்டியதில்லை என்று ஒரு சான்றிதழை வாங்கிக் கொடுத்திருந்தாலொழிய) பிடித்தம் செய்து கொள்வதற்கு ஏற்ற வகையில் சட்டத்தைத் திருத்த வேண்டும்.

*10.* கணக்குகள் தணிக்கை செய்யப்படும்பொழுது, மூலத்தில் வரி பிடிக்கப்பட்டதா, சட்டத்திற்கு இணங்க அரசின் பெயரில் டிபாசிட் செய்யப்பட்டு வரவு வைக்கப்பட்டதா என்பன போன்ற விவரங்களைத் தணிக்கையாளர் தன் அறிக்கையில் குறிப்பிடும்படி கட்டாயப்படுத்தவேண்டும்.

*11.* செல்வாக்குப் படைத்த புள்ளிகளின் உடைமைகள் ஏலத்திற்கு வரும்பொழுது அவற்றுக்கு வருமானத் துறை பரவலான விளம்பரம் அளிக்கவேண்டும்.

*12.* பெரும் வருவாயை ஈனும் வழக்குகள் அனைத்தையும் ஒவ்வோர் ஆண்டிலும், ஜனவரித் திங்கள் முடிவதற்குள், பைசல் செய்துவிடவேண்டும்.

**விலக்குகள், பிடித்தங்கள்**

*1.* பிடித்தங்கள் இருக்க வேண்டியதே. வரிச் சிக்கலைக் குறைப்பதற்காக இவற்றை விட்டுவிடமுடியாது.

*2.* வருவாயைப் பெறுவதற்கான ஒரு வாயில் மட்டும் அன்று வரி. பொருளாதார வளர்ச்சிக்கும், பொருளாதாரக் கொள்கை களையும், சமுதாயக் கொள்கைகளையும் பலவிதங்களிலும் செயல் படுத்துவதற்கும் வரி ஒரு முக்கியமான கருவியாகும்.

*3.* இனும் அளிப்புகளின் உச்சவரம்பு இப்பொழுது உருபா *24,000* ஆகும். இத் தொகைக்கு மேலும் வரிவிலக்கு அளிப்பதைக் குழு விரும்பவில்லை.

*4.* படிகளைப் பொறுத்த வரையில், நாளொன்றுக்கு உருபா *40*-க்குமேல் கொடுக்கப்படும் படிகளை மட்டும் சோதனை செய்தல் போதுமானது.

*5.* கால்நடை வளர்ப்பு, கோழி வளர்ப்பு, பால் பண்ணை இவற்றுக்கு வருமான வரியிலிருந்து அளிக்கப்பட்டிருக்கும் விலக்கை அகற்றவேண்டும். ஆயினும், குறைந்த வருமானம் உடையவர்களுக்குத் தொல்லை இல்லாமல் இருக்கும்பொருட்டு,

இவற்றிலிருந்து கிடைக்கும் வருமானம் உருபா 3,000-க்கு மேலிருந்தால்தான், இத் தொகையை மொத்த வருமானத்தில் சேர்க்கவேண்டும்.

6. சம்பள வருமானத்தைக் கணக்கிடுவதில் புத்தகங்களுக்கான விலக்கை உருபா 500-ல் இருந்து, உருபா 1,000ஆக உயர்த்த வேண்டும்.

7. வீட்டிலிருந்து கிடைக்கும் வருமானத்தைக் கணக்கிடுவதில், ஆண்டைய வாடகை மதிப்பில் ஆறில் ஒரு பங்கு பழுது பார்ப்பதற்காக இப்பொழுது பிடித்தம் செய்யப்படுகிறது. இஃது இந் நிலையிலேயே இருக்க வேண்டும்.

8. அபிவிருத்திக்கான தள்ளுபடியை (development rebate) அகற்றியது சரியே.

9. கம்பெனிகள்மீது விதிக்கப்படுவதுபோன்றே கூட்டுறவுச் சங்கங்களின்மீதும், அதே வரி வீதங்களை விதிக்க வேண்டும்.

10. நூலாசிரியர்கள், நாடகாசிரியர்கள், ஓவியர்கள், கல்தச்சர்கள் இவர்களுக்குக் கிடைக்கும் வருமானத்தில் குறைந்து செல்லும் வீதத்தில் 25%-ல் இருந்து, 5%-வரை பிடித்தம் செய்ய அனுமதிக்கலாம்.

11. வாடகைக்கு விடப்பட்டால்கூட, புதிதாகக் கட்டிய வீடுகளுக்கு முதல் ஐந்து ஆண்டுகளுக்குச் செல்வ வரியிலிருந்து விலக்கு அளிக்கலாம்.

12. கொடை வரிச் சட்டத்தில் சில சேமிப்புச் சான்றிதழ்களுக்குக் கொடை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. இவ் விலக்கை அகற்றி விடலாம்.

13. எஸ்டேட் வரிச் சட்டத்தின்கீழ் ஆயுள் காப்புறுதிக் கொள்கையின்கீழ் கிடைக்கும் தொகைகளுக்கு உருபா 5,000 வரை விலக்களிக்கப்பட்டிருப்பதை 10,000 ஆக உயர்த்த வேண்டும்.

14. இப்பொழுதுள்ள சட்டத்தின்படி உருபா 50,000-க்கு மேல் பெறுமானமுள்ள சொத்துகளைப் பெறுபவர்கள் எஸ்டேட் வரி செலுத்த வேண்டும். இத் தொகையை இரண்டு இலட்சம் உருபாவாக உயர்த்த வேண்டும்.

*15.* ஒரு தேசிய வளர்ச்சி நிதியை (National Development Fund) நிறுவவேண்டும். கம்பெனிகளைத் தவிர்த்து ஏனைய வரி செலுத்துவோர் அனைவரும் இந் நிதிக்குக் கொடையளிக்கலாம். இதில் கட்டாயமில்லை; அவரவர் விருப்பத்தைப் பொறுத்தது. இதற்கு ஒருவர் தன் மொத்த வருமானத்தில் 10%-யோ அல்லது உருபா 20,000-யோ (எது குறைவாக இருக்கிறதோ) செலுத்தலாம். இதுதான் உச்சவரம்பு அளவாகும். இப்பொழுது வருமான வரியில் சில பிடித்தங்களைச் செய்ய சட்டம் அனுமதிக்கிறது. இவற்றுக்கும் மேலாகப் பிடித்தங்களைச் செய்ய அனுமதிக்கலாம். முதல் ஆயிரத்தில் 100%-மும், அடுத்த நாலாயிரத்தில் 50%-மும், எஞ்சியதில் 40%-மும் பிடித்தம் செய்து கொள்ளலாம்.

*16.* தேசிய வளர்ச்சி நிதியில் போட்டிருக்கும் வைப்புகளை ஈடாக வைத்துக்கொண்டு, நாட்டுடைமையாக்கப்பட்ட பேங்கர் கடன் அளிக்கலாம்.

*17.* கிராமப்புறங்களில் பணி புரியும் மருத்துவருக்கு ஏற்கெனவே வருமான வரிச் சட்டத்தில் அளிக்கப்பட்ட விலக்கைத் தவிர்த்து, மேலும் உருபா 5,000-க்கு வருமான வரியிலிருந்து விலக்களிக்கவேண்டும்.

*18.* பின்தங்கிய பகுதிகளில் தொழிற்சாலைகளை நிறுவுபவர்களுக்கு ஊக்கம் அளிப்பான் வேண்டி, ஏனையோருக்கு அனுமதிக்கும் தேய்மானப் படியைப் போன்று (depreciation allowance), ஒன்றரை மடங்கு தேய்மானப் படியை அனுமதிக்கலாம்.

*19.* சீரமைப்பு நிலைபேறுக்க இருப்பு நிதி (Reconstruction and Stabilisation Reserve Fund) ஒன்றையும் நிறுவலாம். கம்பெனிகள் தங்கள் மொத்த வருமானத்தில் 10% வரை இந் நிதிக்குக் கொடையளிக்கலாம். கார்ப்பொரேஷன் வருமான வரியைச் செலுத்தும்பொழுது இத் தொகைகளைப் பிடித்தம் செய்து கொள்ளலாம். நடப்புச் செலவுகளுக்காக இவ் வைப்புகளிலிருந்து 50% வரை கடன் வாங்கிக் கொள்ளலாம். அரசு இவ் வைப்புத் தொகைகளுக்கு ஆண்டுதோறும் 6% வட்டியளிக்கும். ஐந்தாண்டுகள் கழித்துதான் எஞ்சிய தொகைகளை எடுக்கலாம். அப்படி எடுக்கும்பொழுது அவற்றுக்கு வருமான வரி கிடையாது.

*20.* கம்பெனிகளின்மீது விதிக்கப்படும் மேல்வரியை (surtax) அகற்றிவிடவேண்டும்.

**வரி நிருவாகம்**

1. நேர்முக வரிகளின் மைய வாரியத்தை (Central Board of Direct Taxes) ஒரு சுயேச்சையான வாரியமாகத் திருத்தியமைக்க வேண்டும். இவ் வாரியத்தில் நிதிய உறுப்பினரைத் தவிர்த்து ஐந்து உறுப்பினர்கள் இருக்கவேண்டும்.

2. இஃது நிதி அமைச்சகத்தின் ஓர் உறுப்பாக இருக்கக் கூடாது.

3. இவர்களின் பதவிக்காலம் ஐந்தாண்டுகளுக்குமேல் இருக்கக்கூடாது.

4. ஒவ்வொரு வருமான வரி ஆணையருக்கும் (Commissioner) கீழ், 40 வருமான வரி அதிகாரிகளுக்குமேல் இருக்கக்கூடாது.

5. இந்திய நிருவாக ஊழியத்திற்கும் (Indian Administrative Service), இந்திய அயல் நாட்டு ஊழியத்திற்கும் (Indian Foreign Service) பணிமக்களாகத் தெரிந்தெடுக்கப்படுபவர்கள், கூடுதலாக இரண்டு வினாத் தாள்களுக்கு விடை இறுப்பது போன்றே, வருமான வரி ஊழியத்திற்கு வருகிறவர்களும் கூடுதலாக இரண்டு வினாத் தாள்களுக்கு விடை இறுக்கவேண்டும்.

6. நாகபுரியில் இருக்கும் பயிற்சி நிறுவனத்திற்கு முழுநேர ஆசிரியர்களை நியமிக்க வேண்டும்.

7. கணிப்புக் கருவிகள் (calculators), அட்டவணைக் கருவிகள் (tabulators), எண்ணிக்கையிடும் (numbering) எந்திரங்கள், படியெடுக்கும் (copying) எந்திரங்கள், மின்சாரத் தட்டெழுத்துப் பொறிகள் (electrical typewriters) போன்ற சாதாரண எந்திரங்கள் போதிய எண்ணிக்கையில் அனைத்து வருமான வரி அலுவலகங்களிலும் இருக்கவேண்டும்.

8. எல்லாவகைச் செலுத்துகைகளுக்கும் நான்கு இலைகள் கொண்ட சலான்களைப் (four foil chalans) பயன்படுத்த வேண்டும்.

9. மாநகரங்களில் ஸ்டேட் பேங்க் தன் கிளைகளை வருமான வரி அலுவலக எல்லைக்குள்ளேயே திறக்க வேண்டும். பருவங்கள் தோறும் கூடுதல் கவுண்டர்களையும் (counters) திறக்கலாம்.

10. வருமான வரி சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரிக்க ஒவ்வோர் உயர்நீதி மன்றத்திலும், நிரந்தரமான பிரிவை நிறுவ வேண்டும்.

## மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Wanchoo Committee Report.
2. Commerce, March 25, 1972, pages 725—749.
3. Tax Administration and Economic Ground by Professor M. H. Gopal, Southern, Economic Review, April 1972, pages 195—205.

# 33. அரசு கடன்களின் பொதுவியல்புகள்

ஓர் அரசின் வரவும் செலவும் முற்றிலும் ஒன்றுக்கொன்று சமமாக இருக்கும் என்று எதிர்பார்க்க இயலாது. அங்ஙனம் சமனாக இருப்பினும், அது தற்செயலாக நிகழ்ந்ததாகவே இருக்க வேண்டும். வருவாயும் செலவும் சமனாய் இராமல், வருவாய் கூடுதலாக இருப்பின் சேமிப்பும், செலவு கூடுதலாக இருப்பின் கடனும் ஏற்படுகின்றன.

## அரசு கருவூலங்கள் (Public Treasuries)

பண்டை நாளில் ஒவ்வோர் அரசும் ஒவ்வொரு நிதிப் பேழையை வைத்திருந்தது. 'சதுரவடிவில் நீர்க்கசிவு இல்லாதபடி வாவி போலப் பள்ளம் தோண்டி நாற்புறமும் அடிப்பரப்பும் பெரிய கற்களைப் படுத்து, வயிரம் ஏறிய மரங்களால் ஆகிய பஞ்சரத்தையும், நிலமட்டத்தோடு ஒத்த மூன்று தளங்களையும், பலவகைக் கோட்டங்களின் அமைப்பையும், நீரும் கல்லும் விரவி இறுக்கப் பட்ட மேல் நடு கீழாகிய அத்தளங்களையும், ஒரு வாயிலையும், பொறி களால் அமைக்கப்பட்ட ஏணிகளையும், தெய்வப்படிவம் அமைந்த கதவினையும் உடையதாக நிலவறை அமைத்தல்வேண்டும். அதன்மேல் உள்ளும் புறமும் தாழக்கோல்களையும், பொருள்

கௌடலீயம் பொருணூல் (கௌடல்யர் இயற்றிய அர்த்த சாஸ்திரம்), தமிழ் மொழிபெயர்ப்பு, பண்டிதமணி மு. கதிரேசஞ் செட்டியார்; சிரோமணி. வித்துவான் பி, ஸ்ரீ. இராமாநுஜாசாரி, 1955, பக்கம் 155-156. பஞ்சரம் - பறவைகளை அடைத்து வைத்தற்குரிய கூடு; அக் கூடு போல வன்மை மிக்க மரங்களால் ஒவ்வொரு தளத்திறகும் மேற்பரப்பு அமைத்தல் வேண்டும் என்பது. நிலமட்டம் ஒரு தளமாகவும், அதற்குக் கீழ் இரண்டு தளங்களாகவும் அமைத்தல் வேண்டும் என்பது. கோட்டங்கள் - உள் ளறைகள். வேண்டுங்கால் வைத்துக்கொள்ளவும், வேண்டாதபொழுது விலக்கி விடவும் தகுதியாகப் பொறிகளால் ஏணிகள் அமைத்தல் வேண்டும் என்பது. புறப்படுத்தப்பட்டவர்-கொலைதண்டம் விதிக்கப்பட்டவர். இவர் களைக் கொண்டு பிறர் அறியாவாறு நிதியறை அமைத்துக் கொண்டால், அச் செயல் முடிவில் இவர்கள் கொலைப்படுத்தப்படுவாராதலின், முன்னும் பின்னும் யாரும் அறிந்து கொள்ள இயலாதென்பது கருத்து. சாணக்கி யருக்குக் கௌடல்யா, விஷ்ணுகுப்தர் என்ற வேறு பெயாகளும் உண்டு. இவரது காலம் கி.மு. நான்காம் நூற்றுண்டு. சந்திரகுப்த மௌரியரின் காலத்தவர்.

வைத்தற்குரிய பல அறைகளையும் உடையதாகவும், முகப்புடன் கூடியதாகவும் உள்ள நிதியறையை நிலத்தின்மேல் கட்டப்படும் இல்லம்போல் அமைத்தல்வேண்டும். கேடு நேர்ந்துழிப் பயன் படுதற் பொருட்டு நிலையான நிதியறையை நாட்டின் எல்லையில் புறப்படுத்தப்பட்டவர்களைக் கொண்டு செய்வித்தல் வேண்டும்' என்று எங்ஙனம் நிதியறை கட்ட வேண்டும் என்பதுபற்றி விரிவாகச் சாணக்கியர் தம்முடைய அர்த்த சாஸ்திரம் என்னும் நூலில் கூறுகிறார். பகைவரால் துன்பம் நேர்ந்து வெளிப்படுங்கால் நாட்டின் எல்லையில் மறைவாக வைக்கப்பட்ட பொருள் பயன் படலாமென்னும் கருத்தால், இரண்டாவது நிலவறையை நாட்டின் எல்லையில் அமைக்க வேண்டும் என்று சாணக்கியர் கூறுகிறார். ஐரோப்பாவில் அத்தீனியர்கள், பிலிப்பொனீஷியன் போருக்கு முன்பு ஏறக்குறைய 9,700 டாலெண்டுகளைச் (talents-ஒரு டாலண்ட்=243 பவுன் 15 ஷில்லிங் அல்லது உரூபா 4387·50) சேமித்து வைத்திருந்தார்கள். பாரஸீக மன்னர்கள், தங்கள் ஆளுகைக்கு உட்பட்ட மாகாணங்களிலிருந்து கப்பத்தொகையைப் பொன், வெள்ளி உலோகங்களாக வசூலித்தார்கள். அலெக்ஸாந்தர் பாரஸீகத்தை அடிப்படுத்திய பொழுது இத்துணைத் திறைப்பொருளும் அவர் கையில் சிக்கியது. உரோமானியர்களும் இச் சேமிப்பு முறையையே கடைப்பிடித்தார்கள். போரில் தோற்ற அரசர்களின் நிதிக் குவியல்கள் திரட்டப்பட்டன; அதே போல, அடிமைகளை அடிமைத் தளையினின்றும் விடுவிப்பதற்காக விதிக்கப் பட்ட பிரத்தியேக வரியும் பெரும் பொருளாகத் திரட்டப்பட்டது. இடைக்காலத்திலும் நிதிப் பேழை முறை நீடித்தது. ஓர் அரசர் அரசு கட்டில் ஏறியவுடன் மேற்கொண்ட நடவடிக்கை இறந்த அரசரின் நிதிக் குவியலைக் கைப்பற்றுவதே. இங்கிலாந்திலும், ஃபிரான்ஸிலும் பல எடுத்துக்காட்டுகள் உள. கருவூலமும், நாடும் அரசரின் சொந்த உடைமையாகக் கருதப்பட்டன. இவ் வழக்கம் இங்கிலாந்தில் எட்டாம் ஹென்ரி காலம்வரை நீடித்தது. ஃபிரான்ஸில் இவ் வழக்கம் நான்காம் ஹென்ரி காலம்வரை நீடித்தது.

ஆடம் ஸ்மித் காலத்தில் இப் பழக்கம் மறைந்தது. அவர் காலத்தில் ஸ்விட்ஸர்லாந்தில் பெர்ன் (Berne) என்ற கான்டனும், ஜெர்மனியில் பிரஷ்யாவுமே நிதிப்பேழையை வைத்திருந்தன. கார்லைல் கூறுவது போல, முதலாம் பிரடரிக் வில்லியம் (1713—40), ஆண்டுதோறும் ஏராளமான நாணயங்களை மிச்சம் பிடித்து அவற்றைப் பீப்பாய்களில் அடைத்து வைத்திருந்தார். அவரை அடுத்துப் பட்டத்திற்கு வந்த ஃபிரடரிக் பெரியாரும் (Frederick the Great, 1740—1786) இம்முறையைத் தொடர்ந்து கடைப்பிடித்தார்.

**அரசு நிதியைத் திரட்டி வைப்பதற்கான காரணங்கள் (Reasons for State Hoarding)**

பல நாடுகளும் பொன்னையும், வெள்ளியையும் சேர்த்து வைத்ததற்குக் காரணம், அக் காலத்தில் நிலவிய சமுதாயத்தின் நிலைமையே ஆகும். நாகரிகம் அடையாத சமுதாயத்திற்குப் பணத்தைச் சேமிக்க வேண்டிய அவசியம் இல்லை. அந் நாடுகளுக்குப் பொன், வெள்ளியைக் காட்டிலும், போர்க்கருவிகளும், உணவும் பயனுடையனவாய் இருக்கும். பணத்தைச் சேமித்து வைத்தல் அரசரின் கடமையாகக் கருதப்படுவதற்கு முன்பே, பண முறை வழக்கில் வந்திருக்க வேண்டும். பழக்கத்தின் பிடிப்பு காரணமாகவும், பொன்னுக்கும், வெள்ளிக்கும் அளவுக்கு மீறிய மதிப்பு இருந்தமையாலும், அரசுகள் அக் காலத்தில் பொன்னையும் வெள்ளியையும் சேர்த்து வைத்திருந்தன. ஆனாலும், இம்முறை தொடர்ந்து நீடித்ததற்கு இந் நாடுகளின் பணமுடையே காரணமாகும். பொதுமக்களிடமிருந்து அரசு கடன் வாங்கும் முறை அபிவிருத்தி அடையாததினாலும், வரிகள் ஒரோவழி போடப்பட்டதாலும், பொன், வெள்ளியைச் சேமித்து வைத்திராத ஒரு நாடு பிற நாடுகளை ஆக்கிரமிக்கவோ அல்லது பிற நாடுகளின் தாக்குதல்களிலிருந்து தன்னைக் காத்துக் கொள்வதற்கோ வழியின்றி, இக்கட்டான நிலையில் இருந்தது. முன்னாட்களில் அரசர்களுக்கு ஏராளமாகச் சொத்து இருந்தமையும் இதற்கொரு காரணமாகும். நிலம், காடு, சுரங்கம் ஆகிய இவைபோன்ற வருமானம் தரக்கூடிய இலாபகரமான தொழில்கள் பலவும் அரசருக்கே உடைமையாய் இருந்தன. இவ் வுடைமையின் ஒரு பிரிவாகவே பொன்னையும், வெள்ளியையும் சேமித்து வைக்கும் முறையும் கருதப்பட்டது. இக் காலப் பொருளியல் அமைப்பு முறையினால் பொன்னையும், வெள்ளியையும் சேமித்துவைக்கும் முறை கைவிடப்பட்டது. வரியின்மூலம் அரசுகள் அதிக வருவாயைப் பெற்றன; அவை மக்களிடமிருந்து கடனாகவும் தொகைகளைப் பெற்றன. இதனால் நெருக்கடியான காலங்களுக்கு உதவும்படித் தங்கம், வெள்ளியைச் சேர்த்து வைப்பதற்கு அவசியம் இல்லாது போயிற்று. அரசு தனக்குத் தானே பேங்கராய் இருக்கும் பழக்கம் இவ்வாறு நின்றது.

**அரசு பொன் வெள்ளியைச் சேகரித்து வைப்பதற்கு எதிர்வாதங்கள்**

போரின் தேவைகளைச் சமாளிப்பதற்கு இம்முறை அவசியம் வேண்டும் என ஜெர்மானியப் பொருளியல் புலவர்கள் வாதிடுகின்றனர். கோட்டை கொத்தளங்கள், போர்க்கருவிகள், விரைவாகப் படை திரட்டல் ஆகிய சாதனங்களுடன், கருவூலம் அல்லது

போர்ப் பேழையும் (war chest) ஒன்ருகக் கருதப்பட்டது. அரசின் சேமிப்புக்கு எதிரான வாதங்கள் வருமாறு: (அ) பொன், வெள்ளியைச் சேமித்து வைப்பதால், அரசு வட்டியை இழக்கிறது. (ஆ) திறமையாகச் செயல்படும் பேங்க் முறை இருக்கும் நாடுகளில் இதற்கான அவசியமும் இல்லை. (இ) சோதனை ஏற்படும் காலத்துப் போதிய உலோக இருப்பு இருத்தல் போதுமானது. (ஈ) எவ்வளவு தொகையை இருப்பாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று நிர்ணயிப்பதும் கடினம். (உ) வாணிகம், விலைவாசிகள் இவை யாவும் அரசின் சேமிப்பு முறையினுல் பாதிக்கப் படுகின்றன. ஏராளமான நாணயங்களைச் செலாவணியிலிருந்து எடுத்து விடுவதால் விலைகள் குறைகின்றன. இதனுல் வாணிப வளர்ச்சிக்குத் தடை ஏற்படுகிறது. (ஊ) திடீரென்று எதிர்பாராத வகையில் இப் பணத்தைப் பயன்படுத்துவதால், தீமைகள் விளையும். ஆகவே, இக் காலக் கடன் வசதிகள் இருக்கும் எந்த ஒரு நாட்டிலும் பொன், வெள்ளியைச் சேமித்து வைப்பது தவருன நடவடிக்கையாகும் என்று பொதுப்படையாகக் கூறலாம்.

### இக் காலத்தில் அரசின் கடன்களின் முக்கியத்துவம்

சில பிரத்தியேகக் காலங்களில் அரசு பொன், வெள்ளியை இருப்பாக வைத்துக் கொள்வதற்குக் காரணங்கள் இருக்கலாமாயினும், பொதுவான கொள்கையாக இம் முறையை இக் காலத்தில் அரசுகள் கடைப்பிடிப்பதில்லை. இதன் அழிவுச் சின்னங்களின்மீதே நவீன கால அரசின் கடன்கள் தோன்றியுள்ளன. அரசின் கடன்களைப் பற்றிய பிரச்சினை ஆண்டுதோறும் அதிக முக்கியத்துவம் அடைந்து கொண்டு வருகிறது. இதனுல் பல கடுமையான பிரச்சினைகளும் எழுகின்றன.

### அரசின் கடனின் தோற்றம்

பண்டைக் காலத்தில் அரசுகள் கடன் வாங்கவில்லை; கடன் வாங்கியதற்கான அறிகுறியும் ஒன்றுமில்லை. இதற்குக் காரணம் கிரேக்க, உரோமானிய சமுதாயங்களின் பண்புகளேயாகும். செல்வந்தனை குடிமகனிடமிருந்து கடன் வாங்குவதற்கு மாருக, அரசு அவன்மீது ஒரு பிரத்தியேக வரியை விதித்தது. குறுங் காலக் கடன்களின் (Floating Debts) தொகை மிகக் குறைவாக இருந்ததும், அரசு கடன் வாங்காததற்கு மற்ெருரு காரணமாகும். அரசினுக்குச் சொந்தமாகப் பொன், வெள்ளி நிதிகள் இல்லாவிட்டால், கட்டாயக் கடன்களைப் பெற்ருே அல்லது வரி வசூலிக்கும் அதிகாரத்தை ஏலத்திற்கு விட்டோ, போதிய வருமானத்தை அரசு பெற்றது. சில வேளைகளில் அரசரின்

உடைமைகளும் அடகு வைக்கப்பட்டன. சிறிதுகாலம் கழித்து, ஒப்பந்தக்காரர்களிடமிருந்து தற்காலிகக் கடன் பெறும் வழக்கம் தோன்றியது.

## இடைக்காலத்தில்

உரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர், இடைக் காலத்தில் இத் துறையில் யாதொரு முன்னேற்றமும் காணப் பட வில்லை. வட்டி வாங்குவதற்குக் கடுமையான எதிர்ப்பு இருந்ததாலும், ஒரு அரசர் தம் குடிமக்களிடமிருந்து கடன் வாங்குவது தம் கவுரவத்திற்கு இழுக்கு என்று எண்ணியதாலும், அரசர்கள் கடன் வாங்குவதைத் தவிர்த்தார்கள். சில அரசர்கள் தங்கள் சொந்தப் பொறுப்பின் பேரிலும், தங்கள் ராஜ்யத்தின் பேரிலும் கடன் வாங்கினார்கள். இவ்வகையான கடன் கோயி லாரிட மிருந்தோ (church), பிற நாட்டுப் பேங்கர்களிடமிருந்தோ பெறப்பட்டன. முதன்முதலில் பிளாரன்ஸ் நாட்டில் அரசு கடன் வாங்கியது (1344). பிளாரன்ஸ் அரசு அப்பொழுது ஆறு மில்லியன் பவுண்டு ஸ்டர்லிங் கடன்பட்டிருந்தது. முதலைத் திருப்பித் தரமுடியாததால் அத் தொகையைத் தொகுப்புத் தொகையாக (consolidated fund) மாற்றியதுமன்றி, அதன் பங்குகளைப் பிற பங்குகள் போல வேறொருவர் பெயருக்கு மாற்றலாம் என்றும், அவற்றிற்கு 5% வட்டி தரப்படும் என்றும் அரசு கூறியது. 1345-ல் இத்தாலியில் பெரிய கம்பெனியான பார்டியர்ட் பிளாரன்ஸ் (Bardiat Florence) என்பது திவாலா ஆயிற்று. இங்கிலாந்தின் அரசரான மூன்றும் எட்வர்டு முதலும் வட்டியுமாகச் சேர்த்து 9 இலட்சம் பிளாரின்கள் (Florins) கடன் கொடுக்க வேண்டி யிருந்தது. இன்னொரு பேங்கான பெருஸ்ஸியும் (peruzzi) வீழ்ச்சி யடைந்தது. அது மூன்றும் எட்வர்டுக்கு 6 இலட்சம் பிளாரின்கள் கடன் கொடுத்திருந்தது. ஸிஸிலி அரசர் இவ் விரு பேங்கர் களுக்கும் ஒரு இலட்சம் பிளாரின்கள் கொடுக்க வேண்டியிருந்தது. இங்கிலாந்திலும், ஃபிரான்ஸிலும் அரசின் செல்வமும், நிருவாகச் செலவும் அதிகரிக்க அதிகரிக்க, இந்தக் கடன்களும் பரவலாக ஆயின. முதலாம் ஃபிரான்ஸிஸ் பாரிஸ் நகரத்தின் மூலமாகப் பல வேறுபட்ட தொகைகளைக் கடனாகப் பெற்றார். பாரிஸ் நகரம் கடன் அளித்தவர்களின் பட்டியல் ஒன்றும் வைத்திருந்தது. அப் பட்டியலைக் கொண்டே கடன் அளித்தவர்களுக்கு வட்டியைப் பகிர்ந்து கொடுத்தது. முதன் முதல் இரண்டாம் எட்வர்டு காலத் திலே தான் கடன்கள் சம்பந்தமாக அரசர் நாடாளுமன்றத்திற்கு விண்ணப்பம் செய்து கொண்டார். 16ஆம் நூற்றாண்டில் நான்காம் எட்வர்டும், மற்ற டியூடர் (Tudor) அரசர்களும் கட்டாயக்

கடன் முறைகளைப் பின்பற்றினார்கள். இக் கடனுக்கு ஈடாக வரிகளை அடகு வைப்பது என்பது பழைய கடன் வாங்கும் முறைகளில் இறுதிப்படியாகும்.

ஜினேவா, வேனிஸ் போன்ற இத்தாலிய நகரங்களில் பேங்குகள் மூலமாகக் கடன் வாங்கும் வழக்கம் ஏற்பட்டது. அரசும், தனியார்களும் அதிகமாகக் கடன்களை வாங்குவதற்கு இத்தாலியின் வாணிப வளர்ச்சியே வகை செய்தது. இம் முறையில் வேனிஸில் இருந்த ஸெயிண்ட் ஜார்ஜ் பேங்க் முக்கியமானது.

பதினைந்தாம், பதினாறும் நூற்றாண்டுகளில் ஏற்பட்ட வாணிபப் புரட்சியால், கடல் மட்டத்திற்குக் கீழிருந்த ஐரோப்பிய நாடுகள் முக்கியத்துவம் பெற்றன. அரசு கடன் வாங்கும் முறையை டச்சுக் காரர்களும் கையாண்டார்கள். வட்டி வீதங்கள் மிகக் குறைவாக இருந்ததால், அவர்கள் தங்கள் தொழிலைப் பெருக்கிக்கொள்ள முயன்றார்கள். ஹாலந்தின் உதாரணத்தைப் பிரிட்டன் பின் பற்றியதும் அல்லாமல், பிற நாடுகளுக்கும் பிரிட்டன் வழிகாட்டி யாக இருந்தது. 'சமுதாயத்தின் வாணிப நிலையே, மக்களிடையே கடன் அளிக்கும் ஆற்றலையும், விருப்பத்தையும் தோற்றுவிக்கிறது' என ஆடம் ஸ்மித்[1] கூறுகிறார். 'பிரதிநிதித்துவ அரசை அமைத்துக் கொண்டவர்களும், உழைப்பில் மிகுந்த உயர்தர திறமையைப் பெற்றவர்களுமான மக்களிடையேதான், அரசு கடன் வாங்கும் முறை எளிதில் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப் படும்' என்ற ஆடம் ஸ்மித்தின் கருத்து நடைமுறைக்குப் பொருந் தாது. இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முன்பே, இந்திய அரசு ஒரு நூற்றாண்டு காலத்திற்கு மேலாகக் கடன் வாங்கியிருந்தது இதற்கு ஓர் எடுத்துக்காட்டு.

### பிரிட்டிஷ் தேசியக் கடன்

பிரிட்டிஷ் தேசியக் கடன் 1694-ல் தோன்றியது. அந்த ஆண்டில் வில்லியம் பேட்டர்ஸன் என்ற ஸ்காட்லந்தியரால் இங்கிலாந்து பேங்க் தோற்றுவிக்கப்பட்டது. இந்தப் பேங்க் அந் நாளைய அரசுக்கு (அப்பொழுது அரசராக இருந்தவர் ஆரஞ்சு கோமகனான வில்லியமும், மேரி அரசியாரும்) 1,200,000 பவுன் கடன் அளித்தது. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் இக் கடன் 200 மில்லியன் பவுனுக்கு மேலும் உயர்ந்தது. நெப்போலியப் போர்கள் முடியும் தறுவாயில் அரசின் கடன் 800 மில்லியனாகவும், 1918-ல் 8,000 மில்லியன் பவுனாகவும், 1945-ல் 26,000 மில்லியன் பவுனாகவும் உயர்ந்தது. ஆகவே, இக் கடன் ஏறியதற்கு முக்கிய

[1] Adam Smith. 'The Wealth of Nations', Vol. II. p. 444.

காரணம் போர்களே. எதிர்காலத்தில் தொழில்களை நாட்டுடைமை யாக்குவதற்குப் பெருந் தொகைகளை நஷ்ட ஈடாகத் தருவதன் வாயிலாகவும், நீண்ட காலத்திற்குத் தொடர்ந்து பலருக்கு வேலை யில்லாதிருந்தால், அவர்களுக்கு வேலையின்மை நிவாரணத் தொகைகளைக் கொடுப்பதற்குத் துண்டு வரவு செலவுத் திட்டங் களைத் தயாரிப்பதன் வாயிலாகவும், தேசியக் கடன் மிகவும் ஏறலாம். அங்ஙனம் ஏறினுல் அது ஒரு புதிய அனுபவமாக இருக்கும்.

## அமெரிக்க ஐக்கிய நாடுகளில்

அமெரிக்கச் சுதந்திரப் போரின் பொழுது காண்டினன்டல் காங்கிரஸும் (Continental Congress), மாநிலங்களும் கடன்கள் வாங்கின. இவற்றில், பிற நாடுகளிலிருந்து வாங்கிய கடன்கள் மட்டும் 7,830,000 டாலராகும். 1790-ல் அமெரிக்கச் சுதந்திரப் போரின்போது மாநிலங்கள் வாங்கிய கடன்களையும் கூட்டு அரசு ஏற்றுக் கொண்டது. உள்நாட்டுக் கடன்கள், வெளிநாட்டுக் கடன்கள், மாநிலங்களின் கடன்கள் இவற்றின் மொத்தம் 77,124,464 டாலராகும். அமெரிக்க உள்நாட்டுப் போர் முடிந்த பிறகு, 1865ஆம் ஆண்டு அமெரிக்கத் தேசியக் கடனின் தொகை 2,846,000,000 டாலரை எட்டியது. முதல் உலகப் போருக்கு முன்பு அமெரிக்கக் கூட்டரசின் கடன் 1,000,000,000 டாலராக இருந்தது. 1919ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களில் இத் தொகை 26,596,701,648 டாலராக அதிகரித்தது. 1941-ல், 48·9 பில்லியன் டாலராக இருந்த அமெரிக்க அரசின் கடன் 1945-ல், 258·7 பில்லியன் டாலராக அதிகரித்தது. இக் கடன் தொகை 1960-ல் 290·9 பில்லியன் டாலராகவும், 1970-ல், 382·6 பில்லியன் டால ராகவும், 1971-ல், 407·0 பில்லியன் டாலராகவும் உயர்ந்தது[1].

## இந்தியா

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுவதற்கு முன்பு இந்திய அரசுக்கு யாதொரு கடனும் இல்லை. 1792-ல் இந்தியாவின் கடன் 7 மில்லியன் பவுனாக[2] இருந்தது. கிழக்கிந்தியக் கம்பெனியார் செய்த போர்களினுல் இந்தக் கடன் அதிகரித்தது. சிப்பாய் கலகத்திற்கு முன்பு இக் கடன் 60 மில்லியன் பவுனாய் இருந்தது. 1860-ல் இது 100 மில்லியன் பவுனாக உயர்ந்தது. 1942—43-ல் இந்திய அரசின் கடன் உருபா 1,389·13 கோடியாகவும், 1957ஆம்

[1] மூலம்: Statistical Abstract of the Limited States 1971, (92nd Edition). Washington, D. C. 1971, p. 19.

[2] பவுண்டு ஸ்டர்லிங்கைத்தான் பவுன் எனக் குறிப்பிட்டிருக்கிறோம். 1½ ஷில்லிங் ஒரு உருபாவுக்கும் சமம். ஆகவே, ஒரு பவுண்டு ஸ்டர்லிங் உருபா 13-5-4 பைக்குச் சமம்.

ஆண்டு உருபா 3,676·13 கோடியாகவும், 1961-ல் உருபா 4,738·96 கோடியாகவும், 1966-ல் உருபா 8009·27 கோடியாகவும், 1972 ல் உருபா 16,941·37 கோடியாகவும், 1973-ல் (வரவு செலவு திட்டத்தின்படி) உருபா 18,002·12 கோடியாகவும் அதிகரித்தது. (மூலம் : Eastern Economist, Budget Number, p. 537)

அரசு நிதியவியலில் கடன்களுக்கு உரிய இடம்

சாதாரணமாக ஆண்டுதோறும் ஏற்படும் செலவுகளை வரி வசூலிலிருந்தே சரிக்கட்ட வேண்டும். அவற்றைக் கடன்களிலிருந்து சரிக்கட்டினோமானால், நாட்டின் நாணயத்திற்குக் (national credit) குறைவு ஏற்படுவதோடு, ஆண்டுதோறும் வரிகளிலிருந்து பெறும் வருமானத்தைக் காட்டிலும், கடனைத் திருப்பித் தர வேண்டிய தொகை கூடுதலாகிவிடும். ஆகையால், செலவினங்கள் ஓரளவு அதிகரிக்குமானால், ஓர் ஆண்டு துண்டு (பற்றுக்குறை) வ ரவு செலவு திட்டத்துடன் இன்னொரு ஆண்டின் உபரி வரவு செலவு திட்டத்தை இணைத்து, மொத்தத்தில் வருவாயையும், செலவையும் சரிக்கட்டுமாறு செய்வதே ஏற்புடைத்து.

மின்சார எந்திரம் அல்லது இருப்புப் பாதை போன்ற மூலதனச் சாதனங்களை உற்பத்தி செய்வதற்கு ஆகும் செலவுக்கு, அரசு கடன்கள் வாங்கலாம். ஏனெனில், இவை பயன் தரப் பல்லாண்டுகள் பிடிக்கும். பஞ்ச நிவாரணம், வெள்ளம், பருவ மழையின்மை, (வறட்சி), புயல், மண்மாரி, பயிர்ச்சேதம், ஆறுகளின் போக்கில் மாறுதல் ஆகிய இவற்றால் ஏற்படும் இழப்புகளைச் சமாளிப்பதற்குக் கடன்களைப் பயன்படுத்தலாம். ஏனெனில், இவை போன்றவை எதிர்பாராது நிகழ்பவையாகும். ஆனால், இக் கடன்களைத் திருப்பித் தருவதற்கு அரசு புதிய வரிகளை விதிக்கத் தயாராக இருக்கவேண்டும்.

ஒரு தொழில் முனைவுக்கு (enterprise), வரிகள்மூலம் நிதி திரட்டப்படும் பொழுது, அச் செலவு இப்பொழுது வரி செலுத்துவோரால் சுமக்கப்படுகிறது என்பதும், கடன்கள்மூலம் நிதி திரட்டப்பட்டால், இப்போதைய தலைமுறையினர் யாதொரு பளுவையும் ஏற்க வேண்டியதில்லை என்பதும் அனைவரும் அறிந்தனவே. இப்பொழுது அரசினுக்குக் கடன் அளிப்போர் அதற்குப் பிரதியாக வட்டியைப் பெறுகின்றனர். எதிர்காலத்தில் இக் கடனை அடைக்கும் பொழுது இதற்கு வேண்டிய முதலையும் (அசலையும்), வட்டியையும், வரிகள் மூலம்தான் திரட்டவேண்டும்.

ஒரு தொழில் முனைவுக்குக் கடன்கள் மூலம் நிதி திரட்டப்படு கிறது என்றும், அதை அடைப்பதற்கு இப்போதிருக்கும் வரி விகிதங்கள் உயர்த்தப்படுகின்றன என்றும், புதிய வரிகளும் விதிக்கப்படுகின்றன என்றும் கொண்டால், சமுதாயத்தின் ஒரு பகுதியிலிருந்து இன்னொரு பகுதிக்கு வருமானம் மாற்றப்படுகிறது எனலாம். வரி செலுத்துவோரும், கடன் அளிப்போரும் ஒருவரா கவே இருந்தால், சொக்காயின் (coat) ஒரு பையிலிருந்து இன்னொரு பைக்குப் பணம் மாற்றப்படுவதற்கு ஒப்பாகும். உள் நாட்டில் கடன் வாங்கினால், அதன் விளைவாகப் பிற்காலச் சந்ததி யார் அதிகமாக உழைத்துக் கடனை அடைக்க வேண்டி வரும். ஆயினும், உள்நாட்டுக் கடனைத் திருப்பித் தருவதால், பிற்சந்ததி யார் அனைவரின் மீதும், நேர்முகப் புறவயப் பொருளாதாரப் பளு (objective economic burden) ஏற்படுவதில்லை. வட்டியையும் முதலையும் திருப்பித் தருதல் செலவாகாது; ஒருவரிடமிருந்து இன்னொருவருக்குப் பணத்தை மாற்றுவதே ஆகும். சிலர் கூடுத லான வரிகள் செலுத்துவதன் மூலம் நட்டம் அடைந்தாலும், அரசுக்குக் கடன் அளித்தவர்கள் அதற்கு ஈடான இலாபத்தைப் பெறுகிறார்கள்.

கடன்களை இப்பொழுது பெறுவதன்மூலம் எதிர்காலத்தில் நிதிய முறையில் என்ன மாற்றம் ஏற்படும் என்பதையும் ஒரு அரசு சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். வரி விதிப்பினால் செலவுகள் ஏற் படுகின்றன. வரிகளால் மறைமுக விபரீத விளைவுகள் தோன்று கின்றன.

வரிகளிலிருந்து கிடைக்கும் வருமானத்திலிருந்தோ, அல்லது உள்நாட்டுக் கடனிலிருந்தோ அரசின் செலவு செய்யப்படுமானால், சில வேளைகளில் அஃது எதிர்காலத் தோன்றல்களைப் (சந்ததியார் களைப்) பாதிப்பதில்லை. ஆனால், எவ்வினங்களிலிருந்து இச் செல விற்கு நிதி திரட்டப்படுகின்றதோ, அவ் வினங்கள், வரிகள் அல்லது கடன்கள்மூலம் பாதிக்கப்படாமல் இருந்தால்தான் இக் கூற்று மெய்ப்பிக்கப்படும். கடனாக அளிக்கிறார்களா அல்லது வரி யாகத் தருகிறார்களா என்பதைக் காட்டிலும், ஒவ்வொருவரும் எவ்வளவு தொகை கொடுக்க வேண்டும் என்பதே இதில் கவனிக்க வேண்டிய முக்கிய அமிசமாகும். வரித் திட்டத்தைக் காட்டிலும் கடன் திட்டத்தின்கீழ் சமுதாயத்தின் மூலதனம் மிகவும் கரைந்து போகும். அதற்கு ஏற்றாற்போல நாட்டின் எதிர்கால உற்பத்தியும் குறையும்.

பெரும் அளவில் அரசினுக்குக் கடன் அளிப்பவர்கள், அரசி னிடமிருந்து வட்டியாக வருமானத்தைப் பெறுகிறார்கள். அவர்கள்

அரசுக்கு முன்பைவிட அதிகமாக வரியும் செலுத்த வேண்டியிருக்கிறது. ஆயினும், அவர்கள் அரசுக்குக் கூடுதலாகச் செலுத்தும் வரித் தொகையைக் காட்டிலும், அவர்கள் அரசினிடமிருந்து வட்டியாகப் பெறும் வருமானம் அதிகமாக இருக்கும் என்று எண்ணப் போதிய காரணம் இருக்கிறது. கடன் அளிக்கும் அளவிற்கு ஏற்ப வரி முறையை மாற்றிப் படித்தரமாக அமைக்க இதுவரை யாதொரு வழியும் இருப்பதாக நாம் அனுபவத்தில் கண்டதில்லை. கடன்கள்மூலம் நிதியைத் திரட்டுவதால், மூலதனம் அதிகம் பாதிக்கப்படுகிறது. இதனால் எதிர்காலச் சந்ததியார்களின் பொருளாதார நிலைமையும் பெரிதும் பாதிக்கப்படுகிறது.

ஒரு தொழில் முனைவின் ஆதாயத்தைப் பொறுத்தும், எதிர்காலத்தில் எத்துணைகாலம் அம் முனைவு நீடித்திருக்கும் என்பதைப் பொறுத்தும்தான், அதற்கு வேண்டிய நிதியை வரி மூலமாகப் பெறவேண்டுமா அல்லது கடன் மூலமாகப் பெறவேண்டுமா என்பதை முடிவு செய்யலாம். (உ-ம்.) சேரிகளைத் துப்புரவு செய்வதற்காகவோ, ஒரு புதிய நகரத்தை அமைப்பதற்காகவோ, அல்லது ஒரு போரை நடத்துவதற்காகவோ, அரசு கடன் வாங்கலாம். இக் கடன்களைப் பின்னர்ப் புதிய வரிகளை விதித்தோ, அல்லது இருக்கின்ற வரிகளின் வீதங்களை உயர்த்தியோதான் அடைக்கவேண்டும். இங்ஙனம் கடன்கள் மூலம் தனக்கு வேண்டிய தொகைகளை அரசு பெறாமல், வரிகள்மூலம் தனக்கு வேண்டிய தொகைகளைப் பெற்றால், ஏழைகள் அரசுக்கு வரியாகச் செலுத்தும் தொகை, அவர்களுடைய வீதாசாரத்திற்குக் குறைவாகவும், செல்வர்கள் வரியாகச் செலுத்தும் தொகை, வீதாசாரத்தில், அவர்களுடைய வருமானத்துடன் ஒப்பிடும் பொழுது கூடுதலாகவும் இருக்கும். அப்படியின்றி முதலில் அரசு கடனை வாங்கியும், பின்பு அக் கடனை அடைப்பதற்கு வரிகளையும் விதித்தால், இவ் வரிகளின் பெரும்பகுதி பளுவும் ஏழைகள்மீதே விழும்.

எதிர்பாராத செலவு ஏற்படும் பொழுது, அதைக் கொடுப்பதற்கான திறன் அவ் வாண்டில் மட்டும் அதிகரிக்கும் வருமானத்தைப் பொறுத்ததன்று. ஆனால், வரியைச் செலுத்தும் ஆற்றல், வருமானத்தை ஈட்டும் சக்தி அல்லது வருமானத்தைத் தரும் மூலதனம் எவ்வளவு அதிகரித்திருக்கிறது என்பதைப் பொறுத்ததே. ஈண்டு வாணிபத்தில் உபயோகிக்காத வீடுகள், படங்கள் போன்றவையும், மனிதனின் அக, உடல் சக்திகளும், வருமானத்தை ஈட்டும் ஆற்றல் அல்லது வருமானத்தைத் தரும் ஆற்றலுடைய மூலதனத்தில் (income-getting power of capital) அடங்கும். நாட்டிற்கு நெருக்கடியான நேரத்தில், ஒவ்வொருவருடைய பங்கையும் கேளாது, அவரவர் எவ்வளவு மிகுதியாகச்

செலுத்த முடியும் என்பதைத்தான் பார்க்கவேண்டும். ஒரு பெரிய பாரை நடத்துவதற்கு வேண்டிய தொகைகளைப் பெரிதும் கடன்கள் மூலமே பெறக் கூடாது. ஏனெனில், அவற்றை அடைப்பதற்கும், வட்டி கொடுப்பதற்கும், வரியை உயர்த்தியே தீர வேண்டும். அனைவரின் மீதும் அதிக வரிப் பளு விழுந்தாலும், சிறப்பாக எளியோர் மீதே இப் பளு விழும்.

கடன்களினால் அதிகப் பேங்க் செலாவணி (bank credit) ஏற்படுகிறது. இஃதொன்றே கடன்கள்மூலம் நிதி திரட்டக் கூடாது என்பதற்குப் போதிய காரணமாகும்.

'பொருளியல் தொடர்பற்ற, அதாவது ஊதியம் தராத, செலவை (non-economic, i.e., non-remunerative expenditure) வருமானத்திலிருந்தே சரிக்கட்டவேண்டும். அங்ஙனம் சரிக்கட்ட முடியவில்லை என்றால், அச் செலவைச் செய்திருக்கக்கூடாது. தேசியப் பண்பாடு, கல்வி, சமுதாய முன்னேற்றம் இவையெல்லாம் மிக இன்றியமையாது வேண்டப்படுவன. ஆயினும், அரசு கடன் வாங்கும் அளவுக்கு இவற்றின் அபிவிருத்தி அவசியமானதன்று. அரசின் செலவின் பெரும்பகுதியும், உற்பத்தியை மறைமுகமாகப் பெருக்குகிறதென்றும், அதனால் நாட்டின் வருமானம் எதிர்காலத்தில் பெருகலாம் என்றும் கூறுவதும் உண்மையே. கல்வியைப் பரப்புவதற்கும், அல்லது தொழிலாளர்களின் வீட்டு வசதிகளைப் பெருக்குவதற்கும் அரசு வாங்கும் கடன் வட்டியைத் திருப்பித் தருவதற்கான வருமானத்தை நேரிடையாக நல்காவிடினும், சமுதாயத்தின் வருமானத்தை உயர்த்துகிறது. இதனால் வரி வசூலில் கடுமை இல்லாமலும், வரி வீதங்களை உயர்த்தாமலும், வரியிலிருந்து கிடைக்கக்கூடிய வருவாயைப் பெருக்கலாம். இவ்வாறு எண்ணும்பொழுது இங்ஙனம் கடன் வாங்குவது சரியெனப்படுகிறது. இவற்றை நடைமுறையில் கடைப்பிடிப்பதில் உள்ள கஷ்டங்களாலேதான் இதற்கு எதிர்வாதங்கள் ஏற்படுகின்றன. மேற்கூறிய செலவினங்களின் விளைவுகளைத் துருவவோ அல்லது அளவிடவோ முடியாது. ஆகவே, அவற்றைப்பற்றிய எவ்விதக் கூற்றும் நம் நம்பிக்கையைப் பொறுத்ததே. கடன் செலவு திட்டவட்டமானது ; தெளிவானது. கடன் செலவு சமுதாயத்தின் உற்பத்திச் சாதனங்களின் மீது பெரும் பளுவாய் இருக்கிறது. ஆகவே, பொருளாதாரச் செலவுக்காகவன்றி வேறு எக் காரணத்திற்கும் கடன் வாங்கக்கூடாது என எண்ணுவது விவேகம். அரசின் அதிகார வரையறையைப் பெருக்குவது நன்மையைப் பயப்பதாக இருந்தால்தான், பொருளாதாரச் செலவுக்காகவும் கடன் வாங்கவேண்டும்' (பாஸ்டபிள்).[1]

[1] பாஸ்டபிள், அதே நூல், பக்கம் 670—671.

அரசின் கடனின் நன்மைகளும், தீமைகளும்

நன்மைகள்: 'முதலீடு செய்வதற்குத் தக்கதொரு வழி அரசின் கடன் ஆகும். உள்நாட்டுக் கடனின் வட்டி, சமுதாயத்தின் ஒரு பகுதியிலிருந்து இன்னொரு பகுதிக்குத் தரப்படுகிறது. நாட்டு வரிகளின் ஒரு பகுதியே அரசுக்குக் கடன் அளித்தவர்களின் உடைமை (property of the public creditor) ஆகும். ஆகவே, அரசுக்குக் கடன் அளித்தவன் எவ்வளவு செல்வந்தனுகிருனே, அவ்வளவுக்கு வரியைச் செலுத்தும் நாடு ஏழ்மையாகிறது' (பிளாக்ஸ்டோன்).[1] ஆயினும், வட்டியைப் பெறும் வகுப்பினரே பெரும்பாலும் வரியைச் செலுத்தும் வகுப்பினராகவும் இருக்கின்றனர். அயல்நாட்டுக் கடனின்மீது வட்டி செலுத்தும்பொழுது வருமானத்தின் ஒரு பகுதியை அயல் நாட்டுக்குக் கொடுப்பதால், கடன்பட்டிருக்கும் நாட்டின் நிகர வருமானம் குறைகிறது. ஆனல், உள்நாட்டில் வாங்கிய கடன்மீது வட்டி செலுத்தும் பொழுது இவ்வித விளைவு ஏற்படுவதில்லை.

நாட்டின் பாதுகாப்புக்காகவும், போர் நிகழ்த்துவதற்காகவும் கடன்மூலம் நிதி திரட்டுவது பலவகையிலும் நன்மை பயப்பதன்று. ஆயினும், அரசின் தலையாய கடமை, தன் நாட்டையும், குறிக்கோள்களையும், பாதுகாப்பதே. ஆதலால், இதற்கு வேண்டிய நிதிகளைத் திரட்டுவதற்கு அரசின் கடன் ஏற்ற கருவியாக இருப்பதால், இம் முறை நன்மை பயவாவிடினும், இன்றியமையாதது எனக் கொள்ளவேண்டும். பயனில்லாத சுமைக் (dead-weight) கடனல் செல்வம் படைக்கப்படுவதில்லை; ஆயினும், மெக்குல்லாக் (Meculloch)[2] கூறுவதுபோல, 'நம் ராஜ்யங்களைக் குலையாமல் காப்பதும், வளர்ப்பதும், நம் உரிமைகளையும், பாத்தியதைகளையும் காப்பதும், நாம் நிலத்திலும்—நீரிலும் வெற்றிகள் பெறுவதும், அரசின் கடனுக்குச் சமமான மதிப்புள்ளவை. ஒரு போரில் சிந்திய குருதியும், செலவழித்த பணமும்; மக்கள் பெருக்கத்திற்காகவும், செல்வப் பெருக்கத்திற்காகவும் செலவழித்ததைப் போன்றே, முக்கியத்துவம் உள்ளவை. சுதந்திரத்தையும், நாட்டின் பாதுகாப்பையும் போற்றிப் பேணுதற்கு எந்தத் தியாகமும் பெரியதாகாது. இந் நோக்கத்தை ஈடேற்றுவதற்காகக் கடன் வாங்கித் தரைப் படைகள், கடற்படைகள், இவற்றின்மீது செலவழிப்பது, வேளாண்மை அல்லது வாணிபம் அல்லது தொழில் அபிவிருத்தி இவற்றிற்காகச் செலவு செய்வதற்கு ஒப்பாகும்.'

[1] Quoted by Findlay Shirras, p. 470

[2] Quoted by Findlay Shirras, p. 471.

அரசு கடனால் அன்றிச் சமுதாயத்திற்குத் தேவையான அபிவிருத்தி செய்யப்பட்ட சாலைகள், குடி தண்ணீர் இவற்றிற்கு வகை செய்வது சாத்தியமன்று. இவற்றிற்கு ஏராளமாகச் செலவு ஆவதால், நடப்பு வரும னத்திலிருந்து இவற்றிற்கு வகை செய்ய முடியாது. இதனால் புதிய நாடுகள் தங்கள் சாலைகள், இருப்புப் பாதைகள், வாய்க்கால்கள், நீர்ப்பாசன வசதிகள், துறைமுகங்கள் இவற்றின் அபிவிருத்திக்கு ஆகும் செலவிற்காகச் செல்வம் கொழிக்கும் சமுதாயங்களில் நிதி திரட்ட, கடன்கள் துணை செய்கின்றன. இவ்வாறு அந் நாடுகளின் பொருளாதார வளர்ச்சி பேணப் படுகிறது. அதேசமயம், பன்னாட்டு வாணிபத்திற்கான வசதிகள் பெருகுவதாலும், கூடுதல் சாதனங்கள் கிடைப்பதாலும் உலகம் பொதுவாகப் பயன் பெறுகிறது. மேலும், போர் அல்லது வெள்ளம், புயல் இவைபோன்ற இயற்கை நிகழ்ச்சிகளினால் கடுஞ்சேத மடைந்த நாடுகள் தங்கள் சீர்குலைந்த, அழிவுற்ற பகுதிகளைச் சீரமைப்புச் செய்வதற்கும் நிதி திரட்ட கடன்முறை ஏதுவாகிறது.

அரசு கடன் என்று இருப்பதாலேயே பல நன்மைகள் ஏற்படுவதாக ஹான்ஸன் (Hansen) கூறுகிறார். முதலாவதாக, பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆங்கிலேய கடன் பேங்குகள், பங்கு அங்காடி, ஆயுள் காப்புறுதிக் கம்பெனிகள் (Life Insurance Companies) போன்ற சில நிதய நிறுவனங்களின் வளர்ச்சிக்கு உரம் ஊட்டியது. முதலாளிகளின் பணத்திற்கு அரசு கடன் உச்சப் பாதுகாப்பை அளித்தது. இதனால், அவர்கள் தங்களிடம் எஞ்சியிருந்த தொகைகளைத் துணிந்து பல தொழில்களில் முதலீடு செய்ய முடிந்தது. இதனால் பல புதிய தொழில்கள் வளர்ந்தன. இரண்டாவதாக, இக் கடனும் தேய்வுவீத வரிமுறையும் சேர்ந்து நுகர்வைக் குறைத்துச் சேமிப்புகளைப் பெருக்கின. இவ்வாறு மூலதன வளர்ச்சிக்கும், இறுதியில் வாழ்க்கைத் தரம் உயர்வதற்கும் வழிகோலியது. மூன்றாவதாக, முதல் உலகப்போருக்குப் பின்பு, அரசின் கடன் மக்களின் நுகர்வு அதிமாவதற்குத் தூண்டுகோலாக இருந்திருக்கலாம். இக் கூற்றை மெய்ப்பிக்க ஹான்ஸன் முயலவில்லை. நாம் இதை ஒப்புக் கொள்கின்றோம் இல்லை.

ஹான்ஸன் கூறிய நன்மைகளைத் தவிர்த்து, அரசின் கடனால் வேறு சில நன்மைகளும் இருப்பதாகச் சில ஆசிரியர்கள் கூறுகிறார்கள். குறைந்த வருமானம் உடையவர்கள் சிக்கனமாக இருப்பதற்கும், சேமிப்பதற்கும், அவர்கள் சுய மரியாதையுடனும், நிதியத்துறையில் பாதுகாப்புடனும் இருப்பதற்கும் அரசு கடன் பத்திரங்கள் இருப்பது ஒரு காரணமாகும். மேலும், டிரஸ்டு

நிதிகளையும், பிற நிதிகளையும் முதலீடு செய்வதற்கு அரசு கடன் தக்க வாயிலாக இருக்கிறது. இறுதியாக, மையப் பேங்க், வெளிச்சந்தை நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கும் அரசுக் கடன் சிறந்த கருவியாகும்.

அரசின் கடன்களால் பெறும் பிற நன்மைகளாவன: (அ) உடனடியாக பெருத்த வருமானம் வேண்டும் என்றால், அதை வரிகளின் மூலம் திரட்டுவதைக் காட்டிலும், கடன்களின் மூலம் திரட்டுவது எளிது. (ஆ) மேலும், உடனடியாகப் பொருளாதாரச் சீர்குலைவும் ஏற்படாது. ஏனெனில், வசதி படைத்தவர்களே அரசுக்குக் கடன் அளிக்கிறார்கள். வசதி இல்லாதவர்களுக்கு அவற்றைத் திரட்டி வைத்துக் கொள்வதற்குப் போதிய காலமும் கிட்டுகிறது. பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்ற முன்னேறிய நாடுகளைப் பொறுத்தவரை, அரசின் கடன்களால் பல பிரத்தியேக அனுகூலங்கள் உள்ளன. முதற்கண், முதலீடு செய்வோருக்குப் பிற நாடுகளின் விவகாரங்களிலும், சிறப்பாக அவற்றின் பொருளாதார முன்னேற்றத்திலும் நாட்டம் ஏற்படுமாறு செய்கிறது. இதனால் கடன் வாங்கும் நாடுகளுடன் வாணிக உறவு வளர்கிறது. கடன் வாங்கும் நாடுகளும், கடன் அளிக்கும் நாடுகளுடன் வாணிப உறவை ஏற்படுத்திக் கொள்ள விரும்பும். இரண்டாவதாகக், கடன் அளிக்கும் நாட்டிலுள்ள தொழில்களும், அந் நாட்டின் கடல் கடந்த வாணிபமும், வெளிநாட்டுக் கடன்களால் நன்மை பெறுகின்றன. ஏனெனில், கடனாகக் கிடைத்த தொகை, கடன் அளித்த நாட்டிலேயே பொதுவாகச் செலவழிக்கப்படுகிறது. சில சமயம் கடன் அளிப்பதற்கு இஃது ஒரு நிபந்தனையாகவும் கொள்ளப்படுகிறது. மூன்றாவதாகப், பிற நாடுகளுக்குக் கடன் அளிப்பதால், கடன் சம நிலையைப் பற்றிய நல்ல விளைவுகள் ஏற்படுகின்றன. எவ்வாறெனில், தவணை முறையில் மூலதனத்தையும், வட்டியையும் பெறுவதால் சாதகமான அயல் நாட்டுப் பரிவர்த்தனைகள் (favourable foreign exchanges) ஏற்படுவதற்கு ஏதுவாகிறது.

எதிர்காலத்தில் சேமிப்புகளைத் தூண்டுவது ஒரு பெரிய பிரச்சினையாக இருக்காது. இச் சேமிப்புகளுக்குத், தக்க உபயோகங்களைக் கண்டுபிடிப்பதே பெரிய பிரச்சினையாக இருக்கும். சேமிப்புகளை ஒன்று திரட்டுவதற்கும், உயர்ந்த ரகத் தனியார் கடன் பத்திரங்களை வெளியிடுவதற்கும் இந் நாடுகளில் போதிய வசதிகளும், நிறுவனங்களும் இருக்கின்றன. சமாதான காலத்தில் முதலீட்டு நிதிகளுக்குப் போதிய புரிசம் (demand) இன்மை இந் நாடுகளில் உள்ள பெரும் குறைபாடாகும்.

## அரசின் கடன்களினுல் ஏற்படும் தீமைகள்

அரசின் கடன், அரசாங்கத்தின் ஊதாரித்தனத்தை வளர்ப்பது முதல் தீமையாகும். தனியார் தன் சொந்த மூலதனத்தையும், வருமானத்தையும் பேணுவது போல அரசுத் துறையைச் சேர்ந்தவர்களும், உத்தியோகஸ்தர்களும் அரசு நிதியைக் கண்ணும் கருத்துமாய்ப் பேணுவார்கள் என்று எதிர்பார்க்க இயலாது. அரசு சில சமயம் ஊதாரிச் செலவு செய்வதோடன்றி, பணத்தை வீண் விரயமும் செய்கிறது. இக் காலத்தில் அரசு கடன்களைப் பெறுவது மிகவும் எளிதாக இருப்பதால், இப் போக்கு வலுவடைந்து வருகிறது. நடப்பு வருமானத்திலிருந்து மட்டுமே அரசு செலவழிக்க வேண்டுமெனில், அரசு பல செலவு பிடிக்கும் திட்டங்களை மேற்கொள்ளாது. கடன் எளிதில் கிடைப்பதால்தான் இத் திட்டங்கள் மேற்கொள்ளப் படுகின்றன.

புதிய நாடுகளில், அரசு கடன் முறை பெரிதும் துஷ்பிரயோகம் செய்யப்படுகிறது. இதனுல் நாட்டிற்கு ஈடு செய்ய முடியாத இழப்பு ஏற்படுகிறது. சிறிய காலனிகளும், புதிய குடியரசுகளும், தாங்கள் விரைவில் முன்னேற வேண்டும் என்றும், தங்கள் வளப்பொருள்களை விரைவில் விருத்தி செய்ய வேண்டும் என்றும் எண்ணுவது இயல்பேயாகும். ஆயினும், இப் பேராசையால் வீண் செலவும், ஊதாரிச் செலவும் ஏற்படுவதுமன்றி, ஏராளமாகக் கடன் வாங்குவதற்கும், அவற்றைத் திருப்பிக் கொடுக்க வரிப் பளுவை அதிகரிப்பதற்கும், வரிப் பளு அதிகமாவதால் பொருளாதார அபிவிருத்திக்குத் தடங்கல் ஏற்படுவதற்கும், வழி ஏற்படுகிறது. இங்ஙனம் முன்னேற்றம் ஏற்படுவதற்குப் பதிலாக, முன்னேற்றம் தடைப்படுகிறது. தங்களுடைய ஆற்றலை நினைவில் கொள்ளாது, பெரும் அளவில் கடன் வாங்கிய சில நாடுகளையும் நாம் கண்டிருக்கிரோம். இதனுல் தாங்கள் திருப்பித் தர வேண்டிய கடன்களைத் தராது நிராகரித்ததும் (Repudiation), இதன் விளைவாக அந் நாடுகளின் நாணயம் பிற நாடுகளில் பாதிக்கப்பட்டதுமே இவை பெற்ற இலாபமாகும்.

பிற நாடுகளில் மிதமாகவும் விவேகத்துடனும் கடன் வாங்க வேண்டும் என்பது தெளிவு. பொருளாதாரச் சுதந்திரத்தைத் தத்தம் செய்து, விரைவாக முன்னேற்றம் அடைவதைவிட மெதுவாகவும், நிதானமாகவும் முன்னேறிச் செல்வது ஒரு நாட்டிற்கு அதிக நன்மை பயக்கும். அளவுக்கு உட்பட்டிருந்தால், பிற நாடுகளில் கடன் வாங்குவதால் பெருத்த நன்மை ஏற்படுவதோடு, இறுதியில் உலகம் முழுவதும் செல்வமும், உற்பத்தி ஆற்றலும் அதிகரிப்பதற்கும் ஏதுவாகிறது. ஆனல், ஒவ்வோர் ஆண்டும் பிற

நாட்டிற்கு வட்டி கொடுக்க வேண்டியிருக்கும். அதனால் நாட்டின் வருமானத்தின் ஒரு பகுதி பிற நாட்டிற்குச் செல்கிறது. இறுதி விளைவு, செலவைக் காட்டிலும், அதிகமாக இருந்தால், கடன் வாங்குவது நல்லதே. ஆனால், நடைமுறையில் அளவுக்கு மீறிக் கடன் வாங்குவது கண்கூடு. இவ்வகையான சூழ்நிலையில் மேலும் வரி விதிப்பதாலும் அல்லது மேலும் கடன் வாங்குவதாலும் அல்லது பண வீக்கத்தாலுமே அயல்நாட்டுக் கடனுக்கு வகை செய்ய முடியும். இதனால் உற்பத்திக்குக் குந்தகம் ஏற்படுவதோடு, கடன் பளு ஏற ஏற நாட்டிற்கு ஏற்படும் தீங்கும் கூடுகிறது.

ஆகவே, கூடுமான வரையில் வரிகளை உயர்த்துவதன்மூலமே செலவைச் சரிக்கட்ட வேண்டும். கடன் வாங்குவதால் இறுதியில் நிச்சயம் நன்மை விளையும் என்றாலும் அல்லது கடன் வாங்குவது இன்றியமையாதது என்றாலுமே கடன் வாங்க வேண்டும். ஒரு கடனால் நிரந்தரப் பளு ஏற்படுகிறது. வரி விதிப்பினால் ஒரே ஒரு முறை பளு ஏற்படுகிறது. கடன் வாங்கினால் ஆண்டுதோறும் வட்டி கொடுப்பதற்கும், மூலதனத்தைத் திருப்பித் தருவதற்கும் வழி வகை செய்ய வேண்டியிருக்கிறது. ஆனால், பிரத்தியேக வரி விதிப்பினால் ஒரே ஒரு முறைதான் மக்கள் துன்பத்திற்கு உள்ளாக நேரிடும். விலைவாசிகள் குறையக் குறைய வரிப் பளுவும் அரசின் கடன் பளுவும் ஏறுகின்றன என்பதையும் நினைவில் இருத்த வேண்டும். இவ்விதமான நிலை பிரத்தியேக வரிக்கு ஏற்படுவதில்லை. ஆனால், நெடுங்காலமாக விதிக்கப்படும் வரிக்கு இது பொருந்தும்.

### கடன் எல்லை

வரிப் பளுவைக் குறிப்பிட்ட அளவுக்கு மேல் ஏற்றுவது நல்லதன்று. இதேபோல, கடன் தொகையைக் குறிப்பிட்ட அளவுக்கு மேல் அதிகரிப்பதும் நல்லதன்று. உற்பத்தி அமைப்பைப் பெருக்குவதற்கும், பேணுவதற்கும் (extension and maintenance of productive organisation) புதிய மூலதனம் இடைவிடாது தேவைப்படுகிறது. இதற்காக வேண்டப்படும் மூலதனத் தொகையைத் தேசியக் கடன் பாதிக்குமானால் சமுதாயத்தின் எதிர்கால வளர்ச்சிக்கு ஊறு ஏற்படும். இவ்வாறு ஓர் அரசின் கடன் வாங்கும் எல்லை அதன் வாணிபத்திற்கு முடைப்படும் பணத்தின் தொகையைப் பொறுத்தது. நாட்டிற்கு நெருக்கடி ஏற்படும் காலத்தில், வாணிபத்திற்கு வேண்டப்படும் பணத்தின் தொகையைக் குறைத்துக் கொண்டு, அரசின் கடன் எல்லையை அதிகரிக்கலாம். இதனால் உற்பத்தியமைப்பு திறமையாக வேலை

செய்வதற்கு வழி செய்யலாமே தவிர, உற்பத்திப் பெருக்கத்திற்கு வழி செய்ய முடியாது. இதன் மேல் வரம்பு, தேசிய உணர்ச்சியால் உந்தப்பட்டு, அரசினுக்குக் கடன் அளிப்பதற்காக, மக்கள் எவ்வளவு மிச்சம் பிடிக்கிறார்கள் என்பதைப் பொறுத்தது. மக்கள் மிச்சம் பிடிக்கும் தொகை அனைத்தையும் அரசு கடனாகப் பெறலாம். இதற்கும் மேலாகக் கடனாகப் பெற்றால், தொழில் வளர்ச்சி தடைப் படும்; மக்களின் பொது நலனும் பாதிக்கப்படும். மக்கள் சேமிப்பு அனைத்தையும் கடனாகப் பெற்ற பின்பும், அரசுக்குப் பணம் முடைப்பட்டால், அரசு வெளிநாடுகளிலிருந்தும் கடன் வாங்கலாம்; அல்லது உலோகமாக மாற்ற முடியாத காகிதப் பணத்தை வெளி யிடலாம். பிற நாடுகளில் எவ்வளவு கடன் வாங்கலாம் என்பது பல காரணிகளைப் பொறுத்தது. அவையாவன: வெளிநாட்டில் நம் அரசின் நாணயத்தின் (credit) நிலைமை என்ன? பிற நாடுகள் நமக்குக் கடன் அளிக்க விருப்பமும், ஆற்றலும் கொண்டவையாக இருக்கின்றனவா? நமக்கும், பிற நாடுகளுக்கும், அரசியல் ரீதியில் சுமுகமான உறவுகள் இருக்கின்றனவா? ஏற்கனவே வாங்கிய கடன்களைத் தவணை பிசகாமல் செலுத்தி வந்திருக்கிறோமா? என்பவை. எவ்வளவு காகிதத்தைப் பணமாக அச்சிட்டு வழங்க லாம் என்பதை வரையறுக்க இயலாது. இருந்தாலும், அளவுக்கு மீறிக் காகிதப் பணத்தை அச்சடித்தல் நாட்டிற்கு அழிவையே தரும். விலைவாசிகள் இடைவிடாது ஏறுவதால், மக்களின் சேமிப்புச் சக்தி குறையும். இதனால், அரசு மக்களிடமிருந்து கடனாகப் பெறக்கூடிய தொகையும், அவ்வாறு கடனாகப் பெற்ற தொகையின் வாங்கும் சக்தியும் குறையும்.

அரசின் கடன் பல முனைகளிலும்—கடன் வாங்குதல், செல வழித்தல், வரி விதித்தல், திருப்பித்தருதல்—பொருளாதாரத்தைத் தாக்குகிறது. இத் தாக்குதல்களினால் ஏற்படும் விளைவுகளை ஆராய்ந்த பிறகே, அரசின் கடன் எல்லையைப்பற்றி முடிவாக ஏதேனும் கூற முடியும். உதாரணமாக, வளங்களும், ஆட்களும் வேலையில்லாதிருக்கும் வரை, பற்றுக்குறைச் செலவுக்கு (deficit spending) இடமளிக்கிறது. ஆகையால் அரசும் கடன் வாங்கிக் கொண்டே இருக்கலாம். வேலைவாய்ப்பைத் தேடித்தருவதுதான் நோக்கம் என்றால், அளவுக்கு மீறி அரசு செலவழித்தல் பாதக மான விளைவுகள் ஏற்படும். உதாரணமாக, அரசு கடன் வாங்குவ தால், தனியார் தொழில் முனைவுக்கு வேண்டிய மூலதனம் கிடைக் காமல் போகலாம். அரசு தான் வாங்கிய கடன்களுக்கு வட்டி செலுத்துவதற்காக வரிகளை உயர்த்தும். இதனால் வணிகர்களின் உளவியல் பாதிக்கப்படும். இலாபம் தரும் துறைகளை அரசு மேற் கொள்வதாலும் தனியார் முனைவு பாதிக்கப்படலாம்.

தனியார் முதலீட்டுக்கு நிதிகள் கிடைக்கும் வகையில் அரசு கடனைத் திருப்பித்தரும் காலத்தை நிருணயிக்கலாம். இதிலிருந்து ஒரு குறிப்பிட்ட சமயத்தில் பொருளாதாரம் இருக்கும் நிலையைப் பொறுத்தே அரசின் கடன் வரம்புகள் இருக்கும் என்பது புலனாகிறது.

வரையறையின்றி அரசின் கடன்களை அதிகரிக்கக்கூடாது என்று பேராசிரியர் பிகுவும்[1] கூறுகிறார். ஏனெனில், இங்ஙனம் 'கடனோடு கடன் கதம்பப்பொடி காற் பணம்' என்று மேலும் மேலும் கடனை வாங்கினால், ஒரு காலக்கட்டத்தில் அரசின் வருவாய் முழுதும் வட்டியைக் கொடுப்பதற்கே சரியாகப் போய் விடும். ஆகவே, இந்த அளவுக்கு கடன் வாங்கக்கூடாது என்பது தெளிவு. இருந்தாலும் அனைத்து அரசு கடன்களும் தீமை பயப்பவை என்ற பண்டையோர் கருத்துக்கும் ஆதாரமில்லை. ஒரு திட்டமிட்ட பொருளாதாரத்தில், ஆட்களும், வளங்களும் வேலையின்றி இருக்குமளவும் அரசு கடன் வாங்கலாம். தனியார் இவ் வாட்களையும், வளங்களையும் பயன்படுத்த முன்வராதவரை அரசு கடன் வாங்கலாம். இருந்தாலும், அளவுக்குமீறி அரசு கடன் வாங்குவதைப்பற்றி எச்சரிக்கையுடன் இருத்தல் நலம்.

### அரசின் கடனும் பின் தங்கிய நாடுகளும்

உலகில் பெரும்பான்மையான நாடுகள் வளர்ச்சியுறாத (வளராத) அல்லது வளர்ச்சி குன்றிய நாடுகள். வளர்ச்சி குன்றிய நாடுகளை இக் காலத்தில் 'வளரும்' அல்லது 'வளர்ந்து வரும்' நாடுகள் என்றழைக்கிறார்கள். உலகிலுள்ள மக்களில் 67 சத வீதத்தினருக்கு உலக செல்வத்தில் அல்லது வருமானத்தில் 15 சத வீதமே சொந்தமாக இருக்கவும், 18 சத வீதத்தினருக்கு 67 சத வீத வருமானம் சொந்தமாக இருப்பதிலிருந்து இது தெளிவாகும். வறுமையில் வாடும் பெரும்பான்மை மக்களும் முன்னேற வேண்டுமானால் மூலதனம் வேண்டும். இம் மூலதனத்தின் கணிசமான பகுதியை வெளிநாடுகளிலிருந்தே பெறவேண்டும். (1) வளர்ச்சி குன்றிய நாடுகளில் உள்ள மக்களில் பெரும் பாலோரும் வறியவர்களாக இருப்பதால், அவர்கள் சேமித்து அரசுகளுக்கு வேண்டிய கடன் தொகைகளை அளிக்கும் நிலையில் இல்லை. இந் நாடுகள் அந்நிய செலாவணிகள் தட்டுப்பாட்டினால் அவதியுறுவதால், வெளிநாடுகளிலிருந்தே பெருமளவு கடன் தொகைகளைப் பெறவேண்டும். (2) பின் தங்கிய நாடுகளில் பண அங்காடிகள் நன்றாக வளர்ச்சி பெறவில்லை. கிராமங்களில்

[1] A.C. Pigou, 'A Study in Public Finance', 3rd (Revised) Edition, 1952, Macmillan & Co. Ltd., p. 35—36.

வாழும் பெரும்பான்மையான மக்கள் தாங்கள் சேமித்த தொகைகளை நிலம், நகைகள் ஆகியவற்றை வாங்குவதில் முடக்குகின்றார்கள். அரசுகள் வாங்கும் கடன்களின் பெரும்பகுதியும் பேங்குகளிட மிருந்தே பெறப்படுகின்றன. சிறு சேமிப்புகளின் மூலமே வளர்ச்சி பெறாத நாடுகளில், அரசுகள், வறியவர்களிட மிருந்தும் ஓரளவு கடன் தொகைகளைப் பெறமுடியும்.

நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குக் கடன்கள் வாங்குவதும் இன்றியமையாதது என்பதை வரி விதிப்பு விசாரணைக் குழுமம் ஒத்துக் கொண்டது. 'வளர்ச்சி நிதியத்தில் (development finance) கடன்கள் ஒரு முக்கிய அங்கம் வகிக்கின்றன என்பதை நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம். ஐந்தாண்டுத் திட்டத்திற்கு எவ்வாறு நிதியத்தைத் திரட்டுவது என்று நிகழ்ச்சி நிரலை வகுத்த திட்டக் குழுமமும் இவ் வுண்மையை ஒத்துக் கொண்டிருக்கிறது'[1].

## [பிற்சேர்க்கை]

### அரசின் கடனுக்கும் தனியார் கடனுக்கும் உள்ள வேறுபாடு

வரவுக்குமேல் செலவு போகும்பொழுது, அரசும் சரி, தனியாரும் சரி கடன் வாங்குகிறார்கள். ஆயினும், அரசின் கடனுக்கும், தனியார் கடனுக்கும் இடையில் பல வேறுபாடுகள் உள்ளன. அவை வருமாறு:

(அ) அரசுக்கு இறைமை (sovereign) இருக்கிறது. ஆகவே, அரசு தனியார்களைக் கட்டாயப்படுத்திக் கடன்களைப் பெற முடியும். மேலும், மக்களைக் குறைந்த வட்டி வீதங்களை ஏற்றுக் கொள்ளும்படி அரசினால் கட்டாயப்படுத்தவும் முடியும். ஆனால், தனியார்கள் இங்ஙனம் செய்யமுடியாது. அவர்கள் யாரையும் கட்டாயப்படுத்திக் கடன் பெறமுடியாது. கடன் அளிப்பதும் அல்லது கடன் அளிக்க மறுப்பதும் கடன்காரரின் விருப்பத்தைப் பொறுத்தது. வட்டி வீதங்கள், கடன்களின் தவணைகாலம், இவற்றை அறுதியிடுவதிலும் கடன்காரரின் கையே மேலோங்கி நிற்கும். ஆயினும், ஒன்றை நாம் மறந்துவிடக்கூடாது. அரசு, இந்த விஷயத்தைப் பொறுத்தமட்டில் தன் பரிபூரண அதிகாரத்தைப் பிரயோகிப்பதில்லை. ஏனெனில், இங்ஙனம் பிரயோகித்தால் அரசின் நாணயம் குறையும். போர்க் காலங்களில் அரசினால் கட்டாயக் கடன்களைப் பெறமுடியும்.

[1] Report of the Taxation Enquiry Commission, 1953-54, Vol. I, p. 153.

(ஆ) அரசினல் தான் வாங்கிய கடன்களை நிராகரிக்கவும் முடியும். ஒரு தனியார் தான் வாங்கிய கடன்களைத் திருப்பித் தர முடியாது என்று கூற இயலாது. ஏனெனில், அங்ஙனம் அவர் கூறினல் அவர் நீதிமன்றத்தில் நிறுத்தப்படுவார். நீதிமன்றமும் கடனைத் திருப்பித் தரும்படி தீர்ப்புக் கூறும். அரசு தான் வாங்கிய கடன்களைத் திருப்பித் தரமுடியாது என்று ஒரு சட்டத்தையே இயற்றலாம். அச் சட்டத்தை யாரும் எதிர்த்து வழக்காட முடியாது. ஆனலும், அரசு இங்ஙனம் செய்யாததற்குக் காரணம், உள்நாட்டிலும் சரி, வெளிநாட்டிலும் சரி, அதன் நாணயம் போய் விடும் என்பதே. மீண்டும் அரசு கடன் வாங்குவதில் பெரும் கஷ்டம் இருக்கும்.

(இ) அரசின் கடன் நிலையைப்பற்றி அனைவருக்கும் தெரியும். இதில் யாதொரு மூடுமந்திரமும் இல்லை. அரசு இதற்கு மிகுந்த செய்திப்பரப்பு (publicity) அளிக்கிறது. ஆனல், தனியார் ஒருவரின் நாணயத்தைப்பற்றித் திட்டவட்டமாக ஒருவருக்கும் ஒன்றும் தெரியாது. இதனல் அவரின் நாணயத்தைப் பற்றிப் பிறர் உயர்வாக எண்ணுகிருர்கள்.

(ஈ) தனியார் செலவைக் காட்டிலும், அரசின் செலவு குறைந்த நெகிழ்ச்சியுள்ளது. பல சமயங்களில் பணத்தைத் திரட்ட வேருெரு வழியும் இல்லாததால், அரசு கடன் வாங்குவது இன்றியமையாததாகிறது. தனியாரின் செலவு நெகிழ்ச்சி உடையதாக இருப்பதாலும், செலவை குறைத்துக் கொள்ளக் கூடுமாதலாலும், அவர் கடன் வாங்குவதை ஒத்திப் போட முடியும்.

(உ) தனியாரின் நாணயத்தைக் (credit) காட்டிலும் அரசின் நாணயம் மிக அதிகமாக இருப்பதால், குறைந்த வட்டி வீதங்களில் எளிதாக அரசினல் கடன் பெற முடிகிறது. அரசின் கடன் பத்திரங்களை யாதொரு தடங்கலும் இன்றி அங்காடியில் விற்கலாம். இதனல் எந்த நேரத்திலும் முதலீடு செய்த பணத்தை ஒருவர் திரும்பப் பெறமுடியும். ஆகவே, தனியார்களும், நிறுவனங்களும் அரசின் கடன் பத்திரங்களில் முதலீடு செய்ய விழைகின்றன. இங்ஙனம் தனியார்கள் கடன் பத்திரங்களை வெளியிட முடியாது. சில கம்பெனிகள் கடன் பத்திரங்களை வெளியிடுகின்றன.

(ஊ) அரசு தன்னிடமிருந்தே கடன் பெறமுடியும். (உ-ம்.) தானே நோட்டுகளை அச்சடித்து அரசு எடுத்துக் கொள்ளலாம். இம்மாதிரி தனியார்கள் செய்ய முடியாது. அவர்கள் நோட்டடித்தால் அது சட்டப்படி குற்றமாகும். ஆகவே, அவர்கள் பிறரிடமிருந்துதான் கடன் பெற முடியும்.

(எ) எவ்விதமான ஈட்டையும் வைக்காமல் அரசு கடன்களைப் பெற முடியும். அரசின் உத்தரவாதத்தை நம்பியும், வேறெந்த விதமான ஈடின்றியும் கூட மக்கள் அரசுக்குக் கடன் தருகிறார்கள். இங்ஙனம் தனியார்களிடையே நடப்பதில்லை. ஈடின்றி அவர்களால் பெருந்தொகைகளைக் கடன் வாங்க முடியாது.

(ஏ) அரசு உள்நாட்டில் கடன் வாங்குவதுடன் பிற நாடுகளிலும் கடன் வாங்கலாம். ஆனால், அரசின் உத்தரவாதமின்றித் தனியார்கள் பிற நாடுகளிலிருந்து கடன் வாங்குவது மிகவும் கடினம்.

(ஐ) சில சமயம் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்துவதற்காக அரசு கடன் வாங்குகிறது. அப்பொழுது அரசின் நோக்கம் பொருளாதாரத்தில் விரும்பத்தக்க மாறுதல்களைக் கொணர்வதே அல்லாது தன்னுடைய வருமானத்தைப் பெருக்குவதன்று. பணவீக்கக் காலத்தில் மக்களிடம் மிதமிஞ்சிய பணப் புழக்கம் இருக்கிறது. கடன் வாங்குவதன்மூலம் இப் பணப் புழக்கத்தை அரசு குறைக்கின்றது. இதேபோன்று அரசு கடன் வாங்குவதன் மூலம், நாட்டின் உற்பத்தியையும், பகிர்வையும் பாதிக்கக் கூடும். ஒரு தனியாரால் இவ்வாறு செய்ய முடியாது.

(ஒ) அரசு கடனாக வாங்கிய பணத்தை மக்களுடைய நலனுக்காகச் செலவழிக்கிறது. ஆனால், தனியார்கள் தங்கள் சொந்த நலனுக்காகவே கடனை வாங்குகிறார்களே அன்றிப் பிறருடைய நலனுக்காக அல்ல.

(ஓ) அரசு கடனின் பளு தனியார் கடனின் பளுவினின்றும் வேறுபட்டது. தனியார் ஒருவர் கடன் வாங்கினால் அசலைத் திருப்பித் தருவதற்கும், வட்டியைத் தருவதற்கும் ஏற்பாடு செய்கிறார். ஆகவே, தனியார் கடனின் பளு கடன் வாங்கியவர்மீதே இருக்கிறது. ஆனால், அரசின் கடன் பளு அரசின்மீது படிவதில்லை; மக்களின்மீதே படிகிறது. ஏனெனில், வட்டியைக் கொடுப்பதற்கும், அசலைத் திருப்பித் தருவதற்கும் அரசு வரிகளை விதிக்கிறது. இவற்றின் பளு மக்களின்மீதே படிகிறது.

(ஔ) அரசு நிரந்தரமான நிறுவனம். ஆகவே, அது நீண்டகாலக் கடன்களைப் பெறுவதோடன்றி, காலவரையின்றியும் கடன் பெறலாம். ஆனால், மக்கள் வாழ்நாள் குறுகியது. ஆகவே, அவர்களால் நெடுங்காலக் கடன்களைப் பெற முடியாது.

சுருங்கக் கூறின், இவைதாம் தனியார் கடனுக்கும், அரசின் கடனுக்கும் உள்ள வேறுபாடுகள். இவ்வேறுபாடுகளினால்

அரசின் கடன்களைப்பற்றியப் பிரச்சினைகளைத் தனியே ஆய்வதும் அவசியம் ஆகிறது. இக் காரணங்களினால், அரசின் கடன் அரசு நிதியவியலின் ஒரு தனித் துறையாக விளங்குகிறது.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Dalton, 'Principles of Puplic Finance', Eleventh Impression, George Routledge and Sons Ltd., London, 1941, Chapter 21.
2. Van Philips, 'Public Finance in Less Developed Economics', Chapter 7.
3. Report of the Taxation Enquiry Commission, 1953—54, Volume I, Chapter 8.
4. Dr. K. K. Sharma, 'Public Finance', Chapter 19.
5. Philip E. Taylor, 'The Economics of Public Finance,' Chapter 8.
6. Richard A. Musgrave, 'The Theory of Public Finance', International Student Edition, 1959, Mc. Graw—Hill Book Company, Newyork, Chapter 23.

# 34. அரசு கடன்களின் வகைகள்

**கட்டாயக் கடன்கள்**

அரசு கடன்களின் வகை ஒரேபடியாய் இல்லை. கட்டாயக் கடன், கட்டாயமில்லாத கடன், உள்நாட்டுக் கடன், வெளிநாட்டுக் கடன், ஆக்கம் ஈனும் கடன் (productive debt) அல்லது மறு ஆக்கம் ஈனும் கடன் (reproductive debt), ஆக்கம் ஈனுக் கடன் (unproductive debt), ஈடுள்ள கடன் (secured debt), குறுங்கால கடன் (floating debt), ஆண்டுக் கடன் (annuity) எனப் பல சொற்றொடர்கள் நிதியியல் நூல்களின் காணப்படுகின்றன. முற்காலத்தில் அரசர்கள் கட்டாயக் கடன் முறையைக் கடைப்பிடித்தார்கள். முதலாம் சார்லஸ் காலம்வரையில் இங்கிலாந்திலும், மெஸ்ஸரின் (mazzarin) காலம்வரையில் ஃபிரான்ஸிலும், இம் முறை கையாளப்பட்டது. இம் முறையை ஸ்பெயின், ஆஸ்திரியா போன்ற நாடுகள் கூடக் கையாண்டன. ஆயினும், செம்மையாக ஆட்சி நடத்தப்படும் நாட்டிற்குக் கட்டாயக் கடன் முறை இழுக்கைத் தரும். 'கட்டாயக் கடன், ஒரு வரியே அன்றிக் கடனன்று.' இதை வரியிலிருந்து கிடைக்கும் வருமானத்திற்கு அச்சாரமாகக் (advance payment of tax revenue) கொள்ளலாம். இக் காலத்தில் கட்டாயக் கடன் வழக்கில் இல்லை. கட்டாயக் கடனுல் மக்களுக்கு அநீதியும், அசௌகரியமும் இழைக்கப்படுகின்றன. இக் காலத்தில் உலோகமாக மாற்றமுடியாத காகிதப் பணத்தைக் கட்டாயக் கடனுக்கு ஒப்பிடலாம்.

கட்டாயமில்லாத கடன்கள் வரவேற்கப்பட வேண்டுபவை. இவை வாணிபக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டவை. பலரும் தத்தம் ஆற்றலுக்கு ஏற்பவும், விருப்பத்திற்கு ஏற்பவும், கூடுதலாகவோ அல்லது குறைவாகவோ கடன் பத்திரங்களை வாங்கலாம் என்பது இம் முறையிலுள்ள முக்கிய அனுகூலம். இவ்வனுகூலம் வரிகளை விதிப்பதில் இல்லை. போதிய ஈடு கொடுத்தால் எந்த நாடும் வேண்டிய அளவு தொகையைக் கடனுகப் பெற இயலும்.

**உள்நாட்டுக் கடனும், வெளிநாட்டுக் கடனும்**

அரசின் கடன் பத்திரங்கள் அனைத்தையும் உள்நாட்டினர்களே வாங்கி இருந்தால், அவை உள்நாட்டுக் கடன்கள் என்றும், அரசின் கடன் பத்திரங்கள் அனைத்தையும் வெளிநாட்டினர்களே வாங்கி இருந்தால், அவை வெளிநாட்டுக் கடன்கள் என்றும் கூறப்படும். சில கடன் பத்திரங்களை மட்டும் வெளிநாடுகள் வாங்கவும் கூடும். உள்நாட்டுக் கடன் கட்டாயமாகவோ அல்லது கட்டாயம் இன்றியோ இருக்கலாம். படையை அனுப்பிப் பிற நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டால் ஒழிய. அல்லது வேறு வன்முறையைக் கையாண்டால் ஒழிய. வெளிநாட்டுக் கடன் கட்டாயமானதாக இருக்க இயலாது. உள்நாட்டுக் கடன், கடன் வாங்கும் சமுதாயத்தினிடையே. ஒரு பகுதியினரிடமிருந்து இன்னொரு பகுதியினருக்குச் செல்வத்தை மாற்றுகிறது. உள்நாட்டுக் கடனைப் பொறுத்தவரை, கடன் அளிக்கும் சமுதாயமும், கடன் வாங்கும் சமுதாயமும் ஒன்றேயாகும். வெளிநாட்டிலிருந்து கடனை வாங்கும் பொழுது, கடன் அளிப்போர், கடன் வாங்குவோருக்குச் செல்வத்தை மாற்றவேண்டி இருக்கிறது. கடனைத் திருப்பி அளிக்கும்பொழுதும், கடன் கொண்டார் கடன் கொடுத்தாருக்குச் செல்வத்தை மாற்றவேண்டியிருக்கிறது. வெளிநாட்டினர் வைத்திருக்கும் கடன் பத்திரங்களை வாங்குவதன்மூலம், வெளிநாட்டுக் கடனைப் படிப்படியாக உள்நாட்டுக் கடனாக மாற்றிவிடலாம். அதேபோல உள்நாட்டினர் வைத்திருக்கும் கடன் பத்திரங்களை வெளிநாட்டினர் வாங்குவதன் மூலம் உள்நாட்டுக் கடனை வெளிநாட்டுக் கடனாக மாற்றிவிடலாம்.

**ஆக்கம் ஈனும் கடன்களும், ஆக்கம் ஈனாக் கடன்களும் (Productive and Unproductive Debts).**

உற்பத்திக்கான கடன்களுக்குச் சமமாகவோ அல்லது மறு உற்பத்திக்கான கடன்களுக்குச் சமமாகவோ அல்லது மேலாகவோ, ஆஸ்திகள் இருக்க வேண்டும். அக் கடன்களுக்கு ஈடாக ஆஸ்திகள் இல்லையெனில், அவை பயனில் கடன்களாகும். அரசின் கடனுக்கு ஈடாக அரசின் ஆஸ்திகள் இருக்குமானால், அவை ஒரு கம்பெனியின் மூலதனத்துக்கு ஒப்பாகும். அரசுக்குக் கடன் அளித்தவர்கள், டிபஞ்சர் (debenture) வைத்திருப்பவர்களுக்கு ஒப்பாவார்கள். அரசின் உடைமைகள் அல்லது தொழில் முனைவுகளிலிருந்து கிடைக்கும் வருமானத்திலிருந்து, மறு உற்பத்திக் கடன்கள்மீது செலுத்த வேண்டிய வட்டி கட்டப்படும். பயனில் கடன்மீதான வட்டியை, வரிகளை விதித்து அவற்றிலிருந்து கிடைக்கும் வருமானத்திலிருந்தே கொடுக்க

வேண்டும். பயனில் கடனுக்குத் தலையாய காரணம் போர். பயனில் கடனுக்குப் பிறிதொரு காரணம், வரவு செலவு திட்டத்தில் துண்டு விழுவதே ஆகும்.

### நிலையாக்கிய கடனும், நிலையாக்காத (குறுங்காலக்) கடனும் (Funded and Floating Debt)

நிலையாக்கிய அல்லது தொகுக்கப்பட்ட (consolidated) கடன்களுக்கும், நிலையாக்காத அல்லது தொகுக்கப்படாத கடன்களுக்கும் இடையே தெளிவான வேறுபாடு கற்பிப்பது கடினம். ஆதியில் இவற்றிற்கு இடையே தெளிவான வேறுபாடு இருந்தது. தனியார்களைப் போன்று அரசுகளும், தங்கள் சொந்த நாணயத்தின் பேரிலேயே கடன் வாங்குவது குறுங்காலக் (நிலையாக்காத) கடன் என்றும், கடனை அடைப்பதற்காகக் குறிப்பிட்ட வருமானங்களை ஒதுக்குவதும் அல்லது அடமானமாக வைப்பதும் நிலையாக்கிய கடன் என்றும் கூறப்படுகிறது. ஆனால், இப்பொழுது இச் சொற்றொடர்கள் இந்தப் பொருளில் வழங்கப்படவில்லை. நிலையாக்கிய கடன்களுக்கும், நிலையாக்காத கடன்களுக்கும் இடையே, பின்வருமாறு வேறுபாடு கற்பிக்கலாம்.

1. கடன் நோக்கம்: நிலையாக்காத கடன்கள் சாதாரணமாக அப்போதைய முடைகளுக்காக வாங்கப்படுகின்றன. நிலையாக்கிய கடன்கள் அரசின் நிரந்தரத் தேவைகளுக்காக வாங்கப் படுகின்றன.

2. கடனின் தொடர்ச்சி: நிலையாக்காத கடன்கள் தாற்காலிகமானவையாகும். நிலையாக்கிய கடன்கள் நீடித்திருப்பவையாகும்.

3. கடனை அடைப்பதற்கு வேண்டிய சட்ட நிபந்தனைகள் (legal conditions of repayment): கடனளித்தவர்கள் கேட்டபொழுதோ, அல்லது மிகக் குறுகிய காலத்திலோ, நிலையாக்காத கடன்களைத் திருப்பித் தர வேண்டும். நிலையாக்கிய கடன்களைப் பற்றியவரை கடன் அளித்தவருக்கு அசலின்மீது ஓரளவு கட்டுப்பாடு இருக்கிறது. குறிப்பிட்ட ஒரு திட்டத்தின்படி கடனை வாங்கிய அரசு, கடனைத் திருப்பித் தர வேண்டும்; அல்லது அசலை எப்பொழுது திருப்பித் தருவது என்பதைப் பற்றி யாதோர் உடன்பாடும் செய்திருக்கக் கூடாது. இதுதான் நிலையாக்கிய கடனின் முக்கியக் கூறுகும்.

இவ் விருவகைக் கடன்களுக்கும் இடையே வேறுபாடு கற்பிப்பது கடினமாக இருப்பதற்குக் காரணம், இவ் வேறுபாடு எதேச்சையாகச் செய்யப்பட்டிருப்பதுதான். நிலையாக்கிய

கடனுக்கும், நிலையாக்காத கடனுக்கும் உள்ள வேறுபாடு நாட்டிற்கு நாடு மாறுபடுகிறது; ஒரே நாட்டிலேயே இவ் வேறுபாடு காலம் செல்லச் செல்ல மாறுபடுகிறது. இவ்வாறு மாறுபடுவதற்குக் காரணம், அரசின் பணி முதல்வர் அல்லது புள்ளிவிவரம் சேகரிப் போர் இவர்களுடைய (நிலையாக்கிய கடன், நிலையாக்காத கடன் பற்றிய) கருத்து மாறுபடுவதேயாகும். நிலையாக்காத கடன் என்றால், அது தாற்காலிகமானது என்று ஒருவர் கருதுகிறார். மூன்று, ஐந்து அல்லது பத்தாண்டுகளுக்குள் கடனைத் திருப் பித் தர வேண்டுமாயின், அதை ஒரு பணி முதல்வர் தாற்காலிக மானது என்று கூறலாம். இன்னொரு பணி முதல்வர் ஆறு திங்களுக்குக் குறைந்த தவணையுடைய கடனையே நிலையாக்காத கடன் எனலாம். எந்த நிதிய ஆண்டில் கடன் வாங்கப்பட்டதோ, அதற்கு அடுத்த ஆண்டிலும் தொடர்ந்து கடன் தீர்க்கப்படாமல் இருக்குமானால், அதை நிலையாக்காத கடன் என்று கூறுவது பொருந்தாது. எனினும், இதுபற்றிய யாதொரு மரபும் வழக்கில் இல்லை.

### நிரந்தரக் கடன்கள் (Perpetual Debts)

ஐரோப்பிய அரசுகள் காலவரையறை இல்லாத அல்லது நிரந்தரக் கடன்கள் என்ற ஒருவகை கடன்களைப் பல முறையும் பயன்படுத்தி உள்ளன. இதுவரை இக் கடன் முறை அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கையாளப்படவில்லை. ஃபிரான்ஸிலும், பிரிட்டனிலும் இம் முறை வழக்கில் உள்ளது. ஒரு நிரந்தரக் கடனை வாங்கும் பொழுது, அரசு ஆண்டுதோறும் வட்டி தருவதாக ஒரு உறுதி கூறுகிறதே தவிர, எப்போது கடனைத் திருப்பித் தரும் என்று திட்டவட்டமாகக் கூறுவதில்லை. கடன் கொடுத்தவருக்குப் பணமுடை ஏற்படின், அவர் கடன் பத்திரத்தை விற்று விடலாம். அவருக்குக் கிடைக்கும் தொகைப் பங்கு மார்க்கட்டில் அவ்வப்பொழுது நிலவும், விலையைப் பொறுத்திருக்கும். அரசின் நிதிய நிலைமை நன்றாக இருந்தால், கடன் பத்திரங்களை முகப்பு விலையில் மீட்கலாம் (redeem at par) அல்லது வாங்கலாம். வெளிச் சந்தையில் கடன் பத்திரங்களை வாங்குவதன் மூலமும் அரசு நிந்தரக் கடன்களை ஒழித்துக் கட்டலாம். நிரந்தரக் கடன்களைத் திருப்பித் தருவதற்குக் கெடு நாள் (definite maturity date) என்று ஒன்றும் கிடையாது.

நிரந்தரக் கடனுக்குச் சிறந்த உதாரணங்கள், பிரிட்டிஷ் கான்ஸல்களும் (British Consuls), ஃபிரஞ்சு ரென்டெஸ்ஸும் (Rentes) ஆகும். *18, 19*ஆம் நூற்றாண்டுகளில் பிரிட்டனும், ஃபிரான்ஸும் ஒன்றோடொன்று போரிட்டன; அது போழ்து பெரும்

கடன்களை வாங்கின. வரிகளை உயர்த்துவதன் மூலம் இக் கடன்களைத் திருப்பித் தர முடியாமையால், இவை நிரந்தரமாயின. முதல் உலகப் போர் மூண்டகாலை, பிரிட்டனும், ஃபிரான்ஸும் தங்கள் பழைய கடன்களில் பெரும்பகுதியைத் திருப்பித் தர வில்லை. ஐரோப்பாவில் நிரந்தரக் கடன்கள் ஒரு வசைச் சொல்லாக (byword) வழங்குகிறது. போருக்காக வாங்கிய கடன்கள் தலை முறை தலைமுறையாகத் தொடர்ந்து நீடிக்கின்றன.

### நிரந்தரக் கடன்களுக்கான வாதங்கள்

'தாங்கள் எப்பொழுது திருப்பிக் கொடுப்போம் என்று நாள் குறிப்பிடாது, கம்பெனிகள் பங்குகளை வெளியிடுவது போன்று, அரசும் ஏன் வெளியிடக் கூடாது?' எனப் பலர், வினவுகின்றனர். அரசு ஏட்டளவிலாயினும் நிரந்தரமானதல்லவா? வருமானம் வரக்கூடிய அரசு தொழில் முனைவுகளில் நிரந்தர முதலீடு செய் தால், நிரந்தரக் கடன்கள் வரவேற்கக் கூடியனவே. ஆனால், போருக்காகவோ அல்லது நிரந்தரமாக நேரிடையான வருமானத் தைத் தராத சேவைகளுக்காகவோ, பணத்தை வாரிச் செலவிடு வதற்காக, நிரந்தரக் கடன்கள் வாங்குவதை ஏற்க இயலாது. மேலும், தேய்மானத்திற்காகக் (depreciation) கம்பெனிகள் ஓரளவு நிதிகளை ஒதுக்குகின்றன. தேய்மான நிதி சேரச் சேர, பெருந் தொகை திரண்டு, பழைய முதலீட்டிற்குப் பதிலாகப் புதிய முதலீடு செய்வதற்கு வசதியாக இருக்கிறது. வட்டி மட்டுமே தர வேண்டும் என்ற காரணத்திற்காகவும் நிரந்தரக் கடன்களைச் சிலர் ஆதரிக் கிறார்கள். மேலும், மக்கள் தொகையும், செல்வமும், விலைகளும் ஏறுந்தோறும், ஆண்டுதோறும் கொடுக்கவேண்டிய வட்டித் தொகையின் பளுவும் குறையும் என்று கூறப்படுகிறது. நிரந்தரக் கடனைத் திருப்பித் தர வேண்டிய அவசியம் இன்மையால், கடனைத் திருப்பித் தரத் தவறி விட்டது என்ற பழிச்சொல்லுக்கு அரசு இலக்காவதில்லை. வசதியிருந்தால் அரசு கடனைத் திருப்பித் தரலாம். கடன்களுக்குக் காலவரையறை இல்லாதிருந்தால், கடன் பத்திரங்களின் விலை குறையும்பொழுது அவற்றைக் குறைந்த வட்டி வீதங்களையுடைய கடன் பத்திரங்களாக மாற்றலாம். பணத்தைச் செலவழிக்காது வீட்டிலேயே சேர்த்து வைக்கும் குடியானவர்கள் முதலானோருக்கு, நிரந்தரக் கடன் ஒரு முதலீட்டு வழியைக் காட்டுகிறது எனப் பிரஞ்சுக்காரர்கள் வாதிடுகிறார்கள்.

### நிரந்தரக் கடன்களுக்கு எதிர்வாதங்கள்

மேற்கூறிய காரணங்கள் அனைத்தும் நிரந்தரக் கடன்களுக் காகப் பரிந்து சொன்ன நொண்டிச் சாக்குகள் (excuses) அல்லாது, உண்மைக் காரணங்கள் ஆகா. கடன் பளுவைக் குறைக்க

அரசு விரும்பினால், அதற்கான சிறந்த முறையாவது, கடன் வாங்குவதைத் தவிர்ப்பதே அல்லாது, நிரந்தரமாகக் கடனில் அழுந்துவதன்று. கடன்கள் நீடிக்கும் தோறும் வட்டியும் நீடிக்கும். வட்டிக்குத் தூக்கம் இல்லை என்பது பழமொழி. காலம் செல்லச் செல்ல அசலைத் திருப்பித் தருவதும் மிகக் கடினமாகும். ஒரு நூற்றாண்டு காலத்திற்கு மேற்பட்ட கடனைத் திருப்பித் தருவதற்கு, வரி செலுத்துவோர்கள் மிக உற்சாகம் காட்டுவார்கள் என எதிர்பார்க்க முடியாது. நெடுங்காலத்திற்குக் கடனைத் திருப்பித் தராது ஒத்திவைக்குந் தோறும், அரசுகள் மேலும் மேலும் கடனில் அழுந்துகின்றன. அதனால், அரசுக்குத் தங்கள் கடன்களை நிராகரிப்பதற்கான தூண்டுகோலும் உதயமாகிறது.

முதலீடு செய்வதற்கு வழிசெய்யும் வகையில் அரசுகள் நிரந்தரக் கடன் என்ற தளையைக் கட்டிக்கொள்ள வேண்டும் என்ற வாதம் பொருத்தமானதாக இல்லை. ஃபிரான்ஸின் நிரந்தரக் கடன், அந் நாட்டில் தனியார் தொழில் முனைவையும், பேங்க் வளர்ச்சியையும் தடை செய்தது. இங்கிலாந்து பேங்க் தோன்றிய பொழுது உடனிலையாக, இங்கிலாந்தில் காலவரையறை இல்லாத கடன்கள் தோன்றின. இது பேங்க் வளர்ச்சிக்கும் அடிகோலியது என்றாலும், 19ஆம் நூற்றாண்டில் கடனை அடைத்திருந்தால் பேங்க் முறைக்குச் சாவுமணி அடித்திருக்கும் என்று கூறுவதற்கில்லை. தனியார் தொழில் முனைவு வளர்ச்சிக்குப் பேங்குகளிடம் மேலும் மேலும் கடன் வாங்கி இருப்பார்கள். தொழில் புரட்சிக்கு வேண்டிய நிதியத்தைத் திரட்டுவதற்கு நிதிய (financial) மார்க்கெட்டுகளும் தோன்றி இருக்கக்கூடும்.

பொருளியல் புலவர்கள் ஒரு நாட்டின் தேசிய வருமானம் வளர்வதற்குச் சில யோசனைகளைக் கூறுகிறார்கள். இவ் யோசனைகளிலிருந்து, ஆண்டுகள் ஏற ஏறக் கடன் பளுவை அதிகரிக்க வேண்டுமே அன்றிக் குறைக்கக் கூடாது என்று தெரிகிறது. வட்டிக் கட்டணங்களைக் காட்டிலும் நாட்டின் வருமானம் விரைவாக ஏறினால், கடன் பளு குறைக்கப்படலாம் என்றும், கடன்தொகை ஏறினாலும் பாதகம் இல்லை என்றும் வாதம் செய்யப்படுகிறது. இவ் வாதம் கிளப்பும் பிரச்சினைகளை விரிவாகப் பரிசீலனை செய்வதற்கு இந் நூல் இடம் தராது. ஆயினும், எல்லையில்லாது வட்டித் தொகைகளைக் கொடுப்பதற்கு, வரி செலுத்துவோரிடமிருந்து நிரந்தரமாகப் பணத்தைப் (வரியாக) பறிக்க வேண்டும் என்பது நல்லதெனத் தோன்றவில்லை.

டிபெஞ்சர் (debenture) வைத்திருப்பவர்கள், கடன் பத்திரங்களிலிருந்து கிடைக்கும் வட்டி வருமானத்தைக் கொண்டே

வாழ்க்கை நடத்தும் ஒரு வருக்கத்தினராக இருப்பதால், நடை முறைத் தொழில்களில் அவர்களுக்குப் போதிய அக்கறை இல்லை. உழைக்காமல் வாழ அவர்களுக்கு உறுதி அளிக்கப்படுகிறது. இவ் வருக்கத்தினர் சோம்பலின்றி இருக்க வேண்டுமானால், அரசுக்கு ஒரே ஒரு வழிதான் உள்ளது. அவ் வழி இவர்களுக்குக் கடனைத் திருப்பித் தருவதேயாகும். வேறொரு காரணத்திற்காகவும் கடனைத் திருப்பித் தருவது நன்மை பயக்கும். கடந்த காலம், நிகழ் காலத்தின்மீது அதிக உரிமை கொண்டாடினால், தொழில்களை மேன்மேலும் உற்சாகமாக நடத்துவதற்கு வேண்டிய திராணியும், நம்பிக்கையும் மக்களுக்கு நீடித்திரா. கொடுக்க வேண்டிய தொகையைப் பற்றிக்கூட நாம் அவ்வளவாகக் கவலைப்பட வேண்டியதில்லை. மற்றும் நிரந்தரமாகக் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதொன்றே உழைப்பைத் தளர்நடை போடும்படிச் செய்வதற்குப் போதுமானதாகும். இக் கடனைத் திருப்பிக் கொடுப்பதே மன நிறைவும், நம்பிக்கையும் வருவதற்கு முதற்படியாகும்.

எவ்வளவு விரைவில் இக் கடன்கள் அடைக்கப்படுகின்றனவோ, அவ்வளவு விரைவில் வரிகளைக் குறைக்கக் கூடும் அல்லது விரும்பத்தக்க வழிகளில் அரசின் செலவை அதிகரிக்கக் கூடும். மேலும், கடன் வாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டாலும், கடனில்லாத ஓர் அரசு அல்லது மிகக் குறைவான கடனுள்ள ஓர் அரசு கடன் தொகைகளை மிகச் சாதகமான நிபந்தனைகளின் பேரில் பெறுவது சாத்தியமாகும். கடந்த காலத்திய கடன் தொல்லைகள் குறைவாய் இருந்தால், ஓர் அரசு, எதிர்காலத்தில், கடன் பிரச்சினைகளைச் சுளுவாகச் சமாளிக்கக் கூடும்.

### ஆண்டுத்தொகைகள் (Annuities)

ஆண்டுத்தொகை என்பது ஐரோப்பாவில் மிகவும் பரவலாக இருந்த ஒரு நீண்ட காலக் கடன் வகையாகும். இதன்படி குறிப்பிட்ட காலத்திற்குக் குறிப்பிட்ட வருமானத்தை ஆண்டு தோறும் அளிக்க அரசு ஒப்புக் கொள்கிறது. ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு ஒரு தொகை கொடுக்கப்பட்டால், இது குறிப்பிட்ட கால ஆண்டுத்தொகை (term annuity) என்றும், காலவரையறை இல்லாது கொடுக்கப்படுமாயின் நிரந்தரக் கடன் என்றும் பெயர் பெறும். இவ் வாண்டுத்தொகை கடன் அளித்தவரின் ஆயுட் காலம் முழுதுக்கும் கொடுக்கப்படலாம். ஒத்திவைக்கப்பட்ட ஆண்டுத்தொகை (deferred or reversional annuity) என்பது குறிப்பிட்ட ஆண்டுகள் கழித்தோ அல்லது ஒருவரின் இறப்புக்குப் பின்போதான் கொடுக்கப்படும். ஆண்டுத்தொகைகளை முதலீடு

களாக விற்பதன்மூலம், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஆயுள் காப்புறுதிக் கம்பெனிகள் (Life Insurance Companies), இம் முறையை மக்களிடையே பரப்பியிருக்கின்றன.

**நெடுங்காலக் கடன்களின் பயன்கள்**

போர்ச்செலவை அல்லது பொதுமக்களுக்கான பணிகளின் செலவை, நெடுங்காலத்திற்கு அரசுகள் நீடிப்பது, நெடுங்காலக் கடன்களினுல் ஏற்படும் பயனுகும். நெடுங்காலக் கடன்கள் இன்றேல், பெருஞ்செலவு முழுதையும் கடுமையான வரிகளை விதித்தே சமாளிக்க வேண்டியிருக்கும். இக் கடன்களினுல் அரசுக்கு உடனடியாகப் பணம் கிடைக்கிறது. நிரம்பச் செலவு பிடிக்கும் ஒரு திட்டத்தை வரிகளிலிருந்து கிடைக்கும் வருமானத்தைக் கொண்டே நிறைவேற்ற வேண்டும் என்ருல், அத் திட்டம் பூர்த்தியாகும் வரை வரிகளையும் நீட்டிக்கவேண்டும். அரசின் வருமானம் போதிய அளவு அதிகரிக்குமானுல், நெடுங் காலக் கடன்களை அவற்றின் கெடு முடிவதற்குள் கொடுத்து விடலாம். விரைவில் நெடுங்காலக் கடன்களைத் திருப்பித் தர முடியாவிடில், அவற்றைக் கெடு முடியும்வரை, தரவேண்டிய தில்லை. போர், வாணிப மந்தம், இயற்கை விபத்துகள் முதலானவை நேரிடும் பொழுது, அரசு குறுங்காலக் கடன் அல்லது இடைக்காலக் கடன் மூலமாக, வேண்டும் தொகைகளைக் கடனுகப் பெறலாம். இதனுல் வரி முறைகளை உடனே திருத்தி அமைக்க வேண்டிய அவசியம் இல்லாமல் போகிறது; குறுங்காலக் கடன்களையும், இடைக்காலக் கடன்களையும் நெடுங்காலக் கடன்களாக மாற்றும் பொழுது, அரசு வரிகளைத் திருத்தி அமைத்துக் கொள்ளலாம்.

நெடுங்காலக் கடனின் ஒரு பெரிய தீமை, வட்டி வீதம் நெடுங் காலத்திற்குக் கொடுக்கப்படுவதாகும். கெடு நீடிக்க நீடிக்க வட்டி செலுத்த வேண்டிய காலத்தின் அளவும் நீடிக்கிறது. வட்டி 4 சத வீதம் என்ருல், 25 ஆண்டுகளில் வட்டி, முதலுக்கு நிகராகி விடுகிறது. 25 ஆண்டு காலத்தில் 4 சதவீதத்தில் கடன் வாங்கினுல், முதலில் கடனுக வாங்கிய ஒவ்வோர் உருபாவுக்கும் பதிலாக இரண்டு உருபா தர வேண்டியிருக்கிறது. கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய கெடு மிக எட்டியிருந்தால் அரசும், வரி செலுத்துவோரும், அதைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாது, மேன் மேலும் கடன் வாங்கலாம். நெடுங்காலக் கடன்களை வாங்க வாய்ப்பு இருப்பதால், அரசு, அவசியமான காலத்திற்கு மேலும் கடன்களைத் திருப்பிக் கொடுப்பதை ஒத்தி வைக்கிறது. இதனுல் நிரந்தரமாக வட்டித் தொகையைக் கொடுக்கும் பளு, வரி

செலுத்துவோர்மீது படிகிறது. கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய தவணை நாள் வந்ததும் கடன் எதற்காக வாங்கப்பட்டது என்பதே மறந்து போகலாம். இதனால் கடன் நிரந்தரமாகலாம்; அல்லது சில வேளைகளில் நிராகரிக்கப்படலாம் (repudiated). எவ்வளவு விரைவில் உபரிநிதி சேர்கிறதோ, அவ்வளவு விரைவில் கடன்களைத் திருப்பிக் கொடுப்பதுதான் அனைவருக்கும் நல்லது. கடன் பத்திரங்களைக் குறிப்பிட்ட ஒரு காலத்திற்குமேல் திரும்ப வாங்கலாம் (மீட்கலாம், redeemed) என்பதன்மூலம், நெடுங் காலக் கடன்களுக்கான எதிர்வாதங்களை ஓரளவு சமாளிக்கலாம்.

**விலையாக்கக்கூடிய கடன்களும், விலையாக்க முடியாத கடன்களும் (Marketable and Non-Marketable Loans)**

விலையாக்கக்கூடிய கடன்களை அங்காடியில் விற்கலாம்; வாங்கலாம். கடன்களின் பெரும்பகுதியும் விலையாக்கக் கூடியவைதான். விலையாக்க முடியாத கடன்களை அங்காடியில் விற்கவும் முடியாது, வாங்கவும் முடியாது. இக் கடன்களை அரசுக்குத் தான் திருப்பிக் கொடுக்கலாம். விலையாக்க முடியாத கடன் பத்திரங்களை வெளியிடுவதன் நோக்கம், அங்காடியில் கடன் பத்திரங்களின் விலைகள் நிலைபேறாக இருக்கும்படி பார்த்துக் கொள்வதே ஆகும்.

**வட்டியுள்ள கடனும், வட்டியில்லாக் கடனும் (Interest - bearing and Non-Interest-bearing Loans)**

அரசு தான் வாங்கிய கடன்களுக்கு ஒரு குறிப்பிட்ட வட்டி விகிதத்தைத் தருகிறது. இவைதாம் வட்டியுள்ள கடன்கள். அனைத்து அரசுகளும் இவ்வகைக் கடன்களையே வாங்குகின்றன. வட்டியில்லாக் கடன்களுக்கு மக்களிடம் செல்வாக்கு இல்லாததால், அவை வழக்கில் இல்லை.

**மொத்தக் கடனும், நிகரக் கடனும் (Gross and Net Debt)**

ஒரு குறிப்பிட்ட தறுவாயில் ஓர் அரசு கொடுக்க வேண்டிய கடன் அனைத்தும் மொத்தக் கடன் எனப்படும். கடனைத் திருப்பித் தருவதற்காக வைத்திருக்கும் கழிவு நிதி (sinking fund) அல்லது ஏனைய ஆஸ்திகளை மொத்தக் கடனிலிருந்து கழித்தால், நிகரக் கடன் கிடைக்கும்.

**மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்**

1. Philip E. Taylor, 'The Economics of Public Finance,' 3rd Edition, pp. 178—193.
2. G. Findlay Shirras, 'The Science of Public Finance', pp. 474—477.
3. Ursula K. Hicks, 'Public Finance', 2nd Edition, Reprint, 1956, pp. 312—315.

# 35. அரசு கடனின் பளு
## (The Burden of Public Debts)

**தேசியக் கடனின் பளு**

அதிகரித்துக் கொண்டுவரும் அரசின் கடனால் அபாயம் ஒன்று மில்லை என்றும், உண்மையில் அது ஒரு பளுவே அல்ல என்றும், கடன் வாங்கிய தொகையைக் கொண்டு வாங்கிய ஆஸ்திகளைத் தான் கடன் குறிக்கிறது என்றும், அரசின் கடனும், அரசின் ஆஸ்தி களும் சம அளவில் ஏறும்வரை, நிகரப் பளு (net burden) இல்லை என்றும் வாதிக்கப்படுகிறது. சில ஆசிரியர்கள் ஒரு நாட்டின் மொத்தக் கடன் பளுவே முக்கியமானது என்றும், தேசிய அரசின் கடன் பளு முக்கியமானது அன்று என்றும் வாதிக் கின்றனர். ஆகையால், தனியார்களின் கடன் குறையும் அளவிற்கு அரசின் கடன் ஏறுமானல் கடன் பளுவில் நிகர ஏற்றமில்லை என்று அவர்கள் கூறுகின்றனர். அரசின் செலவுக்கான வாதங்கள் பலவும் சில வேளைகளில் மெய்ப்பிக்கப்பட்டாலும், அவற்றினல் ஏற்படும் கடன் பளுவைப் புறக்கணிப்பது தவருனது. இவ் வாதம் தவருன உவமைகளை அடிப்படையாகக் கொண்டது. இவற்றிற்குச் சரியான ஆதாரம் இல்லை.

அரசு கடனும், வாணிபக் கடனும் ஏறக்குறைய ஒரே மாதிரி யானவை என்று கூறப்படுகிறது. அரசின் முதலீடு அதிகரித்துக் கொண்டு வருகிறது. இம் முதலீட்டுக்குச் சமமாக அரசின் கடனைக் கருதினல் இக் கருத்து ஏற்புடையதே. ஆக்கம் ஈனும் முதலீடு (productive investment) என்ற சொற்றொடருக்கு ஒரு குறுகிய பொருள் கொண்டால் இவ் வுவமை பொருந்தும். ஆனல், அரசு அதிகம் செலவழிக்கவேண்டும் என வாதிடுபவர்கள், உற்பத் தியைப் பெருக்கும் முதலீடுகள் என்ற தலைப்பில், வீடு கட்டு வதற்கு உதவிக் கொடை (subsidy) கொடுப்பதையும், நாட்டின் வளம் குன்ருதவாறு பேணும் திட்டங்களையும், கல்வி, சுகாதாரம் பற்றிய திட்டங்களையும் சேர்க்கின்றனர். இவை சரியாக நிருவகிக்

கப்படுமானால், சிலரின் அல்லது அனைத்து மக்களின் நலனையும் அதிகரித்துப் பயன் காணலாம். திருப்தியை அக அலகில் மதிப்பிட்டால் (measured in psychological units of satisfaction) இவை தேசீய வருமானத்தை அதிகரிக்கின்றன எனவும் கூறலாம். சில வேளைகளில் இவை உருபாக் கணக்கில்கூடத் தேசீய வருமானத்தை உயர்த்தலாம். ஆனால், அவற்றிலிருந்து நேரிடையாகக் கிடைக்கும் வருமானம் அதிகரிப்பதில்லை. அவற்றுக்காக வாங்கிய கடன்களின்மீது செலுத்தப்படும் வட்டியைப் பொதுவாக வரிகளைக் கொண்டே சரிக்கட்டவேண்டும். இங்குதான் கடன் பளுப் புலனாகிறது. இப்பொழுது சாதாரண வாணிபக் கடனுக்கும், அரசின் கடனுக்கும் உள்ள ஒப்புமை காணப்படுவதில்லை. இதிலிருந்து தனியார் கடன் அதிகரித்தால், அதனால் இன்றியமையாத நன்மை விளையும் என்றோ அல்லது அது விரும்பத்தக்கது என்றோ கூறுவதாகக் கொள்ளக் கூடாது. ஏனெனில், தனியார் கடன்கள் பொருளாதார முறையில் ஒரு நெகிழ்வின்மையை ஏற்படுத்தலாம். பொதுவாகக் கூறுமிடத்து, தனியார் உற்பத்திக்கான மூலதனத்துக்காகக் கடன் வாங்குகிறார்கள். முதற்கண், கடனைச் சரியான காரணத்திற்காக வாங்கி இருந்தால், உற்பத்தித்திறன் பெருகியதன்மூலம், வட்டி போன்ற கடன் செலவுகளைச் சுலுவில் சரிக்கட்டலாம். இதற்கு மாறாக, அரசின் கடன் உற்பத்தியைப் பெருக்குவதில்லை. அரசு கடன் வாங்கி முதலீடு செய்வதனால் பெரும்பாலும் ஆன்ம வருமானமும், அக வருமானமுமே (spiritual and psychic income) கிடைக்கின்றன. ஆதலால், பண வருமானத்தின்மீது வரி விதித்து, கூடுதலான ஆன்ம வருமானத்தைப் பெறவேண்டி இருக்கிறது. இங்ஙனம் முதலீடு செய்வதைச் சமுதாயப் போகப் பொருளாகக் (Social luxury) கருதலாம். பண வருமானத்தைப்பற்றிக் கவலையின்றி ஆன்ம வருமானத்தைக் கொண்டே வாழ்க்கை நடத்தும் காலத்தை நாம் எதிர்பார்த்தால் அன்றி, பண வருமானத்திற்கு பதிலாக ஆன்ம வருமானத்திற்காக அரசு, கடன்கள் வாயிலாக நிதி திரட்டினால், அஃது எதிர்காலத்தில் வரிகள் விதிக்கவேண்டும் என்பதையும், அவ் வரிகள் எதிர்கால உற்பத்தியின்மீது ஒரு பளுவாக இருக்கும் என்பதையும் சுட்டுகின்றது.

வெளிநாட்டுக் கடனின் பளு

வெளிநாட்டுக் கடன்களைப் பொறுத்தவரையில், அசலைத் திருப்பிக் கொடுப்பதற்கும், வட்டியைக் கொடுப்பதற்கும் ஆகும் பணக் கொடுப்பல்களே (money payments), வெளிநாட்டுக் கடன்களின் நேரிடையான பளுவைக் (direct money burden) குறிப்பன வாகும். இக் கடன்களைத் திருப்பிக் கொடுப்பதனால், கடன்

வாங்கிய நாடு, பொருளாதார நல வசதியில் அடையும் நிகர இழப்பே, வெளிநாட்டுக் கடன்களின் நேரிடையான மெய்யான பளுவாகும் (real burden). வரி செலுத்துவோர் பெரும்பாலும் பணம் படைத்தவர்களாக இருந்தால், நேரிடையான மெய்யான பளு குறைவாகவும், அவர்கள் வறியோர்களாக இருந்தால், மெய்யான பளு கூடுதலாகவும் இருக்கும். ஆயினும், பயனில் சுமைக் (dead weight) கடனுக்கும், பயன் தரும் கடனுக்கும் உள்ள வேறுபாட்டை நாம் மறந்து விடக்கூடாது.

நாட்டின் உற்பத்திக்குத் தடை ஏற்படுவதே வெளிநாட்டுக் கடனின் மறைமுகமான பளு (பணப் பளுவாயினும், மெய்யான பளுவாயினும்) ஆகும். இக் கடன்களைத் திருப்பிக் கொடுப்பதற்குப் புதிதாக வரி விதிக்கவேண்டும். உற்பத்தியைப் பெருக்கும் சில அரசுச் செலவினங்களிலும் சிக்கனம் மெற்கொள்ளவேண்டி யிருக்கும். வெளிநாட்டுக் கடன்களில் போர்க்கால இழப்பீடுகள் (war indemnities) ஒரு வகையாகும். வெளிநாடுகளுக்குக் கடன் களைத் திருப்பித் தர வேண்டியிருப்பதால், கடன் வாங்கிய சமுதா யத்தில் உற்பத்தியும், வேலை வாய்ப்பும் அதிகரிக்கின்றன என்று சிலர் வாதிடுவது விந்தையே. இவ் வாதம் உண்மையானால், வெளிநாட்டுக் கடனால் யாதொரு மறைமுகமான பளுவும் ஏற்படாததுமன்றி, ஒரு மறைமுகமான ஆதாயமும் கிடைக்கிறது. நேரிடையான கடன் பளுவைக் காட்டிலும் இவ் வாதாயம் கூடுதலாக இருக்கலாம். ஆனால், இவ் வாதம் முற்றிலும் தவறானது. பெரும் அளவில் வெளிநாடுகளுக்குக் கடன் கொடுக்கவேண்டி யிருந்தால், அதனால், ஏற்றுமதிப் பண்டங்களைச் செய்யும் தொழில் களில், உற்பத்தியும் வேலை வாய்ப்பும் அதிகரிக்கலாம். ஆயினும், டாக்டர் டால்டன் குறிப்பிடுகின்றவாறு, 'கடன் வாங்கிய சமுதா யத்தில், உற்பத்திக்கும் வேலைவாய்ப்புக்கும் இதை ஒரு நிகரத் தூண்டுகோல் என்று கொள்ள முடியாது. இதனால், ஒருவகைத் தொழில்களுக்கு ஆக்கமும், வேறுவகைத் தொழில்களுக்கு ஊறும் ஏற்படுவதன்றி, வளங்களைச் சில தொழில்களிலிருந்து வேறு சில தொழில்களுக்குத் திருப்புவதால், பொதுவாகத் தீமையே விளைகிறது.[1]

### உள்நாட்டுக் கடனின் பளு

பெரும் அளவுக்கு உள்நாட்டுக் கடன் இருந்தால் ஒரு நாட்டின் நிதிய வளங்கள் பாதிக்கப்படுவதில்லை எனச் சிலர் நினைக்கிறார்கள். ஓர் அரசு உள்நாட்டிலேயே கடன் வாங்கி அதற்கான வட்டி

[1] டால்டன், பக்கம் 252.

யையும் செலுத்தினல், அதனுல் நாட்டுக்கு இழப்பு ஒன்றுமில்லை என்றும், அது பணத்தின் கைமாற்றமே என்றும் கூறப்படுகிறது. இக் கருத்தை ஜான் ஸ்டுவர்ட் மில் ஒப்புக் கொள்கிருர். ஆயினும், இம் மாற்றம் கட்டாயமானதாக இருப்பதால் பெருந்தீங்கு விளைவிப்பதாகும் எனக் கூறுகிருர். கூடுதல் வருமானத்தை வரி விதிப்பின் மூலமே பெறவேண்டும். இதை வசூலிப்பதற்குச் செலவு பிடிக்கும். இதனுல் மக்களுக்குத் தொந்தரவு ஏற்படுவதுடன், தொழில் துறையிலும் சீர்குலைவு ஏற்படுகிறது. இவற்ருல் ஏற்படும் தீமைகள் வரிகளினுல் அரசு பெறும் ஆதாயத்தைக் காட்டிலும் அதிகம். ஆகவே, இவ் வதிக வரி விதிப்பை விரைவில் ஒழித்துக் கட்டுவதற்கு எல்லா முயற்சிகளையும் செய்ய வேண்டும். மேற்கூறிய தீங்குகளைத் தவிர, உள்நாட்டுக் கடனுல் சமுதாயத்தின்மீது அதிகமான பளு ஒன்றும் ஏற்படுவதில்லை என்பது உண்மையா? பிலிப் ஸ்நோடன் (Philip Snowden) 'சமுதாயத்தின் ஒவ்வோர் உறுப்பினரும் ஒரே அளவு தொகையை அரசினுக்குக் கடன் கொடுத்திருந்து, தாம் வரியாகச் செலுத்தும் தொகையையே வட்டியாகவும் பெற்ருல், இவ் வாதம் சரியானதாகும். ஆனுல், இவ்விதம் நடைமுறையில் இல்லை. உள்நாட்டுக் கடன்மீது செலுத்தப்படும் வரி, சமுதாயம் சமுதாயத்தினிடமிருந்தே வாங்கும் பெரிய கப்பம் அன்று; ஆனுல், சமுதாயத்தின் சில உறுப்பினர் மற்ற உறுப்பினரிடமிருந்து வாங்கும் கப்பமாகும்' எனக் கூறுகிருர்.

ஹான்ஸனது (Hansen) கருத்துப்படி ஓர் அரசு உள்நாட்டிலேயே கடன் வாங்கி இருந்தால், அதைக் கடன் என்றே கருதலாகாது. ஹான்ஸனது இக் கூற்றுக்கு ஆதாரம், பணம் மீண்டும் நேரிடையாகக் கடன் பத்திரம் வைத்திருப்பவர்களிடமே போய்ச் சேர்கிறது என்பதே. அரசு உள்நாட்டிலேயே கடன் வாங்குவது ஒரு கணக்கு எழுதும் முறையே (accounting method) தவிர வேறன்று. ஏனெனில், ஒரு நாட்டின் பொருளாதாரத்தைப் பொறுத்த வரையில், அரசின் கடனுக்கு ஈடாகக் கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்களின் பாத்தியதைகள் இருக்கின்றன. ஜெர்மனியில் பணவீக்கம் ஏற்பட்ட காலத்தில் வாழ்ந்தவர்களுக்கு இவ் வாதம் வலிய, ஆனுல் விரும்பத்தகாத நினைவுகளை ஏற்படுத்துகிறது. ஏனெனில், இக் கூற்று, முதல் உலகப்போரின் போது ஜெர்மனியில் எழுந்த 'பணம் நாட்டிலேயே இருக்கிறது' என்ற கூற்றை ஒத்திருக்கிறது. ஜெர்மானிய அதிகாரிகளின் மனச்சாட்சிக்கு இக் கூற்று ஆறுதல் அளித்தது போலும். அவர்கள் பின்பற்றிய கட்டுப்பாடில்லாத நிதியக் கொள்கைகளால், பண வீக்கமும் ஏற்பட்டது; பண வீக்கத்தினுல் துன்பமும் ஏற்பட்டது.

ஆனால், இக் கூற்று உண்மையானதா? இக் கூற்று உண்மை யானதே. பத்திலிருந்து பத்தைக் கழித்தால் பூஜ்யம் என்று சொல் வதை இக் கூற்று ஒத்திருக்கிறது. ஆனால், இவ் வாதத்தை அரசு எத்துணை கடன் வாங்கினாலும் கூறலாம். அரசு ஓர் உரூபா கடன் வாங்கினாலும் சரி, பல்லாயிரம் கோடி உரூபா கடன் வாங்கினாலும் சரி, இவ் வாதம் பொருந்தும்.

குடும்ப உவமை

சிலர் உள்நாட்டுக் கடனை ஒரு பெரிய குடும்பத்துடன் உவ மிக்கிறார்கள். குடும்பத்திலுள்ள சிலர் ஏனைய உறுப்பினர்களுக்குக் கடன் பட்டிருக்கிறார்கள். ஒரு குடும்பத்தின் மொத்த ஆஸ்தி களும், கடன் பொறுப்புகளும் சமமாகவே இருக்கும். குடும்பத் துடன் உவமிப்பவர்கள் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் தனித்தனியே பேங்கில் (தனியே) கணக்கு இருக்கிறதா என்ப தைக் கூறத் தவறிவிட்டார்கள். ஒவ்வொருவரும் தனித்தனியே பேங்கில் கணக்கு வைத்துக் கொண்டும், அவர்களுக்கு இடையே உள்ள உறவு அத்துணை சுமுகமாக இல்லாவிட்டாலும், சில உறுப் பினர்கள் ஏனைய உறுப்பினர்களுக்குக் கடன்பட்டிருந்தால், அதனால் குடும்பப் பொருளாதாரமே கலகலத்துப் போகும். ஒவ்வொருவரும் தனித்தனியே பேங்கில் கணக்கு வைத்துக் கொள்ளாது, அனை வரும் ஒரே பாங்கில் பொதுவான கணக்கு ஒன்றை வைத்துக் கொண்டிருந்தால், அக் குடும்பம் ஓர் இன அலகாகும் (Communal unit). அதையும் (குடும்ப பொருளாதாரத்தையும்), நாட்டின் பொருளாதாரத்தையும் உவமிப்பது பொருந்தாது.

தாங்கள் செலுத்தும் வரிகளுக்குச் சமமான தொகையை வட்டியாக, அரசின் கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள் பெறுகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது வரி செலுத்துவோர்கள் பணத்தை ஒரு பையிலிருந்து சொக்காயின் (coat) மற்றொரு பைக்கு மாற்றுகிறார்கள் என்று கூறலாம். (ஆனால், இம்மாதிரி எந்த நாட்டிலும் இருப்பதற்கில்லை). கடன் பத்திரங்களை வாங்கியவர்கள், தாங்கள் அரசினுக்குச் செலுத்தும் வரியைக் காட்டிலும், கூடுதலான தொகையை வட்டி மூலமாகப் பெற முடியும் என்று நம்புகிறார்கள். இதுவுமன்றி அவர்கள் வட்டி பெறுவதைச் சகஜமாக எடுத்துக் கொள்கிறார்கள். அரசின் கடன் பத்திரங்களை வாங்கியதற்காக அரசு தங்களுக்குத் தண்டனை (முன்பைக் காட்டிலும் அதிக வரி விதிப்பு) அளிக்கக் கூடாது என்றும் கூறுகிறார்கள். ஏனெனில், அவர்கள் அரசின் கடன் பத்திரங்களை வாங்கியிருக்கா விட்டால், வேறு கடன் பத்திரங்களை (கம்பெனி களின்) வாங்கியிருக்கக் கூடும். அவற்றிலிருந்து அவர்களுக்கு

வட்டி கிடைக்கும். ஆனால், அதிக வரி (முன்பைக் காட்டிலும்) கொடுக்க வேண்டியிருக்காது. ஆகவே, அரசின் கடன் பத்திரங்களை வாங்கியவர்கள், பின்பு அதிக வரி செலுத்தும்படி நேரும்பொழுது அரசின்பேரில் எரிச்சல் கொள்கிறார்கள். வரி செலுத்தாது தப்பித்துக் கொள்ளவும் முயல்கிறார்கள். இக் காரணங்களினால் உள்நாட்டுக் கடனாலும் ஒரு நிகர பொருளாதாரப் பளு ஏற்படுகிறது. இங்கு கூறப்பட்டது அகக் காரணமேயாகும்.

ஈதன்றி வரிகளை விதிப்பதிலும், வசூலிப்பதிலும் பல மோதல்கள் ஏற்படுகின்றன. சட்டங்களை இயற்றுவதற்கும், அவற்றுக்கு விளக்கம் தருவதற்கும், வழக்குகளைத் தீர்ப்பதற்கும், வரிகளை வசூலிப்பதற்கும், வட்டியைப் பட்டுவாடா செய்வதற்கும் ஆயிரக்கணக்கான ஆள்மாகாணம் வேண்டும். இதற்கெல்லாம் செலவு பிடிக்கிறது. அண்மைய ஆண்டுகளில் அமெரிக்காவில் வரி விதிப்புப்பற்றிய வழக்குகள் அதிகரித்திருக்கின்றன. பெரிய வாணிப நிறுவனங்கள் யாவும், வரித் துறைபற்றிய சட்டங்களில் தேர்ச்சி பெற்ற வழக்குரைஞர்களையும், கணக்கர்களையும் பெரும் சம்பளம் கொடுத்து அமர்த்திக் கொண்டுள்ளன. அரசியல் சட்டத்தின்படி புதிய வரி செல்லத்தக்கதன்று என்று இக் கம்பெனிகள் நீதிமன்றங்களில் வழக்குப் போடலாம். இதற்கெல்லாம் செலவு பிடிக்கும். மேலும், இவ் வரிகள் வாணிபத்தில் புதிய அதிர்வுகளைத் தோற்றுவிக்கின்றன. இதுகாறும்கூறியவற்றிலிருந்து, ஏட்டளவில், ஒரே அரசின் அதிகார வரம்பில் இருக்கும் ஒருவரிடமிருந்து, வரிமூலம் பணம் பெற்று, இன்னொருவருக்கு அதைக் கொடுப்பது மிக எளிதானது. இதனால், மொத்தத்தில் நாடு செல்வமுள்ள நாடாகவோ அல்லது வறிய நாடாகவோ மாறுவதில்லை. நடைமுறையில் கம்யூனிஸ்டு நாடாக ஆனால் ஒழிய, நாடு அனைத்தையும் ஒரே பொருளாதார அலகாகக் (single economic unit) கருத முடியாது. மேலும், ஒரு நாட்டின் மக்கள் அனைவருக்கும் பொதுவான பணப்பை (common pocket) இல்லை. ஒரு தனியாளின் வலப்பையிலிருந்து இடப்பைக்கு மாற்றுவதைக் காட்டிலும், ஒருவர் பையிலிருந்து இன்னொருவர் பைக்குப் பணத்தை மாற்றுவது கடினமானது.

உள்நாட்டுக் கடனைப் பொறுத்து எல்லா விவகாரங்களும், முடிவில், சமுதாயத்தின் உள்ளேயே செல்வத்தை மாற்றும் இனங்களாக முடிகின்றன. ஆகவே, உள்நாட்டுக் கடனால் நேரிடையான பணப் பளுவோ அல்லது பண ஆதாயமோ இருக்க முடியாது. உள்நாட்டுக் கடனால் ஏற்பட்ட நேரிடையான மெய்யான பளுவைத் தீர்மானிப்பதற்கு, அக் கடனால் வருமானங்களின்மீது ஏற்படும் விளைவுகளை எண்ணிப் பார்க்கவேண்டும்.

உள்நாட்டுக் கடனல், இப்பொழுது வருமானத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகள் அதிகம் ஆகுமானல், கடனின் மெய்யான நேரிடையான பளு அதிகரிக்கிறது என்றும், வருமானத்தில் ஏற்றத்தாழ்வுகள் குறையுமானல், நேரிடையான மெய்யான பளு குறைகின்தென்றும் கூறலாம். உள்நாட்டுக் கடனின் மெய்யான பளுவை அறுதியிடு வதற்குச் சமுதாயத்தின் பல்வேறுபட்ட வருக்கத்தினர்கள் இடையே நிலவும் வரி விதிப்பின் பகிர்வையும், கடன் பத்திரங் களின் பகிர்வையும் பரிசீலனை செய்ய வேண்டும். தங்களின் கடன் பத்திரங்களுக்குப் பெறும் வட்டித் தொகையைக் காட்டிலும், வீதாசாரத்தில் குறைவாக (பணம் படைத்தோர்) வரியாகச் செலுத்தினல், உள்நாட்டுக் கடனல் நேரிடையான மெய்யான பளு ஏற்படுகிறது எனலாம்.

டாக்டர் டால்டன்[1] இந் நிலையைச் சுருக்கமாகப் பின்வருமாறு எடுத்துரைக்கிருர்: 'வரி செலுத்துவோர்களிடமிருந்து அரசின் கடன்காரர்களுக்குப் பணத்தை மாற்றுவதால், வருமானத்தில் ஏற்றத் தாழ்வுகள் அதிகரிக்கும் அல்லது குறையும். ஏற்றத் தாழ்வுகள் அதிகரிக்கும் அல்லது குறையும் அளவுக்கு ஏற்ப, உள் நாட்டுக் கடனல் நேரிடையான மெய்ப்பளுவோ அல்லது ஆதாய மோ ஏற்படுகிறது எனலாம். பிரிட்டிஷ் அரசின் கடன் முற்றும் தொழிலாளர் வைத்திருக்கும் சேமிப்புப் பத்திரங்களாகவும், பிரிட்டிஷ் வரி விதிப்பு முற்றும் செல்வர்களிடமிருந்து வசூலிக்கும் வருமான வரி, இறப்பு வரி ஆகியவையாகவும் இருந்தால், பிரிட்டிஷ் அரசின் கடன் விவகாரங்களினல், சமுதாயத்திற்குப் பெரும் அளவில் நேரிடையான ஆதாயம் ஏற்படும். ஆனல், நடைமுறையில், உண்மை இந் நாட்டில் மட்டுமின்றிப் பிற நாடுகளிலும் வேறுவிதமாய் உள்ளது.' உள்நாட்டுக் கடனல் நேரிடையான மெய்யான பளு ஏற்படுகிறது என்பது அவர் முடிபு. ஏனெனில், அரசின் கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள் பெரும்பாலும் செல்வர்களே. கடன் பத்திரங்களிடமிருந்து செல்வர்கள் பெறும் வட்டியைக் காட்டிலும், வரியாக அதிகமான தொகையை அவர்கள் செலுத்துமாறு, வளர்வீத வரி விதிப்பு முறை அமைக்கப்படவில்லை.

### அரசு கடன்களின் பளுவை மதிப்பிடும் முறைகள் (Methods of Estimating the Burden of Public Debts)

அரசு கடன்களின் தொகை, அவற்றினல் கடன் கொண்ட நாடுகளுக்கோ அல்லது பிற குழுக்களுக்கோ ஏற்படும் பளு, இப் பளுவை அளவிடும் சிறந்த கருவி ஆகிய இவற்றைப்பற்றிய

[1] டால்டன், பக்கம் 253—254.

சில முக்கியமான பிரச்சினைகள் எழுகின்றன. கடன் பளுவை அளவிடுவதற்குப் பல்வேறுபட்ட முறைகள் கையாளப்படுகின்றன. சாதாரணமாகப் பெரும்பாலும் பயன்படுத்தப்படும் ஒரு முறை பல்வேறு நாடுகளின் கடன் தொகையை ஒப்பிடுவதாகும். கடன் வாங்கிய தொகைமீது செலுத்தப்படும் வட்டியைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாதது இம்முறையில் உள்ள ஒரு குறைபாடு. சராசரி ஆள் ஒன்றுக்கு எவ்வளவு கடன் இருக்கிறது என்று பார்ப்பது இன்னொரு முறையாகும். இம்முறையில் ஆள் ஒன்றுக்கு எவ்வளவு வட்டிச் செலவு ஏற்படுகிறது என்று பார்ப்பதில்லை. ஏனெனில், வட்டிக்கு ஆகும் செலவு மிகக் குறைவாகும். ஒரு நாட்டின் பரப்போ, அல்லது மக்கள் தொகையோ, அந் நாட்டின் செல்வத்தையோ அல்லது நிதிய நிலைமையையோ மதிப்பிடுவதற்கு ஏற்ற அளவுகோல் அன்று. ஏனெனில், ஒரு நாட்டின் செல்வம் பல்வேறுபட்ட காரணங்களைப் பொறுத்துள்ளது. தேசீய வருமானத்திற்கும், கடன் செலவுகளுக்கும் உள்ள தொடர்பை ஒப்பிடுவது பிறிதொரு முறையாகும். அரசு ஆண்டுதோறும் அசலைத் திருப்பிக் கொடுப்பதற்கும், வட்டியைக் கொடுப்பதற்கும் செலவழிக்கும் தொகையும், கடன் பளுவைக் காட்ட வல்லதொரு சின்னமாகும். கடனின் தோற்ற மூலதன மதிப்பை (nominal capital value) எடுத்துக் கொள்வது ஐந்தாவது முறையாகும். இம் முறையில் கடனின் பளுவை அளவிடுவதற்குக், கடன் பத்திரங்களின் விலையே எடுத்துக் கொள்ளப்படும். இதன்கண் உள்ள குறைபாடு, கடன் பத்திரங்களின் மதிப்பு அடிக்கடி மாறிக் கொண்டிருக்கும் என்பதே. ஒரு குறிப்பிட்ட காலத்தில் விலைக்கு வரும் கடன் பத்திரங்களின் மதிப்பையே சுட்டிக் காட்டுமே அல்லாது, இம்முறையினால் கடன் பத்திரங்களின் அனைத்து மதிப்பையும் அறிந்துகொள்ள முடியாது என்பது இம் முறையிலுள்ள இன்னொரு குறைபாடாகும். இதைவிடச் சிறந்த முறை நாட்டின் வருமானத்திற்கும் கடனுக்கும் உள்ள உறவை நிருணயிப்பது அல்லது கடனுக்கும் சமுதாயத்தின் மொத்தச் செல்வத்திற்கும் உள்ள உறவை நிருணயிப்பதாகும். ஆனால், இங்ஙனம் பல நாடுகளை ஒப்பிடுவது எளிதன்று. ஆண்டு வருமானம்—அதிலும் சிறப்பாக மார்க்கெட்டில் விற்பதற்கு வரும் பகுதி—எப்பொழுதும் ஐயத்திற்கு இடமானதாகும். எம்முறையைக் கையாண்டாலும், நாட்டின் செல்வத்தைப்பற்றிய மதிப்பீடுகள், உண்மையான நிலையை ஏதோ ஒரு சமயம் தப்பித்தவறி எடுத்துக் காட்டலாம். ஆயினும், இவ்வகையான ஆய்வுகளினால் ஒரு நல்ல பயன் விளைகிறது. இவற்றை அடிப்படையாகக் கொண்டு நாம் ஓர் ஆண்டின் கடன் செலவையும், நாட்டின் வருமானத்

தையும் ஒப்பிடலாம். அதேபோன்று கடன் பத்திரங்களின் மதிப்பையும், நாட்டின் செல்வத்தையும் ஒப்பிடலாம்.

அரசின் கடன் பளுவை அளவிடும் பொழுது அதைத் தீர்க்க உதவியாக இருக்கும் ஆஸ்திகளையும் கணக்கில் கொள்வது இன்றியமையாதது. இக் கோணத்திலிருந்து, பலதரப்பட்ட அரசுப் பணிகளைச் செய்வதற்குப் பயன்படும் உடைமையைப் பார்க்க முடியாது. ஓர் அரசின் கட்டடங்கள், ஏனைய வருவாய் அளிக்காத உடைமைகள் (non-revenue yielding possessions) இவற்றை விற்க முடியாது. அங்ஙனம் விற்ருல், சாதாரணமான நிருவாகக் கடமைகளை நிறைவேற்ற முடியாது. அரசு நடப்பிற்கு அடிப்படை இவ்வகை உடைமையே. ஆனல், வருவாயை நல்கும் அரசு உடைமை இதனின்றும் வேறுபட்டது. நிலம், காடுகள், சுரங்கங்கள், இருப்புப்பாதைகள், பிற தொழில் முனைவுகள் அனைத்திற்கும் மார்க்கெட்டு மதிப்பு உண்டு. அவற்றை விற்பதன் மூலம் கடனை திருப்பிக் கொடுப்பதற்கான போதிய பணத்தைப் பெறலாம். கடனின் மதிப்பை நிருணயிப்பதற்கு முன்பு, கடன் தொகையிலிருந்து மேற்கூறிய அரசு உடைமை வகைகளின் மதிப்பைக் கழிக்க வேண்டும். அதேபோன்று அவற்றினின்று கிடைக்கும் ஆண்டு வருமானத்தை வட்டிக்கு ஆகும் செலவுடன் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். எடுத்துக்காட்டாக, இந்திய அரசு வாங்கிய கடனின் பெரும்பகுதியும் பொதுமக்களின் நன்மைக்காகவே செலவிடப்பட்டது. ஆகவே, இத் தொகை பெயர் அளவினதேயாகும்.

இத் தொகை தனியாரிடமோ அல்லது கம்பெனிகளிடமோ இருந்தால், அவை நாட்டின் செல்வத்தின் கூறுகளாக எண்ணப் படும். இந்திய அரசின் கடனின் மெய்யான பளு தோற்ற அளவினைக் காட்டிலும் குறைவானதாகும். ஏனெனில், இதில் 68 சதவிகிதம் உற்பத்தியைப் பெருக்குவதற்காக வாங்கப்பட்டதாகும்.

எல்லாவற்றையும் சீர்தூக்கிப் பார்க்கும்பொழுது, ஒரு முறையை மட்டும் கடைப்பிடிப்பது சரியன்று என்றும், பல்வேறு முறைகளையும் கூட்டாகப் பயன்படுத்துவது சரியானதென்றும் நாம் முடிவுக்கு வரலாம். இம் முறைகளில் (1) தேசிய செல்வம், தேசிய வருமானம் இவற்றுக்கும், தேசியக் கடனுக்கும் உள்ள வீதம் (ratio) என்ன என்பதும், (2) மொத்தச் செலவில் எவ்வளவு சதவீதம் கடனுக்காகச் (வட்டிக்காக) செலவழிக்கப்படுகிறது என்பதும் பெரும் பயன் தரத்தக்கவை.

## மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. G. Findlay Shirras, 'The Science of Public Finance,' Chapter 34.

2. Dalton, 'Principles of Public Finance', 1941, Chapter 22.

3. Philip E. Taylor, 'The Economics of Public Finance', Chapter 10.

4. Readings in Fiscal Policy, The American Economic Association, Chapter 29 and 31.

# 36. அரசு கடன்களின் விளைவுகள்

அரசு கடன் வாங்குவதால் ஏற்படும் பொருளாதார விளைவுகளை (economic effects of public debts) நாம் வேறுபடுத்த வேண்டும். தனக்கு வேண்டிய நிதியைப் பெறுவதற்குக் கடன் வாங்குவது அரசுக்கு ஒரு வழியாகும். நிதியைப் பெறுவதற்கு வேறு வழிகளாவன: வரிகள், அரசு நடத்தும் தொழில்களிலிருந்து கிடைக்கும் இலாபம், பணப் படைப்பு. அரசு கடன்களை வாங்குவதால் ஏற்படும் பொருளாதார விளைவுகளை, அதே அளவு தொகைகளை வரிகள் மூலம் பெறுவதால் ஏற்படும் பொருளாதார விளைவுகளுடன் ஒப்பிடவேண்டும். அரசு கடனை வாங்கிய பின்பு, பொருளாதாரத்தின் மீது ஏற்படும் விளைவுகளை நாம் இப்பொழுது காண்போம்.

### அரசின் கடனும் நுகர்வும்

அரசின் கடனால் நுகர்வின்மீது ஒரு முக்கியமான விளைவு ஏற்படுகிறது. அரசின் கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள், அவற்றைத் தங்கள் சொந்த உடைமையாகக் கருதுகிறார்கள். வரிகள் மூலம் இத் தொகையைப் பெற்று அரசு செலவு செய்திருந்தால், இவ் வுடைமை தோன்றியிருக்காது. மேலும், தாங்கள் கூடுதலாக வரி செலுத்தவேண்டும் என்பதை அரசு கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள் மறந்து விடுகிறார்கள். இதன் நிகர விளைவாவது, அவர்கள் முன்பைக் காட்டிலும் தங்கள் வருமானத்தில், கூடுதலான சதவீதத்தைச் செலவு செய்கிறார்கள் என்பது மட்டுமல்ல; தங்கள் வரவுக்கு விஞ்சியும் செலவு செய்கிறார்கள். ஏனெனில், அவர்கள் கடன் பத்திரங்களை விற்று இவ்வாறு அதிகரித்த செலவைச் சமாளிக்கலாம். ஆகவே, அரசு கடனின் நிகர விளைவாவது, நுகர்வின்மீது செலவழிக்கப்படும் மொத்த வருமானத்தின் சதவீதத்தை அதிகரிப்பதாகும். இதனால் பணவீக்கம் ஏற்படுவதுடன், வேலைவாய்ப்பும், உற்பத்தியும் பெருகும்.

### அரசு கடனும் ரொக்க விருப்பமும் (Public Debt and Liquidity)

அரசு கடன் பத்திரங்களை வாங்கலாம் அல்லது விற்கலாம். அதனுல் கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள், வேண்டும் பொழுது இவற்றை விற்று ரொக்கத்தைப் பெற்றுக் கொள்ளலாம். வாணிபம் நடத்துவதற்காகவோ, முன் எச்சரிக்கை நடவடிக்கை யாகவோ அல்லது ஊக வாணிபம் செய்வதற்காகவோ அவர்கள் கடன் பத்திரங்களை விற்கலாம். இதனுல் ஆஸ்திகள் அதிகமான அளவு நீர்மைத்தன்மையுடன் இருக்கின்றன.

வாணிபப் பேங்குகளும் ஏராளமான கடன் பத்திரங்களை வாங்கி யிருப்பதால், இவற்றைப் பேங்குகள் வேண்டும்பொழுது ரொக்கமாக மாற்றிக் கொள்ளலாம். பணவீக்கக் காலத்தில் மையப் பேங்க், பேங்க் வீதத்தையும், திறந்த அங்காடி நடவடிக்கைகளையும் (open market operations), பிற கருவிகளையும் பயன்படுத்தி வாணிபப் பேங்குகளின் ரொக்க இருப்பைக் குறைக்க முற்படலாம். ஆனுல், வாணிபப் பேங்குகள் அரசுப் பத்திரங்களை விற்று தங்கள் ரொக்க இருப்பை அதிகரித்துக் கொள்ளலாம்.

### அரசு கடனும் முதலீடும்

அரசு கடனுல் முதலீடு அதிகரிக்கிறதா என்பது தெளிவாக இல்லை. இரண்டு, முன்னுக்குப் பின் முரணுன விளைவுகள் தோன்ற லாம். அரசின் கடன் தொகை ஏராளமாக இருந்தால், இந்தக் கடனுக்கு வட்டியைச் செலுத்துவதற்காக அரசு வரி வீதங்களை உயர்த்தலாம். இங்ஙனம் வரிகளை உயர்த்துவதால் முதலீடு செய்பவர்களின் மனதில் அச்சத்தையும், நிச்சயமற்ற தன்மை யையும் எழுப்பக்கூடும். இவ்வளவு பெரிய கடனைத் திருப்பித் தருவதற்காக அரசு மூலதன வரியை (capital levy) விதிக்கலாம் என்றும், அல்லது கடனையே நிராகரிக்கலாம் என்றும், ஓர் அச்சம் முதலீடு செய்பவர்களின் மனதைக் கவ்விக் கொள்ளும். இவை யெல்லாம் நீண்ட கால முதலீடுகளைப் பாதிக்கும். மற்றோர் பக்கத்தில், பெரும் கடன் இருப்பதால், அரசு வட்டி வீதங்களைக் குறைவான மட்டத்தில் வைத்திருக்க முயலும். இதனுல், அரசு கொடுக்க வேண்டிய வட்டித் தொகை மிகக் குறைந்த அளவின தாக இருக்கும். இதனுல், தொழில் முனைவர்கள் மேற்கொண்டு கடன் வாங்குவதும், முதலீடு செய்வதும் உரம் பெறலாம். இவ் வாருக அரசுக்குக் கடன் இருப்பதால், முதலீடு அதிகரிக்குமா அல்லது குறையுமா என்பதைத் தெளிவாகச் சொல்ல இயலாது.

### அரசு கடனும் உற்பத்தியும்

டால்டனின் கூற்றுப்படி, உற்பத்தி மூன்று ஒப்பளவு முதல்களைப் (Criteria) பொறுத்திருக்கிறது. முதலாவதாகப், பேங்குகளில்

தூங்கிக் கொண்டிருக்கும் பணத்தைப் பேங்குகளிலிருந்து கடனாக வாங்கி உற்பத்தித் திறனை அதிகரிப்பதற்கு (அபிவிருத்தித் திட்டங்கள் மூலம்) அரசு பயன்படுத்தினால், இதனால் உழைக்கும் ஆற்றலும், சேமிக்கும் ஆற்றலும், முதலீடு செய்யும் ஆற்றலும் அதிகரிக்கும் என்பது ஒருதலை. தொழிலாளர்களின் கல்வி, சுகாதாரம், வீட்டு வசதி, குடிநீர் வசதி இவற்றை அதிகரிப்பதற்காக, அரசு கடன் வாங்கிச் செலவிட்டாலும், தொழிலாளர்களின் உழைக்கும் திறனும், சேமிக்கும் திறனும் கூடும். கடன்களைத் திருப்பித் தருவதற்காகவும், வட்டியைக் கொடுப்பதற்காகவும் வரிகளை விதிப்பதால், உழைக்கும் ஆற்றலுக்கும், சேமிக்கும் ஆற்றலுக்கும் ஊறு நேரும். இரண்டாவதாக, உழைக்கும் விருப்பத்தையும், சேமிக்கும் விருப்பத்தையும் பொறுத்தவரை, அரசு கடன் பொதுவாக இவற்றைக் குறைக்கும் எனலாம். முதலீடு செய்வதற்கு அரசு கடன் பத்திரங்கள் ஒரு நிரந்தரமான வழியாகும்; பத்திரமான வழியும் கூட. இதனால் சேமிப்புகள் அதிகரிக்கலாம். ஆனால், அசலைத் திருப்பித் தருவதற்கும், வட்டியைக் கொடுப்பதற்கும் வரி விதிக்க வேண்டியிருப்பதால், சேமிப்புகள் பாதிக்கப்படலாம். மேலும், அரசு கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள், வட்டி வருமானத்தைப் பெறுகிறார்கள். இதனால் அவர்களுடைய உழைக்கும் விருப்பமும், சேமிக்கும் விருப்பமும் ஓரளவு குறையக் கூடும். இறுதியாக, வளங்களின் திருப்பத்தைப் (diversion of resources) பற்றிச் சில கூறுதும்: அரசு கடன் வாங்காது இருந்திருந்தால், இத்தொகைகள் என்ன நோக்கங்களுக்காகச் செலவழிக்கப்பட்டிருக்குமோ, அவற்றைக் காட்டிலும் அவசியமான இனங்களின் பேரிலும், மிகவும் பயன் படத்தக்க வழிகளிலும் அரசு செலவு செய்யலாம். தேங்கிக் கிடக்கும் பணத்தை இருப்புப்பாதைகள், நீர்ப்பாசனத் திட்டங்கள், மின்சாரத் திட்டங்கள் முதலானவற்றிற்குத் திசை திருப்புவது சரியானதேயாகும். பேங்குகளிடமிருந்து கடன் வாங்கி நிரந்தரமான ஆஸ்திகளையும், உற்பத்தியைப் பெருக்கும் ஆஸ்திகளையும் படைப்பதற்கும் இது பொருந்தும். உற்பத்தியைப் பெருக்கக்கூடிய தொழில்களின்மீது செலவழிக்கப் பட்டிருக்கக் கூடிய நிதிகளைப், பாதுகாப்புக்குச் செலவிடுவது வளங்களின் தவறான திருப்பத்திற்கு உதாரணமாகும். ஆனால், இதைச் சூழ்நிலைகளுக்குத் தகுந்தபடியே தீர்மானிக்கவேண்டும். பொதுவாக, அரசின் கடன், உற்பத்தியையும், வருமானத்தையும், வேலை வாய்ப்பையும் பெருக்குகிறது எனலாம்.

### அரசு கடனும் பகிர்வும்

அரசின் நிதிய நடவடிக்கைகளினால் பணம் ஒருவர் கையிலிருந்து இன்னொருவர் கைக்கு மாறுகிறது. அரசு கடனால் இம்

மாதிரியான மாற்றங்கள் அடிக்கடி நிகழ்கின்றன. அரசு கடன் வாங்கும் பொழுது, மக்கள் கையிலிருந்து அரசின் கைக்குப் பணம் மாறுகிறது. கடன் வாங்கிய பணத்தை அரசு செலவு செய்யும் பொழுது, பணம் அரசின் கையிலிருந்து மக்கள் கைக்கு மாறுகிறது. இக் கடன்களைத் திருப்பித் தருவதற்காகவும், வட்டியைக் கொடுப்பதற்காகவும், அரசு வரிகளை விதிக்கும் பொழுது, மீண்டும் மக்கள் கையிலிருந்து அரசின் கைக்குப் பணம் மாறுகிறது. இறுதியாக, அரசு கடன்களைத் திருப்பித் தரும்பொழுது, பணம் அரசு கருவூலத்திலிருந்து மக்களின் கைக்கு மாறுகிறது. இந் நிகழ்ச்சி தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது. இவ்விதப் பண மாற்றங்களினால் அரசு தேசியப் பணப் பகிர்வை மாற்றியமைக்க முடியும். கடன் பத்திரங்களை வாங்குவோர் பெரும்பாலும் செல்வர்களாகவும், கடன் வாங்கிய பணம் ஏழைகளின் நன்மைக்கும் செலவிடப்பட்டால், வருமானத்தில் ஏற்றத்தாழ்வுகள் குறையும். இதற்கு நேர்எதிராக இருந்தால் ஏழைகள் மிகவும் துயர் உறுவர். ஏற்றத்தாழ்வுகள் மேலும் அதிகரிக்கும். கடன்களைச் செல்வர்களிடமிருந்து வாங்கி, அரசு அவற்றைத் திருப்பித்தருவதற்காக விதிக்கும் வரிகளின் பளு கூடுதலாக ஏழைகள்மீது விழுந்தாலும், ஏற்றத்தாழ்வுகள் மேலும் அதிகரிக்கும். எல்லாவற்றிற்கும் மேலாக, மக்களின் ஒரு சாரார் வட்டியை நம்பியே, (முழுதும் இல்லாவிட்டாலும்) பெரிதும் வாழ்கிறார்கள். இதனாலும் ஏற்றத்தாழ்வுகள் அதிகரிக்கிறது.

### அரசு கடனும் வேலைவாய்ப்பும்

அரசு கடன் வேலைவாய்ப்பையும் பாதிக்கிறது. லெர்னர் (Lerner) போன்ற பொருளியல் புலவர்களின் கருத்துப்படி, ஈதொன்றே அரசு கடன் வாங்குவதன் நோக்கமாக இருக்க வேண்டும். அரசு கடன் வாங்குவதால் மக்களின் கையிலுள்ள பணம் குறைகிறது. இதனால் அவர்களின் வாங்கும் ஆற்றல் குறைவதுடன், விலைவாசிகளும் குறைகின்றன. நாட்டில் பண வீக்கத்தைக் கட்டுப்படுத்த அரசு கடன் ஒரு தக்கக் கருவியாகும். பணவாட்டம் ஏற்பட்டால், அரசு மையப் பேங்கிலிருந்து கடன் வாங்கவேண்டும். வேலைவாய்ப்புகள், உற்பத்தி, விலைவாசிகள் இவை யாவும் தொடர்ந்து குறைந்து கொண்டிருக்கும்பொழுது, அரசு தன் கடன் பத்திரங்களை மையப் பேங்கில் வைத்துக் கடன் வாங்கலாம். இத் தொகையை அரசு வேலைவாய்ப்பைப் பெருக்கக்கூடிய திட்டங்களின்மீது செலவழிக்கலாம். இதனால் மக்களின் வாங்கும் ஆற்றல் அதிகரிக்கிறது; அதிகரிக்கவே விலைவாசிகளும் அதிகரிக்கத் தொடங்குகின்றன.

## மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. John F. Due, 'Government Finance,' Chapter 26.
2. Readings in Fiscal Policy, 'The American Economic Association,' Chapter 32.
3. H. C. Adams, 'The Science of Finance', pp. 520—526.

# 37. கடன் மேலாண்மை
## (Debt Management)

விரும்பிய குறிக்கோள்களை எய்துவதற்காகத் தேசியக் கடனின் அமைப்பையும், உள்ளடக்கத்தையும் (composition) மாற்றுவது அல்லது திருத்துவது கடன் மேலாண்மை எனப்படும். எந்தெந்த வகைப் பிணையங்களை வெளியிட்டு நிதியத்தைத் திரட்ட வேண்டும் என்பதை அரசு முடிவு செய்யவேண்டும். தவணை காலம் எத்தனை ஆண்டுகளாக இருக்கவேண்டும், வட்டி வீதம் என்னவாக இருக்கவேண்டும் என்பன போன்றவை கடன் மேலாண்மையில் அடங்கும். கடன் மேலாண்மை அரசினிடமே (கருவூலத்திடமே) பெரிதும் இருக்கிறது. அங்காடியில் வட்டி வீதங்கள் என்னவாக இருக்கவேண்டும் என்பதைப் பாதிக்கும் வகையில் பேங்க் வீதத்தை அல்லது கழிவு வீதத்தை, ஒரு நாட்டின் மையப் பேங்க் மாற்றுவது பணக்கொள்கையில் அடங்கிய தாகக் கருதப்படுகிறது.

கடன் மேலாண்மையின் நோக்கங்கள் இரண்டு : (1) மக்களிடம் இருக்கும் உடைமைகளின் நீர்மைத்தன்மையைக் குறைப்பது அல்லது நீர்மையின்மையை அதிகரிப்பது. மக்கள், அரசின் கடன் பத்திரங்களை அதிகம் வாங்கும்படி தூண்ட வேண்டும். இது நிறைவுடை வேலைவாய்ப்பு நிலவும் காலங்களில் மிகவும் முக்கியமானது. (2) அரசின் வட்டிச் செலவைக் குறைப்பது. அரசு வெளியிடும் குறுங்காலக் கடன் பத்திரங்கள் (சேமிப்புப் பத்திரங்கள்) இரண்டு அல்லது மூன்று வகைகளுக்கு மேல் போகக்கூடாது எனவும், நெடுங்காலக் கடன் பத்திரங்கள் ஒரே வகையினதாக இருக்கவேண்டும் எனவும் சிலர் கூறுகின்றனர். அங்காடியில் நிலவும் புரிசத்திற்கு ஏற்பப் பிணையங்களை வெளியிடும் உரிமை இடைப்பட்டவர்களுக்கு (intermediaries) இருக்க வேண்டும். இவர்கள் அரசின் கடன் பத்திரங்களை வாங்கி வைத்துக் கொண்டு, அவற்றுக்குப் பதிலாகப் பல்வகைக் கடன் பத்திரங்களை வெளியிடுவார்கள்.

**நெடுங்காலக் கடனும், குறுங்காலக் கடனும்**

1. நெடுங்காலக் கடனை வெளியிடுவதால் அடிக்கடி கடன் நீட்டிப்புச் செய்யவேண்டிய அவசியம் இல்லாது போகிறது. மையப் பேங்கின் துணையை நாட வேண்டிய அவசியமும் இல்லை.

2. நெடுங்காலக் கடனின் நீர்மைத்தன்மையை மையப் பேங்க் குறைக்கலாம். மையப் பேங்க் எடுக்கும் நடவடிக்கையினால் (பேங்க் வீதத்தை உயர்த்துவதால்) கடன் பத்திரங்களின் விலை குறையலாம். இதேபோன்று வாணிப மந்த காலத்தில் கடன் பத்திரங்களின் விலையை ஏற்றி (பேங்க் வீதத்தைக் குறைப்பதால்) இவற்றின் நீர்மைத்தன்மையை அதிகரிக்கலாம். இதற்கு மாறாகக் குறுங்காலக் கடன் பத்திரங்கள், (அ) அதிக நீர்மைத்தன்மை வாய்ந்தவை. (ஆ) மிகப் பரவலாகக் குறுங்காலக் கடன் பத்திரங்களை மக்கள் வாங்கியிருந்தால், அதனால் மக்களின் நுகர்வு அதிகரிக்கும். பணவீக்கத்திற்கு எதிரான பணக் கொள்கையைப் பின்பற்றுவதற்கு இது ஒரு வலுவான எதிர்வாதமாகும். ஏனெனில், பேங்க் வீதத்தை உயர்த்தி, வட்டி வீதங்களை உயர்த்தினால், அரசு அதிகத் தொகைகளை வட்டியாகச் செலவழிக்க வேண்டியிருக்கும். (இ) குறுங்காலக் கடன்களுக்குக் குறைந்த செலவே ஆகிறது. ஏனெனில், நெடுங்காலக் கடன் வட்டி வீதங்களைக் காட்டிலும், குறுங்காலக் கடன் வட்டி வீதங்கள் குறைவு. வாணிப மந்த காலத்தில் இவ் வட்டி வீதங்கள் மிகவும் குறைவாக இருக்கின்றன. (ஈ) வாணிப மந்த காலத்தில் அதிக நீர்மைத்தன்மை இருப்பது நல்லது. ஏனெனில், மந்த காலத்தில் மக்கள் அதிகம் செலவு செய்வது விரும்பத்தக்கது.

வாணிபச் சகடத்திற்கு எதிரான நடவடிக்கை எடுக்க வேண்டுமானால், மந்த காலத்தில் குறுங்காலக் கடன் பத்திரங்களையும், பணவீக்க காலத்தில் நெடுங்காலக் கடன் பத்திரங்களையும் அதிகமாக வெளியிடவேண்டும். வாரன் ஸ்மித்தும், பிறரும், குறுங்காலக் கடன் பத்திரங்களுக்குப் பதிலாக நெடுங்காலக் கடன் பத்திரங்களை அதிகமாக வெளியிடுவதனாலோ அல்லது நெடுங்காலக் கடன் பத்திரங்களுக்குப் பதிலாகக் குறுங்காலக் கடன் பத்திரங்களை வெளியிடுவதனாலோ, ஒப்புமையில், விளைவு ஒன்றும் ஏற்படுவதில்லை என்று கூறுகிறார்கள். குறுங்காலக் கடன் பத்திரங்களை நெடுங்காலக் கடன் பத்திரங்களாக மாற்றுவதால் ஆதாயங்கள் ஒன்றுமில்லை. ஆனால், பணவீக்க அழுத்தங்கள் எழுகின்றபோது அரசின் கடன்கள் நெடுங்காலக் கடன் பத்திரங்களாக இருப்பது நல்லது. ஆகவே, வாணிப மந்த காலத்தின் இடையில் குறுங்காலக் கடன் பத்திரங்களைக் கடன் நீட்டிப்புச்

செய்து, நெடுங்கால்க் கடன் பத்திரங்களாக மாற்றினால் நல்லது. ஏனெனில், அப்பொழுது வட்டி வீதம் மிகக் குறைவாக இருக்கும். வாணிப மந்த காலத்தில் குறுங்காலக் கடன்கள் வாங்குவதைத் தவிர்க்க வேண்டும். ஏனெனில், மீட்சிக் காலத்தில் வட்டி வீதம் அதிகரிக்கும். நிறைவுடை வேலைவாய்ப்புக் காலத்தில் அரசின் கடன்கள் பெரும்பாலும் குறுங்காலக் கடன்களாக இருப்பது நல்ல தன்று. மந்த காலத்தில் அரசின் கடன்கள் ஒப்புமையில் நீர்மைத் தன்மை வாய்ந்தவையாக (குறுங்காலக் கடன்கள்) இருப்பதை மையப் பேங்கின் நடவடிக்கையால் பயனற்றதாக்க இயலும்.

பணவீக்கக் காலத்தில் அரசின் கடனை நெடுங்காலக் கடன் பத்திரங்களாக மாற்றினால் வட்டிப் பளு அதிகமாவதுடன், பண வீக்கத்தையும் கட்டுப்படுத்த முடியாது. ஆகவே, நடைமுறையில் இவ்விதத் திட்டத்தை எந்த அரசும் தீவிரமாகச் செயல்படுத்த முனைவதில்லை. பணவீக்கக் காலத்தில் அரசு கடன் வாங்குவது இன்றியமையாததென்றால், குறுங்காலக் கடன்களாகவே வாங்க வேண்டும். வட்டி வீதங்கள் குறையும்பொழுது இக் கடன்களைக் கால நீட்டிப்புச் செய்து, நெடுங்காலக் கடன் பத்திரங்களாக மாற்றிக்கொள்ள வேண்டும்.

நாட்டுப் பாதுகாப்புக்கு அதிகம் செலவழிக்க வேண்டுமென்றால், அரசு கடன் வாங்கியே ஆகவேண்டும். எந்தெந்த மூலங்களிலிருந்து அரசு நிதியைத் திரட்டுகிறது என்பதையும், எவ்வகைப் பிணையங்களை வெளியிடுகின்றது என்பதையும், கடன் பத்திரங்களை மக்கள் வாங்குவதற்கும், வாங்கியவற்றை (விற்காமல்) வைத்திருப்பதற்கும் எவ்வகை ஊக்கம் அளிக்கப்படுகின்றது என்பதையும், எவ்வகை வட்டி வீதக் கொள்கைகள் கடைப்பிடிக்கப்படுகின்றன என்பதையும் பொறுத்து பண வீக்கத்தைக் குறைப்பது பெரிதும் இருக்கிறது. பேங்குகளைக் காட்டிலும் தனியார்கள் அரசின் கடன் பத்திரங்களை அதிகம் வாங்கினால் பண வீக்கம் குறையும். (1) இதனால் நுகர்வுச் செலவு குறைகிறது. (2) கடன் பத்திரங்களை வாங்குவோரின் நீர்மைத் தன்மை குறைகிறது. (3) பேங்குகளுக்குக் கடன் பத்திரங்களை விற்றால் புதிதாக வாங்கும் ஆற்றல் படைக்கப்படும். இதனால் மையப் பேங்க் கிரடிட் கட்டுப்பாடு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியிருக்கும். தனியார்களுக்குக் கடன் பத்திரங்களை விற்றால் இச் சிக்கல்கள் யாவும் தவிர்க்கப்படும். ஆகவே, (அ) கடன் பத்திரங்களை எத்துணை அதிகமாகத் தனியாருக்கு விற்க முடியுமோ, அத்துணை அதிகம் விற்கவேண்டும். (ஆ) தங்களின் நுகர்வைக் குறைத்துக் கடன் பத்திரங்களை வாங்குவதற்குத்

தனியார்களுக்கு அனைத்து வகை ஊக்கங்களையும் அளிக்க வேண்டும். இவ்வகை ஊக்கங்களும் மிகப் பெருமளவில் இருக்க வேண்டும். (இ) வாங்கிய கடன் பத்திரங்களை மீண்டும் விற்காமல் நெடுநாள் வைத்திருக்கும்படி தனியார்களுக்குப் பெரும் அளவு, ஊக்கம் அளிக்கவேண்டும். இக் கொள்கைகள் மூன்றும் தம்முள் முரண்படுகின்றன. ஆகவே, இக் கொள்கைகளைச் சிறிது தளர்த்தி, அவை தம்முள் மோதலில்லாதபடிச் செய்ய வேண்டும்.

**கடன் பத்திரங்களை வாங்குவதற்கு ஊக்கமளித்தல்**

*1.* முதலாவதாக, அங்காடியில் நிலவும் வட்டி வீதங்களைக் காட்டிலும் அதிக வட்டி வீதங்களை அரசு அளிக்க முன்வந்தால், மக்கள் அதிக அளவில் கடன் பத்திரங்களை வாங்கக்கூடும்; தங்கள் செல்வத்தின் நீர்மைத்தன்மையையும் குறைத்துக் கொள்ளக் கூடும். இங்ஙனம் செய்வது தனியாளின் ரொக்க விருப்ப நெகிழ்ச்சியைப் பொறுத்திருக்கிறது. அதாவது, வட்டி வீதங்களில் ஏற்படும் மாறுதல்களுடன் ஒப்பிடும் பொழுது, அரசின் பிணையங்களுக்கான புரிசம் மிகவும் நெகிழ்ச்சியுடையதாக இருக்க வேண்டும். வட்டி வீதங்கள் அதிகமாக இருந்தும், மக்கள் அதிகமாகக் கடன் பத்திரங்களை வாங்கவில்லை என்றால், நீர்மைத் தன்மை குறையாததனால் நிகர ஆதாயம் ஏற்படாது. வட்டிப் பளு அதிகரிப்பது மட்டுமே இதன் நிகர விளைவாகும். வட்டி வீதங்கள் அதிகமாக இருப்பதால், மக்கள் ஏனையக் கடன் பத்திரங்களை (தனியார் முனைவு கடன் பத்திரங்களையும், முன்னர் அரசு வெளிட்ட கடன் பத்திரங்களையும்) விற்றுவிட்டு அரசின் இப் புதிய கடன் பத்திரங்களை வாங்குவர். இதனால் கடன் பத்திரங்களின் விலை குறைவதுடன், தனியார் முதலீட்டுக்கும் ஊறு நேரும். மூலப் பண்டங்களை ஒதுக்கீடு செய்வதன் வாயிலாக முதலீடு கட்டுப் படுத்தப்படும் காலங்களில் இவ் விளைவைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. அரசின் பழைய கடன் பத்திரங்களை வைத்தி ருப்பவர் இழப்பு எய்துவர். இரண்டாவதாகக், கடன் பத்திரங்களின் விலை குறையாது என்று அரசு உத்தரவாதம் அளிக்கலாம். இதனால் அரசின் கடன் பத்திரங்கள் அதிக அளவில் விற்கும். இதன்படி எப்பொழுது வேண்டுமானாலும் கடன் பத்திரங்களைக் கொடுத்து விட்டு, மக்கள் பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம். இத் திட்டத்தில் கடன் பத்திரங்களை வாங்குவோருக்கு இழப்பு ஏதும் ஏற்படாது என்பது உண்மையே. ஆனால், இச் சலுகையை அளித்தால், மக்கள் அதிக நாட்கள் கடன் பத்திரங்களை வைத்திருக்க மாட்டார்கள். இறுதியாக, விளம்பரம், சம்பளத்தில் கழித்தல் ஆகியவற்றின் வாயிலாகவும் கடன் பத்திரங்கள் விற்பனையைப் பெருக்கலாம். இதற்காகத் தனிமுயற்சியும் எடுத்துக் கொள்ளலாம்.

ஆனால், இவை எத்துணை வெற்றியை அளிக்கும் என்பதை முன்கூட்டியே கூற முடியாது. அதுவுமின்றி, கடன் பத்திரங்களை வாங்கும்படி மக்களை அதிகம் நிர்ப்பந்தித்தால் அவர்கள் பிற கடன் பத்திரங்களை விற்கலாம்; அல்லது ஏற்கெனவே வாங்கிய கடன் பத்திரங்களை மீட்கலாம். இங்ஙனம் செய்தால் அவர்களின் நுகர்வும் குறையாது; நிகர நீர்மைத்தன்மையும் குறையாது.

2. கடன் பத்திரங்களை (விற்காமல்) வைத்திருக்க அளிக்கப் படும் ஊக்கங்கள் : (அ) கடன் பத்திரங்களை விற்க முடியாத தாகவோ (Non-marketable), மீட்சி செய்ய முடியாததாகவோ செய்யலாம். இங்ஙனம் செய்தால் அவற்றின் விற்பனை குறையும். (ஆ) தவணை காலம் முடியும்வரை வைத்திருந்தால் உச்ச அளவு வட்டி அளிப்பதாகவும் கூறலாம். கடன் பத்திரங்களைத் தவணை காலம் முடியும் அளவும் வைத்திருப்பதை வட்டி வீதங்கள் பெருமளவில் பாதிக்காது. தவணை காலம் முடிவதற் குள் கடன் பத்திரங்களை மீட்சி செய்பவர்களுக்கு அபராதம் விதிக்க லாம். இருவகைக் கடன்பத்திரங்களை வெளியிடலாம். ஒருவகைக் கடன் பத்திரங்களுக்கு உச்ச வட்டி வீதம் அளிக்கலாம்; ஆனால், த்வணை காலம் முடிவதற்குள்ளாகவே கடன் பத்திரங்களை மீட்சி செய்தால், கடுமையான அபராதம் விதிக்கலாம். இன்னொரு வகைக் கடன் பத்திரங்களுக்குச் சிறிது குறைந்த வட்டி வீதம் அளிக்கலாம். முன்னதாகக் கடன் மீட்சி செய்தால் அபராதமும் விதிக்கலாம். ஆனால், இவ் வபராதம் முதல்வகைக் கடன் பத்திரங்களின்மீது விதிக்கப்படும் அபராதத் தொகையைக் காட்டிலும் குறைவாக இருக்கும். முதல்வகைக் கடன் பத்திரங்களை மக்கள் வாங்கும் அளவுக்கு, ஒட்டு மொத்தத்தில் நீர்மைத்தன்மை குறையும். நீர்மைத்தன்மையைக் குறைத்துக் கொள்ள விரும்பா தவர்கள் இரண்டாவது வகைக் கடன் பத்திரங்களை வாங்கலாம். (ஆ) கடன் பத்திரங்கள் விற்கக் கூடியதாக இருக்கலாம். ஆனால், அவற்றின் விலை முகப்பு விலைக்குக் (below par) குறையும்படியும் அநுமதிக்கலாம். இந் நிலையில் பலரும் கடன் பத்திரங்களை விற்காமல் வைத்திருப்பர். தவணை காலம் முடியும்வரை வைத்திருந்தால்தான் முழுத்தொகையும் கிடைக்கும். ஆனால், இப்படிச் செய்வது நேர்மையானதுதானா என்று வினவலாம். இங்ஙனம் அரசு செய்யும் என்று முன்கூட்டியே கடன் பத்திரங்களை வாங்குபவர்களுக்குத் தெரிந்திருந்தால், அவர்கள் கடன் பத்திரங்களை வாங்கத் தயங்குவார்கள். (இ) விளம்பரத்தை ஒரு கருவியாகப் பயன்படுத்தலாம். ஆனால், இதன் விளைவை உறுதி யாகக் கூற முடியாது. உரிய தவணை காலம் முடிவதற்கு முன்

பாகவே கடன் பத்திரங்களை மீட்சி செய்பவர்களை 'நாட்டுப் பற்றில்லாத குடிமக்கள்' என்ற தலைப்பில் வெளியிட்டு விளம்பரம் செய்யலாம். ஆனால், இங்ஙனம் செய்தால் கடன் பத்திரங்களின் விற்பனை குறைவதோடு, அரசியல் ரீதியிலும் மக்களின் வெறுப்புக்கு ஆளாக வேண்டிவரும்.

3. இரண்டாவது உலகப்போர் நிகழ்ந்த காலத்தில் ஏற்பட்ட அநுபவம்: (அ) கடன் பத்திரங்களின் விற்பனையைப் பெருக்கு வதற்கும், தனியாளின் நீர்மைத்தன்மையைக் குறைப்பதற்கும், கானடாவிலும், அமெரிக்க ஐக்கியநாடுகளிலும் சேமிப்புப்பத்திரங் களுக்கு (அப்பொழுது நிலவிய வட்டி வீதங்களைக் காட்டிலும்) அதிக வட்டிவீதம் அளிக்கப்பட்டது. இக் கடன் பத்திரங்களை (தவணை காலம் முடிவதற்குள்) விற்க முடியாது. ஒவ்வொரு தனியாளும் உச்ச அளவு இத்தனைக் கடன் பத்திரங்கள்தாம் வைத்திருக்கலாம் என்றும் அறுதியிடப்பட்டது. ஏனையக் கடன் பத்திரங்களுக்குச் சிறிது குறைந்த வட்டி வீதம் அளிக்கப் பட்டது. ஒருவர் எவ்வளவு வேண்டுமாயினும் இக் கடன் பத்திரங்களை வாங்கலாம். (ஆ) விரும்பியபொழுது சேமிப்புப் பத்திரங்களை வைத்திருப்பவர்கள் மீட்சி செய்யலாம். இதனால் அவற்றின் கவர்ச்சியும், நீர்மைத்தன்மையும் அதிகரித்தது. அவற்றின் முகப்பு விலை குறையாதென்று உத்தரவாதமும் அளிக்கப்பட்டது. (இ) கடனை மீட்சி செய்யும் பொழுதோ அல்லது தவணை காலம் முடியும் பொழுதோதான் வட்டி அளிக்கப்படும். (ஈ) இறுதியாக, அரசின் கடன் பத்திரங்களை வாங்கும்படியும், வைத்திருக்கும்படியும் பெருமளவில் விளம்பரம் செய்யப்பட்டது. கடன் பத்திரங்களை விற்பதற்கான இயக்கங் களும் (bond drives) நடத்தப்பட்டன. ஒவ்வொருவரும் வாங்க வேண்டிய அளவும் அறுதியிடப்பட்டது. எல்லாவற்றுக்கும் மேலாகச் சம்பளத்திலிருந்து பிடித்தமும் செய்யப்பட்டது. இந்த முயற்சிக்கு ஓரளவு வெற்றி கிடைத்தது. ஆயினும், மொத்தக் கடன் பத்திரங்களில் ஏறக்குறைய 25 சதவீதத்தையே தனி யாட்கள் வாங்கினர். மேலும், இக் கடன் பத்திரங்களை வாங்கிய தற்குச் செலவழிக்கப்பட்ட தொகை, எவ்வாறாயினும் சேமிக்கப் பட்டே இருக்கும். ஆயினும், இவ்வாறு கடன் பத்திரங்களை விற்றதால் தனியாரின் நீர்மைத்தன்மை குறைந்தது என்னவோ உண்மைதான்.

## கட்டாயக் கடன்

கட்டாயச் சேமிப்புக்கும், கட்டாயக் கடனுக்கும் இடையில் வேறுபாடு இருக்கிறது. கட்டாயச் சேமிப்பின்கீழ் ஒருவர் தன்

வருமானத்தில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்தைச் சேமிக்க வேண்டும். இச் சேமிப்பு வளர்வீதமாக இருக்கும்; அதாவது, வருமானம் அதிகரிக்க அதிகரிக்கச் சேமிப்பின் சதவீதமும் அதிகரிக்கும். ஒரு குறிப்பிட்ட தொகைக்குக் குறைந்த வருமானம் பெறுபவர்களுக்குக் கட்டாயச் சேமிப்பிலிருந்து விலக்களிக்கப்படும். இச் சேமிப்புகள் யாவும் புதிதாகச் சேமிக்கப்பட்டவையாகும். இம்முறையில் சேமித்து வைக்கப்பட்ட செல்வத்தில் நிகரக் கரைப்பு ஏற்படுவதில்லை. ஒரு குறிப்பிட்ட தொகையை அரசுக்கு அளிக்க வேண்டுமென்பதே கட்டாயக் கடன் அளிப்பாகும். இங்ஙனம் கடன் அளிப்பவர்கள், வரிகளையும் அரசுக்குச் செலுத்த வேண்டும். அதாவது அவர்களுக்கு வரிகளிலிருந்து விலக்கில்லை. அரசுக்குக் கடன் அளித்தவர்களுக்கு, அரசு கடன் பத்திரங்களை விற்கலாம். இக் கடன் பத்திரங்களை வாங்கியவர்கள் இவற்றை விற்க முடியாது. கடன் பத்திரங்களை வழங்குவதற்குப் பதிலாக அரசு ஒரு இரசீது மட்டும் கொடுக்கலாம். கட்டாயக் கடன்களைத் 'திருப்பித் தரும் வரிகளுக்கு' ஒப்பிடலாம். சிறப்பாகக் கடன் பத்திரங்களைத் தராது இரசீதுகளை மட்டும் அரசு தந்தால் இவற்றைத் திருப்பித் தரும் வரிகள் என்று கூறுவது முற்றும் பொருத்தமாக இருக்கும்.

கட்டாயச் சேமிப்பினால் நுகர்வு குறைக்கப்படுவது உண்மையே. ஆனால், இத் திட்டத்தைச் செயல்படுத்துவது கடினம். ஏனெனில், ஏனைய உடைமைகளை விற்று இந்தச் சேமிப்பைச் செய்தால் எதிர்பார்த்த பயன் கிடைக்காது. பணவீக்கத்திற்கு எதிரான நடவடிக்கையாகக் கட்டாயச் சேமிப்புப் பயன் அளிப்பதைப் போன்று கட்டாயக் கடன் வசூல் அத்துணை பயனை அளிக்காது. ஏனெனில், ஏற்கெனவே சேமித்துவைத்த தொகைகளிலிருந்து அவர்கள் செலவு செய்யலாம். அவர்கள் தங்களுடைய நுகர்வைக் குறைத்துக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தமும் இல்லை. கட்டாயமாகக் கடன் வசூலிப்பதால், நிகரச் சேமிப்புகளும் அதிகரிக்க மாட்டா. ஆனால், இத் திட்டத்தைச் செயல்படுத்துவது எளிது. இதை வருமான வரிக்குப் பிற்சேர்க்கையாகக் கொள்ளலாம். இதனால் மக்கள் செலவழிக்கும் மொத்தத் தொகை குறையும். இதுவரை சேமித்து வைக்காதவர்கள் தங்கள் செலவுகளைக் குறைக்கும்படி நிர்ப்பந்திக்கப்படுவார்கள். ஏனையோர் இப்பொழுது வைத்திருக்கும் கடன் பத்திரங்களை விற்கத் தயங்குவர். ஆனால், பெரும்பான்மையோர் தாங்கள் வைத்திருக்கும் நீர்மைத் தன்மையுள்ள செல்வத்தை, விற்கமுடியாத கடன் பத்திரங்களாகவோ அல்லது திருப்பியளிக்கக் கூடிய வரி வரவுகளாகவோ மாற்றுவார்கள். இங்ஙனம் அவர்கள் வைத்திருக்கும் செல்வத்தின்,

நீர்மைத்தன்மை குறைவதுடன், அவர்களின் செலவும் குறையும். பணவீக்கக் காலம் முடியும்வரை அவர்கள் இச் செல்வத்தைச் செலவழிக்காமல் தடுக்கப்படுவார்கள்.

ஆயினும், வருமான வரியை அதிகரித்தால் பணவீக்கம் எவ்வளவு குறையுமோ, அவ்வளவு கட்டாயக் கடனை வசூலித்தலினால் பணவீக்கம் குறையாது. ஏனெனில், இக் கடன் தொகைகளைப் பலர் தங்கள் செல்வத்தில் ஏற்பட்ட அதிகரிப்பாகவே கொள்வார்கள். இருந்தாலும், வருமான வரியை அதிகரிப்பதனால் என்ன நன்மைகள் விளையுமோ, அதைக்காட்டிலும் அதிக நன்மைகளே கட்டாயக் கடன்களினால் விளையும். இறுதியில் கடன் திருப்பியளிக்கப்படுமாதலால், வருமான வரி அதிகரிப்பால் பாதிக்கப்படும் அளவுக்குக் கட்டாயக் கடன்களால் சேமிப்புகள் பாதிக்கப்படா. இதில் இன்னொரு நன்மையும் உள்ளது. வருமான வரியை அதிகரித்தலைக் காட்டிலும் கட்டாயக் கடனை வசூலித்தல் நியாயமானது எனலாம். கட்டாயக் கடனால் குறைந்த வருமானம் உடையவர்கள்மீது விழும் வரிப் பளு குறைகிறது. அத்துடன் புதிதாகப் படைக்கப்படும் வாங்கும் ஆற்றல் பயன்படுத்தப்படாமல் சேமித்து வைக்கப்படுகிறது. இவ் வாங்கும் ஆற்றலைப் பின்னர் வாணிப மந்த காலத்தில் பயன் படுத்திக் கொள்ளலாம். பின்பு வருமான வரி வீதங்களை அதிகரித்தாலும், இவ் வதிகரிக்கப்பட்ட வரித் தொகைகளைக் கட்டாயமாகக் கடன் அளிக்கப்பட்ட தொகையில் வரவு வைத்துக்கொள்ளலாம். அவரவர்கள் விருப்பம்போல் கடன் பத்திரங்களை வாங்கினால் இருப்பதைவிட, இக் கட்டாயக் கடன் அளிப்பினால் கடன் பத்திரங்கள் பரவலாகவும், மிகவும் நேர்மையாகவும் பகிர்வு செய்யப்படும்.

அரசு கட்டாயக் கடன் முறையை மேற்கொண்டால் பல பிரச்சினைகளையும் ஆயவேண்டியிருக்கும். முதல் பிரச்சினை எதைத் தளமாகக் கொள்வது என்பது பற்றியது. இதுவரையில் வருமானம்தான் அடித்தளமாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது; ஆனால், செலவையும் அடித்தளமாகப் பயன்படுத்தலாம். பிற சேமிப்புகளைச் செய்திருந்தால், அவற்றைக் கட்டாயக் கடனைப் பயனற்றதாக்கப் (offset) பயன்படுத்துவது விரும்பத்தக்கதா என்பது இரண்டாவது பிரச்சினையாகும். இவற்றினால் இவற்றைச் செயல்படுத்துவது பெரிதும் சிக்கலானதாக ஆனாலும், பணவீக்கக் காலத்தில் விதிக்கப்படும் உயர்ந்த வருமான வரிகளின் அநீதிகள் குறைக்கப்படுகிறது. ஏனெனில், அவர்கள் மேலும் 'கசக்கிப் பிழியப்பட' மாட்டார்கள். வட்டி அளிக்கவேண்டுமா என்பது மூன்றாவது பிரச்சினையாகும். நீர்மையுள்ள செல்வத்தையும்

கணக்கில் எடுத்துக்கொண்டு கட்டாயக் கடனிலிருந்து வேறுபட்ட கட்டாயச் சேமிப்பைப் புகுத்தினுல் இத் திட்டத்தினுல் மிகுந்த பயன் விளையும்.

**நிலையான வாங்கும் ஆற்றலைக்கொண்ட கடன் பத்திரங்கள் (Fixed Purchasing Power Bonds)**

இரண்டாம் உலகப்போர் நிகழ்ந்த காலத்தில், கானடாவிலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் பலர் சேமிப்புப் பத்திரங்களை வாங்கினர். போர் ஓய்ந்த பிறகு ஏற்பட்ட பணவீக்கத்தினுல் இவர்கள் அனைவரும் நட்டம் எய்தினர். இதற்கு மாருக நிலத்திலும், நெடுநாள் இருக்கக்கூடிய பண்டங்களிலும், பங்குகளிலும் முதலீடு செய்தவர்கள் அவ்வளவாக நட்டம் அடையவில்லை. ஆகவே, ஸம்நர் ஸ்லிச்டரும் (Sumner Slichter), ஏனையோரும் ஒரு நிலையான வாங்கும் ஆற்றலைக்கொண்ட கடன் பத்திரங்களை வெளியிடும்படி யோசனை தெரிவித்தனர். இவ் வாங்கும் ஆற்றல் பொருத்தமான விலைக் குறியீட்டைக் (price index) கொண்டு அறுதியிடப்படும். இதனுல் பணவீக்கத்தினுல் ஏற்படும் இழப்புகள் அகற்றப்படும். இக் கடன் பத்திரங்களை உடனடியாக மீட்சி செய்வதற்குத் தடை விதிக்கவேண்டும். குறிப்பிட்ட காலம் கழித்தே இவற்றை மீட்சி செய்யலாம். இங்ஙனம் செய்தால் கடன் பத்திரங்களைத் தவணை காலம் முடியும்வரை வைத்திருப்பார்கள். இவ்வாருகப் பணவீக்கம் குறையும். இம்முறையில் உள்ள ஒரு பெருத்த குறைபாடாவது, இப்போது அங்காடியில் இருக்கும் கடன் பத்திரங்களுக்கும், புதிதாக வெளியிடப்படும் கடன் பத்திரங்களுக்கும் இடையே நிலவும் உறவு பற்றியது. பணவீக்கம் வரும் என்று உறுதியாக நம்பினுல் பலரும் தங்களிடமுள்ள கடன் பத்திரங்களை விற்றுவிட்டுப் புதிய கடன் பத்திரங்களை வாங்குவர். இதனுல் பிணையங்களின் அங்காடி சீர் குலையும். ஒவ்வொரு தனியாளும் இவ்வளவுதான் வாங்கலாம் என்பதை வரையறுப்பதன்மூலம் இப்போக்கைக் குறைக்கலாம். இதில் இன்னெரு குறைபாடும் உள்ளது. நிலையான வாங்கும் ஆற்றலைக்கொண்ட கடன் பத்திரங்களை வெளியிட்ட மாத்திரத்திலேயே, பணவீக்கம் வரும் என்று எதிர்பார்த்து மேலும் பலர் இக் கடன் பத்திரங்களை வாங்கக்கூடும். அரசு பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த நடவடிக்கைகளை மேற்கொள்ளும்படி நிர்ப்பந்தப்படுத்தாமலிருப்பது இத் திட்டத்திலுள்ள மூன்ருவது குறையாகும். பணவீக்கம் ஏற்பட்டால், அரசின் கொடுப்பல்கள் அதிகரிக்கும். ஏற்கெனவே நாடு பணவீக்கத்தினுல் அவதிப்பட்டுக் கொண்டிருந்தால் இதனுல் கொடுப்பல்கள் நிலைமை மேலும் மோசமாகும். விலைகள் ஏறும் பொழுது கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள் தாங்கள் 'ஏழைகள் ஆகிவிட்டதாக உணரமாட்டார்கள்.' அதனுல்

அவர்கள் செலவுகளையும் குறைத்துக் கொள்ளமாட்டார்கள். இங்ஙனம் பணவீக்கத்தினால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு சமுதாயத்திற்கு, ஒரு நிலையான வாங்கும் ஆற்றலைக் கொண்ட கடன் பத்திரமுறை ஓர் இயங்கும் படிக்கட்டாக (escalator) அமையும். இதனால் பணவீக்கம் மேலும் மோசமாகும்.

### பேங்குகள் ஒழிந்த நிதிய நிறுவனங்களுக்குக் கடன் பத்திரங்களை விற்றல்

ஒரு பெரும் போர் நிகழ்ந்து கொண்டிருக்கும் பொழுது அனைத்துக் கடன் பத்திரங்களையும் தனியார்களுக்கே விற்ப தென்பது நடவாத செயல். ஆகவே, புதிதாகப் பணத்தைப் படைக்காமல் போதிய நிதியைத் திரட்ட வேண்டுமெனில், ஓரள வேனும் கடன் பத்திரங்களை நிதிய நிறுவனங்களுக்கு விற்றேயாக வேண்டும். காப்புறுதிக் கம்பெனிகள் போன்ற பேங்குகள் ஒழிந்த நிதிய நிறுவனங்கள் அரசின் கடன் பத்திரங்களை வாங்க முன் வரலாம். ஆனால், கடன் பத்திரங்களை வாங்கும் அளவுக்கு இந் நிதிய நிறுவனங்கள் தனியார்களுக்குக் கடன் அளிப்பது குறையும். வாணிபப் பேங்குகளுக்குக் கடன் பத்திரங்களை விற்றால், அதனால் புதிதாக வாங்கும் ஆற்றல் படைக்கப்பட்டு, பணவீக்கம் ஏற்பட வாய்ப்புண்டு. ஏனைய நிதிய நிறுவனங்களுக்குக் கடன் பத்திரங்களை விற்றால் புதிதாக வாங்கும் ஆற்றல் படைக்கப்படுவ தில்லை. இதுதான் இம்முறையிலுள்ள ஒரு பெருத்த நன்மையாகும்.

### வாணிபப் பேங்குகளுக்குக் கடன் பத்திரங்களை விற்றல்

தனியார்களுக்கும், பேங்க் ஒழிந்த நிதிய நிறுவனங்களுக்கும் போதிய அளவு கடன் பத்திரங்களை விற்க முடியாத பொழுது, வாணிபப் பேங்குகளுக்குக் கடன் பத்திரங்களை விற்றல் இன்றியமை யாததாகிறது. வாணிபப் பேங்குகளிடம் ரொக்க இருப்புகள் மிகை யாக இருந்தால், அவற்றினால் புதிதாக வாங்கும் ஆற்றலைப் படைக்க முடியும். ஆகவே, அவை அரசுக்குக் கடன் அளிப்பதால் பணவாட்ட விளைவுகள் ஏற்படா. பேங்குகள் மிகவும் நீர்மைத் தன்மையுள்ள உடைமைகளை ஏராளமாக வைத்திருக்கின்றன. அவ் வுடைமைகளைப் பேங்குகள் எப்பொழுது வேண்டுமாயினும் விற்க முடியும். இவ்விதச் சூழ்நிலையால் போர் ஓய்ந்த பிறகு கிரடிட்டைக் கட்டுப்படுத்துவது கடினமாகிறது. ஏனெனில். தங்களிடமுள்ள கடன் பத்திரங்களை விற்றுப் பேங்குகள் போதிய ரொக்க இருப்புகளைப் பெற முடியும்.

நடைமுறையில் இரண்டாவது உலகப்போர் நிகழ்ந்து கொண் டிருந்த பொழுது பேங்குகளிடமிருந்து கணிசமான அளவு கடன்

வாங்குவது இன்றியமையாததாயிற்று. இது ஓரளவு விரும்பத் தக்கது எனலாம். ஏனெனில், போர்க் காலத்தில் வாணிப நடவடிக் கைகள் மிகுதியாவதால் அவற்றை நடத்துவதற்கு அதிகமான பணம் தேவைப்படுகிறது. தனியார்களிடமும், பேங்குகள் ஒழிந்த நிதிய நிறுவனங்களிடமும் விற்க முடியாத கடன் பத்திரங்கள் அனைத்தையும் பேங்குகளே வாங்கும்படி ஆயிற்று. இங்ஙனம் பேங்குகள் வாங்கவில்லை என்றால், பெருத்த உளவியல் தீய விளைவுகள் ஏற்பட்டிருக்கும். பேங்குகள் அரசின் கடன் பத்திரங்களை இன்றியமையாத அளவு வாங்கும் பொருட்டு, அவை அரசின் டிபாசிட்டுகளுக்கு எதிராக ரொக்க இருப்புகளை வைத்திருக்க வேண்டியதில்லை என்று மையப் பேங்க் கூறியது. ஆனால், பேங்குகள் வைத்திருந்த அரசு ஒழிந்த நிறுவனங்கள், தனியார்கள் இவர்களின் டிபாசிட்டுகள் அதிகரித்த பொழுது, பேங்குகள் போதிய ரொக்க இருப்புகளை வைத்திருப்பதற்கான நடவடிக் கைகளை மையப் பேங்க் மேற்கொண்டது. ஆயினும், பேங்கு களிடம் கடன் பத்திரங்களை விற்பது மிகக் குறைந்த அளவாக இருப்பதற்கு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. பலவகைக் கடன் பத்திரங்கள் பேங்குகள் ஒழிந்த நிதிய நிறுவனங்களுக்கு மட்டுமே விற்கப்பட்டன. சில வேளைகளில் பேங்குகள் இவ்வளவு தான் கடன் பத்திரங்களை வாங்கலாம் என்று உச்ச அளவுகள் அறுதியிடப்பட்டன. போர்க் காலத்தில் அமெரிக்க ஐக்கிய நாடு களின் அரசு, பேங்குகளுக்கு அதிகமான அளவு கடன் பத்திரங்களை விற்கவில்லை. போர் முடியும் தறுவாயில் ஏராளமான கடன் பத்திரங்களைப் பேங்குகள் வாங்கியதால், வட்டி வீதம் பொது வாகக் குறையத் தொடங்கியது.

**கடன் பத்திரங்களை மையப் பேங்குக்கு விற்றல்**

வேறுவழியில்லை என்றால் விற்க முடியாத (தனியார்களுக்கும், பேங்குகள் ஒழிந்த நிதிய நிறுவனங்களுக்கும், பேங்குகளுக்கும்) கடன் பத்திரங்கள் அனைத்தையும் அரசு மையப் பேங்குக்கு விற்று விடலாம். அரசுகள் மையப் பேங்குகளிடமிருந்து நேரிடையாகக் கடன்கள் பெறுதலை விரும்பாததற்கு இரண்டு காரணங்கள் உள. முதலாவதாக, இம்முறையைப் பின்பற்றினால், வாணிபப் பேங்கு களின் ரொக்க இருப்புகள் நேரிடையாக அதிகரிக்கிறது. இந்திய ரிசர்வ் பேங்குகளிடமிருந்து இந்திய அரசு பெற்ற கடன் தொகை களைக் காசோலைகள் வாயிலாக அரசு எடுத்துக் கொள்கிறது. இக் காசோலைகள் வாணிபப் பேங்குகளிடம் டிபாசிட்டு செய்யப் படுகின்றன. இக் காசோலைகள் தீர்வகத்தில் (clearing house) தீர்க்கப்படும் பொழுது, வாணிபப் பேங்குகளின் ரொக்க இருப்புகள்

அதிகரிக்கின்றன; இங்ஙனம் அதிகரிப்பதால் பேங்குகளின் கடன் அளிக்கும் ஆற்றலும் அதிகரிக்கிறது. வாணிபப் பேங்குகள் அதிகரித்த ரொக்க இருப்புகளை அடிப்படையாகக் கொண்டு புதிதாகக் கடன்களை அளித்தால் பணவீக்கம் ஏற்படுகிறது. இரண்டாவதாக, மையப் பேங்கினிடமிருந்து கடன் வாங்குவது காகிதப் பணத்தை அச்சிடுவதை ஒத்திருக்கிறது. மக்கள் தம்மை வெறுக்கக்கூடும் என்று அஞ்சி இம்முறையைப் பயன்படுத்த அரசுகள் தயங்குகின்றன. கடன் பத்திரங்களை நேரிடையாக மையப் பேங்குக்கு விற்பதற்கும், மறைமுகமாக வாணிபப் பேங்குகளின் வாயிலாக மையப் பேங்குக்குக் கடன் பத்திரங்களை விற்பதற்கும் யாதொரு வேறுபாடுமில்லை. யாதாயினும் வேறுபாடு இருந்தால் அது உளவியல் தொடர்பானதேயன்றி வேறன்று. இ.எ. கோல்டன் வீஸர் (E. A. Golden Weiser) போன்றோர், அரசு:கடன் பத்திரங்களை நேரிடையாகவே மையப் பேங்குகளுக்கு விற்க வேண்டுமென்றும், வாணிபப் பேங்குகளின் விடுமிகை வீதங்களை உயர்த்தி அவற்றை முடக்கிவிட வேண்டுமென்றும், இதனால் இவற்றை அடிப்படையாகக் கொண்டு வாணிபப் பேங்குகள் புதிதாகக் கடன் அளிப்பது தடுக்கப்படும் என்று கூறுகிறார்கள். இதனால் போர் நின்ற பிறகு கடன் பத்திரங்களின் விலைகள் குறையாதிருக்க நடவடிக்கை மேற்கொள்ள வேண்டியதும் தவிர்க்கப்படும். மேலும், அரசும் வட்டிக்காக அதிகத் தொகை செலவழிக்க வேண்டியதில்லை. கூடுதலாகப் படைக்கப்படும் ரொக்க இருப்புகளை எத்துணை முடக்கலாம் என்பதையும், இவ்வகைத் திட்டத்தினால் மக்களிடம் ஏற்படும் உளவியல் விளைவுகள் யாவை என்பதையும் பொறுத்தே இத் திட்டத்தின் வெற்றி இருக்கிறது.

### கடன் வாங்கும் கொள்கையைப்பற்றிய ஏனைய கூறுகள்

பணவீக்கம் நிலவும் காலங்களில் வட்டி வீதம் உயர்த்தப்படாமல் இருக்கலாம். அக்காலை குறுங்காலக் கடன்களை வாங்குதல் நல்லதன்று. (1) ஏனெனில், குறுங்காலக் கடன் பத்திரங்கள் உச்ச அளவு நீர்மைத்தன்மை உடையவை. இவற்றால் வாங்கும் ஆற்றலை முடக்கிவைக்க முடியாது. (2) அடிக்கடி கடன்களைக் கால நீட்டிப்புச் செய்வதற்குச் செலவு ஆவதோடு தொல்லையும் ஏற்படுகிறது. வட்டி வீதங்கள் உயர்வதற்கு முன்பு, குறுங்காலக் கடன் பத்திரங்களை நெடுகாலக் கடன் பத்திரங்களாக மாற்றிவிட்டால் வட்டிக்கு ஆகும் செலவு அதிகரிக்கும். (3) நெடுங்காலக் கடன் பத்திரங்களை வாங்க விரும்பாத சில தனியார்கள் குறுங்காலக் கடன் பத்திரங்களை வாங்க விரும்புவர். இதனால் பண வீக்கத்தை அதிகரிக்கும் வேறு சில வழிகள்மூலம் அரசு கடன் திரட்ட வேண்டியதில்லை.

இரண்டாம் உலகப்போர் நிகழ்ந்த காலத்தில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசு குறுங்காலக் கடன் பத்திரங்களை அதிகமாக வெளியிட்டது. போர் நின்றபொழுது அரசின் கடனில் 23% குறுங்காலக் கடனாக இருந்தது. (4) பணவீக்கக் காலத்தில் வட்டி வீதங்களை உயர்த்த அனுமதி அளிக்கப் படுகின்றது. ஆகவே, இக் காலத்தில் குறுங்காலக் கடன்களை வாங்குவது நன்மை பயக்கும். ஆனால், இவை நெடுங்காலக் கடன்களைக் காட்டிலும் ஒப்புமையில் அதிக நீர்மைத்தன்மை உடையனவாக இருப்பதே இவற்றின் குறைபாடாகும். ஆனால், செலவின்மீது ஏற்படும் விளைவுகளைப் பொறுத்தவரையில் குறுங்காலக் கடன்களுக்கும், நெடுங்காலக் கடன்களுக்கும் இடையில் பெருத்த வேறுபாடில்லை.

வட்டி வீதங்கள்

அங்காடியில் நிலவும் நடப்பு வட்டி வீதங்களில்தான் தனியார் கடன் வாங்க இயலும். அரசைப் பொறுத்த வரையில் இவ்வித நிர்ப்பந்தச் சூழ்நிலை இல்லை. ஏனெனில், மையப்பேங்கும், அரசும் சேர்ந்து அங்காடி வீதத்தை (ஓரளவுக்கு) மாற்ற முடியும். ஆனால், இக் கொள்கையைப் பின்பற்றுவதில் இரு தொல்லைகள் எதிர்ப்படுகின்றன. வட்டி வீதங்கள் குறைந்தால் அரசின் வட்டிச் செலவு குறைவது உண்மையே. ஆனால், வட்டி வீதம் குறைந்தால் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தும் திட்டமும் அத்துணை வெற்றி தராது. வட்டி வீதங்கள் குறைவாக இருந்தால் தனியார்களும், வணிக நிறுவனங்களும் வைத்திருக்கும் செல்வங்களின் நீர்மைத்தன்மை குறையாது. அவர்கள் அரசின் கடன் பத்திரங்களையும் கணிசமான அளவு வாங்க மாட்டார்கள். மேலும், இவ் வட்டி வீதங்கள் தனியார் முதலீடு செய்வதையும் அவ்வளவாகப் பாதிக்காது. ஆகவே, பணவீக்கம் நிலவும் காலங்களில் வட்டிவீதக் கொள்கையை அறுதியிடுவதற்கு முன்பு, இக் கொள்கையால் பொருளாதாரத்தின்மீது ஏற்படும் விளைவுகளையும், வட்டிக்காகச் செலவழிக்கப்படும் தொகைகளின் மீது ஏற்படும் விளைவுகளையும் அரசு எண்ணிப் பார்க்கவேண்டும்.

இரண்டாவது உலகப்போர் நிகழ்ந்த காலத்தில், போர் தொடங்கும் பொழுது வட்டி வீதங்கள் இருந்த நிலையிலேயே அமெரிக்க அரசு அவற்றை முடக்கிவைத்தது. வாணிப முதலீட்டை அரசு கறாராகக் கட்டுப்பாடு செய்யும் பொழுது, நெடுங்காலக் கடன் பத்திரங்களுக்கு அளிக்கப்படும் வட்டி வீதத்தை உயர்த்துவது, பணவீக்கத்திற்கு எதிரான நடவடிக்கையாகாது. இவ்வாறாக அமெரிக்க அரசு வட்டி வீதம் 2·5% என்று அறிவித்தது.

சிலர் வட்டி வீதங்கள் சிறிது காலம் கழித்து உயரும் என்று கருதி அரசின் கடன் பத்திரங்களை உடனடியாக வாங்காமல் ஒத்திப் போடலாம். இதைத் தவிர்க்கும் பொருட்டு, போர் முடியும் அளவும் வட்டி வீதம் உயர்த்தப் படாதென்றும், இதற்கான நடவடிக்கைகளைப் பெடரல் ரிசர்வ் அமைப்பு மேற் கொள்ளும் என்றும் அரசு அறிவித்தது.

அமெரிக்க அரசு குறுங்காலக் கடன்களுக்கு அளித்த வட்டி வீதங்களையும் முடக்கியது. ஆனால், இந் நடவடிக்கையால் எதிர்பார்த்த அளவு வெற்றி கிடைக்கவில்லை. 90 நாட்கள் சீட்டுகளுக்கு $\frac{3}{8}$% என்றும், 9-ல் இருந்து 12 திங்கள் தவணை காலம் உள்ள கருவூலச் சான்றிதழ்களுக்கு $\frac{7}{8}$% என்றும் வட்டி அறுதியிடப் பட்டது. இதனால் அரசின் செலவுகள் குறையும் என்றும், நெடுங் காலக் கடன் வட்டி வீதங்களையும் ஏறாமல் பார்த்துக் கொள்ளலாம் என்றும் அரசு கருதியது. நெடுங்காலக் கடன் பத்திரங்களுக்கு 2·5% வட்டி வீதம் அளிக்கப்படும் என்று அரசு உறுதியளித்ததால், குறுங்காலக் கடன் பத்திரங்களை வாங்குபவர்களுக்குப் பெரும்பாலும் ஆதாயம் இல்லாது போயிற்று. நெடுங்காலக் கடன் பத்திரங் களுடன் ஒப்பிடும் பொழுது, குறுங்காலக் கடன் பத்திரங்கள் அதிகமான நீர்மைத்தன்மை வாய்ந்தவை. அத்துடன் அவற்றின் விலைகளிலும் பெருத்த மாறுதல் ஏற்பட்டு இழப்பு ஏற்பட வாய்ப் பில்லை. ஆனால், நெடுங்காலக் கடன் பத்திரங்களின் விலைக்கு அரசு உத்தரவாதம் அளித்ததால், ஒப்புமையில், குறுங்காலக் கடன் பத்திரங்களை வாங்கினால் என்ன ஆதாயங்கள் கிடைக் குமோ, அவை கிடைக்க வழியில்லாது போயிற்று. இவ்வாறாக, குறுங்காலக் கடன் பத்திரங்களுக்கு ஏறக்குறைய அங்காடியே இல்லாது போயிற்று. ஆகவே, அனைத்துக் குறுங்காலக் கடன் பத்திரங்களையும் பெடரல் ரிசர்வ் அமைப்பு வாங்கும்படி ஆயிற்று.

### பணப்பெருக்கக் காலங்களில் கடன் மேலாண்மை

பணவீக்கம் மிதமாக இருக்கும் பொழுது அரசின் வரவு செலவு திட்டங்கள் உபரியாக இருக்கவேண்டும். இவ் வுபரி வருவாயைக் கொண்டு அரசு தன் கடனைக் குறைத்துக் கொள்ள வேண்டும். உபரி வரவு செலவு திட்டம் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துவதோடு, பொருளாதாரத்தில் கடன்களால் ஏற்படும் அதிர்வு சக்திகளையும் அகற்றுகிறது. ஆயினும், இரண்டாம் உலகப் போர் ஓய்ந்த பிறகும் அமெரிக்க அரசு பாதுகாப்புக்கு அதிகம் செல வழிக்க வேண்டியிருந்தது. அரசியல் காரணங்களினால் வரிகளைக் குறைக்க நேர்ந்தது. இதனால் அரசின் கடன் தொகையை அவ் வளவாகக் குறைக்க முடியவில்லை. கடனை அடைப்பதுடன் வேறு

சில கொள்கைகளையும் அரசு மேற்கொள்வதால், பணவீக்கத்தைப் பெரிதும் கட்டுப்படுத்தலாம். இவற்றில் முக்கியமான கொள்கை வட்டி வீதம் பற்றியது. ஆனால், இது பணக் கொள்கையில் அடங்கும்; நிதியக் கொள்கையில் அடங்காது. ஆயினும், இது பற்றிச் சுருக்கமாகக் கூறுவாம்.

### வட்டி வீதக் கொள்கை

போரொழிந்த காலங்களில் பணவீக்கம் ஏற்பட்டால் வட்டி வீதத்தை உயர்த்திப் பணவீக்கத்திற்கு எதிரான கருவியாகப் பயன் படுத்தலாம். இதனால் நெடுங்காலக் கடன் பத்திரங்களின் விலை களும் குறையும். இரண்டாம் உலகப் போருக்குப் பின்பு பல பொருளியல் அறிஞர்களும் இக் கருத்தை ஏற்றுக் கொண்டார்கள். வட்டி வீதம் உயர்வதனால் பணவீக்கம் எங்ஙனம் கட்டுப்படுத்தப் படுகின்றது என்பதை இப்பொழுது காண்போம். முதலாவதாக, அரசின் கடன் பத்திரங்களின் விலைகள் முகப்பு விலைக்கும் குறை வதால், வாணிபப் பேங்குகள் அவற்றின் தவணை காலம் முடிவதற் குள்ளாக விற்கத் தயங்குகின்றன. இதனால், வாணிபப் பேங்கு களினால் அதிகமாகக் கடன் அளிக்க முடிவதில்லை. இவ்விதம் மையப் பேங்கின் கிரடிட் கொள்கை எதிர்பார்த்த பயனை நல்கு கிறது. இரண்டாவதாக, அங்காடியில் வட்டி வீதம் அதிகரித்தால், தனியார் முதலீடு செய்வது குறையும். மூன்றாவதாக, தவணை காலம் முடியும்வரை தனியார்களும், நிறுவனங்களும் கடன் பத்திரங்களை வைத்திருப்பதற்கு (விற்காமல்) விரும்புவர். இறுதி யாக, வட்டி வீதம் அதிகரித்ததால் சில தனியார்கள் அதிகமாகக் கடன் பத்திரங்களை வாங்கக் கூடும். இங்ஙனம் வாங்கினால் அவர் களின் நீர்மைத்தன்மை குறைவதுடன், பேங்குகளிடமிருந்த சில கடன் பத்திரங்களும் அவர்களின் கைகளுக்கு வந்து சேரும்.

### கால நீட்டிப்புக் கொள்கைகள்

பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என்றால், கடன் களைக் கால நீட்டிப்புச் செய்ய வேண்டும். நெடுங்காலக் கடன் பத்திரங்களைக் காட்டிலும், குறுங்காலக் கடன் பத்திரங்கள் அதிக நீர்மைத்தன்மை வாய்ந்தவை. ஆகவே, நெடுங்காலக் கடன் பத்திரங்களின் விலைகள் முகப்பு விலைகளைக் காட்டிலும் குறைந்தால், குறுங்காலக் கடன்களைக் நெடுங்காலக் கடன்களாக மாற்றுவது நல்லது. இதனால் பணவீக்கம் கட்டுப்படுத்தப்படும். ஆனால், வட்டிக்கு ஆகும் செலவுகள் அதிகமாகும். இதேபோன்று, வேறு மூலங்களிலிருந்து கடன் வாங்கிப் பேங்குகள் வைத் திருக்கும் கடனைக் கால நீட்டிப்புச் செய்தால், பணவீக்கத்தைக்

கட்டுப்படுத்தலாம். ஆனால், இதற்கு இணையான தொகைகளைப் பேங்குகள் கடனாக அளிக்கக் கூடாது. அப்படியே அவை கடன் அளித்தாலும், பேங்குகளின் கையில் இப்பொழுது கடன் பத்திரங்கள் இல்லாததால், கிரடிட் கட்டுப்பாடுகளை மையப் பேங்க் செயல்படுத்துவது இலகுவாகும்.

### வாணிப மந்த காலத்தில் கடன் மேலாண்மைக் கொள்கைகள்

பணவீக்கக் காலத்தைக் காட்டிலும் வாணிப மந்த காலங்களில் கடன் வாங்குவதும், கடன் மேலாண்மை செய்வதும் இலகுவான பிரச்சினைகளாகும். வாணிப மந்த காலங்களில் பேங்குகளிடம் டிபாசிட்டுகள் அதிகமாக இருக்கலாம் அவற்றின் விடுமிகை வீதங்களும் அதிகமாக இருக்கலாம். இதனால், அக் காலத்தில் முதலீடு செய்வதற்கான வாய்ப்புகள் மிகவும் குறைவு. அரசு இந் நிதிகளை கடன் வாங்கலாம்; அல்லது புதிய சேமிப்புகளைத் திரட்டலாம். இவற்றைத் தனியார் முதலீடு செய்வதற்கு வாய்ப் பின்றி இருக்கலாம். ஆகவே, இதற்கு இணையான தொகைகளை அரசு செலவழித்தாலன்றி, வாணிப மந்தம் இன்னும் மோசமான நிலைமையை அடையலாம். ஆனால், அரசு கடன் வாங்கியதால் மட்டுமே பணச் சுருக்கம் ஏற்படாது. பண அங்காடிகளில் பணம் புரளாமல் இறுக்கமாக இருக்கும் பொழுது, மையப் பேங்க் வெளிச் சந்தை நடவடிக்கைகளை மேற்கொண்டு கடன் பத்திரங்களை வாங்கலாம்.

போர்க் காலத்தில் தங்களின் நுகர்வைக் குறைத்துக் கொண்டு மக்கள் கடன் பத்திரங்களை வாங்குவது போன்று, அமைதிக் காலத்திலும் வாங்குவது விரும்பத்தக்கதன்று. ஆனால், தனியாரிட மிருந்தும், நிதிய நிறுவனங்களிடமிருந்தும் பயன்படுத்தப்படாமல் தேங்கிக் கிடக்கும் நிதிகளை அரசு கடனாகப் பெறலாம். இவ்விதம் செய்தால் பணச்சுருக்கம் ஏற்படாது. மையப் பேங்கின் நட வடிக்கையால் வாணிபப் பேங்குகளின் ரொக்க இருப்புகள் அதிகமாக இருக்கலாம். இவ்வாறு இருக்கும்வரை வாணிபப் பேங்குகள் எவ்வளவு வேண்டுமானாலும் அரசின் கடன் பத்திரங்களை வாங்கலாம். ஆயினும், பேங்குகளுக்குக் கடன் பத்திரங்களை விற்பதை அரசு மட்டுப்படுத்திக் கொள்வது நல்லது. ஏனெனில், பேங்குகள் அரசின் கடன் பத்திரங்களை ஏராளமாக வாங்கினால், பின்னர் பணவீக்கம் ஏற்படும் பொழுது, பேங்குகளின் கடன் அளிக்கும் கொள்கையைக் கட்டுப்படுத்துவது கடினம். ஏனெனில், அவை அரசின் கடன் பத்திரங்களை விற்று வேண்டிய ரொக்க இருப்புகளைப் பெற்றுக் கொள்ளலாம்.

அரசு கடன் பத்திரங்களை மையப் பேங்குக்கு விற்ருல் பண வாட்ட விளைவுகள் மிகவும் குறையும். அதே வேளையில் வாணிபப் பேங்குகளின் ரொக்க இருப்புகளும் அதிகரிக்கும். ஆனல், இம் முறையைப் பின்பற்றினல் வணிக சமுதாயத்தின் நம்பிக்கை மேலும் குறையும். மையப் பேங்குக்கு நேரிடையாக அரசின் கடன் பத்திரங்களை விற்பதற்கும், வெளிச்சந்தை நடவடிக்கை வாயிலாக மையப் பேங்க் அரசின் கடன் பத்திரங்களை வாங்கிக் கொண்டிருக்கும் பொழுது இவற்றைப் பொதுமக்களுக்கு விற்ப தற்கும் யாதொரு வேறுபாடுமில்லை. யாதாயினும் வேறுபாடு இருந்தால் அது உளவியலைப் பற்றியதாகும்.

வாணிப மந்த காலத்தில் அரசின் கடனை அடைப்பது நல்ல தன்று. ஏனெனில், இதனல் மேலும் பணவாட்டம் அதிகமாகும். கடன் பத்திரங்களின் தவணை காலம் முடியும் பொழுதோ அல்லது சேமிப்புப் பத்திரங்களை மக்கள் ரொக்கமாக மாற்றும் பொழுதோ, அரசு புதிய கடன்களை வெளியிட வேண்டும். கடன்களைக் கால நீட்டிப்புச் செய்வதிலும் யாதொரு தடங்கலும் ஏற்படாது. இதற்குக் காரணம் நீர்மைத்தன்மையுள்ள மூலதனமும், மையப் பேங்கின் வளங்களும் உடனடியாகக் கிடைப்பதேயாகும். எப் பொழுது வேண்டுமாயினும் கடன் மீட்சி செய்யக்கூடிய சேமிப்புப் பத்திரங்கள் இருப்பதும் நல்லது. ஏனெனில், இதனல் மீட்சி சுலபமாகிறது.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. John F. Due, 'Government Finance', 3rd Edition, 1963, Chapter 30.
2. E. R. Ralph, 'Principles of Debt Management', American Economic Review, (June, 1957), Vol. 47. pp. 302—320.
3. R. A. Musgrave, 'The Theory of Public Finance', 1959, Chapter 24.
4. A.R. Prest, 'Public Finance', 1960, Chapter 12.
5. Readings in Fiscal Policy, The American Economic Association, George Allen and Unwin, 1955, Chapters 13, 14, 15, 16, 17 and 18.
6. Ursula K. Hicks, 'Public Finance', James Nisbet & Co. Ltd., 2nd Edition, Reprint, 1956, pp. 315—328.

# 38. அரசின் கடன்களை அடைத்தல்

கடன் நிராகரிப்பு அல்லது கடன் ஏய்ப்பு (Repudiation)

கடன்களினின்றும் அரசு விடுபடுவதற்கான ஒரு வழி அவற்றைத் திருப்பித் தருவதாகும். அவற்றை நிராகரிப்பது அல்லது ஏய்ப்பது விரும்பத்தகாத வேறொரு வழியாகும். சாதாரண மாகக் கடனை நிராகரிப்பதற்கு முன்பு, அரசு ஊதாரித்தனமாகச் செலவழிப்பதும், புரட்சி அல்லது போர் ஏற்படுவதும் வழக்கமாகும். 'நிராகரிப்பது நடைமுறை அரசியலுக்கு (practical politics) ஏற்றதுமன்று; சமுதாய நீதியுமன்று. ஒரு குடியாட்சிச் சமுதாயம், தான் தேர்ந்தெடுத்த அரசின் பாவங்களுக்குக் கழுவாய் செய்ய வேண்டும். சிறிது காலம் புத்தி சுவாதீனமில்லாமல் இருந்து, பின்பு புத்தித் தெளிவு ஏற்பட்டதும், கடந்த காலத்திய மடச் செயல்களின் தீய விளைவுகளைச் சரிக்கட்டுவதற்காகப், பெரும் பான்மையோர் செய்த பாவங்களை, நிரபராதிகளான சிறுபான்மை யோர்மீது திணிப்பதன்மூலம், பொதுமக்களுக்கு அரசின்மீதுள்ள நம்பிக்கை சிதையும். சமுதாயத்திலுள்ள அனைவரும் தேசியக் கடன் பத்திரங்களை சம அளவில் வைத்திருப்பார்களாகில், கடனை ஏய்ப்பது அநீதியாகாது. ஆனால், அவ்விதம் நடைமுறையில் இல்லை,' எனப் பிலிப் ஸ்நோடன் கூறினர்.

அரசு கடனை நிராகரித்தால் அதற்குப் பரிகாரம் கிடையாது. ஒரே பரிகாரம் வன்முறையைப் பயன்படுத்துவது அல்லது கடனை நிராகரித்த நாட்டை ஆக்கிரமித்துக் கொள்வது ஆகும். கடனை ஏய்ப்பது ஒழுக்கக் கேட்டைக் காட்டுவதன்றி, ஒரு நாட்டில் நல்ல நடத்தையும், செல்வமும் தீர்ந்து விட்டன என்பதைக் காட்டும் அறிகுறியும் ஆகும். அதனால் வாணிபமும், வளர்ச்சியும் தடை படும். எதிர்காலத்தில் நாட்டின் நாணயம் அழிந்துபடும். ஏமாற்றுவது நேர்மையற்றது என்பதோடுகூட உசிதமானதுமன்று.

அரசுக்கும் அதன் கடன்காரர்களுக்கும் இடையே செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தங்கள் நிராகரிக்கப்பட்டு வேறு ஒப்பந்

தங்கள் அமலில் இருக்குமானால், உடைமைக்காரர்களுள் ஒரு பகுதியினர் மட்டும் ஒறுக்கப்படுவார்கள். ஏனையோர் பாதிக்கப்படுவதில்லை. சில வேளைகளில் அவர்கள் பிற்காலத்தில் வரிக்குறைப்பினால் ஆதாயமும் பெறக் கூடும். ஆகவே, ஏமாற்றுவது அநீதியாகும். ஆனால், அனைத்து உடைமைக்காரர்களுடனும் செய்து கொண்ட அனைத்து ஒப்பந்தங்களும் ஒரேசமயம் நிராகரிக்கப்படுமானால், அஃது ஒரு குறிப்பிட்ட பகுதியினருக்கு மட்டும் எதிரிடையாக வேறுபாடு (discrimination) காட்டுவது ஆகாது. அனைத்து உடைமைக்காரர்களும் ஒரேமாதிரி நடத்தப்படுவதால், இதை அநீதியானது என்று கூறவும் முடியாது. இவ்வாறு அனைத்து ஒப்பந்தப் பத்திரங்களையும் கிழித்தெறிய வேண்டுமானால், நாம் ஒரு சமுதாயப் புரட்சிக்கு ஆயத்தமாக இருக்கவேண்டும். இப்புரட்சியின் விளைவுகள் உடைமைக்காரர்கள் அனைவருக்குமே அநீதி பயப்பதாக முடியும். ஆயினும், சிலர் தனியாரின் உடைமை ஆட்சியே தகாததென்றும், அதுவும் அதனால் அதிக ஏற்றத்தாழ்வு ஏற்படுமானால், அவ் வமைப்பே அநீதியானதெனவும் கூறுகிறார்கள்.

கடனை நிராகரிக்கும் எந்த ஒரு அரசும் சில ஆண்டுகளுக்கேனும் புதிதாகக் கடன்களை வாங்குவதில் அல்லல்படவேண்டி வரும். இவ் வாதம் கடனை ஏமாற்றுவதற்கு எதிரிடையான வலுவான வாதமாகும். இப்பொழுது அரசு ஏமாற்றும் கடன் தொகையைக் காட்டிலும் எதிர்காலத்தில் கடனாகப் பெறும் தொகை, குறைவாக இருந்தால் இவ் வாதம் பொருந்தாது. ஆயினும், காலம் செல்லச் செல்ல, நடந்ததை மக்கள் மறந்துவிடுகிறார்கள். புதிதாகக் கடன் அளிக்கச் சிலர் முன்வரலாம். சில ஆண்டுகளுக்கு முன்பு கடன்களை நிராகரித்த அரசு, புதிய கடன்களைக் காலாகாலத்தில் அடைக்குமானால், அயல் நாடுகளின் மதிப்பை மீண்டும் அரசு பெறலாம். ஏறக்குறைய ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு சோவியத் அரசு, முந்திய ஜார் மன்னர்கள் வாங்கியிருந்த கடன்களை நிராகரித்தது. இந் நிராகரிப்பை அறிவுடைமை ஆகாதென்று நாம் இப்பொழுது சொல்ல முடியாது.

'முதல் உலகப்போருக்குப் பின்பு, அதுவும் சிறப்பாக 1929ஆம் ஆண்டு தொடங்கிய பெரிய வியாபார மந்தத்திற்குப் பின்பு, ஏமாற்றும் முறையிலும், அதைக் குறிப்பிடும் சொற்றொடர்களிலும் சுவையான மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. பணம் செலுத்தத் தவறுதல் (default) என்றும், 'தாற்காலிகமாகத் திருப்பித் தருவது' நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது (suspension of payment) என்றும், 'பணத்தை மாற்றுவது ஒத்திப் போடப்பட்டிருக்கிறது' (transfer moratorium) என்றும் பலவாறு கூறப்படு

கிறது. 'ஏமாற்றுதல்' என்ற சொல் பிறரைப் புண்படுத்துகின்றது; இன்றியமையாததாக இல்லாதவிடத்தும், வேண்டுமென்றே செய்யப்பட்டதாகவும் தோன்றுகிறது. ஆனால், இச் சொற்கள் ஏமாற்றுவது இன்றியமையாதது என்றும், இப்பொழுது தங்களால் கடனைத் திருப்பித் தர உண்மையில் இயலவில்லை என்றும், விரை விலேயே கொடுத்து விடுவதாவும், ஆனால், உடனடியாக அல்ல வென்றும் விளம்புகின்றன. 'பணமாற்றை ஒத்திப்போடுதல்' (transfer moratorium) என்னும் சொற்றொடர் மனத்திற்குக் குளிர்ச்சியாய் இருக்கிறது. இதின்படி கடன்காரர்களின் பணம் மிகப் பத்திரமாக இருக்கிறது. கடன் தொகை கடனாளி அரசால் வசூலிக்கப்பட்டு ஒரு பாங்கில் பத்திரமாக வைக்கப்பட்டிருக்கிறது. போகூழ் காரணமாக இப்போது அந்நியச் செலாவணிகளைப் பற்றிய கஷ்டங்கள் இருப்பதால் உடனே திருப்பித் தர முடியாத நிலை ஏற்பட்டிருக்கிறது '—(டாக்டர் டால்டன்).[1]

ஜெர்மனியிலும், ரஷ்யாவிலும் கடன் தொகையில் ஒரு பகுதி ஏமாற்றப்பட்டது. அச்சகத்தைக் கருவியாகக் கொண்டு ஏற்பட்ட மிகைப் பண வீக்கத்தினால் கடன் பளு குறைக்கப்பட்டது (அரசின் கருத்தின்படி). ஆனால், உண்மையில் பலருடைய கடன்கள் ஏமாற்றப்பட்டன. ஆயினும், அரசின் கடன்காரர்களுக்கு மட்டும் எதிரிடையாகத் தனிப்பட்ட வேறுபாடு காட்டப்படவில்லை நிலைத்த வருமானத்தை உடைய எல்லோரும் சம அளவில் பாதிக்கப்பட்டனர். முன்னையதைப் போலன்றிக் கடன் ஒப்பந்த வடிவில் யாதொரு மாறுதலும் இல்லை. அதன் பொருளிலேயே மாறுதல் ஏற்பட்டது.

### கடன் மீட்சி (Debt Redemption)

கடனை அடைக்கும் கொள்கை பொதுவாக அறிவுக்கு ஒத்த தாகும். மிகக் கடுமையான அல்லது விரும்பத்தகாத வரிகளை விதித்தே கடனை அடைக்க முடியுமானால், இவ் விரண்டுக்கும் உள்ள வேற்றுமை புலனாகிறது. இந் நிலைமைகள் ஒப்பு நோக்கத் தக்கனவாகும். வரிகளும், கடன்களும் விரும்பத்தகாதனவா யினும் எவை மிகவும் விரும்பத்தகாதன என்று எண்ணிப் பார்க்க வேண்டும். விரைவில் கடனை அடைப்பதற்காகத் தீய விளைவுகளைத் தோற்றுவிக்கும் வரியை விதிப்பது வெறுக்கத்தக்கதாகும். இதற் கான வரிகள் ஒரு கூடுதலான பளுவே என்பது தக்க காரண மாகாது. வரிகளால் எப்பொழுதும் பளுதான். ஆகவே, கடனை அடைப்பதற்காக அவற்றை விதிப்பது துன்பமில்லாத நடவடிக்கை யாக முடியாது. அரசின் நாணயம் (credit) வரம்பில்லாமல் விரியக்

[1] Dalton, 'Public Finance,' p. 266, 267

கூடியதன்று. மீண்டும் திருப்பிக் கொடுக்காமலே வேண்டுந் தோறும் எடுத்துக் கொள்ளக்கூடிய எல்லையில்லாத நீர்த்தேக்கத்தைப் போன்றதன்று அரசின் நாணயம். நாணயத்தை (credit) அதிகரிப்பதற்கான சிறந்த வழி கடன் மீட்சி. ஒரு சிறந்த நிதிய முறையின் அடிப்படைக் கூறு கடன் மீட்சியை நிறைவேற்றுவதாய் இருக்கவேண்டும். சூழ்நிலைக்குத் தக்கவாறு அரசு கடனை எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் அடைத்தல் வேண்டும். விரைவிலேயே அடைத்தால் வட்டி செலவிற்காகவும், பிற செலவுகளுக்காகவும் விதிக்கப்படும் வரிப் பளுக்களிலிருந்து உற்பத்திச் சக்திகள் விடுதலையடைய முடியும். ஒரு நிரந்தரக் கடனால் நன்மை பெறுவது என்பது கானல் நீரைப் போன்றதாகும். ஏனெனில், சிறிது சிறிதாக (படிப்படியாக) அசல் ஏறி, இறுதியில் அதனை மீட்க முடியாத தொகையாகிறது. இதனால் நிரந்தரப் பளு ஏற்படுகிறது.

**கடன் பத்திரங்களை வாங்குவதன்மூலம் கடனைத் தீர்ப்பது (Retirement by Purchase)**

கடன் பத்திரங்கள் குறைவான விலைக்கு விற்கும்போது (அரசு) அவற்றைத் திறந்த மார்க்கெட்டில் வாங்குவது அனுகூலமளிக்கும். கடன் பத்திரங்களைப் பங்கு மார்க்கெட்டில் வாங்கலாம்; அல்லது பத்திரங்களை வைத்திருப்பவர்கள், எந்த விலைக்கு விற்க இணங்குவார்கள் என்பதை ஒப்பந்தப்புள்ளிகள் (Tenders) மூலம் அறியலாம். இலாபகரமானது என்று நினைக்கும் பொழுது கடன் பத்திரங்களைக் கருவூல அலுவலாளர்கள் மார்க்கெட்டில் வாங்கலாம். குறைந்த வட்டி வீதத்தில் கடன் வாங்கிக் கூடுதலான வட்டித் தொகையுடன் கூடிய பத்திரங்களை மீட்கலாம்; அல்லது உபரி வருமானம் இருப்பின், அதனைக் கடன் பத்திரங்களை மீட்பதற்கு பயன்படுத்தலாம். இவ்வாறு கடனின் நிகரப் பளுவைக் குறைக்கலாம். இவ்வகையான நடவடிக்கைகளை மிகவும் நிதானத்துடன் மேற்கொள்ள வேண்டும். இன்றேல், கடன் பத்திரங்களின் விலை அதிகமாக ஏறி, எதிர்பார்த்த இலாபம் முற்றிலும் கிட்டாது போகும்.

இம்முறைகள் எல்லாம் சிறந்த நிதியக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டவை. திருப்பித் தரப்படும் கடன் தொகை உடனே முதலீட்டு மார்க்கெட்டுக்குச் (investment market) சென்று தொழில், வியாபார வளர்ச்சிக்குப் பயன்படுகிறது. இம்முறையில் கடனைத் தீர்ப்பதின் வெற்றி, மார்க்கெட்டு நிலவரத்தைப் பொறுத்தது. கடனை வாங்கிய நெருக்கடி தீர்ந்துபோய் அரசின்

நாணயமும் அபிவிருத்தி அடையும் பொழுது கடன் பத்திரங்களின் விலை ஏறுகின்றது. அப்பொழுது திறந்த மார்க்கெட்டில் கடன் பத்திரங்களை வாங்குதற்கான கவர்ச்சியும் போய் விடுகிறது.

கடன் கழிவு நிதி (Sinking Fund)

கடனைத் தீர்ப்பதற்காக ஒரு நிதியைத் திரட்ட வகை செய்வது கடன் கழிவு நிதி எனப்படும். அரசு வருமானத்தின் ஒரு கூறு கடனைத் தீர்ப்பதற்காகச் செலவழிக்கப்படுகிறது என்பது கடன் கழிவு நிதித் தோற்றத்திலிருந்தும், கண்காணிப்பிலிருந்தும் புலப்படும். செலவைவிட வருமானம் கூடுதலாய் இருந்தால்தான் உண்மையான கடன் கழிவு நிதி ஏற்பட முடியுமென்றும், அதிலிருந்து அரசின் கடனைத் தீர்க்க முடியும் என்றும் ஹாமில்டன் (Hamilton) கருதுகிருர். தனியார் கடன் வாங்கினுலும் சரி, அரசு கடன் வாங்கினுலும் சரி, அவற்றைத் தீர்ப்பதற்கான ஒரே வழி, செலவைவிட வருமானம் கூடுதலாக இருப்பதே. செலவைவிட வருமானத்தை உயர்த்துவதன் மூலமே தனியாரும், அரசும் கடன் பொறுப்புகளை ஒழித்துக் கட்ட முடியும்.

கடனைத் தீர்க்கும் காலம்வரை நிதி திரட்டப்படும். அவ்வாறு திரட்டப்படும் நிதி கெடு நாளன்று முதலைத் திருப்பித் தந்து கடனைக் கழிவு செய்வதற்குச் சமானமானதாக இருக்கவேண்டும் என்பது, கடன் கழிவு நிதி என்ற சொற்ருெடரின் மூலப் பொருள். ஆனல், விரைவிலேயே நிதிய எந்திரத்தின் ஒரு கூருக இருப்பதற்குப் பதிலாகத் தனியாகவே கடன் கழிவு நிதி இயங்க ஆரம்பித்தது. இந் நிதியை ஈடாக வைத்துப் புதிய கடன்கள் வாங்கப்பட்டன. இவ்வாறு ஒரு கையால் கடன் வாங்கப்பட்டும், மற்ருெரு கையால் கடன் அடைக்கப்பட்டும் வந்தது, கேலிக்கு இருப்பிடமாயிற்று. இவ்வாறு கடனைத் தீர்த்தல் என்பது மிகப் பழைய முறையாகும். 18ஆம் நூற்ருண்டின் இறுதியில் டாக்டர் பிரைஸ் (Dr. Price) என்பார் எழுதிய நூல்களில் கடன் கழிவு முறைக்கு ஏற்றம் அளிக்கப்பட்டது. வட்டிக்கு வட்டி வாங்கும் முறையால் கடனை எளிதாக அடைத்து விடலாம் என்று இவர் எழுதினுர். பெருக்கல் விருத்தியால் (geometric progression) ஏராளமாக ஒரு தொகை அதிகரிக்கும் என்று அவர் சொன்ன வாதம் கணக்கு முறைப்படி சரியே. ஆனல், நிதிய முறையினின்று மாற்றி நடைமுறையில் அரசியல் வாதிகளால் கையாளப்பட்ட பொழுது அதன் சிறந்த கூறுகள் கொள்ளிவாய்ப் பிசாசுகள் ஆயின. இதனல், இம்முறையைப் பின்பற்றியவர்கள் மீளாத நிதியச் சேற்றில் அழுந்தினுர்கள். இங்கிலாந்தில் பிட்டு என்பவர், பிரைஸின் திட்டத்தைச் செயல்படுத்தினுர். ஆனல், விரைவிலேயே

கருவூலம் புதிய கடன்களைப் படைத்தது. கடன் கழிவு நிதி, வட்டிக்கு வட்டி முறையில் வளர்வதைக் காட்டிலும், விரைவாகவே இப் புதிய கடன்கள் படைக்கப்பட்டன. அமெரிக்காவில் அலெக்ஸாண்டர் ஹாமில்டன், பிரைஸின் வாதங்களாலும், பிட்டின் எடுத்துக்காட்டாலும் பாதிக்கப்பட்டார். அவர் ஆதிநாளில் அமெரிக்க ஐக்கியக் குடியரசின் கடனைத் தீர்க்கச் செய்த ஏற்பாடுகள் இச் செல்வாக்கைப் புலப்படுத்துகின்றன. 1817-ல் அவர் ஏற்படுத்திய சிக்கல் நிறைந்த கடன் கழிவு நிதி முறை, சட்டங்களிலிருந்து அகற்றப்பட்டது. அதன் பின்பு உபரி வருமானங்களைக் கொண்டே கடன் அடைக்கப்பட்டது. 1835-ல் அமெரிக்க ஐக்கிய நாடு கடன் முழுவதையும் தீர்த்துவிட்டது. 19ஆம் நூற்றுண்டில் வேறு எந்த முக்கியமான அரசுக்கும் இல்லாத பெருமை அமெரிக்காவிற்கு இருந்தது. அதுதான் அமெரிக்க ஐக்கிய அரசுக்குக் கடனே இல்லை என்பது.

ஒரு நூற்றுண்டுக்கு முன்பு இருந்ததைவிட இப்பொழுது கடன் கழிவு முறைக்கு வேறுன பொருள் கற்பிக்கப்படுகிறது. கடனைத் தீர்ப்பதற்காகத் திட்டவட்டமாக நிதியை ஒதுக்கும் முறைக்கே ‘கடன் கழிவு முறை’ என்று இப்பொழுது பெயர். இந் நிதியைக் கெடுநாள் வரையிலும் சேர்த்து வைக்கும் முயற்சி கைவிடப்பட்டு விட்டது. கடன் கழிவு நிதிக்கென ஒதுக்கப்பட்ட தொகை, ஆண்டுதோறும் அல்லது குறிப்பிட்ட காலந்தோறும் கடனைத் தீர்ப்பதற்காகவோ அல்லது கடன் பத்திரங்களை வாங்குவதற்காகவோ பொதுவாகப் பயன்படுத்தப்படுகிறது. ஒன்றன்பின் ஒன்ருக வரிசைக் கிரமமாகக் கடன் பத்திரங்கள் கெடு நாளை நெருங்கின், ஒவ்வோர் ஆண்டும் கடன் கழிவு நிதிக்கென ஒதுக்கப்படும் தொகை, அந் நிதியில் வரி வசூலிக்கப்பட்ட நாளிலிருந்து கடன் பத்திரத் தவணை நாள்வரை இருக்கும். ஆண்டுதோறும் தனக்குக் கிடைத்த நிதியிலிருந்து கடன் பத்திரங்களை வாங்குவதற்குக் கருவூலம் ஒப்பந்தப் புள்ளி விவரங்களைத் தருவிக்கிறது. இவற்றில் எவை மிக அனுகூலமாக உள்ளனவோ, அவற்றைக் கருவூலம் வாங்குகிறது.

முற்கூறிய உண்மைகளிலிருந்து செலவைவிட வருமானம் உபரியாய் இருந்தால்தான், கடன் கழிவு நிதியால் பயன் ஏற்படும் என்பதும், இம்முறையின் சிறப்பில் உள்ள நம்பிக்கை ஒரு கற்பனையை அடிப்படையாகக் கொண்டது என்பதும் விளங்கும். நிதியமைச்சர் போதுமான தொகைகளைக் கடன் கழிவு நிதிக்குச் சப்ளை செய்யுமாறு, அவரை வற்புறுத்துவது ஒன்றே இம்முறையில் உள்ள அனுகூலமாகும். வரி விதிப்பினுல் கொதித்தெழும்

மக்களுக்குச் சில வேளைகளில் கடன் கழிவு நிதியின் நடவடிக்கை கள் பெரும்பாலும் புலனுவதில்லை. நடைமுறையில் இவ் வுபரி மிக அதிகமாகவே வைக்கப்பட்டது. பின்னுல் வரியைக் குறைப்பதும் தவிர்க்கப்பட வேண்டும். ஆனுல், இவ் வாதாயம் மிகக் கூடுதலான செலவின்பேரில் பெறப்பட்டதாகும். புதிய கடன் களால் இந் நிதி முற்றும் தீர்ந்து போகலாம் என்ற அச்சமும் உள்ளது.

வரியிலிருந்து தொகை பெருது, புதிய கடன்களிலிருந்து தொகையைப் பெறும் ஒரு கடன் கழிவு நிதியை, உண்மையான கடன் கழிவு நிதி என்று கூற முடியாது. ஏனெனில், கடனில் நிகரக் குறைப்பு இம்முறையால் ஏற்படுவதில்லை. பழைய கடனுக்குப் பதில் புதிய கடன் ஏற்படுகிறது. குறிப்பிட்ட ஓர் ஆண்டுவரை நீடிக்கும் முறையில் வகுக்கப்பட்ட எல்லாக் கடன் கழிவு நிதி களுக்கும் ஆபத்து ஏற்படும். இக்கட்டில் இருக்கும் அரசியல் வாதிகளுக்குக் கடன் கழிவு நிதிகள் நிரந்தரக் கவர்ச்சியைத் தருபவை. கடன் கழிவு நிதிகள் இலகுவில் கொள்ளை அடிப்பதற்கு ஏற்றனவாகும். இக்கட்டிலுள்ள நிதியமைச்சர் மேலும் வரி விதிப்பின் மூலம் மக்களின் வெறுப்பை ஈட்டுதற்குப் பதிலாக, கடனை அடைப்பதற்காக வைக்கப்பட்டிருக்கும் இக் கடன் கழிவு நிதியைத் திருப்பி வேறு பல நோக்கங்களுக்காகப் பயன்படுத்து வது இயல்பானதே. ஏற்கெனவே, வரி விதிப்பு மிகப் பளு வானதாகவும், எல்லாச் சாத்தியமான வரி விதிப்பு முறைகளும் கையாளப்பட்டு விட்டிருந்தாலும், கணிசமான அளவு உபரித் தொகையை வரிகளின்மூலம் பெறுவது கடினம். பெரும் வரிப் பளுவை ஏற்றிருக்கும் ஒரு நாடு இம்முறையால் அசலைத் திருப்பித் தந்து கடனை ஒழிக்க முனைவது படிப்படியாகத்தான் நிறைவேறும்.

## கடன் நீட்டிப்பு (Refunding)

கடன் தவணை நாள் வந்தபோது, அல்லது குறுகியபோது கடனைத் திருப்பித் தருவதற்கான காலத்தை நீட்டிப்பது கடன் நீட்டிப்பு எனப்படும். தவணை நாள் நெருங்கிய கடன் பத்திரங் களுக்குப் பதிலாக, புதிய வேறுபட்ட கடன் பத்திரங்கள் வெளி யிடப்படுகின்றன. ஏற்கெனவே தவணை நாளை நெருங்கிவிட்ட கடன் பத்திரங்களின் வட்டிக் கூப்பன்கள் அகற்றப்படுகின்றன. புதிய கடன்கள் ஒரு குறிப்பிட்ட தேதியில் திருப்பிக் கொடுக்கப் படும் என்றும் கூறப்படுகிறது. ஏட்டளவில் கடன்காரர்கள் கடன் நீட்டிப்புக்கு இணங்குகின்றுர்கள். நடைமுறையில் கடன் பத்திரங் களை வைத்திருப்பவருள் யார் யார் இம் முதலீட்டைத் தொடர்ந்து நடத்த விரும்புகிருர்களோ, அவர்கள் மட்டுமே பழைய கடன்

பத்திரங்களுக்குப் பதிலாகப் புதிய கடன் பத்திரங்களைப் பெற்றுக் கொள்கிறார்கள். அசலைத் திரும்ப வேண்டுபவருக்கு, மீதம் உள்ள கால நீட்டிப்புக் கடன் தொகை வெளியீட்டை விற்பதன்மூலம் கிடைக்கும் தொகையைக் கொடுத்துக் கடன் பத்திரங்கள் மீட்கப் படுகின்றன. கால நீட்டிப்பு அடிக்கடி தனிப்பட்ட கம்பெனிகளால் செய்யப்படுகிறது. அக் கம்பெனிகள், தங்கள் கடன் பத்திரங்களைத் தாங்கள் நிரந்தரமாகத் தொழிலில் போட்டிருக்கும் மூலதனத்தின் ஒரு பகுதியாகக் கருதுகின்றன. பழைய கடன் பத்திரங்களுக்குப் பதிலாகப் புதிய கடன் பத்திரங்கள் தரப்படுகின்றன; அல்லது பிற முதலீடு செய்வோருக்குப் புதிய கடன் பத்திரங்கள் விற்கப்பட்டு அதனால், கிடைக்கும் தொகையால் தவணை நெருங்கும் பத்திரங்கள் வாங்கப்படுகின்றன. இங்ஙனம் காலந்தோறும் கடன்காரர்களின் கடன் தீர்க்கப்படுகின்றது. தோற்றத்தில் கடன்கள் தீர்க்கப் படுகின்றன. வாணிபத் தொழில் முனைவுகளில் அரசு முதலீடு செய்திருந்து அவற்றுக்கான மூலதனத்தைக் கடனாக வாங்கி யிருந்தால், அக் கடனைத் தீர்ப்பதற்கான கெடுவைச் சில சமயம் நீட்டிக்கலாம்.

அரசு வெளியிட்ட உற்பத்திக்கு அல்லாத கடன் பத்திரங்களைப் பெரும்பாலும் காலம் நீட்டிப்பது கண்டிக்கத்தக்கதாகும். கால நீட்டிப்புக்கான பூரண உரிமையும், அவ் வதிகாரத்தைப் பொது வாகப் பயன்படுத்துவதும் நிரந்தரக் கடனில் கொண்டு போய் விடும். தவணை நாள்களைக் குறிப்பிட்டாலுங்கூட, கால நீட்டிப்பு நிரந்தரக் கடனில் முடியும். சாலைகள், பள்ளிகள், சாக்கடைகள் போன்ற அபிவிருத்தித் திட்டங்களுக்காக வாங்கிய கடன்களை அவ் வபிவிருத்தித் திட்டங்களின் ஆயுள் நாளிலேயே திருப்பித் தருதல் வேண்டும். இல்லையேல் அவற்றைப் புதுப்பிப்பதற்காகப் (replacement) புதிய கடனை வாங்க வேண்டிய நிர்ப்பந்தத்துடன் ஏற்கெனவே வாங்கிய கடனும் திருப்பித் தரப்படாமலே இருக்கும். விரிவான முறையில் கால நீட்டிப்புச் செய்வதால் கடன் தொகை தலைகீழ்க் கூர்நிதிக் கோபுரம்போல ஏறும். கடன் கழிவு நிதி நிருவாகத்தில் போதிய கண்டிப்பு இன்மையையோ அல்லது ஒரு நெருக்கடி ஏற்பட்டதையோ கால நீட்டிப்புக்கான முடை சுட்டு கிறது.

கடன் இனமாற்றுகை (Conversion)

அரசு கடனை வெளியிட்ட பொழுது ஒத்துக்கொண்ட நிபந்தனை களில் யாதாவது ஒன்றை மாற்றுவது கடன் இனமாற்றுகை எனப் படும். இதன்மூலம் வட்டிச் சுமையைக் குறைக்கலாம். எப்பொழு

தாயினும் கடனைத் திருப்பிக் கொடுக்கலாம் என்றால், அரசு வட்டி விகிதத்தைக் குறைப்பது சாத்தியம். ஒரு நிரந்தரக் கடனின் நிபந்தனைகளை மாற்றுவதைக் கடன் இனமாற்றுகை எனக் கூறுவது மிகப் பொருத்தமாகும். நிரந்தரக் கடனுக்குத் தவணையே இல்லாத தால், காலத்தை நீட்டிப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. ஓர் அனுகூலமான மார்க்கெட்டுச் சூழ்நிலையைக் கண்டு அதற்கேற்பக் கடன் பத்திரங்களை வைத்திருப்போரிடம், வேறு புதிய கடன் பத்திரங்களைக் குறைந்த வட்டி விகிதத்தில் ஏற்றுக் கொள்ளுமாறு செய்வதே கடன் இனமாற்றுகையில் உள்ள பிரச்சினையாகும். பெயரளவில் அரசு பழைய கடன் பத்திரங்களை வாங்கிக் கொண்டு அவற்றிற்கு ஈடாகக் குறைந்த வட்டி விகிதத்தில் புதிய கடன் பத்திரங்களை வெளியிடுகிறது. ஏற்கெனவே வாங்கிய கடனில் ஒரு குறிப்பிட்ட கால வரையறைக்கு முன்பு திருப்பித் தரக் கூடாது என்ற நிபந்தனை இருந்தால் ஒழிய அரசு எப்பொழுது வேண்டுமாயினும் அக் கடனைத் திருப்பித் தரலாம். ஆனாலும், புதிய கடன் பத்திரங்களை எளிதில் விற்க முடியும் என்று உறுதி இருந்தால் ஒழிய இம்முறையால் ஏமாற்றமே ஏற்படும்.

### கடன் இனமாற்றுகைக்குரிய காலம்

நிதிய விவகாரத்தில் நன்னிலையில் உள்ள எல்லா நாடுகளும் கூடுதல் வட்டி விகிதத்திலிருந்து குறைந்த வட்டி விகிதத்திற்கு அரசு கடன்களை, இனமாற்றுகை சாத்தியமா என்பதையும், எந்த அளவுக்கு வட்டி வீதத்தைக் குறைத்துக் கடன் செலவுகளைக் குறைக்கலாம் என்பதையும் பரிசீலனை செய்யவேண்டும். இதற் காக மீட்க வேண்டும் என்ற நிபந்தனை இல்லாத அரசு கடன் பத்திரங்கள், பிற நாட்டு அரசுகளின் கடன் பத்திரங்கள், பெரிய நகராட்சிகளின் பத்திரங்கள் முதலானவற்றின் விலைவாசிகளை அவ்வப்பொழுது ஊன்றிக் கவனிக்க வேண்டும். வட்டி வீதத்தின் குறைவினால் அரசு இலாபம் அடைய ஒரு வாய்ப்பு இருந்தால், கடன் இனமாற்றுகை மேற்கொள்ளப்படுகிறது. ஒரு நிரந்தரக் கடனைப் பொறுத்தவரை, அக் கடன் பத்திரத்தை அரசு விற்ற விலைக்கே மீண்டும் வாங்கிக் கொள்ளும் வரையில் ஒரு குறிப்பிட்ட வட்டி வீதத்தைக் கொடுத்துவர அரசு ஒப்புக்கொண்டுள்ளது. ஆனால், அசலை எந்தக் குறிப்பிட்ட தேதியிலும் திருப்பித் தர வேண்டுவதில்லை. நடப்பு வட்டி விகிதம் குறைவதால், அரசு கடன் பத்திரங்களைப்போல வேறு புதிய முதலீடுகளுக்கு அநுகூல மான சூழ்நிலையில்லாததால், அரசு கடன் பத்திரங்களின் விலை ஏறுகின்றது. எடுத்துக்காட்டாக, வட்டி வீதம் 5 சதவீதத்தி லிருந்து 4 சதவீதமாகக் குறையுமாயின், பெயரளவில் நூறு உருபா

பெறுமானமுள்ள கடன் பத்திரத்தின் மார்க்கெட்டு விலை குறைந்தது உரூபா 125 ஆகவாவது உயரும். இவ்விதச் சூழ்நிலையில் அரசு வட்டி வீதத்தை 4 வீதமாகக் குறைப்பதன்மூலம் தன் கடனை இன மாற்றுகை செய்து கொள்ளலாம். கடன் பத்திரங்களுக்குப் பதிலாக ரொக்கமாகப் பெற வாய்ப்பு அளிப்பதால் இம்முறை அநீதியா காது. வட்டி வீதம் $\frac{1}{5}$ பங்கு குறைவதனுல், அரசும் ஓரளவு தன் செலவைக் குறைத்துக்கொள்ள முடியும். புதிய முதலீடுகளுக்கு மார்க்கெட்டு வட்டி வீதத்தைவிட, 4 சதவீத வட்டி கூடுதலாக இருப்பதால், ஏராளமான கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள் அரசைத் தங்கள் கடன்களைத் தீர்க்குமாறு கேட்பார்கள் என்று எண்ண இடமில்லை.

## விருப்பத்தின்பேரில் கடன் இனமாற்றுகையும், கட்டாயமாகக் கடன் இனமாற்றுகையும் (Optional and Compulsory Conversion)

கடன் இனமாற்றுகை, விருப்பத்திற்கு ஒத்ததாகவோ அல்லது கட்டாயமாகவோ இருக்கலாம். தன் கடன்காரர்களுக்குக் கடனைத் திருப்பித் தர வேண்டிய தவணை நாளுக்கு முன்பாகவோ, அல்லது தவணை நாளன்றோ, தானுக வலிந்து அரசு குறைந்த வட்டிக்குத் தரும் புதிய கடன் வெளியீடுகளை, அரசின் கடன்காரர்கள் ஒப்புக் கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, 1923-ல் போர்க் கடன் பத்திரங்களை (வட்டி 5%) வைத்திருப்பவர்களுக்குக் குறைந்த வட்டி வீதத்தில் நீண்ட தவணைக்கு அரசுக்குக் கடனைக் கொடுக்கும் ஒரு வாய்ப்பு அளிக்கப்பட்டது. எப்பொழுதாவது திருப்பித் தரக்கூடிய கடன்களைப் பொறுத்தவரை குறைந்த வட்டி வீதம் தருவதாகவோ, அல்லது கடன் முழுவதையும் திருப்பித் தருவதாகவோ அரசு ஒரு கடன் இனமாற்றுகைத் திட்டம் தீட்டின் அது கட்டாயக் கடன் இனமாற்றுகையாகும். பிரிட்டனில் இம் முறை கான்சல்களைப் (consols) பொறுத்தவரை 1888-லும், போர்க் கடனைப் பொறுத்தவரையில் 1932-லும் கடைப்பிடிக்கப்பட்டது. 1932-ல் போர்க் கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்களுக்கு மீண்டும் கடன் தொகையைப் பெற்றுக் கொள்ளவோ, அல்லது 5 சதவீதத்திலிருந்து 4 சதவீதமாகக் கடன் பத்திரங்களை மாற்றிக் கொள்ளவோ வாய்ப்பளிக்கப்பட்டது.

## கடன் இனமாற்றுகையைப்பற்றிய பொது விதிகள்

பாஸ்டபிள்,[1] ஆல்லிக்ஸ் (Allix) என்ற இருவரும் திருப்திகர மாய்க் கடன் இனமாற்றுகை செய்வதற்குக் பின்வரும் கோட் பாடுகளை உருவாக்கியுள்ளனர்.

[1] Bastable, pp. 706—707.

*1.* கடன் பத்திரத்தின் விலை பொதுவாக முகப்பு விலையை விடக் கூடுதலாக (above par) இருக்கவேண்டும். அப்பொழுது தான் புதிய குறைந்த வட்டிக்கும், கடன் பத்திரங்களிலிருந்து நடைமுறையில் கிடைக்கும் வருமானத்துக்கும் ஒத்திருக்கும்.

*2.* முதலில் வட்டி வீதம் எவ்வளவு கூடுதலாக இருக்கிறதோ, அவ்வளவிற்குக் கடன் இனமாற்றுகைக்கு நல்ல வாய்ப்பிருக்கிறது. முதலில் கடன் பத்திரங்களைக் குறைந்த வட்டி வீதத்திலும், கழிவுத் தொகைக்கும் வெளியிடுவது கண்டித்தற்குரியது.

*3.* கடன் பத்திரங்களின் மூலதனத்தை (capital of the debt) அதிகரிக்கக் கூடாது. இன்னும் குறிப்பிட்ட சில ஆண்டுகளுக்காவது கடனில் இனமாற்றுகை இராது என்ற உறுதி இருக்க வேண்டும்.

4. வட்டி வீதங்கள் குறைவாகவும், முதலீடு நிதிகள் ஏராளமாகவும் இருக்கும் மிதப்புக் காலத்தின் தோற்றுவாயே கடன் இனமாற்றுகைக்கு வாய்ப்பான காலமாகும்.

5. கடன் இனமாற்றுகை செய்யவேண்டுமா அல்லது வேண்டாவா என்பதை எண்ணும் பொழுது, வட்டி வீதங்கள், வரி விதிப்பு, விலைவாசிகள் இவற்றின் போக்கு எங்ஙனம் இருக்கும் என்பதையும் கருத்தில் கொள்ளவேண்டும். பல்வேறு வட்டி வீதங்களில் வெளியிடப்பட்ட பல்வகைக் கடன்களையும் ஒரே வட்டி வீதத்துடன் கூடிய ஒரே கடனாக மாற்றி அமைப்பது நல்லது. நிலையாக்காத கடனை நிலையாக்கிய கடனாக மாற்றுவதால் ஏற்படும் நன்மையையும், ஏராளமாக நிலையாக்காத கடன்கள் இருப்பதன் தீமையையும் முன்னரே கண்டோம். பாங்கர்கள், பங்குதாரர்கள், வழக்குரைஞர்கள், இவர்களின் கட்சிக்காரர்கள் இப் பேரங்களில் எல்லாம் முக்கியமான பங்கு வகிப்பதால், கடன் இனமாற்றுகைகளை மேற்கொள்ளும்போது அரசுகள் ஒரு சிறிய தொகை அவர்களுக்குக் கொடுத்தல் நல்லது.

### வெற்றிகரமான கடன் இனமாற்றுகைக்கான படிநிலைகள் (Conditions of Successful Conversion)

அரசின் நாணயம் மிக உயர்ந்த நிலையில் இருக்கவேண்டும். கடன் இனமாற்றுகை செய்தற்கு இஃது இன்றியமையாதது. காலாகாலத்தில் வட்டியைச் செலுத்துவதும், கடன் மீட்சிக்குப் போதிய வகை செய்வதும், சிறந்த நிருவாகமும் கடன் இனமாற்றுகைக்குப் பெரிதும் துணை செய்யும்.

### கடன் இனமாற்றுகையும் அரசின் கடன் பளுவும்

கடன் இனமாற்றுகை என்பது கடனைத் திருப்பிக் கொடுப்பதன்று. பழைய கடன்களைப் புதிய கடன்களுக்குப் பரிவர்த்தனை செய்வதே கடன் இனமாற்றுகை ஆகும். புதிய கடன்களின்மீது கொடுக்கவேண்டிய வட்டி பழைய கடன்களின் பேரில் உள்ள வட்டியைவிடக் குறைவாய் இருந்தால், கடனின் உடனடியான பளு குறையும். கடந்த காலத்தில் அரசின் கடன் பளுவைக் குறைப்பதற்குக் கடன் இனமாற்றுகைகள் பெருந்துணை செய்தன என்று பலரும் எழுதுவது பிழையாகும். நீண்ட காலங்களில் வட்டி வீதத்தில் மிகக் குறைவான மாறுதல்கள் ஏற்படுவதால், கடன் இனமாற்றுகைகள் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தனவாக இல்லை. பிரிட்டனில் 19ஆம் நூற்றாண்டில் கடன் இனமாற்றுகையால் சிறு நிவாரணமே கிடைத்தது. அரசின் முயற்சிக்கு ஈடான சேமிப்பு 1888—89-ல் கடன் கால நீட்டிப்பால் ஏற்பட்டது. அதேபோல, கடந்த முதல் உலகப்போருக்குப் பின்பு 1932 வரையிலும் கடன் இனமாற்றுகையால் வட்டிச் செலவு குறைந்தது மிகவும் குறைவு. பொதுவாகக் கூறுமிடத்து இம்முறையைக் கையாளுவதன்மூலம் அரசு கடன்களின் பளுவை மிகவும் விரைவாகக் குறைக்கலாம் என்று எதிர்ப்பார்பதில் பயனில்லை.

### கடன் இனமாற்றுகையும் வருவாயும்

ஆண்டுதோறும் கடன் இனமாற்றுகையின்மூலம் வட்டிச் செலவு குறைவதால் நிகரச் சேமிப்பு ஒன்றும் ஏற்படாது. அதனால், மொத்தத்தில் சேமிப்பு ஏற்படுகிறது எனலாம். மொத்தச் சேமிப்பிலிருந்து வருவாயில் ஏற்படும் இழப்பைக் கழிக்க வேண்டும். ஏனெனில், அரசு கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள் 'வட்டியாகக்' குறைவான வருமானத்தைப் பெற்றால், அவர்கள் வருமான வரி, மேல் வரி (Super tax), இன்னும் பிற வரிகளின் மூலமாகக் கொடுக்கும் வருவாய் குறையும். மேலும், மரண வரிகளின் மூலம் கிடைக்கக்கூடிய வருமானம் கூடுவதற்குக் காரணம் வட்டி வீதம் குறைவதே யொழிய இனமாற்றுகையன்று.

### கடன் இனமாற்றுகையும் கடன்களைத் தீர்த்தலும்

இறுதியாகக் கடனைத் தீர்ப்பதையும், கடன் இனமாற்றுகையையும் நினைத்துப் பார்க்குங்கால் அரசின் கடனை இனமாற்றுகையில் உள்ள நிதியச் சிக்கல் புலனாகிறது. கடனைத் தீர்ப்பதற்குப் பதிலி (substitute) அன்று கடன் இனமாற்றுகை. கடன் இனமாற்றுகையைக் கடனைத் தீர்ப்பதற்கு ஒரு சிறு துணையாகக் கருதலாம். அதன் வலிமை, கடன் இனமாற்றுகை செய்யும் அதே

காலத்தில் கடனைத் தீர்ப்பதற்கு முழுமூச்சுடன் அரசு முயல்வதை ஓரளவு பொறுத்திருக்கிறது. ஆயினும், பேராசிரியர் பாஸ்டபிள் கூறியாங்கு, 'எங்கெங்குக் கடன் இனமாற்றுகை சாத்தியமோ, அங்கங்கெல்லாம் நிதியமைச்சருக்கு ஒரு கடமை இருக்கிறது. நிதியமைச்சர் வரி கொடுப்போரின் முகவர் ஆனதால், அவர்களுடைய நன்மையை எண்ணிப் பார்த்து, சிறந்த முறையில் கடன் இனமாற்றுகைக்கான திட்டத்தைச் செயல்படுத்த வேண்டும். இக் கருத்து, கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்களுக்குப் பிடிக்காது. அவர்கள் எண்ணிக்கையில் ஏராளமானவர்களாய் இருந்தால், கடன் இனமாற்றுகைக்கான எந்தத் திட்டத்தையும் பலமாக எதிர்க்கக் கூடும் என்று எதிர்பார்க்கலாம்.'[1]

### கடன் இனமாற்றுகையும் கால நீட்டிப்பும்

கடன் இனமாற்றுகையும் கால நீட்டிப்பும் ஒன்றை ஒன்று ஒத்துள்ளன. இரண்டு முறைகளிலும் பழைய கடன் பத்திரங்களுக்குப் பதில் புதிய பத்திரங்கள் கொடுக்கப்படுவதுடன், வட்டி விகிதத்திலும் மாறுதல்கள் செய்யப்படலாம். சில சமயம் கடனைப் பற்றிய வேறு சில படிநிலைகளிலும் மாறுதல்கள் இருக்கலாம். மிகவும் சாதகமான சூழ்நிலையில் 'கால நீட்டிப்பு வெளியீட்டால்' பழைய கடன் பத்திரங்களைக் காட்டிலும், புதிய கடன் பத்திரங்கள் குறைந்த வட்டி வீதம் உடையனவாய் இருக்கலாம். ஆயினும், பெரும்பாலும் கூடுதலான வட்டி வீதம் கொடுப்பதே காணப்படுகிறது. ஏனெனில், கடனாளியான அரசு பணத்திற்கு மிகவும் முடைப்பட்ட சூழ்நிலையிலேயே கால நீட்டிப்புச் செய்ய வேண்டி இருப்பதால், பண மார்க்கெட்டில் நல்ல பேரம் செய்யமுடிவதில்லை.

## மூலதன வரி (The Capital Levy)

### அடிப்படைப் பிரச்சினை

சுமார் 30 ஆண்டுகட்கு முன்னர்ப் பேராசிரியர் பிகு (Professor Pigou) பின்வருமாறு எழுதினார்: 'ஆண்டுதோறும் கடனில்-அசல் தொகையில் ஒரு சிறு பகுதியைக் கொடுத்து 50 அல்லது 100 ஆண்டுகளில் கடன் முழுவதையும் தீர்க்க வேண்டும் என்று வைதிகமுறை விரும்பியது. பிரத்தியேகமான வரி விதித்து அசலில் பெரும்பகுதியையும், கூடுமானால் அசல் முழுவதையுமே ஒரு தனி முயற்சியால் கொடுத்துவிட வேண்டும் என்று சிலர் விரும்புகின்றனர். இதுதான்:அடிப்படைப் பிரச்சினை. பிரத்தியேக வரியின் வடிவம், முறை இவற்றைப்பற்றிய பிரச்சினைகள் எல்லாம்

[1] Bastable, p. 706

அவ்வளவு முக்கியமானவை அல்ல. கடனில் பெரும்பகுதியை ஒரு பிரத்தியேக வரி விதித்து ஒரே மூச்சில் கொடுத்து விடுவதும், எதிர் காலத்தில் வட்டி கொடுக்க வேண்டியதைத் தவிர்ப்பதும், தேசிய நலனுக்கு உகந்தனவா? அல்லது படிப்படியாகக் கடனைத் திருப்பிக் கொடுத்துப் பல ஆண்டுகட்கு ஏராளமான வட்டித் தொகைகளைக் கொடுப்பது தேசிய நலனுக்கு உகந்ததா? ரிக்கார்டோ (Ricardo), மில் என்னும் இருவரும் அரசுகளைக் கடனினின்றும் விடுவிக்கும் கருவியாக மூலதன வரியைக் கருதினர். முன்னவரின் கருத்து இம் முறையை வரவேற்றது. பின்னவர் இம்முறையைச் சாத்தியமானல் ஏற்றுக்கொள்ள உடன்பட்டார். முதல் உலகப் போரின் போதும், அதன் பின்பும், பல நாடுகளில் இந்த யோசனை மீண்டும் வெளி யிடப்பட்டது. சில நாடுகளில் இதற்கான சட்டமும் இயற்றப் பட்டது. ஏறக்குறைய இதேமாதிரி ஒரு யோசனை ஸ்விட்ஸர் லாந்தின் சட்டசபையால் பொதுமக்களின் வாக்கெடுப்புக்கு விடப் பட்டபோது பெரும்பான்மையோரின் வாக்குகளால் நிராகரிக்கப் பட்டது.

பெருவாரியான அளவில் மூலதனத்தின்மேல் ஒரு நாடும் இது காறும் வரி விதித்ததில்லை; ஒருவேளை விதிக்கப்படாமலே இருக்க லாம். இதுதான் பகுத்தறிவுக்கு ஒத்த, வேண்டுமென்றே விதிக்கப் பட்ட முறை. மனிதனுடைய ஆழ்ந்த உணர்ச்சிகளைத் தூண்டி விட்டு அவனுடைய பண ஆசையின்மீது மோதுதலால் பலரும் இவ் வரியை வெறுக்கிறார்கள். கீன்ஸ் பிரபு எழுதியவாறு, 'நோயாளி அறுவை மருத்துவத்திற்கான அவசியத்தை உணர்ந்து ஏற்றுக்கொண்டால் ஒழிய, அவன் அறுவை மருத்துவத்திற்கு உடன்படமாட்டான்.'

### மூலதன வரிக்கான காரணங்கள்

'மதிப்பிற்குரிய பலர் இவ் விருவகை உபாயங்களையும் நிராகரிக் கின்றனர்; செலாவணியின் மதிப்பிறக்கத்தையும், மூலதன வரியையும் கண்டிக்கின்றனர். அதற்குக் காரணமாக அவர்கள் கூறுவது, இவை ஒப்பந்தத்தின் புனிதத் தன்மையை மீறுகின்றன என்பதேயாகும். இதனுல், ஊன்றிய நலமிகளின் நலன்களும் பாதிக்கப்படுகின்றன. ஏனெனில், சட்டமுறைப் பணத்தின் மதிப்பில் மாறுதலைச் செய்வதோ, உடைமைமீது வரி விதிப்பதோ சட்டத்திற்குப் புறம்பானவை என்றோ, அல்லது அவற்றுக்கு முன் மாதிரியே இல்லை என்றோ கூற முடியாது. ஆயினும், அவர்கள் சமுதாய கோட்பாடுகளில் மிகப் பெரிதான ஒன்றைப் புறக்கணிப் பதன்மூலம், அதாவது, தனியாரின் ஒப்பந்தத்தை நிராகரிக்கும் உரிமைக்கும், அரசு ஊன்றிய நலமிகளைக் கட்டுப்பாடு செய்யும்

உரிமைக்கும், இடையில் வேற்றுமை கற்பிக்காததால், தாங்கள் பேணிப் பாதுகாக்க முயலும் தனியுடைமைக்குப் பெரும் எதிரிகள் ஆகின்றனர். இடையீடின்றி வட்டி வாங்குதலின் அதிகார எல்லைகள் மிகப் பெரியன. பல தலைமுறைகளுக்கு ஊன்றிய நலமிகள் யாதொரு குறைபாடுமின்றி வளர்ந்து வருவார்களானால், மக்களில் பாதிப்பேர் மற்றொரு பாதிப்பேருக்கு அடிமைகளாக இருக்க வேண்டிய நிலை ஏற்படும். போர்க்காலத்தில் வரி விதிப்பதைவிடக் கடன் வாங்குவது அரசுக்கு எளிது என்பதனாலேயே, கடன் பத்திரம் வைத்திருப்பவருக்கு வரி கொடுப்போரை நிரந்தர அடிமை ஆக்கக் கூடாது. இதுபோன்ற விஷயங்களில் அரசுக்கும் தனியாருக்கும் யாதொரு வேறுபாடும் இல்லை என வற்புறுத்துவோரின் கூற்றை ஒப்புக் கொண்டால், தனியார் சமுதாயம் (individualist society) தொடர்ந்து நீடிக்க முடியாது. ஏனெனில், தனியார் சமுதாயம் தொடர்ந்து நீடிப்பது அதன் மிதப் போக்கைப் பொறுத்ததாகும்.'

'வாணிகத் துறையில் உறுதியையும், பாதுகாப்பையும் வளர்க்கும் விதத்தில் சாதாரண விவகாரங்களில் அரசு நடந்து கொள்ள வேண்டியதன் அவசியத்தை ஒதுக்கித் தள்ள முடியாது. அரசின் நடவடிக்கையைப் பொறுத்தவரை அது செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் அதனால் ஏற்படும் விளைவுகளைப் பொறுத்துச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். இறப்பு வரிகள், வருமான வரி, நிலவுரிமை முறை (land tenure), உரிமம் வழங்குதல், வேட்டையைப் பற்றிய சட்டங்கள், படை மானிய உரிமைகள் (feudal rights), சமய அமைப்பு (church establishment), அடிமைத்தனம் ஆகிய இவற்றில் எல்லாம் மாறுதல் செய்ய முயன்ற போது ஒப்பந்தத்தின் முழுத்தன்மையை விரும்புபவர்கள் இவற்றிற்குக் கண்டனம் தெரிவித்திருந்தார்கள். ஆகவே, ஒப்பந்தங்களின் பூரணத் தன்மையை விரும்புவோர்களே (absolutists of contract) புரட்சியின் பெற்றோர்கள் ஆவார்கள்' —(கீன்ஸ் பிரபு).

'இப் பிரத்தியேக வரி அநீதியானதா? செல்வர்களைக் கொள்ளையடிக்கும் முறையில், போர்க் கடன் பத்திரங்களை வாங்கியோருக்குக் கொடுத்த வாக்குறுதியை இவ் வரி விதிப்பதால் மீறுகின்றோமா? இதனால் வாங்கிய கடனை ஏமாற்றுகின்றோமா?' என்றால் இக் குற்றச்சாட்டுகள் அனைத்துக்கும் ஆதாரம் இல்லை. மூலதனமாக இருக்கும் செல்வத்தின்மீது வரி விதிப்பது, மூலதனத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தின்மீது வரி விதிப்பதைக் காட்டிலும் எவ் வகையிலும் கொள்ளையடிப்பதாகாது. ஆயினும், போர்க் கடன் பத்திரங்கள் வைத்திருப்போர்மீது மட்டும் இவ் வரி விதிக்கப்

பட்டால் அரசுக்கு எந்த நம்பிக்கைமீது பணம் கடனாகக் கொடுக்கப் பட்டதோ அதை அரசு மீறுவதாகும்; அந்த அளவிற்குக் கடனை ஏமாற்றியதுமாகும். ஆனால், ஈட்டப்பட்ட எல்லாச் செல்வத்தின் பேரிலும் வரி விதிக்கப்பட்டால் அது இக் குற்றச்சாட்டுக்கு ஆளாகாது.

வரி செலுத்தும் திறன் என்ற கோட்பாட்டினை ஒரு நெருக்கடியான காலத்திற்கு நடைமுறையில் கடைப்பிடிப்பதே இவ் வரி எனலாம். சிறு மூலதனங்களுக்கு வரியிலிருந்து விலக்களிக்கப்படும். மொத்தத் தொகைக்கு ஏற்றவாறு வரி வீதம் வளர்வீதமாக இருக்கும். ஆகவே, சொத்தின் பெறுமானம் அதிகமாக இருப்பின், கூடுதலான அளவு வரியாகத் தண்டப்படும். வருமான வரி விதிப்பில் அடங்கிய கோட்பாடான அடக்கச் செலவும், திறனும் மூலதன வரியிலும் காணக் கிடக்கிறது. மூலதனத்தின்மீது வரி விதிக்கும் கொள்கையும், அதன் நியாயமும் கட்டாய இராணுவச் சேவையைப் பெரிதும் ஒத்திருக்கின்றது. நாட்டிற்கு அபாயம் நேரிட்ட பொழுது சிலர் (எல்லோருமல்லர் என்பதைக் கவனிக்க) தங்கள் மூலதனத்தை மட்டுமன்றி, உயிரைக் கொடுக்கவும் ஆயத்தமாக இருக்க வேண்டும் என்ற அடிப்படையில் கட்டாய இராணுவச் சேவை நியாயமானதென வாதிடப்படுகிறது. ஆகவே, போர்க் காலத்தில் தங்கள் வீட்டில் பத்திரமாக இருந்துகொண்டு தங்கள் வருவாயையும் அநுபவித்துக் கொண்டிருந்தவர்களை, இப்பொழுது நாட்டை நிதிய அழிவிலிருந்து காப்பாற்றுவதற்காக ஓரளவு தியாகத்தைச் செய்யும்படி கோருவது, ஒப்புநோக்கில், மிக அற்பமானது. பிலிப் ஸ்நோடன் கூறியாங்கு, 'போர்க்களத்திற்குச் சென்று காயமடைந்து தங்கள் உயிரையும் இழந்தவர்களின் தியாகத்தின் மூலமே தாங்கள் இப்பொழுது செல்வத்தைத் துய்க்க முடிகிறது என்பதைச் செல்வம், உடைமை இவற்றிற்கு உரியவர் மறுக்கமாட்டார்கள். பிறர் துன்பங்கள், தியாகங்கள் இவற்றின் விளைவால், போருக்குப் போகாமல் வீட்டிலிருந்த பலர் செல்வராயினர்.'

இவ் வுவமை பொருத்தமற்றதெனச் சிலர் மறுக்கிறார்கள். ஏனெனில், இராணுவச் சேவைக்கு வலுக்கட்டாயமாகக் கொண்டு செல்லப்பட்டவர்களின் உடைமைக்கு இப் பிரத்தியேக வரியிலிருந்து விலக்கில்லை. இக் குற்றச்சாட்டுக்கு ஜெ. ஏ. ஹாப்ஸன் (J.A. Hobson) பின்வருமாறு பதில் அளிக்கிறார்: 'இஃது உண்மைப் பிரச்சினையிலிருந்து தப்ப முயலும் தந்திரமாகும். பெரிய தேசிய நெருக்கடிக் காலத்தில் (போர்க்காலத்தில்) அரசு தன் குடிமக்களை அவர்களால் எவ்வெத்துறையில் முடியுமோ அவ்வத்துறையில்

இயன்றதை நாட்டுக்காகக் கொடுத்து நாட்டைப் பாதுகாக்குமாறு கோருகிறது. போரிடவும், நிதி கொடுத்து உதவவும் ஆற்றலுள்ளவர்கள் இரு துறைகளிலும் காணிக்கை செலுத்தவேண்டும். போரிடுவதற்கு மட்டும் ஆற்றல் உள்ளவர்கள், வரி கொடாமல் போரில் மட்டும் ஈடுபடுதல் போதுமானது. நிதி கொடுக்க மட்டும் ஆற்றல் உள்ளவர்கள் போரில் கலந்து கொள்ளாமலே நிதி கொடுத்து உதவவேண்டும். பெரும்பாலும் நேரிடையாகச் சேவை செய்து தேசிய நலனைப் பேணுபவர்கள் இளைஞர்களே. அவர்கள் எல்லோரும் யாதொரு சொத்தையும் சேர்த்து வைக்க முடிவதில்லை; அல்லது சேர்த்தாலும், சிறிதளவு சொத்தைத்தான் சேர்த்து வைக்க முடிகிறது. வயதானவர்கள் உடைமைக்காரர்களாய் இருந்து நேரிடையாகச் சேவை செய்யும் ஆற்றலையும் பெற்றிருந்தால், அரசுக்கு அவர்கள் உடலின்மீது மட்டுமன்றி, பணத்தின்மீதும் பாத்தியதை உண்டு.[3] யாதாயினும் ஒரு பெரிய கடுமையான வரியைவிட மூலதனத்தின்மேல் விதிக்கப்படும் வரி அநீதியானதெனக் கூறமுடியாது. ஏறக்குறைய 150 ஆண்டுகளுக்கு வரியைக் கொடுத்து, இப்போதைய கடன் கழிவு நிதி முறைகள்மூலம் கடனைத் தீர்ப்பதைவிட, ஒரே ஒரு ஆண்டு மூலதன வரியின்மூலம் கடனைத் தீர்த்து விடுதல் எவ்வளவோ மேலானது. அடுத்து வரும் ஆண்டுகளில் வரி கொடுக்கவேண்டி இராது. இதனால் வேலையின்மை குறையும்; பாமர மக்களின் நிலை உயரும். இவ் வரியால் ஏற்படும் இழப்பைக் காட்டிலும் செல்வத்திலும் உற்பத்தியிலும் ஏற்படும் அதிகரிப்புக் கூடுதலானது. மேலும், வளர்வீத வரி முறையைக் கடைப்பிடிப்பதன் மூலம் வரி கொடுப்போர் சம அளவு தியாகம் செய்யும்படி நேரிடும். இப்பொழுது விதிக்கப்படும் இறப்பு வரி, உபரி வரி இவற்றின் விஸ்தரிப்பாக மூலதனத்தின் மேல் விதிக்கப்படும் வரியைக் கொள்ளலாம். இவ் வரிகளை மக்கள் பொறுத்துக் கொள்வதன் காரணம் செல்வர்களுக்கு இவ் வரியைக் கொடுக்கும் திறன் இருக்கிறது என்பதே. நடைமுறையில் மூலதன வரி விதித்தல் சாத்தியம். இதே அளவு வருவாய் தரும் வேறு எந்தப் புதிய வரியைக் காட்டிலும் இவ் வரிக்கு தனியாக ஒரு மறுப்பும் செய்வதற்கில்லை. நாட்டு மக்களின் தீர்ப்பில் இப்போதைய முயற்சிகளுக்குக் குந்தகம் ஏற்படும் பொழுது, கடந்த காலச் சேமிப்புகளுக்கும், இக் காலத்து உழைப்பின் பயன்களுக்கும் இடையே, வரிப் பளுவை, இவ் வரி விதிப்பினாலேயே சமப்படுத்த முடியும்.

மூலதனத்தின் மேல், விதிக்கப்படும் வரியைப்பற்றித் தீர்ப்புக் கூறும் பொழுது இதை விதிக்காமல் வேறு எந்த வரிகளையேனும் விதிக்கும் சாத்தியக் கூறுகள் இருக்கின்றனவா என்றும் சீர்தூக்கிப்

பார்த்தல்வேண்டும். தேசியக் கடனைக் குறைப்பதற்காக மூல தனத்தின்மேல் விதிக்கப்படும் வரியை எதிர்ப்பவர்கள் வேறு மாற்றுயோசனை தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளார்கள். இதுவரை அவர்கள் அவ்விதமான மாற்று யோசனையைத் தெரிவிக்காததன் காரணம் அவ்வித மாற்றுத் திட்டம் இல்லாததே. நீண்டகாலம் ஊன்றிய நலமிகளுக்குச் சமுதாயத்தில், சுறுசுறுப்பாக வேலை செய்பவர் நிச்சயம் அடிபணிய மறுப்பார்கள் என்பதை அனுபவம் காட்டுகிறது. மூல்தனத்தின்மேல் வரி விதித்துக் கடனைத் தீர்க்க வகை செய்யாவிடில், கடன் பிறிதொரு வகையில் (பணத்தின் மதிப்பை இறக்குவதன் மூலம்) தீர்க்கப்படும்.

### சில எதிரிடை வாதங்களின் ஆய்வு

மூலதனத்தின்மீது விதிக்கப்படும் வரி, சேமிப்பதற்கான அக் கறையை அழிக்கும் எனச் சிலர் கருதுகின்றனர். இதன் மூலமாக வாணிகத்திற்கும் தொழிலுக்கும் கிடைக்கக் கூடிய முதலின் ஊற்றுக் கண்கள் அடைபடும். மூலதனத்தின்மீது ஒரே ஒரு தடவை வரி விதித்தால் அதுவும் சேமித்து வைக்கப்பட்ட மூலதனத்தின்மீது வரி விதித்தால், அஃது எதிர்காலத்தில் சேமிப்பதற்கான உற்சாகத்தைக் குறைக்காது என்பது இவ் வாதத்திற்கு விடையாகும். மேலும், மூலதனத்தின்மீது வரி விதிப்பதைக் காட்டிலும், பணத்தின் மதிப்பை மிகவும் இறக்கிக் கடன் பத்திரங்களின் மதிப்பைப் பெரிய அளவுக்குக் குறைத்து, கடன்களை நிராகரிப்பதன் மூலம் பல தீய விளைவுகள் ஏற்படு கின்றன. மூலதனத்தின்மீது வரி விதிப்பதன் நோக்கம், வாணிபத்திற்கும், தொழிலுக்கும், தாங்க முடியாத வருமான வரிப் பளுவினால் அவதிப்படுவோருக்கும் நிவாரணம் அளிப்பதே.

சேமித்து வைத்த செல்வத்திற்கு மட்டும் வரி விதிப்பதும், அதேசமயம் உத்தியோகஸ்தர்களால் ஈட்டப்படும் பெருவருமானங் களுக்கு இப் பிரத்தியேக வரியினின்று விலக்களிப்பதும் நீதியாகாது. பேராசிரியர் பிகு இவ் வநீதியை உணர்ந்து பருப்பொருளாகிய மூல தனத்தின் மேலும் (material capital), பருப்பொருள் ஒழிந்த மூல தனத்தை (immaterial capital) ஈட்டும் திறத்தின் பேரிலும் வரி விதிக்க வேண்டும் எனக் கூறுகிறார். ஆயினும், 'வரி வசூலிக்கும் உத்தியோகஸ்தர்களைப் பருப்பொருள் ஒழிந்த மூலதனத்தின்மீது மட்டும் வரி விதிக்கும்படிக் கூறுதல் அறிவுடைமையாகாது. இப்பொழுது ஒருவன் பெரும் வருமானத்தை ஈட்டும் திறமை பெற்றிருக்கிறான் என்பதன் மதிப்பு, அவன் உயிருடன் எத்தனை ஆண்டுகள் இருக்கிறான் என்பதைப் பொறுத்திருப்பதால், ஒரே துறையில் வேலை பார்க்கும் (ஆனால், பல்வேறு வயதையுடைய)

பலருக்கும் அது பல்வேறு விதமாக இருக்கும். உத்தியோகத்தின் உயர்வுக்குச் சாத்தியக் கூறு உண்டா என்பதையும் நினைவில் இருத்தவேண்டும். இப்பொழுது வருமானம் ஈட்டும் திறத்தோடு, எதிர்காலத்தில் வருமானம் ஈட்டும் திறத்தைப் பெறுவதையும் பொறுத்திருக்கிறதாதலால், இது நடைமுறைக்கு ஒத்து வாராது. இப் பிரச்சினைக்கு இன்னொரு தீர்வு மூலதனத்தின்மீது ஒரு வரியுடன், ஒருவர் ஈட்டிய வருமானத்தின்மீதும் ஒரு வரியை விதிப்பதாகும். ஆனால், இம்முறையை ஒரு குடியாட்சி நாடு ஏற்றுக் கொள்ளாது. ஏனெனில், அதன் நோக்கம் முதலீட்டிலிருந்து வரும் வருமானத்தைக் காட்டிலும் தானே ஈட்டிய வருமானத்துக்கு நிவாரணம் அளிக்க வேண்டும் என்பதாகும். ஆகையால், தொடர்ந்து பல ஆண்டுகளுக்கு வரி விதிப்பதைக் காட்டிலும் ஒரு பிரத்தியேக வரியை விதிப்பது நெறியாக மாட்டாது; நடைமுறையில் அநீதி பயப்பதாக முடியும்.'

உத்தியோகஸ்தர்களின்மீது பிரத்தியேக வரி விதிப்பதற்கு இன்னோர் மறுப்பும் உள்ளது. பல வாணிபங்களின் மூலதன மதிப்பீடு அதன் உடைமைக்காரர்களின் தனிப்பட்ட தன்மையைப் பொறுத்திருந்தாலும், அவ் வாணிபங்களின் பெரும்பகுதி மதிப்பும் பருப்பொருள் வடிவங்களில் அடங்கியுள்ளது. அவ் வாணிபத்தை நிருவாகம் செய்யும் அதிகாரிகளிடமிருந்து:வேறாக, அவ் வாணிபத்திற்கு நல்ல மதிப்பு (good will) மக்களிடை இருப்பின், அதுவே ஓர் ஆஸ்தியாகும். ஒரே அளவு வியாபாரத்திலிருந்து வரும் வருமானத்தைக் காட்டிலும், உத்தியோகஸ்தன் ஈட்டும் வருமானத்தின் மதிப்பு மிகக் குறைவாய் இருப்பதற்குக் காரணம், பின்னையது ஒரு தனிப்பட்டவரின் திறமை, ஆரோக்கியம், தனிப்பட்ட ஈடுபாடு என்னும் பல படிநிலைகளைப் பொறுத்ததாக இருப்பதே. ஆகவே, பருப்பொருள் ஒழிந்த மூலதனத்திலிருந்து, பருப்பொருள் மூலதனத்துக்கு ஈடாக, கூடுதலான வருமான வரி விதிப்பதன் மூலம் வருமானத்தைப் பெற நினைப்பது அறிவுக்கு ஒவ்வாது.

இத் திட்டத்தை நடைமுறையில் நிறைவேற்றுவதிலும் இன்னல்கள் உள. இவ் வரி வாயிலாகக் கிடைக்கும் தொகை, எடுத்துக்கொண்ட சிரமத்திற்கு ஈடாக இருக்குமா என்பதும் ஒரு கேள்வி. எந்தவிதமான வரி விதிப்பு முறையும் எக்காலமும் நேர்மையாக இருக்க முடியாது எனவும், மூலதனத்தின்மீது விதிக்கப்படும் வரி ஒரு பிரத்தியேக நெருக்கடியான காலத்தில் விதிக்கப்படும் வரி எனவும், இவ்வித வரி முறைக்கு மூலதனந்தான் செல்வத்தின் சரியான வகை எனவும் பிலிப் ஸ்நோடன் வாதிடுகிறார்.

சிக்கனம் செய்து சேமித்து முதலீடு செய்தவர்களின் வருமானத்தின்மீது வரி விதிக்கப்படுவதைக் கண்டு சிலர் அதிர்ச்சி அடைகின்றனர். இவர்கள் சேமித்ததாலேயே போருக்குக் கடனைக் கொடுக்க முடிந்ததென்றும், இவர்கள் முதலீடு செய்ததாலேயே எதிர்காலத்தில் தேசியத் தொழில்களின் உற்பத்திக்கு ஆக்கம் தேடினர் என்றும், ஊதாரியாகச் செலவழித்தவர்கள் இவ் வரி கொடாது தப்பித்துக் கொள்கிறார்கள் என்றும் கூறப்படுகிறது. இவ் வரியால் சிக்கனத்திற்கும், கடின உழைப்பிற்கும் ஊறு ஏற்படுகிறது என்பது உண்மையே. ஆனால், இதே எதிர்வாதத்தை வருமான வரிக்கு எதிராகவும் கூறலாம். கடின உழைப்பு, திறமை இவற்றினால் ஒருவன் தன் வருமானத்தையும், சேமிப்பையும் பெருக்கினால், அவன் வருமான வரியாகக் கொடுக்கும் தொகையும் பெருகுகிறது. சோம்பேறிகளாகவும் தம் வேலையில் அக்கறையில்லாதும் இருப்போருக்கு வருமானம் குறைவதோடு, அவர்கள் வருமான வரியினின்றும் தப்பித்துக் கொள்ளவும் செய்கின்றனர். ஆகவே, கடின உழைப்பு இதனால் ஒறுக்கப்படுகிறதெனவும் சோம்பேறித்தனத்திற்கு ஆதரவு அளிக்கப்படுகிறதெனவும் கூறப்படுகிறது. ஆனால், இந் நிலையில் நாம் யாது செய்ய முடியும்? இல்லாத வருமானத்தின்மீது வரி விதிக்க முடியாது. வரி விதிப்பதற்காக நாகரிகமடைந்த மனிதனைக் கட்டாயப்படுத்தி வருமானத்தைத் தேடும்படி செய்யவும் நம்மால் முடியாது. ஆனால், சிலர் கருமிகளுக்கு உழைப்பைக் கற்பிப்பதற்காக இக் கட்டாயக் கொள்கையைக் கடைப்பிடிக்க ஆயத்தமாக இருக்கின்றனர். ஊதாரிகளும், வேலையில் அக்கறை இல்லாதிருப்போரும் வரி விதிப்பிலிருந்து தப்புவது ஊக்கம் மிகுந்தோருக்கும், சிக்கனமாக இருப்போருக்கும் வருத்தம் தருமாயினும், எந்த வரி அமைப்பிலும் இஃது இன்றியமையாததே.

பளுவான வரியினால் உற்பத்தி குறையும் என்பதையும், அதனால் கடின உழைப்பிற்கும், சிக்கனத்திற்கும் பாதகம் ஏற்படும் என்பதையும் நாம் ஏற்றுக் கொள்கிறோம். ஆயினும், பிரத்தியேகமாக மூலதனத்தின்மீது விதிக்கப்பட்ட வளர்வீத வரியினால் இம்மாதிரியான கேடொன்றும் ஏற்படாது. இதற்குக் காரணங்கள் இரண்டு: முதலாவது, இவ் வளர்வீத வரிமுறை பாதிக்கும் செல்வத்தின் பெரும்பகுதியும் வேண்டுமென்றே சிக்கனத்தால் சேமித்து வைக்கப்பட்டதன்று. உடைமைக்காரர்கள் தங்களுக்குத் தகுதியானதென்று நினைக்கும் செலவு வரம்பிற்கு வருமானம் மேற்பட்டிருப்பதாலேயே இச் சேமிப்பு ஏற்படுகிறது. இரண்டாவது, இவ் வரி ஒரே ஒருமுறைதான் விதிக்கப்படுகிறது.

தானே ஈட்டிய செல்வத்திற்கு வரி விதிப்பில் சலுகை அளிப்பது அநீதியானதெனப் பேராசிரியர் ஸ்காட்டு (Professor Scott) கருதுகிருர். மூலதனத்தின்மீது வரி விதிக்கப்படவில்லை யாயின், போர்ச் செலவின் ஒரு பகுதியை, தானே ஈட்டிய வருமானங்களின்மீது கூடுதலான வருமான வரி விதிப்பதன் மூலம் ஈடு செய்ய வேண்டியிருக்கும். இதுவும் முறையாகாது. போர்க் காலத்தில் போருக்கான செலவு அனைத்தும் வரி வாயிலாகவே பெறப்பட்டிருந்தால், இவ் வருமானங்களை ஈட்டிய அனைவரும் வரியாகக் கொடுத்த தொகையைக் காட்டிலும், அதிகமான வரியையும் உபரி வரியையும் கொடுத்திருப்பார்கள். மூலதனத்தின்மீது வரி விதிப்பது காரணமாக இவர்கள் இவ் வரிகள் மூலம் தாங்கள் செலுத்த வேண்டிய பங்கிலிருந்து தப்பித்துக் கொள்கிருர்கள். தாம் திரட்டிய செல்வத்திற்கு அல்லது உழைப்பிலா வருமானத்திற்கு (unearned income) வரி கொடுக்கும் திறன் அதிகமாக இருக்கிறது என்பது அநீதியானதா? இப்பொழுது உள்ள வருமான வரி, குறைந்த வருமானங்களுக்கு இவ் வேற்றுமையை ஒப்புக் கொள்கிறது. பின்னர் சொத்திலிருந்து கிடைக்கும் வருமானங்களின் மீது கூடுதலான வரி விதிப்பது அநீதியானதா? நடப்பு வரி விதிப்பினுலேயே போர்ச் செலவு முழுவதையும் சரிக்கட்டியிருந்தால், உழைப்பிலிருந்து கிடைக்கும் வருமானத்தின்மீது விதிக்கப்படும் வருமான வரி வீதத்திற்கும், சொத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தின்மீது விதிக்கப்படும் வருமான வரி வீதத்திற்கும் அநீதியான வேறுபாடுகள் கற்பிக்கப்படும். இதற்குக் காரணங்கள் இரண்டு: முதலாவது, தானே உழைத்துத் தேடிய வருமானத்திற்குப் பக்கத்துணையாக உழைப்பிலா வருமானம் இருப்பதால் அதன்மீது கூடுதல் வரி விதித்தல் தகும். இரண்டாவது, உழைப்பிலா வருமானத்தின்மீது கூடுதல் வரி விதிப்பதால் சேமிப்புக்கும் முதலீட்டிற்கும் ஊறு ஏற்படுவதைக் காட்டிலும் அதிகமாகவே, தானே உழைத்துத் தேடிய வருமானத்தின்மீது கூடுதல் வரி விதித்தால் ஊறு ஏற்படும். வேறு விதமாகக் கூறின், உழைத்துத் தேடிய செல்வத்தைக் காட்டிலும் உழைப்பிலாச் செல்வம் அதிகமாக வரி கொடுக்கும் திறனைப் பெற்றிருக்கிறது என்பதே. வரி கொடுப்போருக்கும், எதிர்கால உற்பத்திக்கும், வருமானத்துக்கும், குறைந்த அளவு ஊறு ஏற்படும் வகையில் (வருமானங்களைத் தேடுவதற்காக) இவ் வேறுபாட்டைக் கற்பிப்பது நியாயமானதே. சமமல்லாதவற்றைச் சமமாக நடத்த முனைவது சமத்துவமன்று என்பதைப் பேராசிரியர் ஸ்காட்டு உணரவில்லை.

'உடனடியாகக் கடனைத் தீர்ப்பதைவிட மெதுவாகக் கடனைத் தீர்ப்பது நல்லது,' என்பதற்கு ஸ்காட் கூறும் ஒரு முகாந்திரம் நம்

ஆய்வுக்கு உரியது. குறைவான கடன் கழிவு நிதிமூலம் நீண்ட காலத்திற்கு வட்டியைக் கொடுத்து வந்தோமாயின், வரிப் பளு இரண்டு வழிகளில் படிப்படியாகக் குறையும். முதலாவது, அதிக வட்டி வீதத்தில் வாங்கிய கடனைக் குறைந்த வட்டி வீதக் கடன் இனமாக மாற்றுகை; இரண்டாவது, வரி கொடுப்போரின் எண்ணிக்கையும், பொதுவாக வருமானங்களில் உயர்வும் ஏற்படும் பொழுது வருமான வரியால் கிடைக்கும் தொகையும் கூடும் என்பது. அடுத்த பத்தாண்டுகளில் நம் நிதிய நிலைமை நன்றாக இருக்குமாயின், இவ் விரு வழிகளையும் கையாண்டு நாம் கடன் பளுவைக் குறைத்துக் கொள்ளலாம் என்பதை மறுக்கவில்லை. ஆனால், பிரத்தியேக வரிக்கான முக்கிய காரணம் போருக்குப் பிற் காலத்தில் ஏற்பட்ட நிதிய நெருக்கடியே. ஹாப்ஸன் கூறியாங்கு, 'மிகக் கடுமையான நோயினால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் ஒருவனிடம், அவன் உயிர் வாழ்ந்தால் அடுத்த ஆண்டு கிறிஸ்துமஸ் தினத்தன்று அவன் மகிழ்ச்சியாக இருக்கலாம் என்று கூறுவதனால் அவனுக்கு யாதொரு நம்பிக்கையும் ஏற்படாது.'

### நிருவாகச் சங்கடங்கள் (Administrative Difficulties)

நடைமுறையில் மூலதனத்தின்மீது வரியை விதித்தல் சாத்தியமா என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும். வரி விதிக்கப்பட வேண்டிய செல்வத்தின் விளக்கத்தில் நாற்காலி, மேஜை முதலிய மரச் சாமான்கள், திறமைச் செல்வம் (personal wealth) இவற்றையும் சேர்க்க வேண்டுமா என்பதும், இரண்டு மூன்று நாடுகளில் மூலதனத்தை வைத்திருப்பவர்களின் நிலை என்ன என்பதும், ஒரு சிக்கல். விளக்கம் கொடுத்து விட்ட பின்பும் சொத்தை மதிப்பிடுவதும், இவ் வரி கொடாமல் பலர் தப்புவதைத் தடுப்பதும், இதை நிருவகிப்பதில் உள்ள சங்கடங்களைத் தெளிவாகக் காட்டுகின்றன.

### மூன்று மாற்று வழிகள் (Three Alternative Ways)

இச் சங்கடங்கள் எல்லாம் சமாளிக்க முடியாதவையல்ல. இவற்றைச் சமாளிப்பதற்கு மூன்று மாற்று வழிகளைப் பேராசிரியர் பிகு கூறுகிறார். யார் யார் இவ் வரியைக் கொடுக்கவேண்டுமோ, அவர்கள் எல்லாம் தங்கள் உடைமைகளின் மதிப்பீட்டைக் குறிப்பிட்ட தேதிக்குள் அரசுக்கு அனுப்பிவிடவேண்டும் என்று கூறலாம். இம் மதிப்பீட்டை அடிப்படையாகக் கொண்டு முதற்கண் வரி விதிக்கலாம். பின்பு அரசின் மதிப்பிடுபவர்கள் (Government Appraisers) தங்கள் வேலையைத் தொடங்கலாம். படிப்படியாகப் பல ஆண்டுகளில் தனியாரின் மதிப்பீடுகளைப்

பரிசீலனை செய்து, வேண்டிய விடத்து அவற்றைத் திருத்தலாம். இறுதியாக, மதிப்பீட்டை அறுதியிட்ட பிறகு கருவூலத்திலிருந்து வரி கொடுப்போருக்கோ அல்லது வரி கொடுப்போர் கருவூலத்திற்கோ தொகையைக் கொடுக்கும்படிச் செய்யலாம். இரண்டாவதாக, முதற்கண் இவ் வரியை மதிப்பிடுவதில் சிக்கலில்லாத உடைமைகள்மீது மட்டுமே வரி விதிக்கலாம். மேஜை, நாற்காலி போன்ற சாமான்கள், நகைகள், கலைப்பொருள்கள் இவற்றையெல்லாம் மதிப்பிடுவதை இவற்றுக்குரியவர் இறக்கும்வரை ஒத்திப் போடவேண்டும். அவர் இறந்த பிறகு மரண வரி விதிப்பதற்கு உடைமை மதிப்பிடப்படும். அதனுடன் மேலே கூறிய பொருள்களின்மீது ஒத்திப் போடப்பட்ட பிரத்தியேக வரியையும் விதிக்கலாம். இம்முறையில் உள்ள ஒரு கஷ்டம், இவ் வரியைத் தக்க வளர்வீத முறைப்படி அமைப்பதில் உள்ள சிரமமே. வரி வீதம் பலவகை உடைமைகளின் மொத்த மதிப்பிற்கேற்றபடி மாற வேண்டும். பிரதான வரி விதிக்கப்பட்டபோது இவ் வுடைமைகளில் ஒரு பகுதியையே பரிசீலனைக்கு எடுத்துக்கொண்டால், உடைமைகள் அனைத்தின் மொத்த மதிப்பின்மேல் வரி விதிப்பது இயலாது. ஆயினும், இம்முறையில் காணப்படும் குறைகளைப் பின்பு விதிக்கும் வரி விகிதத்தை உயர்த்துவதன் வாயிலாக அல்லது தாழ்த்துவதன் வாயிலாகத் திருத்தலாம். மூன்றுவதாக, மதிப்பீடு செய்வதற்கு மிகவும் கடினமாக இருக்கும் உடைமை வகைகளை மதிப்பீடு செய்வதையே விட்டுவிடலாம். இது அநீதியாக இருக்கலாம். இருப்பினும், எல்லா வரி அமைப்புகளிலும் ஓரளவு அநீதி இருக்கத்தான் செய்யும். ஆகவே, நிருவாகச் சிக்கலைத் தவிர்ப்பதற்காக அநீதியைப் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும். மேற்கூறிய வழிகளுள் ஒன்றும் முற்றும் திருப்திகரமாய் இல்லை. இது மூலதனத்தின்மீது பிரத்தியேகமாக வரி விதிப்பதற்கு எதிரிடையான வாதமாகும். இக் காரணங்களால் மூலதனத்தின்மீது மட்டும் இதுகாறும் ஒரு நாட்டிலும் வரி விதிக்கப்படவில்லை.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Dalton, 'Principle of Public Finance', 1941, Chapters 23 and 24.

2. J. A. Hobson, 'Taxation in the New State', 1919, pp. 165—229.

3. R. N. Bhargava, 'The Theory and Working of Union Finance in India', 3rd Edition, 1971, pp. 199—206.

4. G. Findlay Shirras, 'The Science of Public Finance', 2nd Edition, 1925, pp. 531—549.

5. Philip E. Taylor, 'The Economics of Public Finance', pp. 193—202.

6. H. C. Adams, 'The Science of Finance', 1898, pp. 553-564.

# 39. இந்திய அரசின் கடனும் மாநில அரசுகளின் கடனும்

**இந்திய அரசின் கடன்**

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுவதற்கு முன்பு இந்திய அரசுக்கு யாதொரு கடனும் இல்லை. கிழக்கிந்திய கம்பெனி இந்தியாவை ஆளத் தொடங்கிய பிறகே இந்திய அரசு கடன் வாங்கியது. கிழக்கிந்திய கம்பெனியார் இந்தியாவில் டச்சுக்காரர் களுடனும், பிரஞ்சுக்காரர்களுடம், இந்திய சுதேச மன்னர் களுடனும் அடிக்கடி போர் தொடுத்ததாலேயே இக் கடன் ஏற் பட்டது. *1765*-ல் கிழக்கிந்திய கம்பெனி வங்காளத்தின் சிவில் நிருவாகத்தை மேற்கொண்ட பொழுதே கடன் பளு அதிகமாக இருந்தது. *1792*-ல் இந்தியாவின் கடன் தொகை 7 மில்லியன் பவுன்[1] (Pound Sterling) ஆகும். *1857*-ல் இத் தொகை *60* மில்லி யனக அதிகரித்தது. சிப்பாய்க் கலகத்தை[2] அடக்குவதற்கு ஏற் பட்ட செலவினல் இத் தொகை *1860*-ல் *100* மில்லியன் பவுனக உயர்ந்தது. கிழக்கிந்திய கம்பெனியிடமிருந்து இந்தியாவை ஆளும் உரிமையைப் பிரிட்டிஷ் அரசு ஏற்றுக்கொண்டது. அப் பொழுது கிழக்கிந்தியக் கம்பெனி வாங்கியிருந்த கடனுக்கும் பிரிட்டிஷ் இந்திய அரசு பொறுப்பேற்க வேண்டியதாயிற்று. இந் தியாவை வென்று அடிமைப்படுத்தியதற்காக வாங்கிய கடனுடன் பிற நாடுகளின்மீது படையெடுப்புகள் நடத்திய செலவும் சேர்க்கப் பட்டது. இங்ஙனமாக ஆப்கானிஸ்தானம், பர்மா, சீன, பாரசீகம், (இப்பொழுது ஈரான் எனப்படும்) எகிப்து, அபிசீனியா ஆகிய நாடு களுடன் நிகழ்ந்த போர்களுக்கு ஆன செலவுகளும் இந்தியாவின்

[1] ஒரு பவுண்டு ஸ்டர்லிங் உரூபா *15*-க்குச் சமமாகும். ஆகவே *7* மில்லியன் பவுண்டு ஸ்டர்லிங் உரூபா *10·5* கோடிக்குச் சமமாகும்.

[2] *1857*-ல் பிரிட்டிஷாரை எதிர்த்து ஒரு கலகம் நடந்தது. பொதுவாக இது சிப்பாய்க் கலகம் என வரலாற்று ஆசிரியர்களால் அழைக்கப்படும். வி. டி. சவர்க்கார் அவர்கள் சிப்பாய்க் கலகத்தை முதல் சுதந்திரப் போர் என்பார். பஞ்சாப், ராஜஸ்தானம், வங்காளம், சிந்து, விந்தியமலைக்குத் தெற்கேயுள்ள பகுதிகள் ஆகியவற்றில் பிரிட்டிஷாரை எதிர்த்துப் புரட்சி நடக்காததால், இது நாடு தழுவிய போராட்டமன்று. ஆகவே, இதை சிப்பாய்க் கலகம் எனவே பொருந்தும்.

தலையில் கட்டப்பட்டன. மேலும், கிழக்கிந்திய கம்பெனியின் பங்குதாரர்களுக்கு ஆண்டுதோறும் இலாப ஈவு கொடுக்க வேண்டிய தாயிருந்தது. 1874ஆம் ஆண்டுதான் இப்பங்குகள் யாவும் மீட்கப் பட்டன. ஆகவே, அந்த ஆண்டிலிருந்து இலாப ஈவு அளிப்பது நிறுத்தப்பட்டது. இவையன்றி இந்தியாவுக்குச் சிறிதும் தொடர் பில்லாத சில செலவுகளும் இந்திய அரசின் கடனுடன் சேர்க்கப் பட்டது விந்தையே. 1878-ல் துருக்கி சுல்தான் அவர்கள் லண்ட னுக்கு விஜயம் செய்தார்கள். அவர்களின் விஜயத்தை ஒட்டி ஒரு நாட்டிய நிகழ்ச்சி ஏற்பாடாகியிருந்தது. இந் நிகழ்ச்சி இந்திய மாளிகையில் (India House) நடைபெற்றது. இச் செலவு இந்திய அரசின் கணக்கில் எழுதப்பட்டது. 'ஈலிங் (Ealing) என்ற ஊரில் பயித்தியங்களுக்கு ஒரு விடுதி திறக்கப்பட்டது.[1] ஸான்ஸிபார் மிஷனைச் சேர்ந்த (Zanzibar Mission) உறுப்பினர்களுக்குப் பரிசுப் பண்டங்கள் வழங்கப்பட்டன. சீனுவிலும், பாரசீகத்திலும் தூதரகங்கள் நிறுவப்பட்டன. இவற்றுக்கு ஆன செலவுகளும்; மத்திய தரைக் கடற் படையின் நிரந்தரச் செலவுகளில் ஒரு பகுதியும், இங்கிலாந்திலிருந்து செல்லும் ஒரு தந்திக் கம்பியின் முழுச் செலவும், 1870ஆம் ஆண்டுக்கு முன்பு இந்திய அரசின் செலவில் எழுதப்பட்டன.' 1914—1918-ல் முதல் உலகப்போர் நிகழ்ந்த காலத்தில் இந்திய அரசு பிரிட்டிஷ் அரசுக்கு 100 மில்லியன் பவுண்டு ஸ்டர்லிங்கை இனுமாக அளித்தது. இதனுல், பயனில் கடனின் பளு அதிகமாயிற்று. அவ்வக் காலங்களில் இந்தியாவில் பஞ்சம் ஏற்பட்டபொழுது, இந்திய அரசு மேற் கொண்ட நிவாரண நடவடிக்கைகளினுலும், கடன் தொகை அதிகமாயிற்று.

ஆயினும், இந்திய அரசின் கடனின் பெரும் பகுதியும் பயனுள்ள (உற்பத்தி, productive) கடனே. அணைக்கட்டுகள், நீர்த் தேக்கங்கள் இவற்றைக் கட்டுதல், இருப்புப்பாதைகள் அமைப்பு போன்ற மூலதன செலவுகளுக்காகவே இக் கடன் வாங்கப் பட்டது. இங்ஙனமிருந்தும் இந்திய மக்களின் கருத்து இதற்கு எதிராகவே இருந்தது. உத்தரவாத முறையும் (guarantee system), ஏனைய காரணிகளும், இருப்புப்பாதைகளை அமைப்பதற்கு ஆன செலவில் சிக்கனம் கடைப்பிடிக்கப்படாததும், கடன் தொகையை அதிக வட்டி வீதத்தில் வாங்கியதும் இதற்குக் காரணமாகும். இக் கடன்களை இங்கிலாந்தில் திரட்டியதும், இந்திய மூலதனம் வெளியில் வர நாணுகிறது (shy) என்ற சாக்கைச் சொல்லி இந்தியாவில் கடனைத் திரட்ட யாதொரு முயற்சியையும்

[1] ஈலிங் (Ealing), லண்டன் புற நகர்ப்பகுதியைச் சேர்ந்த மிடில்ஸெக்ஸ் (Middlesex) நகராட்சி, பாராளுமன்றத் தொகுதியில் அடங்கியது.

மேற்கொள்ளாததும், இந்தியர்களின் சினத்திற்கு மற்றுமோர் காரணமாகும்.

கடன் மீட்சி

*1914*ஆம் ஆண்டுக்கு முன்பு, இந்திய அரசு பயனில் கடனை பயனுள்ள கடனுக மாற்றும் முயற்சியைத் தனது கொள்கையாகக் கடைப்பிடித்தது. வரவு செலவு திட்டத்தில் மீந்த உபரித் தொகைகளை இக் கடன்களைத் திருப்பித் தருவதற்குச் செல வழித்தது. அதேவேளையில் பயனுள்ள செயல்களுக்கு இந்திய அரசு (ஏறக்குறைய பயனில் கடன் தொகைக்குச் சமமான தொகையை) கடன் வாங்கியது. இருப்புப்பாதைகளை அமைப் பதற்கு வாங்கப்பட்ட கடனில் ஒரு பகுதியையும் திருப்பித்தந்தது. *1924*-ல் கடன் மீட்சிக்கு ஒரு திட்டம் உருவாயிற்று. இதன்படி ஆண்டுதோறும் உருபா 4 கோடியும், அவ் வாண்டின் இறுதியில் எஞ்சியிருக்கும் கடன் தொகையில் $\frac{1}{80}$ பங்கும், ஆண்டுதோறும் கடன் மீட்சிக்காகச் செலவழிக்கப்படவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

## 1939-ல்

*1939*-ஆம் ஆண்டில், இரண்டாம் உலகப்போர் தொடங்கு வதற்கு முன்பு, இந்திய அரசின் கடன் உருபா *1205·76* கோடியாகும். இதில் உருபா *896·65* கோடி பயனுள்ள கடன். கருவூலத்தின் கணக்கில் கடன் பத்திரங்களும், ரொக்கமுமாக உருபா *30·30* கோடியிருந்தது. எஞ்சிய உருபா *278·81* கோடியும் பயனில் கடனுகும். இவ்வாருக மொத்தக் கடனில் ஏறக்குறைய நாவில் ஒரு பங்கே பயனில் கடன்.

கீழ்வரும் அட்டவணையில் இக் கடனைப்பற்றிய விளக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது.[1]

| வட்டியுடன் கூடிய கடன் பத்திரங்கள் | கோடி உருபாவில். |
|---|---|
| இந்தியாவில் | |
| உருபா கடன்கள் | *437·87* |
| சிறு சேமிப்புகள் | *141·85* |
| கருவூலச் சீட்டுகள், வழித்துறை கடன்கள் | *46·30* |
| ஊழியம் (service), பிராவிடண்ட் நிதி, ஏனைய நிதிகள், அஞ்சலக வைப்புகள், ஏனைய வைப்புகள் | *111·02* |
| இந்தியாவில் திரட்டிய மொத்தக் கடன்கள் | *736·64* |

[1] *மூலம்:* Report on Currency and Finance (Reserve Bank of India). 1939—40.

| வட்டியுடன் கூடிய கடன் பத்திரங்கள் | கோடி உருபாவில் |
|---|---|
| இங்கிலாந்தில் | |
| ஸ்டர்லிங் கடன்கள் | 464·94 |
| ஏனைய கடன்கள் | 4·18 |
| இங்கிலாந்தில் திரட்டிய மொத்தக் கடன்கள் | 469·12 |
| இந்திய அரசின் மொத்த கடன்கள் | 1,205·76 |

**இரண்டாம் உலகப்போர் நிகழ்ந்த காலத்தில் இந்திய அரசின் கடன்**

1939ஆம் ஆண்டு இந்தியாவின் ஸ்டர்லிங் கடன்கள் உருபா 464·94 கோடியாகும். இத் தொகை 1946ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 31ஆம் நாளன்று உருபா 63·38 கோடியாகக் குறைந்தது. 1939–க்கும் 1946–க்கும் இடைப்பட்ட காலத்தில், இங்கிலாந்தில் திரட்டிய மொத்தக் கடன் தொகையான உருபா 469·12 கோடியில் உருபா 405·74 கோடி திருப்பித் தரப்பட்டது. இதே காலத்தில் இந்தியாவில் உருபா 1,510 கோடி புதிதாகக் கடன் திரட்டப்பட்டது. 1946ஆம் ஆண்டு மார்ச் திங்களில் இந்திய அரசின் உருபாக் கடன் உருபா 1,940 கோடியாகும்.

**ஸ்டர்லிங் நிலுவைகள் (Sterling Balances)**

ஸ்டர்லிங் கடன்கள் போர்க் காலத்தில் மிகவும் குறைந்தற்குக் காரணம் அவற்றைத் திருப்பித் தந்ததேயாகும். அங்ஙனம் திருப்பித் தருவதற்குத் துணை செய்தது ஸ்டர்லிங் நிலுவைகள் ஆகும். இந்த ஸ்டர்லிங் நிலுவைகள் தோன்றிய வரலாற்றைச் சுருக்கமாகக் கூறுவாம். முதலாவதாக, இந்தியாவின் வாணிப நிலை (balance of trade) போர் முடியும் அளவும் இந்தியாவுக்குச் சாதகமாக இருந்தது. இதனால், பிரிட்டனும் பிற நாடுகளும் இந்தியாவுக்குக் கொடுக்க வேண்டிய தொகை அதிகமாயிற்று. இத் தொகை ஸ்டர்லிங்கில் கொடுக்கப்பட்டதால், இந்திய் ரிசர்வ் பேங்க் லண்டனில் வைத்திருந்த ஸ்டர்லிங் நிலுவைகள் அதிக மாயிற்று. 1938—39-ல் இருந்து 1944—45 முடிய உள்ள காலத்தில் இந்தியா உருபா 437 கோடியை வணிகத்தின் மூலம் ஈட்டியது. இத் தொகைக்குச் சமமான ஸ்டர்லிங் நிலுவைகள் லண்டனில் உள்ள இந்திய ரிசர்வ் பேங்க் கணக்கில் சேர்ந்தது. இரண்டாவதாகப், போர்க் காலத்தில் செய்துகொண்ட ஒரு ஏற்பாட்டின்படி, இந்தியாவில் உள்ள பாதுகாப்புப் படைகளை நவீன மயமாக்குவதற்கு ஆகும் செலவில் ஒரு பகுதியைப் பிரிட்டன் ஏற்றுக்கொள்ள வேண்டும். இவ் வேற்பாட்டின்படியும், பிரிட்டன் தனக்காகவும், தன்னுடன் சேர்ந்த் நேச நாடுகளுக்காகவும்

இந்தியாவில் மூலப் பண்டங்களையும், முடிந்த பண்டங்களையும் வாங்கியது. இச் செலவுகளுக்கான தொகைகளைப் பிரிட்டன் ஸ்டர்லிங் கடன் பத்திரங்களாகக் கொடுத்தது. மூன்றாவதாக, இந்தியாவிலிருந்து அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பண்டங்களுக்கும், இந்தியாவில் நிறுத்தி வைக்கப் பட்ட அமெரிக்கப் போர்வீரர்களின் சம்பளத்திற்கும், ஏனைய செலவுகளுக்கும் இந்திய அரசு செலவு செய்தது. இச் செலவுக்கு ஈடான டாலர்களை அமெரிக்க அரசு கொடுத்தது. இந்த டாலர் செலாவணி பேரரசின் டாலர் திரட்டில் (Empire Dollar Pool) சேர்க்கப்பட்டது. அமெரிக்காவில் தனக்கு வேண்டிய பண்டங்களை வாங்குவதற்குப் பிரிட்டிஷ் அரசு இந்த டாலர்களைப் பயன்படுத்திக் கொண்டது. இத் தொகைக்கு ஈடான ஸ்டர்லிங் கடன் பத்திரங்களைப் பிரிட்டிஷ் அரசு இந்திய அரசுக்குக் கொடுத்தது. இறுதியாக, இரண்டாம் உலகப்போர் தொடங்கியதும், இந்திய அரசு லண்டனில் வெள்ளியை விற்றது. விற்று முதல் ஆன தொகையும் ஸ்டர்லிங்காகக் கிடைத்தது. இவ்வெல்லா வகை களிலும் *1945—46*ஆம் ஆண்டின் இறுதியில் இந்திய அரசுக்குக் கிடைத்த ஸ்டர்லிங் தொகை உருபா *2,294* கோடியாகும். தன்னுடைய ஸ்டர்லிங் கடனை அடைப்பதற்கு, இந்த ஸ்டர்லிங் நிலுவைகளில் ஒரு பகுதியை இந்திய அரசு பயன்படுத்திக் கொண்டது. இதன் விளைவாக, *1938—39*-ல் உருபா *464.94* கோடியாக இருந்த இந்தியாவின் ஸ்டர்லிங் கடன், *1944—45*-ல் உருபா *34·19* கோடியாகக் குறைந்தது. ஸ்டர்லிங் கடன் ஏறக் குறைய முற்றும் அடைக்கப்படவே, கடனாளி நாடாக இருந்த இந்தியா கடன்கார நாடாக ஆயிற்று. இந்தியாவின் ஸ்டர்லிங் நிலுவைகள் உருபா *1,600* கோடியை எட்டியது.

நாம் கடன்கார நாடாக ஆனதுபற்றிப் பலர் பூரித்தனர். நாம் பிற நாடுகளுக்குக் கொடுக்கவேண்டிய கடன் ஒன்றும் இல்லை என்பதே சிந்தை நிறைவைத் தருகிறது. மேலும், பிற நாடுகளில் நாம் திரட்டக்கூடிய நம்முடைய கடன் ஆற்றலையும் இது அதிகரிக் கிறது. ஆயினும், இந்நிலையை எய்துவதற்கு நாம் பட்ட துன்பங் களையும், நம் மக்கள் செய்த தியாகங்களையும் எண்ணிப் பார்க்க வேண்டும். நண்பர்களின் (நேச நாடுகளின்) துயர் துடைப்பதற்கு இவ்வளவு இன்னல்களையும் நாம் பட்டோம். ஆனால், போசூழ் காரணமாகப் பிரிட்டனில் சிலர், நம்மைப் பாராட்டுவதற்குப் பதில் குறை கூறினர். சர்ச்சிலும், இன்னும் சிலரும் பிரிட்டன் இக் கடனை நிராகரிக்க வேண்டுமென்று வாதித்தனர்.

போர்க் காலத்தில் இந்திய அரசு தன் தேவைகளுக்கும் அதிக மாகவே கடன் வாங்கியது. 3% வட்டி வீதத்தில் பல்வேறுபட்ட

கனியுங் காலங்களை (maturities) உடைய கடன்களை வாங்கியது. இக் கடன்கள் வாயிலாக உரூபா 636 கோடி திரட்டியது. கருவூலச் சீட்டுக்களை வெளியிட்டதன் வாயிலாக உரூபா 770 கோடி திரட்ட முடிந்தது. சிறு சேமிப்புத் திட்டங்களின் வாயிலாக இந்திய அரசு ஏறக்குறைய உரூபா 800 கோடி திரட்டியது.

பாகிஸ்தானுடன் நிதிய உடன்பாடு

1947ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களில் இந்தியத் துணைக் கண்டம், இந்தியா, பாகிஸ்தான் என்ற இரு சுதந்திர நாடுகளாகப் பிரிந்தது. 1947 ஆகஸ்டு திங்களுக்கு முன்பு இந்திய அரசுக்கிருந்த கடன், இரு நாடுகளுக்கும் இடையே பின்வருமாறு பிரிக்கப்பட்டது. (அ) இருப்புப்பாதைகள், தந்தி, தொலைபேசி ஆகியவற்றை அமைப்பதற்காக வாங்கப்பட்ட கடனில். இந்தியா, பாகிஸ்தான் ஆகிய இரு நாடுகளிலும் இருந்த இச் சாதனங்களில் மதிப்புக்கேற்ப, கடன் பொறுப்பை இரு நாடுகளும் ஏற்றுக்கொண்டன. (ஆ) கருவூலக் கணக்கில் இருந்த ரொக்கம், கடன் பத்திரங்கள் ஆகியவற்றைப் பொறுத்த வரையில், பாகிஸ்தான், அதற்கு ஒதுக்கப்பட்ட ரொக்கத் தொகையான உரூபா 75 கோடிக்குச் சமமான கடன் தொகையை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று உடன்பாடு ஆயிற்று. (இ) ஈடில் கடனைப் பொறுத்தவரை, நாணயங்களை அச்சடிக்க ஒரு நாணய சாலையையும், நோட்டுகளை அச்சடிப்பதற்கு ஓர் அச்சகத்தையும் நிறுவுதற்கு ஆகும் செலவில் ஒரு குறிப்பிட்ட தொகையை இந்தியா, பாகிஸ்தானுக்குக் கொடுக்கவேண்டும். இந்திய இராணுவச் சேமக்குவை (military stores) யிலிருந்து ஒரு பகுதியையும் பாகிஸ்தானுக்கு அனுப்பிவைக்கவேண்டும். எஞ்சிய இந்திய அரசின் கடனில் 17·5 சதம் பாகிஸ்தானின் கடனாகும்.

இங்ஙனமாகப், பிரிக்கப்படாத இந்தியாவின் முழுக்கடனையும், அதன் பேரிலுள்ள வட்டியையும் திருப்பிக் கொடுக்கும் பொறுப்பை இந்திய அரசு ஏற்றுக்கொண்டது. பாகிஸ்தான் இந்தியாவுக்குத் தர வேண்டிய கடன் தொகை உரூபா 300 கோடியென மதிப்பிடப் பட்டது. இத் தொகையை ஐம்பது ஆண்டுகளில் பாகிஸ்தான் இந்தியாவுக்குக் கொடுக்கவேண்டும். 1952-ல் பாகிஸ்தான் முதல் தவணையைச் செலுத்தவேண்டும். எல்லாவகையிலும் இவ்வுடன்பாடு இந்தியாவுக்குப் பாதகமாக இருந்தது. இங்ஙனமாகப் பிரிக்கப்படாத இந்தியாவின் கடனை அடைக்கும் பொறுப்பு முற்றும் இந்தியாவின் பேரில் விழுந்தது. இதனால், இந்தியர் அதிகமான வரிச் சுமைக்கு ஆளானார்கள். ஆனால், பாகிஸ்தான் இத் தொகையை ஐம்பது ஆண்டுகளில் (சமத்) தவணைகளாகச்

செலுத்தவேண்டும். பாகிஸ்தான் இத் தொகையைக் கொடுக்கும் என்ற நம்பிக்கையிருந்தாலும் இவ் வுடன்பாட்டைப் பாராட்டலாம். உலகம் முழுவதுமே அரசுகளிடையே கடனைத் திருப்பித்தரும் நல்ல பழக்கம் பெரும்பாலும் இல்லை எனலாம். இவற்றால் வாக்கு வாதங்களும், பூசல்களும், ஏற்படுகின்றன; கடன் தொகையையும் திருப்பித் தராமல் நிறுத்திக் கொள்கிறார்கள். இதுவரையில் பாகிஸ்தான் ஒரு தவணை கூடச் செலுத்தவில்லை ; இனிமேல் செலுத்தும் என்பதற்கான அறிகுறியும் இல்லை. இரு நாடுகளுக்கும் இடையே நிலவும் அரசியல் உறவுகளைப் பார்க்கும் பொழுது, இனி எக் காலத்தும் பாகிஸ்தான் இத் தொகையை இந்தியாவுக்குக் கொடுக்காது என்பது திண்ணம். பாகிஸ்தான் கடன் தொகையைக் கொடுக்காததுகூட விந்தையில்லை ; அண்மையில் நடந்த ஸிம்லா மாநாட்டிலோ, டெல்லி மாநாட்டிலோ இந்தியா இப் பிரச்சினையை எழுப்பாததுதான் பெரிய விந்தையாகும். இதுவரையில் இரு நாடுகளுக்கு இடையேயும் நடந்த எந்த பேச்சு வார்த்தைகளிலும் இம் முந்நூறு கோடி கடன் தொகை அடிபடவேயில்லை.

## ஐந்தாண்டுத் திட்டங்களும் கடனும்

முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் கடன்கள்மூலம் உரூபா 520 கோடி திரட்ட முடிவு செய்யப்பட்டது. ஆனால், திரட்டிய தொகை உரூபா 600 கோடியாகும். இதில் உரூபா 205 கோடி அங்காடிக் கடன் வாயிலாகவும், உரூபா 304 கோடி சிறு சேமிப்புகள் வாயிலாகவும், உரூபா 91 கோடி பிற வகை வரவு களின் வாயிலாகவும் கிடைத்தது. இரண்டாவது திட்ட காலத்தில் அங்காடிக் கடன்மூலம் (குறியளவு உரூபா 700 கோடி) உரூபா 780 கோடியும், சிறு சேமிப்புகள்மூலம் உரூபா 400 கோடியும் (குறியளவு உரூபா 500 கோடி) கிடைத்தது. மூன்றாவது திட்ட காலத்தில் அங்காடிக் கடன்கள்மூலம் உரூபா 800 கோடியும், சிறு சேமிப்புகள்மூலம் உரூபா 600 கோடியும் திரட்டவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. ஆனால், நடப்பில் உரூபா 1800 கோடி அங்காடிக் கடன்மூலம் உரூபா 823 கோடியும், சிறு சேமிப்பின்மூலம் உரூபா 565 கோடியும் திரட்டப்பட்டது. நான்காவது திட்டத்தில் அங்காடிக் கடன்மூலம் உரூபா 2,326 கோடியும், சிறு சேமிப்புகளின்மூலம் உரூபா 769 கோடியும் திரட்டுவது என்று முடிவு செய்யப்பட்டது. 1973—74-ல் இந்திய அரசின் உள்நாட்டுக் கடன் உரூபா 10441·16 கோடியாகவும், வெளிநாட்டுக் கடன் உரூபா 7560.86 கோடியாகவும் இருந்தது. இந்திய அரசின் மொத்தக் கடன் தொகை உரூபா 18,002·02 கோடியாகும். உள்நாட்டில் வாங்கிய கடன் தொகையில் உரூபா

5744·95 கோடி நிலையாக்கிய கடனும், உரூபா 4,696·21 கோடி நிலையாக்காத கடனும் ஆகும்.

**வெளிநாட்டுக் கடன்**

முன்பு கூறியவாறு, இரண்டாவது உலகப்போர் நிகழ்ந்த காலத்தில் ஸ்டர்லிங் கடனைத் திருப்பித் தந்ததால், இந்தியாவின் வெளிநாட்டுக் கடன் மிகவும் குறைந்திருந்தது. 1950—51ஆம் ஆண்டின் இறுதியில் இந்தியாவின் வெளிநாட்டுக் கடன் உரூபா 32·03 கோடியாக இருந்தது. இத் தொகை 1955—56-ஆம் ஆண்டின் இறுதியில் உரூபா 113·63 கோடியாகவும், 1961ஆம் ஆண்டு மார்ச் 31ஆம் நாள் உரூபா 760·96 கோடியாகவும், 1965 ஆம் ஆண்டு மார்ச் 31ஆம் நாள் உரூபா 790·96 கோடியாகவும் அதிகரித்தது. இரண்டாவது திட்ட காலத்தில் உரூபா 1090 கோடியும் (P. L. 480 நிதிகளையும் சேர்த்து), மூன்றாவது திட்ட காலத்தில் உரூபா 2,423 கோடியும் வெளிநாடுகளில் கடனாக வாங்கப்பட்டது. நான்காவது திட்ட காலத்தில் வெளிநாடுகளில் உரூபா 2,614 கோடி கடனாகத் திரட்ட முடிவு செய்யப்பட்டது. 1973—74 வரவு செலவுத் திட்ட மதிப்பீட்டின்படி இந்தியாவின் வெளிநாட்டுக் கடன் உரூபா 7560·86 கோடியாகும். இதில் P. L. 480 உரூபாக் கடன் 1588·58 கோடியாகும். மொத்த வெளி நாட்டுக் கடனில் ஏறக்குறைய பாதித்தொகை (உரூபா 3,535·57 கோடி) அமெரிக்காவில் வாங்கப்பட்டதாகும். இந்திய அரசுக்குக் கணிசமான தொகைகளைக் கடனாக அளித்த பிற நாட்டு அரசுகள் வருமாறு :[1]

| | | கோடி உரூபாவில் |
|---|---|---|
| 1. | அமெரிக்கா | 3,535·57 |
| 2. | பன்னாட்டு வளர்ச்சிக் கழகம் (I. D. A.) | 1,182·08 |
| 3. | பிரிட்டன் | 812·35 |
| 4. | மேற்கு ஜெர்மனி | 451·88 |
| 5. | ஜப்பான் | 343·69 |
| 6. | சோவியத் யூனியன் | 288·04 |
| 7. | கானடா | 225·08 |
| 8. | உலக பேங்க் | 207·61 |

இவ் வரிசையில் சோவியத் யூனியன் ஆறாவது இடத்தைத் தான் பெற்றிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

1950—51-ல் ஐந்தாண்டுத் திட்டங்களைத் தொடங்குவதற்கு முன்பு இந்திய அரசின் கடன் உரூபா 2,054 கோடியாகும். 1973—74-ல் இத் தொகை உரூபா 18,000 கோடியாக அதிகரித்

[1] ஆதாரம் : Eastern Economist, Budget Number', March 9, 1973, p. 537.

திருக்கிறது. இந்திய அரசின் கடன் முதல் திட்ட காலத்தில் 19 சதவீதமும், இரண்டாவது திட்ட காலத்தில் 94 சதவீதமும், மூன்றாவது திட்ட காலத்தில் 69 சதவீதமும் ஆண்டு திட்டங்களின் காலத்தில் (1966—69) 59 சதவீதமும், நான்காவது திட்ட காலத்தில் 50 சதவீதமும் அதிகரித்திருக்கிறது. 22 ஆண்டு திட்ட காலத்தில் (1951—1973) இந்திய அரசின் கடன் 9 மடங்கு (900 சதவீதம்) அதிகரித்திருக்கிறது.

கடனின் தன்மையும் மாறியிருக்கிறது. 1951-க்கும் 1973-க்கும் இடையே உள்நாட்டுக் கடன் ஐந்து மடங்கு (500%) அதிகரித்திருக்கிறது. ஆனால், அதே காலத்தில் வெளிநாட்டுக் கடன் 236 மடங்கு (23,600 சதவீதம்) அதிகரித்திருக்கிறது. இதன் விளக்கத்தைப் பின்வரும் அட்டவணையில் காணலாம்.

(இறுதியில்)

| | 1950—51 | முதல் திட்டம் | இரண்டாம் திட்டம் | மூன்றும் திட்டம் | ஆண்டைய திட்டங்கள் | 1973—74 |
|---|---|---|---|---|---|---|
| உள்நாட்டுக் கடன் | 98·5 | 95·4 | 83·9 | 67·6 | 53·4 | 58 |
| வெளிநாட்டுக் கடன் | 1·5 | 4·6 | 16·1 | 32·4 | 46·6 | 42 |
| | 100·0 | 100·0 | 100·0 | 100·0 | 100·0 | 100·0 |

ஆண்டுத் திட்டங்கள் நிறைவேறிய காலத்தில் (1966—69) இருந்ததைக் காட்டிலும் நான்காம் திட்ட காலத்தில் வெளிநாட்டுக் கடன்களின் சதவீதம் குறைத்திருப்பது மகிழ்ச்சியைத் தருகிறது.

இந்திய அரசு பெரும் அளவில் கடன் வாங்கியதால் அது கொடுக்க வேண்டிய வட்டித் தொகை அதிகரித்தது. 1950—51-ல் உருபா 37 கோடியாக இருந்த வட்டித் தொகை 1973—74-ல் உருபா 834·9 கோடியாக அதிகரித்தது. இருபத்து மூன்று ஆண்டுகளில் இத் தொகை இருபத்து மூன்று மடங்கு (2300%) பெருகியுள்ளது. 1950—51-ல் மொத்த வருவாயில் 9% வட்டியாகச் செலுத்தப்பட்டது. 1973—74-ல் இச் சதவீதம் 16 ஆக அதிகரித்தது. இபபொழுது இந்தியா ஓர் ஆண்டில் வெளிநாடுகளிலிருந்து கிடைக்கும் கடன் தொகையில் $\frac{3}{4}$-க்குமேல் திருப்பியளிக்க வேண்டியிருக்கிறது. 'நமக்கு ஆண்டொன்றுக்கு உதவித் தொகையாக ஏறக்குறைய 800 மில்லியன் டாலர் (உருபா 600 கோடி) கிடைக்கிறது. நாம் வெளிநாடுகளுக்கு ஆண்டொன்றில் செலுத்தும்

தொகை இப்பொழுதே 625 மில்லியன் டாலரை (உருபா 469 கோடி) எட்டி விட்டது.[5] 1958-ல் இருந்துதான் இந்தியா அதிக மாக வெளிநாடுகளிலிருந்து கடன் வாங்கத் தொடங்கியது. ஓராண்டில் இந்தியா பிற நாடுகளுக்குப் பண்டங்களையும், பணி களையும் ஏற்றுமதி செய்து ஈட்டும் தொகையில் 30% அசலைத் திருப்பித் தருவதற்கும், வட்டியைச் செலுத்துவதற்கும் சரியாகப் போய் விடுகிறது.

கடனுளி நாடுகள் கடனைத் திருப்பித் தருவதற்குக் கடன் அளித்த நாடுகள் வகை செய்யவேண்டும். முந்திய நாடுகள் அயல்நாட்டு வாணிபத்தின் வாயிலாக அயல்நாட்டுச் செலா வணியை ஈட்டுவதற்குப் பிந்திய நாடுகள் வழி வகுக்கவேண்டும். இல்லையேல் கடன் சுமையைத் தாங்க முடியாமல் இந் நாடுகள் கடனை நிராகரிக்கும். ஆகவே, இந் நாடுகள் அடுத்த பத்து அல்லது பதினைந்து ஆண்டுகளுக்குத் தொடர்ந்து கடனுதவி பெற வேண்டும். இக் கடனுதவியில் கடன் நிவாரணமும் ஓரளவு இடம் பெறவேண்டும். கடன் அளித்த எல்லா நாடுகளும் சமமான அளவு தியாகத்தைச் செய்யவேண்டும் என்ற வாதத்தைக் கூறி, கடன் நிவாரணம் அளிப்பதில் காலம் கடத்தலாகாது. கடன் அளித்த அனைத்து நாடுகளும் சமமான அளவு தியாகம் செய்யும்படியான ஓர் ஏற்பாட்டை வகுக்க முடியாது. உலக பேங்கும் நான்காம் திட்டத்தின் இறுதி இரண்டு ஆண்டுகளுக்கும், ஆண்டொன்றுக்கு உருபா 150 கோடி (200 மில்லியன் டாலர்) கடன் நிவாரணம் அளிக்க வேண்டுமென்று சிபாரிசு செய்தது. இதற்கு முந்திய நான்காண்டுகளுக்கும் (1967—68-ல் இருந்து 1970—71 முடிய) ஆண்டொன்றுக்கு நூறு மில்லியன் டாலர் (உருபா 75 கோடி), கடன் நிவாரணமாக இந்தியாவுக்கு ஒத்தாசை செய்த நாடுகள் (Aid India Consortium) அளித்தன.

மேற்கூறியவற்றிலிருந்து இந்திய அரசின் கடனைப்பற்றிய மூன்று உண்மைகள் புலனாகின்றன. (1) மைய அரசின் கடன் களில் பெரும் பகுதியும் பொருளாதார வளர்ச்சித் திட்டங்களுக் காகவே வாங்கப்பட்டது. இக் கடன்கள் கிடு கிடு என அதிகரித்து வருகின்றன. (2) உள்நாட்டுக் கடன்களைக் காட்டிலும், வெளி நாட்டுக் கடன்கள் மிக விரைவாக அதிகரித்து வந்துள்ளன. 1950—51-ல் மொத்த கடன்களில் வெளிநாட்டுக் கடன் 1·5 சத வீதமாக இருந்தது. 1973—74-ல் இச் சதவீதம் 42 ஆக அதி கரித்தது. வெளிநாட்டுக் கடனில் ஏறக்குறைய 50 சதவீதத்தை அமெரிக்கா அளித்திருக்கிறது. (3) வட்டிச் சுமை அதிகரித்து விட்டது. வெளிநாடுகளில் வாங்கிய கடன்களுக்கு வட்டி செலுத்துவது பெரும்பாடாக இருக்கிறது.

**மாநிலங்களின் கடன்**

ஸர் ஓட்டோ நீமியர் (Sir Otto Niemeyer) அவர்களின் சிபாரிசின்படி, *1935*ஆம் ஆண்டு பிரிட்டிஷ் பாராளு மன்றத்தினுல் இயற்றப்பட்ட இந்திய அரசுச் சட்டம் (The Government of India Act) அமலுக்கு வருவதற்கு முன்பு ஒவ்வொரு மாகாணமும் வாங்கியிருந்த கடன் முழுதும் ஒரே வட்டி வீதத்துடன் கூடிய கடனுகத் திரட்டப்பட்டது. *1938*ஆம் ஆண்டு மார்ச் இறுதியில் பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களின் கடன் தொகை உரூபா *159·70* கோடியாக இருந்தது. *1946*ஆம் ஆண்டு மார்ச் திங்கள் இறுதியில் இத் தொகை உரூபா *162·97* கோடியாக உயர்ந்தது. ஆனுல், இவற்றின் அமைப்பில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. *1938*-ல் இந்திய அரசினிடம் இருந்து பெற்ற கடன்கள் உரூபா *124·67* கோடியாக இருந்தது. *1946*-ல் இத் தொகை உரூபா *52·21* கோடியாகக் குறைந்தது. இதற்குக் காரணம் மாகாணங்கள், அங்காடியில் கடன் வாங்கி இந்திய அரசுக்குத் தாம் பட்டிருந்த கடனை அடைத்ததேயாகும். சில சமயம் மைய அரசுக்குத் தரவேண்டிய வட்டி வீதத்தைக் காட்டிலும் குறைந்த வட்டி வீதத்தில் மாகாணங்கள் கடன் திரட்டின. *1938* மார்ச் இறுதியில் உரூபா *12·64* கோடியாக இருந்த நிலையாக்கிய கடன் *1946* மார்ச் இறுதியில் உரூபா *59·28* கோடியாக அதிகரித்தது.

இந்தியா சுதந்திரம் பெற்றபொழுது மாநில அரசுகளின் கடன் உரூபா *44* கோடியாக இருந்தது. *1948*ஆம் ஆண்டு மார்ச் இறுதியில் மாநிலங்களின் (A பிரிவு மாநிலங்களை மட்டுமே குறிப்பிடுகின்றேம்) கடன் உரூபா *118·14* கோடியாக இருந்தது. இத்தொகை *1961*ஆம் ஆண்டு மார்ச் இறுதியில் உரூபா *2,739* கோடியாகவும், *1966*ஆம் ஆண்டு மார்ச் இறுதியில் உரூபா *5519* கோடியாகவும், *1969*ஆம் ஆண்டு மார்ச் இறுதியில் உரூபா *7440* கோடியாகவும், *1972*ஆம் ஆண்டு மார்ச் இறுதியில் உரூபா *9568* கோடியாகவும் அதிகரித்தது. *1973*ஆம் ஆண்டு மார்ச் திங்கள் இறுதியில் இக் கடன் உரூபா *11670* கோடி என்று மதிப்பிடப் பட்டது.[1] இக் கடன் அதிகரிப்புக்குக் காரணம் வளர்ச்சித் திட்டங் களுக்கு அதிக மூலதன செலவு செய்ததேயாகும். மாநிலங்களின் கடன் தொகை இதற்கு மேலும் அதிகரித்திருக்கும். அங்ஙனம்

*பிரிட்டிஷ் இந்திய மாகாணங்கள் தாம், 1950ஆம் ஆண்டில் இந்திய அரசியல் சட்டம் இயற்றப்பட்ட பிறகு A பிரிவு மாநிலங்கள் என்றும், 1950ஆம் ஆண்டுக்கு முன்பிருந்த சுதேச சமஸ்தானங்கள்தாம் B பிரிவு மாநிலங்கள் என்றும் பெயர் பெற்றன. திருவாங்கூர் — கொச்சியைப் போன்று சில சமஸ்தானங்கள் இணைந்ததும் உண்டு.*

[1] ஆதாரம் : Reserve Bank of India Bulletin, June 1973, p. 937.

அதிகரிக்காததற்குக் காரணம் அங்காடியில் மாநிலங்களால் அதிகக் கடனைத் திரட்ட முடியாமையும், மைய அரசினிடமிருந்து அதிகக் கடன் பெற முடியாமையும் ஆகும். மைய அரசே பண முடையினுல் அவதிப்பட்டதனுல் மாநிலங்களுக்கு இன்னும் அதிகமாகக் கடன் கொடுத்து உதவ முடியவில்லை. மாநிலங்களின் நிலையான கடன் 1948ஆம் ஆண்டு மார்ச் திங்கள் இறுதியில் உருபா 44·17 கோடியாக இருந்தது. இத் தொகை 1965ஆம் ஆண்டு மார்ச் இறுதியில் உருபா 721·60 கோடியாக அதிகரித்தது. இக்கால கட்டத்தில் மைய அரசினிடமிருந்து பெற்ற கடன் உருபா 49·98 கோடியிலிருந்து உருபா 3,558·74 கோடியாக அதிகரித்தது.

இந்திய ஒன்றியத்துடன் ஹைதராபாத், மைசூர், திருவாங்கூர்-கொச்சி ஆகிய சமஸ்தானங்களை இந்தியாவுடன் நிதிய விவகாரங்களில் ஒருமைப்படுத்துவதற்கு முன்பு, இச் சமஸ்தானங்களின் வருவாய் ஈனும் ஆஸ்திகள் கடன் பொறுப்புகளைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. மத்திய பாரதம், பெப்ஸு (பாட்டியாலா, கிழக்குப் பஞ்சாப் மாநிலங்களின் ஒன்றியம்), ராஜஸ்தானம், சௌராஷ்டிரம் ஆகிய மாநில அரசுகளுக்கு யாதொரு அரசு கடனும் இல்லை. இதற்கும் மேலாகச் சுதேசி மன்னர்கள் முதலீடு செய்திருந்த கணிசமான தொகைகளையும். அவர்கள் வைத்துவிட்டுச் சென்ற ரொக்க இருப்புகளையும் இவை பெற்றன. A பிரிவு மாநிலங்களைப் பொறுத்தவரையில்கூட, அவற்றின் கடன் பொறுப்புகளைக் காட்டிலும் அவற்றின் வருவாய் ஈனும் ஆஸ்திகள் அதிகமாக இருந்தன. 1952—53ஆம் ஆண்டு வரவு செலவு திட்டத்தின்படி A பிரிவு மாநிலங்களுக்குக் கிடைத்த வட்டி வருவாய், அவை வட்டியாகச் செலுத்திய தொகையைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. 1952—53-ல் இத் தொகை உருபா 1·64 கோடியாகும். இந்த ஆண்டில் B பிரிவு மாநிலங்கள் உருபா 2·11 கோடி வட்டி செலுத்தின.

தாங்கள் அளித்த கடன்கள், மேற்கொண்ட முதலீடுகள் ஆகியவற்றிலிருந்து A பிரிவு மாநிலங்களும், B பிரிவு மாநிலங்களும் கணிசமான வருவாயைப் பெற்றன. 1952—53ஆம் ஆண்டு வரவு செலவு திட்டத்தின்படி A பிரிவு மாநிலங்களின் வட்டி வருவாய் உருபா 1·71 கோடியும், B பிரிவு மாநிலங்களின் வட்டி வருவாய் உருபா 2·78 கோடியும் ஆகும். இவ்வாருக 1952—53-ல் A பிரிவு மாநிலங்களுக்கு வட்டியிலிருந்து கிடைத்த நிகர வருவாய் உருபா 5·16 கோடியாகும்; B பிரிவு மாநிலங்களுக்குக் கிடைத்த தொகை உருபா 0·68 கோடியாகும். ஹைதராபாத், மத்திய பாரதம், மைசூர்,

பெப்ஸு ஆகிய மாநிலங்கள் தாங்கள் வணிக நிறுவனங்களுக்கு அளித்த கடனுக்கு வர வேண்டிய வட்டித் தொகையை அந் நிறுவனங்களின் பேரில் பற்று எழுதவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. இவ்வாறு நிதிய நிலைமை நன்ருக இருந்தும், தங்கள் கடனை அடைப்பதற்காக A பிரிவு மாநிலங்களும், B பிரிவு மாநிலங்களும் உருபா 5·14 கோடியையும்; உருபா 2·62 கோடியையும் முறையே 1952—53-ல் ஒதுக்கின இதிலிருந்து மாநிலங்கள் கடன் கொள்கையைப் பொறுத்தவளவில் எச்சரிக்கையாக நடந்து கொண்டன என்று தெரிகிறது. மேலும், தங்கள் வருவாயிலிருந்தே கணிசமான தொகை மூலதனச் செலவு செய்தன என்றும் தெரிகிறது. இருபதாம் நூற்ருண்டில் அரசு கடன் நிலையைப் பொறுத்தமட்டில், மிகச் சில அரசுகளே இவ்விதம் பிற அரசுகள் பொருமை கொள்ளும்படியான நன்னிலையில் இருந்தன. சுதந்திரம் பெறுவதற்கு முன்பு, சமுதாய சேவைகள், வளர்ப்புப்பணிகள் ஆகியவற்றுக்குச் செலவு செய்யாமல் காயப்போட்டே இந் நிலையை மாநிலங்கள் எய்தின என்பதைக் கூருமல் இருக்க முடியவில்லை.

மாநிலங்களின் கடனை இரு கூருகப் பிரிக்கலாம். அவை யாவன: (1) அரசு கடன் (Public Debt). (2) நிலையாக்காத கடன். அரசின் கடனை நான்கு கூறுகளாகப் பிரிக்கலாம். அவை யாவன: (அ) நிலையாக்கிய கடன், (ஆ) நிலையாக்காத கடன், (இ) மைய அரசினிடமிருந்து பெற்ற கடன்கள், (ஈ) ஏனைய கடன்கள். நிலைத்த கடன்களில் அங்காடியில் வாங்கிய கடன்களும், ஜமீன்தாரி முறையை ஒழித்தபொழுது கொடுக்கப்பட்ட கடன் பத்திரங்களும், நில உச்ச வரம்புச் சட்டத்தைக் கொண்டு வந்த பொழுது, உச்ச வரம்புக்கு மேற்பட்ட நிலங்களை மாநில அரசுகள் எடுத்துக்கொண்டபொழுது அவை நிலக்கிழார்களுக்குக் கொடுத்த கடன் பத்திரங்களும் அடங்கும். ரிசர்வ் பேங்கிலிருந்து பெற்ற வகை துறைக் கடன்களும் (ways and means advances), மிகை எடுப்புக்களும் (overdrafts), அரசு பேங்கிலிருந்தும் (State Bank), ஏனைய வணிக பேங்குகளிலிருந்தும் பெற்ற ரொக்கக் கடன்களும் (cash credits) நிலையாக்காத கடனில் அடங்கும். மைய அரசினிடமிருந்து மாநில அரசுகள் வாங்கிய கடன்தான், இக் கடன்களில் மிகவும் முக்கியமானது. 1973—74 வரவு செலவுதிட்டத்தின்படி இக் கடன் மாநில அரசுகளின் மொத்தக் கடனில் 73·2 சதவீதம் ஆகும். மாநிலங்களின் பிராவிடண்டு நிதிகள் (Provident Funds), மாநில ஈட்டுறுதி நிதிகள் (State Insurance Funds) ஆகியவை நிலையாக்காத கடனில் அடங்கும். ஆயுள் காப்பீட்டுக் கார்ப்பொரேஷன் (Life Insurance Corporation) போன்ற நிறுவனங்களிலிருந்து பெற்ற கடன்கள் ஏனைய கடன்களில் அடங்கும்.

மாநிலங்களின் கடன் கீழே தரப்பட்டுள்ள அட்டவணையிலிருந்து நன்கு புலனாகும்.

### மாநிலங்களின் கடன்

(கோடி உருபாவில்)

| | மார்ச் திங்கள், இறுதியில் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 1961 | 1966 | 1969 | 1970 | 1971 | 1972 | 1973 (திருத்தப் பட்ட மதிப்பீடு) | 1974 (பட்ஜெட் மதிப்பீடு) |
| 1. அரசின் மொத்தக் கடன். (அ முதல் ஈ வரை) | 2606 (95·1) | 5288 (95·8) | 7073 (95·1) | 7529 (94 3) | 8212 (93 9) | 8946 (93·5) | 10070 (93·3) | 10843 (92·9) |
| (அ) நிலைத்த கடன். | 500 (18·3) | 827 (15·0) | 1047 (14·1) | 1131 (14·2) | 1233 (14·1) | 1332 (13·9) | 1462 (13·6) | 1661 (14·2) |
| (ஆ) நிலையாக்காத கடன். | 42 (1·5) | 189 (3·4) | 241 (3·2) | 182 (2·3) | 375 (4·3) | 600 (6·3) | 296 (2·7) | 304 (2·6) |
| (இ) மைய அரசிடமிருந்து பெற்ற கடன்கள், | 2014 (73·5) | 4110 (74·5) | 5584 (75·1) | 5987 (75·0) | 6365 (72 8) | 6756 (70·6) | 8010 (74·2) | 8536 (73·2) |
| (ஈ) ஏனைய கடன்கள், | 50 (1·8) | 162 (2·9) | 201 (2·7) | 229 (2,8) | 239 (2·7) | 258 (2·7) | 302 (2·8) | 342 (2·9) |
| 2. நிலையாக்காத கடன். | 133 (4·9) | 231 (4·2) | 367 (4·9) | 453 (5·7) | 537 (6·1) | 622 (6·5) | 724 (6·7) | 827 (7·1) |
| 3. மொத்தக் கடன் (1 + 2) | 2739 (100·0) | 5519 (100·0) | 7440 (100·0) | 7982 (100·0) | 8749 (100·0) | 9568 (100·0) | 10794 (100·0) | 11670 (100·0) |

குறிப்பு.—1. நகவளைவுகளில் உள்ள எண்கள், மொத்தக் கடனில் எவ்வளவு சதவீதம் என்பதைக் குறிப்பிடுகின்றன.

2, இங்கே தரப்பட்டுள்ள விவரங்கள் தற்காலிகமானவையாகும் (provisional). ஏனெனில் ஆந்திரப் பிரதேசமும், ஒரிஸ்ஸாவும் இன்னும் தங்களின் இறுதியான வரவு செலவு திட்டங்களைச் சமர்ப்பிக்கவில்லை.

ஆதாரம்: Reserve Bank of India Bulletin, June 1973, p. 937 (1971 ஆம் ஆண்டு வரையிலுள்ள புள்ளி விவரங்கள் மைய மாநில அரசுகளின் கூட்டு நிதிய வருவாய் கணக்குகளிலிருந்தும் (Combined Finance and Revenue Accounts of the Central and State Governments). 1972-ல் இருந்து மாநில அரசுகளின் வரவு செலவு திட்ட அறிகைகளிலிருந்தும் எடுக்கப்பட்டன.

1974ஆம் ஆண்டு மார்ச் இறுதியில் மாநில அரசுகளின் மொத்தக் கடன் உருபா 11670 கோடியாக இருக்கும். இத் தொகை 1973ஆம் ஆண்டு மார்ச் இறுதியில் இருந்ததைக் காட்டிலும் உருபா 876 கோடி கூடுதலாகும்; அதாவது 8·1% அதிக மாகும். முந்திய ஆண்டுகளைப் போன்றே இந்த ஆண்டிலும் மைய அரசினிடமிருந்து பெற்ற கடனே இவ்வதிகரிப்புக்குப் பெரிதும் காரணமாகும். 1972—73 உடன் ஒப்பிடும்பொழுது 1973—74-ல் இக் கடன் உருபா 526 கோடி அதிகரித்திருக்கிறது. 1972—73-ல் (1971—72 உடன் ஒப்பிடும்பொழுது) உருபா 1254 கோடியும், 1971—72-ல் உருபா 391 கோடியும் இக் கடன் தொகை அதிகரித் திருக்கிறது. 1972—73-ல் பஞ்ச நிவாரணத்திற்காகவும், அவசர கால வேளாண்மை உற்பத்தி திட்டப் பணிகளுக்காகவும் (emergency agricultural production programme) மாநில அரசு களுக்கு மைய அரசு, சிறப்பு வழிதுறை கடன்களை வழங்கியதால், இங்ஙனம் கணிசமான அளவு கடன் அதிகரித்தது, மைய அரசுக்கு மாநில அரசுகள் 1973—74-ல் தர வேண்டிய கடன் தொகை உருபா 8536 கோடியாகும். இஃது 73·2 சதவீதமாகும். இச் சத வீதம் 1972—73-ல் 74·2 ஆகும். 1969ஆம் ஆண்டு மார்ச் திங்களுடன் ஒப்பிடும்பொழுது, நான்காம் திட்ட காலத்தில், மாநில அரசுகள் மைய அரசுக்குத் தர வேண்டிய கடன் பாக்கி உருபா 2952 கோடி (52·9%) அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப் படுகிறது. 1969ஆம் ஆண்டு மார்ச் திங்களில் இத் தொகை உருபா 5584 கோடியாக இருந்தது. முதல் ஐந்தாண்டு திட்ட காலத்தில், மாநில அரசுகள் மைய அரசினிடமிருந்து உருபா 770 கோடியும், இரண்டாவது திட்ட காலத்தில் உருபா 1549 கோடியும், மூன்ருவது திட்ட காலத்தில் உருபா 3,092 கோடியும், ஆண்டு திட்டங்களின் காலத்தில் (1966—69) உருபா 2,693 கோடியும், நான்காவது திட்ட காலத்தில் உருபா 6191 கோடியும்[1] கடனுகப் பெற்றன. இதிலிருந்து, மாநில அரசுகளின் நிதிநிலைமை வர வர மோசமாகிக் கொண்டு வருவதும், அவை நாளுக்கு நாள் அதிகமாக மைய அரசை நம்பியிருப்பதும் தெளிவாகும். 1973ஆம் ஆண்டு மார்ச் திங்களில் இருந்ததைக் காட்டிலும் நிலைத்த கடன் உருபா 199 கோடி அதிகரித்திருக்கிறது. 1973 மார்ச்சில் இக் கடன் தொகை உருபா 1462 கோடியாக இருந்தது. 1974 மார்ச்சில் இத் தொகை உருபா 1661 கோடியாக அதிகரிக்கும். இது மாநில அரசுகளின் மொத்தக் கடனில் 14·2 சத வீதமாகும். நான்காம் திட்ட காலத்தில் மாநில அரசுகளின் நிலைத்த கடன்

[1] இதில் மைய அரசு, மாநில அரசுகள் ரிசர்வ் பேங்கிடம் வாங்கியிருந்த மிகை எடுப்புக்களை (overdrafts) அடைப்பதற்காக வழிதுறை கடனுக அளித்த உருபா 421 கோடி சேர்க்கப்படவில்லை.

உரூபா 614 கோடியும் நிலையாக்காத கடன் உரூபா 63 கோடியும் அதிகரிக்கும். 1972ஆம் ஆண்டு மார்ச் திங்களில் இருந்ததைக் காட்டிலும் 1973ஆம் ஆண்டு மார்ச்சில் நிலையாக்காத கடன் உரூபா 296 கோடிதான் அதிகரித்திருக்கிறது. ஆனால், இக் கடன் 1971க்கும் 1972க்கும் இடைப்பட்ட ஓராண்டில் உரூபா 600 கோடி அதிகரித்திருக்கிறது. 600 கோடியிலிருந்து 296 கோடியாகச் சரிந்ததற்குக் காரணம், மாநிலங்களின் மிகை எடுப்புக்களைப் (அதிகப் பற்றுகள்) (overdrafts) பொறுத்தவரை மைய அரசு ஒரு புதிய கொள்கையைக் கடைப்பிடித்ததே ஆகும். (விவரங்களை அடுத்து வரும் பக்கங்களில் காண்க). 1973ஆம் ஆண்டு மார்ச்சுடன் ஒப்பிடும்பொழுது 1974ஆம் ஆண்டு மார்ச்சில் நிலையாக்காத கடன் உரூபா 6 கோடி அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. 1973 மார்ச்சுக்கும் 1974 மார்ச்சுக்கும் இடைப்பட்ட ஓராண்டில் நிலையாக்காத கடன் உரூபா 103 கோடி அதிகரிக்கும்.

### வட்டிக்கு ஆகும் செலவு

1972—73-ல் வட்டிக்காகச் செலவழித்த தொகையைக் காட்டிலும், 1973—74-ல் மாநில அரசுகள் உரூபா 54 கோடி (11.3 சதவீதம்) அதிகமாகச் செலவழிக்கவேண்டும். 1972-73-ல் இத் தொகை உரூபா 477 கோடியாக இருந்தது. 1973—74-ல் இத் தொகை உரூபா 531 கோடியாக உயரும். 1968—69-ல் மாநில அரசுகள் வட்டிக்காகச் செலவழித்த தொகை உரூபா 315 கோடியாகும். ஆகவே, நான்காவது திட்ட காலத்தில் மாநில அரசுகள் வட்டிக்காகச் செலவழிக்கும் தொகை உரூபா 216 கோடி (68.5 சதவீதம்) அதிகரித்துள்ளது. மாநிலங்களின் வருவாயுடன் ஒப்பிட்டால் அவை 1973—74-ல் தங்கள் வருவாயில் 20 சதவீதத்தை வட்டிக்காகச் செலவழிக்கும். இச் சதவீதம் 1969-70-ல் 19·5 ஆகும். இப்பொழுது ஆண்டொன்றுக்கு மாநில அரசுகள் மைய அரசுக்கு உரூபா 374 கோடியை வட்டியாகச் செலுத்துகின்றன. 22 ஆண்டுகளில் (1951—1973) இந்திய அரசின் கடன் 9 மடங்கும் (900%) 27 ஆண்டுகளில் (1947—1974) மாநில அரசுகளின் கடன் 194 மடங்கும் (1,94,000%) பெருகியுள்ளது. இதேபோன்று மைய அரசு செலுத்தும் வட்டித் தொகை 1950—51-ல் உரூபா 37 கோடியாக இருந்தது. இத் தொகை 1973—74-ல் 835 கோடியாக (2300%) அதிகரித்துள்ளது. இதே காலத்தில் மாநிலங்கள் (A பிரிவும் B பிரிவும்) மைய அரசுக்கு செலுத்த வேண்டிய வட்டித் தொகை உரூபா 14.17 கோடியிலிருந்து உரூபா 374 கோடியாகப் (2500%) பெருகியுள்ளது. 1968—69-ல் மாநில அரசுகள் தாங்கள் மைய அரசினிடமிருந்து வாங்கிய கடன்களின் பேரில் சராசரி 4.2 சதவீதம் வட்டி

செலுத்தின. 1973—74-ல் இவ் வட்டி வீதம் 4.4 சதமாக உயரும். இதேபோன்று நிலைத்த கடன்கள் பேரில் 1968—69-ல் மாநிலங்கள் 4·3 சதவீதம் வட்டி செலுத்தின. 1973—74-ல் இவ் வட்டி வீதம் 5·0 சதமாக உயரும்.

மாநில அரசுகள் மைய அரசுக்கு 1972—73ஆம் ஆண்டு உருபா 725 கோடியைத் திருப்பித் தந்தன. 1973—74-ல் இத் தொகை உருபா 850 கோடியென்று, மைய அரசின் வரவு செலவு திட்டம் கூறுகிறது. மாநிலங்கள் தங்கள் மூலதனக் கணக்கில் செய்யும் மொத்தச் செலவில், கடன்களை அடைப்பதற்கு 1973—74-ல் 37·0 சதவீதம் செலவு செய்யும். இச் செலவு 1972—73-ல் 28·2 சதவீதமாக இருந்தது. 1973—74-ல் மைய அரசிடமிருந்து மாநிலங்களுக்குக் கிடைக்கும் நிகரக் கடன்கள் உருபா 478 கோடியாகும். 1972—73-ல் மாநிலங்களுக்கு உருபா 786 கோடி கிடைத்தது. 1972—73-ல் இக் கடன் தொகையைக் கொண்டு மாநிலங்கள் தங்கள் மூலதனச் செலவில் 50·3 சதவீதத்தைச் சரிக் கட்டின. ஆனால், 1973—74-ல் இச் சதவீதம் 32·2 ஆகக் குறையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதிலிருந்து மாநிலங்களின் நிதிய நிலைமை மிகவும் மோசமாகிக் கொண்டு வருவதும், இந் நிலையிலிருந்து மாநிலங்களை மீட்க மைய அரசு தக்க நடவடிக்கைகளை உடனடியாக மேற்கொள்ள வேண்டும் என்பதும் போதரும்.

மைய அரசின் கடனும் மாநில அரசுகளின் கடனும்

1950—51-ல் இருந்து 1973—74 வரையுள்ள 23 ஆண்டுகளில் மைய அரசின் கடன் உருபா 2565 கோடியிலிருந்து உருபா 18,002·02 கோடியாக அதிகரித்துள்ளது. இது 7 மடங்கு அல்லது 700% ஆகும். 1951—52-ல் உருபா 445 கோடியாக இருந்த மாநிலங்களின் கடன் 1973—74-ல் உருபா 11,670 கோடியாக அதிகரித்தது. இது 26 மடங்கு அல்லது 2600% ஆகும். 1951—52-ல் மாநிலங்கள் மைய அரசுக்குத் திருப்பித்தரவேண்டிய கடன் தொகை உருபா 238 கோடியாகும். இது மாநிலங்கள் அளிக்கவேண்டிய மொத்த கடனில் 53·8% ஆகும். இத் தொகை 1973—74-ல் உருபா 8536 கோடியாக அதிகரிக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. அதாவது 32 மடங்கு அல்லது 3200% அதிகரித்துள்ளது. இதேபோன்று மைய அரசு செலுத்தும் வட்டித் தொகை உருபா 37 கோடியிலிருந்து உருபா 835 கோடியாகப் (1950—51, 1973—74) பெருகியுள்ளது. இது 23 மடங்கு அல்லது 2300% ஆகும். இதே காலத்தில் மாநிலங்கள் மைய அரசுக்குச் செலுத்த வேண்டிய வட்டித்தொகை உருபா 14·17

கோடியிலிருந்து உரூபா 374 கோடியாகப் பெருகியுள்ளது; அதாவது 25 மடங்கு (2500%) பெருகியுள்ளது. 1950—51-க்கும், 1973—74-க்கும் இடைப்பட்ட காலத்தில் மைய அரசின் வருவாய் உரூபா 357 கோடியிலிருந்து உரூபா 4821·19 கோடியாகப் பெருகியுள்ளது. வரவு செலவு திட்டத்தில் கூறப்பட்ட புதிய வரிகளையுஞ் சேர்த்தால் இஃது உரூபா 5,113·56 கோடியாகும். இப் பெருக்கம் 14 மடங்கு அல்லது 1400% ஆகும். 1951—52-ல் மாநிலங்களின் மொத்த வருவாய் உரூபா 281·1 கோடியாகும். இத் தொகை 1973—74-ல் உரூபா 3159·9 கோடியாகப் பெருகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இப் பெருக்கம் 11 மடங்கு அல்லது 1100% ஆகும். இது காறும் கொடுக்கப்பட்ட புள்ளி விவரங்களிலிருந்து, ஒப்புமையில், 1951—52-ல் இருந்ததைக் காட்டிலும் 1973—74-ல் மாநிலங்கள் (மைய அரசைக் காட்டிலும்) மிக மோசமான நிதிய நிலையில் உள்ளன என்பது தெரியவரும்.

### பிரச்சினைகளைத் தீர்வு காணும் வழிகள்

1973—74-ல் மாநில அரசுகள் செலுத்த வேண்டிய வட்டித் தொகை உரூபா 531·4 கோடியாகும் இத்துடன் திருப்பித் தர வேண்டிய தொகையான உரூபா 326·6 கோடியையும் சேர்த்தால், அவை கடனை அடைப்பதற்குச் செலவழிக்க வேண்டிய மொத்த தொகை உரூபா 858 கோடியாகும். 1973—74-ல் மைய அரசு மாநிலங்களுக்கு அளிக்கும் மொத்தக் கடன் தொகை உரூபா 1328 கோடியாகும். மாநில அரசுகள் மைய அரசிடமிருந்து பெறும் கடன் தொகை ஆண்டுதோறும் குறைந்து கொண்டே வருகிறது. 1972—73-ல் மாநில அரசுகள் மைய அரசிடமிருந்து பெற்ற நிகர கடன் தொகை உரூபா 526 கோடியாகும். இத் தொகை 1973—74-ல் உரூபா 478 கோடியாகக் குறையும். 28—9—73-ல் சென்னை ராஜாஜி மண்டபத்தில் நிதியப் பொருளியலைப்பற்றிய ஆண்டு மாநாட்டில் தமிழ் நாட்டின் முதலமைச்சர் மாண்புமிகு மு. கருணாநிதி அவர்கள், நான்காம் திட்ட காலத்தில் தமிழ்நாடு மைய அரசுக்கு அசலாகவும், வட்டியாகவும் ஏறக்குறைய உரூபா 363 கோடியைத் திருப்பியளிக்க வேண்டியிருக்கும் எனவும், இத் தொகை மைய அரசிடமிருந்து கடனாகப் பெற்ற தொகையைக் காட்டிலும் சிறிது கூடுதல் என்றும் குறிப்பிட்டார். 1971—72-ல் மாநிலங்கள் மைய அரசிடமிருந்து உரூபா 40 கோடி கடனாகப் பெற்றன. ஆனால், அவை மைய அரசுக்குத் திருப்பியளித்த கடனோ உரூபா 65 கோடியாகும். ஆகவே, மாநிலங்களின் வளர்ச்சிக்காக மைய அரசு உதவி அளிப்பதாகக் கூறுவது பொய்த் தோற்றமேயாகும்.

இரண்டாவது நிதியக் குழுமம் மைய அரசிடமிருந்து மாநில அரசுகள் வாங்கிய பல கடன்களையும் ஒன்று திரட்டி வட்டியையும் 3 சத வீதத்திற்குமேல் போகாமல் குறைக்கவேண்டும் என்றும், மாநிலங்களுக்கு மைய அரசு இரு வகைக் கடன்களைத்தான் அளிக்க வேண்டும் என்றும் சிபாரிசு செய்தது. கடன்களை ஒன்று சேர்த்தலால் மாநிலங்கள் ஆண்டுதோறும் செலுத்த வேண்டிய வட்டித் தொகை உரூபா 5 கோடி குறையும். எந்த ஆண்டிலும் மைய அரசு வழிதுறைக் கடன்களை (ways and means advances) மாநிலங்களுக்கு வழங்கவேண்டும் என்றும், ஆண்டு முடிந்ததும் எந்த நோக்கத்திற்காகக் கடன் வாங்கப்பட்டதோ அதற்கேற்ப இவ் வழிதுறைக் கடன்களை இடைக்காலக் கடனுகவோ, நெடுங் காலக் கடனுகவோ மாற்றவேண்டும் என்றும் கருத்து தெரிவித்தது. கடன்களை ஒன்று சேர்த்து வட்டி வீதத்தைக் குறைத்தலை வரவேற் கலாம். ஆனுல், வழித்துறைக் கடன்களை முதலில் அளித்து விட்டுப் பின்னர் அவற்றை. இடைக்கால அல்லது நெடுங்காலக் கடன்களாக மாற்றவேண்டும் என்று கூறுவது சரியல்ல.

(1) அரசியல் சட்டத்தில் மாநிலங்களுக்கும் மைய அரசுக்கும் ஒதுக்கியிருக்கும் வரி விதிக்கும் அதிகாரங்களைத் திருத்தினுல்தான், மாநிலங்கள் ஓரளவு சுயேச்சையுடன் இயங்க முடியும். (2) அரசு முனைவுகளில் (State undertakings) மாநிலங்களின் முதலீட்டுக்கு ஏற்ப அவற்றின் வருவாய் பெருகாததும், மாநிலங்கள் மைய அரசிடம் பெருத்த அளவு கடன் வாங்குவதற்குக் காரணமாகும். (3) ஐந்தாண்டுத் திட்டங்களில் கண்டுள்ள பல திட்டப் பணிகளுக்கும் இந்திய அரசு 50% கடனுகவும் 50% மானியமாகவும் அளிப்பதும், மாநிலங்கள் மைய அரசிடம் பெரிதும் கடன் பட்டிருப்பதற்கு மற்றுமொரு காரணமாகும்,

மைய அரசிடமிருந்து மாநிலங்கள் கடன் வாங்குவதில் யாதொரு தவறுமில்லை. ஆனுல், மூன்ரும் நாடாளுமன்றத்தைச் சேர்ந்த பொது கணக்குக் குழு (Public Accounts Committee, 3rd Lok Sabha) தன்னுடைய 36ஆம் அறிக்கையில் கூறியவாறு, 1954—55ஆம் ஆண்டிலேயே, மாநில அரசுகள் மைய அரசுக்குச் செலுத்த வேண்டிய அசலிலும், வட்டியிலும் பாக்கிவைத்து விட்டன. அசலையும் வட்டியையும் மாநிலங்கள் செலுத்துவதற்கு உதவியாக மைய அரசு புதிய கடன்களை அளிக்கிறது. இப்பழக்கம் விரும்பத்தக்கதல்ல; இதற்கு ஊக்கம் அளிக்கக்கூடாது.

கடன் பளு மாநிலங்களின் கழுத்தை நெரித்துக்கொண்டிருப் பதால், அவற்றின் கடன்களை இரு கூறுகளாகப் பிரித்துப் பயனில் கடன்களை மைய அரசு தள்ளிக் கொடுத்து விடலாம். எஞ்சிய

கடன்களின்மீதுள்ள வட்டியை 3% ஆகக் குறைத்து 25 ஆண்டு களில் திருப்பித் தரும்படிச் செய்யலாம். 1964ஆம் ஆண்டில் தேசிய வளர்ச்சிக் குழு (National Development Council), மாநிலங்களின் ஆதிக்கத்தில் உள்ள சில பெரிய பல் நோக்குத் திட்டங்களை மைய அரசு எடுத்துக் கொண்டால், இத் திட்டங் களுக்காக மாநில அரசுகள் வாங்கிய கடனையும் திருப்பிக் கொடுக்க வேண்டிய பொறுப்பு மைய அரசையே சாரும் என்று கருத்து தெரிவித்தது. இதை நாம் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இதற்குக் காரணம் மாநில அரசுகளின் கையில் இருக்கும் சில அதிகாரங் களும் பறிபோகும் என்பதே. திட்டப் பணிகளுக்குக் கடன் வாங்கினால் அக் கடனை அவற்றிலிருந்து கிடைக்கும் வருவாயி லிருந்து அடைப்பதற்குத் திண்ணமாக வாய்ப்பு இருந்தால்தான் மாநிலங்கள் கடன் வாங்கவேண்டும்.

மைய அரசிடமிருந்து மாநில அரசுகள் கடன் வாங்கும் முறைமையைப் பற்றி ஆராய வல்லுநர் குழு ஒன்றை நியமிக்க வேண்டும். 'மாநில அரசுகளின் நலனுக்காக மட்டுமின்றி மைய அரசின் நலனுக்காகவும், இப்பொழுது அரசுகளிடையே நிலவும் கடன் வாங்கும் முறை சரியானது தானா என்பதை மறு ஆய்வு செய்யவேண்டும்' [1] என்று நான்காவது நிதியக் குழுமம் கருத்துத் தெரிவித்தது. ஆட்சி சீர்திருத்தக் குழுமத்தைச் (Administrative Reforms Commission) சேர்ந்த ஆய்வு அணியின் (Study Team) தலைவரான திரு. வேங்கடப்பையா, மாநிலங்களுக்குக் கடன் அளிப்பதற்காக ஒரு தேசிய வளர்ச்சி பேங்கை (National Development Bank) நிறுவவேண்டும் என்று கருதுகிறார். 28—9—73 அன்று தமிழக முதல்வர் அவர்களும் ஒரு கூட்டரசுக் கடன் குழுமத்தை (Federal Debt Commission) நிறுவவேண்டியது இன்றியமையாதது என்றார்கள். ஒரு தேசிய வளர்ச்சி பேங்கை நிறுவுவதைக் காட்டிலும் டாக்டர் வி. கே. ஆர். வி. ராவ் கூறுவது போன்று ஒரு தேசியக் கடன் அமைப்பை (National Loans Organisation) [2] நிறுவுவது நன்மை பயக்கும். இந் நிறுவனம் அனைத்துக் கடன்களையும் திரட்டுவதற்குப் பொறுப்பேற்கும். இக் கடன்களுக்கு மைய அரசு அல்லது மாநில அரசுகள் உத்தரவாதம் அளிக்கும். மைய அரசும் மாநில அரசுகளும் இன்னின்ன ஒப்பளவு முதல்களின் அடிப்படையில் திரட்டப்பட்ட கடனைத் தங்களுக்குள் பிரித்துக் கொள்ளவேண்டும் என்று முன்னதாகவே ஒரு உடன்பாட்டுக்கு வரவேண்டும். பம்பாயைச் சேர்ந்த இந்திய

[1] நான்காவது நிதியக் குழும அறிக்கை, பக்கம். 65.

[2] Dr. V. K. R. V. Rao's Article on Centre State Relations in India, 'Southern Economist', 15—1—1973 p. 9—14.

வணிகர்கள் குழு (Indian Merchants' Chamber, Bombay) ஆறுவது நிதியக் குழுமத்திடம் ஒரு அறிக்கையை (Memorandum) அளித்தது. இதில் அது வெள்ளம், வறட்சி, புயல் போன்ற இயற்கைச் சேதங்கள் ஏற்பட்ட காலத்தும், சமுதாய, பொருளாதார நிலைத்த செலவுகளுக்கும் (social and economic overheads)[1] மைய அரசு அளிக்கும் உதவித் தொகையை மூலதன மானியங்களாகக் கருதவேண்டும் என்று கருத்து தெரிவித்திருந்தது.[2]

மாநிலங்கள் கடன் வாங்குவதற்கு உச்ச வரம்பு

'அவ்வப்பொழுது மாநிலச் சட்டத்தினால் விதிக்கப்பட்ட வரம்புகளுக்குள் (அங்ஙனம் விதிக்கப்பட்டிருந்தால்)' மாநிலங்கள் கடன் வாங்கலாம் என்று இந்திய அரசியல் சட்டத்தின் 293வது விதி கூறுகிறது. ஆனால், இதுவரை எந்த மாநிலமும் தான் வாங்கப்போகும் கடன் தொகைகளுக்காக உச்ச வரம்பை அறுதியிடவில்லை. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மாநிலங்களின் கடன் வாங்கும் அதிகாரத்திற்கு உச்ச வரம்பு விதிக்கப்பட்டிருக்கிறது. இவ் வரம்புகள் மாநிலங்களின் வருவாய் திரட்டும் ஆற்றலுக்கு ஏற்ப அறுதியிடப்படுகின்றன. இவ் வரம்புகள் மாநிலந்தோறும் ஒரே மாதிரியாக இல்லை. இந்தியாவிலும் இம் மாதிரி உச்ச வரம்புகளை விதிக்கலாம். திரு. பி. என். குப்தா அவர்கள் இவ் வரம்புகள் மாநிலங்களின் வருவாய் திரட்டும் ஆற்றலைப் போன்று பத்திலிருந்து இருபது மடங்கு வரை இருக்கலாம் என்று கருதுகிறார். இங்ஙனம் வரம்பு விதிப்பதனால் மூன்று நன்மைகள் விளையும்.

1. வரிகளைக் குறைக்கும் அல்லது தள்ளுபடி செய்யும் மாநிலங்களின் போக்கை இஃது தடுத்து நிறுத்தும்.

2. அதிக வருவாயை வரிகளின்மூலம் திரட்டவேண்டும் என்ற முனைவை மாநிலங்களுக்கு ஏற்படுத்தும்.

3. மாநிலங்களின் ஊதாரித்தனமான செலவை மட்டுப்படுத்தும். இந்தியாவில் உள்ள மாநிலங்களை நான்கு கூறுகளாகப் பிரித்து, அவற்றின் வருவாய் திரட்டும் ஆற்றலுக்கு ஏற்பக் கீழ் வருமாறு அவற்றின் கடன் உச்ச வரம்புகளை அறுதியிடலாம். (அ) மகாராட்டிரம், உத்தரப்பிரதேசம், மேற்கு வங்காளம்,

[1] சமுதாய, பொருளாதார நிலைத்த செலவுகளில் போக்குவரத்து வசதிகள், தண்ணீர், மின்சாரம் ஆகியவை கிடைப்பு, கடன்கள், பண்டங்களை விற்பதற்கான வசதிகள், கல்வி, சுகாதார வசதிகள், திட்டப் பணி ஆய்வுகள் (projcet surveys). நிகழ்திற ஆய்வுகள் (feasibility studies) ஆகியவை அடங்கும்.

[2] Revenue Sharing with States, 'Eastern Economist', 23-2-1973, p. 328—330.

ஆந்திரம், தமிழ்நாடு: உரூபா 750 கோடி. (ஆ) பீஹார், கூர்ஜரம், மத்தியப்பிரதேசம், மைசூர், கேரளம்: உரூபா 500 கோடி. (இ) அஸ்ஸாம், ஒரிஸ்ஸா, ராஜஸ்தானம், பஞ்சாப், ஹரியானு, இமாயலப் பிரதேசம்: உரூபா 350 கோடி. (ஈ) ஜம்மு காஷ்மீரம், நாகாலாந்து, அருணுசலப் பிரதேசம்: உரூபா 50 கோடி. மாநிலங்களின் நிதி நிலைமைக் கேற்ப ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை இவ் வரம்புகளைத் திருத்திக் கொள்ளலாம்.[1]

இந்திய அரசு வெளிநாடுகளிலிருந்தும், உலகப் பேங்கு போன்ற நிறுவனங்களிலிருந்தும் கடன் வாங்குகிறது. பிற நாட்டு அரசுகளும், உலகப் பேங்கும் என்ன வட்டி வீதம் வாங்குகிறதோ, அதே வட்டி வீதத்திற்கு, அவற்றிடமிருந்து பெற்ற கடன் தொகைகளை மைய அரசு மாநிலங்களுக்கு அளிக்கவேண்டும். தமிழக முதல்வர் அவர்கள் வருத்தத்துடன் கூறியது போன்று, துண்டு நிதியத்திஞல் மைய அரசு ஆதாயம் பெறுகிறது.[2] துண்டு நிதியத்தின் விளைவே விலைவாசிகள் உயர்வு. விலைவாசிகள் உயர்விஞல் மாநில அரசுகளும் பாதிக்கப்படுகின்றன. இப்பொழுது சிறு சேமிப்பு நிதிகளிலிருந்து மூன்றில் இரண்டு பங்கையே மாநிலங்கள் பெறுகின்றன. இதை மாற்றிச் சிறு சேமிப்புகள் முழுவதையும் மாநிலங்களே வைத்துக் கொள்ளவேண்டும் என்று முதல்வர் கருத்துத் தெரிவித்தார். முதல்வரின் கருத்துகள் நியாயமான தாகவே நமக்கும் தோன்றுகிறது.

இறுதியாக, மாநில அரசுகளிஞல் அங்காடிகளில் கடன் திரட்ட முடியும். மாநில அரசுகள் தங்கள் பொறுப்புக்களை உணர்ந்து இவ் வதிகாரத்தை நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும். மைசூர் மாநிலத்தின் நிதியமைச்சரான திரு எம். ஒய். கோர்ப்பாடே (M. Y. Ghorpate) அவர்கள், அனைத்து அரசுகளின் ஊழியர்களுக்கும் அவர்கள் மாநிலங்களின் ஊழியர்களாக இருந்தாலும் சரி, மைய அரசின் ஊழியர்களாக இருந்தாலும் சரி, அவர்கள் சம்பளத்தையும் கிராக்கிப் படியையும் பொறுத்த மட்டில் ஒரே தேசியக் கொள்கையைப் பின்பற்ற வேண்டுமென்று 14-5-1972 அன்று புது டில்லியில் வலியுறுத்தியுள்ளார்கள். அண்மையில் மூன்ருவது சம்பளக் குழுமத்தின் (Third Pay Commission) அறிக்கை வெளியாகியுள்ளது. இக் குழுமத்தின்

[1] B. N. Gupta. Ph. D., 'Indian Federal Finance and Budgetary Policy', 1970, p. 315.

[2] Address by the Honourable Chief Minister, Tamil Nadu at the Rajaji Hall on the occasion of the Annual Conference on Fiscal Economics and Public Select Organised by the Indian Society of Industrial and Fiscal Economics as Reported in the Hindu, Friday, 28-9-73

சிபாரிசுகளை மைய அரசு ஏற்றுக் கொண்டதுடன், குழுமம் சிபாரிசு செய்த சம்பளங்களைக் காட்டிலும் சிறிது கூடுதலாகவே சில வகை ஊழியர்களுக்குச் சம்பளம் அளிக்க முடிவு செய்யும்போல் தோன்று கிறது. மைய அரசின் முடிவு வெளிவந்ததும், மாநில அரசுகளின் ஊழியர்களும், மைய அரசின் சம்பளத்திற்கு இணையான சம்பளத்தைத் தங்களுக்கும் மாநிலங்கள் அளிக்க வேண்டுமென்று போராட்டம் நடத்துவார்கள். ஆகவே, சம்பளங்களையோ, கிராக்கிப்படிகளையோ அல்லது இரண்டையும் உயர்த்துவதற்கு முன்பு, மைய அரசு மாநில அரசுகளைக் கலந்து முடிவு செய்ய வேண்டும்; அல்லது மாநில அரசுகளும் இதே சம்பளத்தையும், கிராக்கிப்படிகளையும் தங்கள் ஊழியர்களுக்கு வழங்குவதற்கு நிதி உதவி அளிக்க மைய அரசு முன் வரவேண்டும்.

மைய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் இடையே நிலவும் கடன் உறவுகள்பற்றிச் சிபாரிசு செய்யும்படி ஆறுவது நிதியக் குழுமத்தை மைய அரசு கோரியிருக்கிறது. 'நாடோறும் காலையில் டில்லிக்கு மாநில அரசுகள் பறந்தோடுவதைத் தடுப்பதற்கு' என்ன செய்யலாம் என்பதைக் குழுமம் சிந்தித்து வருவதாகக் குழுமத்தின் தலைவர் திரு. பிரம்மானந்த ரெட்டி அவர்கள் 28—9—73 அன்று சென்னையில் கூறினார்கள். மைய அரசிடமிருந்து போதிய நிதிய உதவியைப் பெறுவதற்காக மாநில அமைச்சர்களும், பணி முதல்வர்களும் டெல்லிக்குக் காவடி எடுக்கவேண்டியிருக்கிறது என்றும், இவர்களின் டெல்லிப் பயணம், இந்துக்கள் காசி போன்ற புண்ணிய தலங்களுக்குச் செல்வதைக் காட்டிலும் எண்ணிக்கையில் அதிக மென்றும் டாக்டர் வி. கே. எ. ஆர். வி. ராவ் அவர்கள் குறிப் பிட்டுள்ளார்.

## [1. பிற்சேர்க்கை]

### மிகை எடுப்புக்கள் (Over drafts)

பாமர மக்கள் தாங்கள் வைப்புக்கள் போட்டு வைத்திருக்கும் பேங்குகளிலிருந்து காசோலை (cheque) வாயிலாகப் பிறருக்குத் தாங்கள் கொடுக்க வேண்டியதைக் கொடுக்கலாம். தாங்கள் போட்டு வைத்திருக்கும் வைப்புக்களுங்கு மேலும் பேங்குகளி லிருந்து பணம் எடுப்பதற்கு பேங்குகளுடன் ஒரு உடன்பாடு செய்து கொள்ளலாம். இவ் வுடன்பாடு பெரும்பாலும் எழுத்து மூலமாகவும், சிறுபான்மை வாய்மொழி மூலமாகவும் இருக்கும். இங்ஙனம் தாங்கள் போட்டிருக்கும் வைப்புக்களுக்கும் அதிகமாகப் பணம் எடுப்பதற்கு மிகை எடுப்புக்கள் என்று பெயர். கடனுக்கு வட்டி செலுத்துவதைப் போன்றே இம்மிகை எடுப்புக்களுக்கும் வட்டி செலுத்தவேண்டும். (கடன்களுக்கும், மிகை எடுப்புக்களுக்கும்

பெயரளவில்தான் வேறுபாடு) தனியார்கள் வாணிகப் பேங்கு களுடன் உடன்பாடு செய்து கொள்வதைப் போன்றே, மாநில அரசுகளும் இந்திய ரிசர்வ் பேங்குடன் உடன்பாடு செய்துகொள் கின்றன. இதன்படி ஏற்கனவே தாங்கள் ஒப்புக்கொண்ட வரம்பு களுக்குமேல் மிகை எடுப்புக்களை மாநிலங்கள் பயன்படுத்தினாலும், அல்லது மூன்று திங்களுக்குள் இம் மிகை எடுப்புக்களைத் திருப்பி ரிசர்வ் பேங்குக்கு அளிக்காவிட்டாலும், இவை அங்கீகரிக்கப்படாத மிகை எடுப்புக்கள் (unauthorised over drafts) எனப்படும். இவ் வகை மிகை எடுப்புக்களைப் பயன்படுத்தும் மாநிலங்களுக்கு ரிசர்வ் பேங்க் ஒரு எச்சரிக்கை விடுக்கிறது. மூன்று வாரத்திற்குள் மிகை எடுப்புத் தொகையைக் காட்டவேண்டும் என்றும், இல்லாவிடில் மாநில அரசுகளின் காசோலைகளுக்குப் பணம் தரப்படமாட்டாது என்றும், இவ் வெச்சரிக்கை அறிவிக்கிறது. இம்மிகை எடுப்புக்களை மாநிலங்கள் அடைப்பதற்கு உதவியாகப் பொதுவாக மைய அரசு மாநிலங்களுக்குச் சிறப்புக் (ad hoc) கடன்களை அளிக்கிறது.

புதிதாக வரிகளை விதிப்பதற்கு வழிகள் இன்மையாலோ அல்லது விருப்பமின்மையாலோ, அல்லது ஏறிக்கொண்டு வரும் தங்கள் திட்டச் செலவுகளையும், ஏனைய செலவுகளையும் சமாளிக்க முடியாமையினாலோ, மாநிலங்கள் இவ் வழியை (மிகை எடுப்பு) பின்பற்றுகின்றன. மாநிலங்களுக்கு ரிசர்வ் பேங்க் அளிக்கும் இவ் வகைக் கடன்களுக்கு மைய அரசு உத்தரவாதம் அளிக்கிறது. மிகை எடுப்புக்கள் அளிக்கப்படாவிடில் அபிவிருத்திப் பணிகள் அனைத்தும் நின்று போகும் என்றும் சில மாநிலங்கள் அச்சுறுத்து கின்றன. ஆயினும், அபிவிருத்திப் பணிகளுக்கு ஆகும் செலவு களைச் சரிக்கட்டுவதற்காக இவ் வழிதுறைக் (way and means) கடன் இல்லை என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். வரவுக்கும் செலவுக்கும் இடையில் ஏற்படும் தற்காலிகச் சமநிலையின்மையைச் சரிகட்ட மட்டுமே மிகை எடுப்புக்களைப் பயன்படுத்தவேண்டும். ஆயினும், கடந்த சில ஆண்டுகளாக மாநில அரசுகள் இவ் வழியைப் பெருமளவில் பயன்படுத்துகின்றன. இதனால், இவ் வழி ஒருவகை துண்டு நிதியம் ஆகிறது.

காலஞ்சென்ற பேராசிரியர் டி. ஆர். காட்கில் (Professor D. R. Gadgil) கூறுவது போன்று, முதலாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் தான், மாநிலங்கள், தங்களின் வரவு செலவு திட்டங் களில் விழும் துண்டைச் சரிக்கட்டுவதற்கு, இம் முறையைப் பயன் படுத்தலாம் என்பதை அறிந்து கொண்டன. ஆயினும், 1964—65-ல் தான் இப் பிரச்சினை பெரிதாயிற்று. 1972ஆம்

ஆண்டு மார்ச் திங்கள் 1ஆம் நாள் மாநிலங்கள் எடுத்திருந்த மிகை எடுப்புக்கள் கீழவரும் அட்டவணையில் தரப்பட்டிருக்கிறது.

| | மாநிலம் | கோடி உருபா |
|---|---|---|
| 1. | ஆந்திரப் பிரதேசம் | 86·7 |
| 2. | அஸ்ஸாம் | 9·58 |
| 3. | கேரளம் | 51·14 |
| 4. | தமிழ்நாடு | 76·44 |
| 5. | பீஹார் | 34·49 |
| 6. | மஹாராஷ்டிரம் | 23·51 |
| 7. | மேற்கு வங்காளம் | 22·23 |
| 8. | மைசூர் | 76·32 |
| 9. | ராஜஸ்தானம் | 73·87 |
| 10. | ஹரியானு | 8·03 |
| | மொத்தம் | 461·68 |

இந்திய அரசின் ஆணைக்கேற்ப ஐந்தாவது நிதியக் குழுமம் இப் பிரச்சினையை ஆய்ந்து சில சிபாரிசுகளைச் செய்தது. ஆறு அல்லது ஏழு மாநிலங்கள் மீண்டும் மீண்டும் விடாது மிகை எடுப்புக்களைப் பயன்படுத்தி வருகின்றன என்பதையும் குழுமம் சுட்டிக் காட்டியது. உத்தரப்பிரதேசம், ஒரிஸ்ஸா போன்ற மாநிலங்கள் மிகை எடுப்புக்களைப் பயன்படுத்தவில்லை. ஆனால், மிகவும் முன்னேறிய மாநிலமான மஹாராஷ்டிரம் மிகை எடுப்புக்களைப் பயன்படுத்தி உள்ளது.

### குழுமத்தின் சிபாரிசுகள்

நிதியச் சங்கடங்களில் ஆழ்த்தும் கொள்கைகளை மாநிலங்கள் விடாப்பிடியாகப் பின் பற்றுதிருந்தால் மட்டுமே, மாநிலங்களுக்கு மைய அரசு சிறப்புக் (ad hoc) கடன்களை அளிக்கவேண்டும். புயல். வெள்ளம், வறட்சி, நிலநடுக்கம் போன்ற இயற்கைச் சேதங்கள் ஏற்பட்ட காலத்தில், மாநிலங்கள் குறுங்காலக் கடன் கேட்கலாம். ஆயினும், மாநிலங்களின் ஆண்டைய திட்டத்தைத் திட்டக்குழுமம் திருத்தலாம் அல்லது குறைக்கலாம், அடுத்து வரும் ஆண்டில் திட்டத்திற்கு உதவியாக அளிக்கும் தொகையிலிருந்து இக்கடனைக் கழித்துக் கொள்ளவேண்டும். மாநிலப் பொருளாதாரத்தில் ஏற்பட்ட நெடுங்காலச் சம நிலையின்மையினால் மிகை எடுப்புக்கள் வாங்கப்படவில்லையானுல் ரிசர்வ் பேங்க் மாநிலங்களுக்கு மீண்டும் மிகை எடுப்புக்களை அளிக்கலாம். கடன்

அளிப்பதற்கு, மாநிலக் கடன் பத்திரங்களையும், மைய அரசின் கடன் பத்திரங்களையும் ஒரே மாதிரியாகப் பாவிக்க வேண்டாம் என்றும் ரிசர்வ் பேங்கைக் குழுமம் கேட்டுக் கொண்டது. இவை யாவும் பயனளிக்காவிடில், இறுதி நடவடிக்கையாக அரசியல் சட்டத்தின் 360-வது விதியின்கீழ் காணப்படும் அதிகாரங்களை மைய அரசு பயன்படுத்தலாம் என்று குழுமம் கருத்துத் தெரிவித்தது. மாநிலங்களில் நிதிய நெருக்கடி ஏற்பட்டால், மைய அரசு சில அதிகராங்களைப் பயன் படுத்தலாம். மாநிலங்களின் நிதிய விவகாரங்களை மேலாண்மை செய்வதற்கு, இவ் விதி, மைய அரசுக்கு அதிகாரங்கள் அளித்துள்ளது.

மாநிலங்களுக்கு ரிசர்வ் பேங்க் வழிதுறைக் கடன்களை (ways and means) அளிக்கிறது. இக் கடன்களுக்கு ஒரு உச்ச வரம்பு உண்டு. இவ் வரம்பு 1972ஆம் ஆண்டு மே திங்களிலிருந்து நான்கு மடங்கு அதிகரிக்கப்பட்டிருக்கிலது. ஆனால். இக் கடன்களை ஜூன் திங்கள் முடிவதற்குள் கட்டி விடவேண்டும். இக் கடன்களைத் தீர்ப்பதற்கு மைய அரசு மாநிலங்களுக்கு உதவியளிக்கிறது. மாநிலங்களுக்கு வரி வருவாயில் சேரவேண்டிய பங்கையும், திட்டத்தை நிறைவேற்றுவதற்கு மாநிலங்களுக்கு மைய அரசு அளிக்கும் உதவித் தொகையையும், மைய அரசு மாநிலங்களுக்கு முன் பணமாக அளிக்கிறது. இத் தொகையைக் கொண்டு மாநிலங்கள் ரிசர்வ் பேங்கினிடம் தாங்கள் வாங்கியிருந்த வழிதுறைக் கடன்களை அடைக்கின்றன. ஆயினும், இம் முறையை ஒரு நிரந்தர ஏற்பாடாகக் கொள்ளமுடியாது. ஏனெனில், இதன் விளைவாக மாநிலங்களின் கடன் பளு குறைய வில்லை. ரிசர்வ் பேங்குக்குக் கடன்பட்டிருப்பதற்குப் பதிலாக மாநிலங்கள் மைய அரசுக்குக் கடன்பட்டிருக்கின்றன. அவ்வளவு தான்.

21—4—72-ல் வருவாய், செலவு அமைச்சர் திரு. கே. ஆர். கணேஷ் டில்லி மக்கள் சமையில் கூறியதன்படி, மைய அரசு ரிசர்வ் பேங்குக்குப் புதிய ஆணைகள் பிறப்பித்திருக்கின்றது. இவற்றின்படி, எந்த மாநிலமாவது தொடர்ந்து ஏழு நாட்களுக்கு மிகை எடுப்புக்களைப் பயன்படுத்துமானால், ரிசர்வ் பேங்க் அந்த மாநிலத்திற்குப் பணம் அளிப்பதை நிறுத்திவிடும். 1—4—72-க்குப் பிறகு எந்த மாநிலமும் அங்கீகரிக்கப்பாடாத மிகை எடுப்புக்களை பயன்படுத்தவில்லை. அனைத்து மாநிலங்களும் 1972ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 31 ஆம் நாளில் ரிசர்வ் பேங்குக்குச் செலுத்த வேண்டிய மிகை எடுப்புக்கள் எவ்வளவோ, அவற்றில் 15%-ஐக் கட்டி விடுவதாக ஒப்புக்கொண்டன.

1972ஆம் ஆண்டு ஏப்ரல் 30ஆம் நாளன்று மாநிலங்கள் ரிசர்வ் பேங்கினிடம் வாங்கியிருந்த மிகை எடுப்புக்கள் உரூபா 642 கோடியாகும். இக் கடனை அடைப்பதற்கு மைய அரசு மாநிலங்களுக்கு வழிதுறைக் கடன்களை அளித்ததோடு, 1972—73-ல் மாநிலங்களுக்குச் சேரவேண்டிய தொகைகளையும் முன் பணமாக அளித்தது. மைய அரசு மாநிலங்களுக்கு உரூபா 511 கோடியை வழிதுறைக் கடன்களாக அளித்தது. இதில் உரூபா 90 கோடியை மாநிலங்கள் 1972—73-ல் கட்டிவிட்டன. எஞ்சிய கடன் தொகையான உரூபா 421 கோடியும் இடைக் காலக் கடன்களாகக் (medium-term loans) கொள்ளப்பட்டது. இத் தொகையில் ஒரு பகுதியை மாநிலங்கள் 1973—74-ல் கட்டவேண்டும்; பாக்கியை ஐந்தாவது திட்ட காலத்தில் (1974—75, 1979—80) கட்ட வேண்டும். இதன் நிகர விளைவு என்னவென்றால், மைய அரசின் கடன்கள் பெயரளவிலேனும் உரூபா 421 கோடி அதிகரித்தது. அதாவது ரிசர்வ் பேங்குக்கு மாநிலங்கள் கட்டவேண்டிய உரூபா 421 கோடிக்கு இந்திய அரசு பொறுப்பேற்றது. இத் தொகையை மாநிலங்கள் மைய அரசுக்குச் செலுத்தவேண்டும். 1—5—1972-க்குப் பிறகு மாநிலங்கள் ரிசர்வ் பேங்கினிடம் மிகை எடுப்புக்களைப் பெற்றதாகத் தெரியவில்லை.

## [2. பிற்சேர்க்கை—P. L. 480]

P. L. 480 திட்டத்தின்கீழ் இந்தியாவுக்கு வேளாண்மைப் பண்டங்களை அமெரிக்க ஐக்கிய நாடுகள் அனுப்பிவைத்தது. இந்தியாவில் உணவுப் பஞ்சத்தைப் போக்கவும், பண வீக்கத்தைத் தடுத்து நிறுத்தவும் இவ்வுதவி பெரிதும் காரணமாக இருந்தது. PL.—480 சட்டம் முதன் முதலில் 1954-ல் இயற்றப்பட்டது. அடுத்தடுத்து இயற்றப்பட்ட சட்டங்களின்மூலம் அமெரிக்கக் காங்கிரஸ் (அமெரிக்காவில் நாடாளுமன்றம் காங்கிரஸ் எனப்படும்) இச் சட்டத்தை 1973ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் வரை நீடித்தது. இச் சட்டம் இரு அதிகாரங்கள் கொண்டது. முதல் அதிகாரத்தில் (Title I) கண்டுள்ளபடி அமெரிக்கா வேளாண்மைப் பண்டங்களை வளர்ந்து வரும் நாடுகளுக்குக் குறைந்த விலையில் விற்கிறது. முதன் முதல் இந்தியா P. L.—480 உடன்பாட்டை 1956ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 29ஆம் நாள் செய்து கொண்டது. அந் நாளிலிருந்து 1971ஆம் ஆண்டு ஏப்ரல் 1ஆம்

P.L. என்றால் Public Law. இதை சமாதானத் திட்டப்பணி (Food for Peree) என்றும் கூறுவர். Faet Sheet: 2·5. Economic assistance to India (June 1951—April 1971), No. 23. 2·5 Information Service.

நாள் வரை, மேலும் ஒன்பது உடன்பாடுகளையும், 35 துணை உடன் பாடுகளையும் (supplemental agreements) இந்தியா அமெரிக்காவுடன் செய்து கொண்டது.

இவ்வுடன்பாடுகளின்படி 52·2 மில்லியன் டன் கோதுமை யையும், 5·5 மில்லியன் டன் மக்காச்சோளத்தையும், சொர்க்கம் (sorghum) என்னும் தானியத்தையும், 1·8 மில்லியன் டன் அரிசி யையும், 4 மில்லியன் பேல் கட்டு (bale) பஞ்சையும், 500,000 டன் தாவர எண்ணெயையும், 170,000 டன் நிணத்தையும் (இது விலங்குகளின் கொழுப்பிலிருந்து எடுக்கப்படுவது. ஆங்கிலத்தில் ballow எனப்படும்). 7,400 டன் புகையிலையையும், 24,900 டன் கொழுப்பகற்றப்பட்ட பாலையும் (non–fat dry milk), 13,000 டன் திரவப்பகுதி நீக்கப்பட்ட பாலையும் (evaporated milk), 230 டன் பால்மாவையும் (milk powder), 400 டன் தகர டப்பாக்களில் அடைக்கப்பட்ட பழத்தையும், 80 டன் பாலாடைகளையும் பெறு வதற்கு இந்தியாவுக்கு உரிமை உண்டு. இப் பண்டங்களில் பெரும் பகுதியையும் இந்தியா பெற்றுவிட்டது. இப் பண்டங்களின் மொத்த மதிப்பு 4,787 மில்லியன் டாலராகும். உருபா 2,557 கோடி. (இதில் கப்பல் போக்குவரத்துச் செலவில் ஒரு பகுதியும் அடங்கும்).

இந்தியா இப் பண்டங்களுக்கான தொகையை உருபாவில் செலுத்தலாம். இப் பண்டங்களை இந்தியாவில் விற்றதனுல் கிடைத்த தொகையில் 80·6% அமெரிக்கா, இந்திய அரசுக்கு மானியங்களாகவும், கடன்களாகவும் அளிக்கவேண்டும் 19·3% மானியங்கள், 61·3% கடன்கள்) இத் தொகைகள் இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்குப் பயன்படுத்தப்படும். P. L. உதவித் தொகையில் 6·4% தனியார் முனைவுகளுக்குக் கடனுக அளிப்பதற்கு ஒதுக்கப்பட்டுள்ளது. 13%-ஐ அமெரிக்க அரசு இந்தியாவின் தன் செலவுக்கென ஒதுக்கிக் கொண்டுள்ளது. ஆயினும், இத் தொகையில் பெரும்பகுதியும் இந்தியாவில் ஆக்கப் பூர்வமான பல பணிகளை ஓம்புவதற்குச் செலவழிக்கப்பட்டுள்ளது. இந்திய அரசு மேற்கொண்ட பல வளர்ச்சிப் பணிகளுக்கும் P.L.—480 மானியங் களும், கடன்களும் துணை செய்தன என்பதை மறுக்கமுடியாது.

4,787 மில்லியன் டாலரில் 80·6% 4,354·8 மில்லியன் டாலராகும். எஞ்சிய பகுதி 432·2 மில்லியன் டாலராகும். உடன் பாடுகளின்படி இத் தொகையை இந்தியா உருபாவாக அளிக்கலாம். அமெரிக்க அரசு விரும்பினுல் இத் தொகையை டாலராக மாற்றிக்

கொள்ளலாம். இத் தொகையை 40 ஆண்டுகளில் திருப்பி அளிக்கலாம். முதல் பத்து ஆண்டுகளில் அசலைத் திருப்பிக் கொடுக்க வேண்டியதில்லை. முதல் பத்து ஆண்டுகள் கருணைக் காலம் (grace period) ஆகும். இந்தப் பத்து ஆண்டுகளுக்கு ஆண்டொன்றுக்கு 2% வட்டி செலுத்தவேண்டும். எஞ்சிய முப்பது ஆண்டுகளுக்கு ஆண்டொன்றுக்கு 3% வட்டி செலுத்தவேண்டும்.

P. L.—480 உடன்பாடுகளின்படி, இந்தியாவில் விற்று முதலான வேளாண்மை பண்டங்களுக்கு, இந்திய அரசு உரூபாவாகச் செலுத்துகிறது. அமெரிக்க அரசு இந்திய ரிசர்வ் பேங்கில் ஒரு வைப்புக் கணக்கு வைத்திருக்கிறது. அக் கணக்கில் இந்திய அரசு செலுத்தும் உரூபா சேர்கிறது. இக் கணக்கில் இப்பொழுது உரூபா 2,557 கோடியிருக்கும் என மதிப்பிடப்பட்டிருக்கிறது. இவ் வைப்பில், பெரும்பகுதியும் 1966ஆம் ஆண்டில் ஜூன் திங்களில் உரூபாவின் மதிப்பைக் குறைப்பதற்கு முன்பு போடப்பட்டது.[1] ஆதலால், 4,787 மில்லியன் டாலருக்கு இப்பொழுது நிலவும் பரிவர்த்தனைப்படி பார்த்தால் எவ்வளவு உரூபா கிடைக்குமோ அதைவிட மிகவும் குறைவு என்பது தெளிவு.

## இரண்டாம் அதிகாரம்

பஞ்சத்தைச் சமாளிக்கவும், அவசர நிவாரணத் தேவைகளுக்கும், ஊட்டக் குறைவை, சிறப்பாகக் குழந்தைகளின் ஊட்டக் குறைவைப் போக்கவும், வேளாண்மைப் பண்டங்களை நன்கொடை அளிப்பதற்கு இவ் வதிகாரம் வகை செய்கிறது. கேர் (Care—முழுப் பெயர் Co-operative for American Relief Everywhere), கத்தோலிக்க நிவாரணப் பணிகள் (Catholic Relief Services), உலக கிறிஸ்தவப் பணி (Church Relief Service), உலக லூத்தரன் நிவாரணம் (Lutheran World Relief) ஆகிய முகவர்கள் (Agencies) மூலம் இப் பண்டங்கள் இந்தியாவில் வழங்கப்படுகின்றன. 1955ஆம் ஆண்டிலிருந்து 1973ஆம் ஆண்டு ஜூன் திங்கள் முடிய நன்கொடையாக வழங்கப்பட்ட பண்டங்களின் மதிப்பு உரூபா 618·3 கோடியாகும். 1970ஆம் ஆண்டு ஜூன் திங்களிலிருந்து 1971ஆம் ஆண்டு ஜூன் திங்கள் வரை 420,000 டன் உணவுத் தானியங்களை நன்கொடையாக வழங்க உடன்பாடு ஆயிற்று. இவற்றின் மதிப்பு உரூபா 52·88 கோடியாகும். (இதில் கப்பல்

[1] 1966 ஜூன் திங்கள் 5ஆம் நாள் உரூபாவின் மதிப்பு குறைக்கப்பட்டது. ஜூன் 5ஆம் நாளுக்கு முன்பு உரூபா 4·76-க்கு ஒரு டாலர் சமம் ஜூன் 5ஆம் நாளிலிருந்து உரூபா 7·50-க்கு ஒரு டாலர் சமம்.

கட்டணமும் அடங்கும்). இதுதான் உலகிலேயே மிகப் பெரிய அளவில் வழங்கப்பட்ட நன்கொடையாகும். 1973ஆம் ஆண்டு ஜூன் திங்களிலிருந்து 1974ஆம் ஆண்டு ஜூன் திங்கள் வரை இத் திட்டத்தின்கீழ் 52 மில்லியன் டாலர் (உருபா 39 கோடி) மதிப்புள்ள 306,000 டன் உணவுப் பண்டங்கள் இந்தியாவுக்குக் கிடைக்கும். இந் நன்கொடையில் கோதுமை, பால், புரதப் பண்டங்கள் (milk protein funds), தாவர எண்ணெய்கள் ஆகியவை அடங்கும். இத் திட்டத்தின் (Title II) கீழ் அளிக்கப் படும் நன்கொடைகள் தொடர்ந்து வழங்கப்படும்.

1966ஆம் ஆண்டில் அமெரிக்கக் காங்கிரஸ் P.L.—480 சட்டத்தின் முதல் அதிகாரத்தைத் (Title I) திருத்தியது. இத் திருத்தத்தின்படி 1966ஆம் ஆண்டுக்குப் பின் அமெரிக்கா அளிக்கும் வேளாண்மைப் பண்டங்களுக்கான விலையை உருபா வாகச் செலுத்தாமல், இந்தியா டாலரிலேயே செலுத்தவேண்டும். உருபாவாகச் செலுத்துவது சிறிது சிறிதாக வளர்வீதத்தில் டாலராகச் செலுத்தும்படி மாற்றப்படும். 1971ஆம் ஆண்டுக்குப் பின்னர் அளிக்கும் P.L.—480 உதவியை டாலரில்தான் செலுத்த வேண்டும் என்று அமெரிக்க அரசு முடிவு செய்திருக்கிறது. 1971ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் நான்காம் நாள் வங்காள விடுதலைப்போர் தொடங்கியது. இதனால் இந்தியா பாகிஸ் தானுடன் 12 நாட்கள் போர் புரியும்படி நேரிட்டது, டிசம்பர் 16ஆம் நாளன்று பாகிஸ்தான் படைகள் நிபந்தனையின்றி இந்திய தலைமைத் தளபதி பீல்டு மார்ஷல் மானெக்ஷாவிடம் சரண் அடைந்தது. இந்தியப் பாகிஸ்தான் போரும் முடிந்தது. 1971ஆம் ஆண்டு, அமெரிக்க அரசு இப் போரைக் காரணமாகக் காட்டி இந்தியாவுக்கு அளித்து வந்த கடன் உதவிமையும், P.L.—480 முதல் அதிகாரத்தின்கீழ் அளித்து வந்த உதவியையும் நிறுத்தியது. இந்த ஆண்டு (1973) இறுதிக்குள்ளாக மீண்டும் அமெரிக்கா இந்தியாவுக்குக் கடன் அளிக்கத் தொடங்கும் என்று நம்ப இடமிருக்கிறது.

### P.L.—480 நிதிகள் பிரச்சினை

இந்திய அரசு 1968-ல் குஸ்ரு குழுவை நியமித்தது. இக் குழு இந் நிதிகளை இந்திய அரசு முடக்கவேண்டும் என்றும், அங்ஙனம் முடக்காவிட்டால் பணவீக்கம் ஏற்படும் என்றும் கூறியது. மார்ஷல் திட்டத்தின்கீழ் மேற்கு ஐரோப்பாவுக்கு அமெரிக்க அரசு செய்த உதவியைத் தள்ளுபடி செய்ததுபோல, இத் தொகை முழுவதையும் அமெரிக்கா தள்ளுபடி செய்யவேண்டும் என்று சிலர் கருதுகின்றனர்.

திறனாய்வு

P.L.—480 உதவி இந்தியாவில் துண்டு நிதியத்திற்கு வழி கோலுகிறது என்பது பேராசிரியர் பி. ஆர். ஷெனாயின் வாதமாகும்.[1] இது அத்துணைச் சரியல்ல. அமெரிக்க அரசு தன் கணக்கில் ரிசர்வ் பேங்கில் வைப்பாக இருக்கும் உருபாவை இந்திய அரசின் கடன் பத்திரங்களை வாங்குவதற்குப் பயன்படுத்துகிறது. இதனால் இந்திய அரசு, ரிசர்வ் பேங்கிடம் பெற்றுள்ள நிகரக் கடன் அதிகரிப்பதால், இது துண்டு நிதியமாகும் என்பது ஷெனாயின் கூற்று. P.L.—480 திட்டத்தின்கீழ் உணவுத் தானியங்களை இறக்குமதி செய்திரா விட்டால், துண்டு நிதியம் ஏற்பட்டிருக்காது என்று கூறுவது பொருந்தாததாகும். ஏனெனில், துண்டு நிதியம் அரசின் முடிவைப் பொறுத்ததாகும். இம் முடிவு அரசின் செலவைப் பொறுத்திருக்கிறது. P.L.—480 திட்டத்தின்கீழ் இறக்குமதி செய்திராவிட்டாலும், வேளாண்மைப் பண்டங்களை விற்றுமுதல் செய்து அமெரிக்க அரசின் பெயரில் இந்திய ரிசர்வ் பேங்கில் வைத்திருக்காவிட்டாலும், இந்திய அரசு தனது கடன் பத்திரங்களுக்கு ஈடாகத் தனக்கு வேண்டிய தொகையை ரிசர்வ் பேங்கிலிருந்து பெற்றிருக்க முடியும். மேலும் விற்று முதலால் கிடைத்த தொகை அனைத்தும் ரிசர்வ் பேங்க் இந்திய அரசுக்கு அளிக்கும் நிகரக் கடன் தொகையை அதிகரிப்பதுமில்லை. ஏனெனில், இத் தொகையில் 19·4 சதவீதத்தை (6·4% தனியார் முனைவுகளுக்குக் கடனாக அளிக்கப்படுகிறது; 13% அமெரிக்க அரசு, அதாவது, இந்தியாவில் உள்ள அமெரிக்கத் தூதரகம் செலவழிக்கலாம்) அமெரிக்கத் தூதரகம் எடுத்துக் கொள்கிறது. 19·3 சதவீதம் மானியங்களாக அளிக்கப்படுகின்றன என்றும் முன்னரே பார்த்தோம். ஆகவே, எஞ்சிய 61·3% ரிசர்வ் பேங்கில் வைப்புக்களாகப் போடப்படுகின்றன என்று திரு சீதேஷ் பிரகாஷ்[2] கூறுகிறார். இக் கூற்று சரியேயானாலும், ஒரு உண்மையை பிரகாஷ் மறந்து விடுகிறார். உருபா 2,557 கோடி இப்பொழுது இந்திய ரிசர்வ் பேங்கில் அமெரிக்க அரசின் கணக்கில் உள்ளது. இது பெரிய தொகையாகும். இத் தொகையை ஒரே ஆண்டிலேயோ அல்லது சில ஆண்டுகளிலேயோ செலவிட்டால் விலைவாசிகள் இப்போதுள்ளதைக் காட்டிலும் இன்னும் அதிகம் ஏறும் என்பதில் ஐயமில்லை. புதிதாக இனிமேல் அமெரிக்கா P. L. — 480 திட்டத்தின்கீழ் அளிக்கும் உதவிகளுக்கும் டாலரிலேயே திருப்பித்தரவேண்டும், இங்ஙனமிருந்தாலும் இந்தக்

[1] Prof. B. R. Shenoy, Eastern Economist Silver Jubilee Number, July 26, 1968, p. 151—155.

[2] Sitash Prakash, Easterm Economist, February 7, 1969, p. 217—218.

தொகை (உருபா 2,557 கோடி) இன்னும் அதிகமாகும். ஏனெனில், ஆண்டுதோறும் இத் தொகைக்கு 3 சதவீதம் வட்டி செலுத்தவேண்டும். ஆயினும், அமெரிக்க அரசுக்கு இந் நிதிகளைச் செலவிட உரிமையுள்ளது என்பதையும் நாம் மறுக்கவில்லை. இவ் வுதவியின்றேல் இந்திய அரசு உருபா 2,243 கோடி மதிப்புள்ள பிற நாட்டுச் செலாவணிகளைச் செலவழிக்கவேண்டி இருந்திருக்கும். எய்ப்பில் வைப்பாக அமெரிக்க அரசு, காலத்தில் செய்த உதவியை நாம் பாராட்டாவிட்டால் நன்றி கொன்றவர்கள் ஆவோம். ஆனால், அதேவேளையில் இத் தொகை இந்தியாவுக்குப் பெரும் பளுவாக இருக்கிறது என்பதையும் நாம் மறுப்பதற்கில்லை.

இந்தியாவுக்கும் அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கும் P·L.—480 நிதிகளைப் பற்றிய ஒரு உடன்பாடு ஏற்பட்டது (13—12—73). இதில், இந்தியாவின் சார்பாக இந்திய நிதி அமைச்சரின் பொருளாதார விவகாரங்கள் துறையின் செயலாளரான திரு. எம். ஜி. கவுலும் (M. G. Kaul, Secretary, Department of Economic Affairs, Union Ministry of Finance), அமெரிக்க அரசின் சார்பாக, இந்தியாவில் அமெரிக்கத் தூதராக இருக்கும் திரு. டேனியல் பேட்ரிக் மோனிஹென்னும் (Danial Patrick Moynihan) கையெழுத்திட்டனர். இவ்வுடன்பாட்டின்படி அமெரிக்கா உருபா 1,664 கோடியை இந்திய அரசுக்கு மானியமாக அளிக்கும். இதிலிருந்து இந்தியாவின் ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு இத் தொகையைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று நினைப்பது தவறு. ஏனெனில், இத் தொகையின் பெரும்பகுதியும் இந்தியாவில் அமெரிக்க வேளாண்மைப் பண்டங்களை விற்றதால் கிடைத்ததாகும். இப் பண்டங்களை இந்திய மக்கள் நுகர்ந்தாயிற்று. அவற்றுக்கான விலையையும் இந்திய அரசு பெற்றுக்கொண்டு அத் தொகையைச் செலவழித்தும் விட்டது. ஆகவே, இத் தொகை புழக்கத்திற்கு வந்தால் மேலும் பணவீக்கம் ஏற்படும் என்று அஞ்சத் தேவையில்லை இதிலிருந்து இம் மானியங்கள் 'பெயரளவில்' (Motionally) தான் கிடைக்கும் என்பதும், இதில் உருபா 1,000 கோடி வேளாண்மைக்கும், எஞ்சிய உருபா 664 கோடி வீட்டு வசதி, விசை உற்பத்தி, கிராமங்களுக்கு மின்சார விஸ்தரிப்பு, குடும்ப நலத்திட்டம், சுகாதாரம், தொழில் நுட்பக் கல்வி ஆகிய வற்றுக்கும் முறையே செலவழித்ததாகவும் கொள்ளப்படும் என்பதும் பெறப்படும். இந்தியாவில் தன்னுடைய செலவுக்காக அமெரிக்க அரசு உருபா 833 கோடியை வைத்துக்கொள்ளும். இத் தொகையையும் அமெரிக்க அரசு தன் விருப்பம்போல் செலவழிக்காது. இந்திய அரசைக் கலந்து கொண்டுதான்

செலவழிக்கும். எந்தெந்த நோக்கங்களுக்கு எவ்வளவு எவ்வளவு செலவு செய்யலாம் என்பதைக் குறித்தும் இரு அரசுகளும் கலந்து முடிவு செய்யும். இத் தொகைக்கு வட்டி கிடையாது என்பது குறிப்பிடத்தக்கது. அமெரிக்கத் தூதரகச் செலவுகளுக்கும், நேபாளத்திற்கு உதவியளிப்பதற்கும், அமெரிக்க வேளாண்மைப் பண்டங்களுக்கு இந்தியாவில் இருக்கும் அங்காடியை அபிவிருத்தி செய்வதற்கும், இந்தியாவிலிருந்து அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்வதற்கான பண்டங்களையும், பணிகளையும் வாங்குவதற்கும் இத் தொகை பயன்படுத்தப்படும். இந்திய நிதியமைச்சராயி ருந்த திரு. சவான் அவர்கள் கூறியது போன்று, 'இவ் வுடன்பாடு ஏற்பட்டிராவிட்டால் என்ன சூழ்நிலை நிரந்தரமாக ஏற் பட்டிருக்குமோ (இந்தியா அமெரிக்க அரசின் நிரந்தரக் கடனாளியாக இருந்திருக்கும்), அச் சூழ்நிலை ஒரு குறிப்பிட்ட காலவரையறைக்குள் மறைந்தொழியும்.' அமெரிக்க அரசின் உதார குணத்தை நாம் பாராட்டுவதுடன், எதிர்காலத்திலும் தொடர்ந்து இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் பொருளாதாரத் துறையில் நல்லுறவுகள் நீடிக்கும் என்று நம்புகிறோம்.

## [3. பிற்சேர்க்கை]

*1974*ஆம் ஆண்டு பிப்பரவரி *18*ஆம் நாளன்று புது டில்லியில் உரூபா உடன்பாடு (rupee agreement) ஏற்பட்டது. இதில் அமெரிக்கத் தூதர் டேனியல் பி. மோனிஹென்னும், இந்தியப் பொருளாதார விவகாரச் செயலாளர் எம். ஜி. கவுலும் கையெழுத் திட்டனர்.

## [4. பிற்சேர்க்கை]

### பிற நாடுகளுக்கு இந்தியா அளிக்கும் உதவி

இந்தியா பிற நாடுகளிலிருந்து உதவி பெறும் நிலையில் இன்னமும் இருந்தாலும். இந்தியா தனது அண்டை நாடுகளான நேபாளம், பூட்டான், வங்காள தேசம் ஆகியவற்றுக்கு உதவி அளித்து வருகிறது என்பது பலருக்கும் தெரியாது. கடந்த சில ஆண்டுகளாக, மொத்த உலக வணிகத்தில் வளர்ந்துவரும் நாடுகளின் பங்கு குறைந்துகொண்டு வருவது வருந்துதற்கு உரியது. *1955*-ல் மொத்த உலக வணிகத்தில் வளர்ந்துவரும் நாடுகளின் பங்கு *26%* ஆக இருந்தது. *1960*-ல் இது *21%* ஆகவும், *1970*-ல் *17%* ஆகவும் குறைந்துவிட்டது. உலக மக்களில் ஏறக் குறைய மூன்றில் இரு பங்கினர் கொண்ட நாடுகளின் ஏற்றுமதி,

உலக ஏற்றுமதியில் எட்டில் ஒரு பங்காக 1970-ல் குறைந்து விட்டது. உலக வணிகத்தில் இந்தியாவின் பங்கும் குறைந்ததில் வியப்பு ஒன்றுமில்லை. 1948-ல் உலக வணிகத்தில் இந்தியாவின் பங்கு 2·6% ஆக இருந்தது. 1972-ல் இது 0·6% ஆகக் குறைந்தது. (Source : Statistical Year Book—1971. Figures for the world exclude trade of China (except Taiwan), Mongolia, Democratic People's Republic of Korea and the Democratic Republic of Viet-Nam).

1960ஆம் ஆண்டுக்குப் பின்னர்தான் இந்தியா பிற நாடுகளுக்கு உதவியளிக்கத் தொடங்கியது. 1972ஆம் ஆண்டு மார்ச் திங்கள் வரையில் இந்தியா அயல் நாடுகளுக்கு அளித்த உதவி உருபா 122 கோடியாகும்.[1] இதில் நேபாளத்திற்கு உருபா 69 கோடியும், பூட்டானுக்கு உருபா 30 கோடியும், சிக்கிமுக்கு உருபா 12 கோடியும் வழங்கப்பட்டது. 1970-லும் 1971-லும் கொழும்புத் திட்டத்தின்கீழ் உறுப்பினர் நாடுகளுக்கு முறையே உருபா 38 இலட்சம், உருபா 44 இலட்சம் பெறுமானமுள்ள தொழில் நுட்ப உதவியை வழங்கியது. 1971-ல் பிற நாட்டவருக்குப் பயிற்சி அளிப்பதற்கு உருபா 37 இலட்சமும், இந்திய வல்லுநர்களின் பணி, மூலப் பண்டங்கள், எந்திரங்கள் இவற்றுக்கு ஏறக்குறைய உருபா 7 இலட்சமும் வழங்கப்பட்டது. கொழும்புத் திட்டம் தொடங்கியதிலிருந்து இதுவரை இந்த இனங்களுக்குச் செலவழிக்கப்பட்ட தொகை ஏறக்குறைய உருபா 4·78 கோடியாகும். இதில் உருபா 3·8 கோடி பயிற்சி அளிப்பதற்கும், உருபா 62 இலட்சம் வல்லுநர்களின் பணிகளுக்கும், உருபா 36 இலட்சம் மூலப் பண்டங்களுக்கும், எந்திரங்களுக்கும் செலவிடப்பட்டது.

நேபாளத்தில் சாலைகளையும், விமானத்தளங்களையும் அமைப்பதற்கு உருபா 31 கோடியும், நீர்ப்பாசனம், மின்சார உற்பத்தி போன்ற பணிகளுக்கு உருபா 26 கோடியும் வழங்கப்பட்டது. பூட்டானின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கான (1966—1971) செலவு முழுவதையும் இந்தியாவே ஏற்றுக் கொண்டது. இந்தியத் தொழில் நுட்ப பொருளாதாரக் கூட்டுறவுத் திட்டத்தின் (Indian Technical and Economic Co-operation Programme) கீழ், கொழும்புத் திட்ட நாடுகளுக்கு இந்தியா பொருளாதார உதவியையும், தொழில் நுட்ப உதவியையும் வழங்கி வருகிறது. 1970—71-லும், 1971—1972-லும், இந்தியா அளித்த உதவியின் மதிப்பு முறையே உருபா 50 இலட்சமும்,

[1] மூலம்: Yojana, 15—4—73, p 263-264. India as Aid Criver: What must be done? S, L. Mandasvatt.

உரூபா 95·2 இலட்சமும் ஆகும். இதில், பெரும்பகுதி (உரூபா 47·6 இலட்சம்) ஆப்கானிஸ்தானத்திற்கு வழங்கப்பட்டது. பர்மா, கம்போடியா, இலங்கை, இந்தோனேஷியா. ஈரான், மலேஷியா, மாநக்கவாரம் (Maldives), பிலிப்பைன்ஸ் தீவுகள் ஆகிய நாடுகளுக்கும் சிறு அளவில் இவ் வுதவி வழங்கப்பட்டது.

1970ஆம் ஆண்டு முடியத் தொழில் நுட்ப உதவித் திட்டத்தின்கீழ் 4,674 பேருக்குத் தொழில் நுட்ப பயிற்சி அளிக்கப் பட்டிருக்கிறது. இவர்களில் பாதிப்பேர் நேபாளத்தைச் சேர்ந்த வர்கள். இத் திட்டத்தின்கீழ் உதவிபெற்ற பிற நாடுகள் இலங்கை, மலேஷியா, தாய்லந்து, பிலிப்பைன் தீவுகள், ஆப்கானிஸ்தானம், இந்தோனேஷியா, பர்மா ஆகும். நீர்ப்பாசனம், பொறியியல், இருப்புப்பாதைகள், கல்வி, பால் பண்ணை ஆகிய துறைகளைச் சேர்ந்த ஏறக்குறைய 300 வல்லுநர்களை இந்தியா இந் நாடுகளுக்கு அனுப்பியிருக்கிறது. இந்தியா அளித்துள்ள தொழில் நுட்ப உதவியின் மதிப்பு உரூபா 11 கோடியாகும்.

ஆசியா, ஆப்பிரிக்காக் கண்டங்களில் உள்ள பல நாடு களுக்கும் இந்தியா மூலதனத்தை ஏற்றுமதி செய்திருக்கிறது. இதுவரை, இவ் வகையான திட்டப் பணிகள் ஏறக்குறைய 90 மேற்கொள்ளப்பட்டன. இவை யாவும் கூட்டு முயற்சி (joint collaboration) ஆகும். இவற்றில் போடப்பட்ட மூலதனம் உரூபா 18 கோடியை நெருங்கும்.

இந் நாடுகளில் நிலவும் சூழ்நிலைகளும் இந்தியச் சூழ்நிலையைப் பெரிதும் ஒத்திருப்பதால், நம் தொழில் நுட்பத்தில் யாதொரு மாறுதலும் செய்யாமலே அந் நாடுகளில் பெயர்த்து வைக்க முடியும். இத் துறையில் நாம் மேற்கத்திய நாடுகளுடன் போட்டி போட முடியும். ஏனெனில், மேற்கத்திய நாடுகள் தொழில்நுட்ப உதவிக்கு ஆகும் செலவைக் காட்டிலும், இந்தியா அளிக்கும் தொழில்நுட்ப உதவிக்கு ஆகும் செலவு குறைவு. வளர்ந்துவரும் நாடுகளில் நிலவும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப, மேற்கத்திய நாடுகள் தங்கள் தொழில் நுட்ப முறையை மாற்றி அமைக்கவேண்டும். இந்தியாவுக்கு அவ்விதக் கட்டாயம் இல்லை.

பிற நாடுகளுக்கு அதிக நிதிய உதவி அளிக்கும் நிலையில் இந்தியா இல்லை. ஆனால், பிற நாடுகளுக்கு இந்தியா ஏராளமான தொழில் நுட்ப வல்லுநர்களை அனுப்பி உதவ முடியும். இதனால், இந்தியாவுக்கும் அந் நாடுகளுக்கும் உள்ள நட்புறவு வலுப்படுவ துடன், வாணிபமும் அதிகரிக்கும். எடுத்துக்காட்டாக, அணு

ஆராய்ச்சியில் இந்தியா முன்னேறியுள்ளது. ஒன்றிலிருந்து 50 மெகாவாட் (MW) கொள்திறமுள்ள அணுசக்தி ஆலைகளை இந்தியாவால் நிறுவமுடியும். புளுடோனியமும், யுரேனியமும் இவற்றுக்கு அடித்தளமாக இருக்கும். விரைவில் தோரியத்தைக் கொண்டு அணுசக்தியை உண்டாக்கும் ஆற்றலை இந்தியா பெறும். இவ்வகை அணுசக்தி உலைகளுக்குத் தாய்லந்து, டுனீஷியா, மலேஷியா, பிரேஸில் ஆகிய நாடுகளில் கிராக்கி இருக்கிறது. இருப்புப்பாதைகளை அமைப்பதிலும் நாம் முன்னேறியுள்ளோம். தண்டவாளங்களை அமைப்பதிலிருந்து எல்லாப் பணிகளையும் செய்யக்கூடிய நிலையில் இந்தியா உள்ளது. இந்தியப் பண்டங்களுக்கும் நல்ல விளம்பரம் கிடைக்கும். ஆகவே, இத் துறையில் நாம் இன்னும் அதிகக் கவனம் செலுத்த வேண்டும்.

குறிப்பு: *1950ஆம்* ஆண்டில் கொழும்பில் காமன்வெல்த் நாடுகளின் வெளியுறவு அமைச்சர்களின் மாநாடு ஒன்று நிகழ்ந்தது. இம் மாநாட்டின் விளைவாகத் தெற்கு ஆசியா, தென் கிழக்கு ஆசியா இவற்றின் பொருளாதார முன்னேற்றத்திற்கான கொழும்புத் திட்டம் உருவாயிற்று. கலந்தாலோசனைக் குழு (consultative committee) தான் கொழும்புத் திட்டத்தில் முக்கியமான உறுப்பாகும். இக் குழுவில் கீழ்க்கண்ட நாடுகளின் பிரதிநிதிகள் உறுப்பினர்களாக உள்ளார்கள். இந் நாடுகள் வருமாறு: ஆப்கானிஸ்தானம், இந்தியா, பாகிஸ்தான், இலங்கை, பூட்டான், மலேஷியா, சிங்கப்பூர், கொரியா, மாநக்கவாரம், பர்மா, கம்போடியா, நேபாளம், இந்தோனேஷியா, ஈரான், லாவோஸ், வியட்நாம், தாய்லந்து, பிலிப்பைன்ஸ் தீவுகள், ஆஸ்திரேலியா, கானடா, நியூஸீலந்து, ஜப்பான், பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள். கொழும்புத் திட்டத்தின்கீழ் இருவகை உதவி அளிக்கப்படுகிறது. (1) மூலதன உதவி, (2) தொழில் நுட்ப உதவி.

## [5. பிற்சேர்க்கை]

### ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில் இந்தியாவுக்குப் பிற நாட்டு உதவி வேண்டுமா?

*1978—79*ஆம் ஆண்டில் இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டம் முடிவடையும். அதன் பின்பு, அதாவது 1—4—1979-ல் இருந்து நமக்குப் பிற நாடுகளின் உதவி தேவைப்படாது என்று சிலர் வாதிடுகிறார்கள். ‘அச்சுறுத்தலுக்கு அடி பணிய மாட்டோம்;’ ‘பிற நாடுகளின் உதவியின்றியே இந்தியா நன்றாகச் செயல்பட முடியும்’ என்றும் அவர்கள் முழங்குகிறார்கள். அவர்கள் கூற்றில்

எத்துணை உண்மையிருக்கிறது என்பதை இப்பொழுது நாம் ஆராய் வோம். அயல்நாடுகளிடமிருந்து உதவி பெறுவதைப் படிப்படி யாகக் குறைக்க வேண்டுமென்பது இந்திய ஐந்தாண்டுத் திட்டங் களின் நோக்கமாகும். ஆயினும், பிற நாடுகளின் உதவி அறவே வேண்டாம் என்பது ஒரு அரசியல் முழக்கமே தவிர வேறன்று. 1970ஆம் ஆண்டை, அடுத்த ஆண்டுகளில் வெளிநாடுகளிலிருந்து சிறப்பு உதவி பெறுவதை நிறுத்திவிட வேண்டும் என்பது மூன்றாவது திட்டத்தின் நோக்கமாகும். நான்காவது திட்டம் இவ் விலக்கை 1980-ஐ அடுத்த ஆண்டுகளுக்குத் தள்ளிப் போட்டது. இவற்றையெல்லாம் பின்னணியாகக்கொண்டு பார்க்கும்பொழுது ஐந்தாவது திட்டத்தின் நோக்கம் அத்துணை திடுக்கிட வைக்கும் செய்தியன்று.

இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கு அயல்நாடுகளின் உதவி வேண்டியிருந்தது. தனியார் துறையும் சரி, அரசுத் துறையும் சரி, வெளிநாட்டு எந்திரங்களையும், மூலப் பண்டங்களையும் பெருமளவில் வாங்கின. எந்திரங்களை வெளிநாடு களிலிருந்து பெருமளவில் வாங்கியதால், அவற்றின் உறுப்புகள் ஏதேனும் சேதமடைந்தால், அவற்றை வெளிநாடுகளிலிருந்து தருவிக்க வேண்டியிருந்தது. மூலப் பண்டங்களையும் அதிகமாக இறக்குமதி செய்ய வேண்டியிருந்தது. ஆகவே, புதிதாகத் தொழில்களை உருவாக்கவும், அவற்றை இயக்கவும் மேன்மேலும் பிற நாடுகளை நம்பியிருக்கும்படி ஆயிற்று.

கடந்த சில ஆண்டுகளாக வேளாண்மை உற்பத்தி குறைந்து வருகிறது. 1970—71-ல் வேளாண்மை உற்பத்தி 7·3 சதவீதம் பெருகியது. 1971—72-ல் 1.7 சதவீதம் குறைந்தது. 1972-73-ல் மேலும் வேளாண்மை உற்பத்தி குறைந்தது. 1971—72-ல் 104·7 மில்லியன் டன்களாக இருந்த உணவு உற்பத்தி, 1972-73-ல் 100 மில்லியன் டன்களுக்கும் சிறிது குறைவாக இருக்கும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. 1973—74-ல் இந்தியாவின் உணவு உற்பத்தி 106 மில்லியன் டன்களாக இருக்குமென்று எதிர் பார்க்கப்படுகிறது. தொழில் பண்டங்களின் உற்பத்தி 1963-ல் 7·3 சதவீதம் அதிகரித்தது. 1970-ல் இச் சதவீதம் 3·1 சத வீதமாகக் குறைந்தது. 1971-ல் மேலும் இது 2·9 சதவீதமாகக் குறைந்தது. 1972-ல் மின்சாரத் தட்டுப்பாடு இருந்தும் தொழில் பண்டங்களின் உற்பத்தி 7·1 சதவீதம் அதிகரித்தது பாராட்டத் தக்கது. அதிகாரபூர்வமான புள்ளி விவரங்கள் கிடைக்கா விட்டாலும், 1971—72-ல் இந்திய தேசீய வருமானத்தின் பெருக்கம் 2 சதவீதத்திற்கும் குறைவானது எனத் தெரிகிறது.

1965—66-ல் நிகர உள்நாட்டு உற்பத்தியில் 13·4 சதவீதம் முதலீடு செய்யப் பெற்றது. ரிசர்வ் பேங்கின் மதிப்பீட்டின்படி 1969—70-ல் இச் சதவீதம் 9·3 ஆகவும், 1970—71-ல் 10·5 ஆகவும், 1971—72-ல் 11·5 ஆகவும் இருந்தது.[1] 1965—66-ல் நிகர உள்நாட்டு உற்பத்தியில் 11·1 சதவீதம் சேமிக்கப்பெற்றது. 1968—69-ல் இச்சதவீதம் 8·2 ஆகவும், 1969-70-ல் 8·6 ஆகவும், 1970-71-ல் 9·4 ஆகவும், 1971—72-ல் 10 ஆகவும் சேமிப்பு வீதம் இருந்தது. திட்டவட்டமான புள்ளி விவரங்கள் கிடைக்கா விட்டாலும், 1972—73-ல், 1971—72-ல் இருந்ததைக் காட்டிலும் சேமிப்பு வீதமும், முதலீட்டு வீதமும் அதிகமாக இருக்குமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

1972ஆம் ஆண்டு மே திங்களிலிருந்து விலைகள் மிகவும் அதிகரித்துள்ளன. 1971-ல் மொத்த விலைகள் 4% அதிகரித்தன. 1972-ல் 7·8% அதிகரித்தன. 1969—70-ல் இந்தியா உரூபா 242·58 கோடி பெறுமானமுள்ள கோதுமை, அரிசி ஆகியவற்றை இறக்குமதி செய்தது. 1970—71-ல் இவ் விறக்குமதி உரூபா 203·19 கோடியாகவும், உரூபா 1971—72-ல் உரூபா 120·67 கோடியாகவும் குறைந்தது. உணவுப் பண்டங்களின் இறக்குமதி குறைந்தாலும் இதை அடியோடு நிறுத்த முடியவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. 1972—73-ல் 4½ மில்லியன் டன் கோதுமையை இந்தியா இறக்குமதி செய்தது. இவற்றின் மதிப்பு உரூபா 560 கோடியாகும். 1973—74-ல் இதுவரை இந்தியா 16 இலட்சம் டன் கோதுமையையும், மைதா மாவையும் இறக்குமதி செய்துள்ளது. இவற்றின் மதிப்பு உரூபா 132 கோடியாகும். சோவியத் யூனியன் 2 மில்லியன் டன் கோதுமையைக் கடனாகத் தர இசைந்துள்ளது.

இதேபோன்று 1969—70-ல் இந்தியா இறக்குமதி செய்த பண்டங்களின் மதிப்பு உரூபா 1,582·10 கோடியாகும். 1970—71-ல் இது உரூபா 1,634·20 கோடியாகவும், 1971—72-ல் உரூபா 1,805·64 கோடியாகவும் அதிகரித்தது. 1972 அக்டோபரி லிருந்து டிசம்பர் முடிய மூன்று திங்களில் இந்தியா இறக்குமதி செய்த பண்டங்களின் மதிப்பு உரூபா 385·92 கோடியாகும். 1969—70-ல் இந்தியா ஏற்றுமதி செய்த பண்டங்களின் மதிப்பு உரூபா 1413·28 கோடியாகும். 1970—71-ல் இத் தொகை உரூபா 1,535·16 கோடியாகவும், 1971—72-ல் உரூபா 1,568·61 கோடியாகவும் அதிகரித்தது. ஆண்டுதோறும் ஏற்றுமதிகளின்

[1] ஆதாரம் : Reserve Bank of India, Bulletin, April 1963, p. 1.

மதிப்பு அதிகரித்து வந்தாலும், அவை இறக்குமதிகளின் மதிப்பைக் காட்டிலும் குறைவாக இருப்பதை நோக்க வேண்டும். 1972 அக்டோபரிலிருந்து டிசம்பர் முடிய மூன்று திங்களில் இந்தியா ஏற்றுமதி செய்த பண்டங்களின் மதிப்பு உருபா 478·54 கோடியாகும். கடந்த சில ஆண்டுகளில் முதன்முறையாக இறக்குமதியைக் காட்டிலும் ஏற்றுமதி அதிகரித்துள்ளது.

இந்தியா பெறுகின்ற பிற நாட்டு உதவியும் குறைந்து கொண்டே வருகிறது. 1967—68-ல் இவ்வுதவி உருபா 1,196 கோடியாக இருந்தது. 1971—72-ல் இத் தொகை உருபா 778 கோடியாகக் குறைந்தது. சலுகை வீதங்களில் இறக்குமதியாகும் உணவுப் பண்டங்களை இத் தொகையிலிருந்து கழித்தால், 1967—68-லும், 1970—71-லும் இந்தியா பெற்ற உதவி முறையே உருபா 533 கோடியும், உருபா 248 கோடியும் ஆகும். உணவு உதவி குறைந்து விட்டதனுல், பிற நாட்டுக் கடனுதவித் தொகை பெரிதும் குறைந்து விட்டது. 1972—73-ல் இந்தியா உருபா 742 கோடியை உதவியாகப் பிற நாடுகளிலிருந்து பெற்றது. இந்த 742 கோடியில் நாம் பிற நாடுகளுக்குச் செலுத்த வேண்டிய தொகையைக் கழித்து விட்டால், நாம் பெற்ற நிகர உதவி உருபா 123 கோடியாகும்.

ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இறக்குமதிகளைக் குறைக்க வேண்டும் என்பது குதிரைக் கொம்பாகவே முடியும் போல் தோன்றுகிறது. ஏனெனில், உருக்கு, உரம், உணவுத் தானியம் ஆகியவற்றின் இறக்குமதி தொடர்ந்து நீடிக்குமானுல், திட்டக் குழுமத்தின் கணிப்புகள் குட்டிச் சுவராய்ப் போகும். இப்பொழுது இம் மூன்று பண்டங்களின் இறக்குமதிக்கும் ஓராண்டில் உருபா 700 கோடி செலவழிக்க வேண்டியிருக்கிறது. உருக்கில் தன்னிறைவு அடைவதென்பது அடுத்த சில ஆண்டுகளில் இயலாத காரியம். அதற்குப் பல ஆண்டுகள் பிடிக்கும். ஏனெனில், இந்தியாவைத் தொழில் மயம் ஆக்க வேண்டுமென்ருல், இன்னும் பத்து ஆண்டுகளுக்கேனும் தொடர்ந்து உருக்கையும் எந்திரங் களையும் இறக்குமதி செய்தே தீர வேண்டும். மொத்த இறக்குமதி களில் எந்திரங்கள், போக்குவரத்து சாதனங்கள் ஆகியவற்றின் இறக்குமதி 25% ஆகும். இவற்றின் மதிப்பும் அதிகரித்துக் கொண்டே போகும். உடனடியாக உணவுத் தானியத்திலும், உர உற்பத்தியிலும் தன்னிறைவு பெற முடியாவிட்டாலும் முழு முயற்சியுடன் பாடுபட்டால் அடுத்த ஐந்தாண்டுகளில் இவ்விரண்டு பண்டங்களிலும் இந்தியா தன்னிறைவு பெறுவது திண்ணம். அத்துடன், உணவு மானியம் அளிப்பதையும் இந்திய அரசு

நிறுத்தி விட வேண்டும். இந்திய அரசு 1969—70, 1970—71, 1971—72, 1972—73 ஆகிய ஆண்டுகளில் முறையே உருபா 32 கோடி, 18 கோடி, 50 கோடி, 117 கோடியை உணவு மானியமாகச் செலவழித்தது. 1973—74-ல் இம் மானியம் உருபா 130 கோடியாக இருக்கும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. இதில் வேடிக்கை என்னவென்ருல், அயல் நாடுகளிலிருந்து வரும் கோதுமைக்குக் குவின்டால் ஒன்றுக்கு உருபா 37·28—ம் இந்திய கோதுமைக்குக் குவின்டால் ஒன்றுக்கு உருபா 24·05—ம் மானியமாக அளிக்கப்படுவதுதான்.

உணவுப் பண்டங்கள், உரம் ஆகிய இரு பண்டங்களின் இறக்குமதியை நிறுத்திஞல், 1969—70, 1970—71, 1971—72 ஆகிய ஆண்டுகளில் இறக்குமதியைக் காட்டிலும் ஏற்றுமதி முறையே உருபா 228·95 கோடியும், உருபா 235·95 கோடியும், உருபா 41·10 கோடியும் அதிகமாக இருந்திருக்கும். பெட்ரோல் இறக்குமதியையும், இரும்பல்லாத கனிப் பொருள்களின் (தாமிரம், துத்தநாகம், தகரம்) இறக்குமதியையும் குறைக்க முடியாது. மாருக, அவற்றின் இறக்குமதி அதிகரித்துக் கொண்டுவரும். நிலக்கரிக்குப் பதிலாக டீசல் எண்ணையைப் பயன்படுத்தும் பொழுதும், மோட்டார் கார்களின் எண்ணிக்கை பெருகும் பொழுதும் டீஸல் எண்ணெய்க்கான புரிசம் அதிகரிக்கும். இப்பொழுது ஆண்டொன்றுக்கு இந்தியாவுக்கு 23 மில்லியன் டன் பெட்ரோல் வேண்டியிருக்கிறது. 1978-ல் இது 38 மில்லியன் டன்ஞக அதிகரிக்குமென்று மதிப்பிடப் பட்டிருக்கிறது.

பிற நாட்டு உதவி தன்னிறைவை எய்துவதற்கு ஒரு வாயிலேயன்றி வேறன்று. தன்னிறைவை எய்துவது என்ருல், அயல் நாடுகளிலிருந்து இறக்குமதிகளை அடியோடு தவிர்க்கவேண்டுமென்று பொருளல்ல. இறக்குமதியாகும் பண்டங்கள், பணிகள் இவற்றுக்கு ஈடாகப் பண்டங்களையும், பணிகளையும் ஏற்றுமதி செய்ய வேண்டும் என்றுதான் பொருள். ஆகவே, பிற நாடுகளுக்கு அதிகமாக ஏற்றுமதி செய்வதற்கு வாய்ப்பு இருக்கும் பண்டங்களையும், பணிகளையும் ஏராளமாக உற்பத்தி செய்து அந் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதுதான் இக்கட்டிலிருந்து விடுபடுவதற்கு ஒரே வழியாகும். ஒரு நாடு தனக்கு வேண்டிய அனைத்துப் பண்டங்களையும் உற்பத்திசெய்து நூற்றுக்கு நூறு தன்னிறைவை எய்த முடியாது. மிகச் செல்வந்த நாடான அமெரிக்காவும் சரி, சோஷலிஸ நாடுகளான சோவியத் யூனியனும், சீனுவும் சரி, நூற்றுக்கு நூறு தன்னிறைவு பெறவில்லை. 1973ஆம் ஆண்டு ஜூன் திங்களில் சோவியத் ஒன்றியத்தில் கம்யூனிஸ்டுக்

கட்சியின் பொதுச் செயலாளரான திரு. லியோனிட் பிரஷ்னேவ் (Leonid Brezhnev) அவர்களும், அமெரிக்க அரசும் கையெழுத் திட்டு 22—6—73 அன்று வெளியிட்ட கூட்டறிக்கையில், 'இரு நாடுகளும் அடுத்த மூன்றாண்டுகளில் இரண்டல்லது மூன்று மில்லியன் டாலர்களுக்கு (உரூபா 1500 கோடியிலிருந்து உரூபா 2,250 கோடிவரை) வணிகம் செய்வதை நோக்கமாகக் கொள்ள வேண்டும்' என்று குறிப்பிட்டிருந்தது. இதேபோன்று சீனாவுடனும், ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்துடனும் (European Economic Community) தன்னுடைய வணிகத்தைப் பெருக்கிக் கொள்வதில் அமெரிக்கா அதிகமான நாட்டம் கொண்டுள்ளது. சோவியத் யூனியனும்கூட சைபீரிய எண்ணெய்த் திட்டத்திற்கு ஜப்பானிய உதவியைப் பயன்படுத்தி வருகிறது. இதன்படி ஜப்பான் 1,000 மில்லியன் டாலர் (உரூபா 750 கோடி) முதலீடு செய்து 4,000 கிலோ மீட்டர் நீளமுள்ள குழாய்களை அமைக்கும். இதேபோன்று அமெரிக்காவிலிருந்து தொழில் நுட்ப உதவியைப் பெறுவதற்குச் சோவியத் யூனியன் தன் நாட்டில் ஏராளமாகக் கிடைக்கும் கனிப் பண்டங்களையும், இயற்கை வாயுவையும், மரத்தையும் தர இணங்கியிருக்கிறது. 1972ஆம் ஆண்டில் சோவியத் யூனியன் அமெரிக்காவிலிருந்து 10 மில்லியன் டன் கோதுமையை வாங்கியது. சீனாவும் கணிசமான அளவு கோதுமையை அமெரிக்காவிடமிருந்து வாங்கியது. இவற்றிலிருந்து வெளிநாடுகளுடன் வாணிபம் செய்வதிலோ, அவை நம் நாட்டில் முதலீடு செய்வதிலோ இழப்பு ஒன்றுமில்லை என்பதும், வெளிநாடுகளிலிருந்து கடன் வாங்குவதால் இந்தியாவுக்கு இழுக்கு ஒன்றுமில்லை என்பதும் பெறப்படும்.

மேற்கூறியவற்றிலிருந்து இந்தியா மேன்மேலும் கடனை வாங்க வேண்டும் என்று கூறுகின்றோமில்லை. கடனோடு கடன் கதம்பப் பொடி காற்பணம் என்று மேன்மேலும் கடன் வாங்குவது நல்ல தன்று. வட்டிக்கும் தூக்கம் இல்லை. ஐ. நா. வெளியிடும் ஸிரஸ் (Ceres)[1] என்ற செய்தி ஏடு, (7-2-72 அன்று வெளிவந்த இதழில்) வளரும் நாடுகள் தாங்கள் புதிதாகப் பெறுகின்ற கடனில் 70% வட்டியையும், அசலையும் செலுத்துவதற்குப் பயன்படுத்துகின்றன என்றும், 1977ஆம் ஆண்டில் இந் நாடுகள் பெறும் கடன் தொகை இவை வெளிநாடுகளுக்குச் செலுத்தும் அசல், வட்டி இவற்றை விடக் குறைவாக இருக்கும் என்றும் குறிப்பிட்டிருக்கிறது. இதை நாம் ஒரு அபாய அறிவிப்பாகக் கொண்டு, இப்பொழுது முதற் கொண்டே தக்க நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். இந்தியா

[1] Ceres is the Magazine of the Food and Agriculture Organization.

பெறும் அயல்நாட்டு உதவியும் குறைந்துகொண்டே வந்திருக்கிறது. 1961-ல் வளர்ச்சி பெற்ற நாடுகள் தங்கள் மொத்த தேசீய உற்பத்தியில் 0·87 சதவீதத்தை அயல்நாடுகளுக்கு உதவியாக அளித்தன. 1965-இல் இச் சதவீதம் 0·62 ஆகக் குறைந்தது. நமது நாட்டைப் பொறுத்தவரையில் நாம் பெறும் அயல்நாட்டு உதவி மிகக் குறைவாகும். அவ் வுதவி நம் தேசிய வருமானத்தில் 0·8% ஆகும்.

இதுகாறும் கூறியவாற்றான் 1978—79ஆம் ஆண்டின் இறுதயில் வெளிநாட்டுக் கடனையும், உதவியையும் நிறுத்தி விடுவது நிகழ்திறமானதே என்பது புலனாகும். ஆனால், அந் நிலையை எய்த நாம் செய்யவேண்டுவன: (1) உணவு உற்பத்தியில் தன்னிறைவை எய்தவேண்டும். (2) ஏற்கெனவே திட்டமிட்டபடி உர உற்பத்தியில் 1976-ல் தன்னிறைவை எய்தவேண்டும். (3) சேமிப்பு வீதத்தையும், முதலீட்டு வீதத்தையும் அதிகரிக்க வேண்டும். (4) முழு உற்பத்தித் திறனையும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். (5) ஏற்றுமதிகளைப் பெருக்க வேண்டும். (6) ஊதாரித் தனமான செலவுகளையும், தண்டச் செலவுகளையும் அரசு மிகவும் குறைத்துக்கொள்ள வேண்டும். (7) எந்தெந்த முதலீடுகள் வளர்ச்சிக்கு ஆக்கம் அளிக்குமோ, அவற்றுக்கு முதலிடம் தர வேண்டும். (8) துண்டு நிதியத்தைக் கைவிட வேண்டும்; அது இயலாதென்றால் மிகவும் குறைத்துக்கொள்ள வேண்டும். (9) அகடு தரிப்புக் காலத்தைக் (gestation period) குறைத்து, எந்திரங்களின் முழுத் திறனையும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்


1. Span, January 1974, p. 2, 3, 4.
2. G. Findlay Shirras, 'The Science of Public Finance', p. 503—513.
3. R. N. Bhargava, 'The Theory and Working of Union Finance in India, p. 403—419.
4. Southern Economist, 15—8—1973, by R. K. Sharma, pp. 25—26.
5. Report on Currency and Finance, 1971—72, Reserve Bank of India, pp. 115—138.

# 40. போர் நிதியம்

இக்காலத்தில் போரை நடத்துவதற்கு அதிகச் செலவு ஆகிறது. போரில் ஏற்படும் உயிர்ச் சேதமும், பொருட் சேதமும் மிகவும் அதிகம். வியட்நாம் போரில் அமெரிக்க அரசு உருபா 80,300 கோடி செலவழித்தது (Reader's Digest, May 1973, பக்கம் 148.) வியட்நாம் போரில் 1956ஆம் ஆண்டு அமெரிக்க ஐக்கிய நாடுகள் தலையிட்டன. இப் போர் 1972ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 1ஆம் நாள் ஓய்ந்தது.) இந்த ஆண்டு (1973) பாதுகாப்புச் செலவுக்கு அமெரிக்க அரசு உருபா 55,795 கோடி (74,109 மில்லியன் டாலர்) ஒதுக்கியுள்ளது. 1973ஆம் ஆண்டைய வரவு செலவு திட்டத்தில் சோவியத் யூனியன் 17,900 மில்லியன் ரூபிள்களை (உருபா 14,320 கோடி) பாதுகாப்புச் செலவுக்கு ஒதுக்கி யுள்ளது. இதற்குக் காரணம் போர்க் கருவிகளுக்கு அதிகச் செலவு ஆவதும், போரில் எப்பாடுபட்டேனும் வெற்றி பெற வேண்டும் என்று முழுமூச்சுடன் தன்னுடைய அனைத்து வளங்களையும் ஒரு நாடு ஈடுபடுத்துவதும் ஆகும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் நிகழ்ந்த போர்களுக்குச் செலவான தொகைகளைக் காட்டிலும் இருபதாம் நூற்றாண்டில் பல மடங்கு அதிகம் செலவாகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் போரில் ஈடுபட்ட நாடுகள், தங்களின் தேசிய வருமானத்தில் 8-ல் இருந்து 13 சதவீதம் வரை போருக்காகச் செலவழித்தன. முதல் உலகப் போரின் போது இச் சதவீதம் 59 ஆக உயர்ந்தது. இரண்டாம் உலகப் போரின்போது நாடுகள் தங்களின் தேசிய வருமானத்தில் 60-ல் இருந்து 70 சதவீதம் வரை போருக்காகச் செலவிட்டன.[1] இரண்டாவது உலகப் போரின் தொடக்கக் காலத்தில் பிரிட்டன் நாளொன்றுக்கு 13 மில்லியன் பவுண்டு ஸ்டர்லிங் (உருபா 26 கோடி) செலவிட்டது. பிந்திய ஆண்டுகளில் இச் செலவு மேலும் அதிகரித்தது. கீழ்வரும் அட்டவணையில் சில நாடுகள் செய்த போர்ச் செலவுகள் தரப்பட்டுள்ளன.

[1] William Beveridge, 'Full Employment in a Free Society', p. 28.

செலவு (நூறுயிரத்தில்)

| நாடு | 1938—39 | | 1941—42 | | 1944—45 | |
|---|---|---|---|---|---|---|
| | மொத்தச் செலவு | போர்ச் செலவு | மொத்தச் செலவு | போர்ச் செலவு | மொத்தச் செலவு | போர்ச் செலவு |
| பிரிட்டன் (பவுண்டு ஸ்டர்லிங்கில்) | 1,147 | 400 | 4,888 | 4,065 | 6,190 | 5,125 |
| அமெரிக்க ஐக்கிய நாடுகள் (டாலரில்) | 8,795 | 1,206 | 32,492 | 26,011 | 93,912 | 88,000 |
| சோவியத் யூனியன் (ரூபிளில்) | 124,000 | 27,000 | 216,000 | 70,900 | 305,300 | 137,900 |
| இந்தியா (உருபாவில்) | 1,308 | 521 | 1,874 | 1,054 | 5,721 | 4,566 |
| ஜெர்மனி (மார்க்கில்) | 28,550 | .... | 99,292 | .... | 124,006 | .... |
| ஜப்பான் (யென்னில்) | 7,819 | 4,532 | 19,689 | 11,555 | 53,244 | 38,000 |

இந்திய அரசின் செலவில், இந்திய அரசு பிரிட்டிஷ் அரசின் சார்பாகச் செலவழித்த தொகை சேர்க்கப்படவில்லை. நடுநிலைமை வகித்த ஸ்வீடன், ஸ்விட்ஸர்லாந்து ஆகிய நாடுகளின் செலவும் அதிகரித்தது. 1938—39-ல் ஸ்வீடன் 1578 மில்லியன் குரோனு [1] செலவழித்தது. 1944—45-ல் இச் செலவு 4866 மில்லியனுக உயர்ந்தது. இதே போன்று ஸ்விட்ஸர்லாந்து 1938-ல் 675 மில்லியன் பிராங்குகள் செலவழித்தது. 1945-ல் இச் செலவு 2407 மில்லியனுக உயர்ந்தது. இச் செலவு அதிகரிப்பை வேறு வகையாகவும் கூறலாம். 1939-ல் பிரிட்டன் தன்னுடைய தேசிய வருமானத்தில் 24 சதவீதம் செலவழித்தது.

கீழ்வரும் அட்டவணையில் வேறு சில நாடுகளின் செலவு தரப்பட்டிருக்கிறது.

தேசிய வருமானத்தில் சதவீதம்.

| நாடு | 1939 | 1941 | 1943 | 1944 |
|---|---|---|---|---|
| பிரிட்டன் | 24 | 53 | 55 | 54 |
| அமெரிக்க ஐக்கிய நாடுகள் | 20 | 23 | 54 | 52 |

[1] நார்வே நாட்டின் செலாவணி குரோன் (krone) என்றும், ஸ்வீடன் நாட்டின் செலாவணி குரோனு (krona) என்றும் பெயர் பெறும். இந்திய நாட்டின் நூறு உருபாவுக்கு 64·48 குரோனும், 54·80 குரோனுவும், 12·22 அமெரிக்க டாலரும் சமம். ஆதாரம்: (Reserve Bank of India Bulletin, December 1973, p. 2147.

அரசின் செலவில் பெரும்பகுதியும் போர் வீரர்களுக்கான ஊதியம், போர்க் கருவிகள், போர்க் கப்பல்கள், வெடி மருந்து, படைக் கலங்களை உற்பத்தி செய்யும் ஆலைகள் ஆகியவற்றுக்காகச் செலவழித்தது. இதைக் கீழே தரப்பட்டிருக்கும் அட்டவணையிலிருந்து அறியலாம்.

மொத்தச் செலவில் போர்ச் செலவின் சதவீதம்.

| | | | |
|---|---|---|---|
| பிரிட்டன் | 82 (1939—40 1945—46) | 79 | (1945—46 பட்ஜெட் மதிப்பீடு) |
| அமெரிக்க ஐக்கிய நாடுகள் | 85 (1939—40 1943—44) | 88 | |
| சோவியத் யூனியன் | 30 (1939 & 1940) | 33 (1941) | 59 (1943—44) |
| இந்தியா | 59 (1939—40 1943—44) | 80 (1944—45) | |
| ஜப்பான் | 50 (1939—40) | 67 (1943—44) | |
| ஜெர்மனி | 81 (1933—38) | | |

## போருக்கு நிதி திரட்டுதல்

ஒரு நாட்டின் வளங்களாவன: அந் நாட்டின் ஆள் மாகாணமும், நிலமும், கனிவளங்களும், கட்டடங்களும், ஆலைகளும், இருப்புப் பாதைகளும், கப்பல்களும், பண்டங்களின் இருப்பும் ஆகும். இவ் வளங்களில் அந் நாட்டினருக்குப் பிற நாடுகளிலிருந்து கிடைக்கவேண்டிய வருவாயினங்களும் அடங்கும். இவ் வளங்கள் அனைத்தும் சேர்ந்துதான் தேசிய வருமானத்தை உற்பத்தி செய்கின்றன. போர்க் காலத்தில் இவ் வளங்களைத் திருப்பிப் போருக்கு வேண்டிய தளவாடங்களையும், பிற பண்டங்களையும் உற்பத்தி செய்யவேண்டும். போரை நடத்துவதற்கு வேண்டிய வளங்களை, உச்ச அளவு, அரசு, மக்களிடமிருந்து பிழிந்தெடுத்து போருக்கான தளவாடங்களையும் பண்டங்களையும் உற்பத்தி செய்யவேண்டும்.

ஒரு சமுதாயத்தினிடம் இருக்கும் வளங்களைக் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம். அவை வருமாறு: (அ) ஆண்டைய வருமானத்தில் வழக்கமாக நுகரப்படும் பண்டங்கள், பணிகள்; (ஆ) ஆண்டு வருமானத்தில் சேமிக்கப்படும் பகுதி, அதாவது, மூலதன ஆக்கத்திற்காகச் செலவழிக்கப்படும் வருமானம்; (இ) நாட்டில் சேமிக்கப்பட்டிருக்கும் மூலதனம்; (ஈ) பிற நாடுகளில் முதலீடு செய்யப்பட்ட மூலதனம்; (உ) போர்க் காலத்தில் ஏற்படும் வருமானப் பெருக்கம். மிகை நேரம் உழைப்பதனாலும், வேலையின்மையைக் குறைப்பதனாலும், தொழில் தகாராறுகளை அகற்றுவதனாலும், இன்னும் வேறு வழிகளினாலும் நாட்டின் வருமானத்தைப் பெருக்கமுடியும். மக்கள் தங்களின் நுகர்வைக் குறைத்துக் கொள்வதனாலும், நாட்டின் மூலதனப் பண்டங்களை அதிகரிக்காமல் விட்டு விடுவதனாலும், தேய்மானத்திற்குக்கூட வகை செய்யாமல் விட்டு விடுவதனாலும், இருக்கின்ற மூலதனத்தைக் கரைய விடுவதினாலும் நாட்டின் உற்பத்தியைப் பெருக்க முடியும். இங்ஙனம் நாட்டின் உற்பத்தியைப் பெருக்குவதுடன் நாட்டின் வருமானத்தையும் பெருக்கமுடியும். பிற நாடுகளிலிருந்து கடன்கள் பெறுவதன் மூலமும், பிற நாடுகளில் உள்ள முதலீடுகளை விற்பதன்மூலமும் ஒரு நாடு போரை நடத்துவதற்கு வேண்டிய வளங்களைப் பெற முடியும்.

போரை நடத்துவதற்கு வேண்டிய வளங்களைத் திரட்ட வேண்டுமென்றால் மக்களின் நுகர்வைக் கட்டாயமாகவோ, கட்டாயமின்றியோ குறைத்துத்தான் தீரவேண்டும். கடுமையான சிக்கனத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று அரசு பிரசாரம் செய்யலாம். இதனால் மக்கள், அரசு வெளியிடும் பாதுகாப்புக் கடன் பத்திரங்களை வாங்குவதுடன், கொடைகளையும், அன்பளிப்புக்களையும் அரசுக்கு வழங்க முன்வரலாம். வரிகளை விதித்தும் மக்களின் நுகர்வை அரசு கட்டாயமாகக் குறைக்கலாம். இதற்காக அரசு கட்டாயச் சேமிப்புத் திட்டங்களை மேற்கொள்வதுடன், இறக்குமதிகளையும் குறைக்கலாம்; பங்கீட்டையும் அமல் நடத்தலாம். நாட்டின் வருமானமும், ஆள் வருமானமும் எவ்வளவு அதிகமாக இருக்கின்றதோ, அவ்வளவு அதிகமாக, மக்களின் நுகர்வைக் குறைத்துப் போருக்கு வேண்டிய வளங்களை அரசு பெறலாம். மேலும் தேய்மானத்திற்கும், பதிலீட்டுக்கும் (replacement) வகை செய்யாமலும் அரசு போருக்கு வேண்டிய வளங்களைப் பெறமுடியும். 'வழக்கமாகச் செய்யும் பழுது பார்த்தலையும், பதிலீட்டுகளையும் தவிர்ப்பதன் வாயிலாகவும், இருப்புப்பாதைகளைப் பழுது பார்க்காமல் விடுவதன் வாயிலாகவும்,

பழையதும், தேய்ந்து போனதுமான எந்திரங்களைத் தொடர்ந்து பயன்படுத்துவதன் வாயிலாகவும், போதிய உரமிடாது பயிரிட்டு நிலத்தின் வளத்தை உறிஞ்சுவதன் வாயிலாகவும், வழக்கமாக வருமானத்தை ஆக்குவதற்கு எவ்வளவு வளங்கள் பயன்படுத்தப் படுகின்றனவோ, அதற்கும் மேலாக, நாட்டின் பொருளாதார ஆற்றலை உடனடியாகப் பெருக்குவதற்கு, வளங்களை ஈடுபடுத்த முடியும்' என்று பேராசிரியர் பிகு [1] கூறுகிறார். தொடர்ந்து இயங்குவதற்கான நிலையில் எந்திரங்களை வைத்திருக்கவேண்டும் என்பதைக் கூற வேண்டியதில்லை. இப்பொழுது கைவசம் இருக்கின்ற மூலப் பண்டங்களையும் நேரிடையாகப் போரில் பயன் படுத்திக் கொள்ளலாம். சில வேளைகளில் நிலையான மூல தனத்தையும் இவ்வாறு பயன்படுத்திக் கொள்வதுண்டு. எடுத்துக்காட்டாக, சில இருப்புப்பாதைகள் இந்தியாவிலிருந்து அகற்றப்பட்டுப் போர்முனைக்கு எடுத்துச் செல்லப்பட்டதைக் கூறலாம். போரின் தொடக்கத்தில், ஒரு நாட்டின் வளங்களில் எவ்வளவு பகுதி பயன்படுத்தாமல் இருக்கிறது என்பதைப் பொறுத்தும், பயன்படுத்தப்பட்டாலும் முழுமையாகப் பயன் படுத்தப்படாமல் எவ்வளவு வளங்கள் இருக்கின்றன என்பதைப் பொறுத்தும் உற்பத்திப் பெருக்கம் இருக்கும். சிறந்த பயிற்சி, தொழில் சீரமைப்பு, (rationalisation), புத்தாக்கங்கள் ஆகிய வற்றின்மூலம் திறமையை எவ்வளவு அதிகரிக்கலாம் என்பதைப் பொறுத்தும் உற்பத்திப்பெருக்கம் இருக்கும். சாதாரணமாகப் பின்வரும் முறைகளைக் கையாண்டு உற்பத்தியைப் பெருக்கலாம்.

(அ) இதுவரை பயன்படுத்தாத வளங்களைப் பயன்படுத்த லாம். தரிசாகக் கிடைக்கும் நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டு வரலாம். ஒரு போகம் விளையும் நிலத்தை இரு போகம் விளையும் நிலமாகவும் இரு போகம் விளையும் நிலத்தை முப் போகம் விளையும் நிலமாகவும் மாற்றலாம். இதே போன்று ஒரு ஷிப்டு (shift) வேலை செய்யும் ஆலைகளை இரண்டு ஷிப்டாகவும், இரண்டு ஷிப்டு வேலை செய்யும் ஆலைகளை மூன்று ஷிப்டாகவும் மாற்றலாம். வேலையின்றி யிருப்போரை வேலைக்கு அமர்த்தலாம்.

(ஆ) உழைக்கும் நேரத்தைக் கூட்டலாம். விடுமுறை நாட்களைக் குறைக்கலாம்.

[1] A. C. Pigou, 'The Political Economy of War, p. 38.

(இ) ஓய்வு பெற்றவர்களை மீண்டும் வேலைக்கு எடுத்துக் கொள்ளலாம். சாதாரணமாக ஊதியம் தரும் தொழில்களில் ஈடு படாத மகளிரையும், சிறுவர்களையும் வேலைக்கு எடுத்துக் கொள்ள லாம்.

(ஈ) தொழில் நுட்பப் பயிற்சி அளிப்பதன் வாயிலாகத் தொழிலாளர்களின் திறமையை அதிகரிக்கலாம்.

(உ) தொழில் சீரமைப்புமூலம் உற்பத்தியைப் பெருக்கலாம்.

(ஊ) உற்பத்தி முறையை மேம்படுத்தத் தொழில் நுட்ப ஆராய்ச்சி நடத்தலாம்; அவ்வித ஆராய்ச்சிகளுக்கு உதவித் தொகை வழங்கலாம்.

(எ) வேலை நிறுத்தங்களை அகற்றியும் அல்லது குறைத்தும், தொழிலாளர் தகராறுகளுக்கான காரணங்களைத் தொழிலாளர் சட்டங்களின்மூலம் அகற்றியும், உற்பத்தியை அதிகரிக்கலாம்.

பிற நாடுகளிலிருந்து கடன்களைப் பெற்றும், பிற நாடுகளில் போட்டுள்ள முதலீடுகளை விற்றும் போருக்கு வேண்டிய நிதியை ஒரு அரசு திரட்டலாம்.

போரை நடத்துவதற்கு வேண்டிய நிதியை அரசு பல வழி களிலும் திரட்டலாம். வரிகளை விதிக்கலாம்; கடன் வாங்கலாம்; கொடைகளையும், அன்பளிப்புக்களையும் பெறலாம். ஒரோ வழி போருக்கு வேண்டிய பண்டங்களையும், பணிகளையும் அரசு கட்டாயமாகவும் எடுத்துக் கொள்ளலாம். எடுத்துக்காட்டாகத், துருப்புகள் தங்குவதற்கு வேண்டுமென்று பல தனியார் இல்லங் களையும், கல்லூரி விடுதிகளையும், சாக்கு உந்துகளையும் இரண்டாம் உலகப் போரின்போது இந்திய அரசு எடுத்துக் கொண்டதைக் கூறலாம். பெரும்பாலும் போரில் தோற்ற நாடுகளிலேயே வெற்றி பெற்ற நாடுகளின் படைத்தளபதிகள் இங்ஙனம் கட்டாயமாக எடுத்துக் கொள்கிறார்கள். பெரும்பான்மையும் ரொக்கம் கொடுத்தே அரசு தனக்கு வேண்டிய பண்டங்களை வாங்குகிறது. கடனுக்கும் பண்டங்களை அரசு வாங்குவதுண்டு. ஆனால், இங்ஙனம் செய்வது அருமையே.

போருக்கு வேண்டிய நிதியை ஒரு அரசு வரிகளை விதித்தும், கடன் வாங்கியும், புதிதாகப் பணத்தைப் படைத்தும் (பண வீக்கம்), கைவசம் உள்ள பொன்னிருப்புக்களையும், பிற நாட்டுச்

செலாவணிகளையும் கரைத்தும், பிற நாடுகளில் உள்ள முதலீடுகளை விற்றும், நாட்டு மக்களிடமிருந்து கொடைகளையும், அன்பளிப்புக் களையும் வாங்கியும் பெறலாம். இவற்றை வரிசையாகப் பார்ப் போம். போருக்கு வேண்டிய நிதியில் எவ்வளவு வீதத்தைக் கூடுதலாக வரி விதிப்பதன்மூலம் பெறமுடியும் என்பதைக் கூறுவது கடினமாயினும், ஒப்புமையில் எல்லா அரசுகளும் வரிகளை விதித்தே அதிக அளவு நிதியைத் திரட்டுகின்றன. தொடக்கத்தில் வரிகளிலிருந்து பெறும் வருவாயின் சத வீதம் அதிகமாக இருக்கும். பிறகு இச் சதவீதம் குறையும். இதற்குக் காரணம் போர்ச் செலவுகள் அதிகரிப்பதற்கேற்ப வரிகளிலிருந்து கிடைக்கும் வருவாய் அத் துணை விரைவாக அதிகரிக்காமையே ஆகும். போரின் இறுதிக் கட்டத்தில் வரிகளின் சதவீதம் அதிகரிக்கும். ஆயினும், இச் சதவீதம் போர் மூண்ட காலத்தில் இருந்த சத வீதத்தைக் காட்டிலும் பெரும்பாலும் குறைவாகவே இருக்கும். எடுத்துக்காட்டாக, இரண்டாவது உலகப்போர் தொடங்கிய முதலாண்டில் பிரிட்டிஷ் அரசு செய்த செலவில் 48 சதவீதம் வரி களிலிருந்து கிடைத்தது. அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஜெர்மனி, ஜப்பான், இத்தியா ஆகிய நாடுகளில் இச் சதவீதம் முறையே 41, 40, 35, 72 ஆகும். 1938—39-ல் தன்னுடைய மொத்தச் செலவில் 78 சதவீதத்தைப் பிரிட்டன் வரிகளின் வாயிலாகப் பெற்றது. 1942—43-ல் இச் சதவீதம் 43 ஆகக் குறைந்தது. ஆனல், 1945—46-ல் இச் சதவீதம் 57 ஆக அதிகரித்தது. இதே போன்று அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் இச் சதவீதம் 63-ல் இருந்து 29 ஆகக் குறைந்தது. 1945—46-ல் இச் சதவீதம் 48 ஆக அதிகரித்தது.

வரிகளை அதிகரிப்பதற்கான வாய்ப்பு ஏற்கனவே ஒரு நாட்டு மக்கள் செலுத்தும் வரிப் பளுவைப் பொறுத்திருக்கிறது. இவ் வரிப் பளு அதிகமாக இருந்தால், வரிகளை விதிப்பதற்கும், அல்லது அதிகரிப்பதற்கும் ஆன வாய்ப்புக் குறைவாக இருக்கும். வரிப் பளு குறைவாக இருந்தால், வரிகளை அதிகரிப்பதற்கும், புதிதாக வரிகளை விதிப்பதற்கும் ஆன வாய்ப்பு அதிகமாக இருக்கும். போர்க் காலத்தில் மறைமுக வரிகளின் பளுவைக் காட்டிலும் நேர்முக வரிகளின் பளு அதிகரிக்கிறது. எடுத்துக்காட்டாக 1938-39-ல் பிரிட்டனிலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் மொத்த வரி வருவாயில் முறையே 55 சதவீதமும், 53 சதவீதமும் நேர்முக வரிகளின்மூலம் கிடைத்தன. இதற்குக் காரணம், மறைமுக வரிகளைக் காட்டிலும் நேர்முக வரிகள் ஒப்புமையில் உறுதிப் பாடாகவும், நெகிழ்ச்சி உள்ளதாகவும் இருப்பதேயாகும். புதிதாக மிகை இலாப வரி விதிக்கப்பட்டது. வருமான வரி வீதமும்,

மேல்தள வரியும் (super tax) உயர்த்தப்பட்டன. இறப்பு வரி வீதங்களும் உயர்த்தப்பட்டாலும், அவற்ருல் அரசுக்கு உடனடியாகக் கூடுதல் வருவாய் கிடைக்கவில்லை. மறைமுக வரிகளான விற்பனை வரியும், ஆய்த்தீர்வைகளும் உயர்த்தப்பட்டன. போர்க் காலத்தில் விலைகள் ஏறும் என்பது எல்லோரும் அறிந்ததே. நிதியைத் திரட்டுவதற்கு மட்டுமன்றி, விலைகளின் ஏற்றத்தைக் (பண வீக்கத்தை) கட்டுப்படுத்தவும் வரி ஒரு கருவியாகப் பயன்பட்டது. போர்க் காலத்தில், வரியாக வசூலிக்கப்பட்ட தொகை அனைத்து நாடுகளிலும் அதிகரித்தது. போர் தொடங்குவதற்கு முன்பு, நாட்டின் வருமானத்தில் ஏறக்குறைய 23 சதவீதம் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும், பிரிட்டனிலும் வரியாக வசூலிக்கப் பெற்றது. கானடாவில் இச் சதவீதம் 21 ஆகும். 1943—ல் பிரிட்டனிலும், கானடாவிலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் இச் சதவீதம் முறையே 37,33,30 ஆக அதிகரித்தது.

கடன்கள்

வரிகளின்மூலம் மட்டுமே ஒரு அரசு போர் நடத்துவதற்கு வேண்டிய அனைத்து நிதியையும் பெறமுடியாது. ஆகவே, கடன்கள் வாயிலாகவும் நிதியைத் திட்டவேண்டியிருக்கிறது. கடன்களை உள்நாட்டிலும் திரட்டலாம்; வெளி நாடுகளிலும் திரட்டலாம். ஆனல், போர்க் காலத்தில் பிற நாடுகள் கடன் அளிக்கப் பெரும்பாலும் முன்வரா. அங்ஙனம் அளித்தாலும் அக் கடன் தொகை குறைவாகவே இருக்கும். ஆகவே, ஒரு அரசு உள்நாட்டுக் கடன்களையே பெரிதும் நம்பியிருக்கவேண்டும். தனியார்களிடமிருந்தும் அரசு கடன் வாங்கலாம்; பேங்குகளிடமிருந்தும் அரசு கடன் வாங்கலாம். கட்டாயச் சேமிப்புகளின் மூலமும் ஒரு அரசு நிதி திரட்டலாம். ஜான் மேநார்டு கீன்ஸ் அவர்கள் தெரிவித்த யோசனைக்கு இணங்கப் பிரிட்டனில் தொழிலாளர்களின் ஊதியத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட சதவீதம் வாரம்தோறும் பிடித்தம் செய்யப்பட்டு அஞ்சலகச் சேமிப்புப் பேங்குகளில் போடப்பட்டது. போர் நின்ற பிறகே தொழிலாளர்கள் இச் சேமிப்புகளை எடுக்கலாம். 1963-ல் சீனு இந்தியாவின் வட பகுதிகளையும், வடகிழக்குப் பகுதிகளையும் ஆக்கிரமித்தபொழுது, இந்திய அரசு ஒரு கட்டாயச் சேமிப்பு திட்டத்தை அமல்படுத்தியது.

போர்க் காலத்தில் பல அரசுகளும் கணிசமான தொகையைத் தம் நாட்டு மக்களிடமிருந்து கடன் வாங்கின என்று முன்னரே குறிப்பிட்டோம்.

கீழே புள்ளி விவரங்கள் தரப்பட்டுள்ளன.

பல்வேறு நாடுகளிலும் அரசுகள் திரட்டிய
உள்நாட்டுக் கடன்கள்.

(தேசியச் செலாவணியில், மில்லியனில்)

| நாடு | கால அளவு | போருக்கு முன்பு | போர் ஓய்ந்த பொழுது | சதவீத அதிகரிப்பு |
|---|---|---|---|---|
| பிரிட்டன் | 1939 ஏப்ரல்<br>1945 மார்ச் | 7,269 | 22,129 | 191 |
| அமெரிக்க ஐக்கிய நாடுகள் | 1939 ஏப்ரல்<br>1945 மார்ச் | 45,895 | 236,224 | 415 |
| கானடா | 1939 ஏப்ரல்<br>1644 மார்ச் | 2,832 | 10,344 | 265 |
| இந்தியா | 1939 ஏப்ரல்<br>1944 மார்ச் | 7,170 | 14,412 | 101 |
| ஜெர்மனி | 1939 ஏப்ரல்<br>1944 டிசம்பர் | 29,589 | 345,400 | 1,067 |
| ஜப்பான் | 1939 ஏப்ரல்<br>1944 பிப்ரவரி | 16,557 | 74,765 | 352 |
| ஸ்வீடன் | 1939 ஜூலை<br>1945 பிப்ரவரி | 2,644 | 10,756 | 308 |

இரண்டாவது உலகப் போரின்போது பல நாடுகள் தங்களுக்கு அப்பொழுது வேண்டியதற்கு அதிகமாகவே கடன் வாங்கின. இதற்குக் காரணம் பணவீக்கத்தைத் தடுப்பதாகும். அரசின் கடன் பத்திரங்களை மக்கள் வாங்கும்படி தூண்டுவதற்காகப் பல வழிகளையும் அரசுகள் கையாண்டன. வட்டி வீதத்தை அதிகரிப்பதும் இதில் ஒன்று. ஆனால், இதனால் கடன் பளு அதிகரிப்பதால் கூடுமானவரை இம்முறையைத் தவிர்க்கவேண்டும். வரிச் சலுகைகளும் அளிக்கப்பட்டன. இம்முறையை நாம் சரியென்று கூறுகின்றோமில்லை. அரசின் கடன் பத்திரங்களை ரொக்கமாக மாற்றுவதற்கும் சில வசதிகள் செய்து தரப்பட்டன. மேலும், பல்வேறுபட்ட மக்களின் விருப்பங்களுக்கும், தேவைகளுக்கும் ஏற்ப, பலவகைக் கடன் பத்திரங்கள் வெளியிடப்பட்டன. இவற்றுக்கு நல்ல விளம்பரமும் தரப்படுகிறது. பொதுக்கூட்டங்கள் வாயிலாகவும், போர்க் கடன்கள் வார விழாவைக் கொண்டாடு

வதன் வாயிலாகவும் பிரச்சாரம் செய்யப்படுகிறது. மாவட்டங்கள் இடையேயும், நகரங்கள் இடையேயும் போட்டிகள் நடத்தப் பெற்றுப் பரிசுகளும் வழங்கப்படுகின்றன. ஆனால், இவற்றின் விளைவுகளைத் துல்லியமாக மதிப்பிடுவது கடினம்.

நுகர்வுப் பண்டங்கள், மூலதனப் பண்டங்கள் ஆகியவற்றை வாங்குவதன்மீது கட்டுப்பாடுகளை விதிப்பதன் வாயிலாகவும், அரசு அதிகமான தொகை போர்க்கடன்களைப் பெறலாம். பண்டங்களைப் பங்கீடு செய்வதன் வாயிலாகவும், விலைக்கட்டுப் பாட்டின் வாயிலாகவும், மக்கள் நுகர்வுப்பண்டங்களின்மீது செலவழிக்கும் தொகையைக் குறைக்கலாம். இதே நோக்கத்தை இறக்குமதிகளைக் குறைப்பதன் வாயிலாகவும் நிறைவேற்றலாம். ஆயினும், ஒரு சில பண்டங்களைக் கட்டுப்பாடு செய்வதன் வாயிலாக இந் நோக்கம் ஈடேறும் என்று கூறமுடியாது. ஏனெனில், கட்டுப்பாடு விதிக்கப்பட்ட பண்டங்களைத் தவிர்த்து வேறு பண்டங்களை வாங்க மக்கள் முற்படலாம். ஆகவே, பரவலான கட்டுப்பாடு தேவைப்படுகிறது. இக் கட்டுப்பாடுகளைச் சரிவரச் செயல் படுத்துவதும் கடினம். மேலும், தனியார் தொழில் களில் முதலீடு செய்வதை விடுத்து அரசின் கடன் பத்திரங்களை வாங்கும்படி மக்களைத் திருப்புவதற்கும், பிற நாடுகளுக்கு மூலதனம் பெயர்ந்து செல்லாமல் தடுப்பதற்கும், மூலதன (பங்கு) வெளியீடு களையும் அரசு கட்டுப்படுத்தவேண்டும். இக் காரணம்பற்றியே போர்க் காலத்தில் பல அரசுகளும் மூலதன வெளியீடுகளின்மீது கட்டுப்பாடுகளை விதித்தன.

### வரியும் கடனும்

வரிகளை விதிப்பதன் நோக்கமும், கடன்களைத் திரட்டுவதன் நோக்கமும் ஒன்றேயாகும். அதாவது போதிய நிதியைத் திரட்டுவதாகும். இந்த இரண்டு முறைகளினாலும் மக்களின் வாங்கும் ஆற்றல் குறைகிறது என்பதும் உண்மையே. ஆயினும், இரண்டுக்கும் இடையே முக்கியமான வேறுபாடுகள் உள்ளன. முதலாவதாக வரியைக் கட்டாயமாகச் செலுத்தவேண்டிருப்பதால் இம் முறையை மக்கள் அத்துணை விரும்புவதில்லை. ஆனால், கடன் களுக்கு வட்டி கிடைப்பதுடன், கடன் பத்திரங்களை வாங்க வேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. மேலும், வரிகள் மூலமாகக் கிடைக்கும் தொகையைக் கொண்டே ஒரு அரசு போரை நடத்த வேண்டுமென்றால், வரி வீதங்கள் மிகவும் அதிகமாக இருக்க வேண்டும். இதனால், மக்களின் நுகர்வும், வாழ்க்கைத் தரமும் குறைவதுடன், உற்பத்தியும் பாதிக்கப்படும். உற்பத்தி குறைந்தால் போர் முயற்சிகளுக்குக் குந்தகம் நேரும். ஆகவே,

வரிகளை விதிப்பதுடன் ஒரு அரசு கடன்களையும் திரட்டியே ஆக வேண்டும். தாங்கள் மிச்சம் பிடிக்கும் தொகைகளிலிருந்தே மக்கள் பெரும்பாலும் கடன் பத்திரங்களை வாங்குவதால், வரிகளைப் போன்று கடன்கள் உற்பத்தியை அத் துணை பாதிப்பதில்லை. இரண்டாவதாக, அரசு விதித்த தொகைகளைத்தான் மக்கள் வரிகளாகச் செலுத்துகின்றனர்கள். எத்துணைச் செல்வந்தர்களாக இருந்தாலும் யாரும் அரசு விதித்த தொகைகளுக்கும் அதிகமாக வரி செலுத்துவதில்லை. ஆனால், அரசு கடன் வாங்கும்பொழுது யார் யாரருக்கு எவ்வளவு முடியுமோ அவ்வளவு தொகையையும் கடனாக அளிக்கின்றனர்கள்.

வரிப் பளு முழுதும் இந்தத் தலைமுறையினர்மீது விழுகிறது என்றும், கடனில் ஒரு பகுதியேனும் எதிர்காலத் தலைமுறையினர் மீது விழுகிறதென்றும் சிலர் கூறுகின்றனர்கள். இவ் வாதம் வெளி நாட்டுக் கடன்களைப்பற்றிய அளவில் சரியேயாயினும், உள் நாட்டுக் கடன்களுக்குப் பொருந்தாது. ஏனெனில், போரினால் நுகர்வுப் பண்டங்களின் தட்டுப்பாடும், விலைகள் ஏற்றமும் ஏற் படுகிறது. போரினால் உயிர்ச் சேதமும், பொட்சேதமும் ஏற் படுகிறது. இவற்றினால் அவதிப்படுவோர் இந்தத் தலைமுறை யினரேயன்றி எதிர்காலத் தலைமுறையினர் அன்று, மேலும், எதிர்காலத்திலும் வரிப் பளுவை மக்கள் சுமக்கவேண்டியிருக்கும். எவ்வாறெனில் கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்களுக்குக் கடனைத் திருப்பித் தருவதற்கும் வட்டியைத் தருவதற்கும் அரசு புதிதாக வரிகளை விதிக்கவேண்டும் அல்லது இப்பொழுது விதிக்கப்படும் வரிகளின் வீதங்களை அதிகரிக்கவேண்டும். ஆகவே, கடன்கள்மூலம் நிதி திரட்டுவதால் இத் தலை முறையினரின் வரிப் பளு குறைகிறது. ஆனால், அதற்குப் பதிலாக எதிர்காலத் தலைமுறையினரின் வரிப் பளு அதிகரிக்கிறது.

கடன் வாங்குவதால் பயனில் சுமைக் (dead-weight) கடன் அதிகரிக்கிறது. இதனால் பல ஆண்டுகள் தொடர்ந்து மக்கள் அதிகமான வரிப் பளுவைச் சுமக்க வேண்டியிருக்கிறது. மேலும், இன்னொரு வகையிலும் கடன்கள் விரும்பத்தகாததாக உள்ளது. கடன் பத்திரங்களின் பெரும்பகுதியையும் செல்வந்தர்களே வாங்குகின்றனர்கள். ஆனால், அரசு இக் கடனைத் திருப்பியளிப்பதற்கு வரி வீதங்களை அதிகரிக்கும்பொழுதும் சரி, புதிதாக வரிகளை விதிக்கும்பொழுதும் சரி, வரிப் பளுவின் பெரும்பகுதியும் ஏழை மக்களின்மீதே விழுகிறது என்பது தெளிவு. அங்ஙனம் இன்றி, ஒருவர் கடன் பத்திரத்தை வாங்குவதற்கு எவ்வளவு செல வழித்தாரோ, அத் தொகையையும், வட்டித்தொகையையும்,

அவரோ அவர் எச்சத்தாரோ வரியாகச் செலுத்தக்கூடும் என்றெண்ணுவது பேதைமையாகும். ஏனெனில், நிலைமை இவ்வாறிருந்தால், யாரும் அரசின் கடன் பத்திரத்தை வாங்க முன்வரமாட்டார். தான் பின்னால் செலுத்தப்போகும் வரியைக் காட்டிலும், அரசுக்குக் கடன் அளிப்பதால் தனக்குக் கிடைக்கும் ஆதாயம் அதிகமாகயிருக்கும் என்றெண்ணுவதனாலேயே அரசின் கடன் பத்திரங்களை மக்கள் வாங்குகிறார்கள். அங்ஙனமின்றேல் கடன் பத்திரத்தை வாங்கிய ஒவ்வொருவரின்மீதும் வரியை விதித்து, இவ் வரியை அரசுக்குச் செலுத்தாமல் தனக்குத்தானே செலுத்திக் கொள்ளும்படி அரசு ஆணை பிறப்பிக்கலாம். இவ் வரித் தொகை, அவர் அரசுக்கு அளித்த கடன் தொகையுடன் அதற்கான வட்டியையும் சேர்த்தால் எவ்வளவோ, அதற்குச் சமமாக இருக்கும். இதுகாறும் கூறியதிலிருந்து, கடனைத் திருப்பித் தருவதற்கு அரசு புதிதாக வரிகளை விதித்தல் அல்லது இப்பொழுதிருக்கும் வரி வீதங்களை அதிகரித்தல் ஆகியவற்றால். ஏற்படும் பளுவில் ஒரு பகுதியேனும், அரசின் கடன் பத்திரங்களை வாங்காதவர்மீது விழுகிறது என்று தெரிகிறது. கடன் பத்திரங்களை வாங்காதவரில் பெரும்பாலோரும் ஏழைகளே என்பதும் தெளிவு. மேலும், கடனால் பணவீக்கமும் ஏற்படலாம். மையப் பேங்கு அல்லது வணிகப் பேங்குகளிடமிருந்து அரசு கடன் வாங்கினால் விலைகள் அதிகரிக்கும். இதைப்பற்றி அடுத்த பிரிவில் நாம் ஆய்கிறோம். ஆனால், வரிகளை விதிப்பதனால் பணவீக்கம் ஏற்படுவதில்லை. (மறைமுக வரிகளை விதிப்பதனால் சில வேளைகளில் பணவீக்கம் ஏற்படுவதுமுண்டு. இது ஆக்கச் செலவு உந்தும் பணவீக்கம் (cost-push inflation) எனப்படும்.

## துண்டு நிதியமும் போர்ச் செலவும்

போர்க் காலத்தில் அனைத்து நிதிய வளங்களையும் அரசு திரட்டவேண்டும். வரிகளின் வாயிலாகவும், கடன்களின் வாயிலாகவும் கிடைக்கும் நிதி போர்ச் செலவுகளுக்குப் போதாது. ஆகவே, அரசு துண்டு நிதியத்தின்மூலமும் நிதிகளைத் திரட்டுகிறது. இதன் விளைவாக விலைகள் ஏறுவதால், மக்கள் நுகரும் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் அளவு குறையும்; குறையவே இவற்றைப் போருக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். போருக்கு வேண்டிய பண்டங்களையும், பணிகளையும், தளவாடங்களையும் வாங்குவதற்குப் புதிதாக வாங்கும் ஆற்றல் படைக்கப்படுவதனாலும், நுகர்வுப் பண்டங்களின் உற்பத்தியைப் பெருக்கி நாட்டின் உற்பத்தி ஆற்றலைப் பெருக்குவதற்குப் பதிலாகப், போருக்கு வேண்டிய பண்டங்கள், பணிகள், தளவாடங்கள்

ஆகியவற்றின் உற்பத்தியைப் பெருக்க இவ்வாங்கும் ஆற்றல் பயன்படுத்தப்படுவதனாலும், விலைகள் ஏறுகின்றன. அதாவது, பண்டங்களின் உற்பத்தி மட்டுப்படுத்தப்படுகிறது; ஆனால், அதே வேளையில் பணத்தின் உற்பத்தி பெருக்கப்படுகிறது. இவ்வாருகப் போர்க் காலத்தில் பணவீக்கம் ஏற்படுவது இயல்பேயாகும்.

இக் காலத்தில் போர்ச் செலவுகள் மிகவும் அதிகரித்துள்ளதால், வரிகள் விதித்தும், கடன் வாங்கியும் மட்டும் இத் தொகையைச் சரிகட்ட முடியாது. எடுத்துக்காட்டாக, 1971ஆம் ஆண்டு இறுதியில் வங்காளதேச விடுதலைக்காக இந்தியா பாகிஸ்தானுடன் போரிட்டது. இப் போரினால் இந்திய அரசின் பாதுகாப்புச் செலவு உரூபா 170 கோடி (உரூபா 1241-ல் இருந்து உரூபா 1411 ஆக) அதிகரித்தது. மேலும், கிழக்கு வங்காளத்திலிருந்து வந்த அகதிகளுக்காக உரூபா 2350[1] கோடி செலவிட்டது. இத் தொகைகளை வரிகள்மூலமும், கடன் மூலமும் பெற்றிருக்க முடியாது. அதுவுமின்றி வரிகளின்மூலமும், கடன்களின்மூலமும் பணம் பெறுவதற்குச் சிறிது காலம் பிடிக்கும். ஆனால், அரசுக்கோ உடனடியாகச் செலவழிப்பதற்குப் பணம் வேண்டும். ஆகவே, அரசு துண்டு நிதியத்தின்மூலம் பணத்தைத் திரட்டவேண்டியிருக்கிறது.

பேங்குகளிலிருந்து அரசு நேரிடையாகக் கடன் வாங்காவிட்டாலும், ஓரளவு புதிதாகப் பணம் படைக்கப்படுகிறது. அரசின் கடன் பத்திரங்களைத் தனியார் வாங்குவதற்குப் பேங்குகள் கடன் அளிக்கலாம். நெருக்கடியான காலங்களில் பேங்குகள் இங்ஙனம் செய்வது சரியே. மேலும், இக் கடன் பத்திரங்களை ஈடாக வைத்தும் தனியார் பேங்குகளிடமிருந்து கடன் பெறமுடியும். ஆயினும், மையப் பேங்கினிடமிருந்து அரசு கடன் வாங்கும் பொழுதே பணம் பெருமளவில் படைக்கப்படுகிறது.

மையப் பேங்கினிடமிருந்து அரசு கடன் வாங்குவதால், வணிகப் பேங்குகளின் ரொக்க இருப்பு அதிகரிக்கிறது. வணிகப் பேங்குகள் மேலும், பணத்தைப் படைப்பதற்கு இந்த ரொக்க இருப்புக்கள் அடித்தளமாக இருக்கின்றன. புதிதாகக் காகிதப் பணத்தை வெளியிடுவதன் வாயிலாகவோ அல்லது அரசுக்காக ஒரு நிலுவையைப் படைத்து அதை அரசு எடுத்துக்கொள்ள வழி வகுப்பதன் வாயிலாகவோ மையப் பேங்கு அரசுக்குக் கடன் அளிக்கிறது. மையப் பேங்கினால் புதிதாக வெளியிடப்பட்ட

[1] ஆதாரம். Inaugural address of the Second Annual Conference of the Communist Party of Bangladesh by Sheikh Mujibur Rahman on 4—12—1973.

காகிதப் பணத்தைப் பண்டங்களையும், பணிகளையும் வாங்குவதற்கு அரசு பயன்படுத்துகிறது. அப்படிப் பயன்படுத்தும்பொழுது, அதில் ஒரு பகுதி வணிகப் பேங்குகளுக்கு டிபாசிட்டுக்களாகப் போய்ச் சேருகிறது. இவ்வாறு வணிகப் பேங்குகளின் ரொக்க இருப்புக்கள் அதிகரிக்கின்றன. இவ்வாறின்றி மையப் பேங்கின் மீது காசோலைகளை எழுதி அரசு தன்னுடைய கடன்காரர்களுக்குக் கொடுக்கலாம். இந்தக் காசோலைகளை பெற்ற தனியார்கள் இவற்றைத் தங்கள் தங்கள் பேங்குகளில் கொடுக்கிறார்கள். இதன் விளைவாக மையப் பேங்கினிடத்தில் வணிகப் பேங்குகள் வைத்திருக்கும் வைப்புக்கள் அதிகரிக்கிறது. எங்ஙனமாயினும், வணிகப் பேங்குகள் மேலும் பணத்தைப் படைப்பதற்கு இஃது ஒரு பரந்த அடித்தளமாக அமைகிறது. (பேங்கு டிபாசிட்டுக்களும் பணமாகவே கொள்ளப்படும்). அரசு வெளியிடும் கடன் பத்திரங்களில் முதலீடு செய்வதற்காகவோ, அல்லது மக்கள் கடன் பத்திரங்களை வாங்குவதற்கு உதவியாகவோ, பேங்குகள் வைப்புக்களைப் படைக்கின்றன. (ஒவ்வொரு பேங்கு கடனும் ஒரு வைப்பைப் படைக்கிறது). மையப் பேங்கு அரசுக்கு எவ்வளவு தொகையைக் கடனாக அளித்ததோ, அதைப்போல பல மடங்கு வைப்புக்களை வணிகப் பேங்குகள் படைக்கின்றன.

மையப் பேங்கினிடம் அரசு கடன் வாங்கினால் எவ்வளவு பணம் புதிதாகப் படைக்கப்படுகின்றதோ, அவ்வளவு பணம், வணிகப் பேங்குகளிடம் அரசு கடன் வாங்கும்பொழுது படைக்கப்படுவதில்லை என்று முன்னர்க் கூறினோம். ஆனால், இதற்கு ஒரு புறனடை உண்டு. வணிகப் பேங்குகளிடமிருந்து அரசு எவ்வளவு தொகையைக் கடனாய்ப் பெறுகிறதோ, அதே தொகையை மையப் பேங்கினிடமிருந்து வாணிகப் பேங்குகள் கடனாய்ப் பெறமுடியுமானால், மையப் பேங்கினிடமிருந்து அரசு கடன் வாங்கினால் எவ்வளவு பணம் புதிதாகப் படைக்கப்படுகிறதோ, அவ்வளவு பணத்தை வணிகப் பேங்குகளிடமிருந்து அரசு கடன் வாங்கும்பொழுதும் படைக்கமுடியும்.

இவ்வாறு அரசின் செலவு அதிகரித்ததால், இரண்டாவது உலகப்போர் நடந்து கொண்டிருந்த காலத்தில் ஏறக்குறைய அனைத்து முக்கியமான நாடுகளிலும் பணப் புழக்கம் அதிகரித்தது. 1939ஆம் ஆண்டு ஜூலை திங்களுக்கும், 1944ஆம் ஆண்டு டிசம்பர் திங்களுக்கும் இடையில் பணப் புழக்கம் முறையே 160, 145, 259 சதவீதமும் பேங்கு (நடப்பு) வைப்புக்கள் முறையே 101, 498, 360 சதவீதமும் பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள், இந்தியா ஆகிய நாடுகளில் அதிகரித்தது. இதே காலத்தில்

ஜெர்மனியிலும், ஜப்பானிலும் நோட்டுப் புழக்கம் முறையே 435 சதவீதமும் 576 சதவீதமும் அதிகரித்தது. 1939 ஜுலைக்கும் 1944 மே திங்களுக்கும் இடையில் ஜப்பானில் பேங்கு வைப்புக்கள் 219 சதவீதமும், 1938 டிசம்பருக்கும் 1943 டிசம்பருக்கும் இடையில் ஜெர்மனியில் பேங்கு வைப்புக்கள் 159 சதவீதமும் அதிகரித்தது. இதேபோன்று வேறு பல நாடுகளிலும் நோட்டுப் புழக்கமும், பேங்கு வைப்புக்களும் அதிகரித்தன.

அரசின் தேவைகளுக்கு ஏற்ப மையப் பேங்குகள் பண வெளியீட்டை அதிகரிக்கும் பொருட்டு, ரொக்க இருப்புக்கள் சம்பந்தப்பட்ட விதிகள் தளர்த்தப்பட்டன அல்லது தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டன. போர் தொடங்கியபொழுது பிரிட்டனில் நம்பிக்கையைப் பொறுத்த நோட்டு வெளியீடு[1] (fiduciary issue) 300 மில்லியன் பவுண்டு ஸ்டர்லிங்கிலிருந்து 580 மில்லியன் பவுண்டு ஸ்டர்லிங்காக உயர்த்தப்பட்டது. 1944ஆம் ஆண்டு டிசம்பரில் இத் தொகை 1250 மில்லியனாக உயர்த்தப்பட்டது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 1942 பிப்ரவரியில் பெடரல் ரிசர்வ் பேங்குகள் வைத்திருந்த ரொக்க இருப்பு 91 சதவீதமாகும். 1945 பிப்ரவரியில் இச் சதவீதம் 48·6 ஆகக் குறைந்தது. 1141-ல் ஜப்பானில் நம்பிக்கையைப் பொறுத்த நோட்டு வெளியீட்டுக்கும், நம்பிக்கை ஒழிந்த நோட்டு வெளியீட்டுக்கும் (non-fiduciary issue) இடையில் இருந்த வேறுபாடு அகற்றப்பட்டது. பின்னர் நோட்டு வெளியீட்டுக்கான வரம்பு பல தடவையும் உயர்த்தப்பட்டது. போர்க் காலத்தில் பிரிட்டனும், நேச நாடுகளும் இந்தியாவில் செய்த செலவினால் இந்திய ரிசர்வ் பேங்கு ஸ்டர்லிங் நிலுவைகளைப் பெற்றது. இதை ரொக்க இருப்பாக வைத்துக் கொண்டு இந்திய ரிசர்வ் பேங்கு நோட்டுகளை அச்சடித்து வெளியிட்டது. போர் தொடங்குவதற்கு முன்பே இந்தியாவிலும், ஜெர்மனியிலும் ரொக்க இருப்புக்கள்பற்றிய விதிகள் அகற்றப்பட்டன. இன்னும் பல ஐரோப்பிய நாடுகளில் இவ் விதிகள் போர்க் காலத்தில் தற்காலிகமாக (அமல் செய்யப்படாமல்) நிறுத்திவைக்கப்பட்டன.

இப் பணப்படைப்பினால் அரசுக்கு வேண்டிய நிதியம் கிடைக்கிறது. இப் பணத்தைக் கொண்டு அரசு தனக்கு வேண்டிய பண்டங்களையும், பணிகளையும் வாங்கிக் கொள்வதால், பொது மக்களுக்கு வேண்டிய பண்டங்கள் கிடைப்பதில்லை. அதாவது அவர்களுக்குப் பண்டங்கள் குறைவாகவே கிடைக்கின்றன; ஆனால், மக்களின் வாங்கும் ஆற்றல் குறைந்து படுவதில்லை.

[1] இவ்வித நோட்டு வெளியீட்டில் நோட்டு வெளியீட்டுக்கு ஈடாகப் பொன்னிருப்புக்குப் பதிலாக அரசின் கடன் பத்திரங்கள்தான் இருக்கும்.

ஆனல், அரசு வரிகளை விதித்தாலும் சரி, கடன்களை வாங்கினாலும் சரி, மக்களின் வாங்கும் ஆற்றல் குறைகிறது. இவ்வாருகப் புதிதாகப் பணத்தைப் படைப்பதனுல் பணவீக்கம் ஏற்படுகிறது. ஆகவே, பணப்படைப்பை மறைமுக வரிக்கு ஒப்பிடலாம். ஆனல், வரிகளினல் பொருளாதாரத்தின்மீது ஏற்படும் விளைவுகள் பணப் படைப்பினல் பொருளாதாரத்தின்மீது ஏற்படும் விளைவுகளிலிருந்து வேறுபட்டனவாகும். பணப்படைப்பினல் மெய்யான வருமானத்தின் மறு பகிர்வில் மாறுதல்கள் ஏற்படுகின்றன. ஆகவே, பணப்படைப்பினல் பல்வேறுபட்ட வருக்கங்களின்மீது விழும் நிலைப்பாடு ஒரே மாதிரியாக இருப்பதில்லை. இப் பளுவில் பெரும் பகுதி நிலையான வருமானம் உடையவர்கள்மீதே ஒறுக்கிறது. இதனல் வறியவர்கள் (தொழிலாளர்கள்) மிகவும் அவதிப்படுகிருர்கள். மேலும், இம் மறைமுக வரியின் விளைவுகள் தேய்வுவீதமாக இருக்கின்றன. இதனல் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. தொழிலாளர் தகராறுகளும் மக்களின் அதிருப்தியும் உற்பத்திப் பெருக்கத்திற்கு முட்டுக்கட்டைகளாம். அரசின் பளுவும் குறைவாக இல்லை. ஏனெனில், அரசு மையப் பேங்குக்கும், வணிகப் பேங்குகளுக்கும் வட்டி கட்டவேண்டும். பொதுமக்களிடமிருந்து கடன் வாங்கினல், வட்டியைக் கட்டுவதற்கும், அசலைத் திருப்பி அளிப்பதற்கும் அரசு பிற்பாடு வரிகளை உயர்த்தவேண்டும் அல்லது புதிய வரிகளை விதிக்கவேண்டும். இதேபோன்று மைய பேங்கு அல்லது வணிகப் பேங்குகளிடமிருந்து கடன் வாங்கியிருந்தாலும், அரசு வரி விதித்துத்தான் ஆகவேண்டும். ஆகவே, போர்ச் செலவுகளுக்கு இந்த முறையைப் (புதிதாகப் பணம் படைக்கும்) பின்பற்றுவது அத்துணை விரும்பத்தக்கதல்ல. ஆனல், டாக்டர் டால்டன் கூறுவது போன்றே அரசே நேரடியாகக் காகிதப் பணத்தை அச்சடித்தால் (மையப் பேங்கு நோட்டுகளை அச்சடிக்காமல்), மையப் பேங்குக்கு அரசு வட்டி செலுத்தவேண்டியிருக்காது. மேலும், பாமர மக்களையும் குழப்பத்தில் ஆழ்த்தாது.[1]

ஆயினும், ஒரு வரம்புக்கு உட்பட்டுப் பணத்தைப் படைப்பதைச் சரியென்று நிலைநாட்டலாம். இவ் வழியின்மூலம் அரசுக்கு வேண்டியபொழுது வேண்டியஅளவு பணத்தைத் திரட்ட முடியும். வரிகளை விதித்தால் மக்களுக்கு அரசின்மீது எரிச்சல் ஏற்படலாம். அதுவுமின்றி எவ்வளவு பணம் வேண்டுமோ அவ்வளவையும் வரிகளின் வாயிலாகத் திரட்டவும் முடியாது. உற்பத்தியையும் பாதிக்கும். கடன்கள் வாயிலாக நிதி திரட்டு

[1] Hugh Dalton, 'Principles of Public Finance', Eleventh Impression, 1941, George Routledge & Sons, Ltd., p. 184—185.

வதிலும் சங்கடம் இருக்கிறது. ஏனெனில், அரசுக்கு வேண்டிய பணம் அனைத்தையும் கடன்மூலமாகப் பெறமுடியாது. அரசின் கடன் பத்திரங்களை மக்கள் வாங்கினால் அரசுக்குவேண்டிய கடன் தொகை கிடைக்கும். மேலும், பெருந்தொகைகளை அரசு கடன் வாங்கினால், மூலதன அங்காடியில் உள்ள மூலதனம் குறையும். இதனால் உற்பத்தி பாதிக்கப்படும். ஆனால், பண சப்ளை அதிகரித்தால் உற்பத்தியை அதிகரிப்பதற்கான ஒரு உந்து கோலாக இருக்கிறது. பணப் படைப்பினால் நேரும் தீய விளைவுகளை விலைக் கட்டுப்பாட்டின்மூலமும், பங்கீட்டின்மூலமும் ஒரு வரம்புக்குள் வைத்திருக்க முடியும். மக்கள் நுகர்வுப் பண்டங்களின்மீது செலவழிப்பது குறைவதால், பணச்சேமிப்பு அதிகரிக்கிறது. இதைக்கொண்டு பின்னர் அரசின் கடன் பத்திரங்களை வாங்கலாம்.

### பொன்னிருப்பும், பிற நாட்டுச் செலாவணிகளின் இருப்பும்

போரில் ஈடுபடும் நாடுகள் உற்பத்தியைப் பெருக்கியும், நுகர்வைக் குறைத்தும் தங்களுக்கு வேண்டிய வளங்களைத் திரட்டிக் கொள்கின்றன. சில வளங்களைப் பிற நாடுகளிலிருந்து பெறுவதும் உண்டு. பிற நாடுகளிலிருந்து கடன் பெறலாம். ஆனால், இதற்கான வாய்ப்பு மிகக் குறைவு. *1941*-க்கும் *1944*-க்கும் இடைப்பட்ட மூன்று ஆண்டுகளில் அமெரிக்க ஐக்கிய நாடுகள் *33,383* மில்லியன் டாலர் பெறுமானமுள்ள உதவியை நேச நாடுகளுக்குச் செய்தது.[1] இதில் ஒரு கணிசமான பகுதி (*11,332* மில்லியன் டாலர்) பிரிட்டனுக்குக் கிடைத்தது. நேச நாடுகளிலிருந்து அமெரிக்காவுக்கும் ஓரளவு உதவி கிடைத்தது. கடல் கடந்த நாடுகளில் (முக்கியமாகப் பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளில்) தங்கியிருந்த அமெரிக்கப் படைகளுக்கு, பிரிட்டிஷ் காமன்வெல்த், *4,666* மில்லியன் டாலர் பெறுமானமுள்ள உதவியை அளித்தது. பிற நேச நாடுகளுக்கும் பிரிட்டன் இவ் வகை உதவியைச் செய்தது.

இங்ஙனம் பிற நாடுகளிலிருந்து உதவி பெறமுடியாத இடத்தும், பிற நாடுகளுக்கு ஏற்றுமதிகளை அதிகரித்துத் தனக்கு வேண்டிய இறக்குமதிகளைப் பெறமுடியாத இடத்தும், ஒரு நாடு தன்னுடைய பொன்னிருப்புக்களையும், பிற நாட்டுச் செலாவணி களின் இருப்புக்களையும் கரைத்துத் தனக்கு வேண்டிய இறக்கு மதிகளைப் பெற்றுக் கொள்ளலாம். இவ்வாறு *1941*ஆம் ஆண்டு தொடக்கத்திலேயே பிரிட்டன் தன்னிடமிருந்த பொன்னிருப்

[1] இது Land-Lease Aid என்று பெயர் பெறும்.

புகள் அனைத்தையும் கரைத்துவிட்டது. 1941ஆம் ஆண்டு நவம்பரில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பொன்னிருப்புகள் உச்ச நிலையில் இருந்தன. இவ் விருப்புகளின் மதிப்பு 22,800 மில்லியன் டாலராகும். 1944ஆம் ஆண்டு இறுதிக்குள் இவ் விருப்புகள் 20,600 மில்லியன் டாலராகக் குறைந்துவிட்டன. ஜெர்மனி ஆக்கிரமித்துக்கொண்ட சில நாடுகளிலிருந்து பொன்னிருப்புகள் ஜெர்மனி பெயருக்கு மாற்றப்பட்டன. இவை கட்டாயமின்றி (voluntary) அளிக்கப்பட்ட காணிக்கைகள் என்று பெயர் பெற்றன.

பொன்னிருப்புகளும், பிறநாட்டுச் செலாவணி இருப்புகளும் போதாதவிடத்து, ஒரு நாடு, பிற நாடுகளில் தான் போட்டிருக்கும் மூதலீடுகளை விற்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. இவ்வாருகப் பிரிட்டன், போர் தொடங்கியதிலிருந்து 1944ஆம் ஆண்டு ஜூன் திங்களுக்குள் 3,365 மில்லியன் டாலர் பெறுமானமுள்ள மூதலீடுகளைக் கரைத்தது. இவ்விதம் கரைப்பதால் பிற நாடுகளில் போடப்பட்டிருந்த முதலீடு காலியாவதுடன், எதிர்காலத்தில் அம் மூதலீட்டிலிருந்து கிடைக்கக்கூடிய வருவாயும் நின்றுபோகும். இதனால், நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரம் குறையலாம்; சராசரி வருமானமும் குறையலாம். இவ்வாறு பிற நாடுகளிலுள்ள மூதலீடுகள் கரைவதால் எதிர்காலத்தில் மக்கள் பாதிக்கப் படுவார்கள். ஆனால், போர் என்பது ஒரு நாட்டுமக்கள் வாழ்வதா, சாவதா என்ற பிரச்சினையைத் தீர்க்கக்கூடிய ஒன்றாக இருப்பதனால், போரில் தோற்றுப்போனாலும் பரவாயில்லை; எதிர்காலத்தில் மக்களின்மீது பளு ஏற்படாமலிருந்தால் போதும் என்று எந்த அரசும் முடிவு செய்யாது.

### கொடைகளும், அன்பளிப்புகளும்

மக்கள் தாமாகவே மனமுவந்து அரசுக்குக் கொடைகள் வழங்கலாம். இது பணமாகத்தான் இருக்க வேண்டுமென்பதில்லை; பண்டங்களாகவும் இருக்கலாம். போர்க்காலத்தில் தின்பண்டங்கள், உடைகள் முதலானவற்றைப் போர்ப்படையினர்க்கு மக்கள் அன்பளிப்பாக வழங்கலாம். 1962-ல் இந்தியாவுக்கும், சீனாவுக்கும் போர் மூண்டபொழுது இந்திய மக்கள் இந்திய அரசுக்குப் பொன்னைக் கொடையாக அளித்தனர். ஆனால், இவ்வாறு வழங்கப்பட்ட பொன்னின் அளவு மிகவும் குறைவு. கோயில்களிலிருந்து வழங்கப்பட்ட பொன்னின் அளவு ஒப்புமையில் அதிகமாகும். நாட்டுப்பற்றினால் உந்தப்பட்டு

மக்கள் இக் கொடைகளேயும், அன்பளிப்புகளேயும் வழங்குவதால், இவற்றின் அளவு மக்களிடம் காணப்படும் நாட்டுப்பற்றின் அளவே இருக்கும்.

ஆயினும், இவ்விதக் காணிக்கைகளின் வாயிலாகப் பெருமளவு நிதியைத் திரட்ட முடியாது. அதுவுமன்றி, இவ் வருவாய்மூலம் தொடர்ந்து கிடைக்கும் என்று திண்ணமாகச் சொல்ல முடியாது. நெடுங்காலம் போர் நடைபெற்ருல் கொடைகள், அன்பளிப்புகள் இவற்றின் மூலம் கிடைக்கும் வருவாயும் குறைந்து கொண்டே வரும். வரிகளின் பளுவும், அரசுக் கடன்களும் அதிகரித்துக் கொண்டே வருவதாலும், விலைகள் ஏறிக்கொண்டே வருவதனுலும், மக்களின் கொடைகள் குறைந்து கொண்டே வருவதில் வியப்பில்லே. மேலும் இக் காணிக்கைகளே வசூலிப்பதில் கட்டாயம் அறவே இல்லேயென்று கூறவும் முடியாது. போர்க்காலத்தில்கூடக் குடியாட்சி நாடுகளில் ஓரளவுக்குமேல் மக்களேக் கொடைகள் அளிக்கும்படி வற்புறுத்தவும் இயலாது. பிரசாரத்தின் வாயிலாக அன்பளிப்புகளே வழங்கும்படி மக்களேத் தூண்டலாம்.

கொடைகள், அன்பளிப்புகள் ஆகியவற்றின் வாயிலாக மிகக் குறைந்த தொகையே அரசுக்குக் கிடைத்தாலும், அதற்காக இவ் வருவாய் மூலத்தை விட்டுவிடவும் இயலாது. ஏனெனில், இவற்ருல் ஏற்படும் உளவியல் விளேவுகள் நல்லவை. நாட்டுக்காக யாவற்றையும் தியாகம் செய்ய வேண்டும் என்ற உணர்வை இக் கொடைகள் மக்கள் உள்ளத்தில் ஊட்டுகின்றன. மேலும், சில செல்வந்தர்கள் யாதொரு வேலேயுமின்றி வெட்டியாகக் காலம் கழிக்கின்ருர்கள். அரசுக்கு யாதொரு செலவுமின்றி இவர்களின் சேவை கிடைக்கிறது.

முடிவுரை

போருக்கு வேண்டிய நிதியம் அனேத்தையும் வரிகளின் மூலமே திரட்ட முடியாது. ஏனெனில், இக் காலத்தில் போருக்கு ஏராளமான பணம் வேண்டப்படுகிறது. ஆனுல், வரிகளின் மூலமே பணம் திரட்டவேண்டுமென்ருல், ஒரு நல்ல விளேவு ஏற்படும். போர்கள் மூளா; அங்ஙனம் மூண்டாலும் விரை விலேயே ஓய்ந்து போகும். கடன்களினுல் ஏற்படும் பளு எதிர் காலத் தலேமுறையினர்மீது விழுகிறது என்ற கூற்று முற்றும் உண்மையில்லே என்பதையும் நாம் முன்னர்க் கண்டோம். அங்ஙனம் வரிப் பளுவில் ஒரு பகுதி எதிர்கால எச்சத்தாரின்மீது விழுந்தால்தான் என்ன ? போர் இந்தத் தலேமுறையினரையும் பாதிக்கிறது; எதிர்காலத் தலேமுறையினரையும் பாதிக்கிறது;

அதுவுமன்றி, போர் போன்ற நெருக்கடியான காலத்தில் உடனடியாகப் பணத்தைத் திரட்டவேண்டும். இதற்குக் கடன்தான் சிறந்த முறை. வரிகள்மூலம் நிதி திரட்டுவதற்குச் சிறிது காலம் பிடிக்கும். ஆகவே, இயன்றவரை வரி விதியுங்கள்; மேலும் தொகை வேண்டியிருந்தால் கடன் வாங்குங்கள் என்று நாம் முடிவாகக் கூறுகிறோம்.

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Pigou, 'Political Economy of War,' Chapters 4, 5 and 7 to 10.

2. League of Nations, 'World Economy Survey,' 1942/44, Chapter 4.

3. Plehn, 'Public Finance,' Part IV, Chapter 3.

4. The American Economic Association, 'Readings in Fiscal Policy', George Allen and Unwin Ltd., 1955, Part III, 'Fiscal Policy and Inflation', Chapters 7 to 12, pp. 107—182.

# 41. துண்டு நிதியம்

## (Deficit Financing)

*1929*ஆம் ஆண்டு வாக்கில் ஏற்பட்ட பெரிய வாணிப மந்தத்திற்குப் பின்பே துண்டு நிதியம்[1] என்ற கருத்துப்படிமம் வழக்குக்கு வந்தது. சமுதாயம் செலவழிக்கும் மொத்தத் தொகை குறையாதிருப்பதற்குத் துண்டு நிதியத்தை அரசு மேற்கொள்ள வேண்டியிருந்தது. அரசின் நிதிய வளர்ச்சியில் இக் கருத்துப் படிமம் ஒரு முக்கிய மைல் கல்லாகும். வழக்காற்றில் ஊறிப் போனவர்கள் மூளியில் நிதியத்தை (sound finance) விரும்பினார்கள். இதன் குறிக்கோளாவது பட்ஜெட்டின் வரவும் செலவும் சரியாக இருக்கவேண்டும் என்பதே. மக்களின் பொது நலனைப் பேணுவதும், சிறப்பாகப் பணவீக்கத்தையும், பணவாட்டத் தையும் தடுத்து நிறுத்துவதும் இக் காலத்தில் சிறந்த குறிக் கோள்களாகக் கொள்ளப்படுகிறது. இதைச் செயல் நிதியம் (functional finance) என்று கூறலாம். செயல் நிதியத்திற்கு முன் நிற்கமாட்டாது மூளியில் நிதியம் வீழ்ந்தது. அண்மைய ஆண்டுகளில் பின்தங்கிய நாடுகள் பொருளாதார முன்னேற்றம் அடைவதற்கு, துண்டு நிதியம் ஒரு பெருத்த நிதிய மூலமாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது.

பொருள்

துண்டு நிதியம் என்ற சொற்றொடர் பல பொருள்களில் வழங்கப்படுகிறது. மேலை நாடுகளில் இச் சொற்றொடர் 'நடப்பு வருவாய் வரவுகளுக்குமேல் அரசு செய்யும் (மூலதனச் செலவையும் உள்ளிட்ட) செலவைக்' குறிக்கிறது. வரவுக்கும் செலவுக்கும் உள்ள இடைவெளியைக் கடன்கள்மூலம் சரிக்கட்ட லாம். ஆனால், இந்தியாவில் துண்டு நிதியம் என்ற சொற்றொடர்

[1] துண்டு நிதியத்தைப் பற்றாக்குறை நிதியம் என்றும் கூறலாம். ஆனால், முந்திய சொற்றொடரே பிந்திய சொற்றொடரைக் காட்டிலும் சிறந்ததாகத் தோன்றுகிறது.

வேறொரு பொருளில் வழங்குகிறது. இந்தியத் திட்டக் குழுமம் பின்வரும் விளக்கத்தை இதற்குத் தந்தது. 'துண்டு வரவு செலவுத் திட்டங்கள் வாயிலாக மொத்தத் தேசியச் செலவு நேரிடையாக அதிகரிப்பதே துண்டு நிதியம் என்று வழங்கப்படுகிறது. இத் துண்டுகள் வருவாய்க் கணக்கிலோ அல்லது மூலதனக் கணக்கிலோ ஏற்பட்டிருக்கலாம். வரிகள், அரசு முனைவுகளின் ஈட்டங்கள், பொதுமக்களிடமிருந்தும் ஏனைய பல்வகை மூலங்களி லிருந்தும் பெற்ற கடன்கள், வைப்புகள், நிதிகள் ஆகியவற்றி லிருந்து பெற்ற வருவாய்க்குமேல் அரசு செலவழிப்பதே இக் கொள்கையின் பிழிவாகும். தான் இதுகாறும் சேர்த்துவைத்திருந்த தொகைகளிலிருந்து எடுத்தோ அல்லது பேங்குகளிடமிருந்து கடன் வாங்கியோ (முக்கியமாக நாட்டின் மைய பேங்கிடமிருந்து கடன் வாங்கிப் பணத்தைப் படைத்தும்) இத் துண்டை அரசு இட்டு நிரப்பலாம் (சரிக்கட்டலாம்).'[1] நடைமுறையில் அரசு மைய பேங்கினிடமிருந்து மட்டுமே, அதாவது ரிசர்வ் பேங்கினிடமிருந்து கடன் வாங்குகிறது. அரசு தன்னுடைய கடன் பத்திரங்களை ரிசர்வ் பேங்குக்கு மாற்றுகிறது. இக் கடன் பத்திரங்களின் ஈட்டின் பேரில் ரிசர்வ் பேங்கு புதிய பணத்தை வெளியிடுகிறது. அரசின் சார்பாக மேன்மேலும் செலவழிக்கப்படும்பொழுது இத் தொகைகள் (புதிய பணம்) செலாவணிக்கு வருகின்றன. இவ்வாறாகத் துண்டு நிதியத்தில் பணப் படைப்பும் பொதிந்திருக்கிறது. தன்னிடமுள்ள ரொக்க இருப்புகளைக் கரைத்து அரசின் செலவை அதிகரிப்பது இரண்டாவது முறையாகும். ஆயினும், முதல் முறையைப் போன்று, இரண்டாம் முறை அத்துணை முக்கியமானதன்று. இருந்தாலும் இரண்டு முறைகளினாலும் அரசின் செலவு அதிகரிக் கிறது. இதிலிருந்து, மேலைநாடுகளில் அரசு வாங்கும் கடன் அனைத்தும் துண்டு நிதியமாகவும், இந்தியாவில் பேங்குகளிட மிருந்து வாங்கும் கடன் மட்டும் துண்டு நிதியமாகவும் கொள்ளப் படுகிறது என்பது புலனாகும். மேலைநாட்டு விளக்கத்தை ஏற்றுக் கொண்டால், இந்தியாவில் துண்டு நிதியம் இப்பொழுது காணப் படுவதைக் காட்டிலும் இன்னும் அதிகமான தொகையாகக் காட்சி யளிக்கும் என்பதும் தெளிவு.

### துண்டு நிதியத்தின் நோக்கங்கள்

பல்வேறுபட்ட நாடுகளிலும் பல்வேறு காலங்களில் துண்டு நிதியம் மூன்று காரணங்களுக்காக மேற்கொள்ளப்பட்டிருக் கின்றன. இவை வருமாறு: (அ) வாணிப மந்தத்தை விரட்டு வதற்காக, தொழில்துறையில் முன்னேறிய நாடுகளில், சிறப்பாக

[1] First Five Year Plan, p. 60

அமெரிக்க ஐக்கிய நாடுகளில், துண்டு நிதியம் மேற்கொள்ளப் பட்டது. (ஆ) போர் நிகழ்த்துவதற்கு அதிகம் நிதியம் தேவைப் படுகிறது. போர்ச் செலவுகளில் ஒரு பகுதி புதிதாகப் படைக்கப் பட்ட பணத்திலிருந்து கிடைக்கிறது. இதன் வாயிலாகப் பண்டங் களையும், பணிகளையும் பிற பயன்களுக்கு உபயோகப்படுத்துவதி லிருந்து போர்ப் பணிக்குத் திருப்ப முடிகிறது. (இ) அண்மைக் காலத்தில் இந்தியா போன்ற வளர்ச்சி குன்றிய நாடுகளில் விரை வான பொருளாதார முன்னேற்றத்தை ஏற்படுத்த, துண்டு நிதி யத்தின் மூலம் நிதி திரட்டப்படுகிறது.

### துண்டு நிதியமும் விலைவாசியும்

துண்டு நிதியத்தினால் சமுதாயம் செலவழிக்கும் தொகை அதிகரிக்கிறது. பேங்குகளில் தூங்கிக் கொண்டிருக்கும் (தனியார் களுக்குச் சொந்தமான) வைப்புகளை இயங்கச் செய்வதனாலும், அரசின் பத்திரங்களைப் பேங்குகள் நேரிடையாக வாங்கி வைப்புகளைப் படைப்பதனாலும், முடக்கி வைத்திருக்கும் ரொக்கத்தை மக்கள் கொடுத்து அதற்குப் பதிலாகக் கடன் பத்திரங்களை வாங்குவதனாலும் சமுதாயத்தின் மொத்தச் செலவு அதிகரிக்கிறது; அதிகரிக்கவே விலைவாசியும் அதிகரிக்கிறது. அரசு மேற்கொள்ளும் துண்டு நிதியத்தினால் மட்டும் பணக் கிடைப்பு அதிகரிக்கவில்லை. புதிதாகப் படைக்கப்பட்ட பணத்தை அடிப்படையாகக் கொண்டு, பேங்குகள் வைப்புகளைப் படைக் கின்றன. இவ்வாறாக, வரவு செலவுத் திட்டத்தில் விழும் துண்டைக் காட்டிலும், அதிகமான அளவு வாங்கும் ஆற்றல் படைக்கப்படுகிறது. இதனால், விலைவாசிகளின் ஏற்றமும், வரவு செலவுத் திட்டத்தில் துண்டாக விழுந்த தொகையைக் காட்டிலும் கூடுதலாகவே இருக்கும்.

### வாணிப மந்த காலத்தில் துண்டு நிதியம்

ஜான் மேநார்டு கீன்ஸ் அவர்களின் சிந்தனையின் தாக்கு தலால் தனியார் புரிசத்தில் ஏற்பட்ட குறைபாட்டை நிரப்பு வதற்கு அரசின் செலவு ஒரு சமன் செய்யும் காரணியாகப் (balancing factor) பயன்பட்டது. திறப்பாடான புரிசம் குறைவது வாணிப மந்தத்தின் ஒரு பண்பாகும். வேலையின்மை அதிகரிப்பதால், இக் குறைபாடு மேலும் தீவிரமாகிறது. இஃது ஒரு நச்சுச் சுழல் போன்றது. புரிசம் குறைவதால் வேலையின்மை அதிகரிக்கிறது; வேலையின்மை அதிகரிப்பதால் மேலும் புரிசம் குறைகிறது. அரசின் செலவின்மூலம் புரிசத்திலுள்ள இக் குறைபாட்டை நீக்கி, இந் நச்சுச் சுழலைத் தகர்த்தெறிய முடியும்.

இதனுல், சங்கிலித் தொடர் போன்று புரிசமும், வேலைவாய்ப்பும் அடுத்தடுத்து அதிகரிக்கலாம். இதனுல், உற்பத்தியும் பெருகும். இவ்வாருகத் தேசிய வருமானம், மொத்தப் புரிசம், வேலைவாய்ப்பு இவை மூன்றும் உச்ச மட்டத்தில் இருப்பதற்கு அரசின் செலவு ஒரு சமன் செய்யும் காரணியாகப் பணியாற்றுகிறது. இவ்வகைத் துண்டு நிதியத்தினுல் பணவீக்கம் ஏற்படுவதில்லை. ஏனெனில், வேலைவாய்ப்புக் குறைந்ததும், பொருளாதாரச் சுணக்கம் ஏற்பட்டதும் ஒரு தாற்காலிகமான நிகழ்ச்சியே ஆகும். உற்பத்தி குறைந்தாலும், நாட்டின் உற்பத்தி ஆற்றலுக்கு ஊறு நேரவில்லை. ஆகவே, துண்டு நிதியத்தின் வாயிலாகப் பொருளாதாரத்தில் அதிகமான வாங்கும் ஆற்றல் செலுத்தப்படும் பொழுது, பண்டங்கள், பணிகள் இவற்றுக்கான புரிசம் அதிகரிக்கிறது; அதிகரிக்கவே வாளா கிடந்த வளங்களும், மூலதனப் பண்டங்களும், ஆள் மாகாணமும் மீண்டும் பயன்படுத்தப் படுகின்றன. இதனுல், உற்பத்தி அதிகரிக்கிறது. இவ்வாறு துண்டு நிதியத்தினுல் மொத்தச் செலவு அதிகரித்தாலும், உற்பத்தி அதிகரிப்பதனுல் பணவீக்கம் ஏற்படுவதில்லை. இங்ஙனமாக, வாணிப மந்த காலங்களில் துண்டு நிதியம் ஓர் ஆற்றல் வாய்ந்த கருவி என்பதோடுகூட, இன்றியமையாத கருவியும் ஆகும்.

# 42. தல நிதியம்

தல சுயாட்சி அமைச்சர்களின் மாநாட்டை 1958ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களில் துவக்கி வைத்துப் பிரதம மந்திரி நேரு உரையாற்றுகையில் 'ஓர் உண்மையான குடியாட்சியின் அடிப்படையாக இருப்பதும், இருக்கவேண்டியதும் தல சுயாட்சியே. மேல் மட்டத்தில் உள்ள குடியாட்சியைப்பற்றி நினைப்பதுதான் நம்முடைய பழக்கமாகிவிட்டது. கீழ்மட்டத்தில் உள்ள குடியாட்சியைப்பற்றி நாம் அதிகம் நினைப்பதில்லை. கீழேயிருந்து வரும் ஓர் அடித்தளத்தின்மீது கட்டப்பட்டாலொழிய, மேல் மட்டத்திலுள்ள குடியாட்சிக்கு வெற்றி கிடைக்காது' என்று குறிப்பிட்டார். தல அரசு ஓர் ஆட்சி முறை மட்டுமன்று; குடியாட்சி வாழ்க்கை முறையில் அஃது ஒரு தலையாய கூறுமாகும். மக்களுக்கு மிக அணித்தாக இருப்பதால், குடியாட்சியின் வெற்றிக்குத் தல அரசுகள் இன்றியமையாதன. ஒரு கூட்டாட்சி முறையில் தல ஆட்சி அரசு அமைப்பில் மூன்றுவது அடுக்காகும். கருதுகோள் அளவில், தல அரசு கூட்டாட்சியின் இன்றிமையாத உறுப்பு அன்று; நடைமுறையில் தல அரசுகளே இல்லாத கூட்டாட்சி இல்லையாயினும், கருதுகோள் அளவில் தல அரசே இல்லாத கூட்டாட்சி இருக்கலாம். அவ்வாறுன ஆட்சியில், மைய அரசும், மாநில அரசுகளும் மட்டுமே இருக்கும். ஃபிரான்ஸ், பிரிட்டன் போன்ற ஒற்றை அலகு (unitary) அரசுகளிலும் தல அரசுகள் உள்ளன.

### தல நிதியமும் தேசிய வரிகளும்

தல நிதியத்திற்கும், தேசிய வரிகளுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது. தேசிய வரிகளைச் செலுத்துபவர்களும், தல வரிகளைச் செலுத்துபவர்களும் வெவ்வேறுனவர்கள் அல்லர். முந்திய வரிகளைச் செலுத்துபவர்களே பிந்திய வரிகளையும் செலுத்துகின்றுர்கள். ஒரே செல்வ மூலங்களிலிருந்துதான் தல வரிகளையும், தேசிய வரிகளையும் செலுத்துகின்றுர்கள்.

தேசிய வரிகளுக்கும், தல வரிகளுக்கும் இடையில் அடிப்படையில் வேறுபாடுகள் இல்லை. ஏனெனில், இரண்டையும் கட்டாயமாகச் செலுத்தவேண்டும். ஆயினும், இரண்டுக்கும் இடையே சில சிறிய வேறுபாடுகள் உள்ளன. அவை வருமாறு: (அ) அளவில் வேறுபாடு உள்ளது. (ஆ) தேசிய வரிகள் ஒரே படித்தன்மையாக இருக்கின்றன. தல வரிகள் வேறுபாடுடையன. (இ) தல வரிகளுக்கு ஒரு பொதுப்படையான தீர்வை அடிப்படை இல்லை. (ஈ) தேசிய வரிகளில் பெரும்பாலும் ஆதாயக் கூற்றுக்கு இடமில்லை; தல வரிகளில் ஆதாயக் கூற்றுக்கு அதிக முக்கியத்துவம் இருக்கிறது. ஆயினும், இந்த வேறுபாட்டை அளவுக்கு மீறி வலியுறுத்தக் கூடாது. ஏனெனில், சில குறிப்பிட்ட தல வரிகளைச் செலுத்துவதற்குப் பதிலாகக் குறிப்பிட்ட ஆதாயங்கள் கிடைப்பதில்லை. எடுத்துக்காட்டாகக் கல்வி செஸ் (cess) செலுத்துவதனால், மகப் பேறில்லாதவருக்கு எந்தவிதமான ஆதாயமும் கிடையாது. (உ) சில தல வரிகள் ஆக்கச் செலவின் அடிப்படையிலும், வேறு சில இலாப அடிப்படையிலும் அறுதியிடப்படுகின்றன. விநியோகிக்கப்படும் தண்ணீரின் அளவைப் பொறுத்து, தண்ணீர்த் தீர்வையை வசூலிக்கலாம். இதேபோன்றுதான், வாயு (gas) மீதும், மின்சாரத்தின்மீதும் தீர்வைகள் விதிக்கப்படுகின்றன. ஆனால், டிராம்வேக்களும் (tramways), ஏனைய முனிசிபல் வசதிகளும் வணிக முறையில் (இலாபத்தைக் குறியாகக்கொண்டு) நடத்தப்படுகின்றன.

### வரலாற்றுப் பின்னணி

சில கற்றறிந்த இந்தியர், பிரிட்டிஷ் அரசுதான் நகராட்சிகளை நிறுவியது என்று இன்னமும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இக் கருத்துப் பிழையானதாகும். இருக்குவேதம் 'புர்பதி'யைப் பற்றிக் குறிப்பிடுகிறது. 'புர்பதி' என்றால் நகரத் தலைவன் என்று பொருளாகும். புதையுண்ட நகரங்களான ஹரப்பா, மொஹஞ்சதாரோவிலும் (இப்பொழுது இது பாகிஸ்தானில் உள்ளது), கடல் கொண்ட புகாரிலும் (காவிரிபூம்பட்டினம்), அயோத்தி, பாடலிபுத்திரம், காஞ்சி போன்ற ஏனைய நகரங்களிலும் வளமான நகர வாழ்க்கையும், நகரத் திட்டமிடுதலும் (Town Planning) இருந்ததற்குச் சான்றுகள் இருக்கின்றன. மொஹஞ்சதாரோவிலும், ஹரப்பாவிலும் விசாலமான வீதிகளும், பாதாளச் சாக்கடைகளும், அவற்றை அடிக்கடி துப்புரவு செய்வதற்கு ஆள்கள் செல்லுவதற்கான வழிகளும், நீச்சல் குளங்களும் இருந்தன. இக் குளத்திற்குப் பாய்காலும், வடிகாலும் தனித்தனியே இருந்தன. தானியங்களைச் சேமித்து வைப்பதற்குத் தமிழ்நாட்டில் நகரத் தெருக்கள் அகலமாகவும், நீளமாகவும் இருந்தன என்பதை 'ஆறு கிடந்தன்ன

அகல் நெடுந் தெருவில்' என்று நெடுநல்வாடை சுட்டுகிறது. மெகஸ்தனீஸும் மௌரியர் காலத்தில் நிலவிய நகராட்சி முறையை விவரிக்கிறார். பாடலிபுத்திரத்தின் நகராட்சியில் முப்பது உறுப்பினர்கள் இருந்தார்கள். ஆறு குழுக்கள் இருந்தன. ஒவ்வொரு குழுவிலும் ஐவர் உறுப்பினர். ஒவ்வொரு குழுவும் ஒவ்வோர் அலுவலைக் கவனித்தது. பொதுமக்களின் சுகாதாரத்திற்கு அதிகக் கவனம் செலுத்தப்பட்டது. சுங்க வரிகளிலிருந்தும், பிற வரிகளிலிருந்தும் கிடைத்த தொகைகள் மக்களின் நன்மைக்காகச் செலவழிக்கப்பட்டன. மக்கள் தொகையைக் கணக்கிடுவதற்கு ஓர் அதிகாரி இருந்தார். அயல்நாட்டினருக்கும், யாத்ரீகர்களுக்கும் வசதி செய்து தரப்பட்டது. வழிப்போக்கர்களும், அயல்நாட்டார்களும் தங்குவதற்குத் தனி விடுதிகள் இருந்தன. பஞ்சம், வெள்ளம், தீப் போன்ற விபத்துகளுக்கு எதிரான முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இந்தியாவில் நகர வாழ்க்கை ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே தோன்றியது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ ?

கிராமங்களைப் பொறுத்தமட்டில் பஞ்சாயத்து சபைகள் பழங் காலத்திலிருந்தே இருந்து வந்திருக்கின்றன. கிராமங்களில் பஞ்சாயத்து சபைகளும், பெரிய கிராமங்களில் ஊரார் என்ற சபைகளும், நாடுகளில் நாட்டார் என்ற சபைகளும் இருந்தன. முதற் பராந்தகச் சோழன் காலத்திய உத்தரமேரூர்க் கல்வெட்டிலிருந்து பல செய்திகள் அறியப்படுகின்றன. பஞ்சாயத்து சபை பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பிரிவுக்கும் வாரியம் என்று பெயர். உறுப்பினர்கள் குடவோலை வாயிலாக ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இந்து அரசர்களுக்குப் பின் ஆட்சிக்கு வந்த மகம்மதிய அரசர்கள் காலத்திலும், மொகலாய அரசர்கள் காலத்திலும் இக் கிராமச் சபைகள் தொடர்ந்து பணியாற்றின.

மாகாண நிதியத்திற்கு முற்பட்டது தல நிதியம். கி. பி. 1687-ல் சென்னையில் ஆளுநராக இருந்த எலிகு யேல் (Elihu Yale) என்பவர்தாம் சென்னை மாநகராட்சிக்கு வித்திட்டவர். 1726-ல் பிரிட்டிஷ் மன்னரிடமிருந்து பெற்ற அரச உரிமைப் பத்திரத்தின் (Royal Charter) வாயிலாகச் சென்னை, பம்பாய், கல்கத்தா என்ற மூன்று நகரங்களிலும் மேயர்களின் மன்றங்கள் (Mayor's Courts) நிறுவப்பட்டன. 1773-ல் இயற்றப்பட்ட ரெகுலேட்டிங் சட்டம் (Regulating Act) இவற்றுக்கு வரி விதிக்கும் அதிகாரங்களை அளித்தது. பின்னர் இயற்றப்பட்ட பல சட்டங்களினாலும் மேயர்கள் மன்றங்களின் அதிகாரங்கள் பெருகின. 1865-ல்

இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின் வாயிலாக இம் மூன்று நகரங்களுக்கும் நகராட்சி ஆணையர் நியமிக்கப்பட்டனர். வரிகளை வசூலிக்கும் அதிகாரமும், சுகாதாரப் பாதுகாப்பை (conservancy) நிறைவேற்றும் அதிகாரமும் நகராட்சிகளுக்கு அளிக்கப்பட்டன.

ஏனைய நகரங்களிலும் நகராட்சிகளை நிறுவ முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 1842ஆம் ஆண்டைய சட்டம் ஒன்று, 'பலரும் வரக்கூடிய எந்தப் பொதுவிடத்தைச் சேர்ந்த மக்களையும் பொதுச் சுகாதாரத்திற்காகவும், பொது மக்களின் நன்மைக்காகவும் வழி வகை செய்யும்படி கோரியது.' ஆனால், இதனால் பயனேதும் ஏற்படவில்லை. 1850ஆம் ஆண்டு இயற்றப்பட்ட 26ஆம் சட்டம், நகராட்சிக் குழுக்களை நிறுவுவதற்கான அதிகாரத்தை அளித்தது. இவற்றுக்குத் தெருக்களையும், சாக்கடைகளையும் அல்லது குளங்களையும் அகழ்வதற்கும் அவற்றைப் பழுது பார்ப்பதற்கும், துப்புரவு செய்வதற்கும், விளக்கிடுவதற்கும், கண்காணிப்பதற்கும் தூய்மைக்கேட்டைத் (nuisance) தடுப்பதற்கும் அதிகாரங்கள் வழங்கப்பட்டன. இஃது ஓர் அனுமதி அளிக்கும் (permissive) சட்டம். இச் சட்டத்தை எல்லைப்புற மாகாணங்களும், பம்பாயும் மட்டுமே பயன்படுத்திக் கொண்டன.

இவ்வளவு முயற்சிகள் எடுத்தும், இந்தியாவில் பல நகரங்கள் அசுத்தக் களஞ்சியங்களாகவும், நோய்க் களஞ்சியங்களாகவும் விளங்கின. நகர வாழ்க்கையும் மெத்தனமாக வளர்ந்தது. ஸர் ஸாமுவேல் லேயிங்குக்குத் (Sir Samuel Laing) தல சுயாட்சியில் அதிக நம்பிக்கையிருந்தது. மாகாண அரசுகளின் நிதிய அதிகாரங்களைப் பெருக்கவேண்டும் என்ற அவரது திட்டங்கள் பயனளிக்காமல் போனாலும், நகராட்சிகளின் பணிகளைப் பெருக்க வேண்டும் என்ற அவரது முயற்சிகள் பயனளித்தன. 'எல்லாவற்றுக்கும் கல்கத்தாவையே[1] நம்பியிருக்கும் பழக்கத்தைத் திருத்துவதும், தாங்களே செவ்வனே செய்து கொள்ளக்கூடிய காரியங்களுக்குக்கூட அரசின் கையையே எதிர்பார்த்திருக்க வேண்டாம் என்று மக்களுக்குக் கற்பிப்பதும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது' என்று அவர் கூறினார். 1861-ல் சில சாலைகள் ஜில்லா போர்டுகளுக்கு உரியவை என்றும், அவற்றைத் தல நிதிகளிலிருந்து பராமரிக்க வேண்டும் என்றும் ஒதுக்கப்பட்டன. இதன் விளைவாக, 1866ஆம் ஆண்டில் சென்னை (மாகாண) ஜில்லா சாலை செஸ் சட்டம் (District Road Cess Act) இயற்றப்பட்டது. இதைப் பின்பற்றி மற்றைய மாகாணங்களும் சட்டங்கள் இயற்றின.

[1] அப்பொழுது இந்தியாவின் தலைநகரம் கல்கத்தா.

இந்திய அரசின் வரவு செலவுத் திட்ட மதிப்பீடுகள் தயாரிக்கப்படுவது போன்று, மாகாண அரசுகளும் தங்களுடைய ஆண்டைய தல நிதி மதிப்பீடுகளைத் தயாரிக்க வேண்டுமென்று 1863-ல், மாகாண அரசுகளுக்குக் கட்டளை பிறப்பிக்கப்பட்டது. இந்திய அரசு பல்வேறு சிறிய வருவாய்த் தலைப்புகளையும், மாகாணங்களின் தல நிதிகளுக்கு மாற்றியது.

நகராட்சிகளின் வருவாய் மூலங்கள் மாகாணங்கள்தோறும் வேறுபட்டன. வடமேற்கு எல்லைப்புற மாகாணங்களிலும், பஞ்சாபிலும் ஆக்ட்ராய் (Octroi) அல்லது நுழைவு வரிதான் முக்கியமான வரியாகும். முன்பு இவ் வரியை இந்திய அரசே விதித்தது. இந்தியாவின் ஏனைய பகுதிகளில் நகராட்சிகள் முக்கியமாகக் கல்வி, அறநிலைய நிவந்தங்களிலிருந்தும் (endowments), சாலைகள், படகுகள், கால்வாய்கள் இவற்றின்மீது விதிக்கப்பட்ட சுங்க வரிகளிலிருந்தும், கன்டோன்மென்டு (cantonment), கடை (bazaar) நிதிகளிலிருந்தும், இரவலர் நிதிகளிலிருந்தும் (poor funds) வருவாய்களைப் பெற்றன. நகராட்சிகளுக்கு மாற்றப்பட்ட நிலங்கள், வீடுகள் இவற்றி லிருந்தும் வருவாய் கிடைத்தது.

1864ஆம் ஆண்டு இந்திய அரசு நகராட்சிகளின் அலுவல்கள் பற்றிய ஓர் அறிக்கையை வெளியிட்டது. இவ் வறிக்கை வருமாறு: 'இந் நாட்டு மக்களுக்குத் தங்கள் தல விவகாரங்களைத் தாங்களே நிருவகித்துக் கொள்வதற்கு முற்றும் வல்லமை இருக்கிறது. நகராண்மை (municipal) உணர்ச்சி அவர்களிடம் ஆழப் பதிந் துள்ளது. நாங்கள் வகித்து வரும் பதவியைப் பார்க்கும் பொழுது, இந்த நாட்டின் விவகாரங்களை, எவ்வளவு முடியுமோ அவ்வள வையும், மக்களே செய்து கொள்ளும்படி, எந்தக் கோணத்தி லிருந்து பார்த்தாலும் நம்முடைய கடமையும், கொள்கையும் தூண்ட வேண்டும். இதற்கு வேண்டிய நிதிகளையும் அவர்களே திரட்டிக் கொள்ள வேண்டும். அரசு எந்தெந்தக் காரியங்களைச் செய்யவேண்டுமோ, அவற்றுடன் நாங்கள் நிறுத்திக் கொள்ள வேண்டும். சமுதாய எந்திரத்தின் இயக்கங்கள் அனைத்தையும் பொதுப்படையாக அரசு நெறிப்படுத்துவதுடனும், தன் செல் வாக்கைப் பயன்படுத்துவதுடனும் (influencing) நின்றுவிட வேண்டும்.' அதேவேளையில் நகராட்சியின் செலவுக்கு வேண்டிய நிதிகளுக்கும் வழி வகுக்கப்பட்டது. இதன்பிறகு பம்பாய், சென்னை, வங்காளம் இந்த மாகாணங்களில் முனிஸிபல் சட்டங்கள் இயற்றப்பட்டன. பல நகரங்களிலும் நகராட்சிகள் நிறுவப்பட்டன. இந்தியா எங்கும் நகராட்சி வரிகள் உயர்த்தப்பட்டன. பஞ்சாப்,

வடமேற்கு எல்லைப்புற மாகாணங்கள், மத்திய மாகாணங்கள், பர்மா ஆகிய எல்லா மாகாணங்களிலும், ஏறக்குறைய எல்லா நகரங்களிலும் நகராட்சிகள் அமைக்கப்பட்டன.

*1860*-ல் இருந்து தல சுயாட்சியில் பெருத்த முன்னேற்றம் ஏற்பட்டது. தல வரிகளும், செஸ்களும் (cesses) அதிகரித்தன. சில மாகாணங்களில் திரட்டப்பட்ட வருவாய்களில் ஒரு பகுதி நகராட்சிக் குழுக்களின் மேலாண்மைக்கு விடப்பட்டது. ஆனாலும், எல்லா மாகாணங்களிலும் ஒரேவிதமான முன்னேற்றம் ஏற்படவில்லை.

எந்தெந்தப் பணிகளைத் தல அரசுகளுக்கு விட்டுவிடலாம் என்பதைப்பற்றி ஒருவருக்கும் தெளிவான கருத்தில்லை. மொகலாயர்கள் காலத்திலிருந்து ஊர்க்காவலரின் (police) பராமரிப்புக்குச் செஸ்களை விதிப்பது வழக்கமாக இருந்து வந்தது. *1852*-ல் கூடக் காம்பெலின் (Campbell) கூற்றுப்படி, பல நகரங்களிலும் வசதியான வீடுகள், கடைகள் இவற்றிலிருந்து திங்கள் ஒன்றுக்கு இரண்டணாவிலிருந்து இரண்டு உருபாவரை வசூலித்துத் தலையாரிகளுக்குச் சம்பளம் அளிக்கப்பட்டது. இந்த ஏற்பாட்டில் உள்ள முரண்பாடு (incongruity) விரைவிலேயே சென்னையில் கண்டுபிடிக்கப்பட்டது. அப்பொழுது சென்னைத் தல போர்டுகள் மசோதாவைப்பற்றி நிகழ்ந்த சர்ச்சையில், நிறைவேற்றுக் கவுன்ஸிலின் (Executive Council) உறுப்பினராக இருந்த ஸர் அலெக்ஸாண்டர் ஆர்புத்நாட் (Sir Alexander Arbuthnot) கூறியதாவது, 'உயிரையும், உடைமையையும் பாதுகாப்பதற்கே அரசு இருக்கிறது. இங்கிலாந்திலும், வேறு சில நாடுகளிலும் வேறுபட்ட நடைமுறை இருந்தாலும், ஊர்க்காவலுக்கு ஆகும் செலவில் பெரும்பகுதியைத் தல நிதிகளிலிருந்து செலவழிப்பது கோட்பாட்டளவில் தவறானது மட்டுமன்றி, தருக்கத்திற்கும் முரணானது; சரியென நிலைநாட்ட முடியாதது என்று என்னால் எண்ணாமல் இருக்க முடியவில்லை.' இதன் விளைவாக, *1871*ஆம் ஆண்டு இயற்றப்பட்ட தல போர்டுகளின் சட்டத்தில் ஊர்க்காவலுக்காக நகராட்சிகள் செய்யும் செலவு இடம் பெறவில்லை. இதைப் போன்றே, தலத்தைத் திட்டவட்டமாகச் சேர்ந்திராத வேறு பல பணிகளுக்கும் தல நிதிகளிலிருந்தே செலவு செய்யப்பட்டன. சென்னை மாகாணத்தில், ஆசிரியர்கள், மருத்துவர்கள் இவர்களின் பயிற்சிக்கும், மருந்தகங்களின் பராமரிப்புக்கும், நீதி மன்றங்களைக் கட்டுவதற்கும் தல நிதிகளிலிருந்தே செலவழிக்கப்பட்டது. *1870*ஆம் ஆண்டுக்குப் பின்பு, பல்வேறுபட்ட மாகாணங்களும், தல சுயாட்சியின் வளர்ச்சிக்குத் தனித்தனியே சட்டம் இயற்றின.

*1874*-ல் இருந்து *1885*-க்குள் தல சுயாட்சியில் பெரிதும் முன்னேற்றம் ஏற்பட்டது. இந்தியா முற்றும் தலக் குழுக்கள் அமைக்கப்பட்டன. இவை செஸ்களிலிருந்து பெரும்பகுதி நிதி களைப் பெற்றன. இந் நிதி கல்விக்கும், சிறு பொதுப்பணி வேலை களுக்கும் செலவாயிற்று. சென்னை, பம்பாய் போன்ற மாகாணங் களில் ஏற்கெனவேயே தலக் குழுக்கள் இருந்தன. இவை மிகவும் முன்னேறின. நகராட்சிகளின் எண்ணிக்கையும், அவற்றின் பயனும் அதிகரித்தன. பல மாகாணங்களிலும் தேர்ந்தெடுக்கப் பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கை அதிகமாயிற்று. ஆயினும், மாவட்ட அலுவலர்கள் தல சபைகளை ஆதரவுடன் நோக்கவில்லை. ரிப்பன் பிரபு கிளாட்ஸ்டனுக்கு எழுதியதுபோன்று, 'நேரிடையான உத்தியோகப்பூர்வமான தலையீட்டினுல் தல சபைகள் கிட்டத் தட்ட முழுதும் நசுக்கப்பட்டன; புறக்கணிக்கப்பட்டன.' ஆனுல், ரிப்பன் பிரபு அரசரின் பிரதிநிதியாக வந்தபிறகு நிலைமை மாறியது. அவரை 'இந்தியத் தல சுயாட்சியின் தந்தை' [1] என்கின்றனர். தல சுயாட்சியின் வாயிலாகக் குடியாட்சி முறைகளில் சிறந்த பயிற்சி கொடுக்க முடியும் என்று ரிப்பன் நம்பினுர். நிதிய நெருக்கடியைச் சமாளிப்பதற்குத் தல சுயாட்சி நிறுவனங்கள் ஒரு வாயிலாகும் என்று லாரன்ஸும், மேயோவும் எண்ணினர். ஆனுல், ரிப்பன் தல சுயாட்சியை மக்களுக்கு அரசியலில் பயிற்சி கொடுக்கும் ஒரு வாயிலெனக் கொண்டார். ஓரளவு திறமை குறைந்தாலும் பரவாயில்லை ; மக்களுக்குச் சுயாட்சியைக் கற்றுக் கொடுத்தால் தலத்தைக் காட்டிலும் பரந்ததும், உயர்ந்ததுமான துறைகளிலும் ஆட்சி செய்ய வல்லவராவார்கள் என்று அவர் நம்பினுர். அதனுல் தான், தல சபைகளில் உத்தியோகப் பற்றற்றவர்கள் பெரும் பான்மையோராக இருக்கவேண்டும் என்று வலியுறுத்தினுர்.

மாகாண அரசுகளுக்கு நிதிய அதிகாரங்களை மாற்றுவதுடன் நின்றுவிடக் கூடாது என்று ரிப்பன் திடமாக நம்பினுர். மாகாண அரசுகளிடமிருந்து தல அரசுகளுக்கு நிதிய அதிகாரங்களை மாற்று வதும் இன்றியமையாததாகும். மேயோ மாகாணங்களின் நிதி யங்களை அதிகரித்தார். ரிப்பன் தலங்களின் நிதியங்களை அதி கரித்தார். தலங்களின் அலுவல்களும் (பணிகளும்) அதிகரித்தன. அவற்றின் வருவாய்களும் அதிகரித்தன. 'ஒவ்வொரு தலத்தின் தேவைகள் அதிகரிப்பதற்கேற்பச் செலவும் அதிகரிக்கலாம். இவ் வதிகரித்த செலவைச் சமாளிப்பதற்கு ஏற்றவகையில் தலங் களுக்கு வருவாய்கள் மாற்றப்பட்டன. சரியான நிருவாகத்தினுலும்,

[1] 'ரிப்பன் எங்கள் அப்பன்' என்று இந்தியர்கள் போற்றினர்.

தலத்தார் காட்டும் பரிவினுலும், தல அரசுகளின் அனுபவத்திலுலும், உன்னிப்பினுலும் ஏற்பட்ட அனுகூலங்களினுலும், இவ் வருவாய்கள் பொதுவாக அதிகரிக்கக்கூடிய வாய்ப்பு இருந்தது.' இந்த யோசனைகள் 1882ஆம் ஆண்டில் செயல்படுத்தப்பட்டன. 1882ஆம் ஆண்டு மே மாதம் 18ஆம் நாளில் மேலும் ஒரு தீர்மானம் வெளியாயிற்று. தல சுயாட்சியைக் கொணர்வதற்கு வேண்டிய வழிகள் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்டன. இக் கொள்கையைப் 'பொதுவாக விசுவாசத்துடனும், சில வேளைகளில் மனப்பூர்வமாகவும்' மாகாண அரசுகள் ஏற்றுக்கொண்டன. ரிப்பனுடைய கொள்கைக்கு நாட்டில் அமோக வரவேற்புக் கிடைத்தது. இவருடைய கொள்கையின் விளைவாகப் பெரும்பான்மையான மாகாணங்கள் தல சுயாட்சிச் சட்டங்களை இயற்றின. இதன்படி கிராமப்புற போர்டுகள் (Rural Boards) நிறுவப்பட்டன. இப் போர்டுகள், மாவட்டங்களிலும், தாலூகாக்களிலும் தோன்றின. இவற்றின் உறுப்பினர்கள் பெரும்பாலும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பழைய மாவட்டக் குழுக்களைக் காட்டிலும். இக் குழுக்களுக்கு அதிக அதிகாரங்கள் இருந்தன. தாலூகா போர்டுகளும் சரி, ஜில்லா போர்டுகளும் சரி, கிராமங்களை அடித்தளமாகக் கொண்டிருந்தன. நினைவுக்கு எட்டாத காலம் தொட்டு நம் நாட்டில் கிராமங்கள்தாம் ஆட்சியின் மிகச் சிறு அலகாக இருந்து வந்திருக்கின்றன. ஜில்லா போர்டுகளும், தாலூகா போர்டுகளும், குழுக்கள் வாயிலாகப் பணியாற்றின. தலப் பிரதிநிதிகளுடன் அரசின் அதிகாரிகளும் ஒத்துழைப்பதற்கு இக் குழுக்கள் போதிய வாய்ப்புகளை நல்கின.

1907—08-ல் பரவலாக்குதல்பற்றிய ராயல் குழுமம் (Royal Commission on Decentralisation) நியமிக்கப்பட்டது. இந்திய அரசுக்கும், மாகாண அரசுகளுக்கும் இடையே நிலவும் நிதிய உறவுகள், ஆட்சி உறவுகள்பற்றி இக் குழுமம் ஆராய்ந்தது. தல சுயாட்சியைப்பற்றி இக் குழுமம் முழுமையாகப் பரிசீலித்தது. அவற்றுக்கு இடப்பட்டிருக்கும் பணிகளை நிறைவேற்றத் தல அரசுகளுக்கு அளிக்கப்பட்டிருக்கும் நிதியங்கள் போதா என்ற முடிவுக்கு வந்தது. இக் குழுமம் சிபாரிசு செய்த யோசனைகளின் பேரிலேயே இந்திய அரசைப்பற்றிய 1915ஆம் ஆண்டைய தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இத் தீர்மானம் 'தல வருவாய்கள் குறைவாகவும், நெகிழ்ச்சியின்றியும் இருப்பதுபற்றியும், மேற்கொண்டும் வரிகளை விதிப்பதில் உள்ள சங்கடத்தைப்பற்றியும்' குறிப்பிட்டது. 1919ஆம் ஆண்டில் செய்த சீர்திருத்தங்களின் விளைவாகத் தல சுயாட்சி மாற்றப்பட்ட தலைப்பாக (transferred

subject) [1] மாறியது. இச் சீர்திருத்தங்களின்படி தல அரசுகளின் வரி விதிக்கும் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டன. *1919*ஆம் ஆண்டைய இந்திய அரசின் சட்டப்படி தல அரசுகள் மட்டுமே அல்லது தல அரசுகளுக்காக மட்டுமே விதிக்கக்கூடிய வரிகளின் பட்டியல் ஒன்று வெளியிடப்பெற்றது. தல அரசுகளுக்கு ஒதுக்கப் பட்ட வரி இனங்கள் வருமாறு: சுங்க வரி; நிலத்தின்மீதும், நில மதிப்புகளின்மீதும் வரி; கட்டடங்கள், ஊர்திகள், படகுகள் இவற்றின்மீது வரி; ஏவலாளர்கள், வீட்டுப் பணிமக்கள் இவர்கள் பேரில் வரி; விலங்குகள்மீது வரி; ஆக்ட்ராய் (Octroi) வரி; டெர்மினல் (Terminal) வரி; வணிகம், உத்தியோகம், பிழைப்பு (Callings) இவற்றின்மீது வரி; தனியார் அங்காடிகளின்மீது வரி; தண்ணீர்த் தீர்வை, விளக்குத் தீர்வை, சாக்கடைத் தீர்வை, அங்காடிகளையும், பிற பொது வசதிகளையும் பயன்படுத்துவதற்காக வசூலிக்கப்பட்ட கட்டணங்கள்.

*1925*-ல் இந்திய வரிவிதிப்பு விசாரணைக் குழு (Indian Taxation Enquiry Committee), மைய, மாகாண நிதியங்களுடன், தல வரிகளைப் பற்றியும் ஆராய்ந்தது. 'தல அரசுகள் ஆற்ற வேண்டிய பணிகளுக்கு அவற்றுக்குக் கிடைக்கும் நிதியங்கள் நாடெங்கிலும் போதாததாகவே இருக்கின்றன என்பதை வலி யுறுத்த வேண்டிய அவசியம் இல்லை' என்று முடிவு கட்டியது.

*1935* ஆம் ஆண்டில் மாகாணங்களுக்குச் சுயாட்சி கிடைத்தது. இதனால், தல சுயாட்சியின் வளர்ச்சிக்கு மேலும் ஒரு தூண்டு கோல் ஏற்பட்டது. ஏறக்குறைய எல்லா மாகாணங்களும் சட்டம் இயற்றின. இவற்றின்படி தல அரசுகளின் அதிகாரங்கள் அதிகரித்தன. *1919*ஆம் ஆண்டைய சட்டத்தின்கீழ்த் தல அரசுகளுக்கு ஒதுக்கப்பட்ட வரிகளின் பட்டியல் அகற்றப்பட்டது. *1935*ஆம் ஆண்டைய சட்டத்தின்கீழ் மூன்று பட்டியல்கள் இடம் பெற்றன. இவை வருமாறு: கூட்டரசின் பட்டியல், மாகாணங் களின் பட்டியல், இரண்டுக்கும் பொதுவான பட்டியல். தல அரசுகள் மாகாண அரசுகளிடமிருந்து அதிகாரங்களைப் பெற்றன.

[1] *1919*ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட சீர்திருத்தங்களின் விளைவாக இரட்டையாட்சி (Dyarchy) ஏற்பட்டது; அதாவது சில அரசினர் துறைகளை மாகாணக் கவர்னர் தம்மால் நியமிக்கப்பட்ட நிறைவேற்றுக் கவுன்ஸிலர் களின் (Executive Councillors) பொறுப்பிலும், வேறு சில தலைப்புகளை அமைச்சர்களின் பொறுப்பிலும் விட்டார். இவ் வமைச்சர்கள் சட்டசபை உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களிலிருந்து கவர்னரால் பொறுக்கி எடுக்கப்பட்டவர்கள். இவர்களின் பொறுப்பில் கல்வி, சுகாதாரம், தல சுயாட்சி போன்ற துறைகள் ஒப்படைக்கப்பட்டன. இவற்றுக்கு மாற்றப்பட்ட தலைப்புகள் என்று பெயர். ஊர்க்காவல் (police), நிதியம் போன்ற துறைகள் நிறைவேற்றுக் கவுன்ஸிலர்களின் பொறுப்பில் இருந்தன.

தல அரசுகளின் அதிகாரங்கள் அதிகரித்தன. அவற்றின் நிதிய அதிகாரங்கள் குறைந்தன. டெர்மினல் வரி கூட்டரசின் பட்டியலில் இடம் பெற்றது. தல வரிகளுக்கும், மாகாண வரிகளுக்கும் இடையேயிருந்த தெளிவான வேறுபாடு அகற்றப்பட்டது. தல நிதிய விசாரணைக் குழுவின் கருத்துப்படி, 'இம் மாறுதலினால் தல அரசுகளுக்குச் சிறிது பாதகம் ஏற்பட்டது. முன்பு தல வரிகளே என ஒப்புக் கொள்ளப்பட்ட வரிகளை மாகாண அரசுகள் தங்கள் சொந்த நலன்களுக்காகவே பயன்படுத்திக் கொண்டன. தல அரசுகளுக்கெனப் போதிய நிதிய வளங்கள் இன்மையால் அவற்றின் பயன் பாதிக்கப்பட்டது. புதிய வரிகளை விதிக்க வேண்டுமென்றால், அவற்றுக்கு மாகாண அரசுகளின் முந்திய அனுமதியைப் பெற வேண்டியிருந்தது. தல அரசுகள் மாகாண அரசுகள் அளிக்கும் மானியங்களையே மேலும் மேலும் நம்பியிருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

இந்தியா சுதந்திரம் பெற்ற பின்பு, ஒரு புதிய சகாப்தம் உதயமாயிற்று. ஆயினும், தல அரசுகள் மட்டுமே வரி விதிக்கக்கூடிய ஒரு பட்டியல் அரசியல் சட்டத்தில் இடம் பெறவில்லை. 1935ஆம் ஆண்டையச் சட்டத்தின் கீழிருந்த நிலைமையே தொடர்ந்து நீடித்தது. சில சிறு மாறுதல்கள் மட்டும் ஏற்பட்டன. 'தல அரசுகளுக்கு என்று எந்த வரிகளையும் அரசியல் சட்டம் ஒதுக்கவில்லை. மாநிலப் பட்டியலில் கண்டிருக்கும் வரிகளில் எதையேனும் முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ, மாநிலங்கள் தல அரசுகளுக்கு அளிக்கலாம். தல அரசுகளின் நடவடிக்கைகளை, மாநில அரசுகள் ஓரளவு மேற்பார்வை செய்வதற்கும், கட்டுப்பாடு செய்வதற்கும் இஃது துணை செய்தது. ஏனைய கூட்டாட்சிகளிலும் இதே நிலைமை தான். கானடாவில், நகராட்சிகள் தங்களைப் பதிவு செய்து கொள்ளுவதற்கும், நிதிய அதிகாரங்களையும், ஏனைய அதிகாரங்களையும் பெறுவதற்கும் மாகாண அரசுகளையே நம்பியிருக்கின்றன. ஆஸ்திரேலியாவில், மாநிலச் சட்டசபைகள் குறிப்பிட்ட அதிகாரங்களைத் தல அரசுகளுக்கு வழங்கியிருக்கின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளில், சட்டப்படி மாநிலங்களே தல அரசுகளின் முழு ஆண்டைகள் (எஜமானர்கள்). இக் கருத்துப் படிமம் 'தில்லான் விதியை' ('Dillions Rule') அடித்தளமாகக் கொண்டது. இவர் அயோவின் தலைமை நீதிமன்றத்தில் நீதிபதியாக (Justice of the Supreme Court of Iowa) இருந்தவர். இவர் கூறியதாவது: 'முனிஸிபல் கார்ப்பொரேஷன்களின் தோற்றத்திற்குக் காரணம் மாநில சட்டசபையே. மாநில சட்ட மன்றத்திலிருந்தே அவை தங்களின் அதிகாரங்களையும், உரிமைகளையும், முழுதும் பெறு

கின்றன. அவைதாம் முனிஸிபல் கார்ப்பொரேஷன்களுக்கு உயிர் மூச்சை அளிக்கின்றன. மாநில சட்ட மன்றம் இன்றேல், இவையும் இருக்க முடியாது. முனிஸிபல் கார்ப்பொரேஷன்களைத் தோற்றுவிப்பது சட்ட மன்றமாதலால், அவற்றை அழிக்கவும் அதனல் முடியும். சட்ட மன்றத்திற்கு, கார்ப்பொரேஷன்களை அழுக்க (ஒழிக்க) அதிகாரம் இருக்குமானல், அதனல் அவற்றின் அதிகாரங்களைக் குறைக்கவும், கட்டுப்படுத்தவும் முடியும்.[1]

பல வகையான தல அரசுகள் உள. வெவ்வேறு மாநிலங்களில் வெவ்வேறுபட்ட தல அரசுகள் உள்ளன. இவற்றின் அலுவல்களும் தம்முள் வேறுபாடு உடையன. நாடெங்கிலுமுள்ள நகரங்களில் நகராட்சிகளும், பெரிய நகரங்களில் மாநகராட்சிகளும் உள்ளன. பல பெரிய நகரங்களில் அபிவிருத்தி டிரஸ்டுகளும் (Improvement Trusts) அபிவிருத்தி வாரியங்களும் (Development Boards) உள்ளன. இவற்றுக்கு வரி விதிக்கும் அதிகாரம் இல்லையாகையால், இவற்றைத் தல அரசுகளாகக் கொள்ள வேண்டியதில்லை. அறிவிக்கப்பட்ட பகுதி குழுக்களும் (Notified Area Committees), நகரப்பகுதி குழுக்களும் (Town Area Committees), கண்டோன்மெண்டு வாரியங்களும் (Cantonment Boards) பல இடங்களில் உள்ளன. இவற்றையும் நாம் தனிபாக ஆய வேண்டியதில்லை. ஏனெனில், இவற்றின் அலுவல்கள் நகராட்சிகளின் அலுவல்களை ஒத்திருக்கின்றன. நாட்டுப்புறத்தில், ஜில்லா போர்டுகளும் கிராமப்புற போர்டுகளும் (Rural Boards) உள்ளன. ஒரு மாவட்டத்தைக் காட்டிலும் குறைந்த பகுதிகளில் கிராமப்புறப் போர்டுகள் இயங்குகின்றன. இவற்றின் அலுவல்கள் ஜில்லா போர்டுகளின் அலுவல்களை ஒத்திருப்பதால், ஜில்லா போர்டுகளுடன் சேர்த்தே இவற்றைப் பார்க்கலாம். ஜில்லா போர்டுகளுக்கும், கிராமப்புறப் போர்டுகளுக்கும் கீழே கிராமப் பஞ்சாயத்துகள் உள்ளன. தமிழ்நாட்டில் ஜில்லா போர்டுகள் ஒழிக்கப்பட்டு விட்டன. அவற்றுக்குப்பதிலாக பஞ்சாயத்து ஒன்றியங்கள் (panchayat Unions) உள்ளன. ஒரு காலத்தில் இருந்த தாலுகா போர்டுகளைக் காட்டிலும் இவை சிறியன. எடுத்துக்காட்டாக, ஒரு தாலுகாவில் இரண்டிலிருந்து நான்கு பஞ்சாயத்து ஒன்றியங்கள் வரை உள்ளன. ஆகவே, நாம் இங்கு (அ) கிராமப் பஞ்சாயத்துகள், (ஆ) ஜில்லா போர்டுகள் (இவற்றில் பஞ்சாயத்து ஒன்றியங்களும், கிராமப்புற போர்டுகளும் அடங்கும்) (இ) நகராட்சிகள் (ஈ) மாநகராட்சிகள் இவற்றின் நிதியங்களைப் பற்றி மட்டுமே ஆய்வாம். இவற்றை இரு வகையாகப் பிரிக்கலாம்.

[1] Quoted by Jame A. Maxwel, 'Financing State and Local Governments', P. 11

அவை : (1) நாட்டுப்புறத் தல அரசுகள், (2) நகர்ப்புற தல அரசுகள். முந்தியதில் கிராமப் பஞ்சாயத்துகளும், ஜில்லா போர்டு களும் அடங்கும்; பிந்தியதில் நகராட்சிகளும், மாநகராட்சிகளும் அடங்கும்.

இந்தியாவில் இருக்கும் தல அரசுகளின் எண்ணிக்கை வருமாறு :

| விளக்கம் | எண்ணிக்கை | பிற விவரங்கள் |
|---|---|---|
| மாநகராட்சிகள் | 25 | |
| நகராட்சிகள் | 1,487 | 1965ஆம் ஆண்டு ஏப்ரல் |
| கண்டோன்மெண்டு வாரியங்கள் | 62 | திங்களில் இருந்தபடி |
| அறிவிக்கப்பட்ட பகுதி குழுக்கள் | 164 | |
| நகரப் பகுதி குழுக்கள் | 327 | |
| கிராமப் பஞ்சாயத்துகள் | 1,67,983 | 1959ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 31ஆம் நாளில் இருந்தபடி. |

## தல அரசுகளின் அலுவல்கள்

### கிராமப் பஞ்சாயத்துகள்

கிராமப் பஞ்சாயத்தின் பொதுவான அதிகார எல்லை ஒரு நிலவரி (Revenue) கிராமத்துக்கு உட்பட்டதாகும். சில சமயங் களில் இரண்டு, அல்லது இரண்டுக்கு மேற்பட்ட கிராமங்கள் ஒரு பஞ்சாயத்தில் அடங்கியிருப்பதும் உண்டு. கிராமப் பஞ்சாயத்து களை அமைத்தல் அரசுக் கொள்கையின் நெறிக் கோட்பாடாக (Directive Principle of State Policy) நம் அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. கிராமப் பஞ்சாயத்துகளை அமைப் பதற்கும், அவை சுயாட்சி அலகுகளாகப் பணியாற்றுவதற்கும் வேண்டிய அதிகாரங்களையும், ஆணையையும் கொடுப்பதற்கு மாநிலங்கள் நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டும்' என்று நாற்பதாவது விதி கூறுகிறது. இதன்படி எல்லா மாநிலங் களிலும் கிராமப் பஞ்சாயத்துகள் இதுவரை அமைக்கப்படாத கிராமங்களில் அமைக்கப்பட்டு வருகின்றன. இவை மக்கள் தொகைக்கும், வருவாய்க்கும் தக்கவாறு இரண்டு அல்லது மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. எடுத்துக்காட் டாக, தமிழ்நாட்டில் ஐயாயிரத்திற்குக் குறையாத மக்கள்தொகை யையும், பதினாயிரம் உருபாவுக்குக் குறையாத ஆண்டு வருமானத் தையும் உடைய பஞ்சாயத்துகள் முதல் வகுப்பாகவும்,

ஐந்நூற்றுக்குக் குறையாத மக்கள்தொகையைக் கொண்ட ஏனைய பஞ்சாயத்துகள் இரண்டாம் வகுப்பாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

1958ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 12ஆம் நாளன்று தேசிய அபிவிருத்திக் கவுன்ஸில் (National Development Council), பஞ்சாயத்து ஆட்சியை அமைப்பதற்கான மேத்தா குழுவின் அறிக்கையை ஏற்றுக்கொண்டது. இந்த அறிக்கையின்படி (அ) கிராமப் பஞ்சாயத்துகளையும், (ஆ) பஞ்சாயத்து ஒன்றியங்களையும், (இவை பஞ்சாயத்து சமிதி என ஹிந்தியில் வழங்கும்), (இ) ஜில்லா போர்டுகளையும் (இவை ஜில்லா பரிஷத் என ஹிந்தியில் வழங்கும்) அமைக்கவேண்டும். அந்தந்த மாநிலங்களில் நிலவும் படிநிலைகளுக்கு ஏற்ப சிற்சில மாறுதல்களுடன் அனைத்து மாநிலங்களும் இப் பரிந்துரைகளைச் செயல்படுத்த முன்வந்தன.

### கிராமப் பஞ்சாயத்துகளின் அலுவல்கள்

கிராமப் பஞ்சாயத்துகள் பஞ்சாயத்து ஒன்றியங்களிலிருந்து கணிசமான அளவு மானியங்களைப் பெறவேண்டும் என்றும், அவற்றின் வரவு செலவு திட்டங்களுக்குப் பஞ்சாயத்து ஒன்றியங்கள் ஒப்புதல் அளிக்கவேண்டும் என்றும் மேத்தா குழு கருதியது. பஞ்சாயத்துகள் கட்டாயமாகச் சில பணிகளை ஆற்றவேண்டும் எனவும், இவை ஒழிந்த வேறு பணிகளைப் பஞ்சாயத்து ஒன்றியங்களின் ஒப்புதலுடன் ஆற்றவேண்டும் எனவும், மேத்தா குழு கூறியது குழுவின் கருத்தின்படி கிராமப் பஞ்சாயத்துக்கள் கட்டாயமாக ஆற்ற வேண்டிய பணிகள் வருமாறு: (1) குடிநீர் வசதி, (2) சுகாதாரம் (துப்புரவு), (3) பஞ்சாயத்து சாலைகள், சாக்கடைகள், குளங்கள் இவற்றைப் பராமரித்தல், (4) தெருக்களுக்கு விளக்கிடுதல், (5) நில மேலாண்மை, (6) கால் நடைகளைப்பற்றிய கணக்கை வைத்துக் கொள்ளுதல், (7) துன்பத்தைத் துடைப்பது, (8) மதகுகளையும், பாலங்களையும், இன்னோரன்னவற்றையும் பராமரித்தல், (9) தொடக்கப் பள்ளிகளை மேற்பார்வை செய்தல், (10) பின்தங்கிய வகுப்பினர்களின் நலன்களைப் பேணுதல், (11) புள்ளி விவரங்களைச் சேகரித்தல், அவற்றைப் பராமரித்தல். மேற்கூறிய பணிகள் நீங்கலாக, ஏனைய பணிகளையும், பஞ்சாயத்து ஒன்றியங்களின் ஏஜண்டுகளாகச் செய்யலாம். ஈண்டு நுதலிய பணிகளில் சில பஞ்சாயத்து ஒன்றியங்களின் பணிகள் பட்டியலில் இடம் பெற்றிருப்பது உண்மையே. ஆயினும், பஞ்சாயத்துகளின் வரவு செலவு திட்டங்களுக்குப் பஞ்சாயத்து ஒன்றியங்களின் ஒப்புதலைப் பெறவேண்டும் என்றிருப்பதால், இரண்டுக்கும் இடையில் மோதல் ஏற்படக் காரணமில்லை.

### பஞ்சாயத்து நிதியங்கள்

ஒவ்வொரு பஞ்சாயத்தும் நான்கு வரிகளைக் கட்டாயமாக விதித்தேயாகவேண்டும். அவை யாவன : (அ) வீட்டுவரி [1] (ஆ) ஊர்தி (வாகன) வரி [2] (இ) தொழில் வரி, (ஈ) உடைமை மாற்றத்தின் மீது விதிக்கப்படும் வரி. இவை தவிர கீழ்கண்ட மூன்று வரிகளையும், மாநில அரசின் ஒப்புதலின் பேரில் விதிக்கலாம். அவை வருமாறு : (அ) நில செஸ் (Cess) (ஆ) வேளாண் நிலத்தின்மீது வரி, (இ) கிராமத்திலேயே வாங்கி விற்கப்படும் வணிகப் பயிர்களின்மீது வரிகள். ஈதன்றிப் பல்வகைக் கட்டணங்களையும் பஞ்சாயத்துகள் விதிக்கலாம். அவை வருமாறு : மனைக்கட்டுகள், சாலைகள், புறம்போக்கு நிலங்கள், இவற்றில் தற்காலிகமாகக் குடியிருப்பதற்கான கட்டணம்; அங்காடிகள்; வண்டிகள் நிறுத்துமிடங்கள்; அபாயகரமான (Offensive) தொழில்கள்; கசாப்புக் கூடங்கள் (Slaughter Houses) இவற்றின் பேரில் விதிக்கப்படும் கட்டணங்கள்; தரகர்கள், கமிஷன் ஏஜண்டுகள் இவர்கள் செலுத்தும் கட்டணங்கள்; பர்மிட்கள் (Permits) வாங்குவதற்குச் செலுத்தப்படும் கட்டணங்கள். இறுதியாக ஜில்லா போர்டுகளிடமிருந்து கீழ்கண்ட மூன்று கொடைகளையும் பெற்றுக் கொள்ளலாம். அவை யாவன: (1) ஜில்லா அங்காடிகள் என்று வகைப்படுத்தப்பட்டுக் கிராமங்களில் இருக்கும் அங்காடிகள் (2) ஜில்லா போர்டுகள் மேலாண்மை செய்யும் பரிசில் துறைகள் [3] (Ferrices) (3) தொடக்கப் பள்ளிகளை நிறுவுவதற்கும் நடத்துவதற்கும் ஜில்லா போர்டுகள் தரும் கொடைகள். ஒவ்வொரு இனத்திலும் ஜில்லா போர்டுகள் அளிக்க வேண்டிய தொகையையோ அல்லது வீதத்தையோ மாநில அரசுகள் அறுதியிடுகின்றன.

மேத்தா குழு கீழ்க்கண்ட வரியினங்களை பஞ்சாயத்துகளுக்குச் சிபாரிசு செய்தது. அவை வருமாறு:

1. **உடைமை அல்லது வீட்டு வரி (இது தல படி நிலைகளைப் பொறுத்தது).**

[1] தமிழ்நாட்டில் ஓட்டு வீடுகள், மாடி வீடுகள்மீது மட்டும் வீட்டு வரி விதிக்கப்படுகிறது. கூரை வீடுகளுக்கு வீட்டு வரி கிடையாது.

[2] மாட்டு வண்டிகள் மிதி வண்டிகள், இவற்றின்மீது ஊர்தி வரி விதிக்கப்படுகிறது.

[3] தஞ்சை மாவட்டத்தில் திருக்கொள்ளம்பூதூரில் வெட்டாற்றிலும், திருச்சி மாவட்டத்தில், திருப்பராய்த் துறையில் காவிரியிலும், பரிசில் துறைகள் இருக்கின்றன. இவற்றையன்றி வேறு சில பரிசில் துறைகளும் இருக்கக்கூடும்.

2. நாளங்காடிகள், வாரத்திற்கு இரு முறை கூடும் அங்காடிகள், வார அங்காடிகள், கடைகள், சந்தைகள் இவற்றின் மீது வரி (இவை தனியார் மனையில் இருந்தாலும் சரி, புறம் போக்கு நிலத்தில் இருந்தாலும் சரி.)

3. ஊர்திகள் வரி—இவற்றில் மாட்டு வண்டிகள், மீதி வண்டிகள், ரிக்ஷாக்கள். படகுகள், குதிரைகள், பொதி சுமக்கும் கழுதைகள், கோவேறு கழுதைகள், ஒட்டகங்கள், யானைகள், இவை யாவும் அடங்கும்.

4 ஆக்ட்ராய் அல்லது டெர்மினல் வரி.

5. தூய்மைப் பாதுகாப்பு (Conservancy) வரி.

6. தண்ணீர்த் தீர்வை.

7. விளக்குத் தீர்வை.

8. வாடிகளிலிருந்து (pound) கிடைக்கும் வருமானம்.

9. தலத்தில் விற்பனையாகும் கால் நடைகளைப் பதிவு செய்வதற்கும், சாவடிகளையும், கசாப்புக் கூடங்களையும் (Slaughter House) பயன்படுத்துவதற்கும் வசூலிக்கப்படும் கட்டணங்கள்.

10 பஞ்சாயத்து ஒன்றியங்களிலிருந்து கிடைக்கும் மானியங்கள்.

பஞ்சாயத்து ஒன்றியங்களின் அலுவல்கள்

வேளாண்மை முன்னேற்றத்திற்கான எல்லாப் பணிகளையும் மேற்கொள்ள வேண்டும். இவற்றின் விதையைப் பெருக்குதல் அதைக் கொள்முதல் செய்து பகிர்வு செய்தல், வேளாண்மையில் புதிய முறைகளைப் புகுத்துதல், வேளாண்மைக்கு வேண்டிய கடன் தொகைகளை மாநில அரசு கூட்டுறவு பாங்குகள் இவற்றின் ஒத்தாசையுடன் அளித்தல், சிறிய நீர்ப்பாசன வசதிகளைச் செய்தல், ஆடு, மாடு, கோழி, இவற்றின் தரத்தை அபிவிருத்தி செய்தல், ஆகியவை அடங்கும். இவை தவிர, தல தொழில் களுக்கு ஆக்கம் அளித்தல், குடி நீர், பொது சுகாதாரம், துப்புரவு (Sanitation), மருத்துவ உதவி, இவற்றுக்கு வகை செய்தல், வெள்ளத்தாலும், நிலத் துளக்கங்களினாலும், பஞ்சத்தினாலும் அடி பட்டோருக்கு உதவியளித்தல், திருவிழாக்களின் போது ஏற்பாடு செய்தல், பஞ்சாயத்து சாலைகளைத் தவிர ஏனைய சாலைகளைப் பராமரித்தல், தொடக்கப் பள்ளிகளை மேலாண்மை செய்தல், ஆலைகளில் வேலை பார்க்காத பாட்டாளிகளுக்குக் குறைந்த ஊதியச் சட்டத்தின்கீழ் (Minimum Wages Act) கூலி நிர்ணயம் செய்தல், பின்தங்கிய வகுப்பினர்களின் நலனைப் பேணுதல், புள்ளி

விவரங்களைச் சேகரித்து வைத்தல், உயர்நிலைப் பள்ளிகளை மேலாண்மை செய்தல் ஆகிய பணிகளையும் பஞ்சாயத்து ஒன்றியங்கள் மேற்கொள்ளலாம். மேலும், மாநில அரசுகளின் ஏஜண்டுகளாகவும் இவை செயல்படலாம். இங்கு குறிப்பிடப்பட்ட பணிகளில் யாதேனும் ஒன்றைச் செய்ய இயலாதிருந்தால் ஒழிய, மாநில அரசு இப் பணிகளை வட்டாரத்தில் மேற்கொள்ளக் கூடாதென மேத்தா குழு வலியுறுத்திக் கூறியது.

### பஞ்சாயத்து ஒன்றியங்களின் நிதியங்கள்

மேத்தா குழுவின் பரிந்துரைகளின்படி கீழ்க்கண்ட வரியினங்களைப் பஞ்சாயத்து ஒன்றியங்களுக்கு ஒதுக்கவேண்டும்.

1. கடந்த ஆண்டுக்கு முந்திய ஆண்டில் வட்டாரத்தில் வசூலிக்கப்பட்ட நில வரியில் சட்டப்படி வரையறுக்கப்பட்ட ஒரு சதவீதம்—பஞ்சாயத்து ஒன்றியங்களுக்கும், கிராமப் பஞ்சாயத்துகளுக்கும் நிகர நில வரியில் 40%-க்குக் குறையாமல் ஒதுக்க வேண்டும்.

2. நில வரி, தண்ணீர்த் தீர்வை இவற்றின்மீது விதிக்கப்படும் செஸ்கள் (இவற்றில் கரும்பின்மீது விதிக்கப்படும் சிறப்பு செஸ்கள் போன்றவை அடங்கா). இவற்றின் குறும வீதங்களை மாநில அரசுகளே அறுதியிடவேண்டும்.

3. தொழில்கள், வணிகம், பிழைப்புகள், வேலை (உத்தியோகம்) இவற்றின்மீது விதிக்கப்படும் வரி. இவ் வரியைக் கிராமப் பஞ்சாயத்து விதிக்கக்கூடாது. பஞ்சாயத்து ஒன்றியம்தான் விதிக்கவேண்டும்.

4. நிலையியற் பொருளின் (தாவர சொத்தின்) மாற்றத்தின் மீது விதிக்கப்படும் வரியின் பேரில் விதிக்கப்படும் மேல் கட்டணம்.

5. பரிசில் துறைகள், மீன் அளங்கள் இவற்றில் இருந்து கிடைக்கும், வாரம், இலாபம்.

6. சுங்க வரி.

7. யாத்திரை வரி.

8. கேளிக்கை வரி.

9. தொடக்கக் கல்விக்கான ஒரு செஸ்.

*10.* அங்காடிகள், கடைகள், சந்தைகள், இவற்றிலிருந்து கிடைக்கும் வருவாய்—இவை திங்களுக்கு ஒரு முறைக்குமேல் நடத்தப்படக்கூடாது.[1]

*11.* மோட்டார் ஊர்தி வரியில் ஒரு பங்கு.

*12.* தனியாரின் நன்கொடைகள்.

*13.* அரசின் மானியங்கள்.

இவ் வரிகளில் சிலவற்றின் குறும வீதங்களையேனும் மாநில அரசு அறுதியிடவேண்டும். இவற்றை ஒன்றியங்கள் கட்டாயம் வசூலித்தே தீரவேண்டும். ஒன்றியங்களின் வரவு செலவு திட்டத்தை ஜில்லா அதிகாரி பரிசீலிக்கலாமானாலும், பட்ஜெட்டுக்கு ஜில்லா போர்டு ஒப்புதல் அளித்தேயாகவேண்டும்.

**ஜில்லா போர்டின் அலுவல்கள்**

மேற் கூறியவற்றிலிருந்து அபிவிருத்திக்கான நடவடிக்கைகள் அனைத்தும் கிராமப் பஞ்சாயத்துகளுக்கும், பஞ்சாயத்து ஒன்றியங்களுக்கும் கொடுக்கப்பட்டுவிட்டனவாதலால், ஜில்லா போர்டுகளை ஒழித்து விடலாம் என்று மேத்தா குழு சிபாரிசு செய்தது. உத்தரப் பிரதேசம், பீஹார், தமிழ்நாடு ஆகிய மாநிலங்கள் ஜில்லா போர்டுகளை ஒழித்து விட்டன. ஆயினும், பஞ்சாயத்து ஒன்றியங்களை ஒருங்கிணைவிப்பதற்கு ஒரு கவுன்ஸிலை நியமிக்கலாம் என்றும், இவற்றில் அந்தப் பகுதிகளைச் சேர்ந்த பாராளுமன்ற உறுப்பினர்களும், சட்டமன்ற உறுப்பினர்களும், பாஞ்சாயத்து ஒன்றியங்களின் தலைவர்களும், மருத்துவ, சுகாதார, வேளாண்மை கால்நடை, பொறியியல், கல்வி, பின்தங்கிய வகுப்பினர்களின் நலன், பொதுப் பணிகள், ஏனைய வளர்ச்சித் துறைகள் இவற்றைச் சேர்ந்த மாவட்ட அதிகாரிகளும் இடம் பெறுவார்கள் என்றும் குழு கூறியது. தமிழ்நாட்டில் ஒவ்வொரு மாவட்டமும் பெரும்பாலும் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இவை அபிவிருத்திக் கவுன்ஸில் என்று பெயர் பெறும். எடுத்துக் காட்டாகத் தஞ்சாவூர் மாவட்டத்தில், மேலத் தஞ்சை அபிவிருத்திக் கவுன்ஸில் என்றும், கீழத் தஞ்சை அபிவிருத்திக் கவுன்ஸில் என்றும் இரு கவுன்ஸில்கள் உள்ளன. இவற்றின் தலைவர் மாவட்ட ஆட்சித் தலைவர் (கலெக்டர்). இவருக்குக் கீழுள்ள அதிகாரிகளில் ஒருவர் அபிவிருத்திக் கவுன்ஸிலின் செயலாளராக இருப்பார்.

[1] இதற்கு ஆண்டுதோறும் மாசித் திங்களில் கும்பகோணத்திற்கு அருகிலுள்ள நீலத்த நல்லூரில் நடக்கும் மாட்டுச் சந்தை ஒரு எடுத்துக்காட்டு.

## நகராட்சிகளின் அலுவல்கள்

நகராட்சிகளின் முக்கிய அலுவல்களாவன: சாலைகளைப் போடுதல், அவற்றைப் பராமரித்தல்; தெருக்களுக்கு விளக்குப் போடுதல், தண்ணீர் தெளித்தல், அவற்றைத் துப்புரவு செய்தல்; குடிநீர் சப்ளை செய்தல்; மருந்தகங்கள் மருத்துவமனைகள், கால்நடை மருத்துவமனைகள், இவற்றைப் பராமரித்தல்; சாக்கடைகளை அமைத்தல், அவற்றைப் பராமரித்தல்; அம்மை நோய் வராது ஊசி போடுதல்; தொடக்க கல்வி அளித்தல்; பூங்காக்களையும் தோட்டங்களையும் அமைத்தல்; மக்கள் நலனுக்கு ஊறு விளைவிக்கும் தொழில்களை (offensive trades) ஒழுங்கு படுத்துதல் சந்தைகளையும், பொருட்காட்சிகளையும் நடத்துதல் ஆகியவை மாநில அரசுகளின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டே இப் பணிகளை ஆற்றவேண்டும்.

## நகராட்சிகளின் நிதியங்கள்

இவற்றை நான்கு பிரிவுகளாக வகுக்கலாம். அவை வருமாறு:

1. வணிகத்தின்மீதான வரிகள்.
2. உடைமைமீதான வரிகள்.
3. ஆட்கள்மீதான வரிகள்
4. கட்டணங்கள், உரிமங்கள் (fees and licencees)

## மாநகராட்சிகளின் அலுவல்கள்

நகராட்சிகளைக் காட்டிலும் இவற்றுக்கு அதிக அதிகாரங்களும் விரிவான பணிகளும் இருக்கின்றன மாநகராட்சிகளின்மீது மாநில அரசுகளின் மேற்பார்வையும் குறைவு. நகராட்சிகளைக் காட்டிலும் மாநகராட்சிகளின் வரி விதிககும் அதிகாரம் அதிகம். நகராட்சிகள் விதிக்கும் வரிகளையே இவையும் விதிக்கின்றன.

நகராட்சிகளும், ஜில்லா போர்டுகளும் முறையே 62% வருமானத்தையும், 32% வருமானத்தையும், வரிகளிலிருந்தும், எஞ்சிய பகுதியை மாநில அரசுகளிடமிருந்து மானியங்களாகவும் பெறுகின்றன. இப்பொழுது தல ஆட்சிகள விதிக்கும் வரிகளை சிறது ஆய்வோம்.

## 1. நேர்முக வரிகள்

உடைமை (சொத்து) வரி: நகராட்சிகளும், மாநகராட்சிகளும் வீடுகளின்மீது வரி விதிக்கின்றன; பஞ்சாயத்துகள் நில செஸ்களை விதிக்கின்றன. தல ஆட்சிகளுக்கு மிக அதிகமான வருவாயை

ஈனும் வரியும் இதுவே. தங்கள் வருவாயில் 46%-ல் இருந்து 82% வரை நகராட்சிகளும், மாநகராட்சிகளும் இவ் வரியிலிருந்து பெருகின்றன. இதேபோன்று பஞ்சாயத்துகளும், பஞ்சாயத்து ஒன்றியங்களும், தங்கள் வருவாயில் 70%-ல் இருந்து 90 வரை நில செஸ்ஸிலிருந்து பெறுகின்றன. இச் சதவீதங்கள் மாநிலங்களிடையே வேறுபடுகின்றன. நிலம், கட்டடங்கள் இவற்றின் ஆண்டைய மதிப்பை அடிப்படையாகக் கொண்டு நகராட்சிகளும், நிலத்தின் ஆண்டைய மதிப்பை அடிப்படையாகக் கொண்டு கிராமப் பஞ்சாயத்துகளும், பஞ்சாயத்து ஒன்றியங்களும் இவ் வரியை விதிக்கின்றன. நில செஸ்ஸின் தீர்வை வீதங்களை அடுத்த பக்கத்தில் உள்ள அட்டவணையில் காணலாம்.

## 2. தொழில் வரி

ஏறக்குறைய எல்லா மாநிலங்களும் இவ் வரியை விதிக்கின்றனவானாலும், சில மாநிலங்களிலேயே இவ் வரியிலிருந்து அதிக வருவாய் கிடைக்கிறது. இவ் வரி வளர் வீதமாகச் சில பகுதிகளிலும், வீதாச்சாரமாக ஏனைய பகுதிகளிலும் விதிக்கப்படுகிறது. அரசியல் சட்டப்படி இந்த வரியின் உச்ச வரம்பு உரூபா 250 ஆகும். அதாவது ஒருவரிடமிருந்து உரூபா 250-க்கு மேல் தொழில் வரி வசூலிக்கக்கூடாது. இதற்குக் காரணம் இங்ஙனம் விதித்தால், இஃது வருமான வரியிலிருந்து கிடைக்கும் வருவாயை பாதிக்கும் என்பதாம்.

## 3. ஹெஸியத் வரி அல்லது உடைமை, படிநிலைகளின்மீதான வரி (Tax on Circumstances and Property).

இவ் வரியின் வீதம் ஒருவருடைய உடைமையை பொறுத்தின்றி, அவருடைய வருமானம், சமுதாயத்தில் அவருக்கு இருக்கும் அந்தஸ்து, அவருடைய குடும்பத்தில் இருப்பவர்களின் எண்ணிக்கை இவற்றைப் பொறுத்து விதிக்கப்படுகின்றது. டாக்டர் கியான் சந்த் (Dr. Gyan Chand) கூறுமாறு 'ஹெஸியத்தின்மீது விதிக்கப்படும் வரி தனியாரின் பொருளாதார மதிப்பின்மீது விதிக்கப்பட்ட ஒரு வரியாகும். நாட்டுப் புறங்களில் வேளாண் வருமானத்திற்கு இவ் வரியிலிருந்து விலக்கு அளிக்கப்படுகிறது. இவ் வரியின் உச்ச வீதம் உரூபாவில் நான்கு தம்படியாகும். உச்ச அளவு ஒருவரிடமிருந்து இவ்வளவுதான் வசூலிக்கலாம் என்றும் சட்டம் வரையறுக்கிறது. பஞ்சாபில் ஜில்லா போர்டுகளும், மத்தியப் பிரதேசத்தில் நகராட்சிகளும், உத்தரப் பிரதேசம் மேற்கு வங்காளம், அஸ்ஸாம், ஒரிஸ்ஸா, பிஹார் ஆகிய மாநிலங்களில் தல ஆட்சிகளும் (நகராட்சிகளும் ஜில்லா போர்டுகளும்) இவ் வரியை விதிக்கின்றன.

அட்டவணை

| மாநிலங்கள் | செஸ்ஸின் பெயர் | தீர்வையின் அடிப்படை | வீதம் |
|---|---|---|---|
| தமிழ்நாடு | நில செஸ் | நிலத்தின் ஆண்டைய வாரத்தின் மதிப்பு. இதில் நில வரியும், தண்ணீர்த் தீர்வையும் அடங்கும். | உருபாவில் இரண்டணு |
| மஹாராஷ்டிரம் | தலநிதி.செஸ் | நில வரி | உருபாவில் மூன்றணு |
| மேற்கு வங்கம் | சாலை பொதுப் பணிகள் செஸ் | (அ) நிலத்தின் ஆண்டைய மதிப்பு அல்லது சுரங்கங்கள், பாறை தோண்டுமிடங்கள் (Quarries), டிராம் வேக்கள் முதலானவற்றிலிருந்து கிடைக்கும் ஆண்டைய நிகர இலாபம். | ஏக்கருக்கு பத்து உருபா |
| | | (ஆ) தேயிலை, காப்பி, சிங்கோனு (Cinchona) இவற்றின் சாகுபடிக்குப் பயன்படுத்தப்படும் நிலம். | |
| உத்தரப் பிரதேசம் | தல வரி | ஆண்டைய நிலத்தின் மதிப்பு. இம்மதிப்பின் நிலவரியைப் போல் இரண்டு மடங்காகும் என்று விளக்கம் தரப்பட்டது. | கட்டாயமாக உயர்ந்த அளவு விதிக்க வேண்டியது 9⅜% |
| பஞ்சாப் | ,, | ,, | |
| பீஹார் | சாலை, பொதுப் பணிகள் செஸ் | (அ) நிலத்தின் ஆண்டைய மதிப்பு. | உருபாவில் ஓரணுவிலிருந்து நாலணுவரை |
| | | (ஆ) சுரங்கங்களிலிருந்தும், பாறை தோண்டுமிடங்களிலிருந்தும் (Quarries) ஆண்டுதோறும் கிடைக்கும் நிகர இலாபம். | உருபாவில் இரண்டணு |
| ஒரிஸ்ஸா | தல செஸ் | (அ) நிலத்தின் ஆண்டைய மதிப்பு அல்லது ஆண்டைய நிகர இலாபம். | உருபாவில்இரண்டணுவிலிருந்து நாலணு வரை. |
| | | (ஆ) சாம்பல்பூர் மாவட்டத்தில் ஜமீன்தாரி கிராமங்களிலும், மல்குஸாரி கிராமங்களிலும் விதிக்கப்பட்ட கமில்ஸாமா (Kamilzama) | 12% |

4. சுங்க வரி

ஒரு குறிப்பிட்ட பகுதிக்குள் புகும் தனியாட்கள், கால் நடைகள், ஊர்திகள், இவ் வரியைச் செலுத்தவேண்டும். இவ் வரி தேய்வு வீதமானது. ஆகவே, முன்னேறிய நாடுகள் அனைத்தும் இவ் வரியை நீக்கிவிட்டன. இந்தியாவில் சில மாநிலங்களில் மட்டுமே இஃது இன்னும் விதிக்கப்படுகிறது. வரி விதிப்பு விசாரணைக் குழுமம் உடனடியாக இவ் வரியை நீக்கிவிட வேண்டு மென்று சிபாரிசு செய்தது. ஆயினும், பாலங்களைக் கட்டும் செலவு ஐந்து இலட்ச உருபாவுக்கும் மேற்பட்டால், அப் பாலங்கள் வழியே செல்லும் ஆட்கள், கால்நடை, ஊர்திகள் இவற்றின்மீது இவ் வரியை விதிக்கலாம் எனவும் பரிந்துரை செய்தது. பாலத்தைக் கட்டிய செலவு முழுதும் வசூலான பின்பு இவ் வரியை நீக்கிவிட வேண்டும் என்றும் குழுமம் கூறியது.

5. ஊர்தி வரி

இவ் வரி ஒரு உரிமக் கட்டணத்தைப் போன்றதாகும். ரிக்ஷாக்கள், மிதி வண்டிகள், மாட்டு வண்டிகள், இவற்றின்மீது இவ் வரி விதிக்கப்படுகிறது. மஹாராஷ்டிரம், கூர்ஜரம் மாநிலங்கள் ஒழிந்த ஏனைய மாநிலங்களில், தல அரசுகளுக்கு மோட்டார் ஊர்தி களின்மீது இவ் வரியை விதிக்க அதிகாரமில்லை. மாநில அரசுகளே இவ் வரியை விதிக்கின்றன. இவ் வரியிலிருந்து கிடைக்கும் தொகை மிகவும் பெருகிவிட்டதால், தல அரசுகளுக்கு அளிக்கப் படும் இழப்பீடு, இந்த வருவாயில் ஒரு சதவீதமாக இருக்க வேண்டுமே தவிர ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகையாக இருக்ககூடாது என்று வரி விதிப்பு விசாரணைக் குழுமம் கூறி யுள்ளது.

## ஏனைய நேர்முக வரிகள்

மேலே கூறப்பட்ட வரிகளைப் போன்று, கீழ்க்காணும் ஐந்து வரிகளும் அவ்வளவு முக்கியமானவையன்று.

6. உடைமை மாற்றத்தின்மீது விதிக்கப்படும் வரி

இவ் வரி உடைமையின் மதிப்பை அடிப்படையாகக் கொண்டு விதிக்கப்படுகிறது. சென்னை மாநகராட்சியும் கல்கத்தா அபி விருத்தி டிரஸ்டும் (Calcutta Development Trust-உம்), இன்னும் சில தல அரசுகளும் இவ் வரியை விதிக்கின்றன.

7. அங்காடி வரி (Market Tax)

இவ் வரி விற்பனை வரியை ஒத்திருக்கிறது. பண்டங்களின் விற்பனையின்மீது இவ் வரி வசூலிக்கப்படுகிறது. மத்தியப் பிரதேசத்தில் தல அரசுகளுக்கு இவ் வரியை விதிக்க அதிகாரம் இருக்கிறது. ஏனைய இடங்களில் மாநில அரசுகளே இவ் வரியை விதிக்கின்றன.

8. ஏவலாளர்கள், நாய்கள்மீது விதிக்கப்படும் வரி

உத்தரப் பிரதேசம், மஹாராஷ்டிரம், கூர்ஜாம், வங்காளம் ஆகிய மாநிலங்களில் தல அரசுகள் நாய்களின்மீது ஒரு வரியை விதிக்கின்றன. ஏனைய மாநிலங்களின் இவ் வரி, மேலே கூறிய நான்கு மாநிலங்களில் உள்ளதைப்போல், அவ்வளவ பரவலாக இல்லை. எந்த நகராட்சியும் பணிமக்கள்மீது வரி விதிப்பதாகத் தெரியவில்லை. ஆனால், இந்த இரண்டு வரிகளையும் விதிப்பது சரியே. ஏனெனில், இவை யிரண்டும் போகப் பண்டங்களாகக் கருதப்படுகின்றன. ஆனால், இவற்றைத் தண்டுவதில் மிகுந்த சிரமம் இருக்கிறது.

9. சலவை செய்வோர்மீது வரி

இவ் வரி மஹாராஷ்டிரத்திலும், கூர்ஜரத்திலும் விதிக்கப் படுகிறது. பராந்தகச் சோழனின் உத்தரமேரூர்க் கல்வெட்டு வண்ணாரப்பாட்டம் என்ற ஒரு வரியைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. ஆறுகள், குளங்கள் இவற்றிலுள்ள நீரின் தூய்மையை இவர்கள் கெடுப்பதாலும், நகராட்சிகள் இவ் வசுத்தங்களை அப்புறப்படுத்த வேண்டியிருப்பதாலும், (இதுவரை எந்த நகராட்சியும் இங்ஙனம் தூய்மைப்படுத்தியதாகத் தெரியவில்லை) இவ் வரியை விதிப்பது நியாயமே என வாதிடுகிறார்கள். உததரப் பிரதேசத்தில் ஆண்டுதோறும் சலவை செய்யுமிடங்களிலிருந்து ஒரு வரி வசூலிக்கப்படுகிறது.

10. கேளிக்கை வரி

இவ் வரியைப் பெரும்பாலும் மாநிலங்களே விதிக்கின்றன. வசூலாகும் வரியில் ஒரு பகுதி தல ஆட்சிகளுக்கு அளிக்கப்படு கிறது.

## மறைமுக வரிகள்

1. ஆக்ட்ராய் (Octroi) வரிகள்

ஒரு தலத்திற்குள் புகும் பண்டங்களின்மீது விதிக்கப்படும் வரிகள் ஆக்ட்ராய் வரிகள் ஆகும். வரிக்கு ஆளான பண்டங்கள்

மீண்டும் தலத்தை விட்டு வெளியேறுமானல், வரியைத் திருப்பிக் கொடுக்கவேண்டும். இப் பண்டங்களை விற்பனைக்காகவோ அல்லது நுகர்வுக்காகவோ ஒரு தலத்திற்குள் கொண்டு வரலாம். இவை மிகப் பழைய வரி வகைகளைச் சேர்ந்தவையாகும். தலங்கள் விதிக்கும் மறைமுக வரிகளில் ஆக்ட்ராய் வரிகளே மிகவும் முக்கியமானவை. மஹாராஷ்டிரம், கூர்ஜரம், பஞ்சாப், ஹரியாஞ, உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம் இவற்றிலுள்ள தல ஆட்சிகளுக்கு இதுதான் முக்கிய வருவாய் இனமாகும். நகராட்சிகளைத் தவிர்த்து கிராமப் பஞ்சாயத்துக்களும் இவ் வரியை விதிக்கின்றன. இம் மாநிலங்களிலுள்ள தல அரசுகள் தங்கள் வருவாயில் 37·8%-ல் இருந்து 77% வரை ஆக்ட்ராய் வரிகளிலிருந்து பெறுகின்றன.

2. டெர்மினல் வரி (Terminal Tax)

இவ் வரி ஒரு குறிப்பிட்ட தலப்பகுதிக்குள் புகும் அல்லது தலத்தை விட்டு வெளியேறும் பண்டங்கள், அல்லது தனியாட்கள் மீது விதிக்கப்படுகிறது. அரசியல் சட்டத்தின்படி, புகைவண்டி மூலமாகவோ. கடல் வழியாகவோ அல்லது வான வழியாகவோ வரும் பண்டங்களின்மீதும், பிரயாணிகளின்மீதும் யூனியன் அரசு தான் வரி விதிக்கலாம். ஆனல், இத் தொகைகள் முழுவதையும் மாநிலங்களுக்குக் கொடுத்து விடவேண்டும். சாலை வழியாகவோ உள்நாட்டுக் கால்வாய்கள் வழியாகவோ வரும் பண்டங்களின் மீதும், பிரயாணிகளின்மீதும் மாநில அரசுகள் வரி விதிக்கலாம். ஆக்ட்ராய் வரிகளைக் காட்டிலும் டெர்மினல் வரிகள் சிறந்தவையென கீழ்க்கண்ட காரணங்களினல் கூறப்படுகிறது.

(அ) ஆக்ட்ராய் வரிகள் விதிக்கப்பட்ட பண்டங்கள் மீண்டும் தலத்தை விட்டு வெளியேறுமானல், இவ் வரிகளைத் திருப்பித் தரவேண்டும். திருப்பித் தருவதில் தாமதம் ஏற்படுவதுமன்னியில் மக்கள் அலைக்கழிக்கப்படுவார்கள். இதில் கையூட்டு (லஞ்சம்) வாங்குவவற்கும் நிரம்ப வாய்ப்பு இருக்கிறது. இதனல் தங்கு தடையற்ற வாணிபத்திற்கு இவ் வரிகள் ஒரு தடங்கலாக உள்ளன. ஆனல், டெர்மினல் வரிகளை, பண்டங்களும், பிரயாணிகளும், தலத்திற்குள் புகும் பொழுதோ, அல்லது தலத்தை விட்டு வெளியேறும் பொழுதோ விதிக்கலாமாதலால், அவற்றைத் திருப்பித் தரவேண்டும் என்ற பேச்சுக்கே இடமில்லை.

(ஆ) டெர்மினல் வரிகளைப் புகைவண்டிக் கட்டணத்துடன் (பிரயாணிகள் கட்டணத்துடன் அல்லது சரக்குக் கட்டணத்துடன்)

சேர்த்து வசூலித்து விடலாம். இவ்வாறு கூடுதலாக வசூலித்து தொகைகளைத் தல அரசுகளுக்கு அளித்து விடலாம். இதனால் இவ் வரியை ஏய்க்க முடியாது. மக்களுக்கும் இவ் வரியினால் அலைக்கழிப்பு இல்லை. மேலும், இவ் வரியை வசூலிப்பது வசதியாகவும் உள்ளது. இக் காரணங்களினால் தல நிதிய விசாரணைக் குழு (Local Finance Enquiry Committee) ஆக்ட்ராய் வரிகளைப் பார்க்கிலும் டெர்மினல் வரிகள் மேலானவை என்றும், இவற்றை மீண்டும் மாநில வரிப்பட்டியலிலேயே சேர்ப்பதுபற்றி மீளவும் சிந்திக்கும்படி இந்திய அரசுக்கு யோசனை கூறியது. ஜோஸயா ஸ்டாம்பு ஆக்ட்ராய் வரிகளில் 'ஏறக்குறைய எல்லா கேடுகளும் உள்ளன' என்றார். டெர்மினல் வரிகளை விதிப்பதில் இரண்டு இடைஞ்சல்கள் உள்ளன.

1. சாலைகள் அல்லது உள்நாட்டுக் கால்வாய்கள் வழியாக வரும் பிரயாணிகளின்மீதும், பண்டங்களின்மீதும் வசூலிப்பதற்குத் தனியே ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

2. தல அதிகாரிகள் பளுவான வரி வீதங்களை விதித்தால் சரக்குக் கட்டணம் உயரும்; இங்ஙனம் உயர்ந்தால் சரக்குகளின் விலையும் உயரும்; உயர்ந்தால் அவற்றின் விற்பனை குறையும். இதனால் புகைவண்டி வாயிலாகச் சரக்குகளை அனுப்ப மக்கள் தயங்கலாம். இக் காரணத்தினாலேயே டெர்மினல் வரிகள் யூனியன் வரிப்பட்டியலுக்கு மாற்றப்பட்டன.

3. மேலும், ஆக்ட்ராய் வரிகளின் நிலைப்பாடு தல மக்கள்மீது தான் விழும். டெர்மினல் வரிகளின் நிலைப்பாடு நாட்டின் பிற பகுதிகளில் உள்ள மக்கள்மீது விழலாம். இங்ஙனம் விழுந்தாலும் இதை ஒரு பெரிய குறையாகக் கொள்ளமுடியாது.

4. நெடுந்தொலைவு சாலைப் போக்குவரத்தில், டெர்மினல் வரிகள் மீண்டும் மீண்டும் அதே பண்டங்களின்மீது விதிக்கப் படலாம். இவ்விரு வரிகளையும் வசூலிக்க ஏராளமான அலுவலாளர்கள் வேண்டியிருக்கிறது.

வரி விதிப்பு விசாரணைக் குழுமம் ஆக்ட்ராய் வரிகளில் கீழ்க் கண்ட சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டுமென்று கோரியது.

1. இவ் வரிகள், பண்டங்களின் மதிப்பை அடிப்படையாகக் கொண்டு விதிக்கப்படாமல், அவற்றின் எடையை அடிப்படையாகக் கொண்டு விதிக்கப்படவேண்டும். இதனால், கால தாமதமும் அலைக்கழிச்சலும் மக்களுக்கு இரா.

2. எந்தெந்தப் பண்டங்களின்மீது இந்த வரியை விதிக்க வேண்டும் என்ற பட்டியலை மாநில அரசுகளே தயாரிக்கவேண்டும். மக்களுக்கு அலைக்கழிச்சலை விளைவிக்கும் பண்டங்கள் இப் பட்டியலில் இடம் பெறக்கூடாது.

3. கையூட்டையும், அலைக்கழிச்சலையும் தவிர்ப்பதற்குக் கீழ்அதிகாரிகளை மேல்அதிகாரிகள் அடிக்கடி மேற்பார்வையிட்டுக் கண்டிக்கவேண்டும்.

4. உணவுப் பண்டங்களின்மீது இப்பொழுது நிலவும் ஆக்ட்ராய் வரிகளை உயர்த்துவதற்கு, மாநில அரசுகள் பொதுவாக, ஒப்புதல் தரக்கூடாது.

நேர்முக, மறைமுக வரிகளைத் தவிர்த்து, தல அரசுகள் வாணிப முனைவுகளிலிருந்தும் (commercial undertakings), வருமானம் பெறுகின்றன. மேலும், மானியங்களின் வாயிலகாகவும், கடன் களின் வாயிலாகவும் அவற்றுக்கு வருமானம் கிடைக்கிறது. இவற்றை இப்பொழுது காண்போம்.

### 1, தண்ணீர் வசதி

பிற நாடுகளில் உள்ளதைப் போன்றே இந்தியாவிலும் நகராட்சிகளும், பஞ்சாயத்துக்களும் மக்களுக்குக் குடிநீர் வசதி செய்து தருகின்றன. குடி நீருக்கான கட்டணங்களை இரு வகை களில் வசூல் செய்கிறார்கள். நுகர்வோர் எவ்வளவு நீரைப் பயன் படுத்தினாலும் ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்துவது ஒரு முறை. தண்ணீர் மானிகள் (water meters) தெரிவிக்கும் அளவுக்கு ஏற்பக் கட்டணங்களை வசூலிப்பது இன்னொரு முறையாகும்.

### 2. மின்சார வசதி

நகராட்சிகள் மக்களுக்கு மின்சாரத்தைச் சப்ளை செய்கின்றன. மொத்தமாக மின்சாரத்தை மாநில அரசுகளிடமிருந்து வாங்கி நுகர்வோர்களுக்கு விற்று இலாபம் ஈட்டுகின்றன.

### 3. வாடகை, வாரம்

கடைகள், விடுதிகள், ஏனைய கட்டடங்கள் இவற்றிலிருந்து வாடகையையும், நிலத்திலிருந்து வாரத்தையும் தல அரசுகள் வசூலிக்கின்றன. ஆனால், இஃது முக்கியமான வருவாய் இனம் அன்று. ஏனெனில், நம் நாட்டில், வாடகைக்கு அல்லது வாரத் திற்கு விட்டுப் பொருளீட்டுவதற்கு, ஏராளமான கட்டடங்களும், நிலங்களும் தல அரசுகளுக்குச் சொந்தமாக இல்லை. ஆயினும், சில இடங்களில் கடை வாடகையிலிருந்து நல்ல வருமானம் கிடைக்கிறது.

4. கால்நடைகள் வசதி

சில நகராட்சிகளுக்குச் சொந்தமாக இறைச்சிக் கொட்டில்கள் உள்ளன. இவற்றில் ஆடு, மாடுகளைக் கொல்வதற்கு நகராட்சிகள் வசதி செய்து தருகின்றன. இந்த வசதிக்காகக் கசாப்புக்காரர் களிடமிருந்து வாடகை தண்டுகிறது.

5. போக்குவரத்துப் பணிகள்

இந்தியாவில் சில தல அரசுகளே போக்குவரத்துப் பணிகளை மேற் கொண்டிருக்கின்றன. ஒரு காலத்தில் சில இருப்புப் பாதைகள் ஜில்லா போர்டுகளுக்குச் சொந்தமாக இருந்தது. எடுத்துக் காட்டாக, தஞ்சை மாவட்டத்திலுள்ள இருப்புப்பாதை தஞ்சாவூர் ஜில்லா போர்டுக்குச் சொந்தமாக இருந்தது. நாடு விடுதலை பெற்ற பின்பு இந்திய அரசு இவ் விருப்புப்பாதையை எடுத்துக் கொண்டு, ஜில்லா போர்டுக்கு ஒரு கணிசமான தொகையை (ஏறக் குறைய இரண்டு கோடி உரூபா) இழப்பீடாக அளித்தது. மஹாராஷ்டிரம், ஒரிஸ்ஸா, மேற்கு வங்கம், பீஹார் ஆகிய மாநிலங் களிலும் சில தல நகராட்சிகளுக்கு இருப்புப் பாதைகள் சொந்த மாக இருந்தன. இவை யாவும் நகராட்சியின் எல்லைக்குள்ளேதான் இயங்கின. இந்த மாநிலங்களில் உள்ள சில தல அரசுகளும், டில்லி மாநகராட்சியும் பேருந்துப் போக்குவரத்தை மேற்கொண்டிருக் கின்றன. ஆயினும், இவை சரிவர இயங்குகின்றன என்றும், இவற்றிலிருந்து போதிய வருமானம் கிடைக்கின்றது என்றும் கூற முடியாது.

மானிய உதவிகள்

மைய அரசினிடமிருந்து மாநில அரசுகள் மானிய உதவி பெறுவதைப் போன்றே, தல அரசுகளும் மாநில அரசுகளிட மிருந்து மானிய உதவிகள் பெறுகின்றன. பிரிட்டிஷ் சோஷலிஸ்டுச் சிந்தனையாளரான ஸிட்னி வெப்பின் (Sydney Webb) கருத்துப்படி நான்கு காரணங்களுக்காக மானிய உதவிகளை அளிக்கவேண்டும். அவை யாவன: (1) பல்வேறுபட்ட தல அரசுகளின் நிதியப் பளுக்களுக்கு இடையே இருக்கும் ஏற்றத்தாழ்வுகளை அகற்றுதல்; (2) தல விவகாரங்களை நடத்துவதில் திறமையை அதிகரிப் பதற்காக, மாநில அரசுகள் தலையிடுவது இன்றியமையாதது. இத்தலையீட்டிற்குத் துணை செய்தல்; (3) ஒரு குறும தேசிய அளவு. ஆட்சித் தரத்தைத் தல ஆட்சிகளில் கொணர்தல்; (4) மேல் சட்டத்திலுள்ள அரசுகள் அதிக ஆட்சி அநுபவம் வாய்ந்தவை. இவ்வநுபவத்தினுல் தல அரசுகள் ஆதாயம் பெறும்படிச் செய்தல். நம் நாட்டில் மாநில அரசுகள் இரு வகையான மானியங்களை

அளிக்கின்றன. ஆண்டுதோறும் தொடர்ந்து அளிக்கப்படும் மானியங்கள் ஒரு வகை; தொடர்ச்சியற்ற (non—recurring) மானியங்கள் இன்னொரு வகை.

**கடன்கள்**

நகராட்சிகளும், மாநகராட்சிகளும்குடிநீர்வசதி, சாக்கடைகள் அமைத்தல், சேரி ஒழிப்பு முதலான திட்டங்களுக்கு ஏராளமான நிதிகளைத் திரட்ட வேண்டியிருக்கிறது. இவற்றுக்குக் கடன் வாங்கியே தீரவேண்டும். திறந்த அங்காடியில் கடன்களைத் திரட்ட நகராட்சிகளை அண்மைய காலம் வரை மாநில அரசுகள் அநுமதிக்கவில்லை. தல அரசுகளின் வரவுகளின் 15% -ல் இருந்து 20% வரை கடன்களிலிருந்து கிடைக்கின்றது. இக் கடன்களில் ஒரு கணிசமான பகுதி மாநில அரசுகளிடமிருந்து பெறப்பட்டவை என்பது கீழ்வரும் அட்டவணையிலிருந்து விளங்கும்.

**தல அரசுகளின் கடன் நிலுவைகள்**

(கோடி உருபாவில்)

| | 1951—52 | 1955—56 | 1960—61 | 1964—65 |
|---|---|---|---|---|
| அங்காடி கடன்கள் | 72·0 | 77·1 | 101·7 | 119·0 |
| அரசுகளிடமிருந்து கிடைத்த கடன்கள் | 23·0 | 48·2 | 81·1 | 143·9 |
| ஏனைய கடன்கள் (பேங்குகளிடமிருந்து பெற்றவை) | — | — | 3·8 | — |

கடந்த சில ஆண்டுகளாக இந்திய ஆயுள் காப்பீட்டுக் கழகமும் (Life Insurance Corporation of India) நகராட்சிகளுக்குக் கடன் தந்து உதவுகிறது.

செலவினங்களைப் பொறுத்தமட்டில், பொது சுகாதாரம், பொதுப்பணிகள் (public works), கல்வி ஆகியவற்றுக்குத்தான் கணிசமான பகுதி செலவாகிறது.

| | 1951—52 | % | 1961—62 | % | 1965—66 | % |
|---|---|---|---|---|---|---|
| 1. பொது நிருவாகம் | 10·0 | 15·6% | 15·4 | 7·0% | 22·5 | 7·0% |
| 2. இலாபம் ஈனும் மூனைவுகள் | — | — | 10·7 | 4·0% | 15·2 | 4·8% |
| 3. பொது சுகாதாரம் | 16·0 | 25·0% | 39·1 | 17·2% | 50·9 | 16·0% |
| 4. பொதுப் பணிகள் | 5·0 | 7·8% | 42·3 | 18·6% | 30·8 | 9·6% |
| 5. கல்வி | — | — | 14·5 | 6·4% | 20·9 | 6·5% |
| 6. ஏனையவை | 33·0 | 51·6% | 105·4 | 46·8% | 178·7 | 56·1% |
| ஆக மொத்தம் | 64·0 | 100·0 | 227·4 | 100·0 | 319·0 | 100·0 |

### தல அரசுகளின் வறுமை

இந்தியா ஏழ்மை நாடாக இருப்பதால், தல அரசுகளும் ஏழைகளாக இருப்பதில் வியப்பில்லை. ஒரு மதிப்பீட்டின்படி நகராட்சிகளின் தலா வருமானம் ஆண்டொன்றுக்கு உருபா 7·75 ஆகும்; ஜில்லா போர்டுகளின் தலா வருமானம் ஏறக்குறைய உருபா 0·83 ஆகும். இவற்றின் வறுமையை நிரூபிக்க வேறு சான்று வேண்டுமோ? தல அரசுகளின் வருவாய் இனங்களைப் பற்றிக் கீழ்வரும் அட்டவணை விளக்குகிறது.

தல அரசுகளின் வருவாய் இனங்கள் நகவளைவில் இருக்கும் எண்கள் மொத்த வருவாயில் இவ்வளவு சதவீதம் எனக் குறிப்பவை.

(கோடி உருபாயில்)

| | 1951—52 | 1955—56 | 1960—61 | 1965—66 | சதவீதத்தில் மாறுதல்: 1951—52-க்குமேல் 1955-56-ல் எவ்வளவு ஏறுதக்கப் என்பது. | 1955—56-க்குமேல் 1960-61-ல் எவ்வளவு ஏறுதக்கம் என்பது. | 1960—61-க்கு மேல் 1965-66-ல் எவ்வளவு ஏறுதக்கப் என்பது. |
|---|---|---|---|---|---|---|---|
| 1. வரிகள் தீர்வைகள் | 22·9 (33·8) | 29·4 (31·7) | 73·8 (40·6) | 108·2 (38·5) | 28.1 | 151·0 | 46·6 |
| 2. மானிய உதவிகள் | 2·9 (4·3) | 4·1 (4·4) | 9·3 (5·0) | 12·7 (4·5) | 42·1 | 126·8 | 36·5 |
| 3. கடன் வரவுகள் | 8·0 (11·7) | 17·7 (19·1) | 28·4 (15·6) | 40·0 (14·0) | 121·8 | 60·5 | 40·8 |
| 4. ஏனைய வரவுகள் | 34·1 (50·2) | 41·5 (44·8) | 70·4 (38·8) | 121·5 (43·0) | 21·8 | 61·0 | 72·6 |
| மொத்த வரவுகள் | 67·9 | 92·7 | 181·9 | 282·4 | 36·3 | 96·2 | 55·2 |
| மொத்தச் செலவுகள் | 64·2 | 82·4 | 206·4 | 319·0 | 28·3 | 150·0 | 54·5 |

ஆதாரம்: இந்திய ரிசர்வ் பேங்கின் அறிக்கை, ஏப்ரல் 1958, நவம்பர் 1962, ஏப்ரல் 1967.

### தல நிதியங்களை அதிகரிப்பதற்கான யோசனைகள்

நம் நாட்டில் தல நிதியம் நெகிழ்ச்சியற்றும், போதாமலும் நீதிக்குப் புறம்பாகவும் உள்ளது. ஒரு சமயம் சர்தார் வல்லபாய் படேல் கூறினர். 'தல நிதியப் பிரச்சினையை முதலில் தீர்த்தால் ஒழிய, தல அரசுகளுக்குப் புதிய அதிகாரங்களை அளிப்பதால் என்ன நன்மை விளையப் போகிறது?...... கடமைகளை அதிகரித்துக் கொண்டே போவது இறந்து போன மகளுக்கு (பெண்ணுக்கு) ஒப்பனை செய்வதை ஒக்கும்'.

### தல நிதிய விசாரணைக் குழு, 1951

தல நிதியத்தின் நிலைமையைப்பற்றி விசாரிக்க 1949 ஆம் ஆண்டில் இந்திய அரசு ஒரு குழுவை நியமித்தது. அக் குழு தன் அறிக்கையை 1951-ல் அரசிடம் அளித்தது. அக் குழுவின் சிபாரிசுகள் வருமாறு :

1. மைய அரசு இருப்புப்பாதை, வானம், கடல் இவற்றின் வழியாகச் செல்லும் பிரயாணிகளின் மீது ஒரு டெர்மினல் வரியை விதித்து, அதனால் கிடைக்கும் தொகைகள் முழுவதையும் தல அரசுகளுக்கு அளித்துவிடவேண்டும்.

2. மின்சாரத்தின்மீது விதிக்கப்பட்ட விற்பனை வரி; மோட்டார் ஊர்திகள் நீங்கலாக உள்ள ஏனைய ஊர்திகளின்மீது விதிக்கப்பட்ட வரிகள், நிலம், கட்டடம் இவற்றின் மீது விதிக்கப் பட்ட வரிகள், கேளிக்கை வரி ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் வருவாயைத் தல அரசுகளுக்கு மாற்றித் தரவேண்டும்.

3. தங்கள் வரி விதிக்கும் அதிகாரங்களை உச்ச அளவுக்குப் பயன்படுத்தும்படி தல அரசுகளை மாநிலங்கள் கட்டாயப் படுத்த வேண்டும்.

4. அனைத்து மாநிலங்களிலும் உடைமை வரி கட்டாயமாக விதிக்கப்படவேண்டும். 'தல நிதி செஸ்ஸின்' ('local fund cess') வீதம் மூன்றணுவாக இருக்கவேண்டும்.

5. தல ஆட்சிகள் ஆக்ட்ராய் வரிகளை விதிப்பதற்கு ஒரு மாதிரி (model) பட்டியலை மாநிலங்கள் தயாரிக்கவேண்டும்.

6. ஆண்டுக்கு ஆயிரம் உருபாவுக்குமேல் வருமானம் உள்ளவர்களின் மீது ஒரு தொழில் வரியை (profession tax) விதிக்க வேண்டும்.

7. ஹோட்டல்களில் தங்குபவர்களின்மீது கட்டாயமாக ஒரு வரியை விதிக்கவேண்டும்.

8. தானே இயங்கும் ஊர்திகளின் (auto vchicles) மீது விதிக்கப்பட்ட வரியிலிருந்து கிடைக்கும் வருவாயில் ஒரு பகுதியை மாநிலங்கள் தல அரசுகளுக்குத் தரவேண்டும்.

9. யூனியன் அரசின் உடைமைக்குத் தல வரிகளிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இச் சலுகைக்காகத் தல ஆட்சிகளுக்கு யூனியன் அரசு ஏதேனும் இழப்பீடு கொடுக்க வேண்டும். இவ் வெல்லாச் சிபாரிசுகளும் செயலபடுத்தப்பட்டால் தல அரசுகளுக்கு ஆண்டு தோறும் உருபா 40 கோடி கூடுதலாகக் கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டது.

**வரி விதிப்பு விசாரணைக் குழுமம், 1953—54**

*1953—54*-ல் இக் குழுமம் தல நிதியத்தைப்பற்றியும் ஆய்ந்தது. ஒரு சரியான தல நிதிய அமைப்பு, தல நேர்முக வரிகளைத்தான் அடித்தளமாகக் கொண்டிருக்க முடியும் என்றும், மாநில அரசுகள், தல அரசுகளின் வரி விதிக்கும் அதிகாரங்களைப் பறித்துக் கொள்ளக்கூடாது என்றும் வரி விதிப்பு விசாரணைக் குழுமம் கருதியது. சில வரிகளைத் தல அரசுகளுக்கு என ஒதுக்கிவிட வேண்டும். இதற்காக அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டியதில்லை. மாநில அரசுகள் தல அரசுகளின் வரி விதிக்கும் அதிகாரங்களைப் பறித்துக் கொள்வதைப் படிப்படியாக விட்டு விட வேண்டும். இங்ஙனம் மாற்றப்பட்ட வரிகளைத் தல அரசுகள் விரிவு செய்து பெருக்கிக் கொள்ளவேண்டும். மாநில அரசுகள் தங்களுக்கு வரிகளிலிருந்து கிடைத்த வருவாய்களில் ஒரு பகுதியை தல அரசுகளுக்குத் தரவேண்டும் என்ற யோசனையைக் குழுமம் ஏற்றுக் கொள்ளவில்லை. ஏனெனில், இவ்விதமான ஏற்பாட்டினால் தல அரசுகள் தங்களது பொறுப்புக்களை உணர முடியாமல் போகும்.

தல ஆட்சிகளின் முடைகளுக்கும், அவை தம் கடமையை ஆற்றும் திறத்திற்கும் ஏற்ப மாநில அரசுகள் மானிய உதவிகளை அளிக்கவேண்டும் என்று குழுமம் எண்ணியது; கூடுதலாக வரி விதிக்கும் அதிகாரங்களைத் தல ஆட்சிகளுக்கு மாற்றும்பொழுது, இரண்டு விஷயங்களை நினைவில் இருத்தவேண்டும்.

(அ) வரிகளின் நிலைப்பேறு; (ஆ) இவ் வரிகளைப் 'போதிய அளவு' விதிக்கத் தல ஆட்சிகளுக்கு ஆற்றல் உள்ளது என நிலைநாட்டத் தக்கதாக இருக்கவேண்டும். அபிவிருத்திப் பணிகளுக்குத் தல ஆட்சிகளுக்குப் போதிய கடன்கள் கிடைக்க வில்லை என்பதையும் குழுமம் உணர்ந்திருந்தது. மாநில அரசுகள் தல அரசுகளுக்குப் பொருளாதார உதவியையும், கடன்களையும் அளிக்க வேண்டிய அவசியம் இருக்கிறது.

தல நிதியத்தைப்பற்றி விரிவாக ஆய்ந்த பிறகு வரி விதிப்பு விசாரணைக் குழுமம் கீழ்வரும் சீர்திருத்தங்களைச் சிபாரிசு செய்தது.

1. கிராமப் பஞ்சாயத்துக்களின் அதிகார எல்லைகளை விரிவு படுத்துவதில் அடக்கமும், எச்சரிக்கையும் தேவை. தனிப்பய னுடையதும், நன்கு வரையறுக்கப்பட்டதுமான பணிகளைத் தல அரசுகளிடம் ஒப்படைத்தலும், அவற்றைத் தல அபிவிருத்தித் திட்டங்களுடன் ஒன்று சேர்த்தலும் நல்லது.

2. இப்போதுள்ள வடிவத்தில் ஜில்லா போர்டுகள் தொடர்ந்து நெடுங்காலத்திற்கு இருப்பது சாத்தியமல்ல என்று குழுமம் எண்ணியது. ஜில்லா போர்டுகளின் அதிகார எல்லைக்கு உட் பட்ட புவியியல் அல்லது தரைப்பரப்பைக் குறைத்துதான் ஆக வேண்டும். இவற்றின் அலுவல்கள், நிதியங்கள், வரி விதிக்கும் அதிகாரங்கள் ஆகியவற்றை கிராமப் பஞ்சாயத்துக்களின் அலு வல்கள், நிதியங்கள், வரி விதிக்கும் அதிகாரங்கள் இவற்றுடன் இணைவிக்கவேண்டும். அவை சிக்கனமாகவும், திறமையாகவும் பணியாற்றுவதற்கு, ஜில்லா போர்டுகளின் பரப்பளவு குறைய வேண்டும். அவற்றின் வருவாயின் பெரும்பகுதியும் மானியங்கள் வாயிலாகக் கிடைக்க வேண்டுமே ஒழிய, வரிகள் வாயிலாகக் கிடைக்கக்கூடாது.

3. ஒரு சரியான தல நிதிய அமைப்பு, வரிகளையே அடித்தள மாகக் கொண்டிருக்கவேண்டும்.

4. கிராமப் பஞ்சாயத்துக்களின் வளர்ச்சிக்கும், வெற்றிக்கும் அவற்றுக்குத் தொடக்கத்திலேயே அதிகமான நிதிய உதவி அளிக்கவேண்டும். அப்பொழுதுதான் திடீரென வரி விதிக்க வேண்டிய கட்டாயம் அவற்றுக்கு இராது.

5. தல அரசுகள் மட்டுமே பயன்படுத்துவதற்கென சில வரி களையும், அவற்றிலிருந்து கிடைக்கும் வருமானத்தையும் ஒதுக் கிடுதல் நல்லது.

6. தல அரசுகளின் உபயோகத்திற்கென்று கீழ்க்கண்ட வரிகளை ஒதுக்க வேண்டுமென்று குழுமம் சிபாரிசு செய்தது. (அ) நிலம், கட்டடங்கள் இவற்றின்மீது வரி, (ஆ) ஆக்ட்ராய் வரிகள், (இ) சக்தியினால் உந்தப்படாத ஊர்திகள், (ஈ) கால் நடை, படகுகள் இவற்றின்மீது வரி, (உ) வணிகம், தொழில், வேலை இவற்றின்மீது வரி, (ஊ) செய்தித் தாள்களில் வெளியிடப் படாத விளம்பரங்கள்மீது வரி.

இவ் வரிகள் நீங்கலாக, சில வகை கேளிக்கை வரிகளையும், உடைமை மாற்றத்தின்மீதான வரிகளையும் தல அரசுகளுக்குக் கொடுத்துவிடவேண்டும் என்று குழுமம் பரிந்துரை செய்தது. சாலைகளின் வழியாகவும், உள்நாட்டுக் கால்வாய்கள் வழியாகவும் வரும் பிரயாணிகளின்மீதும், சரக்குகளின்மீதும் வரி விதிக்கும் அதிகாரத்தையும் தல ஆட்சிகளுக்கு அளிக்கவேண்டும்.

7. தல ஆட்சிகளின் வளர்ச்சிக்கும், சரியான முன்னேற்றத் திற்கும் கீழ்க்கண்ட யோசனைகளைப்பற்றி மாநில அரசுகள் சிந்திக்க வேண்டும். (அ) மாநில அரசுகள் போதிய வரி விதிக்கும் அதிகா ரங்களைத் தல அரசுகளுக்கு மாற்றவேண்டும். (ஆ) இங்ஙனம் மாற்றும் வரிகள் போதியவையாகவும், நெகிழ்வுள்ளவையாகவும், பலவகையானதாகவும் இருக்கவேண்டும். (இ) மாற்றப்படும் வரி களுக்கும், தல அரசுகளின் உரிமைகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். (ஈ) காலாவதி (lapse of time) ஆகி விட்டதனாலோ அல்லது படி நிலைகள் மாறியதனாலோ பொருத்தமின்மையாக இருக்கும் வரிகளை நீக்கிவிடவேண்டும்.

8. மோட்டார் ஊர்திகள் வரியிலிருந்து கிடைக்கும் வருவாயில் குறைந்தது 25%ஐ யேனும் நகராட்சிகளுக்கும், ஜில்லா போர்டு களுக்கும் கொடுக்கவேண்டும். நில வரியிலிருந்து கிடைக்கும் வருவாயில் 15%ஐயேனும் பஞ்சாயத்துக்களுக்கும், பஞ்சாயத்து ஒன்றியங்களுக்கும் கொடுக்க வேண்டும்.

9. தல அரசின் பல்வேறுபட்ட அலகுகளின் வருமானத் தையும் அதிகரிப்பதற்கு, பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்று குழுமம் கருதியது. மாநகராட்சிகளுக்கும், பெரிய நகராட்சிகளுக்கும் அதிகமான வரி விதிக்கும் அதிகாரங்களைத் தர வேண்டும். சிறிய நகராட்சிகளுக்கு அதிகமான மானிய உதவிகள் அளிக்கவேண்டும்.

10. நகராட்சிகளின் வரி ஒழிந்த (non-tax) வருவாய் இனங் களைப் பெருக்கவேண்டும். பல வணிகப் பணிகளையும் மேற்கொள் வதற்கு அவற்றுக்கு அதிகாரம் வழங்கவேண்டும்.

11. இரண்டாவது திட்ட காலத்தில் தண்ணீர் வசதி களையும், ஏனைய அபிவிருத்திப் பணிகளையும், அதிகரிப்பதற்குப் போதிய கடன்களையும், நிதிய உதவியையும் நகராட்சிகளுக்கு வழங்கவேண்டும்.

12. பொதுச் சொத்து வரி, சேவை வரி, நில செஸ், உடைமை மாற்றத்தின்மீதான வரி இவற்றைக் கிராமப் பஞ்சாயத்துக்களுக்கு ஒதுக்குவது பொருத்தமே ஆகும். நல்ல படிநிலைகளில் இருக்கும் தனிப்பட்ட பஞ்சாயத்துக்களுக்கு ஊர்தி வரி, உத்தியோக அல்லது தொழில் வரி, கேளிக்கை வரி இவற்றைக் கொடுக்கலாம்.

13. மானிய உதவிகளைப் பொறுத்தமட்டில், மாநில அரசுகளுக்கு வழிகாட்டியாக கீழ்க்கண்ட கோட்பாடுகளைக் குழுமம் சிபாரிசு செய்தது.

(அ) மாநகராட்சிகளும், நகராட்சிகளும் நீங்கலாக, ஏனைய தல அரசுகள் அனைத்திற்கும் 'பொதுப்படையான நோக்கு மானிய உதவிகள்' (general purpose grants-in-aid) அமைப்பு ஒன்று இருக்க வேண்டும்.

(ஆ) மானியங்களை வழங்கும்போது, சம்பந்தப்பட்ட தல அரசுகளின் புவியியல் அதிகார வரம்பையும், பருமனையும், மக்கள் தொகையையும், வருவாய் இனங்களையும் கருத்தில் கொள்ளவேண்டும்.

(இ) குறைந்தது தல ஆட்சிகளின் கட்டாயமான பணிகளையும், ஆட்சிப் பணிகளையும் எவ்விதமான முட்டுக்கட்டை இன்றியும், திறமையாகவும் ஆற்றுவதற்குத் துணைபுரியும் வகையில் இம் மானியங்களின் தொகை இருக்கவேண்டும்.

(ஈ) தொடக்கத்தில் வழங்கப்படும் மானியங்களை ஆண்டு தோறும் மாற்றக்கூடாது. குறைந்தது மூன்றிலிருந்து ஐந்து ஆண்டுகள் வரையிலாவது இம் மானியங்கள் நிலைபேறுக இருக்க வேண்டும்.

(உ) ஆண்டுதோறும் வழங்கப்படும் மானியங்களைத் தவிர்த்து, தனிப்பயன் நோக்கங்களுக்காகச் சிறப்பு மானியங்களை வழங்கவேண்டும்.

14. பொதுவாகத் தல ஆட்சி நிறுவனங்கள் நன்ருகச் செயலாற்றுவதற்கு, மாநில அரசுகள் துணை புரியவேண்டும். தங்கள் கொள்கைகளைத் தாங்களே வகுத்து, தாங்களே நிறைவேற்றத் தக்க நிலையில் இருக்கும்படி, தல ஆட்சி அலகுகளைப் படைப்பதே மாநில அரசின் கட்டுப்பாடு, அறிவுரை இவற்றின் தலையாய நோக்கமாக இருக்கவேண்டும்.

*15.* தல ஆட்சிகளின் ஊழியர்களுக்குப் போதிய சம்பளமும், பயிற்சியும் கொடுக்கவேண்டும். இயன்ற அளவு, தல அரசுகள் தங்கள் வழக்கமான அல்லது அன்றாடச் செலவுகளின் ஒரு பகுதியை தங்களின் வருமானத்திலிருந்தே சரிக்கட்டிக் கொள்ள வேண்டும்.

*16.* தல வரிகளின் நிருவாகத்தில் முன்னேற்றம் காண்பதற்கு, ஒவ்வொரு நகராட்சிக்கும் ஒரு முக்கிய நிறைவேற்று (நிருவாக) அதிகாரி இருக்க வேண்டும். இவர்களை நியமிக்கும் அதிகாரம் மாநில அரசுக்கோ அல்லது ஏதாயினும் ஒரு சுயேச்சையான ஏஜன்ஸிக்கோ இருக்கவேண்டும்.

முடிவுரை

தல அரசுகளின் செலவுகளை, மாநில, மைய அரசுகளின் செலவுகளுடன் இணைவிக்கவேண்டும். டாக்டர் ஆர். என். திரிபாதி (Dr. R. N. Tripathi)[1] 'சில வரையறைகளுக்கு உட்பட்டே தல அரசுகள் இயங்கி வருகின்றன. ஆகையினால், அவை, தேசிய அரசின் நிதியக் கொள்கைக்கும், மாநில அரசுகளின் நிதியக் கொள்கைக்கும் இணங்கிவரும் ஒரு நிதியக் கொள்கையைப் பொதுவாகக் கடைப்பிடிப்பதில்லை. இதன் விளைவாக, பொருளாதாரத்தை நிலைபேறுக்குவது அல்லது பொருளாதார வளர்ச்சி வீதத்தை விரைவுபடுத்துவது என்ற நோக்கத்தை எய்துவதற்கு ஏற்ற வகையில் மொத்தத்தில் நிதியக் கொள்கை வகுக்கப்பட வேண்டும்.

இத்தனை சோதனைகளையும், போராட்டங்களையும் நடத்திய பிறகும் தல ஆட்சி நிறுவனங்களுக்கு உயிரூட்டச் செய்த முயற்சிகள் பலன் அளிக்கவில்லை. கடந்த காலத்தில் தோல்வியுற்றதாலேயே நாம் மனம் தளரலாகாது. எதிர்காலத்தில் வெற்றி கிடைக்காது என்று கூறவும் முடியாது. தல நிதியத்தை நன்னிலையில் வைத்திருப்பதற்குத் தொடர்ந்து முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும். நம் நாட்டில் மூன்று அடுக்குகள் கொண்ட அரசு (தல அரசு, மாநில அரசு, கூட்டரசு) இருப்பதால், தல நிதியத்தை, மாநில, மைய நிதியங்களுடன் முழுதும் இணைவிக்க வேண்டும். தேசிய நலனைப் பேண வேண்டுமானால் இவ்வித ஒன்றிப்பு இன்றியமையாதது. டாக்டர் கியான் சந்தின் கருத்துப் படி, தல நிதியப் பிரச்சினைகளை, 'நிதியப் பிரச்சினைகள் என்று குறுகிய பொருளில் கொள்ளக்கூடாது. அவை உண்மையில் தேசிய

[1] Local Finance in a Developing Economy, p. 19.

மறு சீரமைப்பின் பிரச்சினைகளாகும். ஆகவே, இப் பிரச்சினைகளைத் தீர்ப்பதில், இப் பரந்த காட்சிக் கோணத்திலிருந்து அவற்றின் தலையாய முக்கியத்துவத்தை உள்ளத்தில் இருத்தவேண்டும். தல ஆட்சி குடியாட்சியின் ஒரு உறுப்பு. ஆகவே, நிதிய விவகாரங்களில் தல ஆட்சிகளுக்கு எவ்வளவு இயலுமோ அவ்வளவு மிகுதியாகப் பொறுப்பைக் கொடுக்கவேண்டும். 'ஒவ்வொரு தொட்டியும் அதன் அடித்தளத்தின்மீதே நிற்க வேண்டும்'[1]. அதாவது மாநில அரசுகளைத் தல ஆட்சிகள் ஓரளவுக்குத்தான் சார்ந்திருக்க வேண்டும். ஆகவே, முதலில் தொட்டி நிற்கக்கூடிய அடித்தளத்தை உறுதியாக அமைக்கவேண்டும். சுவரை வைத்துத் தானே சித்திரம் எழுத முடியும்?

### மேற்கொண்டு படித்தற்குரிய நூல்கள்

1. Gyan Chand, — 'Local Finance in India.'
2. Report of the Taxation Enquiry Commission, Volume III.
3. R.C. Saxena and P.C. Mathur, 'Public Economics, Jai Prakash Nath & Co, Meerut City, 1967, Chaptar 24- Local Finance, p. 505—521.

[1] ஒவ்வொருவரும் அவரவர் காலிலேயே நிற்க வேண்டும். அதாவது பிறரை மிகவும் சார்ந்திருக்கக்கூடாது என்ற கருத்துடன் ஒத்திருக்கிறது.

